# தொல்காப்பியம்

## சொல்லதிகாரம்

## உரைக் கோவை

முதற்பாகம்

பதிப்பாசிரியர்கள்:

ஆபிரகாம் அருளப்பன்

வி. ஐ. சுப்பிரமணியம்




அருள் அச்சகம்
வடக்குக் கடை வீதி
பாளையங்கோட்டை
திருநெல்வேலி

பிரதிசெய் துதவியவர்கள்:

| | |
|---|---|
| எஸ். ஆர். கிருஷ்ணம்பாள் | ... இளம்பூரணம் |
| மா. இளையபெருமாள் / ஜி. சுப்பிரமணிய பிள்ளை | ... தெய்வச்சிலையார் |
| சா. வே. சுப்பிரமணியம் / ஐ. குற்ருலம் பிள்ளை | ... சேனவரையம் |
| வி. ஐ. சுப்பிரமணியம் | ... நச்சினர்க்கினியம் |
| ஐ. குற்ருலம் பிள்ளை | ... கல்லாடம் |
| எஸ். எம். ஸ்டீபன் | ... அரசு கையெழுத்துப் பழயவுரை |



மதுரைப் பல்கலைக் கழகத்
தமிழ்த் துறைத் தலைவர்
பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம் அவர்கட்கு

அன்பளிப்பு
ஆபிரகாம் அருளப்பன்
24-12-'71

முதற் பாகம்

கிளவி யாக்கம்
வேற்றுமை யியல்
வேற்றுமை மயங்கியல்
விளி மரபு

விலை ரூ. 9—70

# முன்னுரை

பல நூறு ஆண்டுகளாகத் தொல்காப்பியப் படிப்பு தமிழாசிரியர் களையும் மாணவர்களையும் கவர்ந்து வந்திருக்கிறது. தொல்காப்பியச் சூத்திரங்களுக்கு உரையாசிரியர்கள் தரும் விளக்கங்கள் இப்படிப் பிற்குச் சுவையூட்டி வருகின்றன. உரையாசிரியர்கள் ஒருவரை யொருவர் நேர்முகமாகவும் மறைமுகமாகவும் மறுக்கும் இடங்கள் சிந்தனைத் தெளிவைத் தோற்றுவித்து ஆராய்ச்சி உணர்வை வளர்க் கின்றன.

மூன்று அதிகாரங்களாகவும் ஒவ்வொரு அதிகாரமும் ஒன்பது இயல்களாகவும் அமைக்கப்பட்டுள்ள தொல்காப்பியம் முழுமைக்கும் உரைகண்டவர் இளம்பூரணர். முதல் உரையாசிரியர் என்ற காரணத் தால் இவரை உரையாசிரியர் எனச் சிறப்பாகக் குறிப்பது மரபு. நச்சினார்க்கினியர் எழுத்து, சொல் ஆகிய இரண்டு அதிகாரங்களுக்கும் பொருளதிகாரத்தில் மெய்ப்பாடு, உவமை, செய்யுள், மரபு ஆகிய நான்கு இயல்கள் நீங்கலாக ஏனையவற்றிற்கும் உரைகண்டுள்ளார். சேனாவரையர் சொல்லதிகாரம் முழுமைக்கும் உரை யியற்றினார்; எழுத்ததிகாரத்திற்கும் உரை வகுத்தார் என்று ஊகிக்கலாம் என பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரியார் கருதுகிறார்.[1] தெய்வச்சிலையாரும் சொல்லதிகாரம் முழுமைக்கும் உரைகண்டுள்ளார். கல்லாடர் சொல் லதிகாரத்தில் இடையியல் வரை உரை கூறியிருக்கின்றார். பெயர் அறிய இயலாத பழைய உரையாசிரியர் ஒருவர் சொல்லதிகாரத்தில் வேற்றுமை மயங்கியல்வரை உரைவரைந்துள்ளார். இரா. வெங்கட ராஜுலு ரெட்டியார் 'ஆசிரியர் பெயர் தெரியாத பழைய உரை ஒன்றுண்டு' என்றும் 'அது உரியியல் முடியக் கிடைத்துள்ளது' என்றும் 'சென்னைச்சர்வகலாசாலைப் பதிப்பாய்' வெளிவரும் என்றும் 1940ல் தாம் எழுதிய 'வியங்கோள்' என்ற கட்டுரையில் குறித்துள் ளார். அது இவ்வுரையைப்போலும்.[2] சிவஞான சுவாமிகள் பாயிரம், முதற்சூத்திரம், ஆகியவற்றிற்கு விருத்தியுரை கண்டார்.

சோமசுந்தர பாரதியார் அகத்திணையியல், புறத்திணையியல், மெய்ப்பாட்டியல் ஆகியவற்றிற்கு ஓர் உரை வகுத்தார். பி.எஸ் சுப்பிர மணிய சாஸ்திரியார் எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் ஆகிய இரண் டிற்கும் குறிப்புரை கூறினார். இலங்கையைச் சேர்ந்த கணேசையர்

1 Tolkappiam Collathikaram — 3 by P. S. Subramanya Sastri Intro Page 35. (1945)

2 Annals of Oriental Research of the University of Madras. Vol. IV (1939 — 40) Part 2 Page 5.

தொல்காப்பியம் முழுமைக்கும் உரை விளக்கக் குறிப்புகள் எழுதி வெளியிட்டுள்ளார். அவரைப்போலவே ஆ. பூவராகம் பிள்ளையும் சேனாவரையத்திற்கு உரைவிளக்கம் எழுதியுள்ளார். தொல்காப்பியத்திற்குச் சண்முக விடுத்தியுரை என்ற பெயரில், சோழவந்தான், அரசஞ் சண்முகம் பிள்ளை, ஒரு விளக்கம் எழுதியதாகவும் தெரிகிறது

தொல்காப்பியத்தின் பின்னரெழுந்த இலக்கணங்கள் தொல்காப்பியக் கருத்தையும் அதன் உரையாசிரியர்கள் கருத்தையும் தழுவித் தொல்காப்பியச் சுருக்கம்போல் நடக்கின்றன. பவணந்தி செய்த நன்னூலும் வைத்தியநாத தேசிகர் எழுதிய இலக்கண விளக்கம் என்ற 'குட்டித் தொல்காப்பியமும்' இம் மரபைச் சார்ந்தன.

சங்க இலக்கியங்கட்கும் சிலப்பதிகாரம் சிந்தாமணி ஆகிய காப்பியங்களுக்கும் உரைகண்ட பழைய உரையாசிரியர்கள் தொல்காப்பிய விதிகளை விளக்கியும் அங்கங்கே அதன் உரையாசிரியர்களை மறுத்தும் இருக்கின்றனர். தொல்காப்பிய விதிகட்கு அவர்கள் தரும் எடுத்துக் காட்டுகள் மிகவும் பயன் தருவன. எனவே பல நூறு ஆண்டுகளாகத் தொல்காப்பியத்தின் செல்வாக்கு, தமிழகத்தில் அறிஞரிடையே வளர்ந்து வந்திருக்கின்றது என்பதற்கு மேலும் தெளிவு தேவையோ?

இன்றும், வளர்ந்து வரும் தொல்காப்பியப் படிப்பிற்குச் சொல்லதிகார உரைக் கோவையாகிய இந்நூல் நன்கு உதவும் என்னும் எண்ணமே இதை வெளியிட எங்களைத் தூண்டியது.

இந்நூலுக்கு வரலாறு ஒன்று உண்டு. வெளி நாட்டிலிருந்து 1957ல் சுப்பிரமணியம் திரும்பியதும் பண்டை இலக்கணங்களில், குறிப்பாகத் தொல்காப்பியத்தில் என்ன இலக்கணக் கொள்கை அடிப்படையாக அமைந்திருக்கிறது என்று அறிய ஆவலுற்றார். அப்போது, இளம்பூரணம், தெய்வச் சிலையார், சேனாவரையம், நச்சினார்க்கினியம் ஆகிய நான்கும் சொல்லதிகாரத்திற்கு அச்சிற் கிடைத்தன. அவற்றை நண்பர்களின் உதவியால் தொகுத்தார். கல்லாட உரையும் பெயர் தெரியாத பழைய வுரையும் சென்னை அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையத்தில் இருக்கும் செய்தியை, பி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரியாரின் சொல்லதிகார முன்னுரையால்[1] அறிந்து சென்னை நூல்நிலைய மேற்பார்வையாளர்க்கு எழுதியதும் அவ் விரு வுரையையும் தாமே பதிப்பிக்கப் போவதாகவும் ஓராண்டுக்குள் வெளியாகும் என்றும் அவர் பதில் எழுதினார். ஓராண்டு கழித்தும் உரை வெளி வராததால் மீண்டும் அந் நூல் நிலைய மேற்பார்வையாளருக்கு எழுதவே, அவர் அருள் கூர்ந்து தக்க உறுதிமொழியின் பேரில் அப் பிரதிகளை, குறிப்பிட்ட

1 Tolkappiam Collathikaram by P. S. Subramanya Sastri Intro Page 40 (1945)

காலத்திற்குமட்டும் தந்துதவினர். அவர் இரக்க வுள்ளத்துக்குக் கடமைப்பட்டுள்ளோம். உரைகளைத் தொகுத்து நண்பர்களுடன் சில இயல்களைப் படித்தபோது அவற்றுள் இளம்பூரணம், சேனாவரையம், கல்லாடம், பழையவுரை ஆகியவை ஏறத்தாழ ஒரே நிலையில் உரையோடு உதாரணம் கூறுவதும், தெய்வச் சிலையார் மட்டும் தனித்து நின்று உரை கூறுவதும் புலனாயின. எனவே இவ்வுரைகளை வரிசைப் படுத்தி ஒரு கோவையாக வெளியிட்டால் மாணவர்களும் ஆசிரியர்களும் பயனடைவார்கள் என்று உணர்ந்தோம். ஆனால் அவ்வாறு எழுதித் திரட்டிய நூல் உருவத்தில் பெரிதாக அமைந்ததால், அச்சேற்றும் செலவைப் பெறுவதற்கு, சுப்பிரமணியம் பல வழிகளில் முயன்றார். கேரளப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் டாக்டர் கே. ஸி. கே. இ. இராஜா, இதனை வெளியிடப் பொருள் கிடைக்குமா என்று கேரளப் பல்கலைக் கழகத்திலுள்ள வேறு துறைகளை உசாவி உதவ முடியாமல் ஓரளவு தயங்கினர். இதனைத் தொகுக்கும்போது வெளியிடும் நோக்கம் எதுவும் இருந்ததில்லை. ஆதலால், பொருள் கிடையாமல் போனதில் வருத்தம் எதுவும் ஏற்படவில்லை. இரண்டாண்டு வரை இந்நூல் அலமாரியில் தூங்கியது.

அடிக்கடி கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைக்கு வந்து பல கருத்துக்கள்பற்றி அளவளாவி ஊக்கமூட்டும் ஆ. அருளப்பன் இந்நூலின் நிலையை அறிந்து இதனை வெளியிட்டே ஆகவேண்டும் என்னும் உறுதியோடு அச்சிடுதற்குரிய ஏற்பாடுகளைச் செய்தார். நூல் முழுவதும் ஒரே பகுதியாக வெளியிட்டால், அதன் அளவு பெருகிவிடும் என்று கண்டு, இரு பகுதிகளாக வெளியிடுவது நன்று என முடிவு செய்து, முதற் பகுதியை இப்போது வெளியிடுகிறோம். சொற் பகுப்புக்களையும் அச்சுப்படி திருத்தலையும் ஆ. அருளப்பனே கவனித்தார். தி.வேலவன், வ.விநாயகப் பெருமாள், எஸ். வள்ளியம்மாள் ஆகியவர்கள் கைப்பிரதியையும் அச்சுப் பிரதியையும் ஒத்து நோக்கி உதவினர்.

இந்நூலைச் செல்வச் செழிப்பில்லாத் தமிழாசிரியர்களும் மாணவர்களும் வாங்குவதற்கு வசதியாக அச்சேற்றி வெளியிடுவதற்கு ஆகும் தொகையை மட்டும் ஈடுகட்டும் அளவில் விலைவைக்கப் பெற்றிருக்கிறது. இதை வெளிக் கொணர உதவிய நண்பர்கள் அனைவரும் ஊதியம் பெற மறுத்து விட்டனர் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

தொல்காப்பிய உரைப் பதிப்புக்களில் பல பாடத்திட்டம் இல்லாமல் பதிப்பிக்கப்பட்டிருப்பதால் உரைகள் விளங்காமல் இருப்பதைப் பூவராகம் பிள்ளையும், கணேசையரும் சுட்டிக் காட்டி யிருக்

கின்றனர். கிடைக்கும் தொல்காப்பிய ஏடுகளையும் பதிப்புக்களையும் திரட்டி, துணைச்சான்றுகளையும் தொகுத்து, மரபு வழி நிறுவி, பாட நிச்சயத்துடன் வெளியிடுவதுவரை தொல்காப்பியப் படிப்பு சிக்கல் நிறைந்ததாகவே யிருக்கும். அத்தகைய வெளியீட்டை யொருவர் தாமாக மேற்கொள்வது அரிது; விரைவில் நடைபெறுவதும் அன்று. எனவே, கிடைக்கும் பிரதிகளின் அடிப்படையில் கூடியமட்டும் பாடத்தைச் சான்றின்றித் திருத்தாமல் அவ்வாறே பதிப்பதேதான் எங்களுடைய நோக்கம். கிடைத்த பிற உரைகளின் அடிப்படையில் பாடத்தைத் திருத்தக்கூடிய இடங்கள் பல. சொற் சிதைவுள்ள இடங்களை நிரப்புவதற் குரிய வாய்ப்புகள் பல. இவற்றை நூலுள் தராமல் பிற்சேர்க்கையாகத் தருவது முறை என்று கருதி யிருக்கின்றோம்.'

கல்லாடர் உரைக்கும் பழைய உரைக்கும் ஒரே பிரதியே கிடைத்தது. அதனடிப்படையில் பதித்துள்ளோம். பல இடங்களில் பாடம் திருந்தாமலும் விடுபட்டும் காணப்படுகின்றன. எனினும் கூடியமட்டும் இவற்றின் பாடங்களைச் செப்பனிட முயன்றுள்ளோம். தொகுப்பிற்கு அடிப்படையாக அமைந்த நூற்கள் கீழே வருவன:—

1. இளம்பூரணம்:- கா. நமச்சிவாய முதலியார் 1931
2. தெய்வச்சிலையார்:- கரந்தைத் தமிழ்ச்சங்கப் பதிப்பு 1929
3. சேனாவரையம்:- சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1923 (முன் பதிப்பிற்கும் பின் பதிப்பிற்கும் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. எவ்வாறு இவ்வேறுபாடுகள் ஏற்பட்டன என்றறிய நூலிற் குறிப் பெதுவும் இல்லை. முன் பதிப்பையே பெரும்பாலும் பின்பற்றினோம்.)
4. நச்சினார்க்கினியம்: பவானந்தர் கழகப் பதிப்பு 1941
5. கல்லாடம்:— அரசாங்கக் கையெழுத்து நூல் நிலையப் படி.
6. அரசு என்று இந்நூலிற் குறிப்பது பெயர் தெரியாத பழைய உரையாசிரியரின் உரையே ஆகும். இவ்வுரையை அரசாங்க நூல் நிலையத்திலிருந்து பெற்றதால் 'அரசு' எனக் குறிப்பிட்டுள்ளோம்.

காலத்தால் இளம்பூரணர் முந்தியவர். அவரையடுத்து சேனாவரையரைக் குறிப்பர். ஏனெனில் சேனாவரையர் உரையாசிரியர் கூறியதாகப் பலவற்றை எடுத்துக்கூறி மறுக்கின்றார். இவற்றுள் பெரும்பான்மை இளம்பூரண அடிகளுடைய உரையாகும். நச்சினார்க்கினியர் சேனாவரையரைப் பெயர் சுட்டி மறுப்பதால் சேனாவரையர்க்கு, நச்சினார்க்கினியர் பிற்பட்டவர் கல்லாடரும் 'அரசும்', இளம்பூரணர்

சேனாவரையர் நச்சினார்க்கினியர், ஆகிய மூவரையும் தழுவி உரை வகுப்பதால் அம்மூவர்க்கும் பிற்காலத்தவர் ஆகலாம் எனக் கொண்டோம். தெய்வச்சிலையார் நச்சினார்க்கினியர்க்குப் பின் வந்தவர் என்பர் சிலர். ஆனால் பல விடங்களில் நச்சினார்க்கினியர் அவருரையைப் பெயர் சுட்டாமல் மறுத்திருக்கிறார். சேனாவரையர்க்கும் தெய்வச் சிலையார்க்கும் சில இடங்களில் பொருத்தமும் சில இடங்களில் சேனாவரையர் தெய்வச்சிலையாரை மறுப்பதுந் தோன்றுகின்றன. ஆனால் தெய்வச்சிலையார் சேனாவரையர்க்கு முந்தியவர் என்று உறுதியாகக் கூறுவதற்குப் போதிய சான்றில்லை. எனினும், இந்நூலில் இளம்பூரணரை அடுத்துத் தெய்வச்சிலையார் உரையைத் தொகுத்திருப்பதன் நோக்கம் சிறப்பாகக் காலம் காரணமாக அன்று. இளம்பூரணர் உரைக்கும் தெய்வச்சிலையார் உரைக்கும் உள்ள வேறுபாட்டை நன்கு தெளிவுறுத்தவே இவ்வாறு தொகுத்திருக்கிறோம்.

இந்த உரைக் கோவையால் பெறக்கூடிய பயனை விளக்கும் பொருட்டு முதற் சூத்திரத்தைச் சற்று விரிவாகக் காண்போம்.

சொல்லைப் பற்றியும் சொல்லிலக்கணத்தைப் பற்றியும் ஆறு உரையாசிரியர்களும் முதற் சூத்திரத்திற்கு உரை கூறும்போது தத்தம் கருத்தை விளக்குகின்றனர். அவர்கள் கருத்தை ஒன்பது தலைப்புக்களாக அமைப்போம்:

1. அதிகாரப் பெயர். 2. சொல்லிலக்கணம். 3. இயலின் பெயர். 4. முதற் சூத்திர நோக்கம். 5. சூத்திரவுரை. 6. சூத்திரப்பொருளின் திரட்டு. 7. சூத்திரத்தின் உரைக் கருத்தினை விளக்குவது. 8. சொல்லிலக்கணமும் தொடரிலக்கணமும். 9. பிறருரையைக் கொள்வதும் மறுப்பதும்.

(1) அதிகாரப்பெயர் சொல்லிலக்கணம் உணர்த்தினமையால் சொல்லதிகாரம்: இளம்பூரணர். (இந்நூல் பக்கம் 1)

சொற்களைப் பாகுபடுத்தலால் சொல்லதிகாரம்: தெய்வச்சிலையார். (பக்கம் 4)

சொல்லை யுணர்த்துவது சொல்லதிகாரம் எனச் சேனாவரையர் கூறிய பின்னோர் இடத்து, சொல் தம்மை எடுத்தோதியும் இலக்கணம் கூறியும் உணர்த்தினார் என்கிறார். (பக்கம் 9)

சொல்லை யுணர்த்துவது சொல்லதிகாரம் என்ற கருத்தை நச்சினார்க்கினியரும் (பக்கம் 11) கல்லாடரும் (பக்கம் 17) 'அரசும்' (பக்கம் 24) கூறுகின்றனர்.

அதிகாரம் என்பது முறைமை எனப் பொருள் கூறுகிறார் இளம்பூரணர். (பக்கம் 1)

நச்சினார்க்கினியரும் (பக்கம் 11) கல்லாடரும் (பக்கம் 17) அரசும் (பக்கம் 24) அவ்வாறே உரைக்கின்றனர்.

சேனாவரையர்மட்டும் வடநூலார் முறைப்படி அதிகாரம் என்பதற்கு ஒரு சொல் பல சூத்திரங்களிற் சென்று இயைவது என்றும், ஒன்றின் இலக்கணம் பற்றி வரும் பல சூத்திரங்களின் தொகுப்பு என்றும் இரு பொருள் கூறி இரண்டாவது பொருளைக் கொள்கிறார், (பக்கம் 9)

(2) சொல்லிலக்கணம் யாது என்பது குறித்து உரையாசிரியர் ஒவ்வொருவர் கருத்தையும் கூர்ந்து நோக்குதல் நன்று.

சொல்லென்பது இளம்பூரணர் கருத்துப்படி எழுத்தொடு புணர்ந்து பொருளை அறிவுறுக்கும் ஓசை என்பதாகும். இந்தச் சொல்லை எட்டு வகைப்பட்ட இலக்கணத்தான் உணர்த்தினார் என்று கூறித் திணை (யிரண்டு). பால் (ஐந்து), வழு (எட்டு), வேற்றுமை (எட்டு), ஓட்டு (ஆறு), இடம் (மூன்று), காலம் (மூன்று), (வழக்கு செய்யுள் ஆகிய) இடம் (இரண்டு) என எட்டாக வகுக்கிறார். (பக்கம் 9.) கல்லாடரும் (பக்கம் 17-18) அரசும் (பக்கம் 24-25) இக்கருத்தை அவ்வாறே கூறுகின்றனர்.

சொல் தொடர்வது எம் முறையில் என்பதை விளக்குதற்குத் தொடர் மூவகைப்படும் எனக்கூறி அவற்றைத் தொகைநிலை, எண்ணுநிலை, பயனிலை என மூன்றாக்கி எடுத்துக்காட்டும் கூறுகிறார் இளம்பூரணர் (பக்கம் 2-3). நச்சினார்க்கினியர் தொடர் மொழியை விளக்கும் போது இதனை அவ்வாறே எடுத்துக்கூறி மேலும் விளக்கம் தருகிறார். (பக்கம் 13) நச்சினார்க்கினியர் விளக்கத்திற்குக் கல்லாடர் மேலும் விளக்கம் தருகிறார். (பக்கம் 21)

தெய்வச்சிலையார் சொல்லதிகாரத்தில் தனி மொழி யிலக்கணமும் தொடர் மொழி யிலக்கணமும் கூறப்படுகின்றன என்று கூறி அவற்றை விளக்குகின்றார். எல்லாத் தொடரும் செப்பும் வினாவுமாக நிகழ்வதால் முற்படச் சொன்னிலைமையால் பொருளை உயர்திணை, அஃறிணை எனப் பகுத்து, உயர்திணைச் சொல்லை முப் பாலாகவும், அஃறிணைச் சொல்லை இரு பாலாகவும் பகுத்தார். அதன்பின் வேற்றுமையும் அவற்றின் மயக்கமும் விளியும் கூறுகின்றார். இவ்வாறு ஒன்பது இயல்களாகச் சொல்லதிகாரம் அமைதற்குரிய காரணத்தை ஆராய்கிறார். பொருள் உணர்த்துவன தனி மொழி ஆகையால் தொடர்மொழி பற்றிப் பேசிப் பயன் என்ன என்னும் கேள்வியை எழுப்பித் தனிச்

சொல் பொருள் பயப்பினும் கேட்டார்க்கு ஒரு பயன் தருவது தொடர் மொழி யாகலால் என்றுகூறி, உதாரணமும் காட்டி விளக்கு கிறார். தொடர் மொழியைப் பிரித்து பெயர், வினை, இடை, உரி எனக் குறியிடுவதே சொல் லிலக்கணத்தாற் பயன் என்றும் குறிக்கின்றார். (பக்கம் 4-5)

எழுவாய் வேற்றுமையையும் விளியையும் எழுத் ததிகாரத்தில் அவ்வழிக்கண்ணே முடித்தாராகலின் அவற்றை வேற்றுமைத் தொடர் என்றல் பொருந்தாதே எனும் கடாவை எழுப்பி, அவையும் வேற்றுமை என்றே குறி பெறுதலானும் எழுவாய் வேற்றுமையைக் கிளவியாக்கத் தோடு மணந்து கிடப்ப வைத்தலானும் விளி, எழுவாயது திரிபு ஆக லானும் அமையும் என்று விடை கூறுகிறார். (பக்கம் 5)

சேனாவரையர் சொல்லை விளக்கும்போது ஒருபுடையான் ஒற்றுமை உடைத்தாய் பொருள் குறித்து வருவது என்கிறார். அசைநிலையும் பொருள் குறித்து வரும் என்று சுட்டிக் காட்டுகிறார். (பக்கம் 8)

சொல்லைத் தனிமொழி தொடர்மொழி என இரண்டாகப் பிரிக் கிறார். (தெய்வச்சிலையாரை ஒப்புநோக்குக) தனி மொழி சமயவாற் றலாற் பொருள் விளக்குவது. தொடர் மொழியாவது அவாய்நிலை, தகுதி, அண்மை நிலை ஆகிய மூன்றால் பொருள் விளக்கும் தனி மொழி யீட்டம் என்கிறார்.(பக்கம்8)

(நியாயிகள், பொருள்படும் வாக்கியங்களைப் பற்றிக் கூறும்போது அவை, அவாய்நிலை, தகுதி, அண்மைநிலை, தாத்பரியம் எனும் நான்கு இயல்புகளைக் கொண்டிருக்கும் என்று கூறுகின் றனர்.[1] தாத்பரியம் சொல்லுவானது குறிப்புப்பற்றி நிகழும். ஒன்றா கலின் அதனை நீக்கி முதல் மூன்றை மட்டும் சேனாவரையர் கொண்டார். அண்மைநிலை என்பது பொதுவாக மொழி பேசுவோரிடம் நிகழாததால் அதை ஒரு பண்பாகக் கொள்ளாமல் நச்சினார்க்கினியர் முதலிரண்டை மட்டும் ஒப்புக்கொள்கிறார். தத்துவக் கருத்துக்களும் எவ்வாறு தொல் காப்பியச் சூத்திரத்தை விளக்கப் பயன்படுகின்றன என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு.)

சேனாவரையர் தனி மொழி நான்கிற்கும் எடுத்துக்காட்டுக் கூறித் தொடர் மொழியை இரு மொழித் தொடர், பன்மொழித் தொடர் என இரண்டாகப் பகுத்து எடுத்துக்காட்டும் தருகிறார். (பக்கம் 9) நச்சி னார்க்கினியர்க்கும் இது உடன்பாடு. (பக்கம் 13)

நச்சினார்க்கினியர் சொல் யாது என விளக்கும் போது எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப் பொருள் தன்மையும் ஒருவன் உணர்தற்குக் கருவியாம் ஓசை என்று இளம்பூரணர் உரையை விளக்குகிறார். ஆக்கப்

1 An Introduction to Indian Philosophy: Chatterjee and Datta 1960 Page 201.

படுதல் என்பதற்கு எழுத்தை ஒவ்வொன்ருகக் கூறினும் கேட்டோர் கருத்தில் ஒரு தொடராய் நின்றே பொருள் தருகிறது என்று விளக்கு கிருர். ஓரெழுத்து ஒரு மொழிக்கு அவ்வாறு எழுத்துத் தொடர்பு இல்லாததால் கருத்தின்கண் முதலில் நிகழ்ந்து பின்னர் பொருளை ஆக்குகிறது; ஆகையால், அதற்கும் ஆக்கும் தன்மை யுண்டு என ஓரெழுத்து ஒரு மொழிக்கு ஒரு வகையிலும், பலவெழுத்து ஒரு மொழிக்கு மற்ருெரு வகையிலும் விளக்கந் தருகிருர். (பக்கம் 11)

இருதிணைப் பொருளை விளக்கும்போது காட்சிப் பொருளும், கருத்துப் பொருளும், அவற்றின் பகுதியாகிய ஐம்பெரும் பூதமும், அவற்றின் பகுதியாகிய இயங்கு திணையும் நிலைத்திணையும் அடங்கின என்கிருர்.

தன்மை என்பதை மக்கள் தன்மை, இயங்கு திணைத் தன்மை, நிலைத் திணைத் தன்மை என்று மூன்ருகப் பாகுபாடு செய்கிருர். கருவி யையும் 'புலன் கருவியாய் நிற்றல் போல' என விளக்குகிருர்.

ஓசை அனைத்தும் சொல் லாகுமா என்னும் கேள்வியை எழுப்பிக் கடலொலி, சங்கொலி முதலியவற்றைக் கேட்குந் தோறும், 'இது நான் முன்பு உணர்ந்த எழுத்து' என்று கேட்டபொழு தெல்லாம் உணர நில்லாமையானும் எழுத்தினன் ஆக்கப்படாமையானும் அவை சொல் லாகா என்கிருர். (பக்கம் 12)

"அச் சொல்லை எட்டு வகையானும் எட்டிறந்த பல வகையானும் உணர்த்துப." எட்டுவகை இளம்பூரணர் கூறினர். எட்டிறந்த பல் வகையான் என்பது சொல் நான்கு வகை என்பதும், அவற்றைப் பல வகைப் படுத்தலும், விகாரம், பொருள்கோள் வகையும், செய்யுட்குரிய சொல் நான்கு என்றலும் பிறவும் ஆம் என்கிருர். (பக்கம் 13)

சொல், தனிமொழி, தொடர்மொழி என இருவகை யாகும் என்று தெய்வச்சிலையாரும் சேனவரையரும் கூறியது போன்று கூறி எடுத்துக்காட்டும் தருகிருர் (பக்கம் 13)

கல்லாடர், இளம்பூரணர் கூறிய எட்டு வகை இலக்கணத்தை அவ்வாறே விளக்கி ஏனைய ஓசைகள் சொல் லாகா என்று நச்சினர்க் கினியர் கூறியதை விரிவாக உரைக்கிருர். ஓசையை எழுத்தல் ஓசை, எழுத்தொடு புணராது பொருளை யறிவிக்கு மோசை, எழுத்தொடு புணர்ந்து பொருளை யறிவிக்கும் ஓசை, எழுத்தொடு புணர்ந்து பொருளை யறிவுறுத்தாத ஓசை என நான்காக்கிச் சொல்லதிகாரத்தில் பின்னிரண்டையும் ஆராய்வதாகவும் கூறுகிருர் (பக்கம் 17-19)

நச்சினார்க்கினியர், கல்லாடர் ஆகியவர் ஓசை பற்றிக் கூறிய கருத்தை 'அரசு' சுருக்கமாக விளக்குகிறார். இளம்பூரணர் எட்டு வகையான் உணர்த்திய இலக்கணத்தையும் கூறுகிறார். (பக்கம் 24-25)

(3) இயலின் பெயர்க் காரணம் கூறும்போது இளம்பூரணர், கிளவிகள் பொருள்மேல் ஆமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் என்னும் பெயர்த்து என்கிறார். ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல, வழு, வழுவமைதி எனப் பொருள்களைப் பகுத்து அவற்றின்மேலாமாறு இது என்று கிளவியாக்கத்தைப் பற்றிக் குறிக்கிறார். (பக்கம் 2)

கிளவியாக்கம் என்பது சொல்லினது தொடர்ச்சி என்றவாறு எனத் தெய்வச்சிலையார் கூறுகிறார். தொடர்ந்து பொருள்மேலாகும் நிலையைக் கிளவி யாக்கம் என்று தெளிவாக்குகிறார். ஓத்திற்குப் பெயரானது வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை காரணமாக என்கிறார். (பக்கம் 5)

இதனின் வேறுபட சேனாவரையர் வழுக்களைந்து சொற்களை ஆக்கிக் கொண்டமையான் இது கிளவியாக்கமாயிற்று. ஆக்கம்-அமைத்துக்கோடல்; நொய்யும் நுறுங்கும் களைந்து அரிசி அமைத்தாரை அரிசி யாக்கினார் என்பதுபோல என முதற்கண் கூறிப் பின்னர் இளம்பூரணர் உரையைத் தருகிறார். (பக்கம் 9) நச்சினார்க்கினியர் இவ்விரு கருத்துக்களையும் தருகிறார். (பக்கம் 13) கல்லாடர் இளம்பூரணர் கருத்தைக் கூறி ஏனைய ஓத்துக்கள் சொற்கள் பொருள்கள்மேலாகும் நிலைமையை உணர்த்துவதால், இதில் என்ன உணர்த்தப்பட்டது என்ற கடாவை எழுப்பி ஏனைய இயல்களில் பொருட்கள்மேலாகின்ற சொற்களின் இலக்கணத்தைக் கூறினார். இங்கே அவை அப்பொருளில் ஆகும் நிலைமையைக் கூறுகிறார் என்று விளக்குகிறார். அவ்வாறாயின் இலக்கணத்தால் சொல் நான்காகும்; ஓத்தும் நான்காகத் தானே இருக்க வேண்டும் எனும் கேள்வியை எழுப்பி, இல்லை; இதில் நால் வகைப்பட்ட சொல்லிற்கும் பொது விலக்கணம் உணர்த்தியுள்ளார் என்கிறார்.

அவ்வாறாயின், ஐந்து ஒத்து மட்டுமே இருக்க வேண்டும்; ஒன்பது ஓத்து எதற்கு என்னும் கடாவிற்குப் பெயர்ச்சொற்கு இலக்கணம் வேற்றுமை யோத்துள்ளும், வேற்றுமை மயங்கியலுள்ளும் விளிமர பினுள்ளும் உணர்த்தினார். இவ்வாறு இலக்கணம் உடைய பெயரைப் பெயரியலுட் கூறினார். எல்லா ஓத்திலும் எஞ்சி நின்ற சொற்களை எச்ச இயலுள்ளும் கூறுகிறார். (பக்கம் 20) இவ்வாறு ஓத்து ஒன்பதாம் என்பது அவர் கருத்து.

ஆக்கம் என்ற சொற்குச் சேனுவரையர் கருத்தையும் மேற்கொள்கிருர் அரசு (பக்கம் 25-26).

(4) முதற் சூத்திர நோக்கமாகச் சொல்லும் பொருளும் வரையறுத்தலைக் கூறுகிருர் இளம்பூரணர் (பக்கம் 2). சொல்லிலக்கணத்தை உணர்த்துவதாகத் தெய்வச்சிலையார் கொண்டார் (பக். 5).

சொல் வரையறுத்தல் மட்டும் இச்சூத்திரக் கருத்தன்று. அவ்வாருயின் ஆடூஉ அறிசொல், மகடூஉ அறி சொல் என்ருற்போல உயர்திணைச் சொல், அஃறிணைச் சொல் என அமையும். உயர்திணை அஃறிணை என்பன தொல்லாசிரியர் குறி யாகலான் ஆடூஉ, மகடூஉப் போல வழக்கொடு படுத்துப் பொரு ளுணரல் ஆகாமையின் உயர்திணை மக்கள், அஃறிணை பிற எனல் வேண்டும். எனவே சூத்திரம் ஒரு பொருள் நுதலிற்று என்ருர் சேனுவரையர் (பக்கம் 11). நச்சினுர்க்கினியர், இளம்பூரணர் கருத்தைக் கொண்டார். (பக்கம் 14).கல்லாடர், இளம்பூரணர் கருத்தை விளக்கித் தெய்வச்சிலையாரும் சேனுவரையரும் கொண்டது போன்று குறியீட்டு விளக்கமாகவும் கருதுகிருர். (பக்கம் 24)

(5) சூத்திரவுரை:

மக்களென்று சுட்டப்படும் பொருளை உயர்திணை யென்று சொல்லுவர் ஆசிரியர்; அஃறிணை யென்று சொல்லுவர் ஆசிரியர், மக்களல்லாத பிற பொருளை; அவ்விரு திணையையும் இசைக்கும் சொல் என்றவாறு என்கிருர் இளம்பூரணர். (பக்கம் 2).

... ... அவர்அல்லாத பொருளையும் பிற பொருளையும் அஃறிணை யென்று சொல்லுவர்; சொல் அவ் விரு திணையின்கண்ணும் ஒலிப்பன என்கிருர் தெய்வச்சிலையார். (பக்கம் 6)

அவ் விரு திணைமேலும் சொற்கள் நிகழும் என்கிருர் சேனுவரையர். (பக்கம் 9)

மக்களாகிய நன்கு மதிக்கப்படும் பொருளை என மக்கள் என்ற சொற்கு உரை கூறி, இளம்பூரணர் கூறியது போன்று நச்சினுர்க்கினியரும் (பக்கம் 14) கல்லாடரும் (பக்கம் 20-21) அரசும் (பக்கம் 26) கூறுகின்றனர்.

(6) திரட்டு:

உயர்திணைச் சொல், உயர்திணைப் பொருள் அஃறிணைச் சொல், அஃறிணைப் பொருள் எனச் சொல்லும் பொருளும் அடங்கின என்கிருர் இளம்பூரணர். (ப. 2)

சொல் இருவகைய என்பது தெய்வச்சிலையார் கருத்து. (பக். 6)

சொல் இரண்டு என்றும் (பக். 9) அஃறிணை, உயர்திணை என்பன குறியீடு ஆகையால் பொருளும் கூறினர் என்பதும் சேனாவரையர் கருத்து. (பக். 11)

நச்சினார்க்கினியரும் (பக். 14) கல்லாடரும் (பக். 21) அரசும் (பக். 26) இளம்பூரணருடைய கருத்தை மேற்கொண்டனர்.

7. உரைக் கருத்து விளக்கம்:

உயர்திணைக்குக் கூறுபா டின்று. அஃறிணை உயிரில்லனவும் உயிருடையனவும் என இரண்டு கூறு உடையது என்கிறார் இளம்பூரணர். (பக். 2)

இதை ஒத்துக் கொண்டு தெய்வச்சிலையார் மக்கள் என்பது மக்கள் என்னும் பொதுப் பொருண்மை யென்றும் மக்களாவார் ஒரு நீர்மையரன்றி ஆணும், பெண்ணும், அலியுமாகிய, வடிவு வேற்றுமை உடையவராகலின் அவரெல்லார் மாட்டும் கிடக்கும் பொதுத் தன்மையைக் குறிப்பது என்கிறார் (பக். 7.) சுட்டு என்ற சொற்குத் தொல்காப்பியச் சூத்திரங்களை மேற்கோளாகக் காட்டிக் குறிப்பு எனும் பொருளும் தருகிறார். (பக். 7)

'அவரல பிற' என்ற சொற்றொடர்க்குச் சேனாவரையர் விளக்கம் தருகிறார். பிற என்று மட்டும் குறிப்பின் யாதல்லாத பிற என்று அவாய் நிற்கும். முன்வரியில் மக்கட்சுட்டு என்று மேனின்றமையின் மக்களல்லாத பிற வென்று உணரலாமெனின், ஆற்றல் முதலாயினவற்றாற் கொள்வது சொல் லில்வழி என மறுக்க; 'அவரல' என்று மட்டும் கூறின் அவற்றது பகுதியனைத்தும் எஞ்சாமல் தழுவாது ஆகலான் அவ்வாறு கூறினர் என்கிறார். (பக். 10)

நச்சினார்க்கினியர் இசைக்கும் என்பதற்கு ஒலிக்கும் என்று பொருள் கூறிப் பின்னர் அது உணர்த்தும் என்று, தாம் பொருள் கூறியதற் குரிய காரணத்தை விளக்குகிறார். சொல்லுக்கு ஒலித்தல் கூடுவது, பொருள் உணர்த்தும்வழி யல்லது இல்லாமையால் உணர்த்தல் என்று பொருள் கொண்டதாகக் கூறி, இது ஒரு மரபு வழுவமைதி என்கிறார். (பக். 14). கல்லாடரும் அவ்வாறே கொள்கிறார். (பக். 23)

சொல் கருவியாக நின்று பொருள் உணர்த்துமே யன்றிச் சொல்லில் பொருள் இல்லை என்கிறார் நச்சினார்க்கினியர் (பக். 14). கல்லாடரும் இதைக் கூறுகிறார். (பக். 24). மக்கள் உயர்ந்தவர்

என்பதற்கு ஆதாரமாக மரபியற் சூத்திரத்தைக் காட்டி 'அவரலபிற' என்பதற்கு இளம்பூரணர் கருத்தை உரைக்கிறுர் நச்சினுர்க்கினியர், (பக். 15)

8. இலக்கண விளக்கம்:

உயர்திணை இறந்தகால வினைத்தொகை என்கிறுர் இளம்பூரணர். (பக். 3). நச்சினுர்க்கினியர் (பக். 15), கல்லாடர் (பக். 21) ஆகிய வரும் இவ்வாறே உரைக்கின்றனர்.

தெய்வச்சிலையார் மட்டும் பண்புத்தொகை என்று முதலிற் கூறி வினைத்தொகையுமாம் என்கிறுர். (பக். 6, 7). தெய்வச்சிலையார் கருத்தை நச்சினுர்க்கினியர் மறுக்கிறுர். (பக். 15)

என்மனுர் என்பதைப் பகரம் குறைந்து மன்னும் ஆரும் மிக்கது என்கிறுர் இளம்பூரணர். (பக். 3). கல்லாடர்க்கும் (பக். 21) 'அரசு' க்கும் (பக். 26) இது ஒப்பு. தெய்வச்சிலையார் இதனை என்ப என்னும் முற்றுச் சொல் திரிந்து நின்றது என்கிறுர். (பக். 7) சேனுவரையர் இதனை ஆர் ஈற்று எதிர்கால முற்றுச் சொல் என்கிறுர். (பக். 9). எதிர்காலம், இறந்த காலம் காட்டிற்று என்பர் தெய்வச் சிலையார் (பக். 7). நிகழ் காலம் என்பர் நச்சினுர்க்கினியரும் (பக்.15). கல்லாடரும் (ப. 22). 'அரசும்' (ப. 26) இதனைக் காலமயக்கம் என்பர். அவரல என்பதை அவரின் அல்ல என்று விரித்தார் இளம் பூரணர். (ப. 3). கல்லாடரும் அவ்வாறே கொண்டார். (பக். 22) அல்லவும் பிறவும் என்பது உம்மைத்தொகை என்னும் கருத்தும் உண்டு என்று இளம்பூரணர் கூறுகிறுர் (ப. 3). தெய்வச்சிலையாரும் (ப. 6) அவ்வாறே கொள்கிறுர்.

ஏகாரம் ஈற்றசை. இது அனைவருக்கும் உடன்பாடு.

ஆயிரு திணையின என ஐகாரம் விரித் துரைக்க, என்பர் இளம் பூரணர் (ப. 4). நச்சினுர்க்கினியர் (ப. 14) கல்லாடர் (ப. 20) அரசு (ப. 27) ஆகியவர் ஏழாம் வேற்றுமையாகக்கொண்டார் தெய்வச்சிலையாரும் (ப. 6) சேனுவரையரும் (பக். 10).

இசைக்கு மன் என்பதை மன் என்பது இடைச்சொல் என்றும் செய்யும் என்னும் பெயரெச்சம் என்றும் கொண்டார் இளம்பூரணர் (பக். 4). இசைக்குமன தொழிற் பெயர் என்றுர் தெய்வச்சிலையார் (பக். 7) இசைக்குமன என்பது முற்றுச் சொல் என்பதே சேனு வரையர் (பக். 11) கல்லாடர் (பக். 23) அரசு (பக். 26) ஆகியோரின் கருத்து.

மக்கட் சுட்டு என்பது ஆகுபெயர் என்பது தெய்வச்சிலையார் (பக். 5) நச்சினார்க்கினியர் (பக். 15), கல்லாடர் (பக். 22) ஆகியவர் கருத்து. பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை என்பது சேனாவரையர் கருத்து. (பக். 10)

ஆ என்பது சுட்டு நீண்டது என்கிறார் தெய்வச்சிலையார் (பக். 6) இது சேனாவரையர் (பக். 10), கல்லாடர் (பக். 23) ஆகியோர்க்கும் உடன்பாடு.

உடன்படு மெய் வரையறையின் றாகையால் யகரம் வந்தது என்ற சேனாவரையர் கருத்தைக் (பக். 10) கல்லாடர் விளக்குகிறார். (ப. 23)

ஆயிருதிணையின் என்பதில் உம் விகாரத்தாற் றொக்கது என்கிறார் சேனாவரையர் (ப. 11). நச்சினார்க்கினியரும் (ப. 14) கல்லாடரும் (ப. 23) இதனை ஒத்துக்கொள்கின்றனர்.

நச்சினார்க்கினியர், அஃறிணை என்பதை அல்லவாகிய ஒழுக்கம் எனப் பண்புத் தொகையாக்கி ஆகுபெயராய் அப்பொருளை உணர்த்தி நின்றது என்கிறார். (ப. 15)

சுட்டு அஃறிணை என்ற இரு சொற்களுக்கும் சொல் லியைபில்லை. ஆனால் பொரு ளியை புண்டு என்கிறார் கல்லாடர் (பக். 22).

பிற என்பதனோடு ஆயிருதிணையும் என்பதும் இவ்வாறே என்று அவர் கூறினார். (பக். 22)

9. (i) பிறருரையைக் கொள்வது:

மக்கள் என்று வரைந்து சுட்டுதற்குக் காரணமாகிய தன்மை என்னும் ஒருவன். மக்கள் எனினும் சுட்டு எனினும் அவரையே சொல்லியவாறு என்பர் ஒருதிறத்தார். (இளம். ப. 3.)

சொற்கள் பொருள்கள்மே லாமாறு உணர்த்தினமையாற் கிளவி யாக்க மாயிற்று எனினும் அமையும். (சேனா. ப. 9)

உரையாசிரியரும் எழுத்தாதற் றன்மையொடு புணர்ந் தென்றார். (ப. 8) ஆகலின் ஒருபுடை ஒற்றுமையே கூறினர். இளம்பூரணத்தில் எழுத்தொடு புணர்ந்து என்று மட்டுமே காணப்படுகிறது. அச் சொற்களுக்குச் சேனாவரையர் கொண்ட விளக்கமும் இளம்பூரணர் கருத்தாகவே இங்குக் கூறப் பட்டிருப்பதைக் காணலாம். தன்மை யொடு புணர்ந்து என்னுக்கால் ஓரெழுத்து ஒருமொழிக்கு எழுத்தொடு புணர்தல் இன்மையின் சொல்லாதல் எய்தாது என்றும் சேனாவரையர் விளக்குகிறார். (ப. 8)

உரையாசிரியர் கருத்தாகச் சொல் என்பது எழுத்தினன் ஆக்கப் பட்டுத் திணை அறிவுறுக்கும் ஓசை என்றும், தன்னை உணர நின்றவழி எழுத்து எனப்படும்; தாம் இடை நின்று பொருள் உணர்த்திய வழிச் சொல் எனப்படும் என்றும் நச்சினார்க்கினியர் கூறுகிறார். இதிற் காணும் இரண்டாவது வாக்கியம் இளம்பூரணத்தில் இல்லை.

'பிறபொருளைச் சுட்டுதற்கண்ணேயாஞ் சொல்'

தன்னை உணர்த்தின் எழுத்தாம்

எனும் அவிநயப் புறநடைச் சூத்திரம்[1] மேற் குறித்த வாக்கியத் தொடு ஒற்றுமைப்பட்டு நிற்றலால் அவிநயனுரையும் கருத்திற் கொண்டு நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றாரோ என்று ஐய மெழுகிறது. (பக். 12)

இனிச் சொற்கள் பொருள்கள்மேல் ஆமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் என்னும் பெயர் பெற்றது என்று இளம்பூரணர் கருத்தைக் கூறுகின்றனர் (ப. 13) நச்சினார்க்கினியர் கல்லாடர் (கல். ப. 19) அரசு (அரசு. ப. 25) ஆகிய மூவரும். 'மறங் கடிந்த அருங் கற்பின்' முதலிய உதாரணங்களைக் காட்டி உரையாசிரியரும் ஆயிரு திணையினையும் என இரண்டாம் உருபு விரித்துப் பொருள் கூறினார் என நச்சினார்க்கினியர் கூறுகிறார். (பக். 16)

(ii) பிறர்உரைகளை மறுத்தல்:

குறைக்கும்வழிக் குறைத்தலாலும் விரிக்கும்வழி விரித் தலாலும் 'என்பர்' என்பது 'என்மனார்' ஆயிற்று என்ற இளம் பூரணர் உரையைக் 'குறைப்பது செய்யுளின்பம் நோக்கி யன்றே அதன் பின் விரித்தல் எதற்கு' என்று கூறி மறுக்கிறார் தெய்வச்சிலையார். (ப. 7)

செய்யுளில் இடர்ப்படும்போது குறைத்தல் உண்டு. ஆனால் என்மனார் என்ற சொல் சான்றோர் செய்யுளில் பயின்று வருகிறது. அத்துடன் இசைக்காகக் குறைந்தது என்றவர் இசைநிறைக்காக விரிந்தது என்றல் மேற்கூறியதற்கு மாறுபாடாகும். எனவே அவர்க் கது கருத் தன்று என்கிறார் சேனாவரையர். (ப. 10)

இன் சாரியை வேற்றுமை உருபு பற்றியும் பற்றாதும் நிற்கும் என்று உரையாசிரியர் கூறினாரால் எனின் இரண்டாம் வேற்றுமைக் குச் சாரியை உள்வழிச் சாரியை கெடுதலும் சாரியை உள்வழித் தன்னுருபு நிலையலும் என்று திரிபு ஓதினமையானும் 'செலவினும்

1 நன்னூல் சூ. மயிலை நாதனை, ப. 44. உ-வே-சா பதிப்பு 1946.

வரவினும்' என்னும் சூத்திரத்திற்கும் பிறண்டும் உரையாசிரியர் ஏழாவது விரித்தற் கேற்ப இங்கும் பொருள் உரைக்கவேண்டு மாகலானும், அவ்வுரை போலி உரை யென்க என்கிறார் சேனாவரையர் (பக். 10)

நச்சினார்க்கினியர் சொல், பொருள் குறித்து வரும் என்ற சேனாவரையர் கருத்தைச் சொல் கருவியாக நின்று பொருள் உணர்த்துமே யன்றித்தனக்கென ஓர்உணர்வு இன்றெனக் கூறுகிறார். (பக். 12)

மக்கட் சுட்டு என்பதை அன்மொழித் தொகை என்று சேனாவரையர் கூறியதை மறுக்கிறார் நச்சினார்க்கினியர் (பக். 15) அன்மொழித் தொகை, சொற்பொருளை உணர்த்தாது. அவையல்லாத பிறமொழிமேல் நிற்பது. இங்குச் சொற்பொருளைச் சுட்டுவதால் ஆகு பெயரே அன்மொழித் தொகையன்று என்கிறார் நச்சினார்க்கினியார். (பக். 15)

மக்கட் சுட்டு என்பதற்கு மக்களாகிய சுட்டு யாதன் கண் நிகழும் அது மக்கட் சுட்டு என்றும், சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடமாதலின் ஆயிரு திணையின்கண் என ஏழாவது விரிக்க என்றும் சேனாவரையர் கூறிய கருத்தை நச்சினார்க்கினியர் மறுக்கிறார். (பக். 14)

முன்னர், மக்கள் என்று கருதப்படும் பொருளை உயர்திணை என்ப எனச் சேனாவரையர் கண்ணழிவு கூறியுள்ளார். அது ஒரு பொருளிடத்து நின்ற மக்கள் தன்மையாலே ஒருவற்கு அப்பொருள் மக்கள் என்று கருதப்பட்டது என்று அக் கண்ணழிவு பொருள் தந்தது. மக்களாகிய சுட்டு யாதன்கண் ணிகழும் என்றது நோக்குகின்றவர்களுக்கு மக்களாகிய கருத்து யாதொரு பொருளிடத்துத் தோன்றும் என்று பொருள் தந்தால் வெள்ளாடை என்னும் பண்புத் தொகை ஆடையின் வகையைக் குறிப்பது போன்று மக்கள் சுட்டு என்பது மக்களின் வகையைக் குறிக்காது. எனவே அது பண்புத் தொகையன்று. அப் பொருள் மக்கட் சுட்டு என்று அவர் கூறிய பொருளானும் அது மக்களையே தோற்றுவித்து நிற்றலின் அன்மொழித் தொகையும் அன்று. எனவே இவ்வாறு விளக்குவது சேனாவரையர் முன்கொண்ட கருத்திற்கு எதிராகும். அதோடு தொல்காப்பியர் ஒரு பொருளைப் பிறருக்கு உணர்த்துமாறும் ஒருவன் அதனை உணருமாறும் ஆராய்கின்றார் அல்லர். உயர்ந்த ஒழுக்கம் என்று முதனூலாசிரியர் கூறிய குறி உலகத்தார்க்கு விளங்கப் பொருள் கூறக் கருதி அதன் பயன் எய்துவிப்பதற்கெனத் தாமும் மக்களாகிய நன்கு மதிக்கும் பொருள் என்று அச்சொற்குப் பொருள் கூறினர் என்று நச்சினார்க்கினியார் வாதிக்கிறார். (ப - 16)

இவ்வாறு ஒன்பது தலைப்புக்களில் உரைகள் அனைத்தையும் ஒப்பு நோக்கும்போது முதலில் உரையாசிரியர்கள் ஒருவரை ஒருவர் தழுவிச் செல்லும் நிலையை நாம் நன்கு உணர முடிகிறது. இரண்டாவது அவர்கள் ஒருவரை ஒருவர் விளக்குவதும் மறுப்பதும் புலனாகின்றன. மூன்றாவது தம் காலத்து நிலவிய கொள்கைகளைத் தொல்காப்பியச் சூத்திர விளக்கத்திற்கு உரையாசிரியர்கள் பயன்படுத்தும் நிலையையும் அறிகின்றோம். நான்காவது உரைப் பாடம் திருத்தம் பெறுதற்கு இக் கோவை துணையாகும்; இளம்பூரணத்தில் முற்றுச் சொல் எச்சப் பெயர் (பக். 3) என்ற சொற்றொடர் மயக்கம் தருகிறது. இதனை 'அரசு' முற்றுச் சொல் எச்சப் பெயர் கொண்டு முடியும் என உரைக்கின்றார். (ப. 27). இதனால் இளம்பூரணர் உரைப் பதிப்பில் முற்றுச் சொல் எச்சப் பெயர் கொண்டு முடியும் என்று பொருள் விளக்கம்பெற இயலும். இதைப்போலவே கல்லாடர் உரையில் விடுபட்ட இடங்களையும் முன்னுள்ளோர் உரைகளால் நிரப்ப இயலும்.

சிறப்பாகத் தொல்காப்பியர் கருத்து யாதோ, என நாடும் அவாவும் எழுகின்றதன்றோ? அதன் பயனாக, மக்களைச் சுட்டுஞ் சொற்களை உயர்திணை யென்று ஆசிரியர் சொல்லுவர்; அவரல்லாத பிறவற்றைச் சுட்டுஞ் சொற்களை அஃறிணை யென்று சொல்லுவர். அவ்விரு திணைகளின் கண்ணும் சொற்கள் ஒலிக்கும்'' என்ற உரையும் தோன்றுகின்றது.

கல்லாடர் உரையையும் பெயர் தெரியாத பழைய ஆசிரியர் ஒருவர் உரையையும் முதன்முதலாக அச்சேற்றும் வாய்ப்பு இறைவன் எங்கட்கு நல்கியதற்காக அவனைத் தொழுகின்றோம். மொழியியல் முறைப்படியும் சங்க இலக்கியச் சான்றுகளி னடிப்படையிலும் தொல்காப்பியச் சூத்திரங்களுக்கும் உரைகாரர் கருத்துக்களுக்கும் விளக்கம் காணும் அவா உண்டு. அது உருப்பெறுவதற்கு இப் பதிப்புப்பணி ஓரளவு துணை செய்துள்ளது. உரைகாரர்கள் கருத்துக்கள் யாதும் புதிய மொழியியல் முறையிலோ சங்க இலக்கியச் சான்றுகள் அடிப்படையிலோ இங்கு ஆராயப்படவில்லை.

இப் பதிப்பில் காணும் குறைகள் பல என்பதைப் பதிப்பாசிரியர்கள் நன்கறிவர். அடுத்த பதிப்பைக் கூடிய மட்டில் குறை களைந்து வெளியிட முடியும் எனும் உறுதி உண்டு. ஆதலின் பொறுத் தருளுமாறு வேண்டுகிறோம்.

பிழைதிருத்தத்தை தா. வே. வீராசாமி தொகுத்துத் தந்துள்ளார்.

தமிழ்ப் பணிக்குப் போதிய அளவு ஊக்கமளித்து வரும் கேரளப் பல்கலைக் கழகத்திற்கு எங்கள் கடப்பாட்டைத் தெரிவித்துக்கொள் கிறோம்.

திருவனந்தபுரம்
17—4—1963.

ஆ. அருளப்பன்
வி. ஐ. சுப்பிரமணியம்

# பொருள் அடக்கம்



சூத்திரம்:

உ

... ... ... ...

---

## சுருக்கக் குறிப்பு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | : | அகநானூறு. |
| அரசு | : | சென்னை அரசினர் கையெழுத்து நூலகப் பழைய வுரை. |
| இ-ள் | : | இதன் பொருள். |
| இளம் | : | இளம்பூரண ருரை. |
| உ-ம். / உதா. | : | உதாரணம். |
| எச்ச | : | எச்சவியல் (தொல்காப்பியம்) |
| எழு. / எழுத். | : | எழுத்ததிகாரம் (தொல்காப்பியம்) |
| எ-து | : | என்பது. |
| எ-று | : | என்றவாறு. |
| எ-ன் | : | என் னுதலிற்றோ வெனின். |
| ஐந். எ. | : | ஐந்திணை யெழுபது. |
| கல். | : | கல்லாடனா ருரை. |
| கலி. | : | கலித்தொகை. |
| களவழி | : | களவழி நாற்பது. |
| கி. ஆ. | : | கிளவி யாக்கம் |
| குறுந். | : | குறுந்தொகை. |
| சீவக. | : | சீவக சிந்தாமணி. |
| சூ. | : | சூத்திரம். |
| சேனா. | : | சேனாவரைய ருரை. |
| சொல், | : | சொல்லதிகாரம் (தொல்காப்பியம்) |
| திணைமா-நூற். | : | திணைமாலை நூற்றைம்பது. |
| திரு முருகு. | : | திருமுருகாற்றுப்படை |
| தெய்வ. | : | தெய்வச்சிலையா ருரை. |
| தொல். | : | தொல்காப்பியம். |
| நச்சி. | : | நச்சினார்க்கினிய ருரை. |
| நற். | : | நற்றிணை. |
| பட்-பாலை. | : | பட்டினப் பாலை. |
| பரி. | : | பரிபாடல். |
| பா-பே. | : | பாட பேதம். |
| புறம். | : | புறநானூறு. |
| பொருந. | : | பொருநராற்றுப்படை. |
| பொ-ள். | : | பொருள். |
| மலைபடு. | : | மலைபடுகடாம். |
| விளி. | : | விளிமரபு (தொல்காப்பியம்) |
| வே. ம-ல். | : | வேற்றுமை மயங்கியல் ( ,, ) |
| வே-மை-ல். | : | வேற்றுமை யியல் ( ,, ) |

## கிளவி யாக்கம்

1. உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
அஃறிணை யென்மனா ரவரல பிறவே
ஆயிரு திணையி னிசைக்குமன் சொல்லே.

இளம்: என்பது சூத்திரம்.

இவ்வதிகாரம் சொல்லிலக்கணம் உணர்த்தினமை காரணத்தாற் சொல்லதிகாரம் என்னும் பெயர்த்து. சொல் என்பது எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் ஓசை அதிகாரம் என்பது முறைமை.

மற்று, அச்சொல் எனைத்து வகையான் உணர்த்தினாரோ வெனின், எட்டு வகைப்பட்ட இலக்கணத்தான் உணர்த்தினான் என்க. அவையாவன: இரண்டு திணை வகுத்து, அத்திணைக்கண் ஐந்து பால் வகுத்து, எழு வகை வழு வகுத்து, எட்டு வேற்றுமை வகுத்து, அறு வகை ஒட்டு வகுத்து, மூன்று இடம் வகுத்து, மூன்று காலம் வகுத்து, இரண்டு இடத்தான் ஆராய்தல்.

இரண்டு திணையாவன[1] — உயர்திணையும், அஃறிணையும்.

ஐந்து பாலாவன — ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல என்பன[2].

எழு வகை வழுவாவன — திணை வழு, பால் வழு, இடவழு, கால வழு, செப்பு வழு, வினா வழு, மரபு வழு என்பன.

எட்டு வேற்றுமையாவன — பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி என்பன.

அறு வகை ஒட்டாவன — வேற்றுமைத்தொகை, உவமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என்பன.

மூன்று இடமாவன — தன்மை, முன்னிலை, படர்க்கை என்பன.

---

1. என்பன் என்றும். 2. என இவை என்றும் பிரதி பேதம்.

மூன்று காலமாவன — இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்பன.

இரண்டு இடமாவன — வழக்கிடம், செய்யுளிடம் என்பன.

இனி, இவ்வதிகாரத்து முதற்கண்ணேத்து என்ன பெயர்த்தோ வெனின், கிளவிகள் பொருண்மேலாமாறு உணர்த்தினமையின் கிளவியாக்கம் என்னும் பெயர்த்து; என்னை? ஒருவன்மேலாமாறிது, ஒருத்திமேலாமாறிது, பலர்மேலாமாறிது, ஒன்றன்மேலாமாறிது, பலவற்றின்மேலாமாறிது, வழுவாமாறிது, வழுவமைதியாமாறிது எனப் பொருள்கண்மேல் ஆமாறு உணர்த்தினமையின் இப்பெயர்த்தாயிற்று.

இவ்வோத்தின் தலைக்கட் கிடந்த சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், சொல்லும் பொருளும் வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

**உரை:** உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டு என்பது உயர்திணையென்று சொல்லுவர் ஆசிரியர் மக்களென்று சுட்டப்படும் பொருளை யென்றவாறு; அஃறிணை யென்மனார் அவரல பிற என்பது அஃறிணை யென்று சொல்லுவர் ஆசிரியர் மக்களல்லாத பிற பொருளை யென்றவாறு; ஆயிரு திணையின் இசைக்குமன் சொல்லே என்பது அவ்விரு திணையையும் இசைக்குஞ் சொல் என்றவாறு.

எனவே, உயர்திணைச் சொல்லும், உயர்திணைப் பொருளும் அஃறிணைச் சொல்லும், அஃறிணைப் பொருளும் எனச் சொல்லும் பொருளும் அடங்கின.

உலகத்தின் மக்கள் என்ற பொருளை உயர்திணை யென்றது கூறுபாடின்மையின். அஃறிணை கூறுபாடுடைமையின் அஃறிணை யென்மனார் அவரல என்னாது, பிற என்றான்; அவை, உயிருடையனவும் உயிரில்லனவும் என இரண்டு கூற்றன என்றற்கு. அவற்றது கூறுபாடெல்லாம் அறிந்துகொள்க.

மற்று, உயர் என்னுஞ் சொன்முன்னர்த் திணை என்னுஞ் சொல் வந்து இயைந்தவாறியாதோ வெனின், ஒரு சொன்முன் ஒரு சொல் வருங்கால், தொகைநிலை வகையான் வருதலும், எண்ணுநிலை வகையான் வருதலும், பயனிலை வகையான் வருதலும் என மூன்று வகையான் அடங்கும்.

அவற்றுள், தொகைநிலை வகையான் வந்தது, 'யானைக் கோடு' என்பது; எண்ணு நிலை வகையான் வந்தது, 'நிலனும் நீரும்' என்பது; பயனிலை வகையான் வந்தது, 'சாத்தன் உண்டான்' என்பது. அவற்றுள் இஃது உயர்ந்த திணையென இறந்தகாலந் தொக்க வினைத்தொகை.

இனி, என்மனார் என்பது, என்ப என்னும் முற்றுச் சொல்லைக்

[1]குறைக்கும் வழிக் குறைத்தல் (தொல், சொல், எச்ச. 7)

என்பதனாற் பகரங் குறைத்து,

விரிக்கும் வழி விரித்தல் (தொல், சொல், எச்ச. 7)

என்பதனால் மன்னும், ஆரும் என்பன இரண் டிடைச் சொற் பெய்து விரித்தான். என்மனார் ஆசிரியர் என்று முடியற்பாற்று முற்றுச் சொல், எச்சப் பெயர் என்ப வாகலின் இது செய்யு ளுேக்கித் தொகுத்துக் கூறினான் என்பது.

இனி மக்கட் சுட்டே யென்பது, மக்கள் என்று வரைந்து சுட்டுதற்குக் காரணமாகிய தன்மை யென்னும் ஒருவன்.

இனி, மக்கள் எனினுஞ் சுட்டு எனினும் அவரையே சொல்லியவா றென்ப ஒரு திறத்தார். சுட்டென்பது கருத்து. அக் கருதற்பா டுடைமையிற் சுட்டெனவும் படும் மக்கள் என்பது. இனிச் சுட்டே என்புழி ஏகாரம் ஈற்றசை ஏகாரம்.

அஃறிணை யென்பது அல் திணை யென்றவாறு; அல்லதும் அதுவே, திணையும் அதுவே; மேற்சொல்லப்பட்ட உயர்திணை யல்லாத திணை அஃறிணை யெனக் கொள்க. ஈண்டும் என்மனார் என்பதற்கு மேற் சொல்லியவாறே சொல்லுக.

இனி, அவர் என்னுஞ் சொல்லின் முன்னர் அல்ல என்னுஞ் சொல் வந்து இயைந்தவா றியாதோ வெனின், அவரினல்ல என்பான் அவரல்ல என்றான், ஐந்தாம் வேற்றுமைப் பொரு ளென்பது. இனி, அல்ல பிற என்பது, அல்லவும் பிறவும் என உம்மைத் தொகை யென்றலும் ஒன்று.

இனி, அவ் வுயர்திணை யல்லன வெல்லாம் அவ் வுயர்திணை போல ஓரினத்த அல்ல; தத்தம் வகையான் வேறுபட்டன உயி ருடையனவும் உயி ரில்லனவும் என்பது. ஏகாரம் ஈற்றசை ஏகாரம்.

---

1. குறுக்கும் வழிக் குறுக்கல்

ஆயிரு திணையின் இசைக்கும் என்புழி, ஆயிரு திணையையும் என ஐகார வேற்றுமை விரித்துரைக்க; இன் சாரியை; இசைக்கும் என்பது செய்யும் என்னும் பெயரெச்சம்; மன் என்பது இடைச்சொல். ஏகாரம் ஈற்றசை ஏகாரம்.

தெய்வ :-

இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ வெனின் மேற்சொல்லப் பட்ட எழுத்தினா னியன்று பொருளறிவிக்குஞ் சொற்களைப் பாகுபடுத்துதலாற் சொல்லதிகாரம் என்னும் பெயர்த்து. அஃதியாங்ஙனம் உணர்த்தினார் எனின், சொற்களைப் பொரு ணிலைமை நோக்கித் தொடர்மொழி, தனிமொழி யென இரு வகைப்படுத்து அவ்விருவகைத் தொடரும் செப்பும் வினாவுமாக நிகழ்தலான், அவற்றை வழுவாமற் கூறுதற்காக முற்படச் சொன்னிலைமையாற் பொருளை உயர்திணை யஃறிணை என இரு வகைப்படுத்து, அவ் வுயர்திணை புணர்த்துஞ் சொற்களை ஒருவனை யறியுஞ் சொல், ஒருத்தியை யறியுஞ் சொல், பலரை யறியுஞ் சொல்லென மூவகைப் படுத்து, அஃறிணை யுணர்த்துஞ் சொற்களை ஒன்றினை யறியுஞ் சொல் பலவற்றை யறியுஞ் சொல்லென இருவகைப் படு(த்த......வ வகைப்பட்ட சொல்லும் பெயர்ச்சொல்லும், பெயர்ச்சொற் கண்ணும், வினைச்சொற் கண்ணும் வருதலிற் பெயராற் பாலறியப்படுஞ் சொல்லினாலும்) அமைக்கவேண்டும் சொற்களை எடுத்தோதி, அதன்பின் வேற்றுமைத்தொடர் கூறுவார் மயங்கா மரபின வாகி வருவன் எழு வகை வேற்றுமை யுணர்த்தி, அதன்பின் அவ் வேற்றுமைக் கண் மயங்குமா றுணர்த்தி, அதன்பின் எட்டாவதாகிய விளி வேற்றுமை யுணர்த்தி, அதன்பின் தனிமொழிப் பகுதியாகிய பெயர்ச் [1]சொற் பாகுபாடும் வினைச்சொல், இடைச்சொல், உரிச் சொற் பாகுபாடும் உணர்த்தி, அதன்பின் சொற்கள் விகாரப்படு மாறும், ஒட்டு மாறும், எஞ்சு மாறும், பிறவும் உணர்த்தினா [2]ரென்க. அவற்றுள், அல்வழித் தொடர் கிளவி யாக்கத்துள்ளும், வேற்றுமைத் தொடர் வேற்றுமையோத் துள்ளும், வேற்றுமை மயங்கியல் விளிமர பென்பனவற்றுள்ளும் தனிமொழிப் பகுதியாகிய பெயரிலக்கணம் பெயரியலுள்ளும் வினையிலக்கணம் வினையியலுள்ளும், இடைச்சொல் லிலக்கணம் இடைச்சொல் லோத்தினுள்ளும், உரிச்சொல் லிலக்கணம் உரிச் சொல் லோத்தினுள்ளும், எஞ்சிய வெல்லாம் எச்சவியலுள்ளும்,

1. (சொற் பாகுபாடும்) 2. (ரென்க)

உணர்த்தினு ரென்று கொள்க. இவ்வகையினு னேத்தும் ஒன்ப தாயிற்று. பொருளுணர்த்துவன தனிமொழி யாதலால், தொடர் மொழியென வகுத்ததனுற் பயனென்னை யெனின், பொருள் உணர்த்துதற்குச் சிறப்புடையன தொடர்மொழி யென்று கொள்க. என்னை சிறந்தவாறெனின், சாத்த னென்றவழிப் பொருண்மை மாத்திர முணர்த்துத லல்லது கேட்டார்க் கொரு பயன்பட நில்லாமையின், சாத்த னுண்டா னென்னப் பயன்பட வரூஉந் தொடர்மொழியே பொருள் இனிது விளக்குவ தென்க. சொல் விலக்கண மறிந்ததனுற் பயன், தொடர்மொழியாகிய வாக்கியத்தினைப் பிரித்துப் பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் லெனக் குறியிட வேண்டுதலின் அதன்பிற் கூறப்பட்டது.

இனி, எழுவாய் வேற்றுமையையும், விளி வேற்றுமையை யும் எழுத்ததிகாரத்துள் அல்வழிக்கண்ணே முடித்தா ராதலான் அவற்றை வேற்றுமைத்தோட ரென்றல் அமையா தெனின்-அவை வேற்றுமை யென்று குறிபெறுதலானும், எழுவாய் வேற் றுமை கிளவியாக்கத்தோடு மணந்துகிடப்ப வைத்தலானும் விளிவேற்றுமை எழுவாயது திரிபாதலானும் அமையு மென்க.

இவ்வதிகாரத்துக் கூறப்பட்ட ஒன்ப தோத்தினுள்ளும் முதற்கண்ணது கிளவியாக்கம். அது கிளவிய தாக்கம் என விரியும். அதற்குப் பொருள், சொல்லினது தொடர்ச்சி என்ற வாறு. சொற்கள் ஒன்றே டொன்று தொடர்ந்து பொருண் மேலாகும் நிலைமையைக் கிளவி யாக்கமென்றார். அது வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை யாகி, அதனையுடைய வோத்திற்குப் பெயராயிற்று.

இவ்வோத்தினுள் இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின் சொல்லிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

"உயர்திணை.....சொல்லே" என்பதனுள், உயர்தல் என்பது மிகுதல்; திணை யென்பது பொருள் என்மனார் என்பது என்று சொல்லுவா ரென்றவாறு. மக்க ளென்பது மக்க ளென்னும், பொதுப் பொருண்மை; சுட்டென்பது குறிப்பு, இனச்சுட்டில்லா எனவும், தெய்வஞ் சுட்டிய வெனவும் ஓதின ராகலின்; அது சுட்டப்படும் பொருண்மேல் ஆகுபெயராய் நின்றது. ஏ யென்ப தீற்றசை. அல் என்பது அல்லாமை. திணை என்பதற்கும் என்மனார் என்பதற்கும் மேலுரைத்தவாறே கொள்க. அவரல வென்பது மக்களல்லாத பொருள்; பிற என்பது பிறபொருள்;

மக்களல்லாதவும் பிறவும் என்னும் உம்மை எஞ்சி நின்றது. ஆ வென்பது அவ் வென்னுஞ் சுட்டு நீண்டிசைத்தது. இருதிணை யென்பது இரண்டு திணையின் கண்ணும் என்றவாறு. கண்ணென்னு முருபும் உம்மும் தொக்கு நின்றன. இசைக்கு மன் சொல்லென்பது ஒலிப்பன சொல்லாவன என்றவாறு.

உலகத்துப் பொருளெல்லாவற்றினும் மக்களென்று சுட்டப் படும் பொருளை உயர்திணை யென்று சொல்லுவர்; அவரல்லாத பொருளையும் பிறபொருளையும் அஃறிணை யென்று சொல்லுவர் ஆசிரியர். அவ் விரு திணையின் கண்ணு மொலிப்பன சொல் லாவன என்றவாறு.

எனவே, உயர்திணைச் சொல், அஃறிணைச் சொல் எனச் சொல் இருவகையா மென்பது பெறுதும். அஃதேல், திணையிட மாக, அத்திணைக்கண் பிறவற்றை யிசைத்தல் வேண்டுமெனின், ஒக்கும். அவ் விருதிணைக் கண்ணு முளவாகிய பாலினையே சொற்க ளிசைப்பன வென்ப. மேல் எழுத்ததிகாரங் கூறி, இனிச் சொல்லதிகாரங் கூறுவார், சொல்லாவது இத்தன்மையதென அத னிலக்கணங் கூறவேண்டுதலின், இச் சூத்திரம் முற் கூறப்பட்டது. அஃதற்றாக, தேவரை யறியுஞ் சொல் அஃறிணை யாகுமோ வெனின், அஃ தாகாவாறு முன்னர்க் கூறப்படும். உயர் என நிற்பத் திணையென வந்த சொல் எவ்வாறு வந்ததெனின், ஒரு சொன்முன் ஒரு சொல் வருங்கால் தொகைநிலை வகையான் வருதலும் தொகாநிலை வகையான் வருதலு மென இரண்டல்ல தில்லை.

அவற்றுள் தொகைநிலை வகையான் வந்தன — யானைக் கோடு, பொன்மேனி, கொல் யானை, கருங்குதிரை, உவாப் பதினான்கு, பொற்றொடி என்பன.

தொகாநிலை வகையான் வந்தன — சாத்தன் உண்டான், சாத்தனை வெட்டினான், உண்டான் சாத்தன், உண்டு வந்தான், நிலம் நீர் தீ வளி யாகாயம் என்பன. அவற்றுள் இது தொகை நிலை வகையான் வந்தது. தொகைதாம் பல: அவற்றுள் இஃ தெத் தொகையான் வந்ததெனின் பண்புத் தொகையான் வந்த தென்க. மற்றுள்ள பொருளெல்லாவற்றிலும் உயர்பொருளென விசேடித்து நின்றமையின், உயர் வான மென்றாற்போல வினைத் தொகை யாகாதோ வெனின்,

வினையின் றொகுதி காலத் தியலும் (எச். 18)
என்று ராகலின் ஈண்டுக் காலந் தோன்றாமையின் ஆகா தென்க. எற்றுக்கு? உயர்ந்த மக்கள், உயராநின்ற மக்கள், உயரு மக்க ளென நல்வினை யேதுவாக மூன்று காலமும் கொண்டா லாகுமே யெனின் அவ்வாறு கருதுவார்க்கு வினைத் தொகையுமாம். உயர் வொரு ளென்னாது திணை யென்றது என்னையெனின், அவ்வாறு ஆடல் வேண்டி ஆசிரியன் இட்டதோர் குறி யென்று கொள்க.

என்மனார் என, என்ப வென்னும் முற்றுச்சொல் திரிந்து நின்றது.

குறைக்கும் வழிக் குறைத்தல் என்பதனான் பகாரங் குறைத்து, விரிக்கும்வழி விரித்தல் என்பதனான் மன்னும் ஆருமென இரண் டிடைச் சொற் பெய்து, என்மனார் என்று யிற்று எனப் பொருளுரைப்பவா லெனின் பகரம் குறைக் கின்றது செய்யுளின்பம் வேண்டியன்றே; ஆண்டுக் குறைத்த வழிப் பின்னும் இரண்டெழுத்து விரிக்கல் வேண்டுமாயிற் குறைத்ததனாற் பயனின்மையின் இவ்வாறு எழுதும் உரை குற்ற மென்க.

இஃது எதிர்காலச் சொல்லாயினும் இறந்தகாலங் குறித்து நின்றது, இறப்பும் எதிர்வும் மயங்கப் பெறுமாதலின். அஃது ஆசிரியர் என்னும் பெயர் கொண்டு முடியும். ஈண்டு அப் பெயர் எஞ்சி நின்றது.

மக்களென்னாது சுட்டென்ற தென்னை யெனின் மக்க ளாவார் ஒரு நீர்மைய ரன்றி, ஆணும் பெண்ணும் அலியுமாகிய வடிவு வேற்றுமை யுடைய ராகலின் அவ ரெல்லார்மாட்டும் பொதுவாகக் கிடக்கும் மக்கட் டன்மையைக் குறித்து மக்க ளிவர் என்னும் பொதுப் பொருண்மை உயர்திணை யாவதென்ப தறிவித்தற்குச் சுட்டென்றார்.

அவரல்லாத அஃறிணை யென்னாது, பிற வென்ற தென்னை யெனின் மக்க ளல்லாத வென்றவழி, உயிருடையனவற்றையே சுட்டுமென் றையுற்று, உயிரில் பொருளும் அஃறிணை என்ப தறிவித்தற்குப் பிற வென்றார்.

[1] இசைக்குமன வென்பது செய்ம்மன வென்னும் தொழிற் பெயர். அது செய்யுமனவென விரிந்து நின்றது. அது சொல் லென்னும் பெயர்ப் பயனிலைகொண்டு முடிந்தது.

---

1. இசைக்குமன என்பது இவர் பாடம்

இனி இச்சூத்திரத்திற்குப் பிறவாற்றானும் [1]பொருள் படுமெனக் கடா விடை யுள்ளுறுத் துரைப்பிற் பெருகும்.

சேனு :-

நிறுத்த முறையானே சொல் லுணர்த்திய வெடுத்துக் கொண்டார்; அதனால் இவ்வதிகாரஞ், சொல் லதிகார மென்னும் பெயர்த்தாயிற்று.

சொல்லாவது எழுத்தோடு ஒருபுடையா னொற்றுமை யுடைத்தாய்ப் பொருள் குறித்து வருவது. உரையாசிரியரும் எழுத்தாதற் றன்மையொடு புணர்ந் தென்பார் 'எழுத்தொடு புணர்ந்து' என்றாராகலின், ஒருபுடை யொற்றுமையே கூறினார். தன்மையொடு புணர்ந் தென்னுக்கால், ஓரெழுத் தொரு மொழிக்கு எழுத்தொடு புணர்த லின்மையிற் சொல்லாத லெய்தாதென்க.

பொருள் குறித்து வாராமையின் அசைநிலை சொல்லாகா வெனின்,

'ஆவயி னாறு முன்னிலை யசைச் சொல்' (சொல்-274)
என்றும்

'வியங்கோ ளசைச் சொல்' (சொல்-273)
என்று மோதுதலான், அவையும் இட முதலாகிய பொருள் குறித்து வந்தன வென்க.

'யாகா பிற பிறக்கு' (சொல்-279)
என்னுந் தொடக்கத்தனவோ வெனின், அவையும் மூன்றிடத் திற்கு முரியவாய்க் கட்டுரைச் சுவைபட வருதலிற் பொருள் குறித்தனவே யாம். இக்கருத்தே பற்றி யன்றே ஆசிரியர்

'எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே' (சொல்-155)
என்றோதுவா ராயிற்றென்க.

சொற்றான் இரண்டு வகைப்படும்: தனி மொழியுந் தொடர் மொழியு மென. அவற்றுள், தனி மொழியாவது சமய வாற்ற லாற் பொருள் விளக்குவது. தொடர் மொழியாவது, அவாய் நிலையானும் தகுதியானும் அண்மை நிலையானும் இயைந்து பொருள் விளக்கும் தனி மொழி யீட்டம்.

பெயர்ச் சொல்லும், வினைச் சொல்லும், இடைச் சொல்லும், உரிச் சொல்லு மெனத் தனி மொழி நான்கு வகைப்படும் :— மர மென்பது பெயர்ச் சொல்; உண்டா னென்பது வினைச் சொல்; மற் றென்பது இடைச் சொல்; நனி யென்பது உரிச் சொல்.

---

1. பொருள் படுமென

இருமொழித் தொடரும் பன்மொழித் தொடருமெனத் தொடர்மொழி இரண்டு வகைப்படும்:— சாத்தான் வந்தான் என்பது இருமொழித் தொடர்; அறம் வேண்டி யரச னுலகம் புரந்தான் என்பது பன்மொழித் தொடர்.

அதிகார மென்னுஞ் சொற்குப் பொருள் பல் வுளவேனும், ஈண் டதிகார மென்றது ஒருபொரு ளுதலிவரும் பலவோத் தினது தொகுதியை என்க. வடநூலாரும் ஓரிடத்து நின்ற சொற் பல சூத்திரங்களோடு சென் றியைதலையும் ஒன்றன திலக் கணம் பற்றி வரும் பல சூத்திரத் தொகுதியையும் 'அதிகார' மென்ப. சொல்லதிகாரம் சொல்லை யுணர்த்திய வதிகார மென விரியும். அச்சொல்லை யாங்ஙன முணர்த்தினுரோவெனின், தம்மையே யெடுத்தோதியும் இலக்கணங் கூறியு முணர்த்தினு னென்பது.

வழுக் களைந்து சொற்களை ஆக்கிக் கொண்டமையான், இவ்வோத்துக் 'கிளவி யாக்க' மாயிற்று. ஆக்கம் – அமைத்துக் கோடல், நொய்யு நுறுங்குங் களைந்து அரிசி யமைத்தாரை அரிசி யாக்கினு ரென்ப வாகலின். சொற்கள் பொருள்கண் மேலாமா றுணர்த்தினமையாற் கிளவி யாக்க மாயிற் றெனினு மமையும். பொது வகையாற் கிளவி யென்றமையால், தனி மொழியுந் தொடர் மொழியுங் கொள்ளப்படும். கிளவி, சொல், மொழி, என்னுந் தொடக்கத்தன வெல்லாம் ஒரு பொருட் கிளவி.

**இதன் பொருள்:** மக்களென்று கருதப்படும் பொருளை ஆசிரியர் உயர்திணை யென்று சொல்லுவர்; மக்களென்று கருதப் படாத பிற பொருளை அஃறிணை யென்று சொல்லுவர்; அவ் விரு திணை மேலுஞ் சொற்க ணிகழும் என்ற வாறு.

எனவே, உயர்திணைச் சொல்லும் அஃறிணைச் சொல்லு மெனச் சொல் லிரண் டென்றவாறும். மக்கட் சாதி சிறந்தமை யான் 'உயர்திணை' யென்றார்.

என்மனு ரென்பது செய்யுண் முடி டெய்தி நின்றதோ ராரீற் றெதிர் கால முற்றுச் சொல். என்றிசினோர், கண்டி சினோர் என்பன முதலாயின அவ்வாறு வந்த இறந்த கால முற்றுச் சொல். என்ப என்னு முற்றுச் சொல்லினது பகரங் குறைத்து மன்னும் ஆருமென இரண் டிடைச்சொற் பெய்து

விரித்தாரென்று உரையாசிரியர் கூறினரா லெனின்:- என்மனு ரென்பது இடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது நூலுள்ளுஞ் 'சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலானும் 'இசை நிறை' யென்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார், பின்னும் இசை நிறை யென்றல் மேற்கோண் மலை வாதலானும், அவர்க்கது கருத்தன் றென்க. மாணுக்கர்க் குணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது உயத்துணர வைத்தல் அவர்க்கியல் பாகலாற் செய்யுண் முடிபென்பது கூறாராயினர்.

என்மனு ராசிரிய ரெனவே, உயர்திணை அஃறிணை யென்பன தொல்லாசிரியர் குறியாம். ஆசிரியர் என்னும் பெயர் வெளிப் படாது நின்றது.

மக்களாகிய சுட்டு யாதன்க ணிகழும் அது மக்கட் சுட் டெனப் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஈண்டு மக்களென்றது மக்களென்னு முணர்வை. எனவே, மக்களே யாயினும், மக்களென்று சுட்டாது பொரு ளென்று சுட்டிய வழி உயர்திணை யெனப் படா தென்பதாம்.

இனி அவரல வென்னுது பிறவென்றே விடின் யாதல்லாத பிறவென்று அவாய் நிற்குமாகலின், 'அவரல' வென்றார். மக்கட் சுட்டே யென்று மேனின்றமையின் மக்களல்லாத பிற வென்று ணரலா மெனின், ஆற்றன் முதலாயினவற்றாற் கொள்வது சொல் லில்வழியென மறுக்க. இனி அவரல, வென்றே யொழி யின் அவற்றது பகுதியெல்லாம் எஞ்சாமற் றழுவாமையின், எஞ்சாமற் றழுவுதற்கு 'அவரல பிற' வென்றார்.

செய்யுளாகலான் ஆயிருதிணை யெனச் சுட்டு நீண்டது. வரையறை யின்மையின் ஈண்டு யகரவுடம்படுமெய் யாயிற்று.

சொன் னிகழ்ச்சிக்குப் பொரு ளிடமாகலின், ஆயிரு திணை யின்கண் ணென ஏழாவது விரிக்க. இன் சாரியை வேற்றுமை யுருபு பற்றியும் பற்றாதும் நிற்குமென்று உரையாசிரியர் இரண் டாவது விரித்தாரா லெனின்:-

'சாரியை யுள்வழிச் சாரியை கெடுதலுஞ்
சாரியை யுள் வழித் தன்னுருபு நிலையலும்' (எழு-157)

என்றிரண் டாவதற்குத் திரி போதினமையானும்.

'செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினும்'
(சொல்-28)

என்புழியும் பிறண்டு மெல்லாம் ஏழாவது விரித்தற் கேற்பப் பொரு ளுரைத்தமையானும், அவ்வுரை போலியுரை யென்க.

ஆயிரு திணையினு மென்னும் உம்மை விகார வகையாற் றொக்கு நின்றது; இசைக்கு மென்பது செய்யுமென்னு முற்றுச் சொல்; மன் னென்னு மிடைச்சொல் மன வென வீறு திரிந்து நின்றது. மன்னென்று பாடமோது வாரு முளர். ஏகாரம் ஈற்றசை.

சொல் வரை யறுத்தலே இச்சூத்திரத்திற்குக் கருத்தாயின், 'ஆடூஉ வறிசொல் மகடூஉ வறிசொல்' என்றாற் போல உயர் திணைச்சொல் 'அஃறிணைச் சொல்' எனவமையும், உயர்திணை மக்கள் அஃறிணை பிறவெனல் வேண்டா வெனின் உயர்திணை அஃறிணை யென்பன தொல்லாசிரியர் குறியாகலான் ஆடூஉ மகடூஉப் போல வழக்கொடு படுத்துப் பொருளுணர லாகாமை யின், உயர்திணை மக்கள் அஃறிணை பிறவெனல் வேண்டு மென்பது. இவ்வாறு ஒருபொரு ளுதலிற்றாக உரையாக்கால், சூத்திர மொன்றுமா றில்லை யென்க.

நச்சி :–

[1] 'இவ்வதிகாரம் என்ன பெயர்த்தோ?' எனின் மேற்பா யிரத்துள்

'எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி' (எழுத். சிறப்புப் பாயிரம், 5) என் நிறுத்த முறையானே எழுத்துணர்த்திச் சொல் உணர்த்துகின்றார் ஆதலின், சொல் அதிகாரம் என்னும் பெயர்த்து. அது 'சொல்லை உணர்த்திய முறைமை' என விரியும்.

சொல் என்றது, எழுத்தினான் ஆக்கப்பட்டு இருதிணைப் பொருள் தன்மையும் ஒருவன் உணர்தற்குக் கருவியாம் ஓசையை. இங்கு 'ஆக்கப்படுதல்' என்றது, ஒரு சொற் கூறுமிடத்து ஓரெழுத்துப்போக ஓரெழுத்துக் கூறுவதல்லது ஒரு சொல்லாக முடியும் எழுத்தெல்லாம் சேரக் கூறல் ஆகாமையின், அவ் வெழுத்துக்கள் கூறிய அடைவே போயின வேனும்,[2] கேட்டோர் கருத்தின் கண் ஒரு தொடராய் நிலை பெற்று நின்று பொருளை அறிவுறுத்தலை. ஆயின், ஓரெழுத் தொருமொழிக்கு ஆக்குதல் இன்றால் எனின், ஓரெழுத் தொருமொழியைக் கூறியக்கால் அதுவும் செவிப் புலனாய்க் கருத்தின் கண் நிகழ்ந்து பின்னர்ப் பொருளை ஆக்குதலின், அதுவும் ஆக்கும் தன்மை உடையதாயிற்று.

1. இத்தொடர் பழைய பதிப்பில் இல்லை. 2. (போயிற் றேனும்)

இருதிணைப் பொருளுமாவன, ஐம்பாற் பொருளின் பகுதியாகிய காட்சிப் பொருளும் கருத்துப் பொருளும், அவற்றின் பகுதியாகிய ஐம்பெரும் பூதமும், அவற்றின் பகுதியாகிய இயங்கு திணையும் நிலைத் திணையுமாம். இவையெல்லாம் ஐம்பாலாய் அடங்கின.

இனிப் பொருள் தன்மையாவது, மக்கள் தன்மையும் இயங்கு திணைத் தன்மையும் நிலைத் திணைத் தன்மையுமாம். இத்தன்மை, ஒரு பொருட்குக் கேடு பிறந்தாலும் தனக்குக் கேடின்றித் தான் ஒன்றேயாய்ப் பல வகைப்பட்ட பொருடோறும் நிற்கு மென்றுணர்க.

கருவியாவது, அப்பொருள் தன்மையை ஒருவன் உணர்தற்கு அவ்வோசை கருவியாய் நிற்றல். இதனை ஐம்பொறிகள் ஒருவன் பொருளை உணர்தற்குக் கருவியாய் நின்றாற் போலக் கருவியாய் நிற்கு மென்றுணர்க.

இனி, 'ஓசையைச் சொல் என்றீரேல், கடலொலி சங்கொலி விண்ணொலி முதலியனவும் சொல்லாகாவோ எனின், சொல்[1] 'இது முன்பு யான் உணர்ந்த எழுத்து', என்றே பின்பு கூறியக்காலும் உணர நிற்றலின், கேடின்றி நிலைபேறு உடையதாயிற்று. இவை அங்ஙனம் உணர்தல் ஆற்றாமையானும், எழுத்தினான் ஆக்கப்படாமையானும் நிலைபேறு இலவாயின; ஆதலின் சொல் எனப்படா. அன்றியும், 'ஓசை, அரவம், இசை என்பன போலன்றிக் 'கிளவி, சொல், மொழி' என்பன எழுத்தினான் ஆகிய ஓசையை உணர்த்தும். முற்கு, வீளை முதலியன எழுத்தினான் ஆக்கப்படாமையின் சொல்லாகா.

இனி ஒரு சாரார், எழுத்தினான் ஆகிய ஓசையையும் கெடும் என்பர். உரையாசிரியரும், 'சொல்லென்பது எழுத்தினான் ஆக்கப்பட்டுத் திணை அறிவுறுக்கும் ஓசை' என்றும், 'தன்னை உணர நின்ற வழி எழுத்து எனப்படும்; தான் இடை நின்று பொருள் உணர்த்திய வழிச் சொல் எனப்படும், என்றும் கூறினார், இக்கருத்தே பற்றி.

இனிச் சேனாவரையர் 'சொல் பொருள் குறித்து வரும்' என்றாரால் எனின், ஒருவன் பொருள் தன்மையை உணர்தற்குச் சொல் கருவியாய் நிற்றல் அன்றித் தனக்கு ஓர் உணர்வு இன்மையின் தான் ஒரு பொருளைக் கருதி நிற்றல் இன்று என மறுக்க.

1. சொல்லு

அச் சொல்லை எட்டு வகையானும் எட்டு இறந்த பல வகையானும் உணர்த்துப. இரண்டு திணையும், ஐந்து பாலும், ஏழு வகை வழுவும், எட்டு வேற்றுமையும், ஆறு ஒட்டும், மூன்று இடமும், மூன்று காலமும், வழக்கும் செய்யுளும் ஆகிய இரண்டு இடமும் என எட்டு வகையான் உணர்த்துப. இனி எட்டு இறந்த பல வகையாவன: சொல் நான்கு வகை என்றலும், அவற்றையே பலவாகப் பகுத்தலும், விகார வகையும், பொருள் கோள் வகையும், செய்யுட்கு உரிய சொல் நான்கு என்றலும், பிறவுமாம்.

அச் சொற்றான், தனி மொழியும் தொடர் மொழியும் என இரு வகைப்படும். தனி மொழி பொருள் விளக்குமாறு:

நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்
இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்
(மரபியல் சூ. 89)

என்னும் மரபியற் சூத்திரத்தான் உணர்க.

தொடர் மொழி, இரு மொழித் தொடரும் பன்மொழித் தொடரும் என இரு வகைப்படும். அவை தொடருங்கால் பயனிலை வகையானும் தொகை நிலை வகையானும் எண்ணு நிலை வகையானும் தொடரும். இனி வடநூலார் கூறியவாறே அவாய்நிலையானும் தகுதியானும் தொடரும் என்றலுமாம்.

(உ-ம்) சாத்தன், உண்டான், மன், நனி என்பன தனி மொழி.

சாத்தன் வந்தான்—இது பயனிலைத் தொடர். யானைக் கோடு—இது தொகை நிலைத் தொடர். நிலம் நீர்—இஃது எண்ணுநிலைத் தொடர். இவை இரு மொழித் தொடர்.

'அறம் வேண்டி அரசன் உலகம் புரக்கும்' என்பது பன்மொழித் தொடர்.

வழுக் களைந்து சொற்களை அமைத்துக் கோடலின், இவ்வோத்து கிளவி ஆக்கம் என்னும் பெயர் பெற்றது. இனிச் சொற்கள் பொருள்கண்மேல் ஆமாறு உணர்த்தினமையின் கிளவி ஆக்கம் என்னும் பெயர் பெற்றது என்றுமாம். 'ஒருவன்

மேல் ஆமாறு இது; ஒருத்திமேல் ஆமாறு இது; பலர்மேல் ஆமாறு இது; ஒன்றன்மேல் ஆமாறு இது; பலவற்றின்மேல் ஆமாறு இது; வழு ஆமாறு இது; வழு அமையுமாறு இது, எனப் பொருள்கண்மேல் ஆமாறு உணர்த்தினமையின்.

இனி இத் தலைச் சூத்திரம் சொல்லும் பொருளும் வரையறுத்து உணர்த்துகின்றது.

இதன் பொருள்: மக்கள் சுட்டே — மக்களாகிய நன்கு மதிக்கப்படும் பொருளை, உயர்திணை என்மனார் — உயர் திணை என்று கூறுவர் தொல்லாசிரியர்; அவர் அல பிறவே — அம் மக்கள் அல்லாத பிற பொருளை; அஃறிணை என்மனார் — அஃறிணை என்று கூறுவர் தொல்லாசிரியர்; ஆயிரு திணையின் இசைக்கும் மன் சொல்லே — அவ் விரு திணைப் பொருள்களையும் உணர்த்தும் சொற்கள், [1] என்றவாறு.

ஏகாரம் மூன்றும் ஈற்றசை. 'இனத்தினை அறிந்த உம்மை' விகாரத்தால் தொக்கது.

'இசைப்பு இசையாகும்' (உரியல் சூ. 12.) என்றதனால், இசைப்பு ஒலிக்கும் என்னும் பொருள் தந்தது எனின், சொல்லுக்குப் பொருள் உணர்த்தும் வழி அல்லது ஒலித்தல் கூடாமையின், 'உணர்த்தும்' என்னும் தொழிலினை 'இசைக்கும்' என்னும் தொழிலினால் கூறினர். இதுவும் ஓர் மரபு வழுவமைதி. பொருளை உணர்த்துவான் ஒரு சாத்தனே எனினும் அவற்கு அது கருவியாக அல்லது உணர்த்தல் ஆகாமையின், அக் கருவி மேல் தொழில் ஏற்றிச் 'சொல் உணர்த்தும்' என்று கருவிக் கருத்தா வாகக் கூறினர். இவ் வாசிரியர் எவ்விடத்தும் சொல்லைக் கருவிக் கருத்தாவாகக் கூறுமாறு மேலே காண்க. அஃது,

எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே. (பெயரியல் சூ. 1)

என்றாற்போல்வது,[2]

இச் சூத்திரத்தால் 'பொருள் இரண்டு, சொல் இரண்டு,' என வரையறுத்தார்.

---

1. (என்றவாறு) 2. போல்வன.

'உயர் திணை' என்பது, 'உயர்ந்த ஒழுக்கம்' என இறந்த கால வினைத் தொகை. அஃது ஆகு பெயராய் அப் பொருளை உணர்த்தி நின்றது. இதனைப் பண்புத் தொகை என்பாரும் உளர். அது பொருந்தாது. என்னை? இது காலம் தோன்றி நிற்றலின்.

'மக்கள் சுட்டு' என்பது 'மக்களாகிய சுட்டு' என இரு பெயரொட்டுப் பண்புத் தொகை. சுட்டு — நன்கு மதிப்பு. அஃது ஆகு பெயராய் மக்கட் பொருளை உணர்த்தி நின்றது.

சேனவரையார் இதனைப் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை என்றாராலோ எனின், இரு பெயரொட்டு ஆகு பெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் வேறுபாடு உணராமல் கூறினமையின் அது பொருந்தாது. என்னை வேறுபாடு எனில் ஈண்டு ஆகுபெயராய் நின்ற நன்கு மதிக்கும் பொருளும் மக்களையே உணர்த்தி நிற்கும். அன்மொழித் தொகை அவ்வாறன்றி. 'வெள்ளாடை' என்றால் வெண்மையும் ஆடையும் அன்றி உடுத்தாளையே உணர்த்தி நிற்கும். இது தம்முள் வேற்றுமை.

'அம்மொழி நிலையா தன்மொழி நிலையலும்'
(எச்சவியல் சூ. 23)

என்புழி 'வெள்ளாடை' என்புழித் தொக்க இரு மொழி மேலும் நில்லாது 'உடுத்தாள்' என்னும் அன்மொழி மேல் நின்றது, என்று உதாரணம் காட்டினர் சேனவரையரும் என்று உணர்க.

'அஃறிணை' 'அவ்வொழுக்கம் அல்லவாகிய ஒழுக்கம்' எனப் பண்புத் தொகை. அது பொருளை உணர்த்தி நின்றது ஆகு பெயராய்.

'என்மனார்' என்பது ஓர் ஆர் ஈற்று நிகழ்கால முற்றுவினைத் திரிசொல். 'என்றிசினோர்' என்பது, அவ்வாறு வந்த இறந்த கால முற்றுவினைத் திரிசொல்.

'மக்க டாமே ஆறறி வுயிரே' (மரபியல் சூ. 33)

என்று மக்கள் உயர்தமை மரபியலில் கூறுப. 'அவரல' என்னுது, 'பிற' என்றார், அஃறிணை உயிர் உள்ளனவும் இல்லனவும் ஆகிய இரு கூறும் அடங்குதற்கு.

'மறங் கடிந்த அருங் கற்பின்' (புறம் 166-13) எனவும் 'சில் சொல்லிற் புல் கூந்தல்' (புறம் 166-16) எனவும் பிறண்டும் சான்றோர் செய்புளில் 'இன்' சாரியை உருபு பற்ருது நிற்றல் நோக்கி உரையாசிரியரும் 'ஆயிரு திணையினையும்' என இரண்டாம் உருபு விரித்துப் பொருள் கூறினர்.

இனிச் சேனவரையர், 'மக்கட் சுட்டு' என்பதற்கு மக்களாகிய சுட்டு யாதன் கண் நிகழும் அது 'மக்கட் சுட்டு' என்றும், 'ஆயிரு திணையின் இசைக்கு மன சொல்லே' என்பதற்குச் சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடமாதலின், 'ஆயிரு திணையின் கண்' என ஏழாவது விரிக்க, என்றும் பொருள் கூறினரால் எனின்; முன்னர் 'மக்கள் என்று கருதப்படும் பொருளை உயர்திணை என்ப' என்று அவர் கண்ணழிவு கூறியது, ஒரு பொருளிடத்து நின்ற மக்கள் தன்மையாலே ஒருவற்கு அப்பொருள் மக்களென்று கருதப்பட்டதென்று பொருள் தந்து நின்றது. பின்னர், மக்களாகிய சுட்டு யாதன் கண் நிகழும்? என்றது நோக்குகின்றவர்க்கு மக்களாகிய கருத்து யாதொரு பொருளிடத்துத் தோன்றும்? என்று பொருள் தந்தால், வெள்ளாடை என்னும் பண்புத் தொகை போல அக் கருத்து மக்கள் ஆகாமையின், பண்புத் தொகை அன்ரும். 'அது மக்கட் சுட்டு' என்றதற்கு 'அப்பொருள் மக்கட் சுட்டு' என்று அவர் கூறிய பொருளானும் மக்களையே தோற்றுவித்து நிற்றலின், அன்மொழித் தொகை அன்ரும்; அன்றியும், ஆசிரியர் ஈண்டு ஒரு பொருள் நின்று தன்னை ஒருவற்கு உணர்த்துமாறும் ஒருவன் அதனை உணருமாறும் ஆராய்கின்ருர் அல்லர்; 'உயர்ந்த ஒழுக்கம்' என்று முதனூலாசிரியர் கூறிய குறி உலகத்தாருக்கு விளங்கப் பொருள் கூறக் கருதி, அதன் பயன் எய்துவிப்பத் தாமும் மக்களாகிய நன்கு மதிக்கும் பொருள் என்று அச் சொற்குப் பொருள் கூறினர் என்றுணர்க. அவர் கூறிய உயர்ச்சி தோன்றத் தாமும் 'நன்கு மதிப்பு' என்று பொருள் கூறினர், தாமும் உயர்திணை என்றே ஆளுதல் பற்றி.

இனி, 'இசைப்பு இசையாகும்' (உரியியல் சூ. 12) என்பதனல் திணை இடமாகச் சொற்கள் நின்று பிறவற்றை இசைத்தல் வேண்டும்; அதனன் அது பொருந்தாது. அன்றியும் ஆசிரியருக்கு, அங்ஙனம் பொருள் கூறுதல் கருத்தாயின், 'ஆடூஉ அறிசொல்' (கிளவி யாக்கம் சூ. 2)

முதலிய சூத்திரங்கள் எல்லாம் சொல் நிகழ்ச்சிக்குப் பொருள் இடமாக 'ஆடூஉவின்கண் நிகழும் சொல்' 'மகடூஉவின்கண் நிகழும் சொல்' என்றே சூத்திரம் செய்வர்; அங்ஙனம் செய்யாது 'ஒருவன் ஆண் மகனை அறியும் சொல்லும், பெண்டாட்டியை அறியும் சொல்லும்' என 'அறியும்' என்னும் பெயரெச்சம் 'சொல்' என்னும் கருவிப் பொருளைக் கொண்டு முடியச் சூத்திரம் செய்தலின், ஆசிரியர்க்கு அங்ஙனம் பொருள் கூறுதல் கருத்து அன்மை அறிக.

'மன்' என்பது வினை பற்றிய அசை நிலை இடைச் சொல்லாய் நின்றது.

கல் :–

இவ்வதிகாரம் என்னுதலி யெடுத்துக் கொள்ளப்பட்டதோ வெனின் அதிகார நுதலியதூஉம், அதிகாரத்தினது பெய ருரைப்பவே விளங்கும். இவ் வதிகாரம் என்ன பெயர்த்தோ வெனின், சொல் லதிகாரம் என்னும் பெயர்த்து. அஃது, இடு குறியோ, காரணக் குறியோ வெனின் காரணக் குறி. என்ன காரண மெனின் சொல் லுணர்த்தினமை காரணத்தி னென்பது. என்னை? கிளவியாக்க மெழுவாக எச்சவிய லிறுதி யாகக் கிடந்த ஒன்பது ஓத்துக்களுள்ளுஞ் சொல்லின்கட் கிடந்த விகற்ப மெல்லாம் ஆராய்ந்தா ரெனக் கொள்க.

அதிகார மென்ற பொருண்மை யென்னை யெனின், முறைமை.

அவ் வோத்துக்களுள்ளும் எனைத்து வகையா னுணர்த்தி னுனோ வெனின், எட்டுவகைப் பட்ட இலக்கணத்தினான் உணர்த்தினு னென்பது. அவை உணரச் சொல் லுணர்ந்தானும்.

அவை யாவையெனின், இரண்டு திணை வகுத்து, அத் திணைக்கண் ஐந்து பால் வகுத்து, ஏழு வழு வகுத்து, எட்டு வேற்றுமை வகுத்து, ஆறு தொகை வகுத்து, மூன்று இடம் வகுத்து, மூன்று காலம் வகுத்து, இரண் டிடத்தா னுராய்ந் தானென எட்டாவன.

இவற்றுள் வழுவென்ப (து) தமை ........................ ............... சொல்லிற் கிலக்கண மாமா றென்னையோ வெனின், இன்மை முகத்தான் இலக்கணமா மென் றுணர்க.

அவற்றுள் இரண்டு திணையாவன :– உயர்திணையும் அஃறிணையு மாவன.

ஐந்து பாலாவன :– ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என விவை.

எழு வழுவான :– திணை வழூஉ, பால் வழூஉ, இட வழூஉ, கால வழூஉ, மரபு வழூஉ, செப்பு வழூஉ, வினு வழூஉ என் விவை.

வேற்றுமை எட்டாவன :– எழுவாய் வேற்றுமை முதலாக விளி வேற்றுமை யீருகக் கிடந்தன.

தொகை ஆருவன :– வேற்றுமைத் தொகை, உவமத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை.

மூன்று இடமாவன :– தன்மை, முன்னிலை, படர்க்கை.

மூன்று காலமாவன :– இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம்.

இரண்டு இடமாவன :– ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... று சொல்லிலக் கணங்களு ளெட்டென்றற்கு விதி உரையிற் கோட லென வுணர்க. இனிப் பிற விலக்கண முண் டெனினும், இவை பெரும்பான்மைய வென்ருதல், அவையு மிவற்று ளடங்கு...............ற்றுச் சொல்லென்ற பொரு......... ......................... யென்றவாறு. ஆனுல், கடலொலியும், காரொலியும் விண் ணொலியும் சொல்லாம் பிறவெனின், அற்றன்று. ஓசை யெனினும், அரவ மெனினும், இசையெனி னினும், ஒலி யெனினும் எழுத்தாகு மோசைக்கும், எழுத்தல லோசைக்கும் பொது.

கிளவி யெனினும், மாற்ற மெனினும், மொழி யெனினு மிவை யெல்லாம் எழுத்தொடு புணர்ந்து பொருளறிவுறுக்கும் ஓசை மே னிற்கும்.

---

1. (எனயிவை)

எனவே, எழுத்தொடு புணராது பொரு ளறிவுறுக்கும் ஓசையும் உளவோ வெனின், உள. அவை, முற்கும், வீளை யும் —— தொடக்கத்தன. அவை சொல் லெனப்படா. பொரு ளறிவுறுக்கும் எழுத்தொடு புணரா வோசைமேல தென் றுராய்ச்சி.

எனவே, எழுத்தல் லோசையும், எழுத்தொடு புணராது பொருளை யறிவிக்கு மோசையும், எழுத்தொடு புணர்ந்து பொருளை யறிவிக்கு மோசையும், எழுத்தொடு புணர்ந்த பொருளை யறிவுறுத்தாது, இறிஞி, மிறிஞி, யென்றாற் போல் வரும் ஓசையு மென ஓசை நான்கு வகைப்படும்.

அந் நான்கினுள்ளும், பின்னின்ற விரண்டும் இவ் வதிகாரத் தாராயப்படுகின்றன.

மேலதிகாரத்தொடு இவ் வதிகாரத்திடை இயை பென்னை யோ வெனின், மேற் பாயிரத்துள், எழுத்துஞ் சொல்லும், பொருளும் என நிறுத்தார்; நிறுத்த முறையானே எழுத் துணர்த்திச் சொல் லுணர்த்திய எடுத்துக்கொண்டா ரென்பது.

எழுத்தோ[1]டு • சொல்லிடை வேற்றுமை யென்னை யெனின், தன்னை யுணர நின்றவழி எழுத் தெனப்படும். தான் இடை நின்று பொரு ளுணர்த்தியவழிச் சொல் லெனப்படும்.

இம் முதலோத்து என் னுதலி யெடுத்துக் கொள்ளப் பட்டதோ வெனின், ஓத்து நுதலியதூஉம், ஒத்தினது பெய ருரைப்பவே விளங்கும்.

இவ் வோத்து என்ன பெயர்த்தோ வெனின், கிளவி யாக்க மென்னும் பெயர்த்து.

கிளவி யென்பது சொல்; ஆக்கம்—ஆக்க மென்பது சொற்கள் பொருட் கண்மே லாமாறு. சொற்கள் பொருட்கண்மே லாமா றுணர்த்தினமையின், கிளவி யாக்க மெனப் பேர் பெற்றது.

ஒருவன்மே லாமா றிது, ஒருத்திமே லாமா றிது, பலர்மே லாமா றிது, ஒன்றன்மே லாமா றிது, பலவற்றின்மே லாமா றிது, வழு வாமா றிது, எனப் பொருட்கண்மே வாமா றுணர்த் தினமையின் கிளவி யாக்க மெனப் பேராயிற்று.

---

1. (டு சொல்லிடை வேற்றுமை)

மற்றேனை யோத்துக்களுள்ளும், பொருட்கண்மே லாமாறே யன்றோ உணர்த்தினது, பொரு ளெல்லவற்றின்மே லாமா றுணர்த்திய தில்லை யெனின், ஏனை யோத்துக்களுட் பொருட் கண்மே லாயு நின்றவற்றி [1] னிலக்கணம் உணர்த்தினார். ஈண்டு அவைதம்மை யாமா றுணர்த்தினு ரென்பது.

மற்றுப் பெயர்ச் சொல்லும், வினைச் சொல்லும், இடைச் சொல்லும், உரிச் சொல்லும் என சொல்லு நான்கே யாதலான் ஒத்தும் நான்கே யாகற்பால வெனின், ஆகா. என்னை?

நான்கு வகைப்பட்ட சொல்லிற்குப் பொது விலக்கணம் இவ் வோத்தினுள் ளுணர்த்தினர்.

அவற்றுள் முதற்கண்ணது பெயர்ச் சொல் லாதற்கு இலக்கணம் வேற்றுமை யோத்துள்ளும், வேற்றுமை மயங்கிய லுள்ளும் விளி மரபினுள்ளும் உணர்த்தினர். உணர்த்திய இலக்கணமுடைய பெயரைப் பெயரியலுள் உணர்த்தினர். உணர்த்தி, அதன் பின்னே கிடந்த வினையை வினையியலுள் உணர்த்தினர்; உணர்த்தி அதன் பின்னே கிடந்த இடைச் சொல்லை இடைச்சொல் லோத்தினுள் உணர்த்தினர்; உணர்த்தி, அதன் பின்னே கிடந்த உரிச் சொல்லை உரிச் சொல் லோத்தினுள் உணர்த்தினர். பின்னை எல்லா வோத்தினுள்ளும் எஞ்சி நின்ற சொற்களை எச்சவியலுள் உணர்த்தினர்.

இவ் வகையால் எல்லா முணர்த்தினு ராகலின் இவ் வோத்தெல்லாம் வேண்டியதூஉம் இம் முறையே கிடந்ததூஉ மாயிற்று.

இதன் முதற் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், சொல்லும் பொருளும் வரையறுத் துணர்த்துத னுதலிற்று.

**இனி இதன் பொருள்:–** உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே என்பது உயர்திணை யென்று சொல்லுப வாசிரியர், மக்களாகிய நன்கு மதிக்கப்படும் பொருளை, என்றவாறு. அஃறிணை யென்மனார் அவரல பிறவே, என்பது அஃறிணை யென்று சொல்லுப வாசிரியர், அவரி னீங்கிய [2] வல்ல வாகிய பிற பொருளை யென்றவாறு. ஆயிரு திணையின் இசைக்கு மன சொல்லே- எ-து. அவ்விரண்டு பொருளையு [3] முணர்த்துஞ்

1. (னி) 2. ய்(வ)(அ)பல 3. மு(ன்)ண்ர்த்

சொற்கள் என்றவாறு. எனவே, உயர்திணைச் சொல்லும் உயர்திணைப் பொருளும் அஃறிணைச் சொல்லும் அஃறிணைப் பொருளும் எனச் சொல்லும் பொருளும் அடங்கின.

'உயர்' என்னுஞ் சொல்லின் முன்னர்த் 'திணை' யென்னுஞ் சொல் வந் தியைந்தவாறு யாதோவெனின், ஒரு சொன்முன் ஒரு சொல் வருங்காற் றொகை நிலை வகையான் வருதலும், எண்ணு நிலை வகையான் வருதலும், பயனிலை வகையான வருதலு மென, இம் மூன்று வகையல்ல தில்லை. இதற்கு விதி உரையிற் கோடல் என்னுந் தந்திர உத்தி. அவற்றுள், தொகை நிலை வகையான் வந்தது யானைக் கோ டென்பது. எண்ணு நிலை வகையான் [1]வந்தது [2]நில நீர் என்பது. பயனிலை வகையான் வந்தது சாத்தன் உண்டான் என்பது. மற்று எச்சவகை, அடுக்கு வகை, பொருள்கோள் வகை, ஆக்கவகை, இடைச்சொல் வகை, உரிச்சொல் வகை யென்றாற்போலப் பிறவும் வகையுள வெனின், நால்வகைச் சொல்லினும் சிறப்புடைப் பெயரினையும், வினையிற் சிறப்புடைய முற்றுச் சொல்லினையும் பற்றி வழக் கிடத்துப் பெரும்பான்மையும் வருவன அவையே யாகலின் அம்மூன் றல்ல தில்லை [3] யென்றார் போலும். அவையாவன :—

எச்சவகை : உண்டு வந்தான், உண்ட சாத்தன், என்றாற் போல்வன. அடுக்கு வகை : பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ வென்பன. பொருள்கோள் வகை : சுரை யாழ வம்மி மிதப்ப வென்பன. ஆக்கவகை : சாத்தன் றலைவன் ஆயினா னென்பன. இடைச் சொல் வகை : யானோ தஞ்சம் பெரும என்பன. உரிச்சொல் வகை : செய்யார் தேளந் தே மால் கலிப்ப என்பன.

அவற்றுள் இது, தொகை நிலை வகையான் வந்த தொகை நிலை வகை யாறனுள்ளும் வினைத்தொகை; வினைத்தொகை மூன் றனுள்ளும் இறந்தகால வினைத்தொகை.

என்மனார் என்றது, என்பவென்னும் முற்றுச் சொல்லினைக் 'குறைக்கும்வழி குறைத்தல்' என்பதனால் பகரம் குறைந்து விரிக்கும்வழி விரித்தல் என்பதனான் [4]மன் ஆர் [5]என இரண் டிடைச்சொற் பெய்து விரித்து 'என்மனார்'

1. புதிய திருத்தம் 2. நில(னு)நீர்(மெ) 3. யென்(று)ர். 4. மன்(உம்) ஆர் (உம்)
5. ஏன(ன்பன)

என்ருயிற்று. இம் முற்றுச் சொற்கும் பெயராகிய ஆசிரிய ரென்பது செய்யுள் விகாரத்தாற் ருெக்கது. இஃது எச்ச வகை. என்ரு ரென்றற்பாலதனைக் கால மயக்கத்தால் 'என்ப' என்ரு ரென வுணர்க

இனி, 'உயர்திணை' யென்பதன் முன் என்ப என்னுஞ் சொல் முதனூ லாசிரியனது கூற்றினைப் பின் ருன் கூறுகிற மக்கட் சுட் டென்பதனே டியைவித்தற்குக் கொண்டுகூறு நிலைமைக்கண் வந்த தாகலின், உயர்திணை யென்னுஞ் சொல்லும் என்ப வென்னுஞ் சொல்லும் பின்வருகிற மக்கட் சுட் டென் னுஞ் சொல்லினேடு வேற்றுமைத் தொகையுள் இறுதி யுருபுத் தொகைநிலை வகையான் வந்த தென்ப. பொரு ளியைபு கூறுவ தல்லது தம்முட் சொல் லியைபு இல வென வுணர்க.

மக்கட் சுட் டென்பது மக்களாகிய சுட்டென இரு பெய ரொட்டுப் பண்புத்தொகை. சுட்டென்பதன் பொருள் நன்கு மதிப்பு; அஃது ஆகுபெயரான் மக்கண்மே னின்றது. மக்க ளென்றது சுட்டென்றது தான் உயர்திணை யென இடுகின்ற குறியீட்டிற்குக் காரண மிது வென்பது விளக்கல் வேண்டிப் போலும். இனி, ஆசிரியர் என்பதனேடு மக்கட் சுட் டென்பதூஉம் பொருளியை பல்லது சொல் லியை பின்று என வுணர்க. 'ஏ' என்பது ஈற்றசை. அஃறிணை யென்பது அல்லாதாகிய திணை யெனக் குணப் பண்பு பற்றி வந்த பண்புத் தொகை. உயர்திணை யல்லா தாகியதென மேனின்ற உயர்திணை யென்னுஞ் சொல் வருவித்துக் கொள்க. [1]உயர்திணை யென்பதற் கேற்ப இழிதிணை என்னில் என்னும் பொருள்? நோக்கும் என வுணர்க.

முன்னின்ற சுட்டென்பதன் முன் அஃறிணை யென வந்த சொல்லும் சூத்திரத்துட் பொருட்படை யென்னும் வினை முடிவி னிறுதிக்கண் வந்த தாகலின் பொருளியை பல்லது சொல்லியை பின்றெனவுணர்க. [2]ஈண்டும் என்மனு [3]ரென்றது மேற் சொல்லியவாறே நின்ற தென வுணர்க. அவரல வென்பது நீக்கப் பொருண்மைக்கட் டொக்க ஐந்தாம் வேற்றுமைத் தொகை. அல்ல பிறவென்பது அல்லவாகிய பிறவென இரு பெயரொட்டு பண்புத் தொகை யென வுணர்க. 'பிறவற்றை' யென்னும் இரண்டாம் வேற்றுமை இறுதிக்கட் டொக்கு

1. தெளிவில்லை 2. இ(ஈ) 3. என்(ப)(ற)து

நின்றது. 'அவரல்' வென்னுது 'பிற' வென்றது அஃறிணை உயிருடையனவும் உயிரில்லனவும் என விரு கூருய் அவ் விரு கூறும் தத்தம் வகையானும் வேறுபட்டு நின்றமை விளக்கிய வென்பது. ஏ யென்பது ஈற்றசை. [1]அ என்னுஞ் சுட்டு

"நீட [2]வருதல் செய்யுளு ளுரித்தே" — (எழுத். 209)

என்பதனுன் நீண்டு பிறவும் வேண்டும் செய்கைப்பட்டு 'ஆயிரு திணை' யென நின்றது. இருதிணை யென்பதனேடு 'அவ் வென்பது பெயர்பற்றி வந்த தத்தங் குறிப்பிற் பொருட் செய்யும் இடைச்சொல் லென்பதல்லது மூவகையுட் சொல் லியைபு கூறப்படாது. இருதிணை யென்பது இரண்டாகிய திணையென விருபெய ரொட்டுப் பண்புத்தொகை. பிற வென் பதனேடு ஆயிருதிணை யென்பதூஉம் பொருட்படையாகிய வினைமுடிவின்கண் வந்த தாகலிற் சொல்லியைபின் றென்பது. திணை யென்பதனேடு 'இசைக்கும்' என்பது தொகை நிலையான் வந்தது. தொகையுள் இரண்டாம் வேற்றுமைத் தொகை பொருணிற்ப வுருபு தொகுதலின் உருபுத்தொகை யெனப்படும்.

இனி, "பெயருந் தொழிலு" மென் றெழுந்த பொது விதியை இரண்டாவதற்கு விலக்கிச்

"சாரியை யுள்வழித் தன்னுருபு நிலையலும்"

என்று சிறப்பு விதி யோதுதலின் செய்யுள் விகாரத்தாற் சாரியை நிற்ப வுருபு தொக்கது போலும்.

ஆயிரு திணையினையும் என்னும் முற்றும்மையும் செய்யுள் விகாரத்தாற் றொக்கது. இசைக்கு மென்பது செய்யுமென்னு முற்றுச்சொல்; அது பின் நின்ற சொல் லென்பதனேடு பயனிலை வகையான் வந்தது.

"இசைப் பிசையாகும்" — (சொல். 309)

என்பதனுன் இசைக்கு மென்பதன் பொருள் ஒலிக்கு மென்பதே யாயினுஞ் சொல்லிற்குப் பொரு ளுணர்த்தும்வழி யல்லது ஒலித்த[3]ற் கூடாமையின் உணர்த்து மென்னுந் தொழிலை இசைக்கு மென்னுந் தொழிலாற் கூறியவாருகக் கொள்க. இதுவு மோர் மரபு வழு வமைதி போலும்.

பொருளை உணர்த்துவான் ஒரு சாத்தனே யெனினும் [4]அவற் கது கருவியாக வல்ல துணர்த்த லாகாமையின் அக்

---

1. அ(வெ)ன்று 2. வருத(ல்)ற் 3. (ற்) 4. அவ(ர்க்)(ற்)கது.

கருவிமேற் றொழிலை யேற்றிச் சொல் லுணர்த்து மென் று கருவிக் கருத்தாக வாகச் சொல்லிற்றாக வுணர்க. மன வென்பதூஉம் வினைபற்றிய வுசை நிலை யிடைச்சொல் லாகலின் அதனோடியைபு கூறப்பட்டது. இனி [1]மன் னென்று பாட மோதுவாரு முளர்.

இச் சூத்திரத்தாற் சொல்லிய பொருள் இவ் வதிகாரத்துச் சொல்லுகிற சொல்லது தொகை வரையறையும், அதனை வரையறுக்குங்காற் பொருளா னல்லது வரையறை யின்மையின் அப் பொருள்து தொகை வரையறையும், பொருட்கு நூலகத் தாட்சி பெற்ற குறியீடும் உணர்த்தினவா றாயிற்று. .........(க)

அரசு :–

இவ்வதிகார மென்ன பெயர்த்தோ வெனின், சொல் லதிகார மென்னும் பெயர்த்து. சொல்லதிகார மென்ப திடு குறியோ காரணக் குறியோ வெனின், காரணக்குறி. என்னை? சொல் லுணர்த்தினமையாற் பெற்ற மென்க. அதிகாரமாவது முறைமை யென்றவாறும். [2]இனிச் சொல் லென்ற பொருண்மை யென்னை யெனின், ஓசை என்றவாறும். ஓசையைச் சொல்லென் றீராற் கடலொலியுஞ் சங்கொலியும் விண்ணொலியுஞ் சொல்லாகா [3]வோவெனின் [3]இசை யெனினும் மால மெனினு மொலி யெனினு மெழுத்தினாகிய வோசைக்கு மெழுத்த லோசைக்கும் பொதுவாம். சொல் லெனினுங் கிளவி யெனினு மொழி யெனினு மெழுத்தோடு புணர்ந்து பொரு ளறிவுறுக்கு மோசை மேனிற்கு முற்கும் வீளையு மிலதையு மென்னுந் தொடக்கத்தனவோ வெனி னவை யெழுத்தோடு புணராமையிற் சொல்லாகா; [4]அவையும் பொருளறி வுறுக்குமென வறிக. இனி யெழுத்தொடு புணர்ந்த ஓசையே சொல் லெனப்படுவ தென் றறிக. அச் சொல் லெழுத் தினாகி வருதலா னாக்குவதனை முன்னுணர்த்தி ஆக்கப்படாத தனைப் பின்னுணர்த்தினர். வரியெழுத்துஞ் சொல்லாம். பிற வாமையின் சொன்முன் வைக்கற் பாலீ ரெனின், அகர மென்ற விடத்து நான்கு சொல்லின் ஒன்று மூன்று சொல்லின் ............ ............ என்பது இயற்றிற்கும்.

இனி யச் சொல் லெனைத்து வகையா னுணர்த்தினானோ வெனின், எட்டு வகையா னுணர்த்தினான்; அவ் வெட்டு வகைப் பட்ட விலக்கணமு முணர்ந்தான் சொ லுணர்ந்தானும் அவ்வெட்டு வகையு மியா[5]வோ வெனின் இரண்டு திணை வகுத் தத் திணைக்

1. மன்(னெ)(எ)என்று 2. யினி 3. தோ 4. வவை 5. தோ

கணைந்து பால் வகுத்து, எழுவகை வழூஉ வகுத்து, எட்டு வேற்றுமை வகுத்து, ஆறு வகைப்பட்ட தொகை வகுத்து, மூன்றிடம் வகுத்து, மூன்று காலம் வகுத்து, இரண்டிடம் வகுத்தலான் இவை சொல் லாராய்ந்த வெட்டிலக்கணமு மாவன.

அவற்று ளிரண்டு திணை யென்பன: உயர்திணை, அஃறிணை.

ஐந்து பா லென்பன: ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல.

ஏழ் வழூஉ வாவன: திணை வழூஉ, பால் வழூஉ, இட வழூஉ, கால வழூஉ, மரபு வழூஉ, செப்பு வழூஉ, வினு வழூஉ.

எண் வகை வேற்றுமை யாவன: எழுவாய் வேற்றுமை முதலாக விளி வேற்றுமை யீருகப்பட்டன.

அறுவகைப்பட்ட தொகையாவன: வேற்றுமைத் தொகை, உவமைத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உம்மைத் தொகை, அன்மொழித் தொகை.

மூன்றிட மென்பன: தன்மை, முன்னிலை, படர்க்கை.

மூன்று கால மென்பன: [1] இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம்.

இரண்டிட மென்பன: வழக்[2] கிடம், செய்யு ளிடம் என வெவ்வாறு சொல்லுப.

இவ்வெட்டன் புடை பெயர்ச்சியே கிளவியாக்கமுதலாக வெச்சவிய லிறுதியாகக் கிடந்த வொன்ப தோத்தினுள்ளு மாராயப்பட்டதெனக் கொள்க. இனி கிளவியாக்க மென்ப திடுகுறியோ காரணக்குறியோ வெனின் காரணக்குறி. என்னை காரணமெனிற் கிளவி யென்பது சொல்; ஆக்க மென்பு தமைத்துக் கோடல்; சொற்களை யமைத்துக் கொள்ளப்பட்டமையிற் கிளவி யாக்க மென்னும் பெயர் பெற்றது: அரிசி யாக்கிக் கொண்டா ரென்பது போல. மற் றரிசி யாக்கு மிடத்து நொய்யு நுறுங்குங் களைந்து கொள்ளப்படுவது போல வீங்குங் களைந்து கொள்ளப்படுஞ் சொல் லுளவோ வெனின், உள. அவை வழீஇயன சொற் களைந்து, வழுவாதன கொள்ளப்பட்ட திவ்வோத்தினுளென்பது. [3] இன்னமு மொன்று, கிளவி யென்பது சொல். ஆக்க மென்பது சொற்களைப் பொருண்மே லாமா றுணர்த்தினமையாற் சொல் லாக்க மென்று பெயர் பெற்றது. என்னை? ஒருவன்மே லாமா

---

1. யி 2. குளி 3. யி

றிது, ஒருத்திமேலாமாறிது, பலர்மேலாமா றிது, ஒன்றன்மேலாமா றிது, பலவற்றின்மேலாமாறிது, வழு வாமாறிது, வழு வமையுமா றிது, பொருட்கண்மேலாமா றுணர்த்தினமையிற் கிளவியாக்க மென்று பெயர் பெற்று, மற் றேனை யோத்தி னுணரும் பொருண்மேலாய் நின்றவா றிலக்கண முணர்த்தினார். ஈண்டு மவைதம்மையே யொன்ப தோத்தினா லுணர்த்தினா ரென்பது.

இனிப் பெயர் முதலாகிய நான்கு வகைப்பட்ட சொல்லிற்கு இவ் வோத்தினுட் பொது விலக்கண முணர்த்தினார். பெயர்ச் சொல்ல திலக்கணம் வேற்றுமை யோத்தினுள்ளும் வேற்றுமை மயங்கிய[1]லுள்ளும் விளி மரபினுள்ளு முணர்த்திப் பெயர் முத லுரி யீறாக வவற் றிலக்கண மடைவே விரித் துணர்த்தி, யெஞ்சி நின்ற சொற்களை யெச்ச வியலா னுணர்த்தினா ரென்க. இவ்வகையா னெல்லா முணர்த்தினா ராகலி னொன்ப தோத்தும் வேண்டிற் றென்க.

மக்களென்று சுட்டப்படும் பொருளை யுயர்திணை யென்று சொல்லுப வாசிரியர். மக்க ளல்லாத பிற பொருளை அஃறிணை யென்று சொல்லுப வாசிரியர் அவ் விருதிணையுஞ் சொல் லுஞ் சொல்[2] உயர்திணைச் சொல்லு மஃறிணைச் சொல்லுமாம். எனவே சொல்லும்பொருளும் வரையறுக்கப்பட்டது. உயர்திணை யென்றது, பிறப்பினிற் சிறப்பெய்துதற்கு மக்க ணிலமை மிக்க சார்வாகலான். [3]என்மனா ரென்பது, [4]என்ப வென்னுமுற்றுச் சொற் குறைக்குவழிக் குறைத்த லென்பதனாற் பகரத்தைக் குறைத்து, விரிக்கும் வழி விரித்த லென்பதனான், மன்னு மாரு மென்பன விரண்டிடைச் சொற் பெய்து விரித்தார். என்றா ரென்பதனை என்மனா ரென எதிர்காலத்தாற் சொல்லிய தென்னை?

இறப்பே யெதிர்வே யாயிரு காலமுஞ்
சிறப்பத் தோன்று மயங்குமொழிக் கிளவி (சூ. 730)

என்பதாகலாற் கூறினார். இசைக்கு மென்பது செய்யு மென்னு முற்றுச் சொல். மன் னென்ற விடைச்சொல் மன வென வீறு திரிந்தது. மன்னென்று பாட மோதுவாரு முளர். உயர்ந்த திணை யெனு மிறந்தகால வினைத்தொகை உயர்திணை யெனத்

1. னு 2. லு முயர் 3. யெ 4. யெ

தொக்கது. ஆசிரிய ரென்ப திச் சூத்திரத் தில்லை யெனின் என்ப வென்னு முற்றுச் சொல்லே பெறும், முற்றுச் சொல் லெச்சப் பெயர் கொண்டு முடியு மென்ப தாகலான். அவ்விரு திணையினை யென விரண்டாவது விரித் துரைக்க.

2. ஆடூஉ வறிசொல் மகடூஉ வறிசொல்
பல்லோ ரறியுஞ் சொல்லொடு சிவணி
அம்முப் பாற்சொல் லுயர்திணை யவ்வே.

இளம் :—

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் திணை கூறு செய்தெனத் திணையுட் பால் கூறு செய்தல் நுதலிற்று.

உரை — ஆடூஉவினை யறியுஞ் சொல்லும், மகடூஉவினை யறியுஞ் சொல்லும், பல்லோர் அறியுஞ் சொல்லொடு பொருந்தி அம் முப்பாலை யறிவிக்குஞ் சொல் உயர் திணை யுடையன, என்றவாறு.

ஆடூஉ என்றது ஆண்மகனை; மகடூஉ என்றது பெண் மகளை; பல்லோர் என்றது அவர் தொக்க பன்மையை.

இனி, அப்பொருள் மூன்று கூறுபடவே, அவற்றை யுணர்த் துஞ் சொல் மூன்று கூறுபடும் என்பது. இது தந்திரவுத்தி வகைமை கூறல்.

தெய்வ:— நிறுத்த முறையானே உயர்திணைச் சொற் பாகுபடு மாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :— ஆடூஉ வறி சொல் லென்பது ஆண்மகனை யறியுஞ் சொல் எ-று. அறிவார்க்குக் கருவியாகிய சொல் அறி சொல் லாயிற்று. மகடூஉ அறி சொல் லென்பது பெண் டாட்டியை யறியுஞ் சொல், எ-று. பல்லோ ரறியுஞ் சொல் லொடு சிவணி என்பது பலரை யறியுஞ் சொல்லொடு கூடி, எ-று. அம்முப்பாற் சொல் உயர்திணை யவ்வே என்பது அம் மூன்று கூற்றுச் சொல் உயர்திணை யிடத்த, எ-று.

உயர்திணைப் பொருள்பற்றி வரும் பெயர்ச் சொல்லும் வினைச் சொல்லும் மூன்று பகுதிய என்றவாறாயிற்று. எற்றுக்கு ? ஆண், பெண், அலி; ஆண்பன்மை, பெண்பன்மை, அலிப்பன்மை, இவரெல்லாரும் தொக்க பன்மை யெனப் பல வகைப்படுமா லெனின், பொருள் நோக்கிக் கூறினாரல்லர்; சொல்

முடிபு மூவகை யென்று கூறினு ரென்க. என்னை? அவிப் பன்மை மகடூஉ அறிசொல்லானும் கூறப்படு மாதலானும் ஆண் பன்மையும் (பெண் பன்மையும்) எல்லாரும் தொக்க பன்மை யும் வந்தா ரெனவே முடிதலானும் மூவகை யாகி யடங்கிற் றென்க. பல்லோ ரறியுஞ் சொல்லொன்ரு து சிவணி யென்றத னுற் பெற்ற தென்னை யெனின், ஒன்று, இரண்டு, பல வென வடமொழிப் புலவர் கூறியவாறு போலப் பாகுபடும் வழக்கின் மையின் ஒன்று பல வெனத் தமிழ் நடை இரண்டு பாலாம். அவற்றுள் உயர்திணை ஒருமை, ஆடூஉ அறிசொல் மகடூஉ அறி சொல்லென விரு முடிபுடைத் தாகலின், அச்சொற்கள் பலரறி சொல்லொடு கூடி மூன்று பாலாயின அல்லது பா லுள்ளன இரண்டென்பது அறிவித்தற் கெனக் கொள்க. சிவணி யென்பது வினையெச்ச மன்று; ஒடுவின் பொருண்மை தோன்ற வந்தது, தாயொடு கூடி மூவர் என்ருற் போல. அம்முப்பாற் சொல்லும் என உம்மை கொடாதது என்னை யெனின், பால் ஐந்துள வாதலிற் கொடாமையும் அமையும் என்க.

சேனா :—

இ-ள் : ஆடூஉ வறி சொல்லும் மகடூஉ வறி சொல்லும் பல்லோ ரறியுஞ் சொல்லொடு பொருந்தி அம்மூன்று கூற்றுச் சொல்லும் உயர்திணையனவாம் என்றவாறு.

ஆண்மகனை ஆடூஉ வென்றலும், பெண்டாட்டியை மகடூஉ வென்றலும் பண்டையார் வழக்கு.

அறிவு முதலாயினவற்ருன் ஆண்மகன் சிறந்தமையின் ஆடூஉ வறி சொன் முற்கூறப்பட்டது. பன்மை இரு பாலும் பற்றி வருதலிற் பல்லோ ரறி சொற் பிற் கூறப்பட்டது.

இரண்டாம் வேற்றுமை, உயர்திணைக்கட் சிறுபான்மை தொகப் பெறுதலிற் ருெக்கு நின்றது. திரிந்த புணர்ச்சி யன்மை யின் விகார வகையாற் ருெக்க தென்பாரு முளர்.

சிவணி யென்னும் வினையெச்சம் உயர்திணைய வென்னும் வினைக் குறிப்புக் கொண்டது, ஆரும் வேற்றுமை யேற்று நின்ற சொற்பெயராயும் வினைக்குறிப்பாயும் நிற்கு மாகலான். உயர்திணைய வாமென்னும் முப்பாற் சொல்லின் வினை ஆடூஉ வறிசொல் மகடூஉ வறிசொல் என்னு மிரண்டன் வினையாகிய

சிவணி யென்னுஞ் செய்தெ னெச்சத்திற்கு வினைமுதல் வினை யாயினவா றென்னை யெனின் :— உயர்திணைய வாதல், ஆடூஉ வறிசொல், மகடூஉ வறிசொல் என்பன வற்றிற்கு மெய் துதலான் வினை முதல் வினையா மென்க.

'முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின' (சொல் — 230) என்புழி வினை முதல் வினை யென்னுந் துணையல்லது பிறிதொன் றற்குப் பொதுவாகாது வினை முதற்கே வினையாதல் வேண்டு மென்னும் வரை யறை யின்மையின். அல்லாக்கால், 'இவளு மிவனுஞ் சிற்றி லிழைத்துஞ் சிறுபறை யறைந்தும் விளையாடுப' என்பன போல்வன அமையாவா மென்க.

ஆடூஉ வறி சொன் முதலாயினவற்றை யுணர்த்தியல்லது அவற்ற திலக்கண முணர்த்த லாகாமையின், பா லுணர்த்து மெழுத்து வகுப்பவே அவை தாமும் பெறப்படும் இச்சூத்திரம் வேண்டா வெனிபது கடாவன்மை யுணர்க.

உயர்திணைச்சொல் லுணர்த்தி அதனது பாகுபாடு கூறுகின்ரு ராகலின் 'அம்முப் பாற் சொ லுயர்திணைய' என்ருராயினும் உயர்திணைச் சொல் மூன்று பாகுபாடு படுமென்பது கருத்தாகக் கொள்க. இக் கருத்தானன்றே, ஆசிரியர் அம் முப்பாற் சொல் லும் என, 'இனைத்தென வறிந்த பொருட்டொகுதிக்குக்' (சொல் —33) கொடுக்கும் உம்மை கொடா ராயினும்,[1] உரை யாசிரியரும் உயர்திணை யெனப்பட்ட பகுப்பை விரிப்புழி இத் துணையல்லது விரிபடா தென்பது ஈண்டுக் கூறியது என் றுரைத்ததூஉ மென்க.

'ஆயிரு பாற்சொ லஃறிணை யவ்வே' (சொல் — 3) என்பதற்கும் ஈ தொக்கும்.

நச்சி :—

இஃது உயர்திணைப் பாலைப் பகுக்கின்றது.

(இ-ள்) ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல்—ஒருவன் ஆண்மகனை அறியும் சொல்லும், பெண்டாட்டியை அறியும் சொல்லும், பல்லோர் அறியும் சொல்லொடு சிவணி—பல்லோரை அறியும் சொல்லொடு சிவணுகையினலே, அம்முப்பாற் சொல்—அம்மூன்று கூருகிய சொல்லும், உயர்திணைய—உயர்திணையின் உடையவாம் (எ-று)

ஆண்பன்மையும் பெண்பன்மையும் அவ்விருவரும் தொக்க பன்மையும் அன்றிப் பன்மைப் பொருள் வேறின்மையின், ஆடூஉவும் மகடூஉவும் பல்லோர் அறியும் சொல்லோடு சிவணு கையினாலே மூன்று கூறு ஆயிற்று என்றார். எனவே, அல்லுழி இரண்டே யாம் என்பது கருத்து.

செய்தெனெச்சம் காரண காரியப் பொருட்டாய் நின்றது. 'உயர்திணைய' என்ற ஆறும் வேற்றுமையாய் நிற்கும் சொல் ஈண்டுப் பெய ராகாது வினைக் குறிப்பாய் நின்றது.

இனி, 'சிவண' எனத் திரிப்பாரும் உளர்.

இவ்வாறு அன்றிச் 'சிவணி உயர்திணையவாம்' என்பார்க்கு முப்பாற் சொற்கும் பயனிலையாய் நின்ற 'உயர்திணையவாம்' என்னும் வினைக்குறிப்பு ஆடூஉ அறிசொல் மகடூஉ அறிசொல் என்னும் இரண்டன் வினையாகிய 'சிவணி' என்னும் செய்தெ னெச்சத்திற்கு வினைமுதல் வினை ஆயிற்று, உயர்திணைய வாகல் ஆடூஉ அறிசொற்கும் மகடூஉ அறிசொற்கும் எய்துதலின். 'ஆடூஉ, மகடூஉ' என்பன பண்டையார் வழக்கு. அறிசொல் அதற்குக் கருவியாகிய சொல்.

கல் :—

என்னுதலிற்றோ வெனின், மேற் றிணை கூறு செய்தான். இனி, அத் திணைக்கட் பால் கூறு செய்தல் நுதலிற்று.

இ—ள் : ஆண்மகனை யறியுஞ் சொல்லும், மகளிரை யறியுஞ் சொல்லும், பலரை யறியுஞ் சொல்லோடு கூடி, அம் மூன்று பாலினை உணர்த்துஞ் சொல்லும் உயர்திணையன வென்றவாறு. அறிசொல் லென்புழிச் சொல்லிற் கறிதல் கூடாமையின். ஒரு சாத்தன் அறியுஞ் சொல்லென வொரு பெயர் வருவித்துக் கொள்க. 'ஏ' ஈற்றசை. அவ்வே என 'வ்' கரஞ் செய்யுள் விகாரத்தான் வந்தது. சிவணி யென்பது பல்லோர் அறியுஞ் சொல்லொடு கூட வென ஒரு தொகைப் பொருண்மை தோன்ற நின்றதோர் சொல் லென்று சொல்லுக. இவ்வாறன்றி சிவணி யென்பது செய்தென்னும் வினையெச்சமாக்கி உயர்திணைய என் னும் ஆறும் வேற்றுமை ஒரு வினைக்குறிப்பி னீர்மையு முடை மையின் அதனோடு முடிந்த தென முடிப்பாருமுளர்.

இதனாற் சொல்லியது, மேற்கூறிய [1]உயர்திணை யென்பது [2]விரி வரை யறை யான் ஆண்பால், பெண்பால், பன்மைப் பாலென மூன்று கூறுபடு மென்பதூஉம், அப்பொருள் மூன்று கூறுபடு மெனவே தந்திரவுத்தி வகையான் மேற்கூறிய உயர்திணைச் சொல் லென்பதூஉம், விரிவரையறையான் ஆண் பாற் சொல், பெண்பாற் சொல், பன்மைப்பாற் சொல் லென மூன்று கூறுபடு மென்பதூஉம் கூறியவா றாயிற்று.

அரசு :—

என்பது ஆண்மகனையும் பெண்டாட்டியையும் அவ்விருவரது பன்மையாகிய பல்லோரையு மறிவிக்குஞ் சொல்லொடு பொருந் திய வம் மூன்று கூற்றுச் சொல்லு முயர் திணையை யறிவிக்குஞ் சொல்லாம். அவ்வே என ஆறுவதன் பன்மையாகக் கொள்க.

3. ஒன்றறி சொல்லே பலவறி சொல்லென்
றாயிரு பாற்சொ லஃறிணை யவ்வே.

இளம் :

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மேல் அஃறிணை யென்றார்; அதனை யினைத்துப் பால்படும் என்று அது படும் பாலை விரித் துணர்த்துதல் நுதலிற்று.

உரை : ஒன்று, பல என்னும் இரு பாலையும் உணர்த்துஞ் சொல் அஃறிணை யுடையன என்றவாறு.

தெய்வ :

அஃறிணைச் சொற் பாகுபடு மாறு உணர்த்துதல் நுதலிற்று:

இ-ள்: ஒன்றனை யறியுஞ் சொல்லும், பலவற்றை யறியுஞ் சொல்லு மென அவ் விரு கூற்றுச் சொல் அஃறிணை யிடத்த, எ-று.

அஃறிணைப் பொருண்மை, உயிர்ப்பொருள், உயரில் பொருள் எனவும்; உயிர்ப்பொருட்கண் ஆண், பெண் எனவும்; அவை யெல்லாம் பொருள்தொறும் ஒருமையும் பன்மையு மாகியும் பல வகைப்படுமா லெனின், அவை யெல்லாம் ஒருமையாயின், வந்தது எனவும், பன்மையாயின் வந்தன எனவும், வழங்கப்படுதலிற்

1. [யி](ய) 2. விரிவரை (யறை) யான்

சொன்முடிபு நோக்கிக் கூறினாரென்க. அஃறிணைப் பொருள் பற்றிவரும் பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லும் இரு பகுதியவா மென்றே கொள்ளப்படும்.

சேனா :

இதன் பொருள் : ஒன்றனை யறியுஞ் சொல்லும் பலவற்றை யறியுஞ் சொல்லு மென அவ் விரண்டு கூற்றுச் சொல்லும் அஃறிணையன வாம் என்றவாறு.

நச்சி :

இஃது அஃறிணைப் பாலைப் பகுக்கின்றது.

(இ-ள்) ஒன்று அறி சொல்லே பல அறிசொல் என்று— ஒருவன் ஒன்றனை அறியும் சொல்லும் பலவற்றை அறியும் சொல்லும் என்று சொல்லப்பட்ட, ஆயிரு பால் சொல் அஃறிணைய — அவ் விரண்டு கூற்றுச் சொல்லும் அஃறிணையினை உடையவாம் (எ-று)

கல் :

என்னுதலுற்றோ வெனின், மேல் அஃறிணையென்றார். அதனை இனைத்துப் பால்படு மென்று அது படும் பால் விரித்தலை நுதலிற்று.

(இ-ள்) ஒன்றினை யறியுஞ் சொல்லும், பலவற்றை யறியுஞ் சொல்லு மென்று சொல்லப்பட்ட அவ் விரண்டு பாலினையும் உணர்த்துஞ் சொல் அஃறிணையன. எ-று.

இதனாற் சொல்லியது மேற்கூறி நின்ற அஃறிணைப் பொருளினையும் அஃறிணைச் சொல்லினையும் விரிவரையான் ஒருமை, பன்மை யெனவும், ஒருமைச் சொல், பன்மைச் சொல் எனவுங் கூறியவா றாயிற்று.

அரசு :

என்பது ஆண் பெண்ணாகிய வொன்றனையு மவ் விரண்டினது பன்மையாகிய பலவற்றையு மறிவிக்குஞ் சொல்லோடு பொருந் திய வவ்விரண்டு கூற்றுச் சொல்லு மஃறிணையை யறிவிக்குஞ் சொல்லாம். உயர்திணையவ்வே அஃறிணையவ்வே என்பது உயர் திணை யென வம் முப்பாற் சொல் லஃறிணை யென வாயிருபாற் சொல் லென. ஏ ஈற்றசை.

4. பெண்மை சுட்டிய வுயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்
தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்
இவ்வென வறியுமந் தந்தமக் கிலவே
உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்.

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஐய மறுத்தல் நுதலிற்று.

உரை: பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின் என்பதனை மொழி மாற்றி, உயர்திணை மருங்கின் பெண்மை சுட்டிய எனக் கொள்க. தெய்வஞ் சுட்டிய பெயர் நிலைக் கிளவியும் என்பது — தெய்வத்தைச் சுட்டிய பெயர்ப் பொருளும் என்றவாறு; இனிப் பெயர்நிலைக் கிளவி யென்பதற்கு ஒருவன் சொல்லுவது: பெயர் என்பதனை ஆகுபெயராற் பொருளாக்கி, பொருண்மேல் நிலைபெற்ற கிளவி யென்னும்; இவ்வென அறியும் அந்தந் தமக் கிலவே என்பது—தம்மை வேறு பா லறிய நிற்கும் ஈற்றெழுத்தினை யில என்றவாறு; உயர்திணை மருங்கிற் பால் பிரிந்து இசைக்கும் என்பது — உயர்திணை மருங்கின் முப் பாலினையும் புலப்படுக்கும் எழுத்தினைத் தமக்கு ஈறாக இசைக்கும் என்றவாறு.

வரலாறு: பேடி வந்தான், பேடி வந்தாள்; பேடியர் வந்தார் எனவும்; வாசுதேவன் வந்தான், திருவினள் வந்தாள், முப்பத்து மூவரும் வந்தார் எனவும் வரும்.

'இவ் வென அறியும் அந்தந் தமக் கிலவே' என்னும் இலேசினால், நரகன் வந்தான், நரகி வந்தாள்; நரகர் வந்தார் என்பன கொள்க.

தெய்வ:

எஞ்சியது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின் என்பது, பெண்மையைக் குறித்த உயர்திணைப் பெண்பிறப்பினுள் எ-று. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும் என்பது, ஆண்மைத் தன்மையிற் றிரிந்த பெயர்க்கண் நிற்குஞ் சொல்லும் எ-று. தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும் என்பது, தெய்வப் பொருண்மையைச் சுட்டிய பெயர்க்கண் நிற்குஞ் சொல்லும் எ-று. இவ்வென அறியும் அந்தம் தமக் கிலவே என்பது, இவை

யென அறிய நிற்கும் ஈற் றெழுத்தினைத் தமக்கென இல எ-று. உயர்திணை மருங்கிற் பால் பிரிந்திசைக்கும் என்பது, உயர்திணை மருங்கிற் பாலாகிப் பிரிந் திசைக்கும் எ-று. ஆண்மை திரிந்த பெயராவது பேடி, அச்சத்தி னாண்மையிற் றிரிந்தாரைப் பேடி யென்ப வாகலான். ஈண்டு அப் பெயர் பெற்றது அலி யென்று கொள்க. அலி மூவகைப்படும்: ஆ ணுறுப்பிற் குறைவின்றி ஆண்டன்மை யிழந்ததூஉம், பெண் ணுறுப்பிற் குறைவின்றி பெண்டன்மை யிழந்ததூஉம், பெண்பிறப்பிற் றோன்றிப் பெண் ணுறுப் பின்றித் தாடி தோற்றி ஆண்போலத் திரிவதூஉ மெனா. அவற்றுட் பிற் கூறியது ஈண்டுப் பேடி யெனப்பட்டது. அதன் கண் நிற்குஞ் சொல்லாவது வினைச் சொல். இப் பேடி யென்னுஞ் சொல்லோடு தொடரும் வினைச்சொல்லும் தெய்வப் பொருண்மை குறித்த பெயரோடு தொடரும் வினைச்சொல்லும் உயர்திணை யாண்பா லறி சொல்லானும் பலரறி சொல்லானும் ஒலிக்கும் என்றவா றுயிற்று.

உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

தேவரும் மக்களும் விலங்குமாகிய கதிப் பொருண்மை கூறி, நரக கதிப் பொருண்மை கூறாத தென்னை யெனின், அக் கதிமே னிகழ்வ தோர் வழக் கின்மையிற் கூறா ராயினர்.

நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்தார் என வழங்கு பவா லெனின், அக் கதியுட் டோன்றுவார் ஆணும் பெண்ணு மாகிப் போகம் நுகர்வ ரென்னும் இலக்கண மின்மையான் மக்க ளிற் றூய்மை யில்லாதாரை யுலகத்தார் வழங்குமா றவை யென்க. நரகர் துய ருழப்பர் என அக் கதிமேற் றோற்றுவார் (தம்) மேலும் வருமால் எனின், அவ்வாறு வருவன பால் கூறப் படுதலின்றி ஆணும் பெண்ணும் வரையறுக்கப்படாத பொருளை உயிர்த் தன்மையைக் குறித்து உயர்திணைப் பன்மையான் வழங்கின ரென்க.

**சேனா:**

**இதன் பொருள்:** உயர்திணை யிடத்துப் பெண்மைத் தன்மை குறித்த ஆண்மை திரிந்த பெயர்ச் சொல்லும், தெய்வத் தைக் குறித்த பெயர்ச் சொல்லும், இவை யெனத் தம் பொருளை வேறறிய நிற்கும் ஈற் றெழுத்தினைத் தமக்குடைய வல்ல, உயர் திணை யிடத்து அதற்குரிய பாலாய் வேறுபட் டிசைக்கும் என்றவாறு.

பால் வேறுபட் டிசைத்தலாவது தா முயர்திணைப் பெயராய் ஆடூஉ வறிசொன் முதலாயினவற்றிற் குரிய ஈற்றெழுத்தே தம் வினைக் கீருக இசைத்தல்.

உதாரணம் : பேடி வந்தாள், பேடர் வந்தார், பேடியார் வந்தார் எனவும்; தேவன் வந்தான், தேவி வந்தாள், தேவர் வந்தார் எனவும் வரும்.

அலிப் பெயரின் நீக்குதற்குப் 'பெண்மை சுட்டிய' என்றும் மகடூஉப் பெயரின் நீக்குதற்கு 'ஆண்மை திரிந்த' என்றுங் கூறினுர்.

பெண்மை சுட்டிய எனவே பெண்மை சுட்டாப் பேடென்பதும் ஒழிக்கப்பட்ட தாம்.

பெண்மை திரிதலும் உண்டேனும் ஆண்மை திரிதல் பெரும்பான்மை யாகலான் 'ஆண்மை திரிந்த' என்ருர்.

பேடியர் பேடிமார் பேடிகள் என்பனவும் அடங்குதற்குப் பேடி யென்னும் பெயர் நிலைக் கிளவி யென்னுது 'பெண்மை சுட்டிய ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி' என்ருர்.

பெண்மை சுட்டிய என்னும் பெயரெச்சம் பெயர் நிலைக் கிளவி என்னும் பெயர் கொண்டது. ஆண்மை திரிந்த என்பது இடைநிலை.

'தன்மை திரி பெயர்' (சொல்–56) என்ருற் போலச் சொல்லொடு பொருட் கொற்றுமை கருதி 'ஆண்மை திரிந்த பெயர் நிலைக் கிளவி', என்ருர்,

உயர்திணை மருங்கிற் பால் பிரிந் திசைக்கும் எனவே தமக்கென வேறீறின்மை பெறப்படுதலின் 'இவ் வென வறியு மந்தந் தமக் கிலவே' எனல் வேண்டா வெனின் :– தமக்கென வேறீறுடையவாய் ஆடூஉ வறிசொன் முதலாயின வற்றிற் குரிய ஈற்ருனும் இசைக்குங்கொல் என்னும் ஐய 'நீக்குதற்கு அந்தந் தமக் கிலவே' எனல் வேண்டு மென்பது.

பாலு ளடங்காத பேடியையும் திணையு ளடங்காத தெய்வத்தையும் பாலுள்ளுந் திணையுள்ளு மடக்கிய வாறு.

சுட்டிய வென்பது செய்யிய வென்னும் வினையெச்சமென்றும், ஆண்மை திரிதல் சொற்கின்மையிற் பெயர்நிலைக் கிளவி என்பது ஆகுபெயராய்ப் பொருண்மே னின்றதென்றும் உரையாசிரியர்

கூறினாரா லெனின் :- ஆண்மை திரிதல் பெண்மைத் தன்மை யெய்துதற் பொருட்டன்றிப் பேடிக் கியல் பாகலிற் பெண்மை சுட்டவேண்டி ஆண்மை திரிந்த வென்றல் பொருந்தாமை யானும், பொருளே கூறலுற்றா ராயின் ஆசிரியர் பேடியுந் தெய் வமு மென்று தாங் கருதிய பொருள் இனிது விளங்கச் சுருங்கிய வாய்பாட்டாற் சூத்திரிப்பா ராகலானும், அவர்க் கது கருத் தன் மையான், உரையாசிரியர்க்கும் அது கருத்தன் றென்க.

நச்சி :

இஃது ஐயம் அறுக்கின்றது, மேல் தொகையுள் ஒழிந்த தெய்வத்தையும் வகையுள் ஒழிந்த பேடியையும் இவ்வாறு ஆம் என்றலின்.

(இ-ள்) உயர்திணை மருங்கின் பெண்மை சுட்டிய — ஒரு வன் உயர்திணை இடத்துப் பெண்பாற்கு உரிய அமைதித் தன் மையைக் கருதுதற்குக் காரணமான, ஆண்மை திரிந்த பெயர் நிலைக் கிளவியும் — ஆண்பாற்கும் உரிய ஆளும் தன்மை திரிந்த பெயர்ப் பொருளும், தெய்வம் சுட்டிய பெயர் நிலைக் கிளவி யும் — தெய்வத் தன்மையைக் குறித்த பெயர்ப் பொருளும், இவ் வென அறியும் அந்தம் தமக் கிலவே — இவை யெனத் தம் பெயர்ப் பொருளின் வேறு அறிய நிற்கும் ஈற்று எழுத்தினை உடைய சொற்களைத் தமக்கு உடைய அல்ல; உயர்திணை மருங்கின் பால் பிரிந்து இசைக்கும் — உயர்திணை இடத்திற்கு உரிய பாலாய் வேறுபட்டு இசைக்கும் (எ-று)

'அலி அன்று' என்றற்குப் 'பெண்மை சுட்டிய' என்றார். 'பெண் அன்று' என்றற்கு 'ஆண்மை திரிந்த' என்றார். இரண்டு இடத்துப் பெயர் நிலைக் கிளவியும் சொல்லினால் பொருள் அறியப்படுதலின் ஆகுபெயராய் அப் பொருள் உணர்த்தி நின்றன.

'சுட்டிய' என்பது 'நிலம் பூத்த மரம்' (கலி 27·9) என்பது போலும் பெயரெச்சம். அது 'பெயர் நிலைக் கிளவி' என்பதனோடு முடியும். 'ஆண்மை திரிந்த' என்பது இடை நிலை. இதன் பொருள், ஆண்பாற் குரிய ஆளும் தன்மை முற்பிறப்பில் தான் செய்த தீவினையால் தன்னிடத்து இல்லையான பெயர்ப் பொருள் என்க. என்றது, 'நல்வினை செய்யாத பொருள்' என்றவாறு. இதற்குப் பெண்மை திரிதலும் உண்டேனும் ஆண்மை திரிதல் பெரும்பான்மை.

பால் பிரிந்து இசைத்தலாவது தாம் உயர்திணைப் பொருளாய் அவற்றின் ஈற்றினால் இசைத்தலாம்.

பேடியைப் பாலுள்ளும் தெய்வத்தைத் திணையுள்ளும் அடக்கினார்.

(உ-ம்) பேடி வந்தாள், பேடியர் வந்தார், தேவன் வந்தான், தேவி வந்தாள், தேவர் வந்தார்.
எனவரும்.

பேடியர், பேடிமார், பேடிகள் என்பனவும் அடங்குதற்குப் 'பேடி' என்னாது, 'ஆண்மை திரிந்த' என்றார்.

பெண் அவாய் ஆண் இழந்த பேடி அணியாளோ?
(நாலடி 251)

என்பதனால் பெண் அவாய் நிற்றல் கொள்க.

'அந்தம் தமக்கு இல' என்றதனான், நிரயப் பாலர், அலி மகண்மா முதலியவற்றையும் இம் மூவீற்றின் ஏற்பதனால் முடிக்க.

(உ-ம்) நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்தார், அலி வந்தான், அலியர் வந்தார், மகண்மா வந்தாள்.
எனவரும்.

**கல் :**

இஃது ஐய மறுத்த னுதலிற்று: என்னை?

மேற் றொகையு ளொழிந்த தேவரும் நரகரும் ஐவகையு ளொழிந்த பேடியும் எவ்வாறுங் கொல்? என் றையுற்றார்க்கு அவையும் இவ்வாறு மென்கின்றமையின் உயர்திணையிடத்துப் பெண்மைத் தன்மையை யெய்த வேண்டி யாண்மைத் தன்மையி னீங்கிய பேடி யென்னும் பொருளும் தெய்வத் தன்மையைக் கருதின தெய்வ மென்னும் பொருளும், இவை யிரண்டு மிவை யெனத் தம்மை வேறு பா லறிவிக்கும் ஈற் றெழுத்தினை யுடைய சொற்களையுடைய வல்ல, மேற்கூறிய மக்க ளென்னு முயர்திணை யிடத்து முப்பாலினையு முணர்த்துஞ் சொற்கள், அவ்விடத்தினின்று நீங்கி வந்து தம்மை யுணர்த்து மென்றவாறு: அதற் குதாகரணம்:— பேடி வந்தாள், பேடிய[1]ர் வந்தா[2]ர்; வாசுதேவன் வந்தான், திருவினாள் வந்தாள், முப்பத்து மூவரும் வந்தார், சந்திராதித்தர் வந்தார், எனினு மமையும்.

---

1. ள 2. ன்

அந்தந் தமக் கிலவே யென்றதனுன் மக்களுந் தேவரு மல்லாத நிரயப் பாலரு மக்களை யுணர்த்து முப்பாற் சொல்லானுஞ் சொல்லப்படுவ ரென்பது கொள்க.

உதாகரணம் :— நரகன் வந்தான், நரசி வந்தாள், நரகர் வந்தார் என வரும். முன் நின்ற [1] சுட்டிய வென்பது செய்யிய [2]வென்னும் வினையெச்சம். அதற்கு வினை திரிந்த வென்னும் பெயரெச்சம். பின்நின்ற சுட்டிய வென்பது செய்த வென்னும் பெயரெச்சம். உயர்திணை மருங்கிற் பெண்மை சுட்டிய வாண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்* என மொழி மாற்ருகக் கொள்க. உயர்திணை மருங்கின் என்னும் ஏழாவதற்குப் பெயர்நிலைக் கிளவி யென்பதனை முடி வாக்கி இடைநின்ற சொல்லைப் பெயர்நிலைக் கிளவிக் கடை யாக்கிப் பொருள் உரைத்துக் கொள்க.

இரண்டிடத்துப் பெயர்நிலைக் கிளவியுஞ் சொல்லினுற் பொரு ளறியப்படுதலிற் பேடியுந் தெய்வமு மென்னும் பொரு[3]ளது, ஆகுபெயராய் நின்றதென வுணர்க. தெய்வ மென்றது தெய்வத் தன்மையை. இதனுற் சொல்லியது முன் சொல்லி னின்ற பொருள் வரையறையுள் அடங்காது நின்ற பொருளினையும் ஒருவாற்ரு னடங்கக் கூறியவா ருயிற்று. எனவே, உயர்திணைப் பொருள், பொருண் முகத்தான் மக்களுந் தேவரு நரகரு மென மூன்று கூறுபடும்; சொன் முகத்தான் மக்க ளென்ற தன்மேற் பட் டொன்றே யாம்.

உயர்திணைப் பாலாயிற் பொருண்முகத்தால் ஆண்பால், பெண்பால், ஆணலி, பெண்ணலி, பேடிப்பால், ஆண்பாற் பன்மை, பெண்பாற் பன்மை, ஆணலிப் பன்மை, பெண்ணலிப் பன்மை, பேடிப் பன்மை, ஆண்பாலொடு பெண்பால் கூடிய பன்மை, பெண்பாலொடு ஆண்பால் கூடிய பன்மை, ஆண்பாற் சிலர், பெண்பாற் சிலர் என விகற்பித்து நோக்கப் பலவகைப் படும். இப் பல வகையுஞ் செய்வகை மூன்றல்ல தின்மையின் [4]மூன்றே யாயின. இவ்வாற்ருனே தேவர் நரகர் என்பன வற்றது பாகுபாடும் அறிந்துகொள்க.

இனி, அஃறிணை உயிருடையதூஉம், உயிரில்லதூஉ மென இரண் டாயவற்றுள் உயருடைய[5]து ஆணும் பெண்ணு மான

1. [கு] (க) 2 செ[ய] (ல) 3. [ட] (ளது) 4. (மூன்றே) யாயி[ன்] (ன)
5. [தா] [னு] (து ஆணும்) * எ[ன்](ள)

சிலவும் பெண் சிலவும் ஆண்பன்மையும் பெண்பன்மையும், அவ் விரண்டுந் தொக்க சிலவும் அவ் விரண்டுந் தொக்க பலவும் உயிரல்லவற்றது ஒருமையுஞ் சிலவும் பலவு மென இவ்வாற்றாற் பல பகுதிப்படுமேனுஞ் சொல்வகை நோக்க இரண் டல்ல தின்மையின் இரண்டே யாயின வென்பது. இனி, மக்கண் முதலியவற்றின் வேறுபாடு மறிந்து கொள்க.

அரசு :

என்பது பெண்மைத் தன்மை யெய்திய வுயர்திணையிடத் தாண்மை நீங்கிய பெயர்ப்பொருளுந் தெய்வஞ் சுட்டிய பெயர்ப் பொருளும் பாலறிய நிற்கு மீற்றெழுத் தித் தன்மையன வெனத் தமக்குடைய வல்ல வுயர்திணை முப்பாலினையும் விளக்கு மெழுத் தினையே யீருக விசைக்கும்.

உதா. — பேடி வந்தான், பேடி வந்தாள், பேடியர் வந்தார், வாசுதேவன் வந்தான், திருவினுள் வந்தாள், முப்பத்து மூவரும் வந்தார், என வரும். உயர்திணை மருங்கி னென்பதனை யாண்மை சுட்டிய வென்று மொழி மாற்றி யுரைக்க. அந்தந் தமக் கிலவே யென்றதனால், நரகன் வந்தான், நரகி வந்தாள், நரகர் வந்தார் எனத் தேவரு மக்களு மல்லாத நரகர்க்கு மம் முடிவு கொள்க.

5. னஃகா னொற்றே யாடூஉ வறிசொல்.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஆடூஉ அறிதற்கு ஈற் றெழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை : னஃகா னாகிய வொற்று ஆடூஉவினை யறிவார்க்குக் கருவியாஞ் சொல் என்றவாறு.

வரலாறு : உண்டான் என்னும் இறந்த காலத்தானும் உண்ணாநின்றான் என்னும் நிகழ் காலத்தானும், உண்பான் என் னும் எதிர் காலத்தானும், கரியன், செய்யன் என்னும் வினைக் குறிப்பினானும், இங்ஙன் னகர விறுதி யாய படர்க்கை வினை முற்றுச் சொல்லால் உயர்திணை யாண்பால் உணர்த்தப்படும்.

படர்க்கை யிடம் என்பது முன்னர் வினையியலுட் பெறுதும். வினை யென்பது,

இருதிணை மருங்கின் ஐம்பா லறிய (தொல். சொல், கிளவி 10) என்னும் சூத்திரத்தாற் பெறுதும்.

உண்டான் என்றவிடத்து நான் கெழுத்து உளவே யாயினும், னகரத்தை ஆடூஉ வறியுஞ் சொல் லென்றார், அதன்கட் டலைமை நோக்கி. ஏகாரம் பிரிநிலை.

**தெய்வ :**

நிறுத்த முறையானே யாடூஉ வறி சொல் லாமாறு உணர்த்துத னுதலிற்று.

**இ-ள் :** னகார மாகிய ஒற்றை அந்தமாக வுடைய சொல் ஆண்பா லுணர வருஞ் சொல், எ-று.

ஏகாரம் ஈற்றசை. அந்தம் என்பது மேலைச் சூத்திரத்தி னின்றுந் தந்துரைக்கப்பட்டது. இவ்வுரை வருகின்ற சூத்திரங் கட்கும் ஒக்கும். உ-ம்: உண்டான், உண்ணாநின்றான், உண்பான்: இவை வினைச்சொல். கரியன், நெடியன்: இவை வினைக்குறிப்பு. பாண்டியன், மாயவன்: இவை பெயர்.

அஃதேல் வினையியலுள்ளும்,
அன் ஆன் அள் ஆள் என்னும் நான்கும்
ஒருவர் மருங்கிற் படர்க்கைச் சொல்லே (வினை. சூ. 8) என ஓதுகின்றாராகலின், ஈண்டுக் கூறியதற்குக் காரணம் என்னை யெனின்

வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்
பெயரிற் றோன்று பாலறி கிளவியும்
மயங்கல் கூடா' (சூ. 11) என வழூஉக் காக்கின்றா ராகலின், அவை வழுவாமற் கூறுங்கால், அச் சொற்களின் இயல்பு அறியவேண்டு மன்றே. அதற்காக ஈண்டுத் தோற்றுவாய் செய்தா ரென்க. ஆண்மைப் பொருண்மைக்கண் வரும் பெயர்ச் சொற்கும் வினைச் சொற்கும் ஈற் றெழுத்துப் பல வுள வாயினும் அவை யெல்லாங் கூறாது, னகர வொற் றொன்றனையும் கூறினமையானும் தோற்றுவாய் செய்தவா றுணர்க. இவ் வுரை முன் வருகின்றவற்றிற்கும் ஒக்கும்.

**சேனா :**

இதன் பொருள்: னஃகா னாகிய வொற்று ஆடூஉ வறி சொல்லாம், என்றவாறு.

உதாரணம்: உண்டனன், உண்டான், உண்ணாநின்றனன், உண்ணாநின்றான், உண்பன், உண்பான், கரியன், கரியான் என வரும்.

ஆடூஉ வறி சொல்லாவது னகார வீற்றுச் சொல் லாயினும், பா லுணர்த்துதற் சிறப்பு நோக்கி 'னஃகா னொற்றே' யென்றார். 'அறமாவ தழுக்கா றின்மை' என்றாற்போல, னஃகா னொற் றாடூஉ வறிசொல் என்றா ராயினும், ஆடூஉ வறி சொல்லாவது னஃகா னொற் றென்பது கருத்தாகக் கொள்க. 'னஃகா னொற்று' மூத லாயினவற்றிற்கும் இவை யொக்கும். ஏகாரம் அசை நிலை.

உரையாசிரியர் பிரிநிலை யென்றாரா லெனின், பிரிநிலை யாயின் ஆடூஉ வறி சொற் கிலக்கணங் கூறுதலன்றிப் பிரித்து அதன் சிறப் புணர்த்துதலே கருத்தா மாகலின், அவ் வுரை போலியுரை யென்க.

நச்சி:

இஃது ஆடூஉ அறிசொல் உணர்த்துகின்றது.

(இ-ள்) னஃகான் ஒற்று — னஃகா னாகிய ஒற்றினை ஈறாக உடைய சொல், ஆடூஉ அறிசொல் — ஒருவன் ஆண்மகனை அறியும் சொல்லாம், (எ—று)

ஏகாரம் தேற் றேகாரம்.

(உ-ம்) உண்டனன், உண்டான்; உண்ணாநின்றனன், உண்ணாநின்றான்; உண்பன், உண்பான்; கரியன், கரியான் என வரும்.

'உண்டனன், உண்டான்' என்புழி னகரம் ஒழிந்த மூவெழுத்துக்களும் ஏனைப் பாற்கும் வருதலின், னகரத்தின் சிறப்பு நோக்கி, 'னஃகான் ஒற்றே' என்றார். 'அன், ஆன்' என்னும் இரண்டனையும் தொகுத்து 'னஃகான்' என்றார். மேலனவற்றிற்கும் இஃது ஒக்கும்.

கல்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், கிறுத்த முறையானே மேற்கூறிய வுயர்திணைச் சொல்லுள்[1] ஆடூஉ வறி சொல் லாமா றுணர்த்துத னுதலிற்று.

---

1. (ள்)

ஆடூஉ அறியுஞ் சொல்லாவது, னகார மாகிய வொற்றினை யீறாகிய சொல் லென்றவாறு. உ-ம் :— உண்டான், உண்ணா நின்றான், உண்பான்: இவை தெரிநிலை வினை. கரியன், செய்யன்: இவை குறிப்பு வினை; சூத்திரம், 'னஃகா னொற்றே யாடூஉ வறி சொல்' எனப் பொதுப்பட நின்றமையின், புதன், குபேரன், உண்டேன், உண்மின் என்பனவும் ஆண்பா லுணர்த்துதற்குச் சென்றனவேனும் பொதுமை விலக்கி மேற் சொல்லுகின்ற விதிகளாற் படர்க்கையிடத்து முற்றுச் சொற் கீறாயல்லது வாராதெனக் கொள்க. இதுமேற் கூறுவனவற்றிற்கு மொக்கும்.

உண்டான் என்புழி னான்[1] கெழுத்து கூடி ஆண்பா லுணர்த்திற்றே யாயினும் பிற வெழுத்துக்கள் பிற[2] பா லுணர்த்தும் வழியும் வருதலான் 'ன' கர[3] வொற்றையே தலைமை பற்றி யாடூஉ வறி சொல் லென்றார், என்க.

**அரசு :**

என்பது, னகர வொற்றே யாண் மகனை யறிவிக்குஞ் சொல். உதா — உண்டான், உண்ணாநின்றான், உண்பான் என மூன்று கால வினையானும்[4], கரியன், செய்யன் எனக் காலந் தோன்றாத வினைக் குறிப்பானு மறிக.

## 6. ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல்.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மகடூஉ அறிதற்கு ஈற் றெழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

**உரை :** ளஃகா னாகிய வொற்று மகடூஉவினை யறிவார்க்குக் கருவியாஞ் சொல், என்றவாறு.

வரலாறு : உண்டாள், உண்ணாநின்றாள், உண்பாள் எனவும்; கரியள், செய்யள் எனவும் வரும் வினையானும் வினைக் குறிப்பாலும் மகடூஉவை விளக்கியவா றறிக.

**தெய்வ :**

மகடூஉ வறி சொல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :— ளகார மாகிய ஒற்றை அந்தமாக வுடைய சொல் பெண்பால் உணர வருஞ் சொல், எ-று.

1. ண் 2. பிற்ற 3. (ர) 4. ங்

ஏகாரம் ஈற்றசை. உ–ம் :— உண்டாள், உண்ணாநின்றாள், உண்பள்: இவை வினை. கரியள், குறியள்: இவை வினைக் குறிப்பு. அவள், திருவினாள்: இவை பெயர்.

சேனா :

இ–ள் : ளஃகா னாகிய வொற்று மகடூஉ வறிசொல்லாம், என்றவாறு.

உதாரணம் :— உண்டனள், உண்டாள், உண்ணாநின்றனள், உண்ணாநின்றாள், உண்பள், உண்பாள், கரியள், கரியாள் என வரும்.

நச்சி :

இது மகடூஉ அறி சொல் உணர்த்துகின்றது.

இ–ள் : ளஃகான் ஒற்று — ளஃகா னாகிய ஒற்றினை ஈறாக உடைய சொல்; மகடூஉ அறிசொல் — ஒருவன் மகடூஉவினை அறியும் சொல்லாம், (எ–று)

(உ–ம்) உண்டனள், உண்டாள்; உண்ணாநின்றனள், உண்ணாநின்றாள்; உண்பள், உண்பாள்; கரியள், கரியாள் என வரும்.

கல் :

என், மகடூஉ வறி சொல் லாவ துணர்த்துத னுதலிற்று. எ–து. மகடூஉவினை யறியுஞ் சொல்லாவது, 'ள' கார மாகிய வொற்றினை ஈறாக வுடைய சொல் லென்றவாறு. உதாகரணம் வருமாறு :— உண்டாள், உண்ணாநின்றாள், உண்பாள் என்பன: இவை தெரிநிலை வினை; கரியள், செய்யள் என்று வரும் இவை குறிப்பு வினை என்று வேறுபா டறிந்து கொள்க.

இனி, முற்சூத்திரத் துரையில் விரித்தாங்கு, 'ளஃகா னொற்றே மகடூஉ வறி சொல்' எனச் சூத்திரம் பொதுப்பட நின்றமையின், என்று தொடங்கி உரைத்தவைக ளெல்லாம் ஈண்டும் விரித் துரைத்துக் கொள்க.

அரசு :

உதா. — உண்டாள், உண்ணாநின்றாள், உண்பா ளென்று மூன்று கால வினையானு[1]ம், கரியள், செய்யள் என்னும் வினைக் குறிப்பானு முணர்க.

---

1. ங்

7. ரஃகா னொற்றும் பகர விறுதியும்
மாரைக் கிளவி யுளப்பட[1] மூன்றும்
நேரத் தோன்றும் பலரறி சொல்லே.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், பல்லோரை யறியுஞ் சொற்கு ஈறும் எழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

**உரை :** ரஃகானும் அதுவே, ஒற்றும் அதுவே, பகரமும் அதுவே, இறுதியும் அதுவே; மாரைக் கிளவி யுளப்பட மூன்றும் என்பது — மார் என்னுஞ் சொல் அகப்பட்ட மூன்றும் என்றவாறு; நேரத் தோன்றும் என்பது — நிரம்பத் தோன்றும் என்றவாறு; பலரறி சொல்லே என்பது — பலரை யறிதற்குக் கருவியாஞ் சொல், என்றவாறு.

'நேரத் தோன்றும் பலரறி சொற்கு' என்பான், உருபு தொகுத்துச் 'சொல்லே' யென்றான், என்பது. ஏகாரம் ஈற்றசை யேகாரம். வரலாறு: உண்டார், உண்ணாநின்றார், உண்பார் எனவும்; கரியர், செய்யர் எனவும் ரகர இறுதி யாகி நின்ற படர்க்கை வினைமுற்றுச் சொல்லால் உயர்திணைப் பன்மைப்பால் உணர்த்தப்படும்.

இனி, உண்ப, தின்ப என எதிர்காலத்துப் பகர விறுதி முற்றுச் சொல்லால் உயர்திணைப் பன்மைப் பால் உணர்த்தப் படும்.

ஆர்த்தார் கொண்மார் வந்தார், பூக்குழாலென் னையர்க ணில்லாத தீது, என மார் இறுதியாக நின்ற எதிர்காலத்துப் படர்க்கை வினைமுற்றுச் சொல்லால் உயர்திணைப் பன்மைப் பால் உணர்த்தப்படும்.

**தெய்வ :**

பலரறி சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள் :** ரகாரம் ஆகிய ஒற்றும், பகாரம் ஆகிய உயிர்மெய் யிறுதியும், மார் என்னுஞ் சொல் உளப்பட இம் மூன்றும் பொருந்தப் பல ரறி சொல் தோன்றும், எ-று. மூன்றும் பொருந்த என்றா ராயினும் பால் காட்டுவது தனித் தனி யென்று கொள்க.

---

1. (பா. பே.) உட்பட

பகரம் என்றது இறுதி யென்றது. பகரம் ஒற்றாக வரின் மொழிக்கு ஈறாகாமையின் உயிரீறு என்பது தோற்றுதற்கு. 'கானந் தகைப்ப செலவு' (கலி-பால் 3. 22) 'எனப் பகரம் அஃறிணைக்கும் உரித் தாகலின் உயர்திணைக்கே உரித் தாமாறு என்னை யெனின், அஃறிணைக்கண் ஓதுகின்ற அகரம் எல்லாப் புள்ளியினும் ஏறி முடிதலின் ஆண்டு அகர ஈறாகி வந்தது. ஈண்டுப் பகர ஒற்றின் மேல் அல்லது வாராமையிற் பகரம் என வேறுபட்டு நின்றது. மார் என்பது ரகரத்துள் அடங்காதோ வெனின், வினைக்கண் ஏனைய போல முற்றி நில்லாது எச்சம் போல வருதலானும், பெயர்க்கண் ஆர் ஈறாகி வருமிடத்துப் பன்மை யுணர்த்தாத சொற்கள் மார் ஈறாகி வரவேண்டுதலானும் வேறுபடுத் தோதப் பட்ட தென்க.

(உ-ம்) உண்டனர், உண்ணாநின்றனர், உண்பர், உண்ப. ஆ கொண்மார் வந்தார்: இவை வினை. கரியர், நெடியர்: இவை வினைக்குறிப்பு. அவர், இவர், நம்பியர், நங்கையர், தாய்மார், தந்தைமார்: இவை பெயர். பகர இறுதி அஃறிணைப் பெயரா யல்லது வாராது.

**சேனா:**

**இதன் பொருள்:** ரஃகா னாகிய வொற்றும் பகர மாகிய விறுதியும் மார் என்னு மிடைச்சொல்லும் இம் மூன்றும் பலரறி சொல்லாம். ஏ யென்பது ஈற்றசை, என்றவாறு.

உதாரணம்: உண்டனர், உண்டார், உண்ணாநின்றனர், உண்ணாநின்றார், உண்பர், உண்பார், கரியர், கரியார் எனவும்; கூறுப, வருப எனவும்; கொண்மார், சென்மார் எனவும் வரும்.

மார் எதிர்காலம்பற்றி வந்த ஆரே யாம், ரஃகா னொற் றெற னவடங்கு மெனின், அற்றன்று; ஆரே யாயிற் கொண்மார் என்புழி மகரங் காலம்பற்றி வந்ததோ ரெழுத் தாகல் வேண்டும்; உண்பார், வருவார் எனக் காலம்பற்றி வரு மெழுத்து முதனிலைக் கேற்றவாற்றான் வேறுபட்டு வருமன்றே; அவ்வாறன்றி

1. (பா. பே) எனவும், நயந்து தாங் கொடுப்ப போல எனவும் அஃறிணைக் கண்ணும் வந்ததென எடுத்துக் காட்டினர் உளரால் எனின், தாழிசை மூன்ற னுள்ளு தகைப்ப என வோதிய வண்ணம் அவ்வாறு சுரிதகத்துக் கண்ணும் வரின் அவ்வண்ணக் கேடு குறித்துக் குறைக்கும் வழிக் குறைத்த தென்க. நயந்து தாம் கொடுப்பபோல் என்பது விரும்பிக் கொடுப்பாரைப் போலென மாந்தரொடு உவமை குறித்து வந்தது.

உண்மார், வருமார் என வெல்லா முதனிலைமேலும் மகரத்தோடு கூடி வருதலானும், வினை கொண்டு முடிதற் கேற்பதோர் பொருள் வேறுபா டுடைமையானும் ஆரீ றன்று, வே றெனவே படு மென்பது.

மூன்று காலமும் வினைக் குறிப்பும் பற்றி வருத லொப்புமை நோக்கி, அர், ஆர் என்னு மிரண் டீற்றையும் 'ரஃகான்' என அடக்கி யோதினர். அன், ஆன், அள், ஆள், என்பனவற்றை யும் இவ் வொப்புமைபற்றி 'னஃகான் ளஃகான்' என அடக்கி யோதினர்.

ரகாரம் மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றிப் பெருவழக் கிற்றாய் வருதலின் முன் வைத்தார். மார் பகர விறுதியிற் சிறு வழக்கிற் றாகலிற் பின் வைத்தார்.

உண்கும், உண்டும், வருதும், சேறும் என்னுந் தொடக் கத்தனவும் பல ரறி சொல் லாயினும்,

அவை எண்ணியன் மருங்கிற் றிரிதலின் (சொல் — 209) நேரத் தோன்றா வாகலான் இவற்றை, 'நேரத் தோன்றும் பலரறி சொல்' என்றார்.

மூன்றும் பல ரறி சொல் என்றா ராயினும், பல ரறி சொல்லாவது இம் மூன்று மென்பது கருத்தாகக் கொள்க.

நச்சி :

இது பலர் அறி சொல் உணர்த்துகின்றது.

(இ-ள்) ரஃகான் ஒற்றும் — ரஃகா னாகிய ஒற்றினை ஈறாக உடைய சொல்லும், பகர இறுதியும்—பகர மாகிய இறுதியை உடைய சொல்லும், மாரைக் கிளவி உளப்பட மூன்றும் — மார் என்னும் இடைச்சொல்லை ஈறாக உடைய சொல் உட்பட மூன்றும், நேரத் தோன்றும் பலர் அறி சொல்லே — நிரம்பத் தோன்றும் பலரை அறியும் சொல்லாம், (எ-று)

அகரத்தொடு புணர்ந்த பகரம் அல்லது உயர்திணைப் பன் மையை உணர்த்தாது என்றற்கு ஈண்டுப் 'பகரம்' என்றும், மேல் 'அ ஆ வ' (கிளவியாக்கம் சூ. 9) என்றும் பகர அகர உயிர்மெய் ஈறாய் நிற்றல் உடம்பொடு புணர்த்துக் கூறினா ராயிற்று.

(உ-ம்) உண்டனர், உண்டார், உண்ணாநின்றனர், உண்ணா நின்றார், உண்பர், உண்பார், கரியர், கரியார், கூறுப, வருப, ஆர்த்தார், கொண்மார் வந்தார் என வரும்.

'மார் ஈறு, ஆர் ஈறு என அடங்கும்,' எனின் மகர ஒற்றுக் காலம் காட்டும் எழுத்தாய் முதல் நிலைக்கு ஏற்றவாற்றான் உண்பார், வருவார்' என்றாற்போல வேறுபட்டு வரல் வேண்டும். அங்ஙனம் வேறுபடாமையானும், வினைகொண்டு முடிதலானும், மார் ஈறு ஆர் ஈற்றின் அடங்காதாயிற்று. ஏனைப் பன்மை ஈறுகள் திரிபு உடைமையின், இவற்றை நேரத் தோன்றும், என்றார். பகர இறுதி என்றது,

மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின்
மொழியா ததனை முட்டின்று முடித்தல் (மரபியல் சூ. 110)
என்பதற்கு இனம்.

**கல் :**

என் னுதலிற்றோ வெனின், பலரை யறியுஞ் சொல் லாமா றுணர்த்துத னுதலிற்று, (எ–து)

(பொ-ள்) ரகரவீற்றொன்றாகிய வொற்றும், பகர மாகிய விறுதியும், மா ரென்னுஞ் சொல் லுட்பட விம் மூன்றும் நிரம்பத் தோன்றும் பலரை யறியுஞ் சொற்கள் (எ-று). பலரை யறியுஞ் சொல் லாவன, ரகரம், பகரம், மார் என்பனவற்றை ஈறாக வுடைய சொற்க ளென்றவாறு.

(உ–ம்): உண்டார், உண்ணாநின்றார், உண்பார், கரியா[1] செய்யார்; உண்ப, தின்ப; ஆர்த்தார் கொண்மார் வந்தார், *"பூக்குழா லென் னையர்க ணில்லாத தீது" எனவரும்.

ர கார வொற்று மூன்று காலமும் வினைக்குறிப்பும் பற்றி வருதலான் முன் வைக்கப்பட்டது; பகரம் எதிர்கால மாகிய வொரு காலம் பற்றி வருதலா[2]ன் உயிர்மெய் யெழுத்தேனும் அதன் பின் வைக்கப்பட்டது. மார் என்பதூஉம் எதிர்காலம் பற்றி வரினும் ஒற்றாய் வருதலானும், பெரு வழக்கின் றாதலா னும் பகரத்தின் பின் வைக்கப்பட்டது. 'நேரத் தோன்றும்' என்றதனான், உண்டனம், உண்ணாநின்றனம், உண்குவம், கரியம், செய்யம் என மகர வீறுங் காட்டுவார் உண்மையின், யானு மென் னெஃகமுஞ் சாறு மென்புழி ய[3]ம் மகர மஃறிணையு மு[4]ள்படுத்துத் திரிவு பட நிற்றலின் [5]னகர ளகர திரிபுடைய இவையே திரிபல்லன வென்பன கொள்ளப்பட்ட[6]ன.

1. (ர்) 2. (ன்) (உ) 3. (ம்) 4. [ள்] 5. ந நகர ண திரிபு
6. [து] (ன) * பூங்குழாயென்னை யாணில்லாத தீது.

சொற் கென்பது சொல் லெனச் செய்யுள் விகாரத்தாற் றொக்க தென வுணர்வது—நான்காவது விரியாது. நேரத் தோன் றும் பலரறி சொல். மாரைக் கிளவி யுட்பட மூன்று மென வெழுவாய் பயனிலையு மாகக் கொள்ளின் *நேரத் தோன்றும் பலரறி சொல் வினை யென, நேரத் தோன்றாதனவும் பலரறி சொல் லுள வென [1]அருத்தாபத்திப் பட்டவையுந் தனக் குடன்பாடாய் மேற் கூறுவனபோல நிற்ப தோர் சொன் னோக் கப்படுதலானும், தோன்று மென நின்ற செய்யு மென் சொன் முற்றோசைப்பட்டுப் பயனிலை வகை யாதற் கியையாது நிற்ற லானும், அவ்வாறு கூற லாகா தென வுணர்க.

மேல் 'ஈற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்து' மென்று பொதுவாக [2]ஈ றென்று கூறுகின்றா ராகலின் ஈண்டுப் பகர [3]வீறு என்றுங் கூறியது என்னை யெனின், ஆண்டுக் கூறுகின்றது மொழிய தீ றென்ப தன்றே; [4]ஈண்டு அகர வுயிரும் உயர்திணைப் பன்மையை உணர்த்துங்காற் றானே நின்றுணர்த்தாது பகர வொற்றின்மே லேறி யதன் பின்னின் றுணர்த்து மென்றற்குக் கூறிய தென வுணர்க. இக் கருத்து மேற் கூறுவனவற்றிற்கும் பொருந்தும்.

பகர விறுதி யென்பன விருபெயரொட்டுப் பண்புத் தொகை. அகரம் பகர வொற்றோடு புணர்ந்து நிற்றலாற் பகர மெனவும் பட்டது.

அவ்வாறு [5]நிற்புழி யத னிறுதி நிற்றலினின் இறுதி யெனவும்பட்டது.

அரசு :

உ-ம்: உண்டார், உண்ணாநின்றார், உண்பார் என்று மூன்று கால வினையானுங் கரியார், செய்யா ரென்னும் வினைக் குறிப் பானும், உண்ப, தின்ப, கொண்மார் வந்தார் என வெதிர்கால முற்றுச் சொலானு மறிக.

---

1. காத்தருத்தா 2. (ஈ) 3. [வி] (வீ) ற செ[ய] (வ)ன்றுங் 4. [யீ] (ஈ)ண்(டு) (அகரமுயகும் [மு] உயர். 5. நி[ர்] (ற்) புழியதனிறுதி நிற்றவி [னி] (ன்) இறுதி.
* (நே)ரத்

8. ஒன்றறி கிளவி தறட வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும்.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், அஃறிணை யொருமைப்பாற் குரிய எழுத்து உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஒன்றனை யறிவிக்குஞ் சொல் த, ற, டக்களை யூர்ந்த குற்றிய லுகரத்து ஈறாகும், என்றவாறு.

வரலாறு: உண்டது, உண்ணாநின்றது, உண்பது எனவும்; கரியது, செய்யது எனவும், வினையானும் வினைக்குறிப்பானும் தகரமூர்ந்த குற்றுகரத்தான் அஃறிணை யொருமைப்பால் விளங்கும்.

கூயிற்று, தாயிற்று எனவும்; கோடின்று, குளம்பின்று எனவும் வரும் றகரம்; குண்டுகட்டு, குறுந்தாட்டு என வரும் டகரம்.

தெய்வ:

அஃறிணை யொருமை யுணர வருஞ் சொல் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :— த, ற, டக்களை யூர்ந்த குற்றுகரத்தினை ஈறாக வுடையன ஒன்றனை யறியுஞ் சொற்களாம் எ-று.

உ-ம் :— உண்டது, உண்ணாநின்றது, உண்பது, கூயிற்று, உண்டு: இவை வினை. கரிது, கோடின்று, குண்டுகட்டு: இவை வினைக்குறிப்பு. அது, ஒன்று, இரண்டு: இவை பெயர்.

சேனா:

இதன் பொருள் :— ஒன்றறி சொல்லாவது த, ற, ட என்னு மொற்றை யூர்ந்த குற்றிய லுகரத்தை யிறுதியாக வுடைய சொல்லாம், என்றவாறு.

உ-ம்: வந்தது, வாராநின்றது, வருவது, கரிது எனவும்; கூயிற்று, தாயிற்று, கோடின்று, குளம்பின்று, எனவும்; குண்டுகட்டு, கொடுந்தாட்டு, குறுந்தாட்டு, எனவும் வரும்.

கிடக்கை முறையாற் கூறாது 'த, ற, ட' எனச் சிறப்பு முறையாற் கூறினார்.

குன்றிய லுகர மென மெலிந்து நின்றது. தகர வுகரம் மூன்று காலமும் வினைக்குறிப்பும்பற்றி வருதலும், றகர வுகரம் இறந்தகாலமும் வினைக்குறிப்பும் பற்றி வருதலும், டகர வுகரம் வினைக்குறிப்பே பற்றி வருதலு மாகிய வேறுபா டுடைமையால், குற்றிய லுகர மென ஒன்றாகாது மூன்றாயின.

**நச்சி:**

இஃது, அஃறிணைக்கண் ஒன்றறிசொல் உணர்த்துகின்றது.

(இ-ள்) ஒன்று அறி கிளவி — ஒருவன் ஒன்றனை அறியும் சொல், த ற ட ஊர்ந்த குன்றிய லுகரத்து இறுதி ஆகும் — த ற ட என்னும் ஒற்றுக்களை ஊர்ந்து வந்த குற்றிய லுகரத்தினை ஈறாக உடைய சொல்லாம், (எ-று)

(உ-ம்) வந்தது, வாராநின்றது, வருவது, கரியது, கூயிற்று, தாயிற்று, கோடின்று, குளம்பின்று, குண்டு கட்டு [1](குன்று கட்டு), குறுந் தாட்டு எனவரும்.

**கல்:**

என் னுதலிற்றோ வெனின், உயர்திணைச் சொல் லாமா றுணர்த்தி, *இனி அஃறிணைச் சொல் லாமா றுணர்த்துத னுதலிற்று, (எ-து)

ஒன்றினை யறியுஞ் சொல்லாவது, த[2] ற டக்கள் என்கின்ற வொற்றுக்களை யூர்ந்து வருகிற குற்றிய லுகர மாகிய வெழுத்தினை ஈறாக வுடைய சொற்கள், எ-று.

உ-ம்:— உண்டது, உண்ணாநின்றது, உண்பது, கரிது, செய்(ய)து, எனவரும். இவை தகர மூர்ந்து வந்த குற்றிய லுகர [3]ஈற்றவாம். கூயிற்று, தாயிற்று கோடின்று, குளம் பின்று என [4]வரு மிவை றகர மூர்ந்து வந்த குற்றிய லுகர [5]ஈற்றவாம். குண்டுகட்டு, கொடுந்தாட்டு, என வரு மிவை டகர மூர்ந்து வந்த குற்றிய லுகர [6]ஈற்றவாம். மற்று 'டற[7]த' வென் றெழுத்துக் கிடக்கை முறைமையாற் கூறுத தென்னை யெனின், தகரம் மூன்று காலமும் வினைக் குறிப்புங் கோடலான் முன் வைக்கப்பட்டது. றகரம் இறந்த

1. பா. பே.- குன்று கட்டு 2. த[டர] (றட)க்கள் 3. ம் (ஈற்றவாம்)
4. (வரு) (மி)வை [ர] றகர 5. ம் (ஈற்றவாம்) 6. ம் (ஈற்றவாம்)
7. [ர] (ற) * [யி] (இ)னி

கால மொன்றும் வினைக்குறிப்புங் கோடலான் அதன் பின் வைக்கப்பட்டது. டகரம் வினைக்குறிப் பல்லது கோடலின் மையின் இதன்பின் வைக்கப்பட்டது.

உகரத் திறுதி — உகர மாகிய விறுதி யெனப் பண்புத் தொகை.

அத்து — அல்வழிச் சந்தி.

உகர வீற்றுச் சொல்லிற்கு 'உகர விறுதி யென்பீ திருபெய ரொட்டு பண்புத் தொகை. டென் ...................... நின்றது.

அரசு :

உ-ம்: உண்டது, உண்ணுநின்றது, உண்பது, கரிது. செய்து எனக் கால மூன்றானும் வினைக்குறிப்பானும், கூயிற்று, தாயிற்று, கோடின்று, குளம்பின்று, உகிரின்று, மயிரின்று, என விறந்த கீலத்தானும் வினைக்குறிப்பானும், குண்டுகட்டு, கொடுந்தாட்டு என்ற வினைக்குறிப்பானுந் த ற டக்களை யூர்ந்து வந்த குற்றிய லுகரத்தா னென்றறி சொல் லென் றறிக.

9. அ ஆ வ என வரூஉ மிறுதி
அப்பான் மூன்றே பலவறி சொல்லே.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின் அஃறிணைப் பன்மைப்பாற்கு ஈறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அ, ஆ, வ என்று சொல்லப்படுகிற இறுதிகளை யுடைய அக் கூற்று மூன்று சொல்லும் பலவற்றை யறியுஞ் சொல், என்றவாறு.

வரலாறு :— அகாரம்: உண்டன, உண்ணுநின்றன, உண் பன எனவும்; கரிய, செய்ய எனவும் வரும்.

ஆகாரம் : உண்ணா, தின்னா என வரும். இது மூன்று காலத்தையும் எதிர் மறுக்கும். எதிர்மறைக்கண் அல்லது பால் விளங்கி நில்லா.

வகாரம்: உண்குவ, தின்குவ என எதிர்காலம் பற்றி வரும்.

'வரூஉம் இறுதி யப்பால் மூன்று', என்பது இறுதியை யுடைய அக் கூற்று மூன்று, என்றவாறு.

**தெய்வ :**

பல வறி சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் :— பலவற்ன்ற யுணர வருஞ் சொல் அ, ஆ என்னும் உயி ரெழுத்தினையும், வ என்னும் உயிர்மெய் யெழுத்தினையும், ஈருக வுடைய அக் கூற்று மூன்று. எ–று.

உ–ம் :— உண்டன, உண்ணுநின்றன, உண்பன, உண்ணு, உண்குவ:. இவை வினை. கரிய, நெடிய: இவை வினைக்குறிப்பு. பல, சில, யா, வருவ: இவை பெயர்.

வ என்பது அகரத்துள் அடங்காதோ எனின், அடங்காது. என்னை ? உண் என்னும் தொழிற் சொல் இறந்தகாலங் குறித்துழி உண்டு எனவும், நிகழ்காலங் குறித்துழி உண்கின்று எனவும் எதிர்காலங் குறித்துழி உண்பு எனவும் நின்று, அன், அள், அர், அது, அ என்னும் பால் உணர்த்தும் எழுத்தோடு கூடிப் புணருழி. அன் சாரியை மிக்கும், இயல் பாகியும், இறந்த காலத்துக்கண், உண்டனன், உண்டனள், உண்டனர், உண்டது உண்டன, உண்ட. எனவும் நிகழ்காலத்துக்கண், உண்கின்றனன், உண்கின்றனள், உண்கின்றனர், உண்கின்றது, உண்கின்றன எனவும், எதிர்காலத்துக்கண், உண்பன், உண்பள், உண்பர், உண்பது, உண்பன எனவும் வரும். உண்கு என நின்ற எதிர் காலச் சொல் பன்மை யுணர்த்தும் அகரம் ஏறியவழி உண்க என வியங்கோட் பொருண்மைப் படும் ஆகலின் ஆங்கு உண்குவ என வகர உயிர்மெய் கொடுக்க வேண்டுதலின் வகர மென வோதல் வேண்டு மென்க.

**சேனா :**

இ–ள் :— பலவறி சொல்லாவன அ ஆ வ என வரு மிறுதியை யுடைய அக் கூற்று மூன்று சொல்லாம், என்றவாறு.

உ–ம் : உண்டன, உண்ணுநின்றன, உண்பன, கரியன எனவும்; உண்ணு, தின்னு, எனவும்; உண்குவ, தின்குவ எனவும் வரும்.

உண்ட, உண்ணுநின்ற, உண்ப, கோட்ட, என்னுந் தொடக்கத்தனவும் அகர வீற்றுப் பலவறி சொல். அவற்றுள் உண்ப வென்பது பகர வீற்றுப் பலரறி சொல்லன்றே, அஃறிணைக் காயினவா றென்னை யெனின், பகர விறுதி யாயினன்றே

உயர்திணைக் காவது. ஈண்டுக் காட்டப்பட்டது 'கானந் தகைப்ப செலவு' (கலி. —3.22) 'சினையவுஞ் சுனையவு நாடினர் கொயல் வேண்டா நயந்து தாங் கொடுப்ப போல்' (கலி—28·1) என நின்றனபோல எதிர்காலத்து வரும் பகர மூர்ந்து நின்ற அகர வீறுதலின், அஃறிணைச் சொல்லே யா மென்பது. செய்யுளாகலின், தகைப்பன, கொடுப்பன என்னுஞ் சொற்கள் தகைப்ப, கொடுப்ப என விகார வகையான் அவ்வாறு நின்றன வாகலான், வழக்கு முடிவிற்கு அவை காட்டல் நிரம்பாதெனின்: தகைத்தன, தகையாநின்றன; தகைத்த, தகையாநின்ற எனவும்; கொடுத்தன, கொடாநின்றன; கொடுத்த, கொடா நின்ற, எனவும் இறந்த காலத்தும் நிகழ்காலத்தும், அகர வீறு முதனிலைக் கேற்ற வாற்றான் அவ்வக் காலத்திற் குரிய எழுத்துப் பெற்று, அன் பெற்றும் பெறாதும் முடியுமாறு போல, எதிர் காலத்தும் முதனிலைக் கேற்ற வாற்றான் அக்காலத்திற் குரிய எழுத்துப் பெற்று அன் பெற்றும் பெறாதும் முடியும். எதிர் காலத்துக் குரிய எழுத்தாவன பகரமும் வகரமு மாம். அவற்றுட் பகரம் பெற்று, அன் பெற்றும் பெறாதும் முடிவுழி, தகைப்பன, தகைப்ப, கொடுப்பன, கொடுப்ப, எனவும்; வகரம் பெற்று அவ் வாறு முடிவுழி, வருவன, வருவ, செல்வன, செல்வ எனவும் இவ் வாறு முடியு மாகலின், தகைப்ப, கொடுப்ப என்பன விகார மெனப்படா; இயல்பேயா மென்பது. கொடுப்பன யாவை, அவை போல என உவமை கருதாது அவை தம்மையே சுட்டி நிற்றலிற் கொடுப்ப என்பது பெயரன்மை யறிக.

அன் பெறாது எதிர் காலத்து வரும் வகர வொற் றூர்ந்து நின்ற அகரமாய் வகர வீ றடங்கு மெனின், வினை கொண்டு முடித லொழித்து மா ரீற்றிற் குரைத்த துரைக்க. அவ்வா றுரைக்கவே, குகரம் பெற்றவழி அன் பெறற் கேலாமையின், உண்குவ, தின்குவ என்னுந் தொடக்கத்தன வகர வீறே யாம். வருவ, செல்வ எனக் குகரம் பெறாதவழி வகர வீ றுதலும் அகர வீ றுதலு மென இரு நிலைமையு முடையவாம். என்னை? எல்லா வினைக்கண்ணுஞ் சேறன் மாலைத் தாகிய வகர வீறு ஆண்டு விலக்கப்படாமையானும், அத் தன்மைத் தாகிய அகர வீறும் ஆண்டு வந்து அன் பெறாதவழிக் கால வகர மூர்ந்து அவ்வாறு நிற்ற லுடைமையானு மென்பது.

வரு மென்னு முகரம் விகார வகையான் நீண்டு நின்றது.

ஈற்று வகையான் மூன்றாகிய சொல் லென்பார் 'அப்பான் மூன்று' என்றார்.

நச்சி:

இஃது, அஃறிணைக்கண் பல அறிசொல் உணர்த்துகின்றது.

இ-ள் :— பல அறிசொல்—ஒருவன் பலவற்றை அறியும் சொல்லாவன; அ, ஆ, வ என வருஉம் இறுதி அப்பால் மூன்று — அ, ஆ, வ என வருஉம் இறுதியை உடைய அக் கூற்று மூன்று சொல்லாம், (எ—று)

(உ-ம்) அ — உண்டன, உண்ட, உண்ணாநின்றன, உண்ணாநின்ற, உண்பன, உண்ப, கரியன, கரிய, கோட்ட என வரும்.

'உண்ப என்பது பலர் அறிசொல் அன்றோ'? எனின், தகைத்தன, தகையாநின்றன, தகைப்பன என 'அன்' பெற்றும், தகைத்த, தகையாநின்ற, தகைப்ப என 'அன்' பெறாதும் நின்றாற் போலவும்; 'கானம் தகைப்ப செலவு' (கலி—3. 22) என்றாற் போலவும் 'உண்ப' என்பதும் 'அன்' பெறாது நின்ற அகர ஈற்றுப் பலர் அறிசொல்; பகர ஈற்றுப் பலர் அறிசொல் அன்று.

ஆ — உண்ணா, தின்னா எனவும், வ — உண்குவ, தின்குவ எனவும் வரும்.

இவை 'அன்' பெறாது எதிர்காலத்து வரும் வகர ஒற்று ஊர்ந்து நின்ற அகர ஈறு ஆகாவோ? எனின், குகரம் பெறுதலின் வகரம் ஈறே யாம். 'வருவ, சொல்வ' எனக் குகரம் பெறாதவழி அகர ஈறு ஆதலும், பெற்றவழி வகர ஈறு ஆதலும் உடைய வாம்.

கல்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், (அஃறிணைக்கட்) பல வறி சொல் லாமா றுணர்த்துத னுதலிற்று.

(பொருள்) அ, ஆ, வ வென்று சொல்ல வருகிற விறுதிகளை யுடைய அக் கூற்று மூன்று சொல்லும் பலவற்றை யறியுஞ் சொல் லென்றவாறு.

உ-ம் :— உண்டன, உண்ணாநின்றன, உண்பன, [1]குறிய, கரிய, செய்ய என இவை அகர வீற்றனவாம்.

உண்ணு, தின்னு: இவை ஆகார வீற்றன; உண்குவ, தின்குவ: இவை வகர வீற்றன வென்க.

அகரம் மூன்று காலமும் வினைக்குறிப்புங் கோடலின் முன் வைக்கப்பட்டது. ஆகாரம் எதிர்கால மாகிய வொரு காலங் கோடலானும் எதிர்மறை வினைக்கண் ணல்லது வாராமையானும் அதன் பின் வைக்கப்பட்டது. வகரமும் 'அ'கர மென வடங்குமே யெனினும் அவ் வகரம்போல மூன்று காலத்தும் வினைக்குறிப்பின்கண்ணும் வாராது; உண்டல், தின்றல் இவை முதலாகிய தொழில் [2]தோன்ற உண்குவ, தின்குவ என [3]எதிர்காலம் பற்றி வேறோர் வாய்[4]பாடாய் வருதலான், அவ் வகரத்தோடு அடங்கா நிலைமைச் சிறப்புடைய வகரத்தை முன் கூறி, யதனை யதன் பின் வைத்தா ரென்பது இக் *கடாவிற்கு மொக்கும்.

பல வறி சொல் லென்னு மெழுவாய்க்கு, இறுதி யென்பது பயனிலை யாக்கின் அப் பா[5]ன் மூன் றென்பது நின்று[6]விடு மாகவின், மூன் றென்பதையே பயனிலை யாக்கி 'இறுதி' யென்ப தனை [7]இறுதியை யுடைய மூன் றெனப் பயனிலைக் கடை யாக்கி உரைக்க.

அரசு :

உ-ம் :— உண்டன, உண்ணாநின்றன, உண்பன, கரிய, செய்ய, எனக் காலங்களானும் வினைக்குறிப்பானும், உண்ணு, தின்னு என்னு முற்றுச் சொல்லானும், உண்குவ, தின்குவ, [8]என வெதிர் காலத்தானு மாக, அ ஆ வ என்னு மம் மூன்று சொல்லா னும் பன்மைப்பா லுணரப்படு மென் றறிக.

---

1. கு [ரி] (றி)ய (கரிய) 2. ரோ[று] (ன்)ற 3. [யெ] (எ)
4. [ப்] பா 5. [ல்] (ன்) 6. [வரு] (விடு)மா 7. [யி] இ
8. யென * கடாவிற்றிற்கு

10. இருதிணை மருங்கி னைம்பா லறிய
ஈற்றுநின் றிசைக்கும் பதினோ ரெழுத்துந்
தோற்றந் தாமே வினையொடு வருமே.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மேல் பா லுணர்த்தப்பட்ட எழுத்து இனத்து என்பதூம், அவை வினைக்க ணின்று உணர்த்தும் என்பதூஉம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இருதிணை யிடத்து ஐந்து பாலையும் அறிய இறுதிக்கண் நின் றுணர்த்தும் பதினோ ரெழுத்தும் வினையொடு வந்து புலப்படும், என்றவாறு.

'வினையொடு வருமே', என்றார் பெயர்க்கண் திரியவு நிற் கும், திரியாமையு நிற்கு மாகலான் என்பது. உண்டான் என்றக் கால் திரிவில்லை. கொற்றன் என்பது இருதிணை யொருமைப் பாற்கும் ஏற்கும், என்பது.

மற்றுப் பதினோரெழுத்தும் என்றது என்னை? னஃகா னொற்றும், ளஃகா னொற்றும், குற்றுகரமும், அவ்வும், ஆவும் என அவை ஆறெழுத்தான் அடங்கும் பிற வெனின், அடங்கும்; அடங்குமே யெனினும் ஈண்டுப் பதினொன் றென்று வேண்டி னார்; என்னை ? பளிங்கு செம்பஞ்சி யடுத்தாற் செம்பளிங்கு எனப்படும்; கரும் பஞ்சி யடுத்தாற் கரும்பளிங்கு எனப்படும். அதுபோலச் சார்ந்து வந்தவற்றது வேற்றுமை பற்றி வேறு பெயர் கொள்ளப்பட்டது, என்பது.

**தெய்வ :**

மேல் பா லுணர்த்தப்பட்ட எழுத்திற் கெல்லாம் உரிய தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : இரண்டு திணைக்கண்ணும் ஐந்து பாலும் விளங்க இறுதிக்கண் நின்று ஒலிக்கும் பதினோ ரெழுத்தும் தாந் தோற்றமாக வினையொடு வரும், எ-று.

தோற்றமாக என்பது பெரிதாக என்பது குறித்து நின்றது. எனவே பெயரொடு வருகை சிறு வரவிற்று என்று கொள்ளப்படும், ஆடூஉ, மகடூஉ, மக்கள், மரம், அவை எனப் பெயர்க்கட் பிற வாற்றானும் வரும் ஆதலின். உதாரணம் மேற் காட்டப்பட்டன.

சேனா :

இதன் பொருள் : உயர்திணை அஃறிணை யென்னும் இரண்டு திணைக்கண்ணு முளவாகிய ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல வென்னும் ஐந்து பாலு மறிய அவ்வச் சொல்லி னிறுதிக்க ணின் றொலிக்கும் வினைச்சொற் குறுப்பாய்ப் புலப்படும், என்றவாறு. திணை இரண்டே, பால் ஐந்தே யென வரையறுத்தற்கு 'இரு திணை மருங்கி னைம்பால்', என்றார்.

னகாரமும் ளகாரமும் ரகாரமும் மாரும் இறுதி நின் றுணர்த்து மென்பதற்கு 'ஈற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத் தும்', என்பது ஞாபகமாயிற்று. அல்லனவற்றிற்கு அநுவாத மாத்திர மென்றார்.

தாமே என்பது கட்டுரைச் சுவைபட நின்றது.

வினை யெனப் பொதுப்படக் கூறினா ராயினும் ஏற்புழிக் கோட லென்பதனாற் படர்க்கை வினை யென்று கொள்ளப்படும்.

இவை பெயரொடு வருவழித் திரிபின்றிப் பால் விளக்கா மையின் வினையொடு வரு மென்றார்.

நச்சி :

இது, மேல் பா லுணர்த்திய எழுத்து இனைத்தென்றும், அவை வினைக்கண் நின்று உணர்த்து மென்றும் உணர்த்து கின்றது.

(இ-ள்) இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய – உயர்திணை அஃறிணை என்னும் இரண்டு திணைக்கண்ணும் உளவாகிய ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்னும் ஐந்து பாலினையும் அறிய, ஈற்று நின் றிசைக்கும் பதினோர் எழுத்தும் – அவ்வச் சொல்லின் இறுதிக்கண் நின்று ஒலிக்கும் பதினோ ரிடைச் சொற் களும், தோற்றந் தாமே வினையொடு வருமே – பால் உணர்த்து தற்குப் புலப்படுதற்கண் வினைச் சொற்கு ஈறாய்ப் புலப்படும். (எ–று).

பதினோ ரிடைச்சொல்லையும் எழுத்து என்றார், எழுத்தினால் சொல் ஆதல் பற்றி. இது கருத்து ஆதல், 'மாரைக் கிளவி' (கிளவியாக்கம் சூ. 7.) என்றதனால் பெற்றாம். 'ஈற்றின்

நின்று இசைக்கும்' என்றது, னகரம் முதலிய இரண்டற்கும் ஞாபகம்; அல்லனவற்றிற்கு அனுவாதம். அவை னகாரமும் ளகாரமும் ரகாரமும் பகாரமும் மாரும் துவ்வும், றுவ்வும், டுவ்வும், அவ்வும், ஆவும், வவ்வும். இது விரித்தது தொகுத்தது. வினையியலுள் வினைக்கு ஈறுபற்றி ஓதிப் பெயரியலுள் பெயர்கள் தம்மை எடுத்து ஓதினமையானும், இப் பதினோரீறும் பெயர்க்கண் திரிபு உடையவாய் வருதலானும் பெயர்க்கு இவ் வீறுகள் கோடல் ஆகாமை உணர்க.

கல் :

(எ—ன்) மேற் பாலுணர்த்து மென்னப்பட்ட வெழுத்து இனைத் தென்பதூஉம், அவை வினைக்கண் ணின் றுணர்த்து மென்பதூஉம் வினைக்கண்ணும் ஈற்று நின்றுணர்த்து மென்பதூஉம் உணர்த்துத னுதலிற்று.

இரண்டு திணையிடத்து முளவாகிய ஐந்து பாலினையும் அறியும்படி, மொழிய தீற்றுக்கண்ணே நின்றுணர்த்தும் மேற் சொல்லப்பட்ட பதினொரு வகை யெழுத்தும் அவை தாம் பாலுணர்த்துதற்குப் புலப்படு மிடத்து வினைச்சொல்லோடு வந்து புலப்படும், என்றவாறு.

பதினொரு எழுத்து மாவன : னஃகா னொற்றும் ளஃகா னொற்றும், ரஃகா னொற்றும், பகரமும், மாரும், துவ்வும், றுவ்வும், டுவ்வும், அவ்வும், ஆவும், வவ்வும் என விவை. இசைக்கு மென்பது செய்யு மென்னு முற்றுச் சொற் பெய ரெச்ச மென்னும் பொருள்படும்.

மேற் கூறிய திணையினையும் பாலினையும் ஈண்டு வரையறுத்து "இருதிணை மருங்கி னைம்பா" லெனக் கூறிய காரண மென்னை யெனின், உயர்திணைப் பொருள் தேவரும், நரகரும் எனவும், உயர்திணைப் பாலுட் பேடியும் அலியு மென விரிந்து [1]நின்றனவும் [2]பொருட்கள் உண்மை[3]யின் இப்பொருட் பகுதி யெல்லாம் சொற்பகுதி பிற வின்மையின் ஐந்தா யடங்கினவே யெனினும் அப் பொருட் பாகுபாடு பற்றி நூலகத்து வேறுதிணையும் பாலு மாக விளங்கவுங் கூடுங் கொல்லோ? [4]வென்று மாணாக்கன் ஐயுறுவா னுயினு மென்று இவையல்லதில்லை யென விரித்துத் தொகுத்த லென்னு மிலக்கணத்தான் வரையறுத்து இருதிணை யைம்பா லென்றுராகக் கொள்க.

---

1. நின்[னே] (றன)வும் 2. பொரு[ள்] (ட்)கள் 3. யி[னி] (ன் இ)ப்
4. வென்[றா]று

முதற் சூத்திரத்துட் கூறப்பட்ட சொல் லிலக்கண மெட்டி னுள்ளுந் திணை பா லென்பனவற்ற திலக்கணமே இத் துணையுங் கூறிய தென வுணர்க.

முன் னின்ற நான்கு சூத்திர[1]மும் திணையும் பாலும் சொல்லும் பொருளும் வரையறை இலக்கணமுங் கூறின வெனவும், பின்னின்ற வாறும் அத் திணையும் சொல்லும் பாலும் உணர்த் துஞ் சொற்களி[2]ன் இலக்கணங் கூறின வெனவும் உணர்க.

அரசு :

உ-ம் : உயர்திணை யிடத்து மஃறிணை யிடத்தும் ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல வென்னு மைந்து பாலு மறிய விறுதி யினின் றுணர்த்தும் பதினோ ரெழுத்தும் புலப்படு மிடத்து வினையொடு நடக்கும். அவையாவன: னகாரமும் ளகாரமு மாகாரமும் பகரமுமாகும். தவ்வும் றவ்வும் டவ்வும் அவ்வும் ஆவும் வவ்வும் என விவை முன் சொன்ன சூத்திரங்க ளின் வினையோடு நடக்குமாறு கண்டு கொள்க.

11. வினையிற் றோன்றும் பாலறி கிளவியும்
பெயரிற் றோன்றும் பாலறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், வழுக் காத்தல் நுதலிற்று. வழுக் காக்கு மிடத்து, வழுவற்க என்று காத்தலும் வழீஇ யமைக என்று காத்தலும் என இரண்டு. அவற்றுள் இது வழுவற்க என்று காத்தது.

உரை : வினையிற் றோன்றும் பா லறி கிளவியும் என்பது — வினையிற் பா லறியப்படும் பொருளும் என்றவாறு: ஈண்டுப் பொருளைக் கிளவி யென்றா ரென வுணர்க. பெயரிற் றோன்றும் பா லறி கிளவியும் என்பது — பெயரினாற் பால றியப்படும் பொருளும் என்றவாறு; மயங்கல் கூடா என்பது — அவை விராதல் பொருந்தா என்றவாறு; தம் மரபினவே என்பது — தத்தம் இலக்கணத்தனவே யாகும் என்றவாறு.

---

1. [மும்](ங்களுந்) 2. [ல்](ன்)

அவை தம் மரபினுன் வருமாறு: உண்டான் அவன், உண்டாள் அவள், உண்டார் அவர், உண்டது அது, உண்டன அவை என இவை வினை நின்று பெயர்மேற் றத்தம் மரபினுன் வந்தன. இனிப் பெயரை முன்னிறீஇ வினையைப் பின்னே கொணர்ந்து காட்டினும் அமையும்.

இனி, 'மயங்கல் கூடா' எனவே, மயக்கமும் உண்டு என்பது சொல்லப்பட்ட தாம்.

அம் மயக்கம் எழு வகைப் படும்; திணை மயக்கம், பான் மயக்கம், இட மயக்கம், கால மயக்கம், மரபு மயக்கம், செப்பு மயக்கம், வினு மயக்கம் என. மயக்கம் எனினும் வழு எனினும் ஒக்கும். அவை வருமாறு: அவன் வந்தன, அவன் வந்தது அவள் வந்தன, அவள் வந்தது, அவர் வந்தன, அவர் வந்தது. இவை உயர்திணை அஃறிணைமேற் சென்று வழீஇயின.

இனி, அஃறிணை உயர்திணைமேற் சென்று வழீஇயின வருமாறு: அது வந்தான், அது வந்தாள், அது வந்தார் எனவும், அவை வந்தான், அவை வந்தாள், அவை வந்தார் எனவும் வரும். இவை பன்னிரண்டுந் திணை வழூஉ.

இனி, பால் வழூஉ வருமாறு: அவன் வந்தாள், அவன் வந்தார், அவள் வந்தான், அவள் வந்தார் என இவை உயர்திணைப் பால் வழூஉ. அது வந்தன, அவை வந்தது என இவை அஃறிணைப் பால் வழூஉ. இவை யெல்லாம் பெயர் நின்று வினை மேல் வழீஇய. இவ்வாறு வினை நின்று பெயர்மேல் வழீஇயன வினை முன்நிறீஇப் பெயர் பிற்றந்து கூட்டி யுரைத்துக் கொள்க.

இச் சூத்திரம் பொருண்மேன் மயங்கற்க என்ருறுதலான், அவற்றுக்கட் கிடந்த எல்லா மயக்கமும் வேண்டினமை கூறினுரும் என்பது. அவை திணை பற்றியும் பால் பற்றியுமன்றி வருமாறில்லை. செப்பு வழூஉ, வினு வழூஉ முன்னர்ச் சொல்லுதும்; ஒழிந்தது ஈண்டுக் காட்டுதும்.

இடவழூஉ வருமாறு: உண்டேன் நீ, உண்டேன் அவன், உண்டாய் யான், உண்டாய் அவன், உண்டான் யான், உண்டான் நீ, என இவை.

இனி, கால வழூஉ வருமாறு: செத்தானைச் சாம், என்றலும் குளம் நீர் புகுந்து நிறையும் எனற்பாலதனை நிறைந்தது என்றலு மாம்.

இனி, மரபு வ்ழூஉ வருமாறு: மேய்த்தல் ஒப்புமையான் யானைமேய்ப்பானை இடையன் என்றும், ஆடு மேய்ப்பானைப் பாகன் என்றுஞ் சொல்லுதல்.

**தெய்வ :**

வழுப்படாமற் கூறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள் :** இவ் வோத்தினுட் செப்பும் வினவும் வழுவாமற் கூறுதல் பயனாதலின், அவை வழுவாமற் கூறுங்கால் வினையிற் றோன்றும் பா லறி சொல்லும், பெயரிற் றோன்றும் பா லறி சொல்லும் தம்முள் மயங்குதல் பொருந்தா, தத்தம் மரபினை யுடைய வாதலான், எ-று. ஆதலால் என்பது எஞ்சி நின்றது.

பெயர் என்றதனால் தன் பொருண்மையாகிய திணை பெறுதும். பா லறி சொல் என்றதனாற் பால் பெறுதும். வினை யென் றதனால் அதற்கு இன்றியமையாத காலமும் இடனும் பெறுதும். தம் மரபின் என்பதனால் தன் மரபு பெறுதும். மயங்கல் கூடா என்பதனால் வ்ழூஉப்படுதல் குற்ற மென்பது பெறுதும்.

திரிபின்றிப் பால் உணர்த்துவது வினை யாதலிற் சிறப்பு நோக்கி முற்கூறினார். அன்றியும் மேனின்ற சூத்திரம் வினை யதிகாரப்பட்டு வருதலின் அதனோடு சேர வைத்தார், எனினும் அமையும்.

உ-ம் : அவன் நெருநல் உண்டான் என்பது. இதனுள் அவன் என்னும் உயர்திணைப் பெயர் உயர்திணை வினை கொண்டு முடிதலின் திணை வழுவா தாயிற்று. ஆடூஉப் பெயர் ஆடூஉ வினை கொண்டு முடிதலிற் பால் வழுவா தாயிற்று. படர்க்கைப் பெய ரோடு படர்க்கை வினை முடிதலின் இடம் வழுவா தாயிற்று. நெருந லென்னும் இறந்த காலப் பெயரோடு இறந்தகால வினை முடிதலின் காலம் வழுவா தாயிற்று. உண்டற் றொழிற்கு உரி யானை உண்டான் என்றமையான் மரபு வழுவா தாயிற்று. பிறவு மன்ன.

இனி வழு வாமாறு: உயர்திணை மூன்றுபாலும் அஃறிணை யிரண்டு பாலொடு மயங்குதல் திணை வழுவாம். அவை தம்முட்டாம் மயங்குதல் பால் வழுவாம். தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் மூன்றிடமும் ஒன்றோடொன்று மயங்குதல் இட வழுவாம். இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலமும் தம்முண் மங்குதல் கால வழுவாம். எல்லாப் பொருளையும் பயின்ற மரபினாற் கூறாதது மரபு வழுவாம்.

உ-ம்: அவன் உண்டது; திணை வழூஉ; அவன் உண்டனள்: பால் வழூஉ; நீ யுண்டனன்: இட வழூஉ; நாளை உண்டேன்: கால வழூஉ; அவன் மேய்ந்தான்: மரபு வழூஉ; பிறவு மன்ன. திணை வழூஉப் பன்னிரண்டு; பால் வழூஉ எட்டு; இடவழூஉ ஆறு; கால வழூஉ ஆறு; மரபு வழூஉ வரம்பில.

**சேனு:**

ஒரு திணைச்சொல் ஏனைத் திணைச்சொல்லொடு முடியுந் திணை வழுவும், ஒரு பாற்சொல் அத் திணைக்கண் ஏனைப் பாற் சொல்லொடு முடியும் பால் வழுவும், பிறிதோர் காரணம் பற்றாது ஒரு பொருட் குரிய வழக்கு ஒரு பொருண்மேற் சென்றதெனப் படும் மரபு வழுவும், வினையாற் கிறை யாகாச் செப்பு வழுவும், வினவப்படாத பொருளைப் பற்றி வரும் வினு வழுவும், ஓரிடச் சொல் ஓரிடச் சொல்லொடு முடியும் இட வழுவும், காலக்கிளவி தன்னோ டியையாக் காலமொடு புணருங் கால வழுவு மென வழு எழு வகைப்படும். வழுவற்க வென்றலும் வழு வமைத்தலு மென வழுக் காத்தல் இரு வகைப்படும். குறித்த பொருளை அதற் குரிய சொல்லாற் சொல்லுக வென்றல் வழுவற்க வென்றலாம். குறித்த பொருட் குரிய சொல்லன் றாயினும் ஒருவாற்றான் அப் பொருள் விளக்குதலின் அமைக வென்றல் வழு வமைத்தலாம். இச் சூத்திர முதலாக இவ்வோத்து வழுக் காக்கின்றது.

**இதன் பொருள்:** கூறப்பட்ட பதினோ ரீற்றவாய் வினை பற்றி வரும் பா லறி சொல்லும், அவன், இவன், உவன் என்பன முதலாகப் பெயர்பற்றி வரும் பா லறி சொல்லும் தம்முட் டொடருங்கால், ஒரு பாற் சொல் ஏனைப் பாற் சொல்லொடு

மயங்கா, தம் பாற் சொல்லொடு தொடரும். எனவே, பிற பாற் சொல்லொடு தொடர்வன வழு வென்பதாம், என்றவாறு.

ஈண்டுப் பெயரென்றது பொருளை.

திணை யுணராக்கால் அத னுட்பகுதி யாகிய பா லுணர்த லாகாமையின், பா லறி கிளவி யெனவே திணை யறிதலும் பெறப் படும்; படவே மயங்கல் கூடா வென்றது திணையும் பாலும் மயங்கற்க வென் றவா ரும்.

இன்னும் மயங்கல் கூடா வென்றதனுல் விணைப் பா லறி சொல்லும், பெயர்ப் பா லறி சொல்லும், பா லறி சொல்லுள் ஒரு சாரனவும் இடமுங் காலமு முணர்த்து மாகலின், அவ்வா றுணர்த்துவனவற்ருனும் மயங்கற்க வென்றவா ரும். ஆகவே இடமுங் காலமும் மயங்காது வருதலுங் கூறப்பட்ட தாம்.

உதாரணம்: அவன் வந்தான், அவள் வந்தாள், அவர் வந்தார்; அது வந்தது, அவை வந்தன எனவும், நெருநல் வந்தான் எனவும் திணையும் பாலும் இடமும் காலமும் வழுவாது முடிந்த வாறு. அவ்வா றன்றி அவன் வந்தது, அவன் வந்தாள், யான் வந்தான், நாளை வந்தான் என மயங்கி வருவன வெல்லாம் வழு வாம்.

'சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தல்'
என்பதனுன் ஐம்பா லுணர்த்துதற் சிறப்புடைய படர்க்கை வினை பற்றி யோதினுரேனும்,

'தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவி' (சொல் – 43)
என்றும்,

'முன்னிலைச் சுட்டிய வொருமைக் கிளவி' (சொல் – 462)
என்றும் பெயர் வழு வமைப்பா ராகலின், தன்மை முன்னிலைப் பா லறி கிளவியும் மயங்கற்க வென்பது ஈண்டைக் கொள்ளப் படும்.

உதாரணம்: யான் வந்தேன், யாம் வந்தேம் எனவும்; நீ வந்தாய், நீயிர் வந்திர் எனவும் வரும். யான் வந்தேம், நீயிர் வந்தாய் என்னுந் தொடக்கத்தன வழு வாம்.

மயங்கல் கூடா வென்றது மயங்குதலைப் பொருந்தா வென்றவாறு. மயங்கல் கூடா, தம் மரபினவே என்பனவற்றுள் ஒன்றன தாற்றலான் ஏனையதன் பொருளும் உணரப் படுதலின் ஒன்றே யமையு மெனின், சொல் லில்வழிய துய்த் துணர்வதென்க.

தம் மரபினவே யென்பதனைப் பிரித்து வேறோர் தொடராக்கிச் சொற்கண் மரபு பிறழா தம் மரபினவே யென மரபு வழுக் காத்ததாக வுரைக்க. இது யோகவிபாகம் என்னு நூற் புணர்ப்பு. முன் னிரு பொருள்பட உரைப்பன வெல்லாம் இந் நூற் புணர்ப்பாகக் கொள்க. யானை மேய்ப்பானைப் பாகனென்றலும், யாடு மேய்ப்பானை இடையனென்றலும் மரபு; மேய்த்த லொப்புமையான் யானை மேய்ப்பானை இடையனென்றலும், யாடு மேய்ப்பானைப் பாகனென்றலும் மரபு வழு.

செப்பு வழாநிலையும், வினு வழாநிலையும், சிறப்பு வகையானேதப்படும் இட வழாநிலையும், இவ்வா றோதப்படு மரபு வழாநிலையும் ஒழித்து, ஒழிந்தன இச் சூத்திரத்தாற் காத்தார்.

**நச்சி :**

இது, 'வழுவற்க', என்று காத்தலும், 'வழுவி அமைக', என்று காத்தலு மாகிய இரண்டனுள், வழுவற்க என்று காக்கின்றது.

**இ-ள் :** வினையின் தோன்றும் பால் அறி கிளவியும் — வினைச்சொல்லான் விளங்கும் பால் அறியப்படும் பொருளும். பெயரின் தோன்றும் பால் அறி கிளவியும் — பெயர்ச் சொல்லான் விளங்கும் பால் அறியப்படும் பொருளும்; மயங்கல் கூடா — ஒன்றோடு ஒன்றை மயங்கச் சொல்லுதல் பொருந்தா; தம் மரபின — தத்தம் இலக்கணத்தாலே சொல்லுதல் உடைய. (எ—று)

'சொல்' என்றார், அதனான் உணரும் பொருளை. பால் மயங்காது எனவே, திணை மயங்காமையும் கூறிற்றாம்.

உ-ம் : உண்டான் அவன், உண்டாள் அவள், உண்டார் அவர், உண்டது அது, உண்டன அவை. இவை வினை நின்று பெயர்மேல் தத்தம் மரபினான் வந்தன.

அவன் உண்டான், அவள் உண்டாள், அவர் உண்டார், அது உண்டது, அவை உண்டன: இவை பெயர் நின்று வினை மேல் தத்தம் மரபினுன் வந்தன.

'வினைச் சொல்லான் விளங்கும்', எனவே, அதனிலுள்ள காலமும் இடமும் மயங்காமையும் பெற்றும்: அவை, உண்டேன் நெருநல், உண்ணுநின்றேன் இன்று, உண்கு நாளை; யான் வந்தேன், நீ வந்தாய், யாம் வந்தேம், நீயிர் வந்தீர் என வரும்.

இனி, உய்த்துக் கொண்டு உணர்த்தல் (மரபியல் சூ. 111) என்பதனுல், தம் மரபின என்பதனைப் பிரித்து வேறோர் தொடராக்கி மரபு மயங்காமையும் கொள்க. அவை யானை மேய்ப்பானைப் பாகன் என்றலும் யாடு மேய்ப்பானை இடையன் என்றலு மாம்.

இச் சூத்திரத்தால், திணையும் பாலும் இடமும் காலமும் மரபும் வழுவாமல் காத்தார்.

இனி, மயங்கல் கூடா, என்பதனுனே மயங்குதலும் உண்டு, என்பது பெற்றும். அம் மயக்கம் எழு வகைய என்பது உரையில் கோடும். அவை, திணைமயக்கமும், பால் மயக்கமும், கால மயக்கமும், இட மயக்கமும், செப்பு மயக்கமும், வினு மயக்கமும், மரபு மயக்கமும் என ஏழாம். இவை மயங்கும் எனவே, வழுவாதல் பெற்றும்.

உண்டான் அது, உண்டான் அவை, உண்டாள் அது, உண்டாள் அவை, உண்டார் அது, உண்டார் அவை, உண்டது அவன், உண்டன அவன், உண்டது அவள், உண்டன அவள், உண்டது அவர், உண்டன அவர்: இவை திணை வழு.

உண்டான் அவள், உண்டான் அவர், உண்டாள் அவன், உண்டாள் அவர், உண்டார் அவன், உண்டார் அவள், உண்டது அவை, உண்டன அது: இவை பால் வழு. இவை வினை நின்று பெயர்மேல் வழிஇயின.

அவன் வந்தது, அவன் வந்தன, அவள் வந்தது, அவள் வந்தன, அவர் வந்தது, அவர் வந்தன; அது வந்தான், அவை வந்தான், அது வந்தாள், அவை வந்தாள், அது வந்தார், அவை வந்தார்: இவை திணை வழு. அவன் வந்தாள், அவன் வந்தார்,

அவள் வந்தான், அவள் வந்தார், அவர் வந்தான், அவர் வந்தாள், அது வந்தன, அவை வந்தது: இவை பால் வழு. இவை பெயர் நின்று வினைமேல் வழீஇயின.

செத்தானைச் சாம் என்றல் கால வழு. யான் உண்டான், யான் உண்டாய் என்றாற் போல்வன இட வழு.

இவை பெயர், வினைகளைப் பற்றி வரும் விகற்பமும் கொள்க.

யானை மேய்ப்பானை இடையன் என்றலும், யாடு மேய்ப்பானைப் பாகன் என்றலும் மரபு வழு.

செப்பும் வினாவும் வழுவாமையும், வழுவுமாறும் மேலே கூறுப. வினை யியலுள் கடைக்கண் கால வழு வமைதியும் மர பியலுள் மரபு வழுவ மைதியும் கூறி, ஏனைய வழீஇ அமையு மாறு இவ் வோத்தினுள் கூறுப.

கல்:

என் னுதலிற்றோ வெனின், வழுக் காத்த னுதலிற்று.

வழுக் காக்குமிடத்து வழுவற்க வென்று காத்தலும், வழு வமைக வென்று காத்தலு மென விரண்டாம். அவற்றுள், இது வழுவற்க வென்று காத்தது.

**பொருள் :** வினைச்சொல்லா னடங்கும் பா லறியப்படும் பொருளும், பெயர்ச் சொல்லா னடங்கும் பா லறியப்படும் பொருளும் [1]என விவ் விருவகைப் பொருளும் ஒன்றோ டொன்றை மயங்கச் சொல்லுதல் பொருந்தா; தத்தம் இலக்கணத் தானே சொல்லுத லுடைய, வென்றவாறு.

உதாகரணம் :- உண்டான் அவன், உண்டாள் அவள், உண்டனர் அவர், உண்டது அது, உண்டன அவை எனவரும்: இவை வினை.

அவன் உண்டான், அவள் உண்டாள், அவர் உண்டார், அது உண்டது, அவை உண்டன எனவரும்: இவை பெயர். பா லறி கிளவி என்றதனை ஈண்டும் பொருண்மேற் கொள்க.

---

1. (என)

அவ்வாறு பொருண்மேற் கொள்ளவே பொருட் பற்றி நிகழும் வழூவெல்லாம் படாமற் கூறுக வென்பதாம். அவ் வழூக் க[1]ளுடைய பெயரும் முறையுந் தொகையும் ஓரிடத்துங் கூறிற் றிலரே யாயினும் [2]உரையிற் கோட லென்பதனான் இச் சூத் திரத் துரையுட் கொள்ளப்படும்.

அவையாவன :- திணை வழூஉ, பால் வழூஉ, இட வழூஉ, கால வழூஉ, மரபு வழூஉ, செப்பு வழூஉ, வினு வழூஉ வென விவையாம்.

இவை யெல்லாம் மரபு வழு வென வொன்றே யாகற்பால வெனின், அவ்வா றொன்றாய் அடங்குமே யெனினும் அம் மர பினைப் பகுத்து, திணை பற்றிய மரபினைத் திணை யென்றும், பால் பற்றிய மரபினைப் பா லென்றும், இடம் பற்றிய மரபினை இட மென்றும், காலம் பற்றிய மரபினைக் கால மென்றும், செப்பு பற்றிய மரபினைச் செப் பென்றும் வினு பற்றிய மரபினை வினு வென்றும் பகுத்து, இவ்வா றொன்றனையும் பற்றாது வருவதனை மர பென வொன்றாக்கி இலக்கணமும் வழூஉவுங் கூறினு ரென் பது.

அவற்றுட் டிணை வழூஉ உயர்திணைப் பால் மூன்றும் அஃ றிணைப் பா லிரண்டனோடு மயங்கி உயர்திணை வழூஉ மூவிரண் டாறும். இனி, அஃறிணைப் பா லிரண்டும் உயர்திணைப் பால் மூன்றனோடு மயங்கி அஃறிணைத் திணை வழூஉ இரு மூன் றாறும். இவை, பெயர், வினை யென்னும் இரண்டனோ டுறழ இருபத்து நான் காம்.

உதாகரணம் :- அவன் வந்தது, அவன் வந்தன, என்றாற் போல்[3]வன பெயர் பற்றிய உயர்திணைத் திணைவழூஉ. அது வந்தான், அது வந்தாள், அது வந்தார் என்றாற் போல்வன பெயர் பற்றிய[4] வஃறிணைத் திணை வழூஉ.

இனி, வந்தா னது, வந்தா னவை என்றாற் போல்வன வினை பற்றிய உயர்திணைத் திணை வழூஉ. உண்ட தவன், உண்ட தவள்; உண்ட தவர் என்றாற் போல்வன வினைபற்றிய வஃ றிணைத் திணை வழூஉ.

---

1. ளுடைய (திருத்தம்) 2. [ற] (ர) 3. [ப] (வ) ன 4. [ய] (வ)

இனிப் பெயரொடு பெயர் பற்றிய திணை வழூஉ, வினையொடு வினை பற்றிய திணை வழூஉ என விகற்பிக்க பலவு மாம். அவ னது, அவ னவை என்றாற் போல்வன பெயரொடு பெயர் பற்றிய திணை வழூஉ.

உண்டான் நின்[1]றான் ஓடினான் சாத்தன் என வொருவன் மேற் பல வினை கூறுகின்றுழி உண்டான் *நின்றான் [2]ஓடினான் பாடினான், என்றாற்போல்வன வினையொடு வினைபற்றிய திணை வழூஉ.

இனி பால் வழூஉ: உயர்திணைப் பான் மூன்றும் ஒன் றிரண் டனோடு மயங்கி மூவிரண் டாரும். அஃறிணைப் பா லிரண்டும் ஒன்ற[3]னோடொன்று மயங்கி ஓ ரிரண் டாயின. ஆகப் பால் வழூஉ எட்டு வகைப்படும். அவை வினை, பெய ரென்னு மிரண்ட னோ டுறழப் பதினா றாம்,

உதாகரணம்: அவன் உண்டாள், அவன் உண்டார் என்பன உயர்திணைப் பெயர் பற்றிய பால் வழூஉ. அது வந்தன, அவை வந்தது என்பன அஃறிணைப் பெயர் பற்றிய பால் வழூஉ. உண்டான் அவள், உண்டான் அவர் என்பன உயர்திணை வினைபற்றிய பால் வழூஉ. வந்தது அவை, வந்தன அது என்பன அஃறிணை வினைபற்றிய பால் வழூஉ.

இனி பெயரொடு பெயரும் வினையொடு வினையும் பற்றி வழு வாவனவும் உள.

அவன் யாவள், அது யாவை, என விவை பெயரொடு பெயர் பற்றிய பால் வழூஉ. உண்டான், நின்றாள், ஓடினான், பாடினாள் சாத்தன், எனவும், உண்டது, தின்றன, வந்தது, கிடந்தன வோர் எருது, எனவும் இவை வினையொடு வினை பற்றிய பால் வழூஉ.

இனி இட வழூஉ, தன்மை முன்னிலை படர்க்கை யென்னு மூன்றும் ஒன் றொன் றிரண்டனோடு மயங்கி மூவிரண் டாரும்

உதாகரணம்: யான் உண்டா[4]ய், யான் உண்டான் என்பன பெயர் வினைகளைப் பற்றி வரும் விகற்பம் இவற்றிற்கு மொக்கும் என உணர்க.

---

1. [ற வொட்டி] (ளன்) (ஓ)டினான்) 2. [வோ] (ஓ) டினான்.
3. [ட்](ெ) 4. [ய] (ய்) * நின்ற. (நின்றான்-திருத்தம்)

கால வழூஉ இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற மூன்றும் ஒன் றிரண்டனோடு மயங்கி மூவிரண் டாரும்.

உ-ம்: செத்தானை[1]ச் சாகின்றான் எனவும், சாவான் எனவும் கூறினாற் போல வருவன. இவையிற்றிற்கும் பெயர் வினைகளைப் பற்றி வரும் விகற்பங் கொள்க.

மரபு வழூஉ ஒரு பொருட் குரிய மரபினை ஒரு பொருட் குரித்தாகச் சொல்லுத லாம்.

உ-ம்: யானை மேய்ப்பானை இடையனென்றும், ஆடு மேய்ப்பானை[2]ப் பாகனென்றும், யானையுட் பெண்ணை ஆவென்றும், ஆவினுட் பெண்ணைப் பிடி யென்றும் கூறினாற் போல்வன.

செப்பு வழுவிற்கும், வினு வழுவிற்கும், உதாகரணம் மேல் வருகின்ற "செப்பும் வினுவும்" என்னுஞ் சூத்திரத்தாற் கொள்ளப்படும்.

எழு வகை வழுவும் இச் சூத்திரத்துண் மயங்கல் கூடா வென்றதனாற் பெறுது மெனின் மேற் "செப்பும் வினுவும் வழாஅ லோம்பல்" எனச் செப்பு வழுவும் வினு வழுவுங் கூற லமையா தெனின், இதனு ளடங்கினவற்றையே உலகத்துச் சொல்லாம் உயர்திணைச் சொல் அஃறிணைச் சொல் என வரையறுத்தாற்போல் வினு வுரையுஞ் செப் புரையு மென இரண்டாக வரையறைப் படுத்தோர் நிலைமை கண்டதனை யுணர்த்துதற் பொருட்டு மீண்டும் விளங்கக் கூறினா ரென்று சொல்லுப. எழுவகை வழுவிற்கும் இஃதோர் பொது விதி கூறிய தெனவுஞ் சிறப்பு விதி வேறு வேறு கூறிற் றெனவும் உரைக்கப்படும்.

செப்பு, வினு வொழிந்த வற்றிற்குச் சிறப்பு விதி யாதோ வெனின், வினையியலுட் கடைக்கட் கால வழுவிற்கு விதி பெற்றும், மரபு வழுவிற்கு விதி பொருளதிகாரத்து மரபிய லென்னும் ஒத்தினிடையுங் கண்டு கொள்ளப் பெறுதும்.

ஒழிந்த திணை பா விடங்கட்கு விதி 'னஃகா னொற்று' முதலிய சூத்திரங்களாற் கூறிற் றென வுணர்க. இவ்வாறு நூனயமாதல் இச் சூத்திரத் துரையினுட் கண்டு கொள்க.

1. (ச்) 2 (ப்) 3. (ன)

இவ் வதிகாரத்துக் கூறப்படும் விதி, மாணுக்கன் ஒரு பொருளைக் கூறுந் திற னறியாது இடர்ப்[1]படுத ஞேக்கி இன்ன பொருளை இன்னவாறு கூறுகவென் றத னிலக்கணங் கூறுதலும், அதனை யவ்வா ெருழியவுங் கூறுதலும், என்று கருதினுங் கருதற்கவென் றதனை வழுவற்கவென்று காத்தலும், அவ்வாறு வழுப்படக் கூறிய வழக்கினுட் சிலவற்றை யத னகத் தவ்வா றதற்கோர் பொருட் காரணங் கண்டாதல், அதுவன்றிப் பலரும் பயில வழங்குதல் கண்டாதல், அமைதி கூறுதலுமென மூவகை. அவற்றுள், இச் சூத்திரம் வழுவற்க வென்னும் விதி கூறிற் றென வுணர்க.

அரசு :

என்பது வினையினுற் பா லறியப்படும் பொருளும் பெயரி னுற் பா லறியப்படும் பொருளு மயங்குதலைப் பொருந்தா. அவை தத்த மிலக்கணத்தன வாயே வரும்.

உதா : உண்டா னவன், உண்டா ளவள், உண்டா ரவர், உண்ட ததுு, உண்டன வவை என விவை வினை நிற்பப் பெயர் மேற் றத்த மரபினுன் வந்தன. அவ னுண்டான், அவ ளுண்டாள், அவ ருண்டார், அது வுண்டது, அவை யுண்டன வென விவைப் பெயர் நிற்ப வினைமேற் றத்த மரபினுன் வந்தன. இனி மயங்கல் கூடா வெனவே அவற்று மயக்க முண் டென்பது சொல்லப்பட்ட தாம். அம் மயக்க மெழு வகைப்படும். அவை யாவன: திணை மயங்கி வந்துழி வழு வென் றுணர்க.

12. ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி
ஆண்மை யறிசொற் காகிட னின்றே

இளம் :

இச் சூத்திரம் என்னுதலிற்ருே வெனின், எய்தியது விலக் குதல் நுதலிற்று.

உரை : ஆண்மையிற் றிரிந்து பெண்மை நோக்கி நின்ற பெயர்ப் பொருள் ஆண்மகனை யறிவிக்கும் ஈற் றெழுத்தினல் சொலற்பாட்டிற்கு ஏலாது என்றவாறு; ஒழிந்த இரண்டு பெயர்க்கும் ஒக்கும் என்ப தாம்.

1. படு [த்] (த) ஞேக்கி

'ஆகிட னின்றே' என்பதனாற் சிறுபான்மை, 'பேடி வந்தான்' எனவும் ஆண்பாற்கும் ஒக்கும்.

தெய்வ :

ஐயம் அறுத்தலை நுதலிற்று.

இ—ள் : மேல், 'உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்' (சூ. 4.) என்று ஓதப்பட்ட பேடி யென்னும் பெயர்க்கண் நிற்கும் சொல் ஆண்மை யறி சொற்கு ஆகும் இடன் இலது, எ—று. எனவே, பெண்மை யறி சொற்கு ஆகும், என்றவாறும்.

உ—ம். 'பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ கண்ணவாத் தக்க கலம்' (நாலடி 251) என வரும்.

ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி பெண்மை யறி சொற்கு ஆகு மிடனின்றீ என எதிர் மறை வாய்பாட்டாற் கூறினமை யாற் சிறுபான்மை ஆடூஉ வறி சொல்லால் வருவன உளவேற் கொள்க.

இச் சூத்திரம் பெண்மை சுட்டிய என்னுஞ் சூத்திரத்தின் (சூ. 4) பின் வையாது, ஈண்டுக் கூறியது என்னை யெனின், பெயரும் வினையும் மயங்காமற் கூறுக என்றா ராகலிற் பேடி யென்பது இவ்வாறு சொல்லத்தகும் என இறந்தது காத்து ஓதப்பட்டது.

சேன :

இதன் பொருள் : 'உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்' (சொல் — 4) என்று மேற் கூறப்பட்ட ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவி ஆடூஉ வறி சொல்லோடு புணர்தற்குப் பொருந்தும் இடனுடைத் தன்று, என்றவாறு.

ஆண்மை யறி சொற் காகிட னின்று, என்ற விலக்கு ஆண்மை யறி சொல்லோடு புணர்த லெய்தி நின்ற பேடிக் கல்ல தேலாமையின் அவிமேற் செல்லா தென்க.

இச் சூத்திரத்தைப் 'பெண்மை சுட்டிய' என்னுஞ் சூத்திரத்தின் பின் வையாது ஈண்டு வைத்தார், இது வழுவற்க வென்கின்ற தாகலான்.

நச்சி :

இதுவும் அது.

இ-ள் : ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும்,

உயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும் (கி. ஆ. சூ. 4) என மேற்கூறிய ஆண்மை திரிந்த பெயர்ச் சொல், ஆண்மை அறி சொற்கு ஆகு இடன் இன்று — ஆடூஉ அறி சொல்லோடு பொருந்தும் இடன் உடைத்தன்று. (எ-று)

இது, 'வழுவற்க' என்கின்றது ஆதலின் ஈண்டுப் போதந் துரைத்தார்.

கல் :

என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்கிப் பிறிது விதி யுணர்த்துதல் நுதலிற்று.

பொருள்: மேற் [1]பெண்மை சுட்டிய வென்றதனுட் பேடியை முப் பாலானுஞ் சொல்லுக வென்னும் விதியுள் ஒரு கூற்றை விலக்கிய தென வுணர்க.

உயர்திணை யிடத்துப் பெண்மையைக் கருத வேண்டி யாண்மை தன்மை நீங்கிய பேடி யென்னும் பெயராற் சொல் லப்படும் பொருண்மையான மகனை யறியுஞ் சொல்லாற் சொல்லுதற் காமிடன் இல்லை, என்றவாறு. எனவே பெண் பாலானும் பன்மைப் பாலானுஞ் சொல்லுக வென்றவாறு.

(உ-ம்) பேடி வந்தாள், பேடிய(ர்) வந்தார் என வீவை. இடனென்ற மிகுதியாற் பேடி வந்தான் என்ப[2]துஞ் சிறு பான்மை அமையு மென்பது. அவ்வா றமையு மென விலக்கிப் பெற்றது என்னை யெனின் பெரும்பான்மை சிறுபான்மை யுணர்த்துத லென வுணர்க.

இதனைப் 'பெண்மை சுட்டிய' என்றதன் பின் வையாது இத்துணையும் போதந்து மேற் கூறப்படுகின்ற வழு வமைதிக ளோடு சொல் வைத்த முறையன்றிக் கூ[3]றினுற் பெண்ணு மாணு மல்லாததனை அவ்வப் பாற் சொல்லாற் சொல்லுதலும் வழு வமைதி யென்பது பெறப்பட்டது.

1. (ெ)ப[ன்](ண்)மை 2. [து](தூஉ)ஞ் 3. கூ[றி]ற்றின[ர்]ற்

வழு வமைதிக டாம் இலக்கண முள்வழிக் கூறும் வழு வமைதியும், இலக்கண மில்வழிக் கூறும் வழு வமைதியு மென விரு வகைப்படும். அவற்றுள் இஃ திலக்கண மில்வழிக் கூறிய வழு வமைதி யென வுணர்க. இது பால் பற்றிப் பிறந்த தோர் மரபு வழு வமைதி யென்க.

அரசு :

என்பது ஆண்மையிற் றிரிந்து பெண்மை நோக்கி நின்ற பெயர்ப் பொரு ளாண்மைகளை யறிவிக்கு மீற் றெழுத்தினாற் சொல்லுதற் கேலா தாம். எனவே பெண்பாலானும் பன்மைப் பாலானுஞ் சொல்லுக வென்ப தாம்.

உதா : பேடி வந்தாள், பேடியர் வந்தா ரென வரும். ஆகிட னின்றே யென்றமையாற் சிறு பான்மை, பேடி வந்தா னென வாண்பாலுங் கொள்க.

13. செப்பும் வினாவும் வழாஅ லோம்பல்.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், செப்பு வழுவும் வினா வழுவும் காத்தல் நுதலிற்று.

உரை : செப்பும் வினாவும் வழாஅல் ஓம்பல் என்பது — செப்பினையும் வினாவினையும் இழுக்குதலைப் போற்றுக, என்ற வாறு.

அவை வழுவாது வருமாறு: நுங் நா டியாது ? என்றால், தமிழ் நாடு, என்றல்.

இச் செப்புத்தான் ஆறு வகைப்படும்: வினா வெதிர் வினாதலும், ஏவுதலும், மறுத்தலும், உற்றது உரைத்தலும், உறுவது கூறலும், உடம்படுதலும் என.

அவற்றுள் மறுத்தலும், உடம்படுதலுமே ஈண்டுச் செப் பிலக்கண மாவன; ஒழிந்தனவற்றை முன்னமைத்துக் கூறுக, என்றவாறு.

வினு ஐந்து வகைப்படும்: அறியான் வினுதல், அறிவொப்புக் காண்டல், ஐய மறுத்தல், அவ னறிவு தான் கோடல், மெய்யவற்குக் காட்டல் என. அவை வழுவாமற் சொல்லுக எனவே வழுவுதலும் உண் டென்ப தாம்.

அவை வருமாறு: கருவூர்க்கு வழி யெது? என்ருற்குப் பரு நூல் பன்னிரு தொடி, என்பது செப்பு வழூஉ. ஒரு விரல் காட்டி, நெடிதோ? குறிதோ? என்பது வினு வழூஉ. இதுவும் ஒரு சொற் ருெகை யுணர்த்தியவாறு.

**தெய்வ:**

இதுவும் வழுப்படாமற் கூறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: செப்பினையும் வினுவினையும் வழுவாமற் கூறுக எ-று.

உலகத்துப் பொரு ளுணர்த்துஞ் சொல்லெல்லாம் வினுவும் செப்பும் ஆகிய பொருண்மேல் நிகழ்தலின், அவை வழுவாமற் கூறல் வேண்டும், என்றவா ருயிற்று.

எனவே வழு ஏழு வகையாம் என்பது பெற்ரும். செப்பு வருமாறு:— அச் செப்பு நான்கு வகைப்படும்: துணிந்து கூறல், கூறிட்டு மொழிதல், வினுவி விடுத்தல், வாய்வாளா திருத்தல் என. துணிந்து கூறலாவது:- தோன்றியது கெடுமோ? என்றவழி, கெடும், என்றல். கூறிட்டு மொழிதலாவது:- செத்தவன் பிறப்பானே? என்றவழி, பற்றறத் துறந்தானே, பிறனே? என்றல். வினுவி விடுத்தல் என்பது முட்டை முத்ததோ, பனை மூத்ததோ? என்றவழி, எம் முட்டைக்கு எப் பனை? என்றல். வாய்வாளாமையாவது:- ஆகாயப் பூ நன்ரே, தீதோ? என்ருர்க்கு உரையாடாமை. (மணி 30: 235 — 249 பார்க்க)

இனி, அவற்றுள் வினு வழுவாவது வினுவிய சொல்லாற் பயனின்றி நிற்பது. அஃது ஒரு விரல் காட்டி நெடிதோ, குறிதோ என்றலும், ஆகாயப் பூ நன்ரே, தீதோ என்றலும்.

செப்பு வழுவாது:- துணிந்து கூறும்வழித் தோன்றியது கெடுமோ என்ருர்க்குக் கெடா தென்றலும், ஒலி செவிக்குப் புல

னன்று, என்றலும், என் தாய் மலடி, என்றலும், பிறவும் இந் நிகர னவும். இனிக் கூறிட்டு மொழிய வேண்டும்வழியும் வினுவி விடுக்க வேண்டும்வழியும், வாளா திருக்க வேண்டும்வழியும் துணிந்து கூறின் வழூவாம். வினு வின்றியும் வருதலிற் செப்பு முற் கூறப்பட்டது. அது, யான் குமரி யாடிப் போந்தேன், ஒரு பிடி சோறு தம்மின், என வரும்.

சேனு :

இதன் பொருள் : செப்பினையும் வினுவினையும் வழூவாமற் போற்றுக என்றவாறு.

செப் பென்பது வினய பொருளை யறிவுறுப்பது. அஃ திரண்டு வகைப்படும், செவ்வ னிறையும், இறை பயப்பது மென. உயி ரெத்தன்மைத்து என்று வினயவழி உணர்தற் றன்மைத்து, என்றல் செவ்வ னிறையாம். உண்டியோ, என்று வினயவழி, வயிறு குத்திற் றென்றல், உண்ணே னென்பது பயந் தமையின் இறை பயப்பதாம்.

கருவூர்க்குச் செல்லாயோ சாத்தா வெனப். பரு நூல் பன்னிரு தொடி, என்பது செப்பு வழூவாம். சொல் எப்பொரு ளுணர்த்து மென்று வினய வழிச் சொல் ஒரு பொருளு முணர்த்தா தென்பது மது, வினய் பொருளை வினுவா லுணர்ந்து வினய பொருளையன்றித் தான் குறித்த பொருளைச் செப்பா லுணர்த்துகின்ற ருகவி னென்பது.

வினு வின்றியுஞ் செப்பு நிகழ்தலின் வினய பொருளை பெனல் வேண்டா வெனின், வினய பொருளை யென்றது அறி வுறுப்பது செப்பெனின், அறியலுறவினை யறிவுறுத்தலின் வினுவுஞ் செப்பா யடங்குதலானும், செப்பென்பது உத்தர மென்பதனே டொரு பொருட் கிளவி யாகலானும், வினய பொருளை யறிவுறுத்தலே இலக்கணமா மென்பது. குமரி யாடிப் போந்தேன், சோறு தம்மின், என வினு வின்றி நிகழ்ந்த சொல் யாண் டடங்கு மெனின், அறியலுறுதலை யுணர்த்தாது ஒன் றனை யறிவுறுத்து நிற்றலிற் செப்பின்பாற் படும்.

வினு வெதிர் வினுதல், ஏவல், மறுத்தல், உற்ற துரைத்தல், உறுவது கூறல், உடம்படுத லெனச் செப்பு அறு வகைப்படு மென்று உரையாசிரியர் கூறினுரா லெனின், உயி ரெத் தன்மைத்

தென்றவழி, உணர்தற் றன்மைத்து, என்றன் முதலாயின அவற்று ளடங்காமையானும், மறுத்தலும் உடம்படுதலும் வினவப்பட்டார்க்கண் ணன்றி ஏவப்பட்டார்க்கண்ண வாக லானும் அறுவகைப்படு மென்று பிறர்மத மேற்கொண்டு கூறினு ரென்பது.

வினவாவது அறியலுறவு வெளிப்படுப்பது. அது மூ வகைப்படும்: அறியான் வினவும், ஐய வினவும், அறிபொருள் வினவு மென. அறியான் வினு, உயி ரெத் தன்மைத் தென்பது. ஒரு புடையானு மறியப்படாமை நோக்கி அறியான் வினவா யிற்று. ஐய வினு, குற்றியோ மகனே தோன்றுகின்ற வுரு வென்பது. அறி பொருள் வினு, அறியப்பட்ட பொருளையே ஒரு பயனேக்கி அவ் வாய்ப்பாட்டி னென்ருன் வினவுவது. பயன் வே றறிதலும் அறிவுறுத்தலு முதலாயின. கறக்கின்ற வெருமை பாலோ, சினையோ, வென்பது வினு வழுவாம். ஒரு பொருள் காட்டி, இது நெடிதோ குறிதோ, என்பது மது.

உரையாசிரியர் அறிபொருள் வினவை அறி வொப்புக் காண்டலும், அவ னறிவு தான் காண்டலும், மெய் யவற்குக் காட்டலும் என விரித்து, ஏனைய கூட்டி ஐந் தென்ருர்.

இருவகைச் செப்பினும், மூவகை வின்வினும், செவ்வ னிறையும், அறியான் வினவும், ஐய வினவும் வழா நிலை யாகலின் வழாஅ லோம்ப லென்பதனுற் கொள்ளப்படும்; ஏனைய வழு வமைப்புழிக் காணப்படும். வினு வழீஇயின விடத்து அமை யா தென்று உரை யாசிரியர் கூறினரா லெனின், அற்றன்று;

'யாதென வருஉம் வினவின் கிளவி' (சொல். 32)
எனவும்,

வன்புற வருஉம் வினவுடை வினைச்சொல் (சொல். 244)
எனவும் முன்னர் வழு வமைப்ப ராகலான், அது போலியுரை யென்க.

**நச்சி:**

**இ-ள்:** செப்பும் வினவும் — வினய பொருளை அறிவுறுப் பதனையும் அறியலுறவு வெளிப்படுப்பதனையும், வழாஅல் ஓம்பல் — வழுவாமல் போற்றுக, (எ—று).

செவ்வன் இறையும், இறை பயப்பதுவும் எனச் செப்பு இரு வகைத்து. அவற்றுள் இறை பயப்பன தாம் வினவெதிர் வினவலும், ஏவுதலும், மறுத்தலும், உற்றது உரைத்தலும்; உறுவது கூறலும், உடம்படுதலும், சொல் தொகுத்து இறுத்தலும், சொல்லாது இறுத்தலும் என எண்வகை. உயிர் எத்தன்மைத்து? என்று வினயவழி, 'உணர்தல் தன்மைத்து', என்றல் செவ்வன் இறையாம். உண்டியோ? என்று வினய வழி, வயிறு குத்திற்று, என்றலும், உற்றது உரைத்தலாய் 'உண்ணேன்' என்பது பயத்தலின் இறை பயப்பதாம். 'கடம் பூர்க்கு வழி யாதோ? எனில், இடம் பூணி என் ஆவின் கன்று. என்றல் செப்பு வழுவாம்.

அறியான் வினவும், ஐய வினவும், அறி பொருள் வினவும் என வின மூவகைத்து. உயிர் எத் தன்மைத்து? என்றல் அறி யான் வின. ஒரு வாற்றானும் அறியப்படாத பொருள் வினவப் படாமையின், பொது வகையான் உணர்ந்து, சிறப்பு வகை யான் அறியாமையின் வினவினன் என்று உணர்க. குற்றியோ மகனே தோன்றுகின்ற உரு? என்பது ஐய வின. அறியப் பட்ட பொருளை வேறு அறிதலும் அறிவுறுத்தலும் முதலிய பயன் நோக்கி வினுதல் அறிபொருள் வின. இவ் வறி பொருள் வினவின்கண்ணே அறிவு ஒப்புக் காண்டலும், அவன் அறிவு தான் காண்டலும், மெய் அவற்குக் காட்டலும் அடங்கின.

ஒரு விரல் காட்டி, நெடிதோ, குறிதோ? என்றலும், கறக் கின்ற எருமை சினையோ, பாலோ? என்றலும் பிறவும் வின வழுவாம்.

செப்பு ஆசிரியன்கண்ணது ஆகலானும், வின இன்றியும் செப்பு நிகழ்தலானும் செப்பு முற்கூறினர்.

செவ்வன் இறையும், அறியான் வினவும், ஐய வினவும் வழாநிலை ஆதலின், வழாஅல் ஓம்பல் என்பதனல் கொள்க. ஏனைய வழு வமைப்புழிக் காண்க.

கல்:

என் னுதலிற்றோ வெனின், செப்பு வழுவும், வின வழுவுங் காத்தல் நுதலிற்று.

செப்பினையும் வினவினையும் வழுவாமல் ஓம்புக, வென்றது பரிகரித்துக் கூறுக வென்றவாறு.

உதாகரணம் :- சாத்தா சோறுண்ணுயோ வென்ருற்கு உண்பே னென்றலும், உண்ணேன் என்றலு மெனக் கொள்க. செப்பு, வினு வென்னு [1]மவற்றுட் செப்பு மறுத்தலும் உடன்படு தலும் என விரண்டு வகைப்படும். நுங் நாடு யா தென்ருற்கு, பாண்டி [2]நாடு, என்ருற்போல்வன இவ் விரண்டினுள் அடங்கா வெனினும் ஒருவகையான் அடக்கிக் கொள்ளப்படும்.

இனி, வினு வைந்து வகைப்படும்.

அறியான் வினுதல், அறி வொப்புக் காண்டல்[3], ஐய மறுத்தல், [4]அறிவு தான் கோடல், மெய்யவற்குக் காட்டலும் என. ஆங்ஙனம்,

அறியான் வினுதை லறிவொப்புக் காண்ட

லைய மறுத்த லறிவுதான் கோடன்

மெய்யவற்குக் காட்டலோ டைவகை வினுவே,

என்பதுங் கண்டு கொள்க.

என விவை வழாஅ லோம்ப லெனவே, வழுவுதலும் உண் டென்பது பெறப்பட்டது.

அவற்றுள் செப்பு வழூஉ: வினு வெதிர் வினுதலும், ஏவுதலும், உற்ற.துரைத்தலும், உறுவது கூறலும், சொற் ருெருக் கி[5]றுத்தலும், சொல்லா தி[6]றுத்தலும், பி[7]றிதொன்று கூறலும் என எழு வகைப்படும்.

உறுவின்றது கூற லென்னு மொன்றுண்டேல் உற்ற துணர்த்தலுள் அடங்கு மெனக் கொள்க. அவற்றுட், பிறி தொன்று கூறல், அமைபா வழூஉ வெனப்படும். கருவூர்க்கு வழி யா தெனப் பருநூல்ப[8]ன்னிரு தொடி யென்ருற் போல்வன. மற்றைய ஆறும் அமையும் வழு வெனப்படும்.

அவற்றுள், வினு வெதிர் வினுதல், வினுவுஞ் செப்பே, யென் றவழிக் கொள்ளப்படும்.

---

1. [ம்](ம) 2. [ஞ](நா) 3. [லை](ல்)(ஐ) 4. [வன்றி](அறிவு)
5. [கு](று) 6. [கு](று) 7. [சி](ற்) 8. [ன்ணி](ன்னி)

ஏவலும், உற்ற துரைத்தலும், உறுவது கூற லென்னு மூன்றுஞ், 'செப்பே வ[1]ழீஇயினும்' என்புழிக் கொள்ளப்படும்.

சொற் றொகுத் தி[2]றுத்தல் எப்பொருளாயினும் என்புழியும் பொருள் கூறி லென்புழியும் கொள்ளப்படும்.

சொல்லா தி[3]றுத்தலாகிய பெறுமா வுலறி[4]னீரா லென் றாற்கு, வாளாதே யுலறி[5]னேன், என்றாற் போல்வன. அதிகாரப் புற[6]னடை யாகிய செய்யுண் மருங்கி[7]னும் என்புழிக் கொள்ளப் படும்.

வினு வழூஉ தான் வினவுகின்றதனைக் கேட்டான் இறுத்தற் கிடம்படாமல் வினுதலென வொன்றேயாம். உ-ம்: ஒரு விரல் காட்டி, இது நெடிதோ, குறிதோ வென்றாற் போல்வன.

வினுவிற் கமையா வழுவல்லது, அமையு[8]ம் வழூஉ வென்ப தொன்றில்லை. இனி, வழாஅல் என்பது வழுவி யென்னுஞ் செய் [9]தெனெச்சத் தெதிர்மறை யாகிய வழாமல் என்னுஞ் சொ[10]ற் [11]குறைக்கும்வழிக் [12]குறைத்தல் என்பதனுள் இடைநின்ற மகரங் குறைந்து நின்றதென வுணர்க.

செப்பு முற்கூறிய காரணம்: செப்பு ஆசிரியன்கண்ண தாகலானும், வினுவினை யறிவிப்பது செப் பாகலானும், வினு வின்றியும் செப்பு நிகழு மாகலானும், வழூஉப் பன்மை செப்பின் [13]கண்ண தாகலானும் மு[14]ற் கூறப்பட்டது.

வினுவுரையுஞ் செப்ப நிகழ்தலிற் செப்பென வொன்றே யாய் அடங்காதோ வெனின், அங்ஙனம் அடங்கு மாயினும், ஒன்றனை யறியாது கூறல் வினு வென்றும், ஒன்ற[15]னை யறிவித் தற்குக் கூறல் செப் பென்றும் இரண்டாகப் பகுத்[16]து ஆராய்ந் தாரென வுணர்க.

அரசு:

என்பது செப்பினையும் வினுவினையும் வழுவாமற் போற்றிச் சொல்லுக. அவை வருமாறு:- நுங் நா டியா தென்றக்காற் பாண்டி நா டென்பது. இது வினுவானுஞ் சொல்லானும் வழு

1. [ழீயி] (ழீஇ) 2. [ரு] (று) 3. [ரு] (று) 4. [ணீ] (னீ) 5. (னேன்)
6 [ந] (ன) 7. [ஞு] (னு) 8. [மவளூ] (ம் வழூஉ) 9. (தெ) 10. (ற்)
11 [illegible] ற) க் (கும்) வழி 12. கு [ணர்] (றை) 13. [க்] க 14. (ற்)
15. (னைய) 16. து [தா] (ஆ)

வாது வந்தது, வழாஅ லோம்ப லெனவே. செப் பாறு வகைப் படும்: வினு வெதிர் வினுதலும், ஏவலும், மறுத்தலும், உற்ற துரைத்தலும், [1]உறுவது கூறலும், உடம்படுத்தலுமென. அவற் றுள் வினு வெதிர் வினுதலாவது, சாத்தா சோ றுண்ணுயோ வென்று லுண்ணேனே வென்பது; ஏவலாவது, சாத்தா சோ றுண்ணுயோ வென, நீயுண் ணென்பது; மறுத்தலாவது, சாத்தா சோ றுண்ணுயோ வென, உண்ணே னென்பது; உற்ற துரைத்த லாவது, சாத்தா சோறுண்ணுயோ வென, வயிறு குத்து மென் பது; உடம்படுத்த லாவது, சாத்தா சோ றுண்ணுயோ வென உண்பே னென்பது; அவற்றுண் மறுத்தலு முடம்படுத்தலுஞ் செப் பிலக்கணமாகக் கொள்க. வழுவாமற் சொல்லுக வெனவே வழு வாதலு முண்டு. அது வருமாறு:— கருவூர்க்கு வழி யேதோ வெனப் பருநூல் பன்னிரண்டு தொடி, யென்பது; [2]இது வினுவிற் கிறைபட வராமையின் வழு வாயிற்று. இத் தொடக்கத்தன சொல்லற்க. இனி, முன்னை யிலேசினுல் வினு வைந்து வகைப்படும்: அறியான் வினுதல், அறிவொப்பு காண்டல், ஐய மறுத்தல், அவ னறிவுதான் காண்டல், மெய் யவற்குக் காட்டலோ டைந்து. அவற்று ளறியான் வினுதலா வது இச் சூத்திரத்திற்குப் பொரு ளென்னையோ வென்பது. அறிவொப்பு காண்டலாவது இச் சூத்திரத்திற்குப் பொருள் யா னறிந்தாங்கே யறிந்தான் கொல்லோ, என் றறிதற்கு வினுதல். ஐய மறுத்த லாவது, இச் சூத்திரப் பொருள் கேட்டுத் துணியாது நின்று னறிந்தானை வினுவி யறிதல். அவ னறிவு தான் காண்ட லாவது இவ னிச்சூத்திரத்திற்குப் பொருந்துமா றுரைத்தல் காண்ப லென் றவ னுணர்வின் பகுதி தா னுராய் வான் வினுதல். மெய் யவற்குக் காட்ட லாவது இவ னிச் சூத் திரத்தின் பொருளைத் திரியக் கொண்டா னென்பதனைத் தா னறிந்தா னவன் பிழைத் துரைத்தக்கா லப் பிழைப்புத் தெருட் டித் தா னன் குரைப்பான் வினுதல். இவை யைந்தும் வினுவுத லேயாம் இனி வினு வழு வருமாறு: கருவூரோன் காவிரிப்பூம் பட்டினத்திடை யென்னுண் டென்பது, காதமே யறியலுறுவ தெனின், எனைத்துக் காத முண் டென்[3]றற்பாற்று; [4]அவ் விடைப் பொருளை யறியலுறுவ தெனின், [5]என் னுள வென்[6]றற் பாற்று; [7]அவ்வாறு சொல்லாமையின் வழு வாயிற்று. ஆகையா லித் தொடக்கத்தன வினுவற்க.

1. யு 2. வி 3. றபாற்று 4. ய 5. வெ 6. றபாற்று 7. ய

14. வினவுஞ் செப்பே வினவெதிர் வரினே.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், வினவும் இறையாகும் ஓரோவழி யென்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை : வினவுஞ் செப்பே வின வெதிர் வரினே, என்பது – வினவும் இறையாகும் அதற்கு இறைபட வரின், என்றவாறு.

அது, வின வெதிர் வினதல், என்னுங் குற்றப்படாததன் கருத்து.

வரலாறு: சாத்தா வுண்ணுயோ? என்று வினயினுற்கு உடம்படுதல், மறுத்தல் என்றிரண்டினுள் ஒன்று எற்றற்பாலது. உண்ணேனே? என்று வினவினன் வின, உண்ப[1]லென்னும் பொருள்பட்டமையின் வினத்தானுஞ் செப்பு ஆயிற்று.

**தெய்வ :**

செப்பின்கட் கிடந்த தோர் வழு வமைத்தலை நுதலிற்று.

இ–ள் : வினவும் செப் பாம் நிலையைப் பெறும், வினவப்பட்ட சொற்றன்னுனே யெதிர்த்து வருமாயின், எ–று.

உ–ம் :– சாத்தா உண்ணுயோ, என வினயவழி, உண்ணேனே, என்பது, உண்ணேன், உண்பல் எனச் செப்பாது உண்பன் என்னும் பொருள்படச் செப்பினமையான் வழு வமைதி யாயிற்று.

**சேனு :**

இதன் பொருள் : வினய பொருளை ஒருவாற்ருன் அறிவுறுத்து, வினவிற்கு மறுமொழியாய் வரின், வினவுஞ் செப்பாம், என்றவாறு.

சாத்தா உண்டியோ, வென்று வினயவழி, உண்ணேனே வென வரும்; வின வாய்பாட்டான் வந்த தாயினும், உண்பலென்பது கருத்துப் பொருளாகலிற் செப் பெனப்படும். உண்டியோ, வென்று வினயவழி, உண்பல், உண்ணே னென்.

---

1. தெ

றிருது, தா னென்றை வினவுவான் போலக் கூறலின், வழு வமைதி யாயிற்று. இது செப்பு வழு வமைதியேற் 'செப்பே வழீஇயினும்' என்புழி யடங்கு மெனின், ஒன்றன் செப்பு ஒன்றற் காவதன்றி வினச் செப் பாயினமையின் வேறு கூறினர்.

நச்சி :

இது வழு வமைக்கின்றது.

இ-ள் :- வின எதிர் வரின் — வினப் பொருளை ஒருவாற் றான் அறிவுறுத்து வினவிற்கு மறுமொழியாய் வரின்; வினவும் செப்பு — வினத்தானும் செப்பாம், (எ–று)

'சாத்தா உண்டியோ ? ஏன்று வினய வழி, உண்ணேனோ? என வரும் வின, வின வாய்பாட்டால் வந்ததேனும் உண்பேன் என்னும் பொருள்பட வருதலின் செப்பு ஆயிற்று. இது வின வெதிர் வினதல்.

கல் :

என் நுதலிற்றோ வெனின், செப்பு வழு வமைதி கூறுதல் நுதலிற்று.

பொருள் : வின வென்று சொல்லப்படுவதும் ஓரோவழி செப் பென்று சொல்லப்படும். ஒருவன் ஒன்றனை வினவத் தானும் அதற் கெதி[1]ரொன்றனை வினவி இறைப் பொருள்படுத் துமே யெனின், [2]சாத்தா! சோறுண்ணுயோ வென்[3]றாற்கு, உண் ணேனோ வென்பது. இது வின வெதிர் வினத வென்னும் வழு வமைதி யன்றோ வெனின், வினவே யெனினும் பிறி தோர் வின வந்து வினப் பொருட் பயவாது செப்புப் [4]பொருள் பயப்ப நிற்றலிற் செப்பு வழு வமைதி [5]யென வடக்கினர்.

அரசு :

என்பது வினவுஞ் செப் பாகும் அதற் கிறைபட வரின்.

உதா :– சாத்தா கருவூர்க்குச் செல்வாயோ வென்று வின வினற்குச் செல்லேனோ வென்று வினவவே, செல்லே னென்னும் பொருள்பட்டமையின் வழுவே யாயினுஞ் செப் பாயிற்று. இது வழு வமைதி.

1. செ[ரு](ரா) 2. [று](து) சாத்தா 3. ஞ(ற்)கு 4. பொரு[ள்](ட்) 5. வெ[ன்று](ன)

15. செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே
அப்பொருள் புணர்ந்த கிளவி யான.

இளம் :

இச்சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், இதுவும் அவ்வழி யமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே, என்பது — செப்புத்தான் வழீஇயின விடத்தும் வரைந்து மாற்றப்படாது, என்றவாறு; ஏகாரம் பிரிநிலை யேகாரம். வழீஇயினும் என்ற உம்மை சிறப் பும்மை. எனவே, வினா வழீஇயினவிடத்து அமையாது, என்பது. அப் பொருள் புணர்ந்த கிளவி யான, என்பது — அப் பொருட்கு இயைபுபட வரின், என்றவாறு.

அவ்வாறு வழீஇ யமையுஞ் செப்பாவன: உற்றது உரைத்தலும், உறுவதும் கூறலும், ஏவுதலும் என இவை.

அவற்றுள், உற்றது உரைத்தல் என்பது: சாத்தா உறையூர்க்குச் செல்லாயோ ? எனின், கான் முட் குத்திற்று; தலை நோகின்றது, என்பது. இனி, உறுவது கூறல் என்பது: சாத்தா உறையூர்க்குச் செல்லாயோ? எனின், கடமுடையார் வளைப்பர்; பகைவர் எறிவர், என்பது. இனி, ஏவுதல் என்பது: சாத்தா, உறையூர்க்குச் செல்லாயோ ? எனின், நீ செல், என்பது.

இவை மூன்றும் வழீஇ யமைவன; வழூஉவே யெனினும் அப் பொருள்பட வந்தமையின் அமைக, என்பது; மற்றுள்ளனவும் மேலே யடங்கின.

தெய்வ :

இதுவும் அது.

இ—ள் :- செப்பு வழீஇயினும் நீக்கப்படாது, அச் செப்புதற்குப் பொருண்மையைப் பொருந்திய சொல்லின்கண், எ—று.

ஏகாரம் சிறப்புப் பற்றி வந்தது, அதிகாரப் புற நடையாற் கொள்ளப்படும்.

உ-ம் :- உண்ணுயோ சாத்தா, என்றவழி, நீ யுண், எனவும், வயிறு குத்திற்று, வயிறு குத்தும், எனவும் இவ்வாறு வருவன. இவையும், உண்ணேன், உண்பல் என வாராமல், உண்ணேன் என்னும் பொருள்பட வருதலின் வழு வமைதி யாயின.

சேனா :

இதன் பொருள்: செவ்வ னிறை யாகாது செப்பு வழுவி வரினுங் கடியப்படாது. ஒருவாற்ரான் வினைய பொருட்கு இயைபுபட்ட கிளவி யாதற்கண், என்றவாறு.

சாத்தா உண்டியோ, வென்று வினயவழி, நீ யுண் ணென்றும், வயிறு குத்து மென்றும், பசித்தே னென்றும், பொழு தாயிற் றென்றும் வரும்: இவை செவ்வ னிறை யல்லவேனும், வினய பொருளை ஒருவாற்ரா னறிவுறுத்தலின், அமைந்தவாறு கண்டு கொள்க. அஃதேல் இவை,

தெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற்றோன்றலும் (சொல்-157) என்புழிக் குறிப்பிற் றோன்றலா யடங்கு மாகலின், ஈண்டுக் கூறல் வேண்டா வெனின், அவ்வா றடங்கு மாயினும்,

'செப்பும் வினவும் வழாஅ லோம்பல்' (சொல்-13) என்றதனான் இவை யெல்லாம் வழு வாத லெய்திற்று. அதனை னமைக்கல் வேண்டு மென்பது.

நச்சி :

இதுவும் அது.

இ-ள் :- செப்பே வழிஇயினும் வரை நிலை இன்று — செவ்வன் இறை ஆகாது செப்பு வழுவி வரினும் கடியப்படாது, அப் பொருள் புணர்ந்த கிளவி யான — ஒருவாற்ரான் அவ் வினய பொருட்கு இயைபுபட்ட கிளவி யாதற்கண், (எ-று)

சாத்தா உண்டியோ, என்று வினயவழி, வயிறு குத்திற்று என, உற்றது உரைத்தலும், வயிறு குத்துகின்றது, என மறுத்தலும், நீ உண், என ஏவுதலும், வயிறு குத்தும், என உறுவது கூறலும், பசித்தேன், என்றும், பொழுது ஆயிற்று, என்றும், உடம்படுதலும் ஒருவாற்ரான் வினய பொருளை அறிவுறுத்தன. குமரி ஆடிப் போந்தேன்; ஒரு பிடி சோறு தம்மின், என்பது சொல்லாது இறுத்தல், சொல் தொகுத்து இறுத்தல்

எப் பொருளாயினும் (கி. ஆ. 35)

என்புழியும்,

அப்பொருள் கூறின் (கி. ஆ. 36) என்புழியும் கூறுப.

செப்பே, என நின்ற ஏகாரம் பிரிநிலை ஏகாரம்: வினா நிற்பச் செப்பை வாங்கிக் கொண்டு அமைத்தலின் உம்மை, சிறப் பும்மை. செப்பு வழுவினும் அமைக; வினா வழீஇயின விடத்து அமை யாதாம்.

கல்[*]:

என் னுதலிற்றோ வெனின், இதுவுஞ் செப்பு வழு வமைதி யாமா றுணர்த்துத னுதலிற்று, என்பது.

பொருள் :– செப் பென்று சொல்லப்பட்டது, வழுவி வரினும் வரைந்து மாற்றப்படாது; எவ்விடத் தெனின், வினாப் பொருண்மையோடு பொருந்திய சொல்விடத் தென்றவாறு.

உதாகரணம் :– [1]உறையூர்க்குச் செல்லாயோ சாத்தா வென, நீ செல்லென்ப தேவுதல். உறையூர்க்குச் செல்லா யோ சாத்தா வென, என் கால் [2]முடங்கிற் றென்றல் உற்ற துணர்த்தல். உறையூர்க்குச் செல்லாயோ சாத்தா வென, என் கடமுடையார் வளைப்பர்; பகைவ ரெறிவர் என்றல் உறுவது கூறல். [3]செப்பே என்புழி ஏகாரம் பிரிநிலை. அதனைப் பிரித்து வழு வமைதி கூறினமையின் வினாவிற்கு வழு வமைதி யில்லை யென்பது பெறப்பட்டது. வழீஇயினும் என்ற வும்மை [4]இழிவு சிறப் பும்மை.

இம் மூன்று சூத்திரத்து[5]ண் முன்னைய வழுவற்க வென்னும் விதி; பின்னைய விரண்டுஞ் செப்பு வழு வமைதி கூறிய வென வுணர்க.

அரசு :

என்பது, சூத்திரஞ் செப்புதல் வழீஇயின விடத்து மாற்றப் படாத பொருளொடு புணர்ந்த சொல் லாயின.

உதா :– சாத்தா கருவூர்க்குச் செல்லாயோ வெனக் கால் மு[6]குத்திற்று, தலை நோகின்ற தென்ற வழியும், சாத்தா கரு வூருக்குச் செல்லாயோ வெனக் கட னுடையார்வளைப்பர், பகைவ ரெறிவ ரெனச் சொல்லுதலும், சாத்தா கருவூருக்குச் செல் லாயோ வென, நீ செல் லென்பதும் வழுவே யாயினும், உற்ற துரைத்தலு முறுவது கூறலு மேவலு மாய் வந்து செல்லே னென்னும் பொருள்பட்டமையி னமைக. இதுவும் வழுவமைதி.

1. உரை 2. முடங்[குத்தி](கி)ற் 3. செ[ய்வை](ப்பே) 4. இழிவுச் சிறப்பு 5. (ண்) 6. [*]குத்துற்றுத்தலை

16. செப்பினும் வினவினுஞ் சினைமுதற் கிளவிக்
கப்பொரு ளாகு முறழ்துணைப் பொருளே.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின் செப்புவாளெடு வினவுவானிடைக் கிடந்த தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை :- செப்பினும் வினவினும், என்பது, செப்புமிடத்தும், வினவுமிடத்தும், என்றவாறு; சினைமுதற் கிளவிக்கு, என்பது, சினைக் கிளவிக்கும் முதற் கிளவிக்கும், என்றவாறு; அப் பொரு ளாகும் உறழ்துணைப் பொருளே, என்பது, முதலொடு முதலே பொருஉக; சினையொடு சினையே பொருஉக, என்றவாறு.

வரலாறு : கொற்றன் மயிர் நல்லவோ? சாத்தன் மயிர் நல்லவோ? என்று வினவினவிடத்து, கொற்றன் மயிரிற் சாத்தன் மயிர் நல்ல; சாத்தன் மயிரிற் கொற்றன் மயிர் நல்ல, என் றிறுக்க. இது சினையொடு சினை பொரீஇயின வாறு.

இனி, கொற்றன் நல்லனோ? சாத்தன் நல்லனோ? என்று கூறியவிடத்து, கொற்றனிற் சாத்தன் நல்லன்; சாத்தனிற் கொற்றன் நல்லன் என் றிறுக்க. இது முதலொடு முதல் பொரீஇயினவாறு. அப் பொருளாகும் என்ற துதலான் அவ்வச் சினைக்கு அவ்வச் சினையே பொருஉக, என்பது. இது முதற்கும் ஒக்கும்.

இனி, சினை முதற் கூறிய முறையே யன்றிக் கூற்றினுன் முதலுஞ் சினையும் உறழ்ந்து வருவனவும் உள, குணமருங்கு பற்றி.

வரலாறு : இம் மகள் கண் நல்லவோ? இக் கயல் நல்லவோ? என்பன போல்வன.

இனி, அப் பொருளாகும் உறழ் பொருள் என அமையும்; துணை யென்பது மிகையெனில், துணைக்கும் என்பது உவமித்தல்; அவ் வுவமத்துக்கண்ணும் அவ் வினப் பொருளே யாக, என்பது.

உவமம் நாலு வகைப்படும்; வினை, பயன், மெய், உரு என. புலி பாய்ந்தாங்குப் பாய்ந்தான், என்பது வினை யுவமம். மழை போலும் வண் கை, என்பது பயனுவமம். துடிபோலும் நடு, என்பது மெய் யுவமம். பொன்போலும் மேனி, என்பது உரு வுவமம்.

இன்னும், துணை யென்றதனன், எண்ணுமிடத்தும் இன மொத்தனவே யெண்ணுக, முத்தும் மணியும் பொன்னும் என.

தெய்வ :

செப்பின்கண்ணும் வினுவின்கண்ணும் உறழ் பொருட்கண் வரும் வழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள் :- சினையு முதலு மாகிய பொரு ளுணர்த்துஞ் சொற்குச் செப்பின்கண்ணும் வினுவின்கண்ணும் உறழப்படும் பொருள் அப் பொரு ளாகும், எ-று.

துணை யென்பதினை முத லென்றதனுற் பண்புந் தொழிலுங் காலமு மிடனும் பொருளுங் கொள்க. சினைபற்றி யுறழ்தல் பெரும்பான்மை யாகலான் முற்கூறப்பட்டது. அப் பொரு ளென்றது அவ்வப் பொருட்கு அவ்வப் பொருளே யுறழப் படுவது, எ-று.

அவை யொரு பொருட்கண்ணும் பிற பொருட்கண்ணும் ஒத்தன கொள்ளப்படும்.

அவை வினுவின்கண் வருமாறு:- வல முலையோ இட முலையோ பெரிதெனத் தன் பொருட்கண் வந்தது. இவள் முலையோ, அவள் முலையோ பெரிதெனப் பிற பொருட்கண் வந்தது: இவை சினை. இந் நிறமோ, அந் நிறமோ நல்லது: இது பண்பு. இந் நடையோ அந் நடையோ நல்லது: இது தொழில். இன்றோ, நாளையோ வாழ்வு: இது காலம். இந் நிலமோ அந் நிலமோ விளைவது: இது இடம். இவளோ அவளோ கற்புடை யாள்: இது பொருள்.

இனிச் செப்பு வருமாறு:- இம் முலையின் அம் முலை பெரி தென்றுனும் ஒக்குமென்றுனும் வரும். பிறவு மன்ன.

இனி அப் பொருளல்லாப் பிறிது பொருளோடு உறழ்தல் வருகின்ற சூத்திரத்தான் அமைக்கப்படும்.

சேனு :

இதன் பொருள் : செப்பின்கண்ணும் வினுவின்கண்ணும் சினைக் கிளவிக்கும் முதற் கிளவிக்கும் உறழ் பொருளுந் துணைப் பொருளும் அவ்வப் பொருளுக்கு அவ்வப் பொருளே யாம் என்றவாறு.

எனவே, சினையு முதலுந் தம்முண் மயங்கி வருதல் வழு வென்ப தாம்.

உறழ் பொருளாவது ஒப்புமை கூருது மாறுபடக் கூறப் படுவது. துணைப் பொருளாவது ஒப்புமை கூறப்படுவது.

உதாரணம் :— இவள் கண்ணி னிவள் கண் பெரிய; நும் மரசனின் எம் மரசன் முறை செய்யும், எனவும்; இவள் சண்ணி னிவள் கண் பெரியவோ; எம் மரசனி னும் மரசன் முறை செய்யுமோ, எனவும்; இவள் கண் ணெக்கு மிவள் கண்; எம் மரசனை யொக்கு நும் மரசன், எனவும்; இவள் கண் ணெக் குமோ விவள் கண்; எம் மரசனை யொக்குமோ நும் மரசன், எனவும் வரும்.

அவன் கோலினுந் தண்ணிய தட மென் றோளே, (பட். பாலை–300) எனவும், துளிதலைத் தலைஇய தளிரன்னோளே, (குறுந். – 222) எனவும், மயங்கி வந்தன வழுவாம் பிற வெனின், அவை செய்யுள்பற்றி வரு முவம வழுவாகலின் ஈண்டைக் கெய்தா, அணியியலுட் பெறப்படும். இம்மகள் கண் நல்லவோ, கயல் நல்லவோ வென வழக்கின்கண்ணும் மயங்கி வருமா லெனின், உண்மை யுணர்தற்கு வினுய தன்றி ஐய வுவமை வாய்பாட்டாற் கண்ணைப் புனைந் துரைத்தல் கருத் தாகலின், அன்னவை யெல்லாம் உரை யென்னுஞ் செய்யுளா மென்பது. இந் நங்கை முலையின் இந் நங்கை கண் [1]நல்ல, என்னுந் தொடக்கத்தன மயக் கின்மையின் இலக்கண வழக்காம் பிற வெனின், அற்றன்று: ஒத்த பண்புபற்றி யன்றே பொரு வுவது; கண்ணெடு முலைக்கு ஒத்த பண் பின்மையாற் பொருவுதல் யாண்டையது? ஒத்த பண்பு பற்றிய பொருவுதற்கண்ணது இவ் வாராய்ச்சி யென்பது.

---

1. ள

காக்கப்பட்டன செப்பு வழாநிலையும் வினு வழாநிலையு மென்பார். செப்பினும் வினவினும் என்றார். வழா லோம்பல் (சொல்-13) என்புழி யடங்கு மாயினும், நுண் ணுணர் வுடையார்க் கல்லது அதனு லுணர்த லாகாமையின் விரித்துக் கூறியவாறு. தன்னின முடித்த லென்பதனுற் பொன்னுந் துகிரு முத்து மணியும் (புறம் — 218) என வெண்ணுங்காலும் இனமாய பொருளே எண்ணப்படு மென்பது கொள்க.

நச்சி :

இது செப்பிற்கும் வினவிற்கும் மரபு கூறுகின்றது.

இ-ள் :- செப்பினும் வினவினும் — செப்பின்கண்ணும் வினவின்கண்ணும்; சினை முதல் கிளவிக்கு — சினைக் கிளவிக்கும் முதற் கிளவிக்கும்; உறழ் துணைப் பொருளே — ஒப்புமை கருதாது மாறுபடக் கூறும் பொருளும் ஒப்புமை கூறப்படும் பொருளும்; அப்பொருள் ஆகும் — அவ்வப் பொருளுக்கு அவ்வப் பொருளே யாம், (எ-று)

(உ-ம்) இவள் கண்ணின் இவள் கண் பெரிய; நும் அரசனின் எம் அரசன் முறைசெய்யும்; இவள் கண்ணின் இவள் கண் பெரியவோ; எம் அரசனின் நும் அரசன் முறை செய்யுமோ; இவள் கண் ஒக்கும் இவள் கண்; எம் அரசனை ஒக்கும் நும் அரசன்; இவள் கண் ஒக்குமோ இவள்கண்; எம் அரசனை ஒக்குமோ நும் அரசன், எனவரும்.

தன்னினம் முடித்தல், என்பதனுன் எண்ணுங்காலும், துகிரும் முத்தும் பொன்னும் என இனம் ஒத்தன எண்ணுக; முத்தும், கருவிருந்தையும், கானங் கோழியும், பொன்னும் என்று எண்ணற்க.

கல் :

என் னுதலிற்றோ வெனின், செப்புவானெடு வினவுவா *னிடைக் கிடந்ததோர் மர பிலக்கணங் கூறுத னுதலிற்று.

பொருள் :- செப்பின்கண்ணும் வினவின்கண்ணும், சினைக் கிளவிக்கும், முத[1]ற் கிளவிக்கும் அவ்வப் பொருளுக்கு அவ்வப் பொருளே யாம், ஒன்றனே டொன்றைப் பொருவிக் கூறு மளவிற் ருகிய பொரு ளென்றவாறு :

---

* ஷனிடை கிடைந்த: திருத்தம் 1. (ற்)

உதாகரணம் :– கொற்றன் மயிர் நல்லவோ, சாத்தன் மயிர் நல்லவோ, என வினாவின விடத்து, கொற்[1]றன் மயிரிற் சாத்தன் மயிர் நல்ல; சாத்தன் மயிரிற் கொற்றன் மயிர் நல்ல வென்[2]றிறுக்க. பிறவு மன்ன. இது சினைக் கிளவி.

கொற்றன் நல்லனோ சாத்த[3]ன் நல்லனோ, என வினாவி[4]ன விடத்து, சாத்தனிற் கொற்றன் நல்லன்; கொற்றனிற் சாத்த[5]ன் நல்லன், என விறுக்க. இது முதற் கிளவி. சினை யென்பது உறுப்பு; முத லென்பது அவ் வுறுப்பினை யுடையது. அப்பொரு ளாகு மென்றதற்குப் பொருள், சினைக்குச் சினையு முதற்கு முதலும் என்ப தன்றி அவ்வச் சினைக்கு அவ்வச் சினை யும், அவ்வ முதற்கு அவ்வ முதலும் என்பது கொள்ளப்படும்.

சினை முதற் கூறியவதனான் அவ்வச் சினைக்கு அவ்வச் சினை கூறாது முதலோடு கூறுதலும் உள[6]வென்பது கொள்ளப்படும்.

உதாகரணம் :– இவள் கண் நல்லவோ, கயல் நல்லவோ ? வெனவரும். உ[7]றழ்பொரு ளென்றது துணை யென்றவதனா[8]ல் உவமத்தின்கண்ணுஞ் சினை முதல்கள் தம்மின் மயங்காமற் கூறுக வென்பது கொள்ளப்படும்.

இன்னும் அதனானே அச் சினை முதற் பொரு[9]ட்களை யெ[10]ண் ணுமிடத்து[11]ம் இன மொத்தனவே யெண்ணுக வென்பதூஉம் கொள்ளப்படும்.

உதாகரணம் :– உவ[12]மம்: வினை, பயன், மெய், உருவென நான்கு வகைப்படும். புலி பாய்ந்*தாங்குப் பாய்ந்தான்; மழை வண் கை; துடி போலு[13]மிடை; பொன் போலு மேனி, யென வரும். இவற்றுட் சினை, முதன் மயங்கக் கூறினவு[14]ம் இவ் விலேசான் அமைத்துக் கொள்ளப்படும்.

உதாகரணம் :– இனி [15]எண்: முத்து மணியும் பவளமும் பொன்னு மெ[16]ன வெண்ணுக. இதற் கமைதி யுண்டேலுங் கொள்க.

இச் சூத்திரத்தாற் சொல்லியது, செப்பினையும் வினா வினையும் பற்றிப் பொருவின்கண்ணும் உவமத்தின்கண்ணு மெண்ணின்கண்ணும் பிறக்கு மர பிலக்கணமும் மரபு வழூஉ வமைதியு மென வுணர்க.

---

1. (ற்)ன (மயிரிற்) 2. (றி)[ரு](று)க்க 3. (ன்ந) 4. (ன்) 5. (ன்)(ந) 6. [வென]வென்பது 7. [ர](ற)[ழ](ழ்) பொரு 8. [லு](ல்)(உ வ) மத்(தின்) 9. (ள்)(ட்) களை 10. ண்ணு 11. [மின்] (ம் இ) ன 12. [ம்ம](மம்) வினைபய[ம்] (ன்)மெய் 13. [யடு] (மிடை) 14. [மிவ்விலெ] (ம்) (இவ்விலே) சா(ன்) அமைத் 15. [யெண்](எண்) 16. ன[வென] * தாங்கு பாய் : திருத்தம் .

பொருவென்பது ஒன்றை யொன்றனோடு [1]ஒக்குமென்ப தன்றி, அதனின் இது நன்றெனமிகுத்துக்[2]கூறுவது. உவ[3]மம் என்பது ஒப்புரைத்தல், என வுணர்க

அரசு :

என்பது, செப்பு மிடத்தும் வினவு மிடத்துஞ் சினைக் கிளவிக்கு முதற் கிளவிக்கு முதலொடு முதலுஞ் சினையொடு சினையும் பொருஉக.

உதா:- கொற்றன் மயிர் நல்லவோ, சாத்தன் மயிர் நல்லவோ வென்று வினவின விடத்துக் கொற்றன் மயிரிற் சாத்தன் மயிர் நல்ல; சாத்தன் மயிரிற் கொற்றன் மயிர் நல்ல வென்று செப்புக. இந் நங்கை முலை நல்லவோ, அந் நங்கை முலை நல்லவோ வென்று வினவின விடத்து, இந் நங்கை முலையி னந் நங்கை முலை நல்ல; அந் நங்கை முலையி னிந் நங்கை முலை நல்ல வென்று செப்புக. கண், பல் லென்னுந்தொடக்கத்தனவு மவை சினையொடு சினை பொரீஇயவாறு. இனிக் கொற்ற னல்லனோ, சாத்த னல்லனோ வென்று வினவின விடத்துக் கொற்றனிற் சாத்த னல்லன், சாத்தனிற் கொற்ற னல்ல னென்று செப்புக. அரசர் முதலாயினாரையு மித் தன்மை கொள்க. இனி, அப் பொருளாகு முறழ் துணைப் பொருள், என்றமையால் இந் நங்கை கண்ணல்லவோ, வந் நங்கை முலை நல்லவோ வென்றும், எம் மூர ரச னல்லனோ உம் மூர்க் கோலிக னல்லனோ வென்றுஞ் சினையு முதலும் பிறழப் பொருவற்க.

1. உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தா
னுத்தர மாமதுரைக் கச்சென்ப — விப்பக்க
மாதாநு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு. (திரு. வ. மாலை 12)
மாதாநு பங்கி யாவார் திரு வள்ளுவ தேவர்.

2. நறுநீல நெய்தலுங் கொட்டியுந் தீண்டிப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
யறநாட்டுப் பெண்டி ரடி.

3. மேற்று னிருந்த வுயர்சினைக் கொன்றுனிற்
றேற்று வொழுக்கம் படுவன்கொள் — மாற்று
ருறுமுரண் சாய்த்தா னுயர்குடத்தை யாட்டிச்
சிறுமருங்குல் செற்ற முலை

1. வொக்கு 2. கூ[றுதிற்](றுவது) 3. (மம்)

என்னும் பாட்டுக்கள் முதலுஞ் சினையும் பிறழ்ந்தன வாயினும் பிறழ் வல்ல வென் றித் துணையன பொருஉக. இந் நங்கை கண் ணல்லவோ, கயனல்லவோ, வெனவும்; புலிபோலப் பாய்ந்தா னெனவும், மழை வண்கை, எனவும்; துடி*போலுமிடை எனவும், வேய்போலுந் தோ ளெனவும்; பொன்போலு மேனி, முத்துப் போலும் பல் லெனவும் வந்தனவா லெனின், அவை பிறழ் வல்லனவாக,

வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே
வகைபெற வந்த வுவமைத் தோற்றம் (பொருள்: உவம.-1)

என்பதனு லுணர்க. அப் பொரு ளாகு மென்றதனல் எண்ணு மிடத்து, முத்தும் பவளமு மணியும் பொன்னுமென் றெண்ணுக; முத்துங் கருவிளம் பாலு மணியுங் கானங் கோழியும் பொன்னு மென் றெண்ணற்க.

17. தகுதியும் வழக்குந் தழீஇயின வொழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை யிலவே.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் வழீஇ யமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**உரை :** தகுதி பற்றியும் வழக்குப் பற்றியும் பொருந்தி நடக்கும் இலக்கணத்திற் பக்கச் சொல் கடியப்படா, என்ற வாறு.

தகுதி யென்பது மூவகைப்படும்: மங்கள மரபினுற் கூறு தலும், இடக்க ரடக்கிக் கூறுதலும், குழுவின் வந்த குறிநிலை வழக்கும் என.

செத்தாரைத் துஞ்சினர் என்றலும், சுடுகாட்டை நன்காடு என்றலும் மங்கல மரபினுற் கூறுதல்.

இடக்க ரடக்கிக் கூறுதல் வருமாறு: கண் கழீஇ வருதும்; கண் குறியரா யிருந்தார்; பொறையுயிர்த்தார், எனவும் வரும்.

இனி, குழுவின் வந்த குறிநிலை வழக்கு: பொற் கொல்லர் பொன்னைப் பறி என்றும், வண்ணக்கர் காணத்தை நீலம் என்றும் வரும்.

---

* போலாடுவும்: திருத்தம்

வழக்காறு இருவகைப்படும்: இலக்கண வழக்கும், இலக்கணத்தொடு பொருந்தின மரூஉ வழக்கும் என.

இல்முன் என்பதனை முன்றில் என்று தலைதடுமாறச் சொல்லுதல் இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கு.

இனி, சோழ னாடு என்பதனைச் சோணாடு என்பது மரூஉ வழக்கு.

வழக்காறு இத்துணை யென்ப தில்லை; சிதைந்தும் சிதையாதும் பொருந்தி நடப்பன வெல்லாம் அவை யெனப்படும் என்றலும் ஒன்று.

தெய்வ :

மேற் சொல்லப்பட்ட உறழ் பொருட்கண் வரும் வழுவமைத்தல் நுதலிற்று.

இ-ள்: சினை முதலாகிய பொருள்களை அவ்வப் பொருளோடு உறழ்தலே யன்றித் தகுதியையும் வழக்கினையுந் தழுவினவாய் நடக்கும் ஒரு கூற்றுச் சொல் விலக்கும் நிலைமை யில, எ-று

சினைமுதற் கிளவியும் உறழ் பொருளும் அதிகாரத்தான் வந்தன.

தகுதியாவது இதற் கிது தகுமோ வெனப் பண்பினானுதல் தொழிலினானுதல் உறழ நிற்பது. வழக்காவது ஒப்புமையின்றி உலகத்தார் பயில வழங்கப்படுவது.

அவற்றுள், தகுதி பற்றி வந்த வினா, இந் நங்கை கண் நல்லவோ இக் கயல் நல்லவோ என வருவது: இது பண்பு. இம் முகிலோ இவன் கையோ கொடுக்க வல்லது: இது தொழில்.

செப்பு வருமாறு: கயலிற் கண் நல்ல என்றானும், ஒக்கும் என்றானும் உரைப்பது.

இனி, வழக்கு பற்றி வினா வருமாறு: கரிதோ, வெளிதோ; இருப்பேனோ, போவேனோ; ஊரோ காடோ; பகலோ, இரவோ எனவும் தேவராய் வாழ்தல் நன்றோ, நரகத்துள் உறைதல் நன்றோ எனவும், பிறவும் இவ்வாறு ஒன்றி னொன்று பொருத்தமின்றி உலக வழக்கின்கண் வருவன கொள்க,

செப்பு வருமாறு: கரி தன்று, வெளி தென்றுனும், வெளி தன்று, கரி தென்றுனும் இவ்வாறே பிறவாற்றுனும் உரைப்பன.

இவை மேற் சொல்லப்பட்ட இலக்கணத்தின் வழூவுதலின் அமைதி*யாயின.

சேனு :

இதன் பொருள் : தகுதி பற்றியும் வழக்குப் பற்றியும் நடக்கும் இலக்கணத்திற்கு பக்கச் சொற் கடியப்படா, என்ற வாறு.

தகுதியென்பது அப் பொருட் குரிய சொல்லாற் சொல்லுத னீர்மையன் றென்று அது களைந்து தக்கதோர் வாய்பாட்டாற் கூறுதல். அது, செத்தாரைத் துஞ்சினு ரென்றலும், சுடுகாட்டை நன்கா டென்றலும், ஓலையைத் திருமுக மென்றலும் கெட்டதனைப் பெருகிற் றென்றலு மென' இத் தொடக்கத்தது.

வழக்கென்பது காரண மின்றி வழங்கற்பாடே பற்றி வருவது. பண்பு கொள் பெயராயினும் பண்பு குறியாது சாதிப் பெயராய் வெள்யாடு, வெண்களமார், கருங் களமாரென வரு வனவும், குடத்துள்ளும் பிற கலத்துள்ளு மிருந்துள்ள நீரைச் சிறி தென்றுது சில வென்றலும், அடுப்பின் கீழ்ப் புடையை மீயடுப் பென்றலும், பிறவும் வழக்காரும்.

பொற் கொல்லர் பொன்னைப் பறி யென்றலும், வண்ணக்கர் காணத்தை நீல மென்றலு முதலாகிய குழூவின் வந்த ¶குறிநிலை வழக்கும், கண் கழீஇ வருதும், கான்மே னீர்பெய்து வருது மென்னுந் தொடக்கத்து இடக்க ரடக்குந் தகுதி யென்றும், மரூஉ முடிபை வழக்கா றென்றும், உரையாசிரியர் அமைத்தாரா லெனின், குழூவின் வந்த குறிநிலை வழக்குச் சான்ருேர் வழக் கின்கண்ணும் அவர் செய்யுட்கண்ணும் வாராமையின் அமைக் கப்படா வாகலானும், இடக்கரடக்கு அவையல் கிளவி (சொல் — 442) எனவும், மறைக்குங்காலை (சொல் – 443) எனவும், முன்ன ரமைக்கப்படுதலானும், மரூஉ முடிபு எழுத் ததிகாரத்துக் கூறப்பட்டமையானும், அவர்க்கு அது கருத்தன்று என்பது. கருமை முதலாயின ஒரு நிகரன வன்மையிற் காக்கையொடு சார்த்திக் களம் பழத்தை விதந்த துணை யல்லது, காக்கைக்கு வெண்மை நேராமையிற் காக்கையிற் கரிது களம் பழம்

* யாயினும் : திருத்தம் ¶ குறுநில எனவும் பாடம் உண்டு போலும்

என்புழிக் கரிது வெளி தாயிற் றன்று; ஆதலால் வழு வன்று. கிழக்கு, மேற் கென்பன வரையறை யின்றி ஒன்றனோடு சார்த்திப் பெறப்படுவன வாதலின், ஒன்றற்குக் கீழ் பாலதனைப் பிறிதொன்றற்கு மேல் பால தென்றலும் வழு வன்று. சிறுவெள்வா யென்பது இடுகுறி. கருவாட மென்பது மது. அதனை னிவை வழக்கா றென அமைக்கப்படா வாயினும், உரையாசிரியர் பிறர் மத முணர்த்திய கூறினா ரென்பது.

தத்தமக் குரிய வாய்பாட்டா னன்றிப் பிற வாய்பாட்டாற் கூறுதல் வழு வாயினும், அமைக வென மரபு வழு வமைத்தவாறு.

**நச்சி :**

இது, மரபு வழூஉ அமையுமாறு கூறுகின்றது.

**இ-ள் :** தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும் — ஒரு பொருட்கு உரிய சொல்லால் பட்டாங்கே சொல்லுதல் நீர்மை அன்று என்று அது களைந்து அதற்குத் தக்க தோர் வாய்பாட்டாற் கூறுதலையும் ஒரு காரண மின்றி வழங்கற்பாடே பற்றி வருவதனையும் பற்றி நடக்கும், பகுதிக் கிளவி — இலக்கணத்தில் பக்கச் சொல், வரைநிலை இல — கடியப்படா, (எ-று)

செத்தாரைத் துஞ்சினர் என்றலும், ஓலையைத் திருமுகம் என்றலும், சுடுகாட்டை நன்காடு என்றலும், கெட்டதனைப் பெருகிற்று என்றலும் போல்வன தகுதி.

பண்பு குறியாது சாதிப் பெயராய் வெள்யாடு, வெண் களமர், கருங் களமர் என வருவனவும், குடத்துள்ளும் பிற கலத்துள்ளும் இருந்த நீரைச் சிறிது என்னாது, சில என்றலும், அடுப்பின் கீழ்ப்புடையை மீயடுப்பு என்றலும் போல்வன வழக்காம்.

**கல் :**

என் னுதலிற்றோ வெனின், மரபு வழீஇ யமையுமா றுணர்த்துதல் நுதலிற்று.

**பொருள் வருமாறு :** தகுதியினையும், வழக்கினையும் பொருந்தி நடக்கும் இலக்கணத்திற் பக்கச் சொ னீக்கு நிலைமை

யுடைய [1]வல்ல வென்றவாறு, தகுதி யென்பது மங்கல மரபினுற் கூறுதலும், இடக்க ரடக்கிக் கூறுதலும், குழுவின் வந்த [2]குறிநிலை வழக்கு மென மூன்று கூறுபடும்.

உதாகரணம் : செத்தாரைத் துஞ்சினு [3]ரென்னு மரபும், ஓலையைத் திருமுகம் என்றலும் மங்கல மரபு.

கண் கழீஇ வருதும்; [4]கான்மே னீர்ப் பெய்து வருதும்; கைக் குறியரா யிருந்தார்; பொறையுயிர்த்தார்; புலி நின் றிறந்த நீர லீரத்து; கருமுக மந்தி; செம்பி [5]னேற்றை, என்பன இடக்க ரடக்கிக் கூறல். பொற் கொல்லர் பொன்னைப் பறி யென்றலும், வண்ணக்கர் காணத்தை நீலமென்றலும், யானைப் பாகர் ஆடையைக் காரை யென்றலும், குழுவின் வந்த [6]குறிநிலை வழக்கு. வழக்காறு, இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கும், மரூஉ வழக்கு மென விருவகைப்படும்:

முன்றில், மீகண், என்பன இலக்கணத்தொடு பொருந்திய மரூஉ வழக்கு. அருமருந் தன்னனை அரு[7]மருந்த னென்றலும், நட்டு வியந்தானை நட்டியந்தான் என்றலும், பொதுவில் என்பதனை பொதியில் என்றலும், மலைய மா நாட்டை [8]மலாடு என்றலும், சோழ[9]நாட்டைச் சோணுடு என்றலும், என விவை மரூஉவழக்கு. இவ்வாறு [10]சொற் சிதையச் சொல்லுவன வன்றிப் படுபொருட் சிதையச் சொல்லுவனவும் மரூஉ வழக் கென்று கொள்ளப்படும்.

ஆகை கரிய மயிரினைச் சிறு வெள்வா யென்றும், களமருட் கரியாரை வெண்களம ரென்றும், நீரினையும் பாலினையும் ஓரோ வழிச் சில, பல வென்றும், அடுப்பின் கீழ்ப்[11]புடையை மீயடுப் பென்றும் கூறுவன, இலக்கணவாய்ப்பா டின்றி மருவிய [12]வாய்ப் பாடுதாமே இலக்கணமாகக் கூறுவன விலக்கணத்தோடு பொருந்திய மரூஉ வெனப்படும்,

இலக்கண [13]வாய்ப்பாடுள்வழிச் சொற் சிதையவும் வருவன மரூஉ வழக் கெனப்படும்.

---

1. [ய](வ)ல்ல[ல்] 2. கு[அ](றி)நி[ல](லை) 3. ரென்[று மா](பும்)
4. கா[ணமெனி](ன்மேனி ர்ப் 5. [னே](ல) 6. இ[று](றி)நி[ல](லை)
7. ம[ரு]ந் 8. மல(ா)டு 9. [ணு](நா) 10. சொ[ர்](ற்)
11. புடை(யை) 12. வாய்[ப்]பாடு 13. வாய்[ப்]பாடு(ம் உ)ள்

தகுதியென்பது பட்டாங்கு சொல்லுதல் நீர்மை யின்மை நோக்கி அவ் வாய்பாடு களைந்து இவ்வாறு சொல்லுதும் என் றுடன்பட்டுச் சொல்லி வருவது. வழக்கா [1]றென்பதும் [2]காரண நோக்காது வாய்பாடு படுத்துப் பயிலச் சொல்லி வருவது.

இச் சூத்திரத்தாற் சொல்லியது, பரந்துபட்ட மரபு வழூஉக்களும், சிலவற்றைப் பொருட் காரணம் பற்றியும் நன் [3]மக்களான் பயில வழங்குதல் ஆகிய ........... யகர வழக்கம் பற்றி வழுவமைவார் என வுணர்க.

[4]இவற்றுள் தகுதி யென்றது பொருள் பற்றி யமைந்தது வழக்காறு வழங்குதல் பற்றி யமைந்தது.

யானை, யாறு, யாடு என்னு மின்னோ ரன்னவற்றையும் ஆனை, ஆறு, ஆடு என்னு மின்னோ ரன்னவாகக் கூறுதலு[5]ம் வழக்காறென இதனுட் கொள்ளப்படும். பிறவும் அன்ன. அவை சான்றோர் சொன்ன [6]செய்யுளுட் பெரும்பான்மை காணப் படாமையின் இதனுட் கொள்ளாது,

கடிசொல் லில்லைக் காலத்துப் படினே. (எச். 56)

யென்புழிக் கொள்ளப்படும்.

அரசு :

என்பது, தகுதி பற்றியும் வழக்கு பற்றியும் பொருந்தி நடக்கு மிலக்கணப் பகுதிச் சொற் கடியப்படாத் தகுதி யிரண்டு வகைப்படும், மங்கல மரபினாற் கூறுதலு மிடக்கரடக்கிக் கூறுதலு மென. செத்தாரைத் துஞ்சினா ரென்றலுஞ் சுடுகாட்டை நன்கா டென்றலும் ஓலையைத் திருமுக மென்றலும் விளக்குப் பெருகிற் றென்றலும் இத் தொடக்கத்தன மங்கல மரபு. கண் கழீஇ வருதும், கான்மே னீர் பெய்து வருதும், அந்தித் தொழுது வருதும், கை குறியரா யிருந்தார், பொறை உயிர்த்தார் என்னுந் தொடக்கத்தன இடக்கரடக்கு. இனி, வழக்காவது நான்கு வகைப்படும்: அவை யிலக்கண வழக்கு, இலக்கணத்தோடு பொருந்திய மரூஉவழக்கு, குழுவின் வந்த குறுநில வழக்கு என. அவற்றுள், நிலம், நீர் தீ, வளி, ஆகாயம், சோறு, கூழ், பால், பாளிதம், மக்கள், மரம், தெங்கு, கமுகு இத் தொடக்கத்தன

1. ெ[ர](ற) 2. (ரோ) கொண்டொருகாரண 3. தெளிவில்லை
4. இவற்று[ட்](ள்) 5. (ம்)[மழைக்காரென] (வழக்காறென)
6. செய்யு[ட்]ளு(ட்)

இலக்கண வழக்கு. இன்முன் னென்பதனை முன்றி லென்றும், கண்மீ யென்பதனை மீகண் என்றும், யாவரென்பதனை யாரென்றும் வருத விலக்கணத்தோடு பொருந்திய மரூஉ வழக்கு. அருமருந்தன்ன னென்பதனை அருமருந்தா னென்றும், பொதுவி லென்பதனை பொதியி லென்றும், மலையமா னாடென்பதனை மலாடென்றும், சோழ நாடென்பதனை சோணாடென்றும் சொல்லுதன் மரூஉ வழக்கு. பொற்கொல்லர் பொன்னைப் பறி யென்றலும், வண்ணக்கர் காணத்தை நீல மென்றலும், யானைப் பாகர் ஆடையைக் கூறை யென்றலும், இழிசினர் சோற்றைச் சொன்றி யென்றலும் குழூவின் வந்த குறுநில வழக்கு. இனி, யொரு சாரார் குழூவின் வந்த குறுநில வழக்கும் இடக்கரடக்கலும்மங்கல மரபினாற் கூறுதலு மென்ற விம் மூன்றையும் தக்கவாறு சொல்லுதலாற் றகுதி யென் றாக்கி, ஒழிந்தவற்றை யெல்லாம் வழக்காறென்ப.

இனி, அவர் வழக்காறு சொல்லும்படி கரிது, வெளி தென்கையுங் கிழக்கு மேற் கென்கையும், சிறிது, பெரி தென்கையும், கருமை செம்மை யாகிய பண்பினா லன்றி வெள்ளாளரை வெண்களமர் என்றும், புலையரைக் கருங்களம ரென்றும், சாதி பற்றி வெள்ளா டென்றுஞ் சொல்லுதல் வழு வன்று; செவ்வழக்கென்ப, தமீ இயன வொழுகு மென்றமையா லென்ப.

18. இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், செய்யுட் காவதோர் முடிபு கூறுதல் நுதலிற்று.

உரை : தமக்கு இனஞ் சுட்டா வாகிப் பண்பு கொண்டு நின்ற பெயர்ச் சொற்களவை வழக்கினது நெறி யல்லன, செய்யுட்கு நெறி, என்றவாறு.

வரலாறு : மாக்கட னிவந்தெழுதரு செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ, (புறம் 4) எனவும், 'வெண்கோட்டியானை சேனை படியும்' *, எனவும் வரும்.

வழக்கா றல்ல, என்ற விதப்பினான், வடவேங்கடம் தென் குமரி, என்பன கொள்க. இதுவும் ஒருசார் ஆசிரியன் உரை.

(* வெண்கோட்டியானைச் சேனைப் பாடியும் — கல்லாடர் உரை)

இனி, ஒருவன் சொல்லுவது : 'வழக்கா றல்ல' என்பதனை, 'வழக்காற்றின் அல்ல' என ஐந்தா முருபு விரித்து, 'அல்ல' என்பதனைப் பெயர்ப்படுத்துக் கூறும்; கூறவே, வழக்கிற்கும் இனமில் பண்பு கொள் பெயர்கள் உள, என்பது போந்ததாம்.

வரலாறு : பெருங் கொற்றன், பெருங் கூத்தன் என்பன போல்வன. வழக்கிடைப் பண்புப் பெயர் வருங்கால் குண மின்றி விழுமிதாகச் சொல்லுவதற்கு வந்து நிற்கும்.

தெய்வ :

உலகத்துப் பொரு ளெல்லாம் இனச்சுட் டுடையவும் இனச் சுட் டில்லவு மென இரு வகைப்படும். அவற்றுள் இனச்சுட் டுடையன உறழ்ச்சி வகையுள் அடங்குதலின் இனச்சுட் டில்லாத பொருண்மேற் செப்பு வழீஇ யமையுமா றுணர்த்து தல் நுதலிற்று.

இ-ள் : ஒரு பொருட்கு இனச்சுட் டில்லாத பண்பு கொள் பெயரைக் கொடுத்தல் வழக்கு நெறி யல்ல, செய்யுள் நெறி. எ-று.

'பொருட்கு' என்னும் வேற்றுமை யேற்ற பெயர் எஞ்சி நின்றது. அல்ல வென்பது வழக்குப் பன்மை குறித்து வந்து. செய்யு ணெறி யென அமையும், வழக்கு நெறி யல்ல வெனல் வேண்டா வெனின், நன்கு மறுத்தற்குக் கூறினு ரென்க.

இனச்சுட் டில்லாத பொருளாவன : ஞாயிறு, திங்கள், தீ யென்பன. அவை 'மாக்கட னிவந்தெழு செஞ்ஞாயிற்றுக் கவினை,' எனவும் 'நெடு வெண் டிங்களு மூர்கொண்டன்றே', (அகம் 2) எனவும், வெவ்வெரி கொளீஇ, எனவும் வரும். இவை வழக்கின்கண் வரின், கரு ஞாயிறும், கருந் திங்களும், தண் ணெரியும் உள போலத் தோன்றும்; ஆயினும் செய்யுட்கண் அமையும் என்றவாறு. செம் போத்து, என வழக்கின்கண் இனஞ்சுட்டாது வந்ததா வெனின் அப் பொருட்கு அது பெய ரென்க. பெரு வண்ணுன், பெருங் கொல்லன், என வழக்கின்கண் இனஞ்சுட்டாது வந்ததா வெனின், பாண்பாவது தமக் குள்ள தோ ரியல்பு; ஈண்டு அப் பெருமை இயல் பன்மையான், அஃது

உயர்த்துச் சொல்லுதற்கண் வந்த தென்க. பண்பு கொள் பெயர் என்று விசேடித்தமையால், ஏனைப் பெயர்கள் இருவகை வழக்கினும் இனஞ் சுட்டாது வரப்பெறு மெனக் கொள்க.

சேனு :

இதன் பொருள்: இனப் பொருளைச் சுட்டுத லின்றிப் பண்புஅடுத்து வழங்கப்படும் பெயர் வழக்கு நெறி யல்ல, செய்யு ணெறி என்றவாறு.

உதாரணம்: செஞ்ஞாயிற்று நிலவுவேண்டினும், வெண்டிங் களுள் வெயில் வேண்டினும்' (புறம்-38) என வரும்.

பல பொருட்குப் பொதுவாகிய சொல் லன்றே, ஒரு பொருட்குச் சிறந்த பண்பான் விசேடிக்கப்படுவது; ஞாயிறு, திங்க ளென்பன பொதுச் சொ லன்மையிற் செஞ் ஞாயி றென்றும் வெண் டிங்க ளென்றும் விசேடிக்கப்படா வாயினும், செய்யுட்கண் அணியாய் நிற்றலின் அமைக்க வென்றார்.

பெருங் கொற்றன், பெருஞ் சாத்தன் என இல்குணம் அடுத்து வழக்கின்கண்ணும் இனஞ் சுட்டாது வருதலிற் செய் யுளா றென்றல் நிரம்பா தெனின், அவை இனஞ்சுட்டாமையின் வழு வாயின வல்ல; இல்குணம் அடுத்தலின் வழு வாயின. இனஞ் சுட்டலாவது இனத்தைச் சுட்டி அவற்றினின்றும் விசேடிக்கப் படுதல். வெண்மை முதலியன விசேடித்தலாவது அக் குண மில்லா இனப் பொருளி னீக்கி அக் குண முடையதனை வரைந்து சுட்டுவித்த லன்றே; சுட்டப்படுவதன்கண் அக்குண மில்லை யாயின் வரைந்து சுட்டுவிக்குமா றென்னை? அதனால் விசேடிக் கற் பாலது விசேடியாது நின்றதன் றாகலின் ஈண்டைக் கெய்தாது;

வழக்கி னாகிய் வுயர்சொற் கிளவி (சொல் — 27)

என்புழி ஒன்றென முடித்த லென்பதனான் அமைக்கப்படும்.

குறுஞ் சூலி, குறுந் தடி என்னுந் தொடக்கத்தன, சூலி, தடி யெனப் பிரிந்து நில்லாமையிற் பண்பு கொள் பெய ரெனப் படா; பண்புஅடாது, வடவேங்கட தென்குமரி, முட்டாழை, கோட் சுறு, எனத் திசையும் உறுப்புந் தொழிலு முதலாய அடையடுத்து இனஞ் சுட்டாது வருவன, ஒன்றென முடித்த லென்பதனாற் செய்யுளா றென அமைத்துக் கொள்ளப்படும்.

ஒன்றன தாற்றலான் ஒன்று பெறப்படுதலின், வழக்கா றல்ல வென்றானும், செய்யுளா றென்றானும் கூற வமையு மெனின், உய்த்துணர்வது சொல்லில்வழி யென மறுக்க.

பண்புகொள் பெயர் இனங் குறித்து வருதன் மரபு; அம் மரபு வழக்கின்கண் வழுவற்க வென்றும், செய்யுட்கண் வழு வமைக்க வென்றுங் காத்தவா றாயிற்று.

**நச்சி :**

இது செய்யுட்கு மரபு வழு வமைதி கூறுகின்றது.

இ-ள் : இனச் சுட்டு இல்லாப் பண்பு கொள் பெயர்க் கொடை — இனத்தைச் சுட்டி அவற்றி னின்றும் விசேடிக்கப் படுதல் இல்லாத பண்பு அடுத்து வழங்கப்படும் பெயரை ஒரு பொருட்குக் கொடுத்தல், வழக்காறு அல்ல செய்யுளாறு — வழக்கு நெறி அல்ல செய்யுள் நெறி, (எ-று)

செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்

வெண்டிங்களுள் வெயில் வேண்டினும் (புறம் 38 : 7, 8)
என இவை கரு ஞாயிறும், கருந் திங்களு மாகிய இனம் இன்மையின் விசேடிக்கப்படா வாயினும், செய்புட்கு அணியாய் நிற்றலின் அமைத்தார். எனவே, வழக்கின்கண் பண்பு கொள் பெயர் இனம் குறித்து வருதல் மரபு என்பதூம், செய்யுட்கண் வழீஇ அமைதல் மரபு என்பதூம் கூறியவாறு ஆயிற்று.

பண்பு அடாது, வடவேங்கடம் தென்குமரி (தொல்-பாயிரம்) முட்டாழை, கோட் சுறு எனத் திசையும் உறுப்பும் தொழிலும் முதலிய அடை அடுத்து, இனம் சுட்டாது வருவன ஒன்றென முடித்தலால் செய்யுளாறு, என அமைக்க.

**கல் :**

என் னுதலிற்றோ வெனின், இதுவும் வழக்கிற்கும் செய் யுட்கும் மரபு வழீஇ யமையுமா றுணர்த்தல் நுதலிற்று.

பொருள் : தமக் கினஞ் சுட்டுத லில்லாத பண்பு கொண்டு நின்ற பெயர்ச் சொற்கள் வழக்கி னகத்து நெறி யல்லாத செய் யுட்கு நெறியாம், என்றவாறு.

உ-ம் :-- வழக்'காறுவன: பெருங் கொற்றன், பெருங் கூத்தன் என்றாற் போல்வன. இவை சிறியான் ஒருவனை நோக்கி வந்தன வல்ல, பண்பின்றி யுயர்த்திச் சொல்லிய வென்பது.

இனிச் செய்யுளா றுவன :

மாக்கட னிவந்தெழுதரு

செஞ்ஞாயிற்றுக் கவினைமாதோ. எனவும். வெண்கோட் டியானைச் சேரனைப்படியும், எனவும்; நெடுவெண்டிங்களு மூர்க் கொண்டன்றே, எனவும் வரும். கருஞாயிறுங் கருங்கோட் டியானையுங் குறுங் கருந் திங்களு முண்மை கண்டு சொல்லினா னல்ல [2]னென்பது. வழக்கினுட் பண்பு கொள் [3]பெயர் வருங் காற் குண மின்றி விழுமியதாகச் சொல்ல வந்து நிற்கும். செய்யு ளுள் வருங்'காற் குணந் தன்க ளுடையவாய் வந்து நிற்கும். இடுக்கவுண் மடப்பிடி, எனவும்; நால்வாய் வேழம். எனவும். [5]மறப்புலி என்றும். மடப்பிணை என்றும், வடவேங்கடந்தென் குமரி என்றும், *இன் னிலப் பண்பு கொள் பெயரே யன்றி *இன்னிலத் தொழில் கொள் பேரும், *இன்னிலப் பெயர் கொள் பேருமாய் வருவன வுளவா லெனின், அவ்வாறு வருவனவற்றை யும் ஒன்றின முடித்த லென்பத[6]னுன் இதனகத்துச் செய்யுள் விதியாக அமைக்கப்படும்.

பண்புப் பெய ரென்னுது பண்பு கொள் பெய ரென்றார், கரியது, கரியன எனப் பண்பினைப் பிரியாது வருவன வொழியப் பண்பினைக் கொண்டு செஞ் [7]ஞாயி றெனவும், பண்பினைக் கொள்ளாது [8]ஞாயி றெனவும் வருவனவற்றின் மேற்று. இவ் வாராய்ச்சி யென்றறிக, வென்பது.

இவ்வாறு பண்பு [9]கொள் பெயரென்று கூறவே, குறுஞ் சூலி, குறுந் [10]தடி, குறு மூக்கி, செம்போத்து என்பன வப் பண் பினைப்பற்றி [11]அச் சூலி, தடி, மூக்கி, போத்து என்று வழங்குத லின்மையின் அது வாளாது பெய ரெனப்படும்.

இதனுற் சொல்லியது, வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் பண் பிடனுகப் பிறப்ப தோர் வழு வமைதியும், பண்பு பற்றிப் பிறக்கும் இன னில் விதப்பும், இன னுடைய விதப்பும் என்னும் இரு வகைச் செய்யுள் விகாரமுஞ் சொல்லிய தென வுணர்க.

1. கா[ரா](று)லன 2. வெ: திருத்தம். 3. பெய[ற்](ர்) 4. கா[ல்க்](ற்)
5. ம(ற)ப்புலி 6. னு(ன்இ) 7. ஞாயி(றெ)ன 8. ஞாயிறெ[ர](ற)ன
9. கொ(ள்) 10. த[க]டி 11. அ[ச்]சூலி, [த்]தடி *தெளிவில்லை.

செஞ் ஞாயி றென்புழிச் செம்மை யென்னும் பண்பிற்கு, கருமை, வெண்மை யென இன முளவே யெனினும், ஞாயி'றோடு அடுத்தமையான் இன மின்றாய் இன னில் விதப் பாயிற்று. ஞாயிறென்பது இனமில [2]தேனுஞ் செம்மை யென்னும் பண்பு அடுத்தமையிற் கரியது மொரு ஞாயி றுள்ளது போல வின முடைத்தாய் இன னுடை விதப் பாயிற்று.

அரசு :

எ-து இனத்தைச் சுட்டாது பண்பு கொண்டு நின்ற பெயர்ச் சொற்கள் வழக்கு நெறியல்ல, செய்யு ணெறி யாம்.

உதா :- செஞ் ஞாயிற்றுக் கவின், வெண் கோட்டியானை, நெடு வெண்டிங்கள், வெண் முத்தம் எனச் செய்யுளுள் வரும். இனிக் குறுஞ் சூலி, நெடுந் தகடி, குறு மூக்கி, குறும் பூழ் என் பனவு மினஞ் சுட்டாது வழக்கினில் வந்தனவா லெனின், அவை யவற்றின் பேரே, யினஞ் சுட்டாது வந்தன வல்ல, வென்று மறுக்க.

19. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், உலகத்துப் பொரு ளெல்லாம் இரு வகைப்படும், இயற்கைப் பொருளும் செயற் கைப் பொருளும் என. அவற்றுள், இயற்கைப் பொருண்மேற் சொல் நிகழற் பால வாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : உலகத்து இயல் பாகி வாராநின்ற பொருளைச் சொல்லுமிடத்து இத்தன்மைய என்று சொல்லுக, என்றவாறு.

வரலாறு : நிலம் வலிது; நீர் தண்ணிது என வரும்.

தெய்வ :

உலகத்துப் பொரு ளெல்லாம் இயற்கைப் பொருள் செயற்கைப் பொருள் என அடங்குதலின் அவற்றுள் இயற்கைப் பொருண்மேற் செப்பு நிகழுமாறு, உணர்த்துதல் நுதலிற்று.

---

ளே[ட்] (ட) டுத் 2. ஏே. ; திருத்தம்

இ-ள் : இயற்கைப் பொருள் என்பது காரணப் பொருள்; அதனை இத் தன்மைத்து எனச் சொல்லுக, எ—று.

அவை நிலம், நீர், தீ, வளி, ஆகாயம், உயிர் என்பன. அவற்றை நிலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்து; வளி யுளரும்; ஆகாயம் நிற்கும்; உயிர் உணரும் எனக் கூறுக.

நிலம் வலி தாயிற்று எனக் கூறலாகாது. என்னை? ஆக்கங் கொடுப்பின் அதற்கு இயல்பு பிறி தாவான் செல்லு மாகலின் வழுவாம்.

சேனு :

இதன் பொருள் : தன் னியல்பிற் றிரியாது நின்ற பொருளை, அத னியல்பு கூறுங்கால் ஆக்கமுங் காரணமுங் கொடாது, இற் றெனச் சொல்லுக, என்றவாறு.

இயல்பாவது பொருட்குப் பின் றோன்றாது, உடன் நிகழுந் தன்மை.

உதாரணம் : நிலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்து; வளி உளரும், உயிர் உணரும் என வரும்.

இற்றென்பது வினைக்குறிப்பு வாய்பா டாயினும், உளரும், உணரும் என்னுந் தெரிநிலை வினையும் இற் றென்னும் பொருள் பட நிற்றலின், இற் றெனக் கிளத்தலே யாம்.

நிலம் வலி தாயிற்று, என இயற்கைப் பொருள் ஆக்கம் பெற்று வருமா லெனின், கல்லு மிட்டிகையும் பெய்து குற்றுச் செய்யப்பட்ட நிலத்தை வலி தாயிற் றெனின், அது செயற்கைப் பொருளே யாம். நீர் நிலமும், சேற்று நிலமும், முன் மிதித்துச் சென்று, வன் னில மிதித்தான், நிலம் வலி தாயிற் றென்றவழி மெலி தாயது வலி தாய் வேறுபட்ட தென ஆக்கம் வேறுபாடு குறித்து நிற்றலின் இயற்கைப் பொருள் ஆக்க மொடு வந்த தன்றும். அல்லது, நிலத்திற்கு வன்மை விகார மென் றோர்ந்து நிலம் வலி தாயிற் றென்னுமாயின், திங்கள் கரி தென்பது போலப் பிறழ வுணர்ந்தார் வழக்காய் ஆராயப்படா தென்க.

நச்சி :

இஃது இயற்கைப் பொருட்கண் மரபு வழுவாமை கூறு கின்றது.

இ-ள் : இயற்கைப் பொருளை—பொருட்குப் பின் தோன்றாது உடன் நிகழும் தன்மைத்தாய பொருளை அதன் இயல்பு கூறுங்கால், இற்று எனக் கிளத்தல் — ஆக்கமும் காரணமும் கொடாது, இற்று, எனச் சொல்லுக, எ—று.

உ-ம் : நிலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்யது; வளி உளரும்; உயிர் உணரும், என வரும்.

சேற்று நிலம் மிதித்து வன்னிலம் மிதித்தான், நிலம் வலி தாயிற்று, என்றவழி, மெலி தாயது வலி தாய் வேறுபட்டது, என ஆக்கம் வேறுபாடு குறித்து நிற்றலின், இயற்கைப் பொருள் ஆக்கமொடு வந்தது அன்றாம்.

கல் :

என் னுதலிற்றோ வெனின் உலகத்துப் பொரு ளெல்லாம் இரு வகைப்படும், இயற்கைப் பொருளும், செயற்கைப் பொருளு மெனே; அவற்றுள் இயற்கைப் பொருண்மேல் மர பிலக்கணம் வழாமற் சொன் னிகழற்பால வாமா றுணர்த்துதல் நுதலிற்று.

இயற்கையாகிய பொருளை இத் தன்மைத்தெனச் சொல்லுக வென்றவாறு.

உதாகரணம் : நிலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்யது; வளி யுளரும், என வரும். இயற்கைப் பொருள், செயற்கைப் பொருள் என்கிற தவ் வியற்கை, செயற்கை யென்னும் பண்பினையோ? அப் பண் படைந்த பொருளினையோ? எனின் பண் படைந்த பொருளினை யென வுணர்க.

அஃதே யெனின், இயற்கைப் பொருளிது, செயற்கைப் பொருளிது வென வேறுபட நில்லாது, நிலம் வலி தென்ற வழக்குத் தானே, கல்லு மிட்டிகையும் பெய்து குற்றுச் செய்யப் பட்ட விடத்து, நீர் நிலமும், சேற்று நிலமும் மிதித்து அவ்வயி னின்றொ ருவன் அந் நில மல்லாத நில மிதித்தவிடத்து, நிலம் வலி தாயிற் றென்றும் வருமா லெனின், ஒரு பொரு டானே இயற்கையான பண்பு அடுத்த விடத்து இயற்கை யென்றும்,

செயற்கையான பண் படுத்தவிடத்து செயற்கை யென்றும் பண்பால் வேறுபடுத லல்லது பொருளால் வேறல்ல என்றுணர்க.

[1]முன் னீர் நில மிதித்தான் கூறும் வழக்கினுள் பொருட் குண்மை வகையான் வன்மை யின்றே யெனி[2]னும் அவன் மனக் குறிப்புப் பற்றி யதுவும் வன்மை யாயிற் றென வுணர்க.

இவ் விலக்கணங் கூறிப் பயந்த தென்னை யெனின், மேற் செயற்கைப் பொருளகத்து மரபு வழூஉ வமைத்தற் பொருட்டா வுலகத்துப் பொருளை இயற்கை செயற்கை யென விரு பாகுபாடு செய்து அவற்றைக் கூறும் மர பிலக்கணம் அறிவித்தா ரெனக் கொள்க.

அரசு :

என்பது உலகத் தியல் பாகி வாராநின்ற பொருள்களைச் சொல்லுமிடத்துத் தன்மை யென்றே சொல்லுக.

உதா : நிலம் வலிது; நீர் தண்ணிது; தீ வெய்து; வளி யுளரும் உயி ருணரும் [3]என விவ்வாறு சொல்லுவது. இனி நிலம் வலி தாயிற்று; நீர் தண்ணி தாயிற்று, [4]என்று சொல்லற்க. மற்று, நிலம் வலிதாயிற் றென்றுஞ் சொல்லுபவா லெனி னஃ தியல் பன்று; சேற்று நிலம் மிதித்து வன் னில மிதிக்கை யால் விகார மென்பது.

## 20. செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், செயற்கைப் பொருண்மேற் சொல் நிகழற் பால வாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: செயற்கையி னாகிய பொருள்களை யெல்லாம் ஆக்கங் கொடுத்துச் சொல்லுக, என்றவாறு,

வரலாறு : மயிர் நல்ல ஆயின; பயிர் நல்ல ஆயின, என வரும்,

ஆயின என்பது ஆக்கம்.

---

1. மு(ந்நீ)[ன்னீ]ர் 2. னும் [ம்](அ)வ(ன்)
3. யென : திருத்தம் 4. யென்று : திருத்தம்

தெய்வ :

செயற்கைப் பொருண்மேற் செப்பு நிகழுமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : செயற்கைப் பொருளாவது காரியப் பொருள்; அதனை ஆக்கச் சொல்லொடு படுத்துக் (சொல்லொடடுத்து இ. எ.) கூறுக, எ-று.

செயற்கையாய்த் தன்னியல்பின் வேறுபடுவன வெல்லாம் செயற்கைப் பொருளென்று கொள்க.

உ-ம் :- மண் குட மாயிற்று; நூல் ஆடை யாயிற்று; மரங் கத வாயிற்று, எனவும், பைங்கூழ் நல்ல வாயின; மயிர் நல்ல வாயின, எனவும் வரும். அஃதேல் மயிர் நல்ல; பைங் கூழ் நல்ல, என ஆக்க மின்றியும் வருமால் எனின், அவை யக் காலத் தியற்கை பற்றிக் கூறப்பட்டன; முன்பு நின்ற நிலை கண்டு கூறப்பட்டன அல்ல வென்க. அதனுனே யன்றே வருகின்ற சூத்திரங் கூறல் வேண்டியது.

சேஞ :

இதன் பொருள் : காரணத்தாற் றன்மை திரிந்த பொருளை அத் திரிபு கூறுங்கால், ஆக்கங் கொடுத்துச் சொல்லுக, என்றவாறு.

ஆக்கமொடு கூற லென்பதனுற் றிரிபு கூறுதல் பெற்றும். என்னை ? அதன்க ணல்லது வாராமையின்,

இயற்கைப் பொருள், செயற்கைப் பொருளென்பன, இரு பெய ரொட்டுப் பண்புத் தொகை.

நச்சி :

இது, செயற்கைப் பொருள்மேல் மரபு வழுவாமை கூறு கின்றது.

இ-ள் : செயற்கைப் பொருளை — காரணத்தால் தன்மை திரிந்த பொருளைத் திரிபு கூறுங்கால், ஆக்கமொடு கூறல் — ஆக்கம் கொடுத்துச் சொல்லுக, எ-று.

**கல் :**

என்னுதலிற்றோ வெனின் செயற்கைப் பொருண்மேல் [1]மர பிலக்கணம் வழாமற் சொன் [2]னிகழற்பால வாமா றுணர்த் துதல் நுதலிற்று.

பொருள் : செயற்கை யாகிய பொருளை ஆக்க மென்னும் வாய்ப்பாட்டோடு சொல்லுக, என்றவாறு.

உதாகரணம் :- மயிர் நல்ல வாயின; பைங் கூழ் நல்ல வாயின, எனவரும். மேற்கூறிய இற்றெனக் கிளத்தல் இதற்கு அதிகாரத்தான் வருவித்துக் கொள்க.

**அரசு :**

என்பது செயற்கையாகிய பொருள்களை யெல்லா மாக்கங் கொடுத்துச் சொல்லுக.

உதா :- மயிர் நல்ல வாயின; பைங் கூழ் நல்ல வாயின, யெனச் சொல்லுக. ஆயின வென்ப தாக்கம்.

21. ஆக்கந் தானே காரண முதற்றே.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மேலதற் கோர் புறநடை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை : அவ் வாக்கந்தனைச் சொல்லு மிடத்துக் காரணம் முன்வைத்துச் சொல்லுக, என்றவாறு.

வரலாறு :- 'கடுவும் கை பிழி யெண்ணெயும் பெற்றமை யான் மயிர் நல்ல ஆயின' என வரும்.

**தெய்வ :**

இ-ள் : மேற் சொல்லப்பட்ட ஆக்கக் கிளவி காரணத்தை முதலாக வுடைத்து, எ-று.

செயற்கைப் பொரு ளெல்லாம் ஆக்கங் கொடுத்துக் கூறப் படா; (கூறப்பட்ட இ. ஏ.) காரண முள்வழியே ஆக்கங் கொடுப்ப தென்றவா றாயிற்று.

---

1. மருவி : திருத்தம் 2. னிக[ழ்](ழ) ற்பா [ல்](ல)

சேனு:

இதன் பொருள்: செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறுங்கால் காரணத்தை முற்கூறி, அதன்வழி யாக்கங் கூறுக, என்றவாறு.

தானே என்பது செய்யுட் சுவை குறித்து நின்றது.

உதாரணம்: கடுக் கலந்த கை பிழி யெண்ணெய் பெற்றமையான் மயிர் நல்ல வாயின; எருப் பெய் திளங் களை கட்டு நீர் கால்யாத்தமையாற் பைங் கூழ் நல்ல வாயின; நீர் கலத்தலால் நிலம் மெலி தாயிற்று; தீச் சார்தலால் நீர் வெய் தாயிற்று, என வரும்.

மயிர் நல்ல, பயிர் நல்ல எனச் செயற்கைப் பொருள் ஆக்கம் பெருது வந்தனவா லெனின், அந் நன்மை பொருட்குப் பின் ருேன்ருது உடன் ருேன்றிற்றேல் இயற்கையே யாம்; அவ்வா றன்றி முன் றீயவாய்ப் பின் நல்ல வாயினவேனும், தீய நிலமை காணுதான் மயிர் நல்ல, பயிர் நல்ல வென்ருற் படு மிழுக் கென்னை? அது செயற்கை யாவ துணர்ந்தான் ஆக்கங் கொடாது சொல்லினன்றே வழுவாவ தென்க.

செயற்கைப் பொருளை ஆக்கமுங் காரணமுங் கொடுத்துச் சொல்லுக வென்பதே கருத் தாயிற் சூத்திரம் ஒன் ருகற் பாற் றெனின், அவ்வா ருேதின், ஆக்கமுங் காரணமுஞ் செயற்கைப் பொருட்க ணுைத்த வாயின வென்பது பட்டுக் 'காரணமின்றி யும் போக்கின்று' (சொல் – 22) என்பதனேடு மாறுகோட லானும், காரணஞ் செயற்கைப் பொருளதோ ஆக்கத்ததோ வென ஐயுறப்படுதலானும், ஆக்கந்தானே காரண முதற் றெனப் பிரித்துக் கூறினு ரென்பது.

இயற்கைப் பொருள் ஆக்கமுங் காரணமும் பெருது வருதலுஞ் செயற்கைப் பொருள் அவை பெற்று வருதலும் இலக்கண மெனவே, இவ்வாறன்றி வருவன மரபு வழு வென் பதாம்.

நுண் ணுர்வுடையார்க்குத் 'தம் மரபினவே' (சொல்–11) என அடங்குவ தாயினும், ஏனை யுணர்வினுற்கு இவ் வேறுபா டுணர லாகாமையின் விரித்துக் கூறினுர்.

நச்சி :

இது மேலதற்கு ஓர் புறநடை.

இ-ள் : ஆக்கந் தானே-செயற்கைப் பொருளை ஆக்கமொடு கூறுங்கால் அவ் வாக்கச் சொற்றான், காரண முதற்று-காரணச் சொல்லை முன்னுக உடைத்து, எ-று.

உ-ம் : கடுக் கலந்த கை பிழி எண்ணெய் பெற்றமையின் மயிர் நல்ல வாயின; எருப் பெய்து இளங் களை கட்டு நீர் கால் யாத்தமையான் பைங்கூழ் நல்ல வாயின, எனவரும்.

'மயிர் நல்ல; பைங்கூழ் நல்ல' என ஆக்கம் இன்றி வந்தது பொருட்குப் பின் தோன்ருது உடன் தோன்றி நிற்றலின் இயற்கைப் பொருளாம். அவ்வாறன்றி, முன் தீயவாய்ப் பின் நல்ல ஆயினவழி அத் தீமை காணுதான் மயிர் நல்ல, எனினும் இழுக்கின்று, அச் செயற்கை உணராமல் கூறலின்.

கல் :

என் னுதலிற்ரூே வெனின், மேலதற் கோர் புறநடை யுணர்த்துதல் நுதலிற்று; மேற்கூறிய வாக்கச் சொற்றானே காரணச் சொல்லை முன்னுக வுடைத் தென்றவாறு.

உதாகரணம் : கடுவுங் கை பிழி [1]யெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல வாயின; எருப் பெய்து இளங் களை கட்டமையான், [2]நீர் கால்யாத்தமையாற் பைங்கூழ் நல்ல வாயின, என வரும். ஆக்க முற்கூறிக் காரணம் பிற்கூறியும் வருமா லெனின், பெரும்பான்மையும் முற் கூறப்பபடுதலின் முதற் றென்ருர் போலும். [3]இனி முதல் என்பதனை காரணமாக்கிக் கூறலும் ஒன்று.

அரசு :

என்பது, அவ் வாக்கந் தன்னைச் சொல்லுமிடத்து காரண முன்வைத்து ஆக்கத்தைப் பின்வைத்துச் சொல்லுக.

உதா :- கடுவுங் கை பிழி யெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல வாயின எனவும், எருப் பெய் திளங்களை கட்டு நீர் கால்யாத்தமையாற் பைங் கூழ் நல்ல வாயின, எனவுஞ் சொல்லுக. கடுவுங் கை பிழி யெண்ணெயுங் காரணம்; மயிர் நல்ல வாயின வென்ப தாக்கம்.

---

1. யென்(ணெ)ய்யும் 2. நீர் [க்] கால் 3. (இனி)

22. ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கி னுள்ளே.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின் எய்தியது விலக்குதல் நுதலிற்று.

**உரை :** ஆக்கக் கிளவி காரண மின்றியுஞ் சொல்லப்படும், வழக்கினுள், என்றவாறு. போக்கு என்பது குற்றம்.

வரலாறு: மயிர் நல்ல ஆயின. உம்மை எதிர் மறை. மற்று, வாளா தோதுஞ் சூத்திர மெல்லாம் வழக்கே நோக்கும்; செய்யுட் காயிற் கிளந்தே யோதும்; அதனால் 'வழக்கினுள்' என வேண்டா; அம் மிகுதியான் ஆக்கமும் காரணமும் இன்றி வருதலும், காரணம் கொடுத்து ஆக்க மின்றி வருதலும் என இரண்டுங் கொள்ளப்படும்.

வரலாறு: 'பைங்கூழ் நல்ல, எனவும், எருப் பெய்து இளங் களை கட்டு நீர் கால்யாத்தமையாற் பைங்கூழ் நல்ல, எனவும் வரும்.

**தெய்வ :**

மேலதற் கோர் புறநடை யுணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள் :** ஆக்கச் சொல் காரண மின்றியும் வரும் வழக்கி னுள், எ-று.

எனவே, செய்யு ளகத்து வரப் பெறா என்றவா றாம். போக்கின் றென்பது போகுத லின்று (போக்குத லில்லை இ.ஏ.) என்றவாறு. எனவே வரும் என்ற பொரு ளாயிற்று. உம்மை இறந்தது தழீஇயிற்று.

ஆடை நன்றா யிருந்தது; மணி நன்றா யிருந்தது, என நன்றாதற்குக் காரணங் குறியாது வந்தன. பைங்கூழ் நல்ல வாயின வென இடமுங் காலமும் இனமுஞ் சுட்டாது கண்ட காலத் தியற்கை பற்றி வரும் வழக்குக் கொள்க.

**சேனா :**

**இதன் பொருள் :** காரண முதற் றெனப்பட்ட ஆக்கச் சொற் காரண மின்றி வரினுங் குற்ற மின்று, வழக்கினுள், என்றவாறு.

உதாரணம்: மயிர் நல்ல வாயின; பயிர் நல்ல வாயின, என வரும்,

வழக்கினுட் காரண மின்றியும் வரு மெனவே, செய் யுளுட் காரணம் பெற்றே வரு மென்பதாம்.

உதாரணம்:

பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்
வலிய வாகுநின் ருடோய் தடக்கை (புறம்-14)

எனவும்.

தெரிகணை யெஃகந் திறந்தவா யெல்லாம்
குருதி படிந்துண்ட காக — வுருவிழந்து
குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண்மால்
தப்பியா ரட்ட களத்து. (களவழி நாற்பது — 5)

எனவும்,

வருமழைய வாய்கொள்ளும் வாடாச்சிர் வண்கைக்
கருமுருகன் சூடிய கண்ணி — திருநுதா
லின்றென் குரற் கூந்தற் பெய்தமையாற் பண்டைத்தன்
சாயல வாயின தோள்.

எனவும் காரணம் பெற்று வந்தவாறு கண்டு கொள்க. குக்கிற் புறத்த, சிரல் வாய, என ஆக்க மின்றி வந்தனவா லெனின் தொகுக்கும்வழித் தொகுத்த லென்பதனுன் ஆண் டாக்கந் தொக்கு நின்ற தென்பது.

'அரிய கானஞ் சென்ருேர்க்
கெளிய வாகிய தடமென் ருேளே' (குறு — 77)

எனவும்,

'நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு' (குறள் — 305)

எனவும், செயற்கைப் பொருள் செய்யுளுட் காரண மின்றி வந்தனவா லெனின், களவுக் காலத் தரியன இக் காலத் தெளிய வாயின வென்பது கருத் தாகலான், இக் காலங் காரண மென்பது பெறப்படுதலானும், ஊழா லென்பது அதிகாரத் தான் வரு மாகலானும், அவை காரண மின்றி வந்தன வெனப் படா வென்பது.

நச்சி :

இஃது, எய்தியது விலக்கிற்று.

இ-ள்: ஆக்கக் கிளவி காரண முதற்று (கி. ஆ. –சூ. 21) என்ற ஆக்கச் சொல், காரணம் இன்றியும் போக்கு இன்று என்ப – காரணம் இன்றி வரினும் குற்றம் இன்று என்று கூறுப, வழக்கி னுள்ளே — வழக்கிடத்து, எ–று.

உ-ம்: மயிர் நல்ல ஆயின; பயிர் நல்ல ஆயின, எனவரும். எனவே, செய்யுட்குக் காரணம் பெற்றே வரு மாயிற்று.

'வருமழைய வாய்க்கொள்ளும் வாடாச்சீர் வண்கைக்
கருமுருகன் சூடிய கண்ணி — திருநுதாஅல்
இன்றென் குரற்கூந்தற் பெய்தமையாற் பண்டைத்தன்
சாயல ஆயின தோள்'

என இது காரணமும் ஆக்கமும் பெற்றது.

குருதி படிந்துண்ட காகம் உருவிழந்து,
குக்கில் புறத்த சிரல் வாய (களவழி – 5)

என இதற்கு ஆக்கம் விகாரத்தால் தொக்கது என்று உணர்க.

அரிய கானம் சென்றோர்க்
கெளிய வாகிய தடமென் றோளே (குறுந்–77)

இதற்குக் 'கற்புக் காலத்தால் தோள் எளிய ஆயின', என அக் காலம் காரண மாயிற்று. உம்மை எதிர்மறை ஆகலான். காரணம் கொடுத்துச் சொல்லுதலே வலியுடைத்து.

கல் :

என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

பொருள்: மேற்கூறிய ஆக்கச் சொற்றான் காரணத்தை யொழியச் சொல்லுதலுங் குற்ற மில்லை யென்று சொல்லுப வாசிரியர், வழக்கினிடத்து, என்றவாறு. உம்மை யெதிர்மறை யாகலாற் காரணங் கொடுத்துக் கூறல் வலியுடைத்து.

உதாரணம்: மயிர் நல்ல வாயின; பைங்கூழ் நல்ல வாயின, என வரும்.

செய்யுள் விதி யுள்[1]வழிச் செய்யு ளென்று கூறி, வாளாதே யோதுஞ் சூத்திர மெல்லாம் வழக்கே [2]நோக்குதற் கிடையாக வின் வழக்கத்தினுள் ளென்பது மிகை; அதனுற் செயற்கைப் பொருள் காரணங் கொடுத் தாக்கங் கொடாதே சொல்லுதலும், காரணமும் ஆக்கமும் இரண்டும் கொடாதே சொல்லுதலும் கொள்ளப்படும்.

கடுவுங் கை பிழி யெண்ணெயும் பெற்றமையான் மயிர் நல்ல; பைங் கூழ் நல்ல; எனவே, செயற்கைப் பொருள் காரண மும் ஆக்கமுங் கொடுத்தலும், காரண மொழிய வாக்கங் கொடுத்தலும், ஆக்க மொழிய காரணமு மாக்கமும், இரண்டுங் கொடாதே சொல்லுதலு மென நான்கு வகைத்து. இவற்றுண் முன்னைய விதி யொன்றும் மரபிலக்கணம். பின்னைய மூன்றும் மரபு வழு வமைதி. இவை அவற்றுள் இச் சூத்திரத்தாற் கூறியது பெரும்பான்மை. [3]இலேசினுற் கூறிய விரண்டுஞ் சிறுபான்மை யென வுணர்க. இவை யமைதற்குக் காரண [4]முணர்வா ருணர்வு வகை, பற்றிப் போலும்.

அரசு :

என்பது ஆக்கமொடு புணர்ந்த பொருளைக் காரணமின்றி யுஞ் சொல்லுதல் வழக்கினுட் குற்ற மில்லை,

உதா : மயிர் நல்ல வாயின; பைங்கூழ் நல்ல வாயின. வெனக் காரணமின்றியே வந்தன. உம்மையாற் காரணங் கொடுத்துச் சொல்லுதல் வலியுடைத்து. இனி, 'போக்கின் றென்ப வழக்கி னுள்ளே' யென்ற விதப்பாற் செய்யுளகத் தாயிற் காரணமு மாக்கமுங் கொடுத்துச் சொல்லுக, வென்ப தாம்.

வரலாறு : வெண்பா —

வருமழைவாய்க் கொள்ளும் வாடாச்சீர் வண்கைக்
கருமுருகன் ஆடிய கண்ணி — திருநுதலா
லின்றென் குரற்கூந்தற் பெய்தமையாற் பண்டைத்தஞ்
சாயல வாயின தோள்.

இதனுள் கருமுருகன் சூடிய கண்ணி பெய்தமையா னென்பது காரணம். பண்டைத் தஞ் சாயல வாயின தோ ளென்ப தாக்கம் ஆதலா லிது காரணமு மாக்கமுங் கொடுத்து வந்தது. அவை இரண்டு முடன் வரவும் ஒன்று வரவும் பெறும்.

1. வழி (ச்) 2. நோக்குதனுற் : திருத்தம் 3. இ [லே] (லே) சினுற்
4. முணர்வா ருணர்வாருணர்வு : திருத்தம்.

23. பான்மயக் குற்ற வையக் கிளவி
தானறி பொருள்வயிற் பன்மை கூறல்.

இளம் :

இச்சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், உயர்திணைப் பால் ஐயத்துக்கட் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : திணை யறிந்து பாலையந் தோன்றிய வதனை அத்திணைப் பன்மைமேல் வைத்துச் சொல்லுக, என்றவாறு.

வரலாறு: ஒருவன் கொல்லோ ஒருத்தி கொல்லோ தோன்றா நின்றார், என வரும்.

இனி, உயர் திணைப் பாலையம் என்பதோர் ஒப்பிற் கொள்க.

தெய்வ :

மேற் சொல்லப்பட்ட இருவகைப் பொருட்கண்ணும் ஐயக் கிளவி உணர்த்துகின்றா ராகலின். இச்சூத்திரம் அதன் பகுதியாகிய பால் ஐயம், திணை ஐயம் என்னும் இரண்டனுள்ளும் பால் ஐயம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தானறிந்த பொருட்கட் பான் மயக்குற்ற ஐயப் பொருண்மையைப் (பொருண்மையை யப் பன்மை இ. எ.) பன்மையாற் கூறுக, எ-று.

தா னறி பொருள் என்றமையால் திணை யறிந்து பால் அறியாதவழி என்பது பெறப்பட்டது. பால் ஐயம் பெரு வழக்கிற்று ஆகலின், முற்கூறப்பட்டது. சேய்மைக்கட் டோன்றுவ தோர் மக்கட் பிழம்பு கண்டு, ஒருவன் கொல்லோ, ஒருத்தி கொல்லோ என ஐயுற்றான் அதனைத் தோன்றுவான் எனவும் ஆகாது, தோன்றுவாள் எனவும் ஆகாது; ஆயிடைத் தோன்றுவார், என்க. பைங்கூழ் அழிவு கண்டான், ஒன்று கொல்லோ பல கொல்லோ செய்புக்கன, என்க.

சேனா :

இதன் பொருள் : திணை துணிந்து பால் துணியாத ஐயப் பொருளை அவ்வத் திணைப் பன்மையாற் கூறுக, என்றவாறு. கிளவி யென்பது ஈண்டுப் பொருளை. ஐயப் பொருளாவது சிறப்பியல்பாற் றோன்றாது பொது வியல்பாற் றோன்றிய பொருள்.

உதாரணம்: ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ, இஃதோ தோன்றுவார், எனவும், ஒன்றோ பலவோ செய் புக்கன, எனவும் வரும்.

திணைவயி னென்றது தா னறி பொருள்வயி னெனப் பொதுப்படக் கூறியவதனுன், ஒருவன் கொல்லோ பலர் கொல்லோ இக் குருக்கத்தி நிழல் வண்ட லயர்ந்தார், எனவும், திணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மை யொருமைப் பா லையமுங் கொள்ளப்படும்.

ஒருமையாற் கூறின் வழுப்படுத லேக்கிப் பன்மை கூற லென வழாநிலை போலக் கூறினு ரேனும், ஒருமையைப் பன்மை யாற் கூறுதலும் வழு வாதலின், ஐயப் பொருண்மேற் சொன் னிகழுமா றுணர்த்திய முகத்தாற் பால் வழு வமைந்தவா றும்.

**நச்சி:**

இது மேல் இயற்கை, செயற்கை எனப் பகுத்த பொருள் களுள் திணை உணர்ந்து பால் ஐயம் தோன்றியவழி அவ் வையப் பொருள்மேல் சொல் நிகழ்த்துமாறு கூறுகின்றது.

இ–ள்: பால் மயக்குற்ற ஐயக் கிளவி — திணை துணிந்து பால் துணியாது நின்ற ஐயப் பொருளை, தான் அறி பொருள் வயின் பன்மை கூறல் — தான் அறிந்த உயர் திணைப் பொரு ளிடத்துப் பன்மையால் கூறுக.

ஐயப் பொருளாவது சிறப் பியல்பால் தோன்றுது பொது இயல்பால் தோன்றிய பொருள்.

ஆண் மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ தோன்று கின்றவர், என வரும்.

'திணைவயின்' என்றது, தான் அறி பொருள்வயின் எனப் பொதுப்படக் கூறிய அதனுல், ஒருவன் கொல்லோ பலர் கொல்லோ இக் கறவை உய்த்த கள்வர்; ஒருத்தி கொல்லோ பலர் கொல்லோ இக் குருக்கத்தி நிழல் வண்டல் அயர்ந்தார், எனத் திணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மை ஒருமைப் பால் ஐயமும் கொள்க,

அப் பொருட்கு இரு பாலுமாய் நிற்றல் இன்மையின் தான் ஒன்றுகிய பொருளைப் பன்மையாகக் கூறினும் அமைக, என வழு வமைத்தார்.

கல் :

என் னுதலிற்றோ வெனின், இன்னும் உலகத்துப் பொருடான், ஐயுறும் பொருளும் துணி பொருளும் மென இரு வகைத்து; அவற்றுள் ஐயுறும் பொருட்கண் உயர்திணைப் பால் ஐயத்துக்கட் பால் வழீஇ யமையுமா றுணர்த்துதல் நுதலிற்று.

பொருள் : ஒரு சாத்தன் றிணை யறிந்து பான் மயங்கலுற்ற ஐயச் சொல் லெனப்படுஞ் சொற் றான் அறிந்த வுயர் திணைப் பொருளிடத்துப் பன்மையாகக் கூறுங் கூற் றென்றவாறு.

உ-ம்: ஒருவன் கொல்லோ ஒருத்தி கொல்லோ இதோ தோன்[1]றுவார், என்பது. இவ் வையம் கண்டவிடத்து ஐயமும், காணுவிடத்து ஐயமும் என இரு வகைத்து. காணுவிடத்து ஐயமும் இவ்வாறு கொள்க.

இனிக் காணுதவழி ஒருவனோ ஒருத்தியோ வென்ப தன்றி, ஒருவனோ பலரோ வென்று ஐயுறும் பான் மயக்கமுங் கொள்க. இது தா னறியா துருவ தல்லது அப் பொரு ளிரு பாலுமாய் நிற்ற லில்லை. *பிறமத் தோற்றுகிய வப் பொருளைப் பன்மை யாற் கூறுதல் வழூஉ மன்; வழூஉ [2]எனினும் அமை வெனப் பால் வழூஉ வமைத்[3]தவா றுயிற்று.

இவ் வையத்துக்கு இலக்கண வழக்கென வேறு காணுமை யின் இதுதான் இலக்கண மாகற்பாற் றெனின், வேறு வழக் கில்லையே எனினும் இது பொருள் வகை தொக்க வழூஉ வெனப் படும். ஒருவனோ ஒருத்தியோ தோன்றுகின்றார், எனப் பொது வாகக் கூற இலக்கண வழக்காம் பிற வெனின், அவ்வாறு கூறுவா ரின்மையானும், ஆர் [4]என்பது, ஆண்பாற் கல்லது ஏலாமையானும் ஆகா தென மறுக்க.

அரசு :

ஒருவன் திணை யறிந்து பான் மயங்குற்றவழி, ஐயப் பொரு ளைத் தா னுயர் திணை யென்ப தறிந்தோன் அதனை அத் திணைப் பன்மைமேல் வைத்துச் சொல்லுக.

1. (று) 2. [யெ] (எ) 3. த [வ்] (வா) 4. [யெ] (எ)
* தெளிவில்லை.

உதா: சேய்த்தாய்த் தோன்றுவ தோர் மக்கட் பிழம்பு கண்டு மக்க ளென்ப துணர்ந்து ஆண்பால், பெண் பா லுணராதவழிப் பெண்டாட்டி கொல்லோ ஆண் மகன் கொல்லோ தோன்றுகின்றவர், என்று பன்மையாற் சொல்லுக. அஃ திரு பாற்கு முரித் தாதலான் திணையி னென்னுது தா னறி பொருள்வயி னென்னப் பொதுப்படக் கூறிய வதனுல் ஒருவன் கொல்லோ பலர் கொல்லோ கறவை யுய்த்த கள்வர்; ஒருத்தி கொல்லோ பலர் கொல்லோ குருக்கத்தி நீழல் வண்ட லயர்ந் தார், எனத் திணையோ டாண்மைப் பெண்மை துணிந்த பன்மை யொருமைப் பால் ஐயமுங் கொள்க.

இதற்கு வேறுமொரு காரணங் காட்டுதும்: ஒரு மக்கட்டலை யோடு காட்டுட் கிடந்தது கண்டு, பெண்டலை, ஆண்டலை யென் றுணராதான் பெண்டாட்டி தலை கொல்லோ, ஆண் மகன் றலை கொல்லோ, இஃதோ கிடந்த மக்கட்டலை யென்க. மக்க ளென்ப திரு பாற்கும் பொது வாகலானி ஐயப்படு மிடத் தொரு பாற் குரிய சொல்லாற் சொல்லா தொழிக; பன்மையாற் சொல்லுக.

ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கா றுகிய வுயர்சொற் கிளவி
யிலக்கண மருங்கிற் சொல்லா றல்ல, (27)

என வழு வமைக்கு மாகலா லென்ப. மயக்குற்றதனைக் கிளவி மேல் வையாது ஒருவன் மயக்குற்ற விடத் தென்க.

*ஒருவரைக் கூறும்—என்னுஞ் சூத்திரம் ஈண்டும், 27-வது சூத்திரமாகவும் கூறினுர்.

24. உருவென மொழியினு மஃறிணைப் பிரிப்பினும்
இருவீற்று முரித்தே சுட்டுங் காலே.

இளம்: இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், திணை ஐயத்துக்கண்ணும், அஃறிணைப் பாலையத்துக்கண்ணும் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

* இக் குறிப்பு பொருந்துமாறின்று

உரை : திணை ஐயம் தோன்றினவழி ஒரு வடிவு சொல்லக் கருதினும், அஃறிணையை ஒன்று பல என்று பிரித்துச் சொல்லினும் மேலெடுத்த போலப் பொதுவினானே சொல்லுக, என்றவாறு.

வரலாறு: குற்றி கொல்லோ மகன் கொல்லோ தோன்றுகின்ற உரு, என வரும் இது திணை ஐயம். ஒன்று கொல்லோ பல கொல்லோ, செய் புக்க பெற்றம், என வரும் இஃது அஃறிணைப் பாலையம். உரு எனவே திணை ஐயம் என்பதோர் ஒப்பிற் பெற்றாம். பால் ஐய மாயின் தத்தம் பகுதியொடு முடியும் என்பது.

**தெய்வ :**

திணை ஐயத்தின்கண் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : உயர்திணை, அஃறிணை என்னும் இரண்டு வேறு பாட்டினையுஞ் சுட்டி ஐயப்படுங் காலத்து, * உரு பெனச் சொல்லினு முரித்து, அஃறிணை ஒருமையாற் கூற்று முரித்து, அப்பொருள், எ-று.

மேல் தா னறி பொருள் என்றமையானும் ஈண்டு இரு வீற்றும் என்றமையானும், திணை ஐயம் என்பது பெற்றாம். ஐயம் என்பது அதிகாரத்தான் வந்தது. இரு வீற்று முரித்து, என்பதனை, உரித் திருவீற்றும், என்று மொழி மாற்றுக. அஃறிணைப் பிரிப்பு என்றதனால் பொதுமையிற் பிரிவது (பன்மையிற் பிரிவது இ. எ.) ஒருமை யாதலின் ஒருமைச் சொல்லாற் சொல்லினும் என்றாராகக் கொள்க.

குற்றியோ மகனோ என ஐயுற்றுழி, குற்றியோ மகனோ தோன்றுகின்ற உருபு, தோன்றுகின்ற அது, என்க.

உருபு என்றதனான், அப் பொருள் பயக்கும் பிழம்பு, வடிவு, பிண்டம் என்பனவுங் கொள்க.

**சேனா :**

**இதன் பொருள் :** * உருபெனச் சொல்லுமிடத்தும், ஒருமையும் பன்மையுமாகப் பிரிக்கப்படும் அஃறிணைப் பொதுச் சொற்கண்ணும், இவ் விரு கூற்றினும் ஐயப் புலப் பொதுச் சொல் லாத லுரித்து, என்றவாறு.

---

* 'உருபென' எனச் சூத்திரப் பாடங்கொண்டார்

எனவே, ஆண் மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ தோன்றுகின்ற வுருப், எனவும், ஒன்று கொல்லோ பல கொல்லோ செய் புக்க பெற்றம், எனவும் சொல்லுக, வென் பதாம்.

ஐயக் கிளவி யென்பது அதிகாரத்தாற் பெற்றும்.

உருபினு மென்னுது உருவென மொழியினு மென்றதன்ன். ஊருபின் பொருளை வாகிய வடிவு, பிழம்பு, பிண்ட மென்னுந் தொடக்கத்தனவுங் கொள்க.

பன்மை கூறல் உயர்திணைப் பாலையத்திற் குரித்தென்றும், உருவென மொழிதல் திணை யையத்திற் குரித்தென்றும், உரை யாசிரியர் கூறினரா லெனின், அவை அவற்றிற்கே உரியவாயின் அஃறிணைப் பிரிப் பென்றாற் போல உயர்திணைப் பான் மயக் குற்ற வென்றும், திணை யையத் தென்றும், விதந் தோதுவார் ஆசிரியர்; அவ்வா றோதாமையானும், நடையுள் அவை பொது வாய் வருதலானும், அவை போலி யுரை யென்க.

ஒருவன் கொல்லோ பலர் கொல்லோ என்றற் றொடக்கத்து உயர்திணைப் பன்மை யொருமைப் பாலையத்திற்கு உருபு முத லாயின வேலாமையும் திணை யைத்திற்கும் ஏனைப் பாலையத்திற் கும் ஏற்புடைமையும், சுட்டி யுணர்க வென்பது போதரச் 'சுட்டுங்காலை' என்றார். சுட்டுதல் — கருதுதல்.

நச்சி :

இதுவும் ஐயப் பொருள்மேல் சொல் நிகழத்துமாறு கூறு கின்றது.

இ-ள் : இரு ஈற்றும் சுட்டுங் காலை — திணை ஐயத்துக் கண்ணும் அஃறிணைப் பால் ஐயத்துக்கண்ணும் கூறும் மரபு கருது மிடத்து, உரு வென மொழினும் — திணை ஐயத்துக்கண் உரு வெனச் சொல்லுமிடத்தும், அஃறிணைப் பிரிப்பினும் — ஒருமையும் பன்மையுமாகப் பிரிக்கபடும் அஃறிணை இயற்பெய ராகிய பொதுச் சொற்கண்ணும், உரித்து — ஐயத்தைப் புலப் படுத்தும் பொது வாகிய தன்மை உரித்து, எ-று.

குற்றி கொல்லோ மகன் கொல்லோ இத் தோன்றுகின்ற உரு; ஒன்று கொல்லோ பல கொல்லோ இச் செய் புக்க பெற்றம், என வரும்.

உருவினும் என்றது, உருவென மொழியினும் என்றதனான், உருவின் பொருளவாகிய வடிவு, பிழம்பு, பிண்டம் என்னும் தொடக்கத்தனவும் கொள்க. உரு முதலியன உயர்திணைப் பன்மை ஒருமைப் பால் ஐயத்திற்கு ஏலாமையும் ஏனைத் திணை ஐயத்திற்கு ஏற்புடைமையும் தோன்றச் சுட்டுங் காலை என்றார்.

உருபு எனப் பகர உகரமாகப் பாடம் ஓதில், அது வேற்றுமை உருபிற்கும் உவம உருபிற்கும் பெயராய், வடிவை உணர்த்தாது என்று உணர்க.

அது வென் உருபுகெட (வேற். மயங். சூ. 11) எனவும்.

உருபினும் பொருளினும் மெய்தடு மாறி (வேற். மயங். சூ. 18) எனவும்.

உருபு தொடர்ந் தடுக்கிய (வேற். மயங். சூ. 19) எனவும்.

மெய்யுருபு தொகாஅ (வேற். மயங். சூ. 22) எனவும்.

யாதன் உருபின் (வேற். மயங். சூ. 23) எனவும் பிறாண்டும் வேற்றுமைக்கு உருபு என்றே சூத்திரம் செய்தவாறு காண்க. 'உவம உருபு' என்றல் அவ்வோத்திற் கூறிய உரைகளான் உணர்க.

அன்றியும், சான்றோர் செய்யுட்களிலும் உருவு கிளர் ஓவிவினை, எனவும், ஞாயிற்[1]றுருவுகிளர் வண்ணங் கொண்ட (பதிற். 52 : 29, 30) எனவும்,

உருவக் குதிரை (அகம். 1, 2) எனவும்,

வேண்டுருவம் கொண்டதோர் கூற்றங் கொல் (கலி. 59 : 9) எனவும், பிறாண்டும் கூறுமாற்றான் உணர்க.

உருவு என்பது உடல், உயிர் கூட்டப் பொதுமையாகிய 'மக்கள்' என்னும் பொதுமைக்கு ஏலாது உடலையே உணர்த்துதலானும், 'பெற்றம்' என்பது இயற்பெயராயினும் ஒருபால் சொல்லுதற்கண் ஒரு பால்மேல் நில்லாது இரு பால்மேல் நிற்றலானும் வழுவமைதி ஆயிற்று.

கல் :

என் னுதலிற்றோ வெனின், திணை ஐயத்துக்கண்ணும் அஃறிணைப் பால் ஐயத்துக்கண்ணும் வழீஇ யமையுமா றுணர்த்துத னுதலிற்று.

---

1. றுருபு என்றும் பாடம்.

**பொருள் :** உரு வெனச் சொல்லுமிடத்தும், அஃறிணைப் பிரிப்[1]பின் கண்ணும், இவ் விரண்டு கூற்றின் கண்ணும், ஐய முரித்துக் கருதுங் காலத் தென்றவாறு என்றது. திணை ஐயந் தோன்றியவழி 'உருவு' என்று சொல்லுக. அஃறிணைப் பால் ஐயந் தோன்றிய வழி அஃறிணை இயற் பெயராகிய [2]பொதுப் பெயராற் சொல்லுக; என்றவாறு. ஒருமையும் பன்மையும் வினையாற் பிரிக்கப்படுதலின், ஆகுபெயரான் அஃறிணை இயற் பெயர் [3]பிரிப் பெனப்பட்டது. ஐய மென்ப [4]ததிகாரத்தான் வருவிக்க. திணை ஐயம், அஃறிணைப் பால் ஐயம் [5]என்பன சூத்தி ரத்துள் இல்லை யாயினும் உரு வென்றும் அஃறிணைப் பிரிப்பு என்றும் கூறிய வாய்ப்பாட்டான் உய்த் துணர்ந்து கொள்ளப் படும்.

உதாரணம் : குற்றி கொல்லோ, மகன் கொல்லோ இதோ தோன்றுகின்ற உரு வென்பது. [6]ஒன்றென முடித்தல் என்பத னுன் உருவே யன்றி வடிவு, பிழம்பு, பிண்டம் என்பனவற் றுனுஞ் சொல்லுக. இதற்குங் கா்ணுத விடத்து ஐயமும் கொள்க.

இனி அஃறிணைப் பால் ஐயம் : ஒன்று கொல்லோ பல கொல்லோ செய் புக்க பெற்றம், என்பது. இதற்குக் கண்ட விடத்து ஐய மென்ப தில்லை. இதனுட் டிணை ஐயத்துக் கூறிய [7]உருவு என்னும் வழக்கு உட லுயிர் கூட்டப் [8]பொருண்மை யாகிய மக னென்னு நிலைமைக் கேலா அவ னுடலைப் பிரிய நின் று[9]ணர்த்தினமையான்; அதுவும் ஓர் திணை வழு வமைதி யெனப் படும்.

அஃறிணைப் பால் ஐயத்துக் கூறிய வியற் பெயர் பொது வெனினு மோர் சொல்லுதற்கண் ஒரு பான்மே னிற்கற் பாலது, அவ்வாறு நில்லாது இரு பான்மேலு நின்றமையின் இதுவுமோர் மரபு வழு வமைதி யெனக் கொள்க,

**அரசு :**

என்பது திணை ஐயந் தோன்றியவழி உரு வென்று சொல்லு தலும் அஃறிணையை ஒன்று, பல வென்று பிரித்துச் சொல்லுதலு

---

1. பின்[க்]கண் 2. [பொது] பொதுப் 3. பிரிப்பெ [ன்ப] (ன)ப்பட்டது
4. [த்] (த) திகாரத்தான் 5. என்ப [து] (ன) 6. ஒன் [றெ] (றி) ன
7. உரு [பு] (வு) 8. பொரு(ண்)மை 9. ணர்த்தி [ன்] (ன)மை

மிவையு மேலதே போல பொதுவினனே சொல்லுதலாம். [1]இரு வீற்று முரித்தே சுட்டுங் காலை யென்பது உயர்திணைக்கும் அஃறிணைக்கும் ஒருமைக்கும், பன்மைக்கு முரித்தான பொதுச் சொல்லாற் சொல்லுக சுட்டிச் சொல்லுமிடத்து.

உதா : மும் முழங் கையரைப் போல வொக்கலு மதற்குத் தக்க பிழம்பும் மாமாலைப் பொழுது கண்டு ஐயுற்றான், குற்றி கொல்லோ மகன் கோல்லோ தோன்றுகின்ற வுரு வென் றிரு திணைக்கும் பொதுவாகச் சொல்லுக. உருவினு மென்னு துரு வென மொழியினு மென்றதனு னுருவின் பொருள வாகிய வடி வெனினும் பிண்ட மெனினும் பிழம்பெனினு மொக்கும் தோன்றுவான், தோன்றுவாள், தோன்றுவது என்று சொல லற்க. இனி, அஃறிணைப் பால் ஐயத்துக்கட் சொன் னிகழுமாறு ஒருவன் செய் புக்குத் தின்ற பெற்றச் சுவடு பலவாய்க் கிடந் தன கண்டான், ஒன்று பல சுவடுபடத் திரிந்து தின்னும், பல வொருங்கு புக்குத் தின்னினுஞ் சுவடு பல வாகு மாதலான் ஐயுற்று நின்றவழி, ஒன்று கொல்லோ பல கொல்லோ செய் புக்கப் பெற்ற மென்க. பெற்ற மென்பது இரு பாற்கு முரித் தாகலின் புக்கது, புக்கன வென்னற்க. உருவென மொழியினு மென்பதற்குத் திணை ஐய மென்ப தொப்பினுற் கொள்க.

25. தன்மை சுட்டலு முரித்தென மொழிப
அன்மைக் கிளவி வேறிடத் தான.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ-வெனின், ஐயப்பட்ட அப் பொருளைத் துணிந்தவழிச் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : அன்மைத் தன்மையைச் சொல்லுதலும் உரித்து ஐயத்திற்கு வேருய்த் துணி பொருளிடத்து, என்றவாறு.

ஒருத்தி யெனத் துணிந்தவழி, ஒருவனல்லள் ஒருத்தி, என வரும்; ஒருவன் எனத் துணிந்தவழி, ஒருத்தி யல்லன் ஒருவன். என வரும். இஃது உயர்திணைப் பால் ஐயத்துக்கண் துணிபு தோன்றினவழிச் சொல் நிகழுமாறு; மற்றையனவும் அன்ன.

---

1. இரு

இனி, ஒருவன், வேறிடம் என்பதனைத் துணியப்படும் பொருட்கு வேறாகி நிற்கும் பொருள் என்னும். அவன் உதாரணங் காட்டுமாறு: குற்றி கொல்லோ? மகன் கொல்லோ? என ஐயமுற்றான், மகன் என்று துணியின், குற்றி யன்று மகன் எனவும், குற்றி என்று துணியின், மகன் அல்லன் குற்றி எனவும் வரும் என்னும்.

இனி, அல்லாத தன்மையை யுடையது துணியப்படும் பொருளன்றே; அதனான், அதன்கண்ணே அன்மையை வைத்துச் சொல்லுப என்ப, முன்னை யுதாரணங் காட்டுவார். குற்றியல்லன் மகன் என்புழிக் குற்றியின் அல்லன், என்று ஐந்தன் உருபு விரித்து உரைக்க.

**தெய்வ:**

மேல் ஐயப்பட்ட பொருள் துணியப்பட்டவழிச் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: துணியப்பட்ட பொருளின் வேறாகிய பொருட்கண் வரும் அன்மைக் கிளவி, துணியப்பட்ட பொருளைச் சுட்டலும் உரித்தென்று சொல்லுவர் புலவர், எ-று.

தன்மை என்பதனான், அப்பொருட்கு இயல்பு என்பது பெற்றாம். பெறவே துணியப்பட்ட பொருளாயிற்று. வேறிடத்து அன்மைக் கிளவி தன்மை சுட்டலும் உரித்தெனக் கூட்டுக. உம்மை எதிர்மறை யாதலால் சுட்டாமை பெரும்பான்மை.

உ-ம்: குற்றி யல்லன் மகன்; மகன் அன்று குற்றி; பெண்டாட்டி யல்லன், ஆண் மகன்; ஆண்மகன் அல்லள், பெண்டாட்டி; ஒன்றல்ல பல; பல வன்று ஒன்று, இவை துணியப்படாத பொருளைச் சுட்டி வந்தன.

குற்றி யல்லன் மகனே, எனத் தேற்றேகாரங் கொடுத்துழி அன்மை துணியப்பட்ட பொருளைச் சுட்டின் குற்றி நின்று வற்றும்; ஆதலால், அன்மைக் கிளவி அல்லாத பொருளைச் சுட்டுதல் ஆசிரியர் மதமென்று கொள்க.

சேனு :

இதன் பொருள : ஐயுற்றுத் துணியும்வழி அன்மைக் கிளவி அன்மைத் தன்மையைச் சுட்டி நிற்றலு முரித்தென்று சொல்லுவர், துணிந்து தழீஇக் கொள்ளப்பட்ட பொருளின் வேறாய பொருளிடத்து, என்றவாறு.

என்றது, குற்றிகொல்லோ மகன்கொல்லோ என்றுனும், ஒருவன் கொல்லோ ஒருத்தி கொல்லோ என்றுனும், ஒன்று கொல்லோ பலகொல்லோ என்றுனும், ஐயம் நிகழ்ந்தவழித் துணிதலு முண்டு; பிற நடையுட் டுணிந்தவழி மறுக்கப்படும் பொருண்மேல் அன்மைத் தன்மை யேற்றினு மமையு மென்ற வாறு.

மகனென்று துணிந்தவழிக் குற்றி யன்று மகனெனவும், குற்றி யென்று துணிந்தவழி, மக னல்லன் குற்றி யெனவும், ஆண் மகனென்று துணிந்தவழிப் பெண்டாட்டி யல்லள் ஆண் மகனெனவும், பெண்டாட்டி யென்று துணிந்தவழி ஆண்மக னல்லன் பெண்டாட்டி யெனவும், ஒன்றென்று துணிந்தவழிப் பல வல்ல ஒன்றெனவும், பலவென்று துணிந்தவழி, ஒன்றன்று பலவெனவும் மறுக்கப்படும் பொருண்மேல் அன்மைக் கிளவி அன்மைத் தன்மையைச் சுட்டி நின்றவாறு.

உம்மை எதிர்மறை யாகலான் வேறிடத்துச் சுட்டாமையே பெரும்பான்மை யென்பதாம். ஆகவே, இவ் வுருபு குற்றி யன்று மகனென ஐயப் புலமாகிய பொதுப் பொருண்மேலா னும், குற்றி யல்லன் மகனெனத் துணி பொருண்மேலானும், அன்மைக் கிளவி அன்மை சுட்டி நிற்றல் பெரும்பான்மை யென்பதாம்; என்னை, வேறிடத்துச் சுட்டாமையாவது ஈண்டுச் சுட்டலே யாகலான்.

குற்றி யன்று மகன், என்றவழி மகனென்பது நின்று வற்றுமெனின்,

எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
யவ்விய னிலையல் செவ்வி தென்ப (சொல் — 68)

என்பதனுன், எழுவாய் வெளிப்படாது நிற்றலு முண்மையான், வெளிப்படாது நின்ற இவ னென்னு மெழுவாய்க்கு அது பயனிலை யாகலின், நின்று வற்றுதல் யாண்டைய தென்க. அல்லன வற்றிற்கு மீ தொக்கும்.

குற்றி யல்லன் என்புழிக் குற்றி யென்பது அல்லனென்னுஞ் சொல்லோ டியைந்தவா றென்னை யெனின், இவ்வுருபு குற்றியா மென்றவழி, ஆம் என்பதனோடு குற்றி யென்பதூஉம் எழுவாய் நின்றே இயைந்தாற் போல, இவன் குற்றி யல்லன் என்புழி, ஆம் என்பதன் எதிர்மறையாகிய அன்மைக் கிளவியோடும் குற்றி யென்பது, எழுவாய் நின்றே யியையு மென்பது: எழுவா யியைதலி னன்றே, யான் நீ யல்லன் என்புழி, நீ யென்பது வேற்றுமைக்கேற்ற செய்கை பெறாது நின்ற தென்க.

நச்சி :

இது, முன்னர்க் கூறிய பால் ஐயத்தையும் திணை ஐயத்தை யும் துணிந்து கூறும்வழி, அவற்றிற்கு அன்மைத் தன்மை கூறும் மரபு கூறுகின்றது.

இ-ள் : தன்மை சுட்டலும் உரித்து — ஒருவர்க்குப் பால் ஐயமும் திணை ஐயமும் நிகழ்ந்துழி அங்ஙனம் ஐயுறலே அன்றி அவர்க்கு அப்பொருள்களின் உண்மைத் தன்மையைக் கருது தலும் உரித்து, அன்மைக் கிளவி வேறு இடத்தான என மொழிப — ஆண்டு ஒரு பொருள் ஒரு பொருள் அல்லவாம் தன்மை உணர்த்தும் சொல் ஐயத்துக்கு வேறாய்த் துணிந்து தழீஇக் கொண்ட பொருளின்கண்ண, என்று கூறுவர் ஆசிரியர்.

(உ-ம்) இவன் பெண்டாட்டி அல்லன், ஆண்மகன்; இவள் ஆண்மகன் அல்லள், பெண்டாட்டி; இவன் [1]குற்றி அல்லன், மகன்; இவ்வுரு மகன் அன்று, குற்றி; இப்பெற்றம் பல அன்று, ஒன்று; இப்பெற்றம் ஒன்று அல்ல, பல, என வரும்.

இவன் என்னும் எழுவாய், அல்லன் என்பதனோடு முடிந் தது. மகன் என்பது இவன் என்னும் சுட்டுப் பெயர்க்குப் பெயர்ப் பயனிலையாய் நின்றது. இவற்றிற்கு ஐந்தாம் உருபு விரித்தலும் ஒன்று, பெண்டாட்டியின் அல்லன் என.

இனிச் சேனாவரையர் முன்னிற் சூத்திரத்தில் உருவென் பதனை ஆண்மகன்கொல்லோ பெண்டாட்டி கொல்லோ இத் தோன்றாநின்ற உருவு, எனப் பால் ஐயத்திற்கு உருவு என்னும் ஐயப் புலப் பொதுச்சொல் உரித்து என்று உதாரணம் காட்டி இச் சூத்திரத்தில் அன்மைக் கிளவி மறுக்கப்படும் பொருள்

1. குற்றன் : திருத்தம்

மேல் ஆம், என்று கூறினரால் எனின், அவர் உதாரணம் காட்டியவற்றில் ஆண்மகன் என்று துணிந்தவழிப் பெண்டாட்டி அல்லள், ஆண் மகன், என்றும், பெண்டாட்டி என்று துணிந்தவழி ஆண் மகன் அல்லன், பெண்டாட்டி என்றும், மறுக்கப் படும் பொருள்மேல் அன்மை கூறி, அவற்றிற்கு இவ் வுருவு பெண்டாட்டி அல்லள், ஆண்மகன் என்றும், இவ் வுருவு ஆண் மகன் அல்லன், பெண்டாட்டி என்றும் உருவு என்னும் சொல் கூட்டியே பொருள் முடிக்க வேண்டுதலின் உருவு என்னும் அஃறிணைப் பெயர் அல்லன் என்னும் உயர்திணை வினைக்குறிப் போடு முடியாமை உணர்க. அன்றியும், இவன் பெண்டாட்டி அல்லள், ஆண்மகன்; இவள் ஆண்கமன் அல்லன், பெண்டாட்டி என அவர் சொல் முடித்தற்குக் கூட்டிய சுட்டுப் பெயர் கூட்டினும் முடியாமையும் உணர்க.

இனி, குற்றியோ மகனே! என்று ஐயுற்றான் மக னென்று துணிந்தது, மக்கள் தன்மையை ஆண்டுப் பெற் றன்றே? அது பெறவே குற்றித் தன்மை ஆண்டு இல்லை ஆயிற்று. ஆண்டு இல்லாத குற்றித் தன்மையன் அல்லன், மகன்; ஆதலான் அஃது அல்லாதான்மேல் அன்மை ஏற்றுதலே ஆசிரியர் கருத்து என்று உணர்க. இனிக் குற்றி என்று துணியினும், இஃது ஒக்கும். உம்மை எண் ணும்மை.

கல்:

என் னுதலிற்றோ வெனின் துணி பொருட்கண் மர பிலக் கணம் கூறுதல் நுதலிற்று.

பொருள்: தனது தன்மையாகிய அன்மைத் தன்மையைச் சொல்லுதலு முரித் தென்று சொல்லுப வாசிரியர். அது அன்மைப் பொருள் எவ்விடத் தெனின், ஐயத்துக்கு மறுதலை யாகிய துணிவிடத் தென்றவாறு. தன்மை சுட்ட லென்புழி இன்ன [1]தன்மை யென்பது இன்றே[2]னு மேல் அன்மைக் கிளவி என்றதனான் அன்மைத் தன்மை யென்ப [3]தோர்ப்பிற் கொள்க. கிளவி என்பது பொருள்.

உதாகரணம்: பெண்டாட்டி யல்லன் ஆண்மகன். ஆண் மகனல்லள் மெண்டாட்டி; குற்றி யல்லன் மகன்; [4]மகனன்று குற்றி [5]பலவன்று ஒன்று; ஒன் றல்ல பல, என்பன.

1. [த்] தன்மை 2. னு (ம்) (மே) ல் 3. தோர்ப்பி [ர்] (ற்)
4. மக [ன்ன] (னன்) று 5. பல [வெனரே] (வ) ன்று (ஒன்று)

பெண்டாட்டி யல்லன் ஆண்மகன் என்புழி, ஆண்மகனென்னும் பெயர் எழுவாயாய், அல்லன் என்னும் வினைக் குறிப்பினைப் பண்பு கொள்ள வருத லென்னும் பயனிலையாக முன்னே கொண்டு நின்றமையிற், பெண்டாட்டி யென்னும் பெயர்க்கு [1]முடிவில்லை யெனின், அதற் குருபு தொகை யாக்கி, நீக்கப் பொருட்கண் ஐந்தாவதனைப் பெண்டாட்டியின் அல்லன் என விரித்து முடிபு கொள்க. இதனல் சொல்லியது என்னை யெனின் இருபொருளை ஐயுற்றுத் துணியும்வழி அவ் வையுற்ற பொருட்டன்மை இத் துணி பொருளிடத்து இன்மையுந், துணி பொருட்கட் டன்மை அவ் வையப் பொருட்கண் இன்மையுங் காணுமன்றே; கண்டுழி இஃ தன்மை அதற்கும், அஃ தன்மை இதற்கும் அன்மை யாதானும் ஒன்றன்மேல் அன்மை கொடுப்பினும் அமையு மென்று கருதுக. இஃ தன்மை யதற்கும் உண்டே யெனினுந் துணிந்தவழி யுள்பொருளாய் நின்று காணப்பட்டது அஃ தன்மை யாதலின் இதன்மே [2]லிறுக்கு மென மர பிலக்கணங் கூறியவா றுயிற்று.

அரசு :

என்பது உண்மைத் தன்மையான பொருளைச் சுட்டலுரித்தா மென்பர் அன்மைச் சொல்லைத் துணிந்த பொருண்மேல் வைத்துச் சொல்லின்.

உதா : வேற்றிடந் துணிந்த பொருள் ஆண்மகன் கொல்லோ வென் றையுற்ருல், ஆண்மக னென்று துணிந்து சொல்லுமிடத்துப் பெண்டாட்டி யல்லள் ஆண்மக னென்க.

இனிப் பெண்டாட்டி யென்று துணிந்தவழி, யாண்மக னல்லன் பெண்டாட்டி யென்க. இது உயர்திணைப் பால் ஐயம். குற்றி மகன் எனத் திணை ஐயந் தோன்றினவழி, மக னன்று குற்றி யென்றும், குற்றி யல்லன் மக னென்றுஞ் சொல்லுக. அஃறிணைப் பால் ஐயத்துக்கண், ஒன் றல்ல பல வென்றும், பல வன்று ஒன் றென்றுஞ் சொல்லுக. ஐயப்பட்டுத் துணிந்துழி இ யெல்லாத் துணி பொரு[3]ளிடத்தும் அன்மைச் சொல்லை வைத்துச் சொல்லுக. இவ்வாறு சொல்லுங்கால் ஐந்தாமுருபு புலப்படாது. நீக்கத்தின் கண்ணே நீக்கு மென்று கொள்க. யாதோ நின்றவாறெனின், பெண்டாட்டி யல்லள் என்புழி பெண்டாட்டியின்

1. முடி[ய](வி)ல்லை 2. வி[டறு](ரு)க்கு 3. ˚ விடத்தன்மை : திருத்தம்

அல்ல னென்றும் குற்றியல்ல னென்புழிக் குற்றியின் அல்ல னென்றும், [1]ஒன்றின் அல்ல வென்று மிவ்வாறு மற்றையனவு மறிக.

இனி யொருசா ராண்மைச் சொல்லே ஐயப் பொருளின் கண் வைத்துச் சொல்லுப. சொல்லுமாறு: பெண்டாட்டி யல்லள் ஆண்மக னென்றும், ஆண்மக னல்லன் பெண்டாட்டி யென்றும், ஒன் றன்று பல வென்றும். பல வல்ல வொன் றென்றுஞ் சொல் லுப; அவர் சொன் முறை யறியா ராதலா னஃ [2]துரையன்மை யறிக. இது அம் மூன்றிடத்துந் துணிவு தோன்றியவழிச் சொன் [3]னிகழுமாறு கூறிற்று.

26. அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் ஒரு சொல்லுதல் வன்மை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை : அடை, சினை, முதல் எனப்பட்ட மூன்றும் முறை மயங்காது வருவன வண்ணச் சினைச் சொல், என்றவாறு.

அடை என்பது ஒரு பொருளது குணம்; சினை என்பது உறுப்பு; முதல் என்பது அவ்வுறுப்பினை யுடையது.

வரலாறு : பெருந்தலைச் சாத்தன்; செங்கால் நாரை, என வரும்.

அடை சினை முதல் என வரூஉ மூன்றும், என்னுது, முறை என்றதனன் இரு குணம் அடுக்கி முதலொடு வருதலும், இரு குணம் அடுக்கிச் சினையொடு வருதலும் கொள்க.

'முதலொடு குணமிரண் டடுக்குதல் வழக்கியல்
சினையொ டடுக்கல் செய்யு ளாறே'

என்பது புறச் சூத்திரம்.

உதாரணம்: இளம் பெருங் கூத்தன், என வரும் வழக் கினுள். *

1. ஒன்றி நல்ல : திருத்தம் 2. துறை : திருத்தம் 3. னிகழ்வுமாறு : திருத்தம்
* பரிமாணச் சூத்திரம் — பிரதிபேதம்.

'சிறுபைங் தூவிச் செங்காற் பேடை' (அகம் — 57) என வரும் செய்யுட்கண்.

இளம் பெருங் கூத்தன் என்றக்கால், இளமை பெருமையை நோக்கி நின்றதன்று, கூத்தன் என்னும் பெய ரையே நோக்கி நின்றதென உணர்க. நடைபெற்று 'இயலும் எனல் வேண்டா எனின், நடை என்பது வழக்கு, வழக்கினுள் மயங்காது வரும் என்பதாம்; செய்யுளுள் மயங்க வரும் என்பதாம்.

வரலாறு: பெருந்தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை* என வரும்.

**தெய்வ:**

ஒருசார் மரபு வழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள்: வண்ணம் பெற்ற சினையையுடைய பெயர்ச் சொல் முற்பட அடையும், அதன்பின் சினையும், அதன்பின் முதலு மாகி அம் முறை மயங்காமை வழக்குப் பெற் றியலும் எ-று.

வண்ணச் சினைச் சொல் மயங்காமை நடை பெற் றியலும் எனவே, வண்ண முதற் சொல் மயங்கி யல்லது நடவா தென்ற வாறும்.

இதனாற் பெற்ற பொருள் என்னை யெனின், பொருட்கு உள தாகிய பண்பும், சினையும் பொருளோடு அடுத்துக் கூறக் கருதுவா னுயின், பொருண்மேற் செல்லாது சினை மேற் செல்லும் என்பது அறிவித்தற் கென்க.

உ-ம்: செங்கால் நாரை: வண்ணம் சினைமே லேறி முத லொடு முடிந்தது. கருங்கோட் டியானை எனப் பண்பினை முத லோடு அடுத்துக் கூறக் கருதுவா னுயின், கருமை யானையின் மேற் செல்லாது கோட்டின்மேற் செல்லுதலின் இம் முறை நடைபெறுத தாயிற்று.

வந்தது கொண்டு வாராதது முடித்தல், என்பதனுல் வடிவு முதலாய பண்புங் கொள்ளப்படும்.

---

* யாப்பருங்கல விருத்தியுரை மேற்கோள்: நுதப்பிற் — பாடபேதம்.

உ-ம்: சிறு கண் யானை; பிறவும் அன்ன.

அடை யென்று பொதுப்படக் கூறிய அதனால் ஒரு பொருண்மே லடை யிரண்டு வருதலுங் கொள்க: கரு நெடுங் கூந்தற் காரிகை, எனவரும்.

முன்ற மயங்காமை என்றதனால், மயங்கு மாயின், குறித்த பொருண்மேற் செல்லா தென்க.

உ-ம்: பெருந்தலைப் புல்லார் [1]நல்லார் என்றவழி, பெருந் தலை யென்பது புல்லோடு சார்ந்து வருதலிற் சொல்லுவான் குறிப்புள் ஒன்ருயினும் அதன்மேற் செல்லா தாயிற்று.

கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் (புறம் - 238)

என முறை மயங்கி வந்ததால் எனின், ஆண்டுச் செஞ் செவி என்பது மொழி மாறி நின்ற தென்க.

சேனா:

இதன் பொருள்: பண்புச் சொல்லும், சினைச் சொல்லும் முதற் சொல்லு மென மூன்றுங் கூறப்பட்ட முறை மயங்காமல் வழக்கைப் பொருந்தி நடக்கும், வண்ணச் சொல்லோடு தொடர்ந்த சினைச் சொல்லை யுடைய முதற் சொல், என்றவாறு.

வடிவு முதலாகிய பிற பண்பு முளவேனும், வண்ணப் பண் பினது வழக்குப் பயிற்சி நோக்கி வண்ணச் சினைச் சொல் என்றார்.

உதாரணம்: செங்கா லுரை, பெருந்தலைச் சாத்தன், என வரும். கால் செங் நாரை, தலைப்பெருஞ் சாத்தன் என முறை மயங்கி வரின், மரபு வழுவா மென்க.

வழக்கினுண் மயங்காது வரு மெனவே,

கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி (புறம் — 238)

எனச் செய்யுளுண் மயங்கியும் வரப்பெறு மென்றவாரும். செவி

1. நல்வா(ர்)

செஞ் சேவல், வாய் வன் காக்கை என்பன, செஞ் செவிச் சேவல் வல் வாய்க் காக்கை என்னும் பொருள்பட நின்றமையின், வண்ணச் சினைச் சொல் மயக்க மாயின. அஃதேல் சினை யடையாகிய செம்மையும், வன்மையும் முத லடை யாயினவா றென்னை யெனின் சினையொடு முதற்கொற்றுமை யுண்மையான் அவை முதலொடு மியைபுடைய வென்பது.

'பெருந்தோட் சிறுநுசுப்பிற் பேரமர்க்கட் பேதை' என்புழி மூன்றும் வழி முதல் கிடவாது பின்னும் அடையுஞ் சினையும் புணர்த்தமையான் வண்ணச் சினை சொற் செய்யுளுண் மயங்கி வந்த தென்று உரையாசிரியர் கூறினரா லெனின், மூன்றும் வழிப் புணர்க்கப்படும் பேதை யென்னு முதற் சொல் பேரமர்க்கண் ணென்னுந் தொகையோடு வேற்றுமைப் பொருள் படத் தொக்கு, அத் தொகை சிறுநுசுப் பென்னுந் தொகையோ டும் அப் பொருள்படத் தொக்கு, ஒரு சொல்லாய், பெருந் தோட் பல் யாகசாலை முதுகுடுமிப் பெரு வழுதி என்றாற்போல மூன்றும் வழிப் பிற சொல் லடுத்துப் பேதை யென்னு முதல் கிடந்த தெனவே படுதலின், மயக்க மின்மையான், அவர்க் கது கருத்தன் றென்க. அன்றிப் பெருந்தோண் முதலாகிய மூன்றும் பலபெயர் உம்மைத் தொகைபடத் தம்முட் டொக்கு ஒரு சொல் லாய்ப் பின் பேதை யென்பதனோடு வேற்றுமைத் தொகைபடத் தொக்கன வெனினும், அவை உம்மைத் தொகைபடத் தொகாது நின்று பேதை யென்பதனோடு வேற்றுமைத் தொகை பட ஒருங்கு தொக்கன வெனினும் தம்மு ளியையாது பேதை யென்பதனோ டியைதலின் ஆண்டும் மயக்க மின்மை யறிக. அஃதேல், இவ்வாறு வருதல் வழக்கிற்கு முரித்தோ வெனின். அடுக்கிய அடையுஞ் சினையும் பொதுமை நீக்குதற் கன்றி அணி குறித்து நிற்றலிற் செய்யுட்கே உரித் தென்பது.

சிறுபைந் தூவி, எனச் சினையொடு குண மிரண் டடுக்கி வருதல் செய்யுட் குரித் தென்றும், இளம் பெருங் கூத்தன் என முதலொடு குண மிரண் டடுக்கி வருதல் வழக்கிற் குரித்தென்றும், பிறர் மத மேற்கொண்டு கூறினர். ஒன்றாக பலவாக இனஞ் சுட்டாதன செய்யுட் குரியவாம், இனஞ் சுட்டி நின்றன வழக்கிற் குரியவா மென்பதே உரையாசிரியர் கருத் தென்க. அன்றிப் பிறநூன் முடிந்தது தானுடம்படுத லென்பதனாற் சினையொடு குண மிரண் டடுக்கல் செய்யுளா றென்று தொள்ளினு மமையும்.

முதலொடு குணமிரண் டடுக்கல் வழக்கியல்
சினையோ டடுக்கல் செய்யு ளாறே

என்று ராகவின்.

வண்ணச் சினைச் சொல் என்றதனுன் வண்ணமுஞ் சினையு முதலுங் கூறுதற் கண்ணது இவ் வாராய்ச்சி யென்பதாம். எனவே, இளம் பெருங் கூத்தன், பெரும் பலாக்கோடு என்னுந் தொடக்கத்தன வேண்டியவாறு வரப் பெறுமென்றவாறு.

**நச்சி :**

இது, வண்ணச் சினைச் சொற்கண் மரபு கூறுகின்றது.

இ-ள் : அடை சினை முதல் என மூன்றும் — பண்புச் சொல்லும் சினைச் சொல்லும் முதற் சொல்லும் என்ற மூன்றும், முறை மயங்காமை நடைபெற்று இயலும் — கூறப்பட்ட முறை மயங்காமை வழக்கைப் பொருந்தி நடக்கும், வண்ணச் சினைச் சொல் — வண்ணம் முதலாகிய பண்புகளோடு தொடர்ந்த சினைச் சொல்லை உடைய முதற்சொல்.

மீட்டும் வண்ணச் சினைச் சொல் என்றது, அச் சொற்குப் பெயர் கூறிற்று.

உ-ம் : செங்கால் நாரை; பெருந்தலைச் சாத்தன், என வழக்கினுள் மயங்காது எனவே, செய்யுளுள்,

கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா
வாய்வன் காக்கையும் கூகையும் கூடி

என மயங்கியும் வருமாயிற்று. சினையொடு முதற்கு ஒற்றுமையுடைமையான் முதலொடும் இயைந்தன.

பெருந் தோள் சிறு நுசுப்பின் பேரமர்க்கண் பேதை, என்பதும் அவ்வாறே மயங்கி வந்தது, செய்யு ளாதலின். பெருவழுதுணங் காய், என்பது பெருமை முதன்மேலே கூறுதலின், சொல்லுவான் கருத்து வேருயிற்று. இன்னும் வழக்கினுள் மயங்காது என்றதனுல் சிறு பைந் தூவி எனச் சினையொடு குணம் இரண்டு அடுத்தல் செய்யுளாறு என்க.

இளம் பெருங் கூத்தன், என்பது சினையின்மையின் வேண்டியவாறு வந்தது.

கல் :

என்ப தென் னுதலிற்றோ வெனின், வண்ணச் சொல்ல தோர் மரபு கூறுதல் நுதலிற்று.

பொருள்: பண்பினை யுணர்த்துஞ் சொன்முன்னர் பண் பினை யுடைய சினைப்பொருளை யுணர்த்துஞ் சொல் அதற்பின்; [1]அச் சினையுடைய முதற் பொருளை யுணர்த்துஞ் சொல் அதன் பின்ன தென்று கேட்டான் அடைவு கருதும்படி அம் மூன்றும் அம் முறைமையில் மயங்காமல் வழக்குப் பெற்று நடக்கும் யாத்து வண்ணச் சினைச் சொல், என்றவாறு.

உ-ம்: பெருந் தலைச் சாத்தன், செங் கா ணுரை, என வரும். பெரும் பலாக் கோடு, பெரு வழுதுணங் காய், என மயங்கியும் வருமாலோ வெனின், அவை சொல்லுவான் கருத்து, [2]வேறு பெரும் பலா, பெருவழுதுணை எனப் பெருமை முதன்மே னோக்கி நின்றமையின்.

பெருந்தலைப் புல்லா நல் லேறு, எனவும், நெட்டிலை விளவின் கட் டெங்கு எனவும், மயங்கியும் வருமாலோ வெனின். அவ்வாறு மயங்கக் கூறுவன கண்டன்றே இவ் விலக்கண மெழுந்தது. இதனால் அதனை அழி வழக் கென்று மறுக்க. பெருந் தலையினை யுடையதும் வெறும் புல்லா நல்லேறும் வேறு பொருள் கொண் டியையுமா லதுவு மெனின், அவ்வாறு பொருள் கோட் செய்யுட் கல்லது இன்றென்று மறுக்க. முறை யென்றதனானே, ஒரு முதற் பொருட்கண் இரண்டு பண்பு அடுத்து வருவனவும் வழக்கினுள் உளவென்று அமைத்துக் கொள்ளப்படும்.

உ-ம்: இளம் பெருங் கூத்தன், சிறு கருஞ் சாத்தன், என வரும். இளமை யென்னுஞ் சொல் பெருமை யென்பதனோடு இன்றாய்க் கூத்தன் என்பதனோடு இயைபு கோடன் மரபின்மை யின் அமைக்கப்பட்டது.

இன்னும் இவ் [3]விலேசானே சினைப் பொருட்கண் இரண்டு பண்பு அடுத்து வருவனவுஞ் செய்யுளுள் உள வென்றும் அமைக்கப்படும்.

1. [த](அ)ச்சினை 2. [வேறு] பெரும்ப[ா]லா 3. வி[லே](லே)சானே

உ-ம்: சிறு பைங் தூவி; செங்காற் பேடை, என வரும். நடைபெற்று என்றதனுன் [1]அவ் வடை சினை முதல்கள் செய்யுட்கண் முறைமை மயங்கியும் வரப்பெறும் என்பது கொள்ளப் படும்.

உ-ம்: பெருந்தோட் சிறு நுசுப்பிற் பே ரமர்க்கட் பேதை, எனீ வரும்.

அடை சினை முதலென்றும், பின்பும் வண்ணச்சினைச் சொல் லென்றது என்னை யெனின், முற்கூறியது இலக்கண வாய்ப்பா டாகலான் அவ் விலக்கண முடையது இது வென வேண்டுதலின் அவ் விலக்கணத்தான் அவ் விலக்கணமுடைய பொருட்குக் குறியிட்டார், என வுணர்க.

இதனுற் சொல்லியது என்னை யெனின், அடை சினை முதற் பொருள்களைக் கூறுங்கால் [2]இன்னவாறு கூறுக வென்று அவற் றது மர பிலக்கணமும் அவ்வழி மரபு வழூஉ வமைதியுங் கூறியவா றுயிற்று.

அரசு:

என்பது, வண்ணச் சினைச் சொல்லாவது அடையுஞ் சினையு முதலு மூன்று ழயங்காமை யடைவே வழக்குப் பெற்று நடக் கும். அடையென்ப தொருபொருளது குணம் சினை, யுறுப்பு; முத லவ் விரண்டையு முடைய பொருள்.

உதா: பெருந்தலைச் சாத்தன், பெருந்தோண் மண்ணை, நெட் டிலைத் தெங்கு, செங்கண் வரால், செங்கா ஞரை யென வரும். அடை, சினை, முத லென மூன்று மென்னுது முறை யென்றதனு னம் முறை யின்றி நடத்தலு முடைய. அவை வழக்கினுட் குண மிரண் டடுக்கி முதலொடு வருதலுஞ் செய்யுளுட் குண மிரண் டடுக்கிச் சினையொடு வருதலு மென. அவை வருமாறு: இளம் பெருங் [3]கொற்றன், [4]சிறுகருஞ் சாத்தன்: இது வழக்கு. சிறுபைந் தூவி, செங்காற் பேடை: இது செய்யுள். பிறவு மன்ன.

முதலொடு குணமிரண் டடுக்குதல் வழக்கியல்;
சினையொ டடுக்குதல் செய்யு ளாறே,

இது பிற சூத்திரம். அதனு னவ் விலேசு கொள்க.

---

1. அவ்[வி](வ)டை 2 இன்ன[வ்]வறு 3. கூற்றன் : திருத்தம்
4. சிறுக்குஞ் : திருத்தம்

27. ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய வுயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல.

இளம் :

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், வழீஇ யமையு மாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : உயர்திணை யொருவரைப் பன்மையாற் சொல்லு தலும், அஃறிணை ஒன்றினைப் பன்மையாற் சொல்லுதலும் வழக் கினகத்து உயர்த்துச் சொல்லப்படும்; இலக்கண முறைமையாற் சொல்லுமிடத்து நெறியல்ல, என்றவாறு.

ஒருவனையும், தாம் வந்தார் என்ப; ஒன்றனையும் தாம் வந்தார் என்ப. மற்று, இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல எனல் வேண்டாவாகல், உயர்திணையை அஃறிணை போலச் சொல்லுதலும் அஃறிணையை உயர்திணைபோலச் சொல்லுதலும் கொள்க.

வரலாறு : என் பாவை வந்தது, போயிற்று என ஒருத்தி யையும், என் அன்னை வந்தாள், போயினாள் என ஓர் ஆவினையும், காதன் மிகுதியான் இவ்வாறு கூறுக, எனக் கொள்க.

இனி, வழக்கி னாகிய என்றதனான், கன்னி யெயில், கன்னி ஞாழல் என்பன கொள்க.

தெய்வ :

ஒரு சார் பால் வழுவும் திணை வழுவும் அமைத்தலை நுதலிற்று.

இ-ள் : ஒருவரைச் சொல்லும் பன்மைச் சொல்லும் ஒன் றனைச் சொல்லும் பன்மைச் சொல்லும் இலக்கண மருங்கிற் சொல் நெறி யல்ல, வழக்கினாகிய உயர் சொற் கிளவி, எ—று.

உயர் சொற் கிளவி – இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.

உ–ம் : அவர் வந்தார் என வரும். ஒருவரையும் ஒருத்தி யையும் ஒன்றினையும் இவ்வாறு கூறுதல் வழு வாயினும், உயர்வு குறித்துச் சொன்னமையான் அமைதி யாயிற்று.

இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி
பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே (இடை 22)

என்புழி யடங்காதோ வெனின் ஆண்டு நம்பி, நங்கை, சாத்தன் என்னும் பெயர்தானே பால் காட்டுதலான் அதன்மேல் ஓர் இடைச் சொல் லாயிற்று. ஈண்டுப் பன்மைச் சொற்றானே ஒருமைக்கு வருதலின் அடங்கா தாயிற் றென்க. வந்தது கொண்டு வாராதது முடித்தல், என்பதனால் ஒரு பசுவை எம் அன்னை வந்தாள் எனவும், பெருங் கொல்லன், பெரு வண்ணான் எனவும் வருவன (வுங்) கொள்க.

சேனா:

இதன் பொருள்: ஒருவனையும் ஒருத்தியையுஞ் சொல்லும் பன்மைச் சொல்லும், ஒன்றனைச் சொல்லும் பன்மைச் சொல் லும் வழக்கின்கண் உயர்த்துச் சொல்லுஞ் சொல்லாம், இலக்கண முறைமையாற் சொல்லு நெறி யல்ல, என்றவாறு.

உதாரணம்: யாம் வந்தேம், நீயிர் வந்தீர், இவர் வந்தார் என வரும்.

உயர் சொல் உயர்க்குஞ் சொல்.

உயர் சொற் கிளவி யென்புழிக் கூறியது கூற லன்மை பண்புத் தொகை யாராய்ச்சிக்கட் சொல்லுதும்.

தாம் வந்தார் தொண்டனார், எனப் பன்மைக் கிளவி இழிந் தற்கண்ணும் வந்ததா லெனின், ஆண்டு உயர் சொற் றானே குறிப்பு நிலையால் இழிபு விளக்கிற் றென்பது.

இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல வென்றதனான் இலக் கண மன்மையும், வழக்கி னாகிய வுயர்சொற் கிளவி யென்றதனான் வழுவன்மையுங் கூறினார்; கூறவே வழுவமைதி யென்றவாறாம். அஃதேல், வழக்கி னாகிய வுயர் சொற் கிளவி யெனவே வழு வமைதி யென்பது பெறுதும்; இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல வெனல் வேண்டா வெனின், அங்ஙனங் கூறிற் செய்யுள் வரைந்த வாறே வழு வமைத்தவாறே வென ஐய மாக்கலின், அவ்வாறு கூறல் வேண்டு மென்பது.

பன்மைக் கிளவியு மெனப் பொது வகையாற் கூறினு ரேனும், உயர்த்தற்கண் வழங்கப்பட்டு வரும் உயர்திணைப் பன்மையும் விரவுப் பன்மையுமே கொள்ளப்படு மென்றதற்கு வழக்கி னுகிய வென்ருர்.

தன்னின முடித்த லென்பதனுன் எருத்தையும் ஆவையும், எந்தை வந்தான், எம் மன்னை வந்தாள், என வுயர்திணையா வுயர்த்து வழங்கலும், ஒன்றென முடித்த லென்பதனுற் கன்னி ஞாழல் (சிலப் — கானல் வரி 18) கன்னி யெயில், என வஃறிணையாய் நின்ற உயர்திணை வாய்பாட்டாற் கூறப்படுதலும், பண்புகொள் பெயர்க் கொடை. வழக்கினகத்தும், பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன் என இல்குண மடுத்து உயர் சொல்லாய் வருதலுங் கொள்க.

நச்சி :

இது, பால் வழுவும் திணை வழுவும் அமைக்கின்றது.

இ-ள் : ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும் – ஒருவனைக் கூறும் பன்மைக் கிளவியும், ஒன்றனை உயர்திணைப் பன்மையாகச் சொல்லும் பன்மைச் சொல்லும், வழக்கின் ஆகிய உயர் சொற் கிளவி - வழக்கின் உளவாகிய உயர்த்துச் சொல்லும் சொல்லாம், இலக்கண மருங்கிற் சொல் ஆறு அல்ல – இலக்கண முறைமையால் சொல்லும் நெறி அல்ல, எ–று.

வழக்கின் ஆகிய எனவே, வழு வமைதி பெற்றும். உயர் சொல் — உயர்க்கும் சொல்; ஒருவனையும் தாம் வந்தார், என்ப; ஒருத்தியையும் தாம் வந்தார் என்ப; ஒன்றினையும் தாம் வந்தார் என்ப.

உ–ம் : யாம் வந்தேம், நீர் வந்தீர், இவர் வந்தார், என வரும்.

தாம் வந்தார் தொண்டனுர் என்பது, உயர் சொல். குறிப்பு நிலையின் இழிபு விளக்கிற்று.

இலக்கண மருங்கிற் சொல் ஆறு அல்ல, என்ற மிகையான், ஓர் எருத்தை எந்தை வந்தான், எனவும், ஓர் ஆவை எம் அன்னை வந்தாள் எனவும், கொடுங்கோல் கோவலர் பின்னின் றுய்த்தர இன்னே வருகுவர் தாயர் (முல்லைப் — 15, 16) எனவும்

ஒப்புமை கருதாது காதல் பற்றி உயர்த்து வழங்கலும், கன்னி நறுஞாழல் (சிலப் — 7, 9) கன்னி எயில் எனவும், ஓர் எருத்தை நம்பி எனவும், ஒரு கிளியை நங்கை எனவும், அஃறிணையை உயர் திணை வாய்பாட்டால் கூறலும், பண்புகொள் பெயர்க்கொடை வழக்கி னகத்தும் பெருங்கொற்றன், பெருஞ் சாத்தன் என இல் குணம் அடுத்து உயர்த்துக் கூறலும் கொள்க. என் பாவை வந்தது என்பது ஆகுபெயர். அஃது ஒப்பு உள்வழிக் கூறியது.

கல் :

என்ப தென் னுதலிற்றோ வெனின், உயர்திணைப் பால் வழூஉ வமைதியும் அஃறிணைத் திணை வழூஉ வமைதியும் உடன் கூறுதல் நுதலிற்று.

பொருள் : உயர்திணையிடத்து ஆண்பாலினையும் பெண் பாலினையும் அத்திணைப் பன்மைப் பாலாற் சொல்லுஞ் சொல்லும் அஃறிணை யொன்றனை உயர்திணைப் பன்மைப் பாலாற் சொல் லுஞ் சொல்லும் இவை யிரண்டும் வழக்கின்கண்ணே யுளவாகிய உயர்த்துச் சொல்லுதற் பொருண்மைக்கண் வருஞ் சொல்லாம்; இலக்கணத்திடத்துச் சொல்லு நெறியல்ல, என்றவாறு.

உதாகரணம் : தாம் வந்தார்: என்பது. இலக்கண மிகை யாற் காதன் மிகுதியான் உயர்திணை அஃறிணையாகவும் அஃ றிணை உயர்திணையாகவுங் கூறுவனவும் அமைத்துக் கொள்க.

உ-ம் : என் பாவை வந்தது, போயிற்று; என் யானை வந்தது, போயிற்று, என விவை உயர்திணை அஃறிணை யாயின.

இனி ஓர் ஆவினை எம்மன்னை வந்தாள், போயினாள்; என்றும், ஓர் எருத்தினை எந்தை வந்தான், போயினான், எனவுங் கூறுவன அஃறிணை உயர்திணையான் வந்தனவாம்.

மற்றவை ஆகுபெயர் அன்றோ வெனின், ஒப்புள்வழிச் சொல்வது ஆகுபெயர்; இது காதலுள்வழிக் கூறுவ தென உணர்க. இதனுள் உயர்திணை அஃறிணையான் வ ந் த ன. குடிமை யாண்மை என்புழிச் சிறப் பென்புழிப் பட் டடங்குமா லெனின், அவை காத லின்றிச் சிறப்பித்துச் சொல்லுவன வென வேற்றுமை யுணர்க.

வழக்கி ஞகிய வென்றவதனன் பிறவும் உயர்திணைப் பெயர் களை அஃறிணைமேல் வைத்துச் சொல்லுவனவுஞ் செய்யுட்கண் அமைத்துக் கொள்க.

உ–ம் : கன்னிநறு ஞாழல், கன்னியெயில், கதிர் மூக்காரல் கரிவளுகை வென்பன போல்வன.

இதனுற் சொல்லியது வழக்கின் கண்ணுஞ் செய்யுட் கண் ணு மோரோர் காரணங்களைப் பற்றிப் பாலினையுந் திணை யினையும் மயங்கக் கூறுவன கண்டு அவற்றிற்கு அமைதி கூறிய வாருயிற்று.

அரசு :

என்பது, உயர்திணை யொருவரைப் பன்மையாற் சொல்லு தலு மஃறிணை யொன்றனைப் பன்மையாற் சொல்லுதலு மென விவை வழக்கினகத் துயர்த்துச் சொல்லப்படும்; இலக்கண முறைமையாற் சொல்லுமிடத்து நெறி யல்ல.

உதா : ஒருவனையுந் தாம் வந்தா ரென்ப; ஒருத்தியையுந் தாம் வந்தா ரென்ப; ஒன்றனையுந் தாம் வந்தா ரென்ப. இது வழுவே யாயினு மமைக. அன்றியும், யாம் வந்தேம், நீயிர் வந்தீர், இவர் வந்தார், என ஒருவனையு மொன்றனையு முயர்த்திச் சொல் லியவாறு. தாம் வந்தார் தொண்டனர் என்ப துயர் சொற் குறிப்பு நிலையா னிழிபு விளக்கிற்று.

இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல வென்றதனு லுயர்பினு மிழிபினு முவப்பினு மஃறிணையை யுயர்திணையே போலச் சொல் லுதலும் வழக்கினுள் வரும். குருசில் வந்தது என்ப துயர்பு. பொறியிலி வந்தது இழிபு. ஒருவனை யென் யானை வந்த தென்றும்; ஒருத்தியை யென் பாவை வந்ததென்றும், ஒரெருத் தினை யென் றந்தை வந்தா ரென்றும், ஒரு பசுவினை என் னன்னை வந்தா ளென்றுஞ் சொல்லுத லுவப்பு. சாத்தனர் வந்தார், நரியினர் வந்தார் எனச் சிறப்பு. இவற்றிற் றிணை பான் மயக்கங் காண்க.

28. செலவினும் வரவினுந் தரவினுங் கொடையினும்
நிலைபெறத் தோன்று மந்நாற் சொல்லுந்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னும்
அம்மூ விடத்து முரிய வென்ப.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இட வழுக் காத்தல் நுதலிற்று.

உரை : செல்லும், வரும், தரும், கொடுக்கும் என நிலை பெற்றுப் புலப்பட்டு நின்ற இந் நான்கு சொல்லும் தன்மை, முன்னிலை, படர்க்கை என்னும் மூன்றிடத்திற்கும் உரிய, என்றவாறு.

அவை யாமாறு முன்னர்ச் சொல்லுதும்.

தெய்வ :

ஒருசார் வினைச் சொற்கு இலக்கணம் உணர்த்தலை நுத லிற்று.

இ-ள் : செலவு, வரவு, தரவு, கொடை யென்னுந் தொழிற்கண் நிலைபெறத் தோன்றும் அந் நாற் சொல்லும் தன்மை, முன்னிலை, படர்க்கை யென்னும் அம் மூன்றிடத்தும் உரிய வென்ப ஒரு சாரார்.

அவற்றுள் தரு சொல், வரு சொல் ஆயிரு கிளவியும் தன்மை முன்னிலை என்னும் இரண்டிடத்தினும் வரும்.

உ-ம் : எனக்குத் தந்தது; எனக்கு வந்தது. நினக்குத் தந்தது, நினக்கு வந்தது; அவர்க்குச் சென்றது, அவர்க்குக் கொடுத்தது, எனவரும்.

இந் நான்கு சொல்லும் மூன்றிடத்தும் வரும் என்பார் உதாரணங்காட்டுமாறு:— எனக்குச் சென்றது; எனக்குக் கொடுத்தது; நினக்குச் சென்றது; நினக்குக் கொடுத்தது; அவர்க்குத் தந்தது; அவர்க்கு வந்தது, எனக் காட்டுவர்.

இவற்றுள் கொடு வென்பதனை

கொடுவென் கிளவி படர்க்கை யாயினும்
தன்னைப் பிறன்போல் கூறுங் குறிப்பின்
தன்னிடத் தியலும் என்மனார் புலவர் (எச். 132)

என எடுத்து வழு வமைக்கிறார் ஆகலானும், பிறவும் இத்துணைச்

சிறப்பில வாதலானும், இலக்கண வழக்கு மேற் காட்டப்பட்ட ஆறு காரணமுமே. ஏனைய ஆறும் ஒரு முகத்தான் வழு வமைத்த வாருகக் கொள்க.

சேனு :

இதன் பொருள் : செலவு முதலாகிய நான்கு தொழிற் கண்ணும் நிலைபெறப் புலப்படாநின்ற அந் நான்கு சொல்லும், தன்மை, முன்னிலை, படர்க்கை யென்னும் அம் மூவிடத்திற்கும் உரியவாய் வரும், என்றவாறு.

செலவு முதலாகிய தொழிற்கட் சிறப்பு வகையான் நிலை பெருது பொதுவாய் வரும் இயங்குதல், ஈதலென்னுந் தொடக் கத்தனவற்றி னீக்குதற்கு நிலைபெறத் தோன்றும் என்ருர்.

முற்றும் எச்சமுந் தொழிற் பெயருமாகி அத் தொழில் பற்றி வரும் வாய்பாடு பலவாயினும், அவையெல்லாம் இந் நான்கு தொழிலும் பற்றித் தோன்றுதலின் நான்கு சொல் என்ருர்.

பொருள் வகையான் முன் னறியப்பட்டமையான் அந் நாற் சொல்லும் என்ருர்.

இச் சூத்திரத்துள் ஈங்கு முதலாயின தன்மைக் கண்ணும், ஆங்கு முதலாயின படர்க்கைக் கண்ணும் அடக்கப்பட்டன.

வினைச்சொன் மூன்றிடத்திற்கு முரிய வாதல் வினையியலுட் பெறப்படுதலின் ஈண்டுக் கூறல் வேண்டா வெனின், ஆண்டுப் பா லுணர்த்து மீற்ருன் இடத்திற் குரிமை கூறினர்; ஈண்டு ஈற்ரு னன்றிச் செலவு முதலாயின முதனிலை தாமே இடங் குறித்து நிற்றலுடைமையான், இவ் வேறுபாடு ஆண்டுப் பெறப்படாமையின், ஈண்டுக் கூறினு ரென்பது. அஃதேல் தருசொல் வருசொல் லாயிரு கிளவியுந் தன்மை முன்னிலை யாயீ ரிடத்த; படர்க்கை யிடத்த கொடைச் சொல்லுஞ் செலவுச் சொல்லும், என வோதுக.

இச் சூத்திரம் வேண்டா வெனின், அங்ஙன மோதின் இடஞ் சுட்டு முதனிலை இந் நான்குமே யென்னும் வரையறை பெறப்படாமையின் இது வேண்டு மென்பது. அஃதேல்,

போதல், புகுத லென்னுந் தொடக்கத்தன இடஞ் சுட்டுதலின் நான் கென்னும் வரையறை அமையா தெனின், அவை இக் காலத்துச் சிலவிடத்துப் பயின்று வருமாயினும் மூன்றிடத் திற்கும் பொதுவாக˚ வின்றென ஆசிரியர் அந் நாற் சொல்லு மென இவற்றையே வரைந்தோதுவா ராயிற்றென்பது.

நச்சி :

இஃது, இடம் பற்றி நிகழும் சொற்களுக்குப் பொது விதி கூறுகின்றது.

இ-ள் : செலவினும் வரவினும் தரவினும் கொடையினும் நிலைபெறத் தோன்றும் அந்நாற் சொல்லும் — செலவு முதலிய நான்கு வினையானும் இடம் நிலைபெறப் புலப்படாநின்ற அந் நான்கு சொல்லும், தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம் மூவிடத்தும் உரிய என்ப — தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம் மூவிடத்திற்கும் உரியவாம், என்று கூறுவர் புலவர் எ-று. ஈங்கு முதலியன தன்மைக்கண்ணும் ஆங்கு முதலியன படர்க்கைக்கண்ணும் அடக்கப்பட்டன.

வினைச் சொல் பால் உணர்த்தும் ஈற்றான் மூன்றிடத்திற்கும் உரிமை வினை இயலுள் கூறி, செலவு முதலியன முதனிலை தாமே இடம் உணர்த்தி நிற்றலின் ஈண்டுக் கூறினார், அவற்றுள் அடங்காமையின்.

கல் :

என்பதென் னுதலிற்றோ வெனின், இடம்பற்றி நிகழுஞ் சொற்களுட் சிலவற்றிற்கு இலக்கணங் கூறுவான், அச் சொற் களதும் இடங்களதும் பெயரும் முறையுங் கூறிய முகத்தான் அவற்றிற்குப் பொது விலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

பொருள் : [1]செலவுப் பொருண்மைக் கண்ணும், [2]வரவுப் பொருண்மைக் கண்ணும், [3]தரவுப் பொருண்மைக் கண்ணும், கொடைப் பொருண்மைக் கண்ணும், நிலைபெற்றுத் தோன்று கின்ற செலவு, வரவு, தரவு, கொடை என்னும் நான்கு சொல்லும் தன்மை, முன்னிலை, படர்க்கை யென்று சொல்லப்பட்ட வம் மூன்றிடத்திற்கும் பொது வகையான் உரிய, வென்றவாறு.

உதாரணம் சிறப்புவகையாற் கூறும்வழிக் காட்டுதும்.

---

1. செலவு(ப்) பொரு   2. வரவு பொரு   3. தரவு பொரு

அரசு :

என்பது, செல்லும், வரும், தரும், கொடுக்குமென நிலை பெற்று பலப்பட்டு நின்ற வந் நான்கு சொல்லுந் தன்மை முன்னிலை படர்க்கை யென்னு மம் மூன் றிடத்திற்கு முரிய.

உதாரணம் [1]முன்னர்க் காட்டுதும்.

29. அவற்றுட்
டருசொல் வருசொல் லாயிரு கிளவியுந்
தன்மை முன்னிலை யாயீ ரிடத்த

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

உரை : தரும், வரும், என்னுஞ் சொல் தன்மைக்கும், முன்னிலைக்கும், உரியவாம்; படர்க்கைக்கு ஆகா, என்றவாறு.

வரலாறு: எனக்குத் தருங் காணம், எனக்கு வருங் காணம்; நினக்குத் தருங் காணம், நினக்கு வருங் காணம், என வரும்.

சேனா :

இதன் பொருள் : கூறப்பட்ட நான்கு சொல்லுள் தரு சொல்லும், வரு சொல்லு மாகிய இரண்டும் தன்மை முன்னிலை யாகிய இரண்டிடத்திற்கு முரிய, என்றவாறு.

உதாரணம் : எனக்குத் தந்தான், நினக்குத் தந்தான், என்னுழை வந்தான், நின்னுழை வந்தான் எனவும்; ஈங்கு வந்தான் எனவும் வரும்.

தரப்படும் பொருளை யேற்பான் தானும் முன்னின்றானுமாக லானும், வரவு தொழில் தன்கண்ணும் முன்னின்றான்கண்ணுஞ் சென்று முடிதலானும், ஈற்றா னன்றி இவ் விரு சொல்லுந் தன்மை முன்னிலைக் குரிய வாயினவாறு கண்டு கொள்க.

நிலைபெறத் தோன்றும் மந்நாற் சொல்லுந்
தன்மை முன்னிலை படர்க்கை யென்னு
மம்மூ விடத்து முரிய (சொல் — 28)

என்று மூன்றிடத்திற்கும் வரை வின்றி யா மெனவுங் கொள்ள வைத்தமையான்,

1. முன்னர்காட்

பெருவிற லமரர்க்கு வென்றி தந்த (புறம் — 55)
எனவும்.

தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது (அகம் — 36)
எனவும், மயங்கி வருவனவும் அமைக்கப்படும். அஃதேல் படர்க்கைச் சொன் மயக்கமு மெய்துமா லெனின், அஃ தெச்ச வியலுட் பெறப்படுதலின், ஈண்டுக் கொள்ளப்படா தென்க.

ஒருவன் சேய் நிலத்து நின்றும் அணி நிலத்துப் புகுந்தானு யிற் சேய் நில நோக்க அணிநிலம் ஈங்கெனப் படுதலின் அவனி வண் வந்தான், ஆங்கு வந்தான் என்பன இலக்கணமே யாம். இந் நான்குங் கொடைப் பொருளன வென்று உரையாசிரியர் கூறினரா லெனின், தூண்டில் வேட்டுவன் வாங்க வராது என் பதனை அமைத்தா ராகலின், அவர்க்கது கருத்தன் றென்க.

தரவு வரவை யுணர்த்துவனவற்றைத் தருவதும் வருவதும் போலத் தரு சொல், வரு சொல் லென்றார்.

நச்சி :

இஃது, அவற்றுள் சிலவற்றிற்குச் சிறப் பிலக்கணம் கூறு கின்றது.

இ—ள் : அவற்றுள் தரு சொல் வருசொல் ஆயிரு கிளவியும்— முற்கூறிய நான்கு சொல்லினுள் தரு சொல்லும் வரு சொல்லும் ஆகிய இரண்டு சொல்லும், தன்மை முன்னிலை ஆயீரிடத்த — தன்மை முன்னிலையாகிய அவ் விரண்டிடத்திற்கும் உரிய, எ—று.

உ—ம்: எனக்குத் தந்தான், நினக்குத் தந்தான்; என்னுழை வந்தான், நின்னுழை வந்தான், ஈங்கு வந்தான், என ஈற்றான் அன்றித் தரவும் வரவுமாகிய வினை, தன்கண்ணும் முன் நின்றான் கண்ணும் சென்றன. முன்னிற் சூத்திரத்துப் பொது விதியான் மூன்றிடத்தும் வரைவின்றி ஆம் எனவும் கொள்ள வைத்தமையான்.

பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த (புறம் — 55:3)
புனல்தரு பசுங்காய் தின்ற (குறுந் — 292)
தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது (அகம் — 36:6)
அரிமல ராய்ந்தகண் அம்மா கடைசி
திருமுகமும் திங்களும் செத்துத் — தெருமந்து

வையத்தும் வானத்தும் செல்லா தணங்காகி
ஐயத்துள் நின்ற தரவு. (யாப். வி. சூ. 57 உரை மேற்)

என மயங்குவனவும் அமைக்க.

'தரவு வரவு உணர்த்தும் சொல்' என்பது பொருள். இதுவும் அது.

கல்:

என்ப தென்னுதலிற்றோ வெனின், மேற் கூறிய சொற்களுட் சிலவற்றிற்குச் சிறப்புவகையான் இட விலக்கணங் கூறுதல் நுதலிற்று.

பொருள்: மேற் கூறப்பட்ட நான்கு சொல்லுள்ளும், 'தரும்' 'வரும்' என்னும் சொல்லிரண்டுந் தன்மை முன்னிலைக்குமாம்; படர்க்கைக் காகா, என்றவாறு.

உ-ம்: எனக்குத் தருங் காணம்; எனக்கு வருங் காணம்: நினக்குத் தருங் காணம், நினக்கு வருங்காணம், என வரும்.

அரசு:

உதா: எனக்குத் தருங் காணம், எனக்கு வருங் காணம் நினக்கு வருங் காணம், என வரும்.

30. ஏனை யிரண்டு மேனை யிடத்த.

இளம்:

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதற்கு மேல் எய்தியது விலக்குதல் நுதலிற்று.

உரை: செல்லும், கொடுக்கும் என ஒழிந்து நின்ற இரண்டும் படர்க்கைக் காம்; தன்மைக்கும், முன்னிலைக்கும் ஆகா என்றவாறு.

வரலாறு: அவற்குச் செல்லுங் காணம், அவர்க்குக் கொடுக்குங் காணம் என வரும்.

இனிச் செலவும் கொடையும் தரவும் வரவும் என்று சூத்திரம் செய்யற்பாலான் எற்றுக்கு, — செல்லுங்காணம், கொடுக்குங் காணம் என்பன இரண்டும் படர்க்கைக் குரிய; தரும், வரும், என்பன இரண்டுந், தன்மைக்கும் முன்னிலைக்கும் உரிய;

ஆகலான், அவ்வாறு கூறுது மயக்கங் கூறியவதனுன், செல்லும் என்னும் சொல்லாற் சொல்லப்படுவதனை, வரும் என்னுஞ் சொல்லானும் சொல்லுப; கொடுக்கும் என்னுஞ் சொல்லாற் சொல்லப்படுவதனைத் தரும் என்னும் சொல்லினுனும் சொல்லுப என்றலைக் குறித்தற்கு என்க.

வரலாறு: 'தூண்டில் வேட்டுவன் வாங்க வாரா' (அகம் — 36)
'புனறரு பசுங்காய் தின்ற' (குறுந் — 292)
எனவும் வரும்,

இனி, இச் சூத்திரம் கொடுத்தல் கோடற் பொருண்மை மூன்றிடத்துஞ் சொல் நிகழுமாறு கூறியது என்பாரும் உளர்.

சேன :

இதன் பொருள் : செலவுச் சொல்லுங் கொடைச் சொல்லும் படர்க்கைக் குரிய, என்றவாறு.

உதாரணம் : அவன்கட் சென்ருன், ஆங்குச் சென்ருன், அவற்குக் கொடுத்தான் என வரும்.

செலவுத் தொழில் படர்க்கையான்கட் சென் றுறுதலானும், கொடைப் பொருளேற்பான் படர்க்கையா குகலானும், ஈற்ருனன்றி இவ் விரு சொல்லும் படர்க்கை யிடத்திற் குரிய வாயின வாறு கண்டு கொள்க.

நச்சி :

இ-ள் : ஏனை இரண்டும் — செலவுச் சொல்லும் கொடைச் சொல்லும், ஏனை இடத்த — படர்க்கைக்கு உரிய. (எ-று)

உ-ம் : அவன்கண் சென்ருன், ஆங்குச் சென்ருன், அவர்க்குக் கொடுத்தான், என ஈற்ருன் அன்றிச் செலவுத் தொழிலும் கொடைப் பொருளும் படர்க்கையான்கண் சென்று உற்றன.

கல் :

என்ப தென் னுதலிற்ரூ வெனின், இதற்கும் விதி யொக்கும்.

பொருள் : [1]ஒழிந்த செல்லுங் கொடுக்கும் என்னுஞ் சொல் லிரண்டும் ஒழிந்த படர்க்கை யிடத்திற் குரிய, தன்மைக்கு முன்னிலைக்கு மாகா வென்றவாறு.

உ-ம் : அவர்க்குச் செல்லுங் காணம்; அவர்க்குக் கொடுக் குங் காணம், எனவரும்.

---

1. ஒழிந்[து] (த)

பொதுச் சூத்திரத்துத் தன்மைக்கு முன்னிலைக்கு முரிய தரவினையும் வரவினையுந் தரவு வரவு என்றோதாது வரவினைச் செலவினோடு இயைபுபடுத்திக் கூறியும், படர்க்கைக் குரிய கொடுக்கும் என்பதனோடு செல்லு மென்பது கூறாது தர வென் பதனை இயைய வைத்துக் [1]கூறியும், நின்ற முறைமை யன்றிக் [2]கூற்றினாற் கொடைப் பொருட்கட் கொடுக்கு மென்பதனைத் தரும் என்றும், செல்லு மென்பதனை வரும் என்றும் கூறுவன வற்றை இடவழு வாக்கி யமைத்துக் கொள்ளப்படும்.

செலவு வர வென்பன கொடைக்கண் நிகழுமா றென்னை யெனின் [3]அக் கொடுக்கப்படுகின்ற பொருள் செலவு வரவினை மேலிட்ட கொடையைக் கூறுங் [4]கருத்தி னுகலிற் கொள்ளப் படும், என்பது.

வரவு, தரவு என்பன தம்முள் [5]ளியைபுபட நின்றவா லெனின், தம்முள் ளியை புடைய வெனினும் முன் கூறிய செலவினோடும் வரவு பொருளான் இயைப்புபடுதலின் இத் தரவினோடு இயை பின்றாயிற் றென வுணர்க. [6]புனறரு பசுங் காய் தின்ற; அவர்க்கு வருங் காணம், என்றாற்போல்வன, கொடைத் தொழிலிடை மயக்கமாகக் கொள்க.

இன்னும் வரவினோடு செலவு கூறிய முறை யன்றிக் கூற்றா லக் கொடைத் தொழி லல்லாச் செலவு வரவின்கண்ணும் இடைமயக்கங் கூறுவன வமைத்துக் கொள்ளப்படும்.

உ-ம்: "தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது;"
"யானெய்த வம்பு [7]நின்மேற் செல்லும்;"
"அரி[8]மல ராயந்தகண் ணம்மா கடைசி
திருமுகமுந் திங்களுஞ் செத்துத் — தெருமந்து
வையத்தும் வானத்துஞ் செல்லா தணங்காகி
யையத்துள் நின்ற தரா".

இந் நிகரன வெல்லாங் கொள்க.

இந் நான்கு சொல்லுமே இடமயக்கமா யாராய்ந்தது என்னை? எல்லாப் பெயர்களும் வினைகளும் இடத் தொடு பட்டால் வருவ தெனின் வேற்றுமை யுண்டு; அவ்வாறு தத்தம் இடங்கண்மே னின்ற சொற்கள் ஒன்றனோ டொன்று சேரு மியல்பு [9]கூறுதல் இந் நான்கிற்கு மல்ல தின்மையின் இவற்றையே கூறினார், என்பது.

---

1. கூறிய : திருத்தம் 2. கூற்றினு[ர்](ற்) 3. [ஆ](அ)க் 4 கருத்தி[ன்]னு
5. ளியை[ப்](பு)பட 6. பு[ன்ர](ன்ற)ரு 7. நிட[னே](ன்)மேற் செ[ா]ல்
8. மலர்ந்தன்ன 9. கூறினு[னெ]ர்

செலவு முதலிய சொன் ஞன்கும் படர்க்கையே யெனினும், வரும் தரும் என்னு மிரண்டும் படர்க்கையாயும், தன்மை முன்னிலைகளோடு இயைபுபட்டும், செல்லும் கொடுக்கும் என்னு மிரண்டுந் தமக் கேற்ற படர்க்கையோடு இயைபுபட்டும் நின்ற வாறு கண்டு கொள்க.

இவற்ருற் சொல்லியது ஓர் இடத்துச் சொல் ஓரிடத்துச் சேருமிடத்துப் பிறக்கு மிட விலக்கணமும் இட வழு [1]வமைதி யும் என்பது.

அரசு :

என்பது செல்லும் கொடுக்கும் என்பன படர்க்கை இடத்தன.

உதா : அவர்க்குச் செல்லுங் காணம், அவர்க்குக் கொடுக் குங் காணம் என வரும். "அந் நாற்சொல்லுந் தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் மூவிடத்து முரிய வென்ப" வென்றதனு னவை மயங்கி வரவும் பெறும். "தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது"; "[2]புனறரு பசுங்காய் தின்ற தன்றப்பல" எனவும்

"அரிமல ராய்ந்தகண் ணம்மா [3]கடைசி
திருமுகமுந் திங்களுஞ் செத்துத் — தெருமந்து
வையத்தும் வானத்துஞ் செல்லா, தணங்காகி
யையத்து நின்ற தரவு" எனவு மயங்குவன வமைக்க. கடைசி யென முன்னிலை யாக்குக.

31. யாதெவ னென்னு மாயிரு கிளவியும்
அறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றும்.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்ருே வெனின், அறியாத பொருளை அறியுங்காற் சொலற் பால வாமாறு இது என்ப துணர்த்துதல் நுதலிற்று.

உரை : யாது, எவன் என்ற இரண்டு சொல்லும் தன்ஞல் அறியப்படாத பொருட்கண் வினுவாய்த் தோன்றும், என்ற வாறு.

---

1. வமைதி[யை](யு)ம் 2. புணரரு 3. கடைசித் : திருத்தம்

வரலாறு: நுங் நாடியாது? இப் பண்டி யுள்ளது எவன்? என வரும்.

செறிய என்பது யாப்புறுத்தல்; இஃது யாப்புறத் தோன்றும் என்ப; பிற யாப்புறுமற் றேன்றுவனவும் உள என்பதாகும்.

வரலாறு: யாவன், யாவள், யாவர், யாது, யாவை என்பன.

ஐந்து பாலும் அறியலுற்று வாரா; வினா மாத்திரத்திற்கு வரும். *

**தெய்வ :**

வினா வழுக் காத்தலை நுதலிற்று.

**இ-ள்:** யாது எவன் என்று சொல்லப்பட்ட இரண்டு சொல்லும் அறியாத பொருட்கட் பொருந்தத் தோன்றும், எ-று.

நின்னுடு யாது? இப் பண்டி யுள்ளது எவன்? என வரும்.

ஏனைப் பால் உணர்த்தும் வினாச் சொற்களெல்லாம் கூறாது இவ் விரண்டினையும் வகுத்துக் கூறியது என்னை யெனின், ஆண்டு உள தோர் வழு வமைத்தற் பொருட்டு, என்க.

**சேனா :**

**இதன் பொருள்;** யாது எவ னென்னும் இரண்டு சொல்லும் அறியாப் பொருளிடத்து வினாவாய் யாப்புறத் தோன்றும், என்றவாறு.

உதாரணம்: இச் சொற்குப் பொருள் யாது; இச் சொற்குப் பொருள் எவன், என வரும்.

எவ் வகையானும் அறியாப் பொருள் வினாவப்படாமையின், ஈண் டறியாப் பொரு ளென்றது பொது வகையான் அறியப் பட்டுச் சிறப்பு வகையான் அறியப்படாத பொருளை யாம்.

யா, யாவை, யாவன், யாவர், யார், யாண்டு, யாங்கு என்னுந் தொடக்கத்தன திணையும் பாலும் இடமு முதலாகிய சிறப்பு வகையானுஞ் சிறி தறியப்பட்ட பொருளன வாகலின், அறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றாமையான், இவற்றை யே விதந்து, "அறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றும்"

* வினாவு மாத்திரத்திற்கு வந்த சூத்திரம் — பிரதிபேதம்

என்றார். இவையுந் திணையும் பாலுங் குறித்து வருதலிற் சிறப்பு வகையானும் அறியப்பட்ட பொருளன வன்றோ வெனின், அற்றன்று: இச் சொற்குப் பொருள் யாது, எவன், என்று வினுய வழி, இறுப்பானும் அஃறிணை யொருமையும் பொதுமையுந் துணிந்து அவற்றுட் பகுதி யறிதற்கு வினவுகின்றா னல்லன், பொதுவகையான் வினவுகின்றானென்று உணரும். ஆகலின், அவ்வாறுதல் வழக்கினகத்து வினவுவானதும் இறுப்பானதுங் குறிப்பொடு படுத் துணர்க.

முன்னர் வழு வமைத்தற்கு அவை இன்ன பொருட் குரிய வென அவற்ற திலக்கணங் கூறியவாறு.

நச்சி :

இஃது, அறியாப் பொருள்மேல் சொல் நிகழ்த்தும் மரபு கூறுகின்றது,

இ-ள் : யாது எவன் என்னும் ஆயிரு கிளவியும் — யாது எவன் என்று சொல்லப்படும் அவ் விரண்டு சொல்லும், அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றும் — அறியாப் பொருளிடத்து ஒருவன் வினவும் வினவாய் யாப்புறத் தோன்றும், எ-று.

உ-ம் : இச் சொற்குப் பொருள் யாது? இச் சொற்குப் பொருள் எவன்? இது, பொது வகையான் உணரப்பட்டுச் சிறப்பு வகையான் உணர்த்தப்படாத பொருளாம். இக் காலத்து எவன் என்பது என் என்றும் என்னை என்றும் மருவிற்று.

யாவன்? யாவள்? யாவர்? யார்? யா? யாவை? யாண்டு? யாங்கு? எப்பொருள்? என்பன திணை பால் முதலியன உணர்த்தலின் அறியாப் பொருள்வயின் செறியத் தோன்றா வாயின. ஆயின், யாது? எவன்? என்பவற்றிற்கும் அவை உளவால் எனின், வினவுகின்றான் அஃறிணை ஒருமையும் பன்மையும் துணிந்து அவற்றின் பகுதி அறிதற்கு வினவுகின்றான் அல்லன், பொது வகையான் வினவுகின்றான் என்று அறிவுறுக்குமாறு வழக்கு நோக்கி உணர்க.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், உலகத்துப் பொரு டான் அறிந்த பொருளென்றும் அறியாப் பொருளென்றும் இரண்டு வகைத்து. அவற்றுள், அறியாப் பொருண்மே னிகழுஞ் சொல்லது இலக்கணங் கூறுதல் நுதலிற்று.

பொருள் : யாது எவனென்று சொல்லப்படும் அவ் விரண்டு சொல்லும் தன்னான் அறியப்படாத பொருளிடத்து [1]வினச் சொல்லாய் யாப்புறத் தோன்றும், என்றவாறு.

உ–ம் : நுந் நா டியாது; இப் பண்டி யுள்ளது எவன்; என வரும். இவற்றுள் எவனென்பது இக்காலத்து என் என்றும், என்னை என்றும் மருவிற்று. [2]யாப்புற (செறிய) என்றதனாற் பிறவும் அவ்வினப் பொருளிடத்து வருவன கொள்ளப்படும்.

உ–ம் : யாவன், யாவள், யாவர், யாவை, யா, எப்பொருள் என விவை.

எவன் என்பது அஃறிணை இருபாற்கும் உரிய வினாவே யெனினும், ஒருமைப் பான்மேல் [3]வருவதே பெரும்பான்மை யென்பது, உரையிற் கோடல் என்பதனாற் கொள்ளப்படும்.

அரசு :

என்பது யாது, எவன் என்னும் இரண்டு சொல்லுந் தன்னா லறியப்படாத பொருட்கண் வினவாய்த் தோன்றும்.

உதா : நுந் நாடியாது, இப் பண்டி யுள்ள தெவன்; மடியுள்ள தியாது, மடியுள்ள தெவன்; கையுள்ள தியாது, கையுள்ள தெவன் என வரும். இச் சொற்குப் பொருள் யாது. இச்சொற்குப் பொரு ளெவன் எனவும். எவ னென்ப திக் காலத்துள் என் னென்றும் என்னை யென்றுந் திரிந்து நடக்கும். [4]செறிய வென்றதனல் யாவன், யாவள், யாவர், யாது, யாவை எனவும்; யாங்கு, யாண்டு, எப்பொருள் என விவையுந் திணை பான் முதலியனவு மறியப்[5]படாதானவிடத்துத் தோன்று மென்பது கொள்க.

---

1. வி[சை](னச்) 2. யாப்புறச்(செறிய) என்றதனு [ர்](ற்) 3. [வருந்த](வருவதே) 4. செற்றிய : திருத்தம் 5. படாதாளவ்விடத்து : திருத்தம்

32. அவற்றுள்
யாதென வருஉம் வினாவின் கிளவி
அறிந்த பொருள்வயின் ஐயந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி [1]யாகலு முரித்தே

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இறந்தது காத்தல் நுதலிற்று.

உரை : அவற்றுள், யாது என்பது தன்னான் அறியப் பட்ட பொருட்கண் ஐயப்பட்டதனைத் தெளிதற்குச் சொல்லவும் பெறும், என்றவாறு.

வரலாறு : நம் எருத் தைந்தனுள் யாது கெட்டது? என வரும்.

உம்மை எதிர்மறை.

மற்று, இதுவும் அறியாப் பொருளாதல் ஒக்கும் பிற வெனின், முன் யாதும் உணராததன்கட் சொல்லினான்; அது முற் சூத்திரத்தோடு இதனிடை வேற்றுமை. முன்னர்ச் சூத்திரம், எவன் யாது என்று கூறற்பாலன; எற்றுக்கு யாது எவன் எனக் கூறினான் என்னின், யாது என்பதனைப் பின்னரும் இங்குக் கொணர்ந்து ஆராய்தலின் என்க. அவ்வாறு கூறாது குறிப்புக் கொண்டதனான், நமருள் யாவர் போயினார்? அவற் றுள் எவ் வெருது கெட்டது? என்பன கொள்க.

தெய்வ :

வினா வழு அமைத்தலை நுதலிற்று.

இ-ள் : மேற் சொல்லப்பட்டவற்றுள் யாது என்று சொல்லப்பட்ட அறியாத பொருண்மைக்கண் நிகழும் சொல் அறிந்த பொருட்கண் ஐயந் தீர்தற்பொருட்டு ஆராய்ந்த சொல் லாகலும் உரித்து, எ-று.

உம்மை எச்ச வும்மை ஆகலான், ஐயம் அறுத்தலே யன்றி அறி வொப்புக் காண்டற் பொருட்டும் வினாவப்படும் என்றுங் கொள்க. ஐயம் அறுத்தலாவது, இச் சொற்குப் பொருள் இது வென உணர்ந்தான் ஒருதலையாகத் துணித லாற்றாது.

---

1. யாதலும் : சேனா, நச்சி. பாடம்

அஃ தறிவான் ஒருவனை வினுதல். அறிவு ஒப்புக் காண்டலாவது சொல் இலக்கணம் அறிவான் ஒருவன் அஃது அறிவான் ஒருவனை இதற்குப் பொருள் யாது என வினுதல். பிறவும் அன்ன. இவ் வாறு அறிந்த பொருளை வினுதல் வழு வாயினும் அமைக, என்றவாறு.

**சேனு :**

**இதன் பொருள் :** கூறப்பட்ட இரண்டனுள் யாதென்னும் வினச்சொல் அறியாப் பொருள் வினு வாதலே யன்றி அறிந்த பொருட்கண் ஐய நீக்குதற்கு ஆராய்ந்த சொல் லாதலு முரித்து, என்றவாறு.

உதாரணம் : இம் மரங்களுட் கருங்காலி யாது; நம் மெரு தைந்தனுட் கெட்ட வெரு தியாது, என வரும்.

நமருள் யாவர் போயினர்; அவற்று ளெவ் வெருது கெட்டது, எனப் பிறவும் அறிந்த பொருள்வயின் ஐயந் தீர்தற் குத் தெரிந்த கிளவியாய் வருதலின், அவையும் ஈண் டமைக்கற் பால வெனின், அவை அறிந்த பொருள்வயின், ஐயந் தீர்தற் கல்லது யாண்டும் வாராமையின், ஈண் டமைக்கப்படா வென்பது.

இதனுல் வினு வழு வமைத்தார்.

**நச்சி :**

இஃது, அவற்றுள் ஒன்று அறிந்தவழியும் வரும் என்று அறிந்து காக்கின்றது. எனவே, மரபு கூறிற்றும்.

**இ–ள் :** அவற்றுள் யாது என வரூஉம் வினவின் கிளவி — அக் கூறப்பட்ட இரண்டனுள் யாது என்னும் வினச்சொல், அறியாப் பொருளை வினுதலே அன்றி, அறிந்த பொருள் வயின் ஐயம் தீர்தற்குத் தெரிந்த கிளவி ஆதலும் உரித்து — அறிந்த பொருட்கண் ஐயம் தீர்தற்கு ஆராய்ந்த சொல் லாதலும் உரித்து, எ–று.

**உ–ம் :** நம் எருது ஐந்தனுள் கெட்ட எருது யாது ? என வரும். இஃது அறிந்த பொருட்கண் ஐயம் தீர்த்தலின், வழு வமைதி அன்று.

முன்னிற் சூத்திரத்துள் யாது என்பதனை இச்சூத்திரத் தோடு பொருந்தப் பின் வையாததனுல், செறியத் தோன்ருத னவற்றிலும் வருவன கொள்க.

நமருள் யாவன் போயினுன்? என எல்லாவற்ருேடும் ஒட்டுக.

இனி, கடிசொல் இல்லை (எச். 56) என்பதனுல், நமருள் எவன் போயினுன்? அவற்றுள் எவ் வெருது கெட்டது? என்பனவும் கொள்க.

உம்மை எதிர்மறை ஆகலான், ஐயத்தாய் நிற்றல் வலியு டைத்து.

கல் :

என்ப தென் னுதலிற்ருே வெனின், மேல் அறியாப் பொருண்மேல் நிகழுமென்று மர பிலக்கணங் கூறிய சொற்க ளுள் ஒன்றற்குச் [1]சிறி தறிந்தவழியும் வரு மரபும் உண் டென்று அறிந்தது காத்தல் நுதலிற்று.

பொருள்: மேல் வினவப்பட்ட விரண்ட னுள்ளும், யாது என்று சொல்ல வருகின்ற வினுப் பொருளை [2]யுணர நின்ற சொல், அறிந்த பொருளிடத் துண்டாகிய ஐயந் தீர்தற்கு ஆராய்ந்த சொல் லாகலும் உரித் தென்றவாறு.

உ-ம்: ஒருவன் ஐந் தெரு துடையான் காப்பக் [3]கொடுப் பவற்றுள் ஒன்று கெட்ட தென்று [4]காப்பானிடைச் சொல் லினவிடத்து, எரு துடையான் [5]வெள்ளை, காரி, என்னும் ஐயந் தீர்தற்பொருட்டு, அவற்றுள் யாது என்று வினுதல், என்பது.

மேற் சூத்திரத்துப் பின்ருெடர் புடையது என்பதனைப் பின் வைக்கற் பாற்று என்பதனுன் இத்தோ டியைபுடைய யா தென்பதனை எவனின் பின் வையாது முன் வைத்த முறைமை யின்றிக் [6]கூற்றினுன் அச் சூத்திரத் தெடுத்தோத் தானும், [7]இலேசானும், அறியாப் பொருளிடத்து வந்தன வெல் லாம், அறிந்த பொருளிடத்து ஐயந் [8]தீர்த்தற்கும் வரு மெனக் கொள்க.

1. சி[சி](றி)த[ர](றி)ந்தவ[ழு]ழியும் 2. யுண[ர்](ர) 3. கொடு[க்க]ப்ப
4. காப்பா[னடு](னிடை 5. வெள்ளை[க்]காரி 6. கூ(ற்)றினுன்
7. இ[லெ](லே)சா(னு)ம் 8, தீர்[த்]தற்

உ-ம்: நமருள் யாவன் போயினன், அவற்றுள் எவ் வெருது [1]கோட்பட்டது, என்றாற் போல்வன.

இச் சூத்திரத்தாற் கூறியது வழு வமைதி யன்றோ வெனின், முன் பறியாப் பொருள் என்றதும் ஒருவகையானும் அறியாமை [2]யென்பதின்மையின், அதனைப் பார்க்க இது சிறுபான்மை யென்ப தல்லது வழு வென வாகாது என வுணர்க.

இவற்றாற் சொல்லியது வினைப் பொருண்[3]மேல் நிகழுஞ் சொற்களது பெரும்பான்மை சிறுபான்மை மர பிலக்கண மென வுணர்க,

அரசு:

என்பது, யா தென்னும் வினைச் சொல், அறியாப் பொருளை வினவுதலே யன்றி யறிந்த பொருட்க ணையந் தீர்தற்கு ஆராய்ந்த சொல் லாதலு முரித்து.

உதா: நம் மெரு தைந்தனுள் கெட்ட வெருது யாது? என வரும். தெரிந்த கிளவி யாதலு முரித் தென்றதனால் நமருள் யாவன் போயினான் என வைந்திரேடு மொட்டுக. கடிசொல் லில்லை யென்பதனால் நமரு ளெவன் போயினன், அவற்று ளெவ் வெருது கெட்டது என்பனவுங் கொள்க.

33. இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு
வினைப்படு தொகையி[4] னும்மை வேண்டும்.

இளம்:

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், வரையறைப் பொருட்கண் சொல் நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று; மரபு வழுக் காத்தது எனினும் அமையும்.

உரை: இத்துணை என்று வரையறுக் கப்பட்ட சினைக் கிளவிக்கும் முதற் கிளவிக்கும் வினைப்படுத்துச் சொல்லு மிடத்து இறுதி உம்மை கொடுத்துச் சொல்லுக என்றவாறு.

வரலாறு: நம்பி கண் ணிரண்டும் நொந்தன; நங்கை முலை யிரண்டும் வீங்கின, என வரும்.

---

1. கோட்[ப்]பட் 2. யெ[ண்ப்](ன்)ப 3. மேனி[க்]கழு
4. தொகுதியின்: (தெய்வ) (சேனா) (நச்சி) பாடம்.

சினைக் கிளவி உம்மைகொடாவிடிற் பிற கண்ணும் முலை யும் உளவாவன சொல்லு மாகலான், உம்மை யன்றிக் கூறுதல் மர பன்று.

இனி, முதற் கிளவி வருமாறு : தமிழ் நாட்டு மூவேந்தரும் வந்தார், என வரும்.

இருதிணை மருங்கின் ஐம்பாலும் அறிய என்றது, இருதிணை மருங்கின் ஐம்பால் அறிய (கி. ஆ. 10) என்று சூத்திரஞ் செய்தானு லாசிரியனேனும், செய்யுட்கண் உம்மை யின்றி வருதற்கு உடம்பொடு புணர்த்தான் என்றலும் ஒன்று. இனிச் சூத்திரத்திற் சினைமுதற் கூறிய முறையன்றிக் கூற்றினுள் உம்மையின்றி வருவனவும் உள என்பது பற்றி, உம்மையைத் தொகுத்துக் கூறினான் என்பாரும் உளர்.

**தெய்வ :**

ஒருசார் செப்பு வழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள்: இத்துணை யென வரையறுக்கப்பட்ட சினைக் கிளவியும், முதற்கிளவியும், தொழிற்படு தொகுதிக்கண் உம்மை பெறல் வேண்டும், எ-று.

எனவே தொழிற்படாத் தொகை இயல்பாகி வரப் பெறும், என்பது பெறுதும்.

உ-ம்: தேவர் முப்பத்து மூவரும் வந்தார்; நங்கை முலை யிரண்டும் நல்ல; இவை தொழிற்பட்ட தொகை. தேவர் முப்பத்து மூவர், ஆவிற்கு முலை நான்கு, இவை தொழிற் படாத் தொகை. கடுவன் முது மகன் கல்லா மூலற்கு – வதுவை வந்த வன் பறழ்க் குமரி – இருதோள் தோழர் பற்ற, என்புழி உம்மை வந்ததன்றால் எனின், ஆண்டு எஞ்சி நின்றது, என்க.

**சேனு :**

இதன் பொருள் : கேட்போரான் இத்துணை யென் றறியப் பட்ட சினைக் கிளவிக்கும் முதற் கிளவிக்கும் வினைப்படு தொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக, என்றவாறு.

உதாரணம் : பன்னிரு கையும் பாற்பட வியற்றி (திருமுரு. — 118) எனவும், முரசு முழங்கு தானை மூவருங் கூடி (பொருந. — 54) எனவும் வரும்.

அறிந்த சினை முதற் கிளவி யெனவே முன் னறியப்படாக் கால், முருகற்குக் கை பன்னிரண்டு; தமிழ் நாட்டிற்கு வேந்தர் மூவர், என உம்மை பெறாது வரு மென்பதாம்.

ஐந்தலை நாக முடன்றது; நான்மறை முதல்வர் வந்தார்: என்புழி, இனைத்தென வறிந்த சினை முதற் கிளவி யாயினும், வினைப்படு தொகுதி யன்மையின், உம்மை பெறா வாயின. அஃதேல், பன்னிரு கையும் என்புழியும், தொகுதிப் பெயர் வினை யொடு தொடராது கை யென்பதனோ டொட்டி நிற்றலின், வினைப்படு தொகுதி யன்றாம் பிற வெனின், ஒட்டி நின்றதாயி னும், ஐந்தலை நாகம்; நான் மறை முதல்வர் என்பன போவாது, இரு சொல்லும் ஒரு பொருண்மேல் வருதலிற் கை யென்பதினோ டியைந்த இயற்றி யென்னும் வினை தொகுதிப் பெயரோ டியைந்த தாம்; அதனா னது வினைப்படு தொகுதியா மென்பது. அஃதேல், கண் ணிரண்டுங் குருடு; எரு திரண்டு மூரி, எனப் பெயர் கொண்டவழி உம்மை பெறுமா றென்னை யெனின், பெய ராக வினையாக முடிக்குஞ் சொல்லொடு படுதலை ஈண்டு வினைப் படுத லென்றா ராகலின், அவையும் வினைப்படு தொகுதியா மென்க. ஐந்தலை, நான் மறை என்பன வற்றிற்கு, நாகம், முதல் வர் என்பன முடிக்குஞ்சொ லன்மையின், வினைப்படு தொகுதி யாகாமை யுணர்க.

சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தல்

என்பதனாற் சினை முதற் கிளவி யென்றா ராயினும், சிறவாத பண்பு முதலாயினவுங் கொள்ளப்படும்.

உதாரணம்: சுவை யாறு முடைத் திவ் வடிசில்; கதி யைந்து முடைத்திக் குதிரை, என வரும்.

இரு தோ டோழர் பற்ற, எனவும், ஒண்குழை யொன் றொல்கி யெருத் தலைப்ப, எனவும் உம்மை யின்றி வந்தனவா லெனின், ஆண்டும்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கு நின்றன வென்பது.

**நச்சி:**

இது, வரையறை யுடையது தொகை பெறும்வழிப் படுவ தோர் மரபு கூறுகின்றது.

இ–ள் : இனைத்தென அறிந்த சினை முதல் கிளவிக்கு — கேட்போரால் இத்துணை என்று அறியப்பட்ட சினைக் கிளவிக்கும் முதற் கிளவிக்கும், வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும் — முடிக்கும் சொல்லொடு படும் தொகுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக, எ–று.

உ–ம் : நம்பி கண் இரண்டும் நொந்தன: தமிழ் நாட்டு மூவேந்தரும் வந்தார்: எனச் சினை முதற் கிளவிகள் தாமே வினைப்பட்டமையின், உம்மை வேண்டின.

பன்னிரு கையும் பாற்பட்ட இயற்றி (முருகு. — 118)
இது பிறவினைப் படுத்தினது.

முரசு முழங்கு தானை மூவரும் கூடி (பொரு. — 54)
இது தானே வினைப்பட்டது, பன்னிரண்டென்னும் தொகுதியும் கையும் இயற்றி என்பதன்மேல் வருதலின், கை என்பதனோடு இயைந்த இயற்றி என்னும் வினை, தொகைப் பெயரோடும் இயைந்த தாம். ஐந்தலை நாகம் உடன்றது, என்பதற்கு நாகம் வினைப்படு தொகுதி அன்று, முடிக்கும் சொல் அன்மையின். இனிக் கண் ணிரண்டும் குருடு; எருது இரண்டும் மூரி; எனப் பெயர் கொண்டவழிப் பெயரும் முடிக்கும் சொல்லேயாம். சுவை ஆறும் உடைத்து இவ் வடிசில்; கதி ஐந்தும் உடைத்து இக் குதிரை: எனச் சிறவாத பண்பு முதலியன பற்றி வருவனவும் கொள்க.

இரு தோள் தோழர் பற்ற ( நன் சூ. 398 மயிலைநா. உரை, மேற்) என்பது பிறரால் வினைப் படுக்கப்பட்டது. இதற்கு உம்மை விகாரத்தால் தொக்கது. செய்யுள் ஆதலின் இத்துணை என்று அறியாக்கால், முருகற்குக் கை பன்னிரண்டு, என்று உம்மை பெறு தாம்.

ஒண்குழை ஒன்றொல்கி எருத்தலைப்ப ( நன் சூ. 398 மயிலைநா. உரை. மேற்.)
என்பது ஒன்றேனும், இனைத் தென அறிந்தபின் உம்மை வேண்டும். அது விகாரத்தால் தொக்கது.

கல் :

என் னுதலிற்றோ வெனின், இன்னும் உலகத்துப் பொருள் தான் வரையறை யுள்ளதும், இல்லதும் என, இரு வகைத்து.

அவற்றுள் வரையறையுள்ளது தொகை பெறும்வழிப் படுவ தோர் மரபிலக்கணங் கூறுதல் நுதலிற்று.

பொருள் : இத்துணை என்று வரையறுக்கப்பட்ட சினைக் கிளவியும் முதற் கிளவியுந் தம்மை மேலொரு வினையொடு படுத்துச் சொல்லுவ [1]தாவதற்குத் [2]தொகை கொள்ளுமிடத்து அத் தொகைச் சொல் லிறுதிக்கண் உம்மை கொடுத்துச் சொல்லுதல வேண்டு மென்றவாறு.

உ-ம் : [3]நம்பி கண் ணிரண்டும் நொந்தன; நங்கை முலை யிரண்டும் வீங்கின; [4]இவை சினைக் கிளவி. தமிழ் நாட்டு மூ வேந்தரும் வந்தார்; முப்பத்து மூவரும் வந்தார், என்பன முதற் கிளவி.

வினைப்படு தொகுதி யென்றமையான், [5]தொகை கொடாத வினைப்பாட்டின்கண் உம்மை யின்றி [6]நம்பி கண் ணொந்தது, நொந்தன, என வரும்.

இரு தோ டோழர் பற்ற, எனவும், ஒண்குழை யொன் றொல்கி, எனவும் உம்மை யின்றி வந்தனவும் உளவால் எனின், அவை [7]செய்யுளுள் தொகுக்கும்வழித் தொகுத்தல் என்பதினல் தொக்கு நின்றன. அவ்வாறு வழக்கினுள் இல்லை என் றுணர்க.

இரு திணை மருங்கி னைம்பா லறிய, [8]என்ற சூத்திரத்துள் உம்மை யின்றி வந்தன. [9]உடம்பொடு புணர்த்தல் என்பதனற் செய்யுளுள் உம்மை யின்றி வருவன வும் உள வென்றலு மொன்று. இது சிறுபான்மை.

இனி, வினைப்படாத பெயர்ப்பாட்டின்கண் தமிழ் நாட்டு மூ வேந்தர் இவர், எனினும் அமையும் என்பது.

அரசு :

என்பது இத்துணை யென்று வரையறுக்கப்பட்டு நின்ற சினைக் கிளவிக்கு முதற் கிளவிக்கும் வினைப்படுத்துச் சொல்லு மிடத் திறுதி யும்மை கொடுத்துச் சொல்லுக.

---

1. தாகதற்கு : திருத்தம். 2. தொகைக் கோடுமிடத்து :. திருத்தம்
3. நம்பி[க்]கண் 4. இது : திருத்தம் 5. தொகை[க்]கொடாத
6. நம்பி[க்]கண் 7. செய்யு(ளு)ட்டொகுக்கும் 8. என்[று](ற)
9. [னு](உ)

உதா : நம்பி கண் ணிரண்டும் நொந்தன; நங்கை முலை யிரண்டும் வீங்கின: சினைக் கிளவி யும்மை பெற்றவாறு. தமிழ் நாட்டு மூ வேந்தரும், முப்பத்து மூவரும் வந்தார்; நமர் நால்வரும் வந்தார்: முதற் கிளவி யும்மை பெற்றவாறு. அன்றியும், பன்னிரு கையும் பாற்பட வியற்றி, யெனவும், முரசு முழங்கு தானை மூவருங் கூடினுர், எனவும் வரும். *எருமை நாற்கானீற் கீழ் வரும் எனவும், இரு தோ டோழர் பற்றி யெனவும்,

¶ கண்களியாச் சென்றமர்ப்பக், கைநாஞ்சின் மேலசைஇ
யொண்குழையொன் ருெல்கி யெருத்தலைப்ப —
வொண்சுடர்ப்பூ
ணேர்மலர்த் தாரைவர் நீர்மை யுடைத்தரோ
நீர்மணிப்பூண் வெள்ளை நிலை.

எனவு மிவை உம்மை யில்லையா லெனிற் செய்யு ளாதலாற் ருெக்க தென்க.

34. மன்னுப் பொருளு மன்ன வியற்றே.

இளம் :

இச் சூத்திரம் என் நுதலிற்ருே வெனின், இதுவும் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

உரை : மன்னுப் பொருள் என்பது இல்லாப் பொருள் என்ப; அதனையும் சொல்லுமிடத்து உம்மை கொடுத்துச் சொல்லுக, என்றவாறு.

வரலாறு : பவளக் கோட்டு நீல யானை சாதவாகனன் கோயிலுள்ளும் இல்லை, என வரும்.

உம்மை பெறுத லொப்புமை நோக்கியே, முதற் சூத்திரத் தொடு மாட்டெறிந்த தெனக் கொள்க.

தெய்வ :

இது மரபு வழுக் காக்கின்றது.

இ—ள் : பொருந்தும் பொருளும் பொருந்தாப் பொருளும் உறழ வேண்டும் இடத்தும், பொருந்தும் பொருள் கூறு மிடத்தும், உம்மை கொடுத்துச் சொல்ல வேண்டும்.

---

* தெளிவில்லை

¶ கண்களியாற் சென்றமைப்பக் கைந்தாஞ்சினை மேலசைஇ
யொன்குழையென் ருெல்கி யெருத்தலைப்ப — வொண்சுடர்ப்பூ
ணேர்மலர்த் தாரைவர் நீர்மை யுடைத்தரோ
தேர்மணிப்பூண் வெள்ளை நிலை. — திருத்தம்.

வேதாகமத் துணிவு ஒருவர்க்கு உணர்த்துமிடத்து, உலகும் உயிரும், பரமும் அறுதி; பதியும், பசுவும், பாசமும் அறுதி, என வரும். உலகும் உயிரும் பரமும் பசுவும் பொருந்தும் பொருள் ஆனவாறும், பாசமும் பதியும் இவற்றோடு பொருந்தாத பொருள் ஆனவாறுங் காண்க. 'உடம்பும் உயிரும் வாடியக் கண்ணும்,' எனவும், 'நோயும் இன்பமும்,' எனவுங் கூறிய வாறுங் காண்க. 'மன்னிக் கழிகின்றேன்,' என்றான்: மன்னுதல் பொருத்தமும் மன்னுமை பொருந்தாமையு மானவாறு காண்க.

இ-ள்: நிலையாத பொருள் உம்மை பெறல் வேண்டும். எ-று. அவையாவன: இளமை, செல்வம், யாக்கை யென்பன.

உ-ம்: சக்கரவர்த்தி இளமையும் நிலையாது. சக்கரவர்த்தி செல்வமும் நிலையாது. சக்கரவர்த்தி யாக்கையும் நிலையாது. 'ஏமமாக இந்நில மாண்டோர் சிலரே'. 'பெருங் கேளினி னுளும் பலரே யத்தைபஃ தறியா தோரே,' 'அன்னோர் செல்வமும் மன்னி நில்லா,' என வரும்.

இல்லாப் பொருளென உரைப்பவா லெனின், இல்பொருள் வழக்கின் றென மறுக்க. உம்மை கொடாக்கால் வருங் குற்றம் என்னை யெனின், பிற நிலைமையும் செல்வமும் யாக்கையும் நிற்கு மெனப் பொருள் படுதலான் கொடுக்க வேண்டு மென்க.

சேறு:

**இதன் பொருள்:** இல்லாப் பொருட்கும் இடமும் காலமும் பொருளு முதலியனவற்றோடு படுத்து இன்மை கூறுதற்கண் உம்மை கொடுத்துச் சொல்லுக, என்றவாறு.

உதாரணம்: பவளக் கோட்டு நீல யானை சாதவாகனன் கோயிலுள்ளு மில்லை, எனவும், குருடு காண்டல் பகலு மில்லை, எனவும், உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா (நாலடி — 104) எனவும் வரும். இல்லாப் பொருட்கு ஒருகாலு நிலையுறுத லின்மையின், 'மன்னுப் பொருள்,' என்றார்.

இட முதலாயினவற்றெடு படுத்தற்க ணென்பது எற்புழிக் கோட லென்பதனுற் பெற்ரும். அவற்ரேடு படாதவழிப் பவளக் கோட்டு நீல யானை யில்லை, என உம்மை யின்றி வரு மென்பதாம்.

முற்றும்மையும் எச்சவும்மையு மாகிய வேறுபா டுடைய வேனும் உம்மை பெறுத லொப்புமையால், அன்ன வியற்று, என்ருர்.

இரண்டு சூத்திரத்தானும் மரபு வழுக் காத்தவாறு.

நச்சி :

இது, நிலையாப் பொருட்கண் மரபு நிகழ்த்துமாறு கூறு கின்றது.

இ-ள் : மன்னுப் பொருளும் — உலகத்து நிலை இல்லாத பொருளும், அன்ன இயற்று — அதுபோல உம்மை கொடுத் துக் கூறுதல் வேண்டும், எ—று.

'பொருளும்' என்ற எச்ச உம்மையான், உலகத்து இல்லாத பொருளும், இடமும் காலமும் பொருளும் முதலியனவற்ரேடு படுத்துக் கூறுதற்கண் உம்மை கொடுத்துக் கூறுதல் வேண்டும் என்று பொருள் உரைத்துக் கொள்க.

'யாக்கையும் நிலையாது,' எனவே, 'இளமையும் செல்வமும் நிலையா', என்னும் பொருளும் உணர்த்தி எச்ச உம்மையாய் நிற்கும் உம்மை பெறுதல் ஒப்புமையான், முற்றும்மையோடு எச்ச உம்மையை மாட்டெறிந்தார்.

இனிப் 'பவளக் கோட்டு நீல யானை சாதவாகனன் கோவி லுள்ளும் இல்லை', 'குருடு காண்டல் பகலும் இல்லை,' 'உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா' (நாலடி — 104) என இல்லாப் பொருள்களும் எச்ச உம்மை பெற்றவாறு காண்க. இடம் முதலியவற்ரேடு வாராதவழி உம்மை பெரு.

'மன்னுக பெருமநீ நிலமிசை யானே' (புறம் 6 : 29) எனவும்,

'மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர்' (புறம். 165:1) எனவும்,

'மன்னுப் பொருட்பிணி முன்னி' (நற். — 71).
எனவும், மன்னுமை நிலையாமையை உணர்த்துதல் அன்றி, இன்மையை யாண்டும் உணர்த்தாமை காண்க,

கல் :

என்னுதலிற்றோ வெனின், இன்னும் உலகத்துப் பொருள் இல்லதும் உள்ளதும் என விருவகைத்து; அவற்றுள் இல்லதன் மேற் பிறக்கு மர பிலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

பொருள் : உலகத் தில்லாப் பொருளும் மேலதனோடு ஒத்த வியல்பினை யுடைத் தென்றவாறு.

அன்ன வியல்பு என்பது மேலும் பிற பொருள் ஒழிந்தன வுள வெனப் படுதற் கஞ்சி முற்றும்மை கொடுக்க [1]வென்றான், அதுபோல் ஈண்டும் ஒழிவ தஞ்சி எச்ச வும்மை கொடுக்க வென்பான், அன்ன [2]வியற் றென்றான் என்பது.

உ-ம் : முயற் கோடும், ஆமை மயிர்க் கம்பலமும், அம்மிப் பித்தும், துன்னூசிக் குடரும், சக்கிரவர்த்திக் கோயிலுள்ளும் இல்லை, என வரும்.

மேற் சூத்திரத்து முற்றும்மையோ டிச் சூத்திரத்தை மாட்டேற்றலின் முயற் கோடும், ஆமை மயிர்க் கம்பலமும் யாண்டும் இல்லை, என்பது உதாகரண மாகற்பாற் றெனின், யாண்டும் என்னுது இல்லை யெனவும் வழக் கமைதலின் இதுவே பொரு ளன்மையை வாளாதே இல்லை யென்ப தன்றி, ஓர் இடத் தொடு படுத்து இல்லை யென்புழி எச்ச உம்மை கொடாது விடிற் பிறவிடத் துண்மை சொல்லின் மாட்டேற் றொருபுடைச் சேறல் என்பதாகக் கொண்டு, மேற் காட்டிய வுதாரண மாகற்[3]பால, வென்பது.

அரசு :

என்பது மன்னுப் பொருள் இல்லாப் பொருள்.

உதா : பவழக் கோட்டு நீல யானை சாதவாகனன் கோயி லுள்ளு மில்லை, முயற்கோடு மியாமை மயிர்க் கம்பளமு

1. வென்று[ன்](ர்) 2. விய[ல்லெ](ற்றெ)ன்று[ன](ர்) 3. பா[ல்](ல)

மம்மிப் பித்தும் துன்னூசிக் குடருஞ் சக்கரவத்திக் கோயி லுள்ளு மில்லை, எனவும், எந் நங்கையு மயி ரில்லை; இக் கழுதைக்குங் கோ டில்லை யெனவும் உம்மை கொடுத்துச் சொல்லுக. உம்மை கொடாது சொல்லிற் பிருண் டுண்டாள் செல்லும்; பிருண்டு வேறோ ரிடம்; உம்மை யெச்ச வும்மை.

35. எப்பொரு ளாயினு மல்ல தில்லெனின்
அப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறல்.

**இளம் :**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், மறித்துச் சொற் பல்காமைத் தொகுத் திறுக்கும் இலக்கணம் இஃ தென்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை : எவ் வகைப்பட்ட பொரு ளாயினும், தன்னுழை யுள்ள தல்லதனை இல்லை யெனலுறுமே யெனின், அவன் கூறிய பொரு ளல்லாத பிறிது பொருள் கூறி இல்லை என்க, என்றவாறு.

தன்னுழை உள்ளதன் உண்மை கூறி, இல்லை என்க வென்பது கருத்து.

வரலாறு : 'பய றுளவோ, வணிகீர் ?' என்றால், 'உழுந் தல்ல தில்லை,' என்க தன்னுழை யவை உளவாயின்.

இதன் கருத்து, அவன் வினவப்பட்ட பொருட்கு இனமாய பிறிது பொருளே கூறுக, என்பது.

இச் சூத்திரம், 'செப்பும் வினாவும்' (கிளவி — 13) என் பதனுள் அடங்கா தாயிற்று, அவன் வினாவிற்குச் செவ்வ னிறையாக வன்றிப் பிறிது மொன்று கொணர்ந்து இறுத்த மையின்.

**தெய்வ :**

செப்பு வழு வமைதி உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : யாதானும் ஒரு பொரு ளாயினும் அல்லது என்னும் சொல்லோடு கூட்டி, இல்லை எனக் குறித்தா னாயின், அவன் வினவிய பொருள் அல்லாத பிறிதாகிய பொருளைச் சொல்லுக, எ–று.

எனவே அதனேடு கூட்டிச் சொல்லுக, என்றவாரும். 'அப் பொருள் அல்லாப் பிறிது' என்றமையான், அதற்கு இனமாகிய பொருளேயே சொல்லப்படும்.

பயறு உளவோ வணிகீரே, என்ருர்க்கு உழுந் தல்லது இல்லே, என்க. கொல்லவன் பட்டு உளவோ.என்ருல், கோசிகம் அல்லது இல்லே. என்க. எனவே, அவன் கருத்திற் கேற்று விஞவிய பொருளே இல்லே என்ஞது, பிறிது ஒன்று கூறுதல் வழு வாயினும், அப் பொருள் பயத்தலின் அமைதி யாயிற்று.

சேனு :

**இதன் பொருள் :** யா தாயினு மொரு பொருளே யாயினும் ஒருவன் அல்ல தில் லென்னும் வாய்பாட்டான் இல்லே யென லுறின், அப் பொரு டன்னேயே கூருது அப் பொரு ளல்லாத பிறிது பொருள் கூறுக, என்றவாறு.

உதாரணம்: பய றுளவோ, வணிகீர், என்று விஞயவழி, உழுந் தல்ல தில்லே; கொள் ளல்ல தில்லே, என அல்ல தில் லென்பான் பிறிது பொருள் கூறியவாறு கண்டு கொள்க.

அல்ல தில்லெனி னெனப் பொருள் பற்றி யோதினு ராகலின், அல்ல தில் லென்னும் வாய்பாடே யன்றி, உழுந் தன்றி யில்லே, உழுந்தே யுள்ள து, என அப் பொருள்படுவன வெல்லாங் கொள்க, உழுந் தல்ல தில்லே யெனப் பிறிது பொருள் கூருது பய றல்ல தில்லே யென அப் பொருள் கூறின், பய றுள்ள, அல்ல வில்லே யென மறுதலேப் பொருள்பட்டுச் செப்பு வழு வாமா றறிக.

யாதானு மாக அல்ல தில் லெனிற் பிறிது பொருள் கூறுக வென எஞ்சாமற் றழீஇ யாப் புறுத்தற்கு எப் பொரு ளாயினு மென்ருர்.

அல்ல தில் லென்பதற்குத் தன்னுழை யுள்ள தல்ல தென்றும், அப் பொரு ளல்லாப் பிறிது பொருள் கூற லென்ப தற்கு இனப் பொருள் கூறுக வென்றும், உரைத்தாரால் உரை யாசிரிய ரெனின், பய றுளவோ வென்று விஞயவழிப் பய றில்லே யென்ருற் படும் வழு வின்மையானும், உள்ள தல்ல தென்றல் கருத் தாயின், ஆசிரியர் அல்ல தெனக் குறித்த பொருள்

விளங்காமையின் அகப்படச் சூத்திரியா ராகலானும், பாம்புணிக் கருங் கல்லும், பயறும் விற்பா னொருவனுழைச் சென்று, பய றுளவோ வென்றவழிப் பாம்புணிக் கருங்க லல்ல தில்லை யென்றால், இனப் பொருள் கூறுமையாற் பட்ட இழுக் கின்மை யானும், அவை போலியுரை யென்க. அல்லதூஉம், இனப் பொருள் கூறுக வென்பதே கருத்தாயின், அப் பொரு ளல்லா இனப் பொருள் கூற லென்னுது பிறிது பொருள் கூற லென்னார் ஆசிரியர், அதனானும், அஃ துரையன்மை யுணர்க.

நச்சி :

இது வினையதன் புறத்துச் சொல் பல்காமல் 'சொல் தொகுத்து இறுத்தல்' என்னும் செப்பு ஆமாறு கூறுகின்றது.

இ-ள் : எப்பொருள் ஆயினும் – யாதானும் ஒரு பொருளை ஆயினும், அல்லது இல் எனின் – தன்னுழை உள்ளது அல்ல தனை இல்லை யெனல் உறுமே எனின், அப்பொருள் அல்லாப் பிறிது பொருள் கூறல் – அவன் வினைய பொரு டன்னையே கூறாது அதற்கு இன மாகிய பிறிது பொருளைக் கூறி, இல்லை, என்க, எ-று.

'நூறு விற்கும் பட்டாடை உளவோ?' என்று வினவினார்க்கு, 'ஐம்பது விற்கும் கோசிகம் அல்லது இல்லை,' என்றும், 'பய றுளவோ வணிகீர்'? என்றார்க்கு, 'உழுந்து அல்லது இல்லை; கொள் அல்லது இல்லை,' என்றும், தன்னுழை உள்ளது அல்லதனை இல்லை என்பான், பிறிது பொருளைக் கூறினான்.

'பயறு உளவோ?' என்றவழி, அல்லது என்பது ஒழியவும், 'பயறு இல்லை, உழுந்து உள,' என்றால் படும் இழுக்கு என்னை?' எனின், 'எப்பொரு ளாயினும்' என்றது ஐம்பாற் பொருளை ஆகலானும், 'அல்லது' என்பது அஃறிணை ஒருமைப்பாற்கு உரித்தேனும் மற்றை நான்கு பாற்கண்ணும் பால் வழுவாயும் திணை வழுவாயும் மயங்குதலானும், அது கண்டு அதனை அமைத்தற்கு 'எப்பொருள் ஆயினும் அல்லது இல்' என்றார். 'அவன் அல்லது, அவள் அல்லது, அவர் அல்லது, அவை அல்லது' என வரும்.

'நாணும் நட்பும் இல்லோர்த் தேரின்
யானல தில்லையிவ் வுலகத் தானே' (அகம் 268. 8, 9)

எனச் சான்றோர் செய்யுளுள் பயின்று வருமாறும் உணர்க. 'அவன் அல்லது பிறன் இல்லை,' என மேல்வரும் சொல்லோடு படுத்து வழு வமைதி யாதல் அறிக.

பயற்றுன் முடிக்கும் குறை, உழுந்தான் முடித்த லன்றிப் பாம்புணிக் கருங் கல்லான் முடிக்கல் ஆகாமையின், 'பயறு உளவோ' என்றார்க்குப் 'பாம்புணிக் கருங்கல் அல்லது இல்லை,' என்றல் பொருந்தாமை உணர்க.

கல் :

என் னுதலிற்றோ வெனின், சொற் றொகுத்து 'இறுத்தல் என்னுஞ் செப் பாமா றுணர்த்துத னுதலிற்று.

பொருள்: எவ் வகைப்பட்ட பொரு ளாயினுந் தன்னுழை யுள்ள தல்லதனை இல்லை யெனலுறுமே யெனின், அவன் வினவின பொருள் அல்லாத பிறிது பொருள் கூறி இல்லை யென்க வென்றவாறு.

உ-ம்: பய றுளவோ ²வணிகீ ரென்றக்கால், உழுந் தல்ல தில்லை, யென்க. பய றுளவோ வென்றால் அல்ல தென்ப தொழியவும் பய றில்லை உழுந் துள வென இங் ஙிகரனவுஞ் சொல்லுப வாகலான் அல்ல தென்பது வேண்டா வெனின், அல்ல தென்பது அஃறிணை யொருமைப் பாற் குரியதே யெனினும், நான்கு பாற்கண்ணும் பால் வழுவாயும் திணை வழு வாயுஞ் சென்று மயங்கல் கண்டு, அதனைக் காத்தற் பொருட்டாகச் சொல்லினர், என்பது.

உ-ம்: அவ னல்லது, அவ ளல்லது, அவ ரல்லது, அது வல்லது, அவை யல்லது ³எனவரும்.

அவ னல்ல தென்புழி அவ னல்ல தென்பதனைப் பின் பிற னில்லை யென்று வருவதனோடு படுத்து வழு வாதல் அறிக.

'அப் பொரு ளல்லா' வென்பது மிகை; அதனாற் பிறிது பொருள் கூறும்வழியும் அவன் வினயதற்கு இன மாயவற்றையே கூறுக வென்றவாறு.

1. இ[கு](று)த்தல் 2. வணிகீரெ[ற](ர)ன்ற 3. (யெ)என

இதனாற் சொல்லியது செப்பின்கட் பிறப்பதோர் வழுக் கண்டதனை அமைத்தற்குக் கூறியவாறாயிற்று. இதனுள் வழு வென்பது என்னை யெனின், அவன் வினாயதனை மறுப்பதன்றி, அவன் வினாவாத பிறிதொன்றனையும் உடம்பட்டுக் கூறினமை யின் என்பது. வழுவமைதியேற் பிறிது பொருள் கூறுக, வென விதிக்கற் பாற்றன வெனின் அவ்வாறு கூற லாகா தென மறுத்து நின்றவு மிது இவ்வாறு கூறுக வென்ப தோர் விதி நீர்மைத்தது வென்பது.

அரசு :

என்பது எவ் வகைப்பட்ட பொருளாயினுந் தன்னுழை யுள்ள தல்லதனை யில்லை யென்று சொல்லி லவன் கூறிய பொரு ளல்லாப் பிறிது பொருள் கூறி யில்லை யென்க. தன்னுழை யுள்ளத னுண்மை கூறி யில்லை யென்ப திதன் கருத்து,

உதா : பய றுளவோ வணிகீ ரென்றக்கா லுழுந் தல தில்லை; கொள் ளல தில்லை யென்றும், நூறு விற்கும் பட்டாடை யுளவோ வென்றார்க்கு, ஐம்பது விற்குங் கோசிக மல்ல தில்லை யென்றும் சொல்லுக. இஃது அஃறிணை யொருமைப் பாற் குரித் தேனு மெப் பொருளாயினு மென்றமையா விருதிணை யைம்பாற் கண்ணு மல்ல தென்னுஞ் சொற் கொடுத்துச் சொல்லுக.

வரலாறு : அவ னல்ல தில்லை; அவ னல்லது, அவ ரல்லது, அது வல்லது, அவை யல்லது இல்லை யென்று சொல்லுக. ‘நா ணு நட்பு மில்லோர்த் தேரின், யானல்ல தில்லை யிவ் வுலகத் தானே’, எனச் சான்றோர் செய்யுளுட் பயின்று வருமாறு காண்க. பய றுளவோ வென்றார்க் கதற் கின மாகின வுழுந்தான் முடித்த லன்றி, அதற் கின மாகாப் பாம்புண்ணிக் கருங் கல்லான் முடியற்க.

36. அப்பொருள் கூறிற் சுட்டிக் கூறல்.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் ஓர் இறுத்தல் வகைமை யுணர்த்துதல் நுதலிற்று; மேலதற்கு ஓர் புறனடையும் என்பது.

உரை : அவன் வினயின அப் பொருளேயே சொல்ல லுறுமேயெனிற் சுட்டிக் கூறுக, என்றவாறு.

வரலாறு : இவை யல்லது பய றில்லை; இப் பய றல்லது இல்லை, என வரும்.

**தெய்வ :**

செப்பின்கண் வழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள் : வினவிய பொருளேயே சொல்லி அல்ல தில்லை யெனின், சுட்டிக் கூறுக, எ-று.

இப் பயறு அல்ல தில்லை; இப் பட்டு அல்ல தில்லை, என்க. எனவே, அவன் கருத்திற் கேற்ற பயறும் பட்டும் இல, என்ற வாறும்.

**சேனா :**

இதன் பொருள் : அல்ல தில் லென்பான், பிறிது பொருள் கூறாது அப் பொரு டன்னையே கூறு மாயின், இப் பய றல்ல தில்லை யெனச் சுட்டிக் கூறுக வென்றவாறு.

பய றுளவோ என்றவழிச் சுட்டாது பய றல்ல தில்லை யெனிற் பய றுள; உழுந்து முதலாயின யில்லை யெனப் பிறிது பொருளேற்பித்துச் செப்பு வழுவா மென்பது.

அல்ல தில் லென்பது, அதிகாரத்தாற் பெற்றும்.

தன்னின முடித்த லென்பதனால், பசும் பய றல்ல தில்லை, பெரும் பய றல்ல தில்லை, எனக் கிளந்து கூறுதலுங் கொள்க.

'செப்பும் வினவும்' (சொல் — 13) என்றதனான் இவ் வேறுபா டினிது விளங்கா மையானும், 'பொருளொடு புணராச் சுட்டு' (சொல் — 37) என வழு வமைக்கின்றா ராகலானும், இவற்றை விதந்து கூறினார்.

**நச்சி :**

இது, மேலதற்கு ஓர் புறனடை ஆயதோர் இறுத்தல் வகைமை கூறுகின்றது.

இ-ள் : அப் பொருள் கூறின் – அல்லது இல் என்பான் பிறிது பொருள் கூருது அப் பொரு டன்னையே கூறு மாயின், சுட்டிக் கூறல் — முன்னர்க் கிடந்த பொருளைச் சுட்டிச் சொல்லுக, எ–று.

'இவை அல்லது இல்லை; இப் பயறு அல்லது இல்லை,' என வரும். வினுயினன் பயற்றின் நன்மையும் தீமையும் உணர்ந்து கோடற்கும், தவிர்தற்கும் இவ்வாறே கூறுக என்றார். சுட்டாது. 'பயறு அல்லது இல்லை' எனின், 'பயறு உள; உழுந்து முதலிய இல்லை,' எனப் பிறிது பொருள் ஏற்பித்துச் செப்பு வழுவாம்.

தன்னினம் முடித்தல் என்பதனுல், 'பெரும் பயறு அல்லது இல்லை; பசும் பயறு அல்லது இல்லை' எனக் கிளந்து கூறுதலும் கொள்க.

கல் :

என் னுதலிற்றோ வெனின், இதுவு மேலதற் கோர் புறநடை[1]யாய தோர் இறுத்தல் வகைமை கூறுத னுதலிற்று.

பொருள் : அவன் வினுவின பொரு டன்னைச் சொல்லு மிடத்துச் சுட்டி இல்லை யென்று சொல்லுக வென்றவாறு.

உ–ம் : இப் பய றல்ல தில்லை; இவை யல்லது பயறில்லை, என வரும்.

அரசு :

என்பது வேறொரு பொருள் கூருது வினுயின பொருளையே கூறிற் றன் முன்னர்க் கிடந்த பொருளைச் சுட்டிச் சொல்லுக.

உதா : இப் பய றல்ல தில்லை யென்க. வினுயின பயி றின்மையுந் தீமையு முணர்ந்து கோடற்குந் தவிர்தற்குமாக இவ்வாறே கூறுக. தன்னின முடித்த லென்பதனுற் பெரும் பய றல்ல தில்லை, பசும் பய றல்ல தில்லை யெனக் கிளந்து கூறுதலுங் கொள்க.

---

1. யா[ய்](ய)

37. பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்
பொருள்வேறு படாஅ தொன்று கும்மே.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் ஒரு சொல்லுதல் வகைமை யுணர்த்துதல் நுதலிற்று. மேலதற் கோர் புறநடை எனவு மாம்.

உரை : பொருளொடு புணரா து நின்ற சுட்டுப் பெயராமே யெனினும், அப் பொருட்கு இயைபுபட வருமே யெனின் அமையும் என்றவாறு.

வரலாறு : இவை யல்லது பய றில்லை, என்புழிப் பயறு என்னுஞ் சொல்லாற் பயன் உணரப்பட்டது; 'அல்லது' என்னுஞ் சொல்லே எதிர்மறுத்து நின்றது. இல்லை என்னுஞ் சொல்லான் இன்மை உணரப்பட்டது.

இனி, இவை என்னுஞ் சொல் பொரு ளின்றால், அஃது என் செய்யும் என்றார்க்கு, அதுவும் பயற்றினையே சுட்டிற்றாகலான் அமைக, என்பது கருத்து.

இஃது ஒரு பொருண்மேல் இரு பெயர் வழுக் காத்தவாறு.

**தெய்வ :**

செப்பு வழு வமைத்தலை நுதலிற்று. மேலதற் கோர் புறனடை எனினும் அமையும்.

இ—ள் : வினவப்பட்ட பொருளோடு புணராச் சுட்டுப் பெயரைச் சொல்லினும், பொருள் வேறுபடாது ஒன்றாகும், எ—று.

இப் பய றல்லது, இப் பட்டல்லது இல்லை, என்னாது இவை யல்லது இல்லை எனினும் பொருள் வேறுபடாவாறு கண்டு கொள்க.

**சேனா :**

இதன் பொருள் : சுட்டா னன்றிப் பொருள் வரையறுத் துணர்த்தாச் சுட்டுப் பெயராற் கூறினும், பொருள் வேறாகா து இப் பய றெனச் சுட்டிக் கூறிய பொருளே யாம் என்றவாறு.

என் சொல்லியவாறோ வெனின், 'இவை யல்ல தில்லை' யென்றவழி, இவை யென்பது பயற்றையே சுட்டாது உழுந்து முதலாயினவற்றிற்கும் பொதுவாய் நிற்றலின் வழுவா மன்றோ; ஆயினும், முன்கிடந்த பயறு காட்டி, இவை யென்றுரைகலின், அவற்றையே சுட்டு முதலா னமைக்க வெனச் செப்பு வழு வமைத்தவாறு.

சாதியும் பண்புந் தொழிலு முதலாயினபற்றி ஒரு பொருளை வரைந் துணர்த்தாது எல்லாப் பொருண்மேலுஞ் சேறலிற் பொருளொடு புணராச் சுட்டுப் பெய ரென்றார்.

வேறுபடாது, ஒன்றுகும் என்பனவற்றுள் ஒன்றே அமையு மெனின், பொருள் வரைந் துணர்த்தும் பெயரொடு பொருள் வரைந் துணர்த்தாச் சுட்டுப்பெயர் வேறுபா டுடைத்தேனும், ஒரு பொருண்மேன் முடிதலின் ஒரு பொருட்டா மென்பது விளக்கிய பொருள் வேறுபடா தொன்றுகு மென்றார்.

அப் பொருள் கூறுதற்க ணென்னுது பொதுப்படக் கூறிய வதனுல், பிறிது பொருள் கூறும்வழியும் இவை யல்ல தில்லை யெனச் சிறுபான்மை சுட்டுப் பெயராற் கூறினு மமையு மென்பதாம்.

யானை நூல் வல்லா னொருவன் காட்டுட் போவுழி ஓர் யானை யடிச்சுவடு கண்டு, இஃ தரசுவா வாதற் கேற்ற இலக்கண முடைத்து, என்றவழியும், 'இஃதோ செல்வற் கொத்தனம் யாமென மெல்லவென் மகன்வயிற் பெயர்தந் தேனே' (அகம். 26) என்புழியும் சுட்டுப் பெயர் பொருளொடு புணராது நிற்றலின், அவற்றையே அமைக்கின்றது இச் சூத்திர மென் பாரு முளர்.

நச்சி :

இது, திணை வழு அமையுமாறும், ஒரு பொருட் பெயர் சுட்டாய் நின்று அப் பொருள் உணர்த்துவ தோர் மரபு வழு வமைதியும் உணர்த்துகின்றது.

இ-ள் : சுட்டுப் பொருளோடு புணரா ஆயினும் ஆகும் — ஒரு சுட்டுத் தான் உணர்த்துதற்கு உரிய அஃறிணைப் பொருளை உணர்த்தாது உயர்திணைப் பொருளை உணர்த்தி நிற்கு மாயினும்

ஆம், பெயர் பொருளோடு புணரா ஆயினும் சுட்டுப் பொருள் வேறுபடாது ஒன்றுகும் — சில பொருட் பெயர் சுட்டுப் பொருளை உணர்த்தா ஆயினும் தாம் சுட்டுவ தோர் பொருளிடத்து வேறுபட நில்லாமல் அப் பொருளையே உணர்த்தி நிற்கும், எ-று.

'இஃது ஒத்தன்' (கலி. 84:18) என்றவழி. 'இஃது' என்ற அஃறிணைப் பொருளை உணர்த்திய சுட்டு, 'இவன் ஒருத்தன்' என உயர்திணைப் பொருளை உணர்த்தி நின்றவாறு காண்க. 'இஃதோ செல்வற் கொத்தனம் *யாமென' (அகம் 26:19) என்பதும் அது.

'நாயுடை முதுநீர்' என்னும் அகப்பாட்டினுள்,

'நாணி நின்றோள் நிலைகண் டியானும்
பேணினென் அல்லனே மகிழ்ந வானத்
தணங்கருங் கடவு ளன்னோள்நின்
மகன்தாய் ஆதல் புரைவதாங் கெனவே'

என்புழி 'நாணி நின்றோள்' என்னும் பொருட் பெயர் தன் தொடர்ப் பொருளைக் கொண்டு முடிந்த பின்னர், அப் பொருட் பெயர்மேல் ஒரு காரியம் கூற வேண்டியவழி 'அவள்' எனச் சுட்டிக் கூறுதல் வேண்டும். அங்ஙனம் கூருது, 'வானத் தணங் கருங் கடவு ளன்னோள் என எல்லார்க்கும் பொது வாய தோர் பெயரால் கூறினுள் ஆயினும், கூறுகின்றாள் பரத்தையைக் கருதியே கூறுதலின், அக் 'கடவுளன்னோள்' என்ற பெயரும் சுட்டுப் பெயர்த் தன்மையாய் நின்றவாறு காண்க.

'அளிநிலை பெருது' என்னும் அகப்பாட்டினுள்,

'ஒண்ணுதல் ......... உயிர்த்த காலை மாமலர் மணியுரு
விழந்த ............ தோற்றம் கண்டே கடிந்தனம்'

(அகம் 5) என முடித்த பின்னர், அவள்மேற் பின்னரும் ஒரு காரியம் கூறக் கருதிய தலைவன், 'ஒண்டொடி,' எனப் பொதுப் பெயரால் கூறினுனேனும் அப் பெயர் அவள் என்னும் பொருள் தந்து நின்றவாறு காண்க.

கொய்தளிர்த் [2]தண்டலை [3]கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலும் ஏறும் வயக்களிறே — கைதொழுவாம்

1. என்ற (என்றது) 2. தண்படலைக் (தண்டலை) 3. கூடத்தப் (கூற்றப்)
* யாமென (கொத்தனென)

காலேக வண்ணனைக் கண்ணுரக் காணவெஞ்
சாலேகம் சார நட. (நன். சூ. 397, சங். ந. உரைமேற்)
பொற்பூண் சுமந்த புணர்மென்முலைக் கோடு போழ
நற்பூங் கழலான் இருதிங்கண யந்த வாறுங்
கற்பா டழித்த கனமாமணித் தூண்செய் தோளான்
வெற்பூ டறுத்து விரைவின்நெறிக் கொண்ட வாறும்
(சீவக. 19)

என்றூற் போலப் பிற செய்யுட்களுள்ளும் பொருட் பெயர் சுட்டுப் பெயர்ப் பொருளவாய் வருதல் பெரும்பான்மை என்று உணர்க.

'வையைக் கிழவன் வயங்குதார் மாணகலம்'
தையலாய் ! இன்றுநீ நல்கினை — நல்காயேல்
கூடலார் கோவோடு நீயும் படுதியே
நாடறியக் கௌவை ஒருங்கு (நன். சூ. 397. சங். ந.
உரை மேற்)

என்புழிக் 'கூடலார் கோ' என்றூற் போலப் பின் பொருட் பெயர் பொதுவாய் நில்லாது அப் பொருளையே விளக்கிச் சுட்டாய் நிற்பனவும் ஒன்றெனமுடித்தலால் கொள்க.

இச் சூத்திரத்திற்குப் பலரும் கூறும் பொரு ளெல்லாம் முன்னிற் சூத்திர்த்தால் பெற்றவாறு காண்க.

உம்மை சிறப்பும்மை; அது வேறு பொருள் படுதல்மாலைத்து ஆயினும் பொருள் வேறுபடாது ஒன்றுகும், என்றவாறு.

**கல் :**

என்ப தென் னுதலிற்றோ வெனின், இஃது ஒரு பொருண் மேல் இரு பெயர் வழுக் காத்தல் நுதலிற்று.

மேல், இவை யல்லது பய றில்லை, என்பதனைப் பற்றிப் பிறத்தலான் மேலதற்கே புறனடை யெனினும் அமையும்.

பொருள் :- பொருளொடு பொருந்தாச் சுட்டுப் பெய ராயினும், பொருள் வேறுபடாது ஒரு பொருளே யாகும், என்றவாறு.

உ-ம் : இவை யல்லது பய றில்லை, என வரும். இவை யென்பது பயறே யெனினும் பய றென்பது பின் னுண்மையின்

தன்மேற் செல்லாது பிறி தென்றதனைச் சொல்லியது போலும் நோக்குடைத்தே யெனினும் அமைக வென்றவாறு.

இதனுற் சொல்லியது, ஒரு பொருண்மேல் இரு பெயரும், பல பெயருங் கூறுதல் இலக்கணமே யெனினும் இயைபுபடக் கூறவேண்டு மென் றவ்வழி யியை பில்லது கண்ட மரபு வழுவினை அமைத்தவா ருயிற்று.

அரசு :

இஃ தொருத்த னென்ற வழி இஃ தென் றஃறிணைப் பொருளை யுணர்த்திய சுட்டு. இவ னொருத்த னென வுயர்திணைப் பொருளை யுணர்த்தி நின்றவாறு காண்க. இன்னு மோர் கருத்து, பெயர்ப் பொருளொடு புணரா வாயினுஞ் சுட்டுப் பொருள் வேறுபடா தொன் ருகும். இதன் கருத்து சில பொருட் பெயர் சுட்டுப் பொருளை யுணர்த்தா வாயினுந் தாஞ் சுட்டுவ தோர் பொருளிடத்து வேறுபட நில்லாமல் பொருளையே யுணர்த்தி நிற்கும்.

உதா : 'கொய்தளிர்த் தண்படலைக் கொற்றப் பெருஞ் சேந்தன், வைகலு மேறும் வயக்களிறே-கைதொழுவல், காலேக வண்ணனைக் கண்ணுரைக் [1]காணவெஞ் சாலேகஞ் சார நட.' இதனு ளுன்னை யெனவு மவனை யெனவும் சுட்டிக் கூறுதல் காண்க.

38. இயற்பெயர்க் கிளவியுஞ் சுட்டுப்பெயர்க் கிளவியும்
வினைக்கொருங் கியலுங் காலந் தோன்றிற்
சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்
இயற்பெயர் [2]வழிய வென்மனார் புலவர்.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றே வெனின், இதுவும் ஒரு பொருண்மேல் இரு பெயர் வழுக் காத்தல் நுதலிற்று.

உரை : இயற் பெயர் என்பன இரண்டு திணைக்கும் உரிய பெயர், சுட்டுப் பெயர் மூன்று சுட்டு முதலாக வரும் பெயர்; அவ் விரண்டும் வினைக்கண் ஒருங்கு நடப்ப தோர் காலந் தோன்றுமே யெனின், இயற் பெயர் முன் கூறிச் சுட்டுப் பெயரதனைப் பின் வைத்துக் கூறுக, என்றவாறு.

---

1. காண்க......மேஞ்சாலேகஞ்சால நட 2. வழி இய—அரசு பாடம்

வரலாறு: கொற்றன் வந்தான், அவற்குச் சோறு கொடுக்க, என வரும்.

மற்றுச் 'சுட்டுப் பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.' எனவே, இயற் பெயர் வழியே கிளப்ப, என்பது முடிந்தது.

பின்னை 'இயற் பெயர் வழிய' எனல் வேண்டா; அதனால், உயர்திணைப் பெயர் வழியும், அஃறிணைப் பெயர் வழியும் வைத்துக் கூறுக அச் சுட்டுப் பெயர்களை, என்றதாம்.

வரலாறு: 'நம்பி வந்தான், அவற்குச் சோறிடுக; எருது வந்தது, அதற்குப் புல்லுக் கொடுக்க, என வரும்.

இனி. வினைக் கியலும் காலம் தோன்றின் என அமையும். 'ஒருங்கு' என்ற மிகையதனான், அகர இகரச் சுட்டே கொள்க.

இனி, வினைக் கொருங் கியலும் காலந் தோன்றிற், சுட்டே கிளக்க, என்பதனான், பெயர்க்கு யாது முன் கூறினும் அமைக. என்பதாம்.

வரலாறு: சாத்தன் அவன், அவன் சாத்தன், என வரும்.

இனி, ஒருவன் 'இயற்பெயர்' எனவே, உலகத்து இயன்று வரும் பெயர் எல்லாம் அடங்கும் என்னும்.

**தெய்வ:**

ஒரு பொருண்மேற் பல பெயர் வருவழிச் செப்பு வழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள்: ஒரு பொருள்மேல் வரும் இயற் பெயர்ச் சொல்லும் சுட்டுப் பெயர்ச் சொல்லும் வினை கோடற்கு ஒருங்கு இயலுங் காலம் தோன்றின், சுட்டுப் பெயர்ச் சொல்லை முற்படச் சொல்லார்; இயற் பெயர் வழியவாகக் கூறப்படும், என்று சொல்லுவர் புலவர், எ-று.

வழிய எனப் பன்மை கூறியது சுட்டுப் பெயர் பல ஆகலான். இயற் பெயராவன: சாத்தன், கொற்றன், சாத்தி, கொற்றி என்பன. சுட்டுப் பெயராவன: அவன், இவன், அவள், இவள் என்பன. இயற் பெயர் என்றூ ராயினும், வந்தது கொண்டு வாராதது முடித்தல், என்பதனான் ஒரு பொருட்குப் பெயராகி வரும் நிலப் பெயர் முதலாயினவும் கொள்க, 'ஒருங்கு'இயலுங் காலந் தோன்றின்' என்பதனால்.

ஒரு பெயர் ஒரு வினையொடு முற்றி நில்லாது பல சொல்லொடு தொடருங் காலத்து இவ்வாறு வருவ தென்று கொள்க.

சாத்தன் வந்தான் அவற்குச் சோறு கொடுக்க; சாத்தி வந்தாள் அவட்குப் பூக் கொடுக்க, என வரும். பிறவும் அன்ன.

சுட்டுப் பெயர் முற்கூறின் ஒரு பொருளாதல் தோன்றாதாம்.

சேனா:

**இதன் பொருள்:** இயற் பெயரும் சுட்டுப் பெயரும் ஒன்றனை ஒன்று கொள்ளாது இரண்டும் பிறிது வினை கோடற்கு ஒருங்கு நிகழுங் காலந் தோன்று மாயின், உலகத்தார் சுட்டுப் பெயரை முற்படக் கூறார், இயற் பெயர்க்கு வழியவாகக் கூறுவ ரென்று சொல்லுவார் புலவர், என்றவாறு.

வினைக் கொருங் கியலுங்கால் அப் பெயர் எழுவா யாயும் உரு பேற்றும் நின்றன வெல்லாங் கொள்ளப்படும்.

வினைக் கென்புழி அவ் விரு பெயரும் ஒரு வினை கோடலுந் தனித் தனி வினை கோடலுங் கொள்க. ஒருங் கியலும் என்றதனால் அவை யொரு பொருண்மேல் வருதல் கொள்க.

உதாரணம்: சாத்தன் அவன் வந்தான்; சாத்தன் வந்தான் அவன் போயினான், எனவும், சாத்தி வந்தாள், அவட்குப் பூக் கொடுக்க, எனவும் வரும்.

அவன்றான் வந்தான்; அவ னொருவனு மறங் கூறும்; ஈதொன்று குருடு, என இயற் பெய ரல்லா விரவுப் பெயர்க்கும், உயர்திணைப் பெயர்க்கும், அஃறிணைப் பெயர்க்கும் வரையறை யின்றிச் சுட்டுப் பெயர் முற்கிளக்கவும் படுதலின், இயற் பெயர்க் கிளவி யென்றார். அவ்வா றவை முற்கிளக்கப்படுவது ஒரு வினை கோடற்கண்ணே யென்பது. அற்றேல், அவை, முடவன் வந்தான், அவற்குச் சோறு கொடுக்க; நங்கை வந்தாள் அவட்குப் பூக் கொடுக்க; குதிரை வந்தது, அதற்கு முதிரை கொடுக்க, எனத் தனித்தனி வினை கோடற்கண் சுட்டுப் பெயர் பிற்கிளக்கப்படுதல், முன்னையதற்குத் தன்னின முடித்தலினானும், ஏனை யிரண்டற்கும் இயற் பெய ரென்ற மிகையானுங் கொள்க.

பிறிது வினைகோடற்கணெனவே, அவன் சாத்தன், சாத்தனவன் என ஒன்றற்கொன்று பயனிலை யாதற்கண்ணும், ஒரு பொருண்மேல் நிகழுமெனவே, அவனுஞ் சாத்தனும் வந்தார்; சாத்தனும் அவனும் வந்தார், என வேறு பொருளவாய் வருதற்கண்ணும், யாது முற்கூறினும் அமையுமென்பதாம்.

வினை யென்றது முடிக்குஞ் சொல்லை.

சுட்டுப்பெயர் யாண்டும் இயற்பெயர்வழிக் கிளக்கப்படுமென யாப்புறுத்தற்கு, முற்படக் கிளவா ரென்றும், இயற்பெயர் வழிய வென்றுங் கூறினர்.

சுட்டுப் பெய ரென்றூ, ராயினும், அகர இகரச் சுட்டுப் பெயரே கொள்க.

இதுவுமோர் மரபு வழாநிலை.

நச்சி :

இஃது, ஒரு பொருளை உணர்த்தும் இரு பெயர் வழுக் காக்கின்றது.

இ-ள்: இயற்பெயர்க்கிளவியும் சுட்டுப்பெயர்க்கிளவியும் — இயற்பெயராகிய சொல்லும் சுட்டுப்பெயராகிய சொல்லும், வினைக்கு ஒருங்கு இயலும் காலம் தோன்றின் – ஒன்றனை ஒன்று கொள்ளாது இரண்டும் பிறிது வினைகோடற்கு ஒருங்கு நிகழும் காலம் தோன்றுமாயின், சுட்டுப் பெயர்க் கிளவி முற்படக் கிளவார்–உலகத்தார் சுட்டுப் பெயர்க் கிளவி முற்படக்கிளவார், இயற் பெயர் வழிய என்மனர் புலவர் — இயற் பெயர்க்குப் பின்னாகக் கூறுவர் என்று சொல்லுவர் புலவர், எ-று.

'ஒருங்கு இயலும்' என்றதனான், ஒரு பொருளை உணர்த்துதல் கொள்க. 'வழிய' என்றதனான், இயற்பெயர்வழி நிற்றற்கு உரிய அகர இகரச் சுட்டே கொள்க.

சாத்தன் வந்தான், அவற்குச் சோறு கொடுக்க; சாத்தி வந்தாள், அவட்குப் பூக் கொடுக்க, என வரும்.

அவன் வந்தான், சாத்தற்குச் சோறு கொடுக்க; எனின், அவனும் சாத்தனும் வேறாய், அவன் வருந் துணையும் சாத்தன் சோறு பெறா திருந்தானவான் செல்லும். அங்ஙனம் கூறற்க.

இனி, 'இயற்பெயர் வழிய' என்ற மிகையான், இயற்பெயர் அல்லா உயர்திணைப் பெயர்க்கும், அஃறிணைப் பெயர்க்கும், சுட்டுப் பெயர் பின் வருதல் கொள்க. நம்பி வந்தான், அவற்குச் சோறு கொடுக்க; நங்கை வந்தாள், அவட்குப் பூக் கொடுக்க; எருது வந்தது, அதற்குப் புல் இடுக; குதிரை வந்தது, அதற்கு முதிரை கொடுக்க, என வரும்.

'தன்னினம் முடித்தல்' என்பதனால், விரவுப் பெயருள் இயற்பெயர் ஒழிந்தனவும் கொள்க. முடவன் வந்தான், அவற்குச் சோறு கொடுக்க; முடத்தி வந்தாள், அவட்குக் கூறை கொடுக்க, என வரும்.

'வினைக்கு ஒருங்கு இயலும்' என்று வினை கூறுதலால், பெயர்க்கு இயலாது முன் கூறினும் அமைக, என்பதாம்.

உ-ம்: சாத்தன் அவன்; அவன் சாத்தன், என வரும்.

கல்:

என்ப தென் னுதலிற்றோ வெனின், இதுவும் ஒரு பொருண்மேல் இரு பெயர் வழுக் காத்த னுதலிற்று.

இ-ள்: இயற் பெய ராகிய சொல்லுஞ் சுட்டுப் பெய ராகிய சொல்லும் வினைச் சொற் கண்ணே கூட வருங் காலந் தோன்ற அவற்றுட் சுட்டுப் பெயர்க் கிளவியை முற்படச் சொல்லார்; இயற் பெயருக்குப் பின்வைத்துச் சொல்லுக வென்று சொல்லுவர் ஆசிரியர், என்றவாறு.

உ-ம்: சாத்தன் வந்தான், [1]அவற்குச் சோறு கொடுக்க; கொற்றி வந்தாள், அவட்குச் சோறு கொடுக்க, என்றாற் போல்வன. தன்னின முடித்தல் என்பதனனே விரவுப் பெயர்களின் இயற் பெயர் ஒழிந்தனவுங் கொள்ளப்படும்.

உ-ம்: முடவன் வந்தான், அவற்குச் சோறு கொடுக்க வென்றாற் போல்வன.

---

1. அவ[ர்](ற்)கு

இயற் பெயர் வழிய, என்ற மிகையான் உயர்திணைப் பெயர்க்கும், அஃறிணைப் பெயர்க்கும் சுட்டுப் பெயர் பிற்கூறுக வென்பது கொள்ளப்படும்.

உ-ம் : நம்பி வந்தான், [1]அவற்குச் சோறு கொடுக்க; எருது வந்தது, அதற்குப் புல் இடுக, என வரும்.

ஒருங் கியலும். என்ற மிகையான், இம் மூவகைப் பெயர்க்கும் சுட்டுப் பெயர் கூறும்வழி அகரச் சுட்டே கிளக்கவென்பது கொள்ளப்படும்.

வினைக் கொருங்கியலும், என்று வினைக்கே கூறுதலாற் பெயர்க்கு யாது முற்கூறினும் அமையுமென்பது.

உ-ம் : சாத்தன் அவன்; அவன் சாத்தன், என வரும். இதனாற் சொல்லியது பொருட்பெயர்களோடு சுட்டுப் பெயர் கூறும்வழி, பிற்கூறுது முற்கூறிற் பிற பொருண்மேலே நோக்குப்பட நிற்பது கண்டு அவ்வாறு கூறற்க வென, மரபு வழுவற்க வென்றவாறு.

அரசு :

என்பது இயற் பெயருஞ் சுட்டுப் பெயருமாகிய விரண்டும் மொன்றனை யொன்று கொள்ளாது இரண்டும் பிறிது வினை கோடற்கு ஒருங்கு நிகழுங் காலந் தோன்றுமாயிற் சுட்டுப் பெயரை முற்படச் சொல்லா ரியற் பெயர்க்குப் பின்னுகச் சொல்லுவர்.

உதா :- சாத்தன் வந்தா [2]னவற்குச் சோறு கொடுக்க, சாந்து கொடுக்க; சாத்தி வந்தா ளவட்குச் சாந்து கொடுக்க, பூக்கொடுக்க. ஒருங் கியலு மென்றதனல் ஒரு பொருளை யுணர்த்துதல் கொள்க. இயற் பெயர் வழீஇய வென்றதனல் விரவுப் பெய ரன்றி யுயர்திணைப் பெயர்க்கு மஃறிணைப் பெயர்க்குஞ் சுட்டுப் பெயர் முன் வருதல் கொள்க.

உதா : நம்பி வந்தா னவற்குச் சோறு கொடுக்க; நங்கை வந்தா ளவட்குப் பூக் கொடுக்க; எருது வந்த ததற்குப் புல் லிடுக; நாய் வந்த ததற்குச் சோ றிடுக; குதிரை வந்த ததற்கு

1. அவ[ர்](ற்)கு 2. அவர்[ர்](ற்)கு

முதிரை கொடுக்க வென வரும். வினைக் கொருங் கியலு மென்றதனுற் பெயர்க்குச் சுட்டாயினு மியற் பெயராயினு மொன்று முற்கூறி னுமமையும்: சாத்த னவன்; அவன் சாத்தன் என வரும்.

39. முற்படக் கிளத்தல் செய்யுளு ளுரித்தே.

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இஃது எய்தியது விலக்குதல் நுதலிற்று.

உரை: செய்யுளகத் தாமே யெனிற் சுட்டுப் பெயர் முன் சொல்லி, இயற் பெயர் பின் வைத்துக் கூறினும் அமையும் என்றவாறு. வரலாறு:

அவனணங்கு நோய்செய்தா னாயிழாய் வேலன்
விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி முகனமர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணியின் என்னைகொல்

பின்னை யதன்கண் [1]விழைவு என வரும். இதனுள், 'அவன்' என்பது சுட்டு, 'சேந்தன்' என்பது இயற் பெயர்.

தெய்வ:

எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தலை நுதலிற்று.

இ-ள்: மேலைச் சூத்திரத்துப் பிற்படக் கூறப்படும் என்று சொல்லப்பட்ட சுட்டுப் பெயரை முற்படக் கூறுதல் செய்யுட்கண் ஆம், எ-று.

அவனணங்கு நோய்செய்தான் ஆயிழாய் வேலன்
விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி முகனமர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணியின் என்னைகொல்
பின்னை யதன்கண் [2]விழைவு.

இதனுள் சேந்தன் என்பதூம், அவன் என்பதூஉம், ஒரு பொருள் ஆகியவாறும், சுட்டு முன்வந்துழியும் வேறுபடாமையுங் கண்டு கொள்க.

---

1. வினைவு: திருத்தம். 2. வினைவு: திருத்தம்

அஃது அற்றாக, சுட்டுப் பல ஆகலின் உரிய எனப் பன்மை யிற் கூறாதது என்னை யெனின், ஈண்டு அகரச் சுட்டே வருதலின் ஒருமையாகக் கூறப்பட்டது: வந்தது கொண்டு வாராதது முடித்தல், என்பதனாற் கொள்க. "நாயுடை முதுநீர்க் கலித்த" என்னும் அகப்பாட்டினுள் (அகம் 16) 'கூர் எயிற் றரிவை குறுகினள்' 'செத்தனள்', 'கொண்டனள்', 'நாணி நின்றோள்', 'அணங்கருங் கடவுள்', 'அன்னோள்' என ஒரு பொருண்மேற் பல பெயர்ச் சுட்டிக் காலங் காட்டியவாறு காண்க.

சேனா :

இதன் பொருள் : இயற் பெயருஞ் சுட்டுப் பெயரும் வினைக் கொருங் கியலும் வழிச் சுட்டுப் பெயரை முற்படக் கூறுதல் செய்யுளு ளுரித்து, என்றவாறு.

உதாரணம்:

அவனணங்கு நோய்செய்தா னாயிழாய் வேலன்
விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி முகனமர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணியி லென்னைகொல்
பின்னை யதன்கண் [1]விழைவு.

என வரும். இதனுட் சேந்த னென்பது இயற் பெயர்.

ஒரு வினை கொள்வழிச் சுட்டுப் பெயர் முற்கிளத்தல் வந்தவழிக் கண்டு கொள்க.

இது செய்யுளிடத்து மரபு வழு வமைத்தவாறு.

நச்சி :

இஃது, எய்தியது விலக்கிற்று.

இ-ள் : முற்படக் கிளத்தல் — இயற் பெயரும் சுட்டுப் பெயரும் வினைக்கு ஒருங்கு இயலும்வழிச் சுட்டுப் பெயரை முற்கூறுதல், செய்யுளுள் உரித்து — செய்யுளிடத்து உரித்து. எ-று.

உ-ம் : அவனணங்கு நோய்செய்தான் ஆயிழாய் வேலன்
விறன்மிகுதார்ச்சேந்தன்பேர் வாழ்த்தி முகனமர்ந்
தன்னை அலர்கடப்பந் தாரணியில் என்னை கொல்
பின்னை யதன்கண் [2]விளைவு. (நன். சூ. 394 சங். ந. உரைமேற்) சேந்தன், இயற் பெயர்.

1. விளைவு : திருத்தம். 2. விளைவு : திருத்தம.

கல் :

என்பதென் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்கியது நுதலிற்று.

பொருள் : மூவகைப் பெயர்களுஞ் சுட்டுப் பெயரை முற்படச் சொல்லுதல் செய்யுடத் தாயின் [1]அமையும் என்றவாறு.

உ-ம் : "அவனணங்கு நோய்தா னுயிழாய் வேலன்
விறன் மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி — முகனமர்ந்
தன்னை யலர்கடப்பந் தாரணியி லென்னைகொல்
பின்னை யதன்கண் [2]விழைவு

என வரும். பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது, முற்கூற லாகாது என்னப்பட்ட சுட்டுப் பெயர் மொழி மாற்றியும் பொருட் கொள்ளும் நயஞ் செய்யுட்கண் உண்மையான் அதனகத் தாயின் அமையுமென்று நேர்ந்தவாறாயிற்று

அரசு :

உதா : அவனணங்கு [3]நோசெய்தா னுயிழாய் வேலன், விறன்மிகு தார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி — முகனமர்ந் தன்னை யலர்கடப்பந் தாரணியி னென்னைகொல், பின்னை யதன்கண் [4]விழைவு. இதனு ளவ னென்பது சுட்டுப் பெயர்; சேந்த னென்ப தியற் பெயர்.

**40. சுட்டுமுத லாகிய காரணக் கிளவியுஞ்
சுட்டுப்பெய ரியற்கையிற் செறியத் தோன்றும்.**

இளம் :

இச்சூத்திரம் என் நுதலிற்றோ வெனின், ஒரு பொருண்மேல் இரு பெயர் வழுக் காத்தல் நுதலிற்று.

உரை : மேற் சுட்டுப் பெயர் இயற் பெயரின் வழியே விளக்க எனப்பட்டது போலச் சுட்டு முதலாகிய காரணப் பெயரையும் இயற் பெயர்க்கு வழியே வைத்துச் சொல்லுக என்றவாறு.

வரலாறு : சாத்தன் கை யெழுதுமாறு வல்லவன்; அதனால் தன் ஆசிரியன் உவக்கும்; தந்தை யுவக்கும், என வரும்.

---

1. (அ)மையும் 2. விளைவு : திருத்தம் 3. ,நோயென்று : திருத்தம்
4. விளைவு : திருத்தம்.

அதிகாரத்தான், வழிக் கிளத்தல், 'வினைக் கொருங்கு இயலும்' (தொல். சொல். கிளவி 38) வழிக் கொள்க. எழுது மாறு என்பது வினை.

முதற் சூத்திரம் பொருள்வழி வந்தது. இது பொருளது குணத்துவழி வந்தது.

**தெய்வ:**

செப்பு வழுக் காத்தலை நுதலிற்று.

**இ-ள்:** சுட்டெழுத்து முதலாகிய காரணச் சொல்லும், சுட்டுப் பெயர் இயற்கை போலப் பொருந்தத் தோன்றும் எ-று. என்றது பிற்படக் கூறப்படும், எ-று.

**உ-ம்:** மழை பெய்தது; அதனால் யாறு பெருகும். பிறவும் அன்ன.

இது சுட்டுப் பெயருள் அடங்காதோ எனின் பொருளைச் சுட்டாது தொழிலைச் சுட்டுதலானும், காரணக் கிளவி கருவியா தலானும், வேறு ஓதப்பட்டது.

**சேந:**

**இதன் பொருள்:** சுட்டை முதலாக வுடைய காரணப் பொருண்மையை உணர்த்துஞ் சொல்லுஞ் சுட்டுப் பெயர் போலத் தன்னாற் சுட்டப்படும் பொருளை யுணர்த்துஞ் சொற்குப் பின் கிளக்கப்படும், என்றவாறு.

ஈண்டுச் சுட்டப்படும் பொருள் தொடர்மொழிப் பொருள்.

**உதாரணம்:** சாத்தன் கை யெழுதுமாறு வல்லன்; அதனாற் றந்தை யுவக்கும். சாத்தி சாந் தரைக்குமாறு வல்லள்; அதனாற் கொண்டா னுவக்கும், எனவரும்.

சுட்டு முதலாய காரணக் கிளவி உருபேற்று நின்ற சுட்டு முதற் பெயரோ டொப்ப தோ ரிடைச்சொல் லாகலின், 'சுட்டுப் பெய ரியற்கையிற் செறியத் தோன்றும்,' என்றார். செயற் கென்னும் வினையெச்சம், உரு பேற்று நின்ற தொழிற் பெய ரோடு ஒப்புமை யுடைத் தாயினும், உருபும் பெயரு மொன் றாகாது பகுப்பப் பிளவுபட் டிசையாது ஒன்றுபட் டிசைத் தலான், அதனின் வேறாயினாற் போல, இதுவும் உரு பேற்ற

சுட்டுப் பெயரோடு ஒப்புமை யுடைத் தாயினும் பிளவுபட்டிசையாது ஒன்றுபட் டிசைத்தலான், வேறாகவே கொள்ளப்படுமென்பது. அஃதேல் சாத்தன் வந்தான்; அஃ தரசற்குத் துப்பாயிற்று, எனத் தொடர் மொழிப் பொருளையுஞ் சுட்டி வருஞ் சுட்டுப் பெயர் கூறாது காரணக் கிளவியே கூறிய தென்னை யெனின், அவ்வாறு வருவன தன்னின முடித்த லென்பதனு ளடங்கும். ஈண்டுச் சுட்டப்படும் பொருளை யுணர்த்துவது பெயரன்மையின், சுட்டுப் பெய ரியற்கை யென்றது வழக்கினகத்து சுட்டப்படும் பொருளை யுணர்த்துஞ் சொற்குப் பின்னிற்றலுஞ் செய்யுளகத்து முன்னிற்றலு மாகிய அத்துணையே யாம். செய்யுட்கண் முன்னிற்றல் வந்தவழிக் கண்டு கொள்க.

பொருள் வே றோதப்பட்ட தென்று உரையாசிரியர் கூறினரா லெனின், சாத்தன் வந்தான்; அஃ தரசற்குத் துப்பாயிற்று, எனவும், கிழவன் பிரிந்தான்; அதனைக் கிழத்தி யுணர்ந்திலள் எனவும், எழுவா யாயும் ஏனை வேற்றுமை யேற்றும் அச் சுட்டுப் பயின்று வருதலாற் பண்பு முதலாயினவற்றை சுட்டுஞ் சுட்டெனப் பொதுவகையாற் கூறாது காரணக் கிளவி யென ஒரு சார் வேற்றுமைக் குரிய வாய்பாடு பற்றி யோதுதல் குன்றக் கூறலாகலானும், சுட்டுப் பெயராயிற் சுட்டு முதலாகிய காரணக் கிளவி என்றும், சுட்டுப் பெய ரியற்கையிற் செறியத் தோன்றும் என்றுங் கூறுதல் பொருந்தாமையானும் அது போலியுரை யென்க.

இதனன் வழக்கின்கண் மரபு வழா நிலையுஞ் செய்யுட்கண் மரபு வழூ வமைதியு முணர்த்தினர்.

**நச்சி :**

இதுவும் அச் சுட்டு ஆராய்ச்சியே கூறுகின்றது.

இ-ள்: சுட்டு முதல் ஆகிய காரணக் கிளவியும் — சுட்டுப் பெயர் முதலாகிய காரணப் பொருண்மையை உணர்த்தும் சொல்லும் (உம்மையால் காரணம் இன்றி வரும் சுட்டுப் பெயரும்), சுட்டுப் பெயர் இயற்கையின் செறியத் தோன்றும் — சுட்டுப் பெயர் போலத் தன்னால் சுட்டப்படும் தொழிலை உணர்த்தும் சொற்குப் பின் கிளக்கப்படும்.' எ-று.

'சுட்டுப் பெயர் இயற்கை' எனவே, வழக்கிற்குப் பின்னும் செய்யுட்கு முன்னும் நிற்கும் என்பது பெற்றும்.

சாத்தன் கை எழுதுமாறு வல்லன்; அதனால் தந்தை உவக்கும். சாத்தி சாந்து அரைக்குமாறு வல்லள்; அதனால் கொண்டவன் உவக்கும்: இவற்றுள் சுட்டு முதலாகிய காரணக் கிளவி உருபு அன்று; உருபு ஏற்ற சுட்டுப் பெயரோடு ஒப்பதோர் இடைச் சொல்; என்னை? பிளவுபடாது ஒன்றுபட்டு இசைத்தலின். சாத்தன் வந்தான்; அஃது அரசற்குத் துப்பு ஆயிற்று. கிழவன் பிரிந்தான்; அதனைக் கிழத்தி உணர்ந்திலள், என இவை காரணம் இன்றி வந்தன.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், இதுவுஞ் சுட்டுப் பெயர் ஆராய்ச்சியே கூறுவது நுதலிற்று.

இ-ள் : சுட்டெழுத்து முதலாக வுடைய காரணப் பொருளை உணர நின்ற சொல்லு மேற்கூறிய சுட்டுப் பெயர் இயல்பு போலப் பெயர்ப் பின்னே யாப்புறத் தோன்றும், என்றவாறு.

உ-ம் : சாத்தன் கை யெழுதுமாறு வல்லவன்; அதனால் [1]தந்தை உவக்கும். சாத்தி சாந் தரைக்குமாறு வல்லள்; அதனாற் கொண்டவன் [2]உவக்கும், என வரும்.

மேற்கூறிய வகைக ளெல்லாம் இதற்கும் ஒக்கும். இதுவும் ஆண்டே யடங்காதோ வெனின், [3]ஆண்டுச் சுட்டு பொருள்வழி வந்தது; ஈண்டு அப் பொருளது குணத்துவழி வந்தது, என உணர்வது.

அரசு :

என்பது சுட்டுப் பெயர் இயற் பெயரின் பின் கிளக்கப் பட்டது போலச் சுட்டு முதலாகிய காரணச் சொல்லையு மியற் பெயரின் பின் வைத்துச் சொல்லுக.

---

1. [தந்தை] தம்மாசிரியன் 2. உவக்கும் : திருத்தம்
3. ஆண்டு [ச்] சுட்டு [ப்]

உதா: சாத்தன் கையெழுதுமாறு வல்ல னதனாற் றம் மாசிரிய னுவக்கும். சாத்தி சாந்தரைக்குமாறு வல்ல ளதனாற் கொண்டா னுவக்கும், எனவரும். சுட்டு முதலாகிய காரணக் கிளவி யிது வினைக் கொருங்கியலும் வழி வரு மென்று கொள்ளுக.

41. சிறப்பி னாகிய பெயர்நிலைக் கிளவிக்கும்
இயற்பெயர்க் கிளவி முற்படக் கிளவார்.

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் ஒரு பொருண்மேல் இரு பெயர் வழுக் காத்தது நுதலிற்று.

உரை: சிறப்புப் பெயரும் இயற் பெயரும் ஒருவற்கு உள வாயின், அவ்விடத்து அவனைப் பெயர் கொடுக்குங்கால், அவன் சிறப்புப் பெயரை முன் கூறி, இயற் பெயரைப் பின் கூறுக, என்றவாறு.

வரலாறு: ஏனாதி நல் லுதடன்; சோழன் நலங்கிள்ளி, என வரும்.

உம்மையாற் பிறப்பி னாகிய பெயர்க்கும், தொழிலி னாகிய பெயர்க்கும், கல்வியி னாகிய பெயர்க்கும் இயற் பெயர்களை வழியே வைத்துச் சொல்லுக. *

வரலாறு: பார்ப்பான் கண்ணன்; வண்ணான் சாத்தன், என வரும். கல்வியி னாகிய காரணம் வந்தவழிக் கண்டு கொள்க. சிறப்புப் பெயர் என்பன சிறப்புடைய மன்னராற் பெறுவன.

தெய்வ:

இதுவும் அது.

இ-ள்: மன்னர் முதலாயினராற் பெற்ற சிறப்பினான் ஆகிய பெயர்ச் சொற்கும், உம்மையான் நிலப் பெயர் முதலாகிய பெயர்க்கும் இயற் பெயர்ச் சொல்லை முற்படக் கூறார் ஆசிரியர், எ-று.

---

* உம்மையால் உறுப்பி னாகிய பெயர்க்கும் கல்வியி னாகிய பெயர்க்கும் கொள்க. உதாரணம் வந்தவழிக் கண்டு கொள்க. — பிரதிபேதம்.

சிறப்பினான் வந்தன: ஏனாதி, வாயிலான், படைத்தலைவன்: அவை, ஏனாதி நல்லுதடன்; வாயிலான் சாத்தன்; படைத் தலைவன் கீரன், என்பன. இக்காலத்து உடையார், தேவர் என்பனவும் சிறப்பினான் ஆகிய பெயர். அருவாளன் சாத்தன்; பாண்டியன் மாறன்; முனிவன் அகத்தியன்; ஆசிரியன் சாத்தன்: பிறவு மன்ன.

**சேனா :**

இதன் பொருள் : வினைக் கொருங் கியலும்வழிச் சிறப்பி னாகிய பெயர்க்கும் இயற் பெயரை உலகத்தார் முற்படக் கிளவார் பிற்படக் கிளப்பர், என்றவாறு.

வினைக் கொருங்கியலு மென்பது ஏற்புழிக் கோட லென்பதனாற் பெற்றும்.

ஈண்டுச் சிறப்பாவது மன்னர் முதலாயினாராற் பெறும் வரிசை.

உதாரணம் : ஏனாதி நல்லுதடன்; காவிதி கண்ணந்தை. என வரும்.

உம்மையால், தவம், கல்வி, குடி, உறுப்பு, முதலாயினவற்றா னாகிய பெயருங் கொள்ளப்படும். அவை முனிவ னகத்தியன், எனவும், தெய்வப் புலவன் திருவள்ளுவன் எனவும், சேரமான் சேரலாதன் எனவும், குருடன் கொற்றன், எனவும் வரும்.

திருவீர வாசிரியன், *மாந்தக் கோனாதி, என இயற்பெயர் முன் வந்தனவா லெனின், அவை தொகைச் சொல் லாகலான் அவற்றின் கண்ண தன்று இவ் வாராய்ச்சி யென்பது. ஆண் டியற் பெயர் முன்னிற்றல் பண்புத் தொகை யாராய்ச்சிக்கட் பெறுதும்.

**நச்சி :**

இதுவும் ஒரு பொருளை உணர்த்தும் இரு பெயர் வழுக் காக்கின்றது.

---

* மாந்தக் கொங் கேனாதி எனவும் பாடம்

இ-ள் : சிறப்பின் ஆகிய பெயர்நிலைக் கிளவிக்கும் — வினைக்கு ஒருங்கு இயலும்வழிச் சிறப்பின் ஆகிய பெயராய் நிற்றலை உடைய சொற்கும், (உம்மையால், தவம், கல்வி, குடி உறுப்பு முதலியவற்றான் ஆகிய சொற்கும்), இயற் பெயர்க் கிளவி முற்படக் கிளவார் — இயற்கைப் பெயராகிய சொல்லை உலகத்தார் முற்படக் கிளவார் பிற்படக் கிளப்பர், எ-று.

சிறப்பு, மன்னர் முதலியோரால் பெறும் வரிசை.

உ-ம் : ஏனாதி நல்லுதடன்; முனிவன் அகத்தியன்; தெய்வப் புலவன் திருவள்ளுவன்; சேரமான் சேரலாதன்; சோழன் வண்கிள்ளி; பாண்டியன் மாறன்; குருடன் கொற்றன் என வரும்.

தச்சக் கொற்றன்: தொழிலினான் ஆகிய பெயர், திருவீர வாசிரியன், என்றாற் போல. இயற் பெயர் முற் கூறுவன இக்காலத்தார் மயங்கக் கூறுவன. பிறவும் 'கடிசொல் இல்லை' (எச்ச. சூ. 56) என்பதனால் கொள்க.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின் இதுவும் ஒரு பொருண் மேல் இரு பெயர் வழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள் : சிறப்பி னாகிய பெயர்ச் சொற்கும், உம்மையாற் பிறபெயர்க்கும் இயற் பெயராகிய சொல்லை முற்படச் சொல்லார், பிற்படச் சொல்லுவர் ஆசிரியர், என்றவாறு.

உ-ம் : ஏனாதி நல்லுதடன்; வாயிலான் சாத்தன்; படைத் தலைவன் கீரன், என விவை சிறப்புப் பெயர். பிறவும் என்றது குலத்தினா னாய பெயரும், கல்வியினான் ஆய பெயரும், தொழிலினான் ஆய பெயரும் பிறவும், என்பது.

உ-ம் : சேரமான் சேரலாதன்; சோழன் நலங்கிள்ளி; பாண்டியன் மாறன்: இவை குலப் பெயர்.

ஆசிரியன் சாத்தன் என்றாற் போல்வன கல்வியினா னாகிய பெயர்.

வண்ணாரச் சாத்தன்; தச்சக் கொற்றன்; நாவிதன் [1]மாறன்; இவை தொழிலினான் ஆகிய பெயர்.

இதனாற் சொல்லியது ஒரு பொருட்கு இருபெயர் கூறும் வழி யாது முற்கூறினும் அமையும் என்று கூற லாகாது; மேற்சொல்லிட்டுங் கூறி வந்த மரபானே கூறுவிடின் அப்பொருண் மேற் செல்லாது பிற பொருண்மேல் நோக்கப்படுமென [2]மரபு வழுவற்க, என்றவா றாயிற்று.

இவ்வா றன்றி இக் காலத்து மயங்கக் கூறுவன உளவாயின் [3]அவற்றைக் 'கடிசொல் லில்லைக் காலத்துப் படினே,' என்பதனாற் கொள்ளப்படும்.

அரசு :

என்பது சிறப்பி னாகிய பெயர்க்குமுன் னியற் பெயரை வைத்துச் சொல்லார். உம்மையான் தவம், கல்வி, குடிப் பிறப்பு முதலியனவுங் கொள்க. ஏனாதி நல்லுதடன்; வாயிலான் சாத்தன், படைத் தலைவன் தீரன்; சேரமான் சேரலாதன்; சோழ னலங்கிள்ளி; பாண்டியன் மாறன்; முனிவ னகத்தியன்; தெய்வப் புலவன் திருவள்ளுவன்; பார்ப்பான் கண்ணன்; வேளாளன் கொற்றன்; வண்ணான் சாத்தன்; கோலிகன் சாத்தன்; தச்சன் கொற்றன்; கோவலான் செய்யான்; நாவிதன்; மாறன், என வரும்.

42. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பி னொன்றிட னிலவே.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின் ஒரு பொருண் மேற் பல பெயர் வழுக் காத்தல் நுதலிற்று; மரபு வழுக் காத்ததூஉ மாம்.

உரை : ஒரு பொருளைக் கருதி வேறு வேறு பெயர் வருமெனின், அப் பெயர் வேறு வேறு தொழில் கோடற்கு வரும் பெய ரெல்லாஞ் சொல்லிய பின்னைத் தொழில் கொடுக்க; அங்ஙனம் கொடுப்ப வந்த பெய ரெல்லாம் அதற்கு ஒன்றும்; அல்லாக்கால், அதற்கு ஒன் றிடன் இல, என்றவாறு.

1. மர[ர](ற)ன் 2. மர(பு) 3. அவ(ற்றை)

வரலாறு: ஆசிரியன், பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான், என வரும்.

மற்று, எந்தை வருக; எம்பெருமான் வருக; மைந்தன் வருக, எனவும் ஒரு பொருட்கு ஒன்றுமா லெனின், அதனை, 'ஞாபகங் கூறல்' (தொல். பொருள் மர. 110) என்னும் உத்தி வகையான் உணர்க; என்னை.

'தொழில் வேறு கிளப்பின் ஒன்றிட னிலவே.'

என்றார். அத்தொழில் வேறு கிளத்தருன் இரு வகைப்படும்; பெயர்தொறும் ஒரு தொழில் கிளத்தலும், வேறு கிளத்தலும் ஆம். பெயர்தொறும் வேருய்த் தொழில் கிளத்தலும் வேறு கிளத்தலாம்; அதனல், இச் சூத்திரத்துப் பெயர்தொறும் வேருய்த் தொழில் கிளத்தலைத் 'தொழில் வேறு கிளப்பின் ஒன்றிட னில,' என்றது.

அங்ஙனம் ஞாபகத்தாற் கொள்வதனையும் ஒரு பொருட்கு ஒன்று மென்று, மற்று வரும் பெய ரெல்லாஞ் சொல்லிப் பின்னைத் தொழில் கிளப்பதனை எடுத் தோத்தினுற் கூறி, அவ்வப் பெயர்தொறும் ஒரு தொழில் கிளப்பதனை உத்தி வகையாற் கொண்டது என்னை யெனின், எந்தை வருக; எம்பெருமான் வருக, மைந்தன் வருக,' என்ற விடத்து, ஒரு பொருண்மேலும் நிற்கும்; மற்றைய தாயின் ஒரு பொருட்கே திரிபுபடாது ஒன்றும். அதனல், அதனை எடுத் தோத்தினுனும், இதனை யுத்தி வகையானும் கொண்டான், என்பது.

**தெய்வ :**

இதுவும் அது.

**இ-ள் :** ஒரு பொருள் குறித்த வேறு வேருகிய பெயர்ச் சொல் தொழிலைப் பெயர்தோறுங் கிளப்பின் ஒரு பொருளாகி ஒன்றும் இடன் இல, எ-று.

எனவே பல பெயர் அடுக்கி வரின் ஒரு வினையான் முடித்தல் வேண்டும், என்றவாறும்.

ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங் கண்ணன் சாத்தன் வந்தான், என வரும்.

ஆசிரியன் வந்தான்; பேரூர் கிழான் வந்தான்; செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான், எனின் ஒரு பொருள் ஆதல் தோன்றா தாம். வழைந்து முதிர் கொற்றத்து விறலோன் வாழி; கடற் கடம் பெறிந்த காவலன் வாழி; விடர்ச்சிலை பொறித்த வேந்தன் வாழி; பூந்தண் பொருநைப் பொறையன் வாழி; மாந்தரஞ் சேரல் மன்னவன் வாழி, கேள்—

என்றவழி, ஒரு பொருள் குறித்த பெயர்தோறும் வினை வந்ததால் எனின், இச் சூத்திரத்தில், தொழில் வேறு கிளப்பின், என்பதற்கு மொழிந்த பொருளோடு *ஒன்றவைத்தல். என்பத னான் வேறு வேறு வினை கிளப்பின் ஒன்றிடன் இலவெனப் பொருள் உரைக்கப் பெயர்தோறும் ஒரு வினை வரின் ஒன்று மென்பது பெற்றாம். அதனானே இவ்வாறு வருவன அமைத்துக் கொள்க. விழைந்து முதிர் கொற்றத்து விறலோன் வாழ்க; கடற் கடம் பெறிந்த காவலன் கெடுக, எனின் வழுவாம்.

**சேனா:**

**இதன் பொருள் :** ஒரு பொருளைக் குறித்து வந்த பல பெயர்ச் சொற்கள், ஒரு தொழிலே முடிபாகக் கூறாது பெயர் தோறும் வேறாகிய தொழில்களைக் கொடுத்து முடிப்பின் ஒரு பொருளவாய் ஒன்றா, என்றவாறு.

ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங் கண்ணன் சாத்தன் வந்தான், என்னாது, ஆசிரியன் வந்தான், பேரூர்கிழா னுண்டான், செயிற்றியன் சென்றான், என வேறு வேறு தொழில் கிளந்தவழி, வந்தானும் உண்டானும் சென்றானும் ஒருவனாகாது வேறாய்த் தோன்றியவாறு கண்டு கொள்க.

எந்தை வருக; எம்பெருமான் வருக; மைந்தன் வருக; மணாளன் வருக, என்புழிக் காதல் முதலாயின பற்றி ஒரு தொழில் பலகால் வந்தமை யல்லது வேற்றுத் தொழி லன்மை யான், ஒரு தொழில் கிளத்தலே யா மென்பது.

ஈண்டுத் தொழி லென்றது முடிக்குஞ் சொல்லை. ஆசிரியன் வந்தா னென்று ஒருகாற் கூறி இடையிட்டு அவனையே பின் னொருகாற் பேரூர்கிழான் சென்றா னென்று கூறியவழி ஒரு

* ஒப்பக்கூறல் (இ எ)

தொட ரன்மையான் ஆண் டாராய்ச்சி யில்லை, யென்பது. அஃதேல், ஆசிரியன் வந்தான்; பேரூர்கிழா னுண்டான்; செயிற்றியன் சென்றா னென இடையீ டின்றி நின்றனவும் ஒரு தொட ரன்மையின், ஆராய்ச்சி யின்றாம் பிறவெனின், அற் றன்று உட்டொடர் பல வாயினும், அவற்றின் ஒருகுதியாய் அவன் ஒருழில் பலவுங் கூறுகதற் பொருண்மைத் தாகிய பெருந் தொடர் ஒன் றெனவே படு மென்பது.

ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றிய னிளங் கண்ணன் சாத்தன் வந் துண்டு சென்றா னென்றது, ஆசிரியன் வந்தான் பேரூர்கிழா னுண்டான் செயிற்றியன் சென்றா னெனப் பெயர் தோறும் வேறு தொழில் கிளத்தன் மர பன்மையின் மரபு வழுக் காத்தவா றுயிற்று.

நச்சி:

இஃது, ஒரு பொருளை உணர்த்தும் பல் பெயர் வழுக் காக்கின்றது.

இ-ள் : ஒரு பொருள் குறித்த வேறு பெயர்க் கிளவி—ஒரு பொருளை உணர்த்துதலைக் குறித்து வந்த பலபெயர்ச் சொற்கள், தொழில் வேறு கிளப்பின் – ஒரு தொழிலையே முடிபாகக் கூறாது பெயர்தோறும் வேறாகிய தொழில்களைக் கொடுத்து முடிப்பின், ஒன்று இடன் இல – ஒரு பொருளினவாய் ஒன்றுதல் இல, எ–று.

கிளவி, கருவிக் கருத்தாவாய் நின்றது. ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான், என்றது, ஆசிரியன் வந்தான்; பேரூர் கிழான் உண்டான்; செயிற்றியன் சென்றான்; என வேறு வேறு முடிக்கும் சொல் கொடுப்பின், ஒருவன் ஆகாது வேறு வேறு பொருளாம்.

'எந்தை வருக! எம்பெருமான் வருக! என்றாற் போல்வன, காதல் பற்றிப் பலகால் ஒரு தொழிலே வந்தன வாம்.

கல் :

என்ப தென் னுதலிற்றோ வெனின், ஒரு பொருண்மேற் பல பெயர் வழூஉக் காத்தல் நுதலிற்று.

இ-ள்: ஒரு பொருளைக் கருதிய வேறு வேறாகிய பெயர்ச் சொற்பெயர்க்கு வரும் வினையை வேறுபடச் சொல்லின் ஒரு பொருட்குப் பொருந்தும் இட மில்லை. அதனான் வரும் பெயரை யெல்லாஞ் சொல்லிப் பின் றொழிற் சொல்லுக, என்றவாறு.

உ-ம்: ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங் கண்ணன் சாத்தன் வந்தான், என வரும்.

இனி, இரட்டுற மொழிதல் என்று ஞாபகத்தால் ஒரு பொருளைக் கருதிய வேறுவேறாகிய பெயர்ச் சொற்கள் வேற்றுப் பொருளைப் பெயர்தோறுஞ் சொல்லின், ஒரு பொருட்குப் பொருந்தும் இட மில வென 'வேறல்லாத ஒரு தொழிலை பெயர் தோறும் சொல்லின் ஒரு பொருட்குப் பொருந்தும் இட னுடையதூஉங் கொள்ளப்படும்.

உ-ம்: ஆசிரியன் வந்தான், பேரூர்கிழான் வந்தான், செயிற்றியன் வந்தான், இளங்கண்ணன் வந்தான், சாத்தன் வந்தான், என வரும்.

இதனுற் சொல்லியது ஒரு பொருண்மேல் வரும் பல பெயர்க்கண் மர பிலக்கணமும், மரபு வழு வமைதியுங் கூறியவா ருயிற்று. ஞாபகத்தான் கண்டது மரபு வழுவமைதி. அதனை வழூஉ வென்றது என்னை யெனின், ஒரு நிலைக்கண் அது தானே பல பொருண்மேலுஞ் சேறலான், என்பது.

அரசு:

ஒரு பொருள் கருதி வந்தப் பல சொற்களுக்கு ஒரு தொழிலே முடிபாகக் கூறுது பெயர்தொறும் வேறு தொழில் கொடுப்பி னொரு பொருள வா யொன்றுத லில வாம்.

உதா: ஆசிரியன் பேரூர் கிழான், செயிற்றியன் இளங் கண்ணன் சாத்தன் வந்தான், என்று சொல்லுக. இனி, ஆசிரியன் வந்தான்; பேரூர்கிழாஅ னிருந்தான்; செயிற்றியன் கிடந்தான்; கண்ணன் போனுன்; சாத்த னின்றான், என்றறிக. அன்றியும் ஆசிரியன் வந்தான்: பேரூர்கிழான் வந்தான், எனப் பெயர்தொறு மொரு வினை கொடுப்பினும் வேறு வேறு பொரு ளாம். இனி, இத்தன்மையன கொள்க. எந்தை வருக,

---

1. வே[ர](ற)ல்லாத

எம்மான் வருக; மைந்தன் வருக; மணாளன் வருக; பைந்தொடிப் பனைத் தோட் கிழவன் வருக, எனக் காதல் பற்றிப் பல காலொரு தொழில் வந்தன கொள்க. அன்றியும், இனி, 'தொழில் வேறு கிளப்பினென்றிட னிலவே', என்பதனால், வேறு தொழில் கொடா தொரு தொழிலே கொடுப்பி னென்றுட னாமெனப் பெயர்தொறு மொரு தொழில் கொடுத்துத் துதியிடத்துச் சொல்லுக.

உதா: தேமல ரங்கட் டிருவே புகுதுக; மாமலர்க் கண்ணி மணாளன் புகுதுக; காமன் புகுதுக; காளை புகுதுக; நாமவெழில் விஞ்சை நம்பி புகுதுக, என்பன கொள்க.

43. தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவியென்
றெண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்.

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இது திணை வழுவாமை உணர்த்துதல் நுதலிற்று.

உரை: தன்மைச் சொல்லும், அஃறிணைச் சொல்லும், அவை எண்ணுமிடத்து விராஅய் வரப் பெறும் எனக் கொள்க, என்றவாறு.

'தன்மைச் சொல்' எனவே, உயர்திணைச் சொல் எனப் பெறும்.

வரலாறு: யானும் என் எஃகமும் [1]சாலும், என வரும்.

மருங்கு என்ற மிகையான், நீயும் நின் படைக்கலமுஞ் [2]சாலீர், அவனும் தன் படைக்கலமுஞ் [3]சாலும் எனவும் வருதல் கொள்க.

**தெய்வ:**

திணை வழு வமைத்தலை நுதலிற்று.

இ-ள்: தன்மைப் பெயர்ச் சொல்லும் அஃறிணைப் பெயர்ச் சொல்லும் எண்ணு மிடத்தில் விரவுதல் நீக்கார், எ-று.

---

பா. பே.—1. சாறும் 2. சாதீர்: திருத்தம் 3. சாறும்

உ-ம்: யானு மென் னெஃகமுஞ் [1]சாலும்; அவனுடைய யானைக்குஞ் சேனைக்கும் போர், என வரும். நீயும் நின் படைக் கலமுஞ் [2]சாலீர்; அவனும் அவன் படைக்கலமுஞ் சாலும். என ஏனை யிடத்தும் வருமால் எனின், முன்னிலை வினை இரு திணைக் கும் பொது வாகலினானும், படர்க்கை வினைக்கட் செய்யு மென்னும் முற்றுச் சொல் இரு திணைக்கும் பொதுவாய் வருத லானும், அவை ஆண்டு அடங்கும் என்க.

சேனு:

இதன் பொருள்: தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் எண்ணுதற்கண் விராய் வரப்பெறும் என்றவாறு.

என் சொல்லியவாறோ வெனின், உயர்திணைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் எண்ணுதற்கண் விராய் வந்து உயர்திணை முடிபு கொள்ளினும், அஃறிணை முடிபு கொள்ளினும், வழுவா மாகலின்.

மயங்கல் கூடா தம் மரபின (சொல் — 11)

எனவே. அவை விரா யெண்ணப்படாமையும் எய்தி நின்றது; தன்மைப் பன்மைச் சொல்லால் அஃறிணைச் சொல்லு முடியு மாகலால்,தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் விராய் வந்து உயர்திணை முடிவு கொள்ளினும் அமையு மெனத் திணை வழுக்காத்தவாறு.

உதாரணம்: யானு மென் னெஃகமுஞ் [3]சாலும், எனவரும்.

பன்மைத் தன்மை வினை கோடல் எற்றாற் பெறுதுமோ வெனின், தன்மைச் சொல்லே யென்றதனானும்,

பன்மை யுரைக்குந் தன்மைக் கிளவி
யெண்ணியன் மருங்கிற் றிரிபவை யுளவே (சொல் — 209)

என்பதனானும், பெறுது மென்பது.

அஃதேல் 'எண்ணியன் மருங்கிற் றிரிபவை யுளவே' என்பதனான் விராய் வந்து உயர்திணை முடிபு கோடலும் பெறப் படுதலின், இச் சூத்திரம் வேண்டா வெனின், உய்த் துணர்ந் திடர்ப்படுவது எடுத்தோத் தில்வழி யென மறுக்க,

---

1. சாறும் 2. சாறீர் 3. சாறும்

நச்சி :

இஃது, எண்ணின்கண் திணை வழு அமைக்கின்றது.

இ-ள் : தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவி என்று— தன்மைச் சொல்லும் அஃறிணைச் சொல்லும் என்று கூறிய இரண்டும், எண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார் — எண்ணும் இடமாகிய இடத்து விராய் வந்து தன்மைப் பன்மைச் சொல்லான் அஃறிணைச் சொல் முடிதலை நீக்கார் ஆசிரியர், எ-று.

மேல், பன்மை உரைக்கும் தன்மைக் கிளவி (வினை. சூ. 12) என்பதனானும் பன்மைத் தன்மை பெற்றும்.

யானுமென் எஃகமும் [1]சாலும்; அவனுடைய யானைக்கும் சேனைக்கும் போர்: இஃது இரு திணையும் விராய் எண்ணி, அஃறிணை உயர்திணையோடு முடிந்தது.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், எண்ணின்கட் டிணை வழு வமையுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : தன்மை யாகிய சொல்லினையும் அஃறிணை யாகிய சொல்லினையும் விரவி யெண்ணுமிடமாகிய விடத் துண்டாகிய திணை [2]விராய் வருதலை நீக்கார், கொள்வர் ஆசிரியர், என்ற வாறு.

என்று என்பது எண்ணசை.

உ-ம் : 'யானு மென் னெஃகமுஞ் [3]சாலும்; அவனுடைய யானைக்குஞ் சேனைக்கும் போர்,' என வரும்.

இதனுள் அவன் வந்தது, என்றாற்போலுந் திணை வழு வில்லை யெனின், அதுவே யல்ல. திணை வழூஉ வெண்ணு மிடத்தும் இன மொத்தனவே யெண்ணுக வென முன் சொல்லி னமையினுந் திணை வழுவாவது பொருந்தாது விடுவது என்பதாகலானும், இதுவும் திணை வழூஉ வென்னப்படும். இவ் வாறு இடர்ப்படுகின்ற தென்னை? இதனை மரபு வழு வமைதி

1. சாறும் : திருத்தம் 2. [வீ] (வி) 3, சாறும் : திருத்தம்

என்று கூறுக வெனின், வியங்கோ ளென்னும் பெயர் திணை விரவு வரையார் என ஆசிரியர் மேற் கூறுகின்றமையின் இதற்கும் அதுவே கருத்து என்பது பெறுதும்.

இனிச் சொல்லொடு சொன் முடித்தலே திணை வழு வெனினுஞ் [1]சாலும் என்னும் உயர்திணை முற்றுச் [2]சொல்லை [3]எஃகும் என்னும் அஃறிணை வினையும் உளப்படுத்தமையின் வழுவும் இதன்கண் உண்டென வுணர்வது.

மருங்கின் என்ற மிகையான், முன்னிலையோடு அஃறிணை யெண்ணுதலும், படர்க்கையோடு அஃறிணை யெண்ணுதலுங் கொள்க.

உ-ம்: நீயும் நின் படைக்கலமுஞ் [4]சாலீர்; அவனும் தன் படைக்கலமுஞ் [5]சாலும், என வரும்,

இவற்றுள் எண்ணு வழுவல்லது முடிபு வழு வில்லை. இதனாற் சொல்லியது எண்ணுப் பொருட்கட் [6]டிணைபற்றிப் பிறக்கும் மரபு வழு வமைதி யென வுணர்க; சிறுபான்மை திணை வழூஉ வமைதியும் என வுணர்க.

அரசு :

என்பது தன்மைச் சொல்லு மஃறிணைச் சொல்லு மவை யெண்ணு மிடத்து விராய் வருதலை நீக்கார்.

உதா : யானு மெ னெஃகமுஞ் [7]சாலும்; அவனுடைய யானைக்குஞ் சேனைக்கும் போர், என வரும். இது இரு திணையும் விரா யெண்ணி, அஃறிணை யுயர் திணையோடு முடிந்தது. எண்ணுவழி மருங் கென்றதனல், நீயும் நின் படைக்கல முஞ் [8]சாலீர்; அவனுந் தன் களிறுஞ் சாலும், என முன்னிலை யினும் படர்க்கையினுங் கொள்க.

44. ஒருமை யெண்ணின் பொதுப்பிரி பாற்சொல்
ஒருமைக் கல்ல தெண்ணுமுறை நில்லாது.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

---

1. சாறும். 2. சொல் [லை] 3. (அ) ஃகம் : திருத்தம்
4. சாறிர் : திருத்தம் 5. சாறும் 6. டினை [ப்] பற்றி
7. சாறும் 8. சாறீர்

உரை : ஒருமை எண்ணின் பொதுப் பிரி பாற் சொல் என்பது — ஓர் எண்ணாய், இரண்டு பாற்கும் பொதுவாய், ஒருவன் ஒருத்தி எனப் பிரிந்து நின்று, பால் வேறுபடுவ தாயிற்று. அஃது யாதோ வெனின், ஒருவர் என்பது. அஃது இரு பாற்கும் பொதுவாய் நிற்பினும், ஒருவர் இருவர் என்று எண்ணும் பொழுதாயின், ஒரு பாற்கே உரித் தாம் என்பது.

அப் பொதுமையிற் பிரிந்த பாற் சொல் ஒருவன் ஒருத்தி [1]என்பன. அவை *தத்தம் ஒருமை விளங்கி நிற்குந் துணை யல்லது அப் பால்மேல் எண்ணு முறை யோடா, என்பது.

இனி, எண்ணுதலைக் களைந்து, ஒருவர் என்றக்கால் இரு பாலையும் தழீஇ நிற்கும்; இதுவும் ஒருசார் ஆசிரியர் உரைப்ப.

இனி, ஒருமை எண்ணின் பொது என்ப ஒருவர் என்பது.

**தெய்வ :**

உயர்திணைப் பொருண்மேல் எண்ணு முறை நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் : ஒருமை யெண்ணின் பொதுமை யாகிய ஒருவர் என்னும் சொல்லினின்றும் பிரிந்த ஒருவன், ஒருத்தி யென்னுஞ் சொல் அவ் வொருமைக் கல்லது எண்ணு முறைக்கண் ணோடாது, எ–று.

எனவே, எண்ணு முறைக்கண் ஆண்பா லாயினும் பெண்பா லாயினும் ஒருவர், இருவர், மூவர் என எண்ணி னல்லது பால் தோன்ற எண்ணப்படாது, என்றவா றும்.

**சேனா :**

இதன் பொருள் : ஒருமை யெண்ணினை யுணர்த்தும் பொதுப் பிரி பாற் சொல் லாகிய ஒருவன் ஒருத்தி யென்னுஞ் சொற்கள், ஒருமைக்கண் ணல்லது, இருமை முதலாகிய எண்ணு முறைக்க ணில்லா, என்றவாறு. எனவே, பொதுப் பிரியாப் பாற் சொல் லாகிய ஒருவ ரென்னுஞ் சொல் இருவர் மூவ ரென எண்ணு முறைக்கண்ணு நிற்கு மென்பதாம்.

---

1. என்பது : திருத்தம். * தாம் : வே. பா.

பொதுப் பிரி பாற் சொல் லென்றாரேனும், ஒருவன் ஒருத்தி யென்பனவற்றது பா லுணர்த்து மீறே கொள்ளப்படும். என்னை? எண்ணு முறை நில்லா வென்று விலக்கப்படுவன அவையே யாகலி னென்பது.

மகன், மக ளென்னுந் தொடக்கத்துப் பெயர்ப் பொதுப் பிரி பாற் சொல்லி னீக்குதற்கு ஒருமை யெண்ணி னென்றும், ஒருவர், ஒன் றென்பனவற்றி னீக்குதற்குப் பொதுப் பிரி பாற் சொல் லென்றுங் கூறினார்.

ஒருவ ரென்னும் ஆண்மைப் பெண்மைப் பொதுவிற் பிரித லிற் பொதுப் பிரி பாற் சொல் லென்றார்.

பொதுப் பிரி பாற் சொல் லென்னும் ஒற்றுமையான் நில்லா தென ஒருமையாற் கூறினார்.

ஒருவன், ஒருத்தி யென ஒருமைக்க ணிற்றலும், இருவன் மூவன் இருத்தி முத்தி என எண்ணு முறைமைக்கண் நில்லாமையுங் கண்டு கொள்க.

ஒன்றென முடித்த லென்பதனான் ஒருவேன், ஒருவை யென்னுந் தன்மை முன்னிலை யீறும் எண்ணு முறை நில்லாமை கொள்க.

இது பால் வழுக் காத்தவாறு.

நச்சி :

இஃது, எண்ணு வகையால் கூறும் ஒரு வகைச் சொல் நிகழ்ச்சி கூறுகின்றது.

இ-ள் : ஒருமை எண்ணின் பொதுப் பிரி பாற் சொல் — ஒருமை எண்ணினை உணர்த்தும் ஒருவர் என்னும் பொதுமையி னின்றும் பிரிந்த பால் உணர்த்தும் சொல் லாகிய ஒருவன் ஒருத்தி என்னும் சொல்; ஒருமைக்கு அல்லது எண்ணு முறை நில்லாது — ஒருமைக்கண் அல்லது இருமை முதலிய எண்ணு முறைமைக்கண் நில்லாது, எ—று.

எனவே, பொதுப் பிரியாப் பாற் சொல் லாகிய 'ஒருவர்' என்னும் சொல், 'இருவர், மூவர்' என எண்ணு முறைமைக்கண் நிற்ப தாயிற்று. 'இருவன், மூவன்' எனவும் 'இருத்தி, முத்தி' எனவும், னகர ஈறும் இகர ஈறும் இயைபு இன்மையானும். ரகர ஈறு இயைபு உடைமையானும் இங்ஙனம் கூறினர்.

'ஒன்றென முடித்தல்' என்பதனான், 'ஒருவேன், ஒருவை' என்னும் தன்மை முன்னிலை ஈறும் எண்ணு முறை நில்லாமை கொள்க.

**கல்:**

என்பது என் நுதலிற்றோ வெனின், எண்ணும் வகையாற் சொல்லும் ஒருவகைச் சொல் நிகழ்ச்சி உணர்த்துதல் நுதலிற்று.

பொருள்: ஒருமைப் பொருட் குரிய வெண்ணாய் உயர்திணை யிருபாற்கும் பொதுவாகிய ஒருவர் என்னுஞ் சொல்லினின்றும் பொதுமை கெடப் பிரித் துரைப்படும் ஒருவ னென்னுஞ் சொல் லாயினும் ஒருத்தி யென்னுஞ் சொல் லாயினும் எண்ணுத பொழுது தன் ஒருமை விளங்குந் துணை யல்லது எண்ணு முறைக்கண் முத லெண்ணுங்காலும் அவ்வாறே யெண்ணுக.

ஒருவ னென்பதும் *ஒருத்தி மோருமை யெண்ணே லெண்ணு முறைமைக் கண்ணும் ஆகாமை என்னை யெனின். பொருளான் ஆகாமை இல்லை. ஒருவன் என்பதற் கேற்ப மேலும் இருவன் மூவன் என னகர வீற் றியை பின்மையானும், ஒருத்தி யென்பதற் கேற்ப இருத்தி முத்தி யென இகர [1]வீற் றியை பின்மையானும் மேல் வருகின்ற [2]ரகர வீறோடு ஒருவர் என்பது சொல் லியைபுடைமை யின்மையின் அதுவே கொள்ளப்பட்டது.

இதனாற் சொல்லியது எண்ணின்கட் பிறக்கும் மர பிலக்கணம் என வுணர்க.

**அரசு:**

என்பது ஒருமை யெண்ணினை யுணர்த்து மொருவ ரென்னும் பொதுமையினின்றும் பிரிந்து பா லுணர்த்துஞ் சொல் லாகிய வொருவன் ஒருத்தி யென்னுஞ் சொ லொருமைக் கல்லது

* தெளிவில்லை 1. வீ[ரி]ற்(றி) 2. [ற](ர)கர

இருமை முதலிய வெண்களி னேடாது. பொதுவாவது, ஒருவர்; அது விரு பாற்கும் பொது. அது பிரியாக்கா லொருவ ரிருவர் மூவர் நால்வ ரென எவ்வளவு மெண் ணேடுமாறு காண்க. அப் பொது பிரிந்து ஒருவன் என நின்றபி னிருவன் மூவ னென வாகாது. ஒருத்தி யென நின்றபி னிருத்தி முத்தி யெனவு மாகாது. இவ்வாறு கூறியது னகர வீறு மிகர வீறும் எண் ணுதற் கியை பின்மையானும் ரகரவீ றியை புடைமையானு மென்க.

45. வியங்கோ ளெண்ணுப்பெயர் திணைவிரவு வரையார்.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் திணை வழுக் காத்தல் நுதலிற்று.

உரை: வியங்கோ ளுடைய எண்ணுப் பெயர் திணை விரவுதல் கடியப்படா, என்றவாறு.

வரலாறு: 'ஆவும் ஆயனும் செல்க', என வரும். இஃது இன மல்லதனேடு எண்ணினமையின் வழு வாயிற்று. இனி, ஆவும் ஆயனும் செல்க, என்றவிடத்துச் செல்க என்னும் வியங்கோள் வினை இரு திணைக்கும் முடிபு ஏற்றமையின் திணை வழு வமைதியாம். *

மற்று, இன்ன எண் என்பது சூத்திரத்துப் பெற்றிலாமை யின் 'உய்த் துணர வைத்தல்' என்னும் உத்தி வகையான், உம்மை எண்ணும், என வென் னெண்ணும் எனக் கொள்க, என்னை, இவ் விரண் டெண்ணும் தொகை பெற்றும் பெறுதும் முடியும்; மற்றை எண்ணுக்க ளெல்லாம் தொகை பெற்றே முடியும். ஈண்டுத் தொகை பெறும் எண்ணினுற் கூறிற்றிலர் திணை வழூஉம் ஆகலான், என்பது.

**தெய்வ :**

ஐய மறுத்தலை நுவிற்று.

என்னை ? வினை யியலுள் வியங்கோள் இரு திணைக்கும் பொது என்று ராயினும், எண்ணுங்கால் தனித் தனி எண்ணல்

* அமைதியாமாயிற்று மென்க — பிரதி பேதம்.

வேண்டுமோ விரவி எண்ணல் வேண்டுமோ என்ன நின்ற ஐயம் நீக்குதலின், இது திணை வழு வமைதியு மாம்.

இ-ள் : வியங்கொள்ளும் எண்ணுப் பெயர் திணை விரவுதல் நீக்கார், எ—று.

உ-ம் : ஆவும் ஆயனுஞ் செல்க, எனவரும்.

**சேறு :**

**இதன் பொருள் :** வியங்கோளொடு தொடரு மெண்ணுப் பெயர் திணை விராய் வருதல் வரையார், என்றவாறு.

உதாரணம் : ஆவு மாயனுஞ் செல்க, எனவரும்.

தன்மைப் பன்மை வினைபோலாது வியங்கோள் இரு திணைக்கு முரிய சொல் லாகலான் இரு திணைச் சொல்லையு முடிக்கு மன்றே; அதனன், ஆவு மாயனுஞ் சொல்க, என்புழி வழு வின்மையின் அமைக்கற்பாற்றன் றெனின், இரு திணைப் பொருட்கு முரித்தேனும், ஒரு திணைப் பொருளைச் சொல்லு தற்கண் இரு திணைப் பொருளு முணர்த்தாமையின், ஒரு திணையே யுணர்த்தல் வேண்டும்; ஒரு திணை யுணர்த்தியவழி ஏனைத் திணைப் பெயரோடு இயையாமையிற் றிணை வழுவாம், அதனு னமைக்கல் வேண்டு மென்பது.

எண் ணென்று வுற ழென்று வாயிரண்டு மின னென்றல் வேண்டு மென்பது இலக்கண மாகலான், யானு மென் னெஃக முஞ் சாலும், என்புழியும், ஆவு மாயனுஞ் செல்க, என்புழியும் இன னல்லன உட னெண்ணப்படுதலின் வழு வென்முரால் உரையாசிரிய ரெனின், திணை வேறுபா டுண்டேனும் யானு மென் னெஃகமும், என்புழி வினை முதலுங் கருவியு மாகிய இயைபும், ஆவு மாயனும், என்புழி மேய்ப்பானும் மேய்க்கப் படுவனவுமாகிய இயைபு முண்மையான் உட னெண்ணப் படுதலானும், யானை தேர் குதிரை காலா ளெறிந்தான், என முன்னர் உதாரணங் காட்டுப வாகலானும், பிறுண்டும். 'எண்ணுத்திணை விரவுப்பெய ரஃறிணை முடிபின' (சொல் – 51) என ஆசிரியர்க்கு, ஆராய்ச்சி முடிபு கோடற்கண்ண தாகலா னும் அவர்க் கது கருத்தன் றென்க. அல்லதூம் திணை விரா யெண்ணல் வழு வென்பதே கருத்தாயின்,

'நெடுநல் யானையுந் தேரு மாவும்
படையமை மறவரு முடையம்யாம்' (புறம் — 72)

எனவும், 'இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறும்' (குறள் 920) என்வும், படர்க்கைச் சொல்லும், அஃறிணைக் கிளவியும் விரா யெண்ணுதல், வழக்குப் பயிற்சி யுடைமையான். அவையு மடங்க உயர்திணைச் சொல்லே யஃறிணைக் கிளவி எனப் பொதுப் பட வோதாது தன்மைச் சொல்லே யஃறிணைக் கிளவி (சொல்— 43) எனத் தன்மைச் சொல்லையே விதந்தோதல் குன்றக் கூறலா மாகலானும், அவர்க் கது கருத் தன்மை யறிக.

ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறுஅ தீரு
மெம்மம்பு கடிவிடுது நும்மரண் சேர்மின் (புறம் — 9)

எனத் திணை விரீய் வந்து முன்னிலை வினை கோடல் எற்றுற் பெறுது மெனின், அங் ஙிகரன செய்யுண் முடி பெனப்படும்; அவற்றை யதிகாரப் புறனடையாற் கொள்க. திணை விரா யெண்ணப்படும் பெயர் வியங்கோ ளல்லா விரவு வினையொடு தொடர்ந்து வருவன வழக்கினு ளுளவேல் ஒன்றென முடித்தல் என்பதனுற் கொள்க.

நச்சி :

இஃது எண்ணின்கண் திணை வழு அமைக்கின்றது.

இ—ள்: வியங்கோள் எண்ணுப் பெயர் – வியங்கோளோடு தொடரும் எண்ணுப் பெயர், திணை விரவு வரையார்—திணை விராய் வருதலை நீக்கார் ஆசிரியர், எ—று.

ஆவும் ஆயனும் செல்க, என்றது, எண்ணும்மை ஆதலின், சேறல் தொழில் இரண்டிற்கும் எய்துதலின் வழு இன்றேனும், அஃறிணை ஏவற் றொழிலை முற்ற முடியாமை கருதி வழு அமைத்தார்.

ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும் (புறம் 9:1) என எண்ணி, 'நும் அரண் சேர்மின் (புறம் 9:5) என முன்னிலை வினை கோடல் செய்யுள் முடிபு என்பது அதிகாரப் புறனடையால் கொள்க.

ஆவும் ஆயனும் சென்ற கானம், செல்லும் கானம், என வியங்கோள் அல்லா விரவு வினையான் வருதல் தன்னினம் முடித்தலால் கொள்க.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின் எண்ணின்கட் டிணை வழு வமையுமா றுணர்த்துதல் நுதலிற்று.

பொருள் : வியங்கோட்க ணெண்ணப்படும் பெயரைத் திணை [1]விராய் வரும் [2]வரவினை நீக்கார், கொள்வர் ஆசிரியர், என்றவாறு.

உ–ம் : ஆவும் ஆயனுஞ் செல்லுக, என வரும்.

[3]தன்னின முடித்தல் என்பதனான் வியங்கோ ளல்லாத விரவு வினைக்கண்ணுஞ் சிறுபான்மை வருவன கொள்க. அவை ஆவும் ஆயனுஞ் சென்ற கானம், [4]என்பது போல்வன.

இதனாற் கூறியது எண்ணின்கட் டிணை பற்றிப் பிறக்கும் மரபு வழூஉ வமைதி யென வுணர்க

அரசு :

என்பது வியங்கோளொடு தொடரு மெண்ணுப் பெய ரிரு திணையும் விராய் வருதலை நீக்கார். உதா : ஆவு மாயனுஞ் செல்க; யானையும் பாகனும் வருக, என வரும். உம்மை எண் ணும்மை.

46. வேறுவினைப் பொதுச்சொ [5]லொருவினை கிளவார்.

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

உரை : வேறு வேறு வினையை யுடையவாய் நின்ற சொற் களை ஒரு வினையாற் சொல்லற்க என்பது; எனவே, பொது வினையாற் கிளக்க, என்பதாம்.

இனி, ஒருவும் வினை, என்பது, ஒரூஉ வினை, என் றாயிற்று, என்றலும் ஒன்று; ஒரூஉதல் என்பது நீங்குதல்.

---

1. [வி] (வி) ராய் 2. வர(வி)னை 3. த [ண்ணின] ன்னின
4. என்ப [ன] (து) 5. ஒரூஉவினை — என்றும் பாடம்

அவை: அடிசில், அணிகலம், இயமரம் என்பன. அவற்றைப் பொது வினையாற் கூறுமாறு:—

அடிசில் அயின்ருர்; அணிகலம் அணிந்தார்; இயமரம் இயம்பினுர், என்னுந் தொடக்கத்தன கொள்க.
மற்று,

'ஊன்றுவை கறிசோ றுண்டு' வருந்தும் (புறம் – 14)

என வந்ததால் எனின், அது பாட மறிந்து திருத்திக் கொள்க.

தெய்வ:

மரபு வழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள்: பல வினையை யுடைய பொதுப் பெயரை ஒரு வினையாற் கூருர் அறிவோர், எ-று. எனவே, பொது வினையாற் கிளத்தல் வேண்டும் என்றவா ரும். அது, இயம் என்பது கொட்டுவனவும் எறிவனவும் ஊதுவனவும் ஆம்; அதனை இயம் கொட்டினுர், ஊதினுர், எறிந்தார் என்னற்க; பொது வினையான் இயம் இயம்பினுர், என்க. பிறவும் அன்ன.

சேனு:

இ-ள்: வேறுபட்ட வினையை யுடைய பல பொருட்குப் பொது வாகிய சொல்லை ஒன்றற் குரிய வினையாற் கிளவார். என்றவாறு.

எனவே, பொது வினையாற் கிளப்ப ரென்றவா ரும். அவை, அடிசில், அணி, இயம், படை யென்னுந் தொடக்கத்தன.

அடிசி லென்பது உண்பன, தின்பன, பருகுவன, நக்குவன வென்னு நால் வகைக்கும், அணி யென்பது கவிப்பன கட்டுவன செறிப்பன பூண்பன வென்னுந் தொடக்கத்தனவற்றிற்கும், இய மென்பது கொட்டுவன ஊதுவன எழுப்புவன வென்னுந் தொடக்கத்தனவற்றிற்கும், படை யென்பது எய்வன எறிவன வெட்டுவன குத்துவன வென்னுந் தொடக்கத்தனவற்றிற்கும் பொது வாகலின், அடிசி லயின்ருர், மிசைந்தார் எனவும்; அணி யணிந்தார், மெய்ப்படுத்தார் எனவும்; இயம் இயம்பினுர், படுத்

(1) அயின்று

தார் எனவும்; படை வழங்கினர், தொட்டார் எனவும், பொது வினையாற் சொல்லுக. அடிசி றின்றார், பருகினர் எனவும்; அணி கவித்தார், பூண்டார் எனவும்; இயங் கொட்டினர், ஊதினர் எனவும்; படை யெறிந்தார், எய்தார் எனவும், ஒரு சார்க் குரிய வினையாற் சொல்லின் மரபு வழுவா மென்பது.

பொருளின் பொதுமையைச் சொன்மேலேற்றி, வேறு வினைப் பொதுச் சொல், என்றார்.

**நச்சி :**

**இது, மரபு வழுக் காக்கின்றது.**

**இ-ள்:** வேறு வினைப் பொதுச் சொல் – வேறுபட்ட வினை யினை யுடைய பல பொருட்குப் பொது வாகிய சொல்லை, ஒரு வினை கிளவார்–அவற்றுள் யாதானும் ஒரு வினையால் கூறார். எனவே, அவற்றை யெல்லாம் உள் ளடக்கி நிற்கும் பொது வினையால் கூறுவர், எ–று.

அடிசில் என்பது, உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன வற்றிற்கும், அணி என்பது, கட்டுவன, கவிப்பன, செறிப்பன, பூண்பனவற்றிற்கும், இயம் என்பது கொட்டுவன, ஊதுவன, எழுப்புவனவற்றிற்கும், படை என்பது, எய்வன, எறிவன, வெட்டுவன, குத்துவனவற்றிற்கும் பொது வாதலின்,

அடிசில் உண்டார்; கை தொட்டார் எனவும், அணி அணிந் தார், மெய்ப்படுத்தார் எனவும், இயம் இயம்பினர், படுத்தார் எனவும், படை வழங்கினர், தொட்டார் எனவும், பொது வினை யால் கூறுப. இவற்றை ஒரு வினையால் கூறின் வழு வாம்.

'மூங்கில் மிசைந்த முழந்தாள் இரும்பிடி (கலி 50: 2) எனவும்,

நளிபுகை கமழாது இருயினிர் (இருனீர்) மிசைந்து
(மலைபடு 249)
இடம்படின் வீழ்களிறு மிசையாப் புலியினும் சிறந்த
(கலி 29: 2, 3)
கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய
அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்;
(பரி. 5: 44, 45)

எனவும், இவை தின்றெனவும் விழுங்கி எனவும் பெரும்பான்மை வருதலின், 'மிசைந்தார், அயின்றார்' என்பன உதாரணம் காட் டல் பொருந்தாமை உணர்க.

இனி,

'உண்டற் குரிய அல்லாப் பொருளை
உண்டன போலக் கூறலும் மரபே (பொருளியல் சூ. 19)

என்னும் பொருளியல் சூத்திரத்தான் உண்டல் தொழில் எல்லாவற்றிற்கும் பெரும்பான்மை வருதல் பெற்றும்.

'அறுசுவை அடிசில் அணியிழை தருதலின்
உறுவயி ருூர ஓம்பாது தின்றெனன'

என்பது இழித்தற்கண் வருதலின், வழுவன்று.

**கல் :**

என்பதென் னுதலிற்றோ வெனின், வேறு வினைப் பொதுச் சொற்களது மரபு வழூக் காத்த னுதலிற்று.

இ-ள் : வேறு வினை யுடைய வாகிய பல பொருளையும் பொதிந்து நின்ற பொதுச் சொல்லை ஒரு பொருளது வினையாற் சொல்லார் உலகத்தார்; அதனுன், அவற்றிற் கெல்லாம் பொது வாகிய வினையானே சொல்லுக வென்றவாறு.

உதாகரணம் :- அடிசில் [1] கைதொட்டார், அயின்றூர்; அணிகலம் அணிந்தார், மெய்ப்படுத்தார்; இயம் இயம்பினர், படுத்தார், என வரும்.

இதனுற் சொல்லியது பல பெயர்க் குரிய பொதுப் பெயர்ச் சொல்லை எடுத்து மேலதன் வினை கூறும்வழி மரபு வழுவற்க வென்றவாறு.

இஃ திலக்கணமாகப் பல பொருளும் ஒரு சொல்லதற்க ணடங்கி நில்லாது வேறு வேறு அடிசில் எனவும், அணி எனவும் வரும்; வரவும், ஒன்றன் வினை யொன்றற்கு வரும்; வரவும் வழுவாக்கிச் 'செய்யுண் மருங்கினும் என்னும் .................... ரப் புறனடையான் அமைத்துக் கொள்க வென்பது.

**அரசு :**

என்பது வெவ்வேறு வினையை யுடைய பல பொருட்குப் பொது வாகிய சொல்லை யாதானு மொரு வினையாற் கூறூ ரெனவே யெல்லாவற்றையு முள்ளடக்கி நிற்கும் பொது வினை யாற் கூறுவ ரென்பதாம்.

(1) கை [த்] தொட்டார்.

உதா:— அடிசி லென்பது உண்பன தின்பன நக்குவன பருகுவனவற்றிற்கும் பொது; அணியென்பது கட்டுவன கவிப்பன செறிப்பன பூண்பனவற்றிற்கும் பொது; இய மென்பது கொட்டுவன ஊதுவன எழுவனவற்றிற்கும் பொது; படையென்பது எய்வன எறிவன வெட்டுவன குத்துவனவற்றிற்கும் பொதுவாதலின், அடிசி லுண்டார், அடிசில் கைதொட்டார், எனவும், அணி யணிந்தார், மெய்ப்படுத்தா ரெனவும், இய மியம்பினர், படுத்தா ரெனவும், படை வழங்கினர், தொட்டா ரெனவும், பொது வினையாற் கூறுக. அல்லது, அடிசில் குடித்தார், பருகினா ரென்றும், அணி கவித்தார் கட்டினா ரென்றும், இயம் கொட்டினா ரென்றும், படை யெய்தார், குற்றினா ரென்றும், ஒன்றன் றொழிலாற் கூறற்க.

அறுசுவை யடிசி லணியிழை தருதலி,
னுறுவயி ரூர வோம்பாது தின்றென

வென வேறு வினையால் வந்ததா லெனி னிழித்தற்கண் வந்த தென்க.

47. எண்ணுங் காலு[1] மதுவதன் மரபே.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் மரபு வழுக் காத்தலை நுதலிற்று.

**உரை :** வேறு வேறு வினையையுடைய சொற்களை யெண்ணுங்காலும் பொது வினையாற் சொல்லுப, என்றவாறு.

வரலாறு : 'யாழுங் குழலும் பறையும் இயம்பினர்' என வரும்.

**தெய்வ :**

மேலதற்கு எய்துவ தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள் :** வேறு வேறு வினையுடைய பொருளைப் பொதுப் பெயராற் கூறுக லன்றி எண்ணுமிடத்தும் அதன் மரபு பொது வினையாற் கிளத்தல், எ-று.

---

1. காலை : தெய்வ. பாடம்.

உ–ம் : அம்பும் வேலும் தண்டும் வாளும் வழங்கினர், என்க. எறிந்தார், எய்தார், என ஒரு வினையாற் கிளவற்க.

ஊன்றுவை கறிசோ றுண்டு வருந்து
தொழிலல்லது பிறிது தொழில் அறியா வாகலின்
(புறநா. 14) என்றவழி, உண்டு, என ஒரு வினையான் வந்ததால் எனின், அது பொது வினை யென்று கொள்க. என்னை ?

உண்ணுநீர் வேட்டேன் என வந்தாற்கு (கலி-குறி. 15) எனவும், பாலும் உண்ணுள் பழங்கண் கொண்டு (அகம். 48) எனவும், கலைப்புற வல்குல் கழுகுகுடைந் துண்டு (மணிமே. 6: 41, 112) எனவும், கள்ளுண்ணுப் போழ்து (குறள். 930) எனவும், உண்ணுமை வேண்டும் புலால் (குறள் 257) எனவும் வருதலின்.

**சேனு :**

இதன்–பொருள் : வேறு வினைப் பொருள்களைப் பொதுச் சொல்லாற் கூருது பிரித் தெண்ணுமிடத்தும் அத னிலக்கணம் ஒரு வினையாற் கிளவாது பொது வினையாற் கிளத்தலே யாம், என்றவாறு.

உதாரணம் : சோறுங் கறியு மயின்ருர்; யாழுங் குழலு மியம்பினர், என வரும். சோறுங் கறியுந் தின்ருர்; யாழுங் குழலு மூதினர், எனின் வழுவாம். அஃதேல், 'ஊன்றுவை கறிசோ றுண்டு வருந்து தொழிலல்லது' (புறம் — 14) என்புழி, உண் டென்பது ஒன்றற்கே யுரிய வினை யாகலின் வழுவாம் பிற வெனின், உண்ட லென்பது உண்பன தின்பன வெனப் பிரித்துக் கூறும்வழிச் சிறப்பு வினையாம்; பசிப் பிணி தீர நுகரப்படும் பொரு ளெல்லாம் உண வெனப்படு மாகலிற் பொது வினையு மாம்; அதனு னது வழு வன் றென்பது. கறி யொழித்து ஏனையவற்றிற் கெல்லாம் உண்டற் ருெழி லுரித் தாகலிற் பன்மைபற்றிக் கூறினு ரெனினு மமையும்.

**நச்சி :**

இதுவும் அது.

இ–ள் : எண்ணுங் காலும் — அவ் வேறு வினைப் பொருள் களைப் பொதுச் சொல்லால் கூருது பிரித்து எண்ணுமிடத்தும், அது அதன் மரபே — அதன் இலக்கணம் ஒரு வினையால் கிளவாது பொது வினையால் கிளத்தலே யாம், (எ–று.)

'சோறும் கறியும் நன் றென்று உண்டார்; யாழும் குழலும் பறையும் இயம்பினர்' என வரும். 'தின்றார், ஊதினர். என்றால் வழுவாம். ஊன் துவை கறி சோறு உண்டு வருந்து தொழில் அல்லது (புறம். 14:13,14) என்புழி நுகரப்படும் பொருள் எல்லாவற்றிற்கும் உண்டல் தொழில் வந்தவாறு காண்க.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், இதுவும் அது.

இ-ள் : வேறு வினைப் பொதுச் சொற்களைப் பொதுமை யிற் பிரித் தெண்ணுங் காலத்தும் ஒன்றன் வினையாற் கிளவாது பொது வினையாற் கிளத்த லதற் கிலக்கணம், என்றவாறு.

உ-ம் : யாழுங் குழலும் பறையும் இயம்பினர். என வரும்.

இதனாற் சொல்லியது அப்பொதுச் சொற்களைப் பிரித் தெண்ணும்வழியும் வினை முடிபின் மரபும் வழுவாமற் சொல்லுக வென்ப தாயிற்று.

அரசு :

என்பது வேறு வினைப் பொதுச் சொற்களைப் பொதுச் சொல்லாற் கூறாது பிரித் தெண்ணுமிடத்து மொரு வினையாற் கிளவாது பொது வினையாற் கிளக்க.

உதா : சோறுங் கறியு நன்றென் றுண்டார். யாழுங் குழலும் பறையு மியம்பினு ரென்க. தின்றா ரூதினு ரென்னற்க. ஊன்று வை கறிசோ றுண்டு வருந்தும், என்புழி யெல்லாவற் றிற்கு முண் டெனப் பொது வினை வந்தவாறு காண்க.

48. இரட்டைக் கிளவி யிரட்டு (1)ப்பிரிந் திசையா.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

உரை: இரட்டித்துச் சொல்லும் சொற்கள் அவ் விரட்டுத விற் பிரித்துச் சொல்லப்படா, என்றவாறு.

---

(1) யிரட்டிற் பிரிந்திசையா-தெய்வ. நச்சி. பாடம்

வரலாறு: சுருசுருத்தது, சுறுசுறுத்தது, கறுகறுத்தது என, இசையுங் குறிப்பும் பண்பும் பற்றி வரும்.

தெய்வ:

இது செப்பு வழுக் காத்தலை நுதலிற்று.

இ-ள்: இரட்டித்துச் சொல்லப்படுஞ் சொற்கள் அவ் விரட்டித்தலிற் பிரிந்து ஒலியா, எ-று.

உ-ம்: ஒன்றொன்றாக வந்தன; இரண்டிரண்டாக நீக்குக. என வரும். இவை, ஒன்றாக வந்தன, இரண்டாக நீக்குக என்றவழிப் பொருண்மை படாமையால் பிரிந்தொலியா வாயின.

சேனு:

இதன் பொருள்: இரட்டித்து நின்று பொருளுணர்த்துஞ் சொற்கள் இரட்டித்து நிற்றலிற் பிரிந்து நில்லா, என்றவாறு.

உதாரணம்: சுருசுருத்தது; மொடுமொடுத்தது, என இசை பற்றியும், கொறுகொறுத்தார்; மொறுமொறுத்தார் எனக் குறிப்புப் பற்றியும், குறுகுறுத்தது; கறுகறுத்தது. எனப் பண்பு பற்றியும் இரட்டித்து வந்தன, பிரிந்து நில்லாமை கண்டுகொள்க. அஃதேல் குறுத்தது, குறுத்தது எனப் பிரிந்தும் வந்தனவா லெனின், அற்றன்று. குறுத்த தென்ப தோர் சொல் குறு வென்ப தோர் சொல் லடுத்துக் குறுகுறுத்த தென நின்று குறுமை மிகுதி யுணர்த்திற் றாயிற் குறுத்த தென்பது குறுமை யுணர்த்தக் குறு வென்பது மிகுதி யுணர்த்திற் றாதல் வேண்டும். குறு வென்பது மிகுதி யுணர்த்தாமையிற் குறுகுறுத்த தென்பது ஒரு சொல்லாய் நின்று அப் பொருளுணர்த்திற் றெனவே படும். அதனுற்றான் அக் குறுமை மாத்திர முணர்த்தி நிற்பது அதனின் வேறு மென்பது. கறுகறுத்த தென்பதுக்கும் ஈ தொக்கும். கறுத்தது கறுத்தது, குறுத்தது குறுத்தது எனச் சொன் முழுவதும் இரு முறை வாராமையின், அடுக் கன்மை யறிக.

ஈண் டிரட்டைக் கிளவி யென்றது மக்க ளிரட்டை, விலங் கிரட்டை போல வேற்றுமை யுடையனவே யன்றி, இலை யிரட்

டையும் பூ விரட்டையும் போல ஒற்றுமையும் வேற்றுமையு முடையனவற்றை யென் றுணர்க.

இரட்டித்து நின்று பொரு ளுணர்த்துவன வற்றைப் பிரித்து வழங்கன் மரபன்மையின் மரபு வழுக் காத்தவாறு.

நச்சி :

இஃது. உரிச் சொற்கண் மரபு வழுக் காக்கின்றது.

இ-ள்: இரட்டைக் கிளவி – இரட்டித்து நின்று பொருள் உணர்த்தும் சொற்கள், இரட்டிற் பிரிந்து இசையா – இரட்டித்து நிற்றலிற் பிரிந்து நில்லாத (எ-று)

சுருசுருத்தது, மொடுமொடுத்தது, என இசை பற்றியும், கொறுகொறுத்தார், மொறுமொறுத்தார், எனக் குறிப்புப் பற்றியும் குறுகுறுத்தது; கறுகறுத்தது, எனப் பண்பு பற்றியும் இரட்டித்துப் பிரியாது நின்றன.

இவை குறுத்தது குறுத்தது, என ஒரு சொல் முழுவதும் இரு முறை வாராமையின், அடுக்கு அன்று. இவை மக்கள் இரட்டையும் விலங் கிரட்டையும் போல வேற்றுமை யின்றி, இலையிரட்டையும் பூ இரட்டையும் போல் ஒற்றுமையும் வேற்றுமையும் உடையவாம். குறு என்னும் சொல் அடுத்துக் குறுத்தது என்பது மிகுதி உணர்த்திற்றேல் குறு என்பது யாண்டும் மிகுதி உணர்த்தல் வேண்டும். அஃது உணர்த் தாமையின், இரண்டும் ஒரு சொல்லே ஆயிற்று.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், உரிச் சொற்கண்ண தோர் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள்:- இரட்டித்துச் சொல்லப்படுஞ் சொற்கள், அவ் விரட்டித்துச் சொல்லுதலிற் பிரித்துச் சொல்லப்படா வென்ற வாறு.

உ-ம்: அது, இசை, குறிப்பு, பண்பென மூன்று வகைப் படும்:

சுருசுருத்தது, மொடுமொடுத்தது, என விவை இசை பற்றி வந்தன.

கொறுகொறுத்தன, மொறுமொறுத்தார், என்பன குறிப்புப் பற்றி வந்தன.

குறுகுறுத்தார், கறுகறுத்தார் என்பன பண்பு பற்றியும் வந்தன.

இதனாற் சொல்லியது ஒரு பொருட்கண் இரு சொல்லினை ஒருபொருள் வேறுபாடு குறியாது கூறின் மரபல்ல வெனினும் அவ்வாறு இரட்டிக் கூறலே அவற்றிற்கு அடிப்பா டாகலின் இனி யதனை மரபு வழுவற்க வென மரபு கூறியவா ருயிற்று.

இது மரபு வழு வமைதி போலும்.

அரசு :

என்பது இரட்டித்து நின்று பொரு ளுணர்த்துஞ் சொற்க ளிரட்டித்து நிற்றலிற் பிரிந்து நில்லா.

உதா:- அவை வருங்கா லிசையுங் குறிப்பும் பண்பும் பற்றி வரும். சுருசுருத்தது, மொடுமொடுத்தது [1]என்பன விசை. கொறு கொறுத்தார், மொறுமொறுத்தார் [2]என்பன குறிப்பு. குறுகுறுத்தது, கறுகறுத்தது [3]என்பன பண்பு; இவை குறுத்தது குறுத்தது [4]எனவொரு சொன் முழுதும் வாராமையி னடுக்கன்று. இவை மக்க ளிரட்டையும் விலங் கிரட்டையும் போலன்றிப் பூ விரட்டையுங் கா யிரட்டையு மிலை யிரட்டையும் போல ஒற்றுமையும் வேற்றுமையு முடையவாய் வரும்.

49. ஒருபெயர்ப் பொதுச்சொ லுள்பொரு ளொழியத்
தெரிபுவேறு கிளத்த றலைமையும் பன்மையும்
உயர்திணை மருங்கினு மஃறிணை மருங்கினும்.

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின் இதுவும் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

உரை: ஒரு பெயர்ப்பட நின்ற பொதுச் சொற்களைச் சொல்லுங்கால் ஆண் டுள்ள பொருள் எல்லாம் எடுத்துச் சொல்

1. யென்பன – திருத்தம் 2. யென்பன – திருத்தம்
3. யென்பன – திருத்தம் 4. யென – திருத்தம்

லாது, தெரிபு வேறு கிளந்து தலைமையானும் பன்மையானும் கூறுக, இரு திணைக்கண்ணும், என்றவாறு.

வரலாறு: சேரி என்பது பலர் இருப்பதுமன்; ஆயினும், ஆண்டுச் சில பார்ப்பனக் குடி உளவேல், அதனைப் பார்ப்பனச் சேரி என்பது: இஃது உயர்திணைக்கண் தலைமை பற்றி வந்தது.

அத் திணைக்கண் பன்மை பற்றி வருமாறு: எயின நாடு; குற்றிளை நாடு, என வரும்.

இனி, அஃறிணைக்கண் தலைமை பற்றி வருமாறு: கமுகந் தோட்டம், என வரும். மற்றைய பொருள் பயின்று, கமுகு ஒன்றிரண்டு உண்மை நோக்கிச் சொன்னரேல் தலைமை யாம். இனிக் கமுகு ஆண்டு நெருங்கி மற்றைய சில வாதல் கண்டு சொன்னரேல் அதுவே பன்மையாற் பெற்ற பெயருமாம்.

ஓடுவங் காடு, காரைக் காடு, என்பன பன்மையாற் பெற்ற பெயர்.

**தெய்வ:** *

மரபு வழு வமைத்தலை நுதலிற்று.

இ-ள்: ஒரு பெயராகிப் பல பொருட்கும் உரித்தாகிய பொதுச் சொல்லை வகுத்துக் கூறுதல் தலைமையானும் பன்மை யானும், எ-று.

எனவே, தலைமையும் பன்மையும் இல்வழி, பொதுச் சொல் லாற் கிளக்க, என்றவாரும்,

உ-ம்:- பார்ப்பார் வேதம், என்பது அரசர்க்கும் வணிகர்க்கும் பொதுவாயினும், பார்ப்பார் வேதம் எனத் தலைமை பற்றி வந்தது. எயினர் நாடு, என்பது பிறவுங் குடி உள வாயினும் பன்மை பற்றி வந்தது. ஆ மேய்ப்பான், என்ப தும் அது. இள மரக்கா, என்பது தலைமையும் பன்மையும் இல்வழிப் பொதுவாய் வந்தது. பிறவும் அன்ன.

---

* முதலிரண்டடிகளே இச்சூத்திர மெனக் கொண்டார்.

சேனா :

இதன் பொருள் : உயர்திணைக்கண்ணும் அஃறிணைக் கண்ணும் ஒரு பெயராய்ப் பல பொருட்குப் பொதுவாகிய சொல்லைப் பிற உள் பொருளொழியத் தெரிந்து கொண்டு பொதுமையின் வேறாகச் சொல்லுக, தலைமையானும் பன்மை யானும், என்றவாறு.

தெரிபென்பதற்குச் செயப்படுபொருள் தலைமையும் பன்மையுமே யாம்.

பிறரும் வாழ்வா ருளரேனும், பார்ப்பனச்சேரி யென்றல் உயர்திணைக்கட் டலைமை பற்றிய வழக்கு. எயினர் நா டென்பது அத் திணைக்கட் பன்மை பற்றிய வழக்கு. பிற புல்லு மரனு முளவேனும் கமுகந் தோட்ட மென்றல் அஃறிணைக் கட் டலைமை பற்றிய வழக்கு. ஒருவங் கா டென்பது அத்திணைக் கட் பன்மை பற்றிய வழக்கு. பார்ப்பார் பல ராயினுங் கமுகு பல வாயினும் அவை தாமே பன்மை பற்றிய வழக்காம்.

பல பொரு ளொரு சொல்லி னீக்குதற்கு ஒரு பெய ரென்றார்.

ஒன்றென முடித்த லென்பதனான், அரசர் பெருந் தெரு, வயிர கடகம், ஆ தீண்டு குற்றி, ஆ னதர், எருத் தில், எனப் பொதுச் சொல் லின்றி வருவனவுங் கொள்க.

உள் பொரு ளெல்லாங் கூறாது ஒன்றனை யெடுத்துக் கூறுதன் மர பன் றாகலின் பொதுச் சொன்மேற் சொன் னிகழுமா றுணர்த்திய முகத்தான் மரபு வழுக் காத்தவாறு.

நச்சி :

இஃது, ஒரு பெயர்ப் பொதுச் சொல்லை மரபு வழுக் காக் கின்றது.

இ-ள் : உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும் — உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும், ஒரு பெயர்ப் பொதுச் சொல் — ஒரு பெயராய்ப் பல பொருட்குப் பொதுவாகிய

சொல்லை, உள் பொருள் ஒழியத் தெரிபு வேறு கிளத்தல் — பிற உள் பொருள் ஒழியத் தெரிந்துகொண்டு பொதுமையின் வேறாகச் சொல்லுக, தலைமையும் பன்மையும் — தலைமையானும் பன்மையானும், எ—று.

பிறரும் வாழ்வார் உளரேனும், 'பார்ப்பனச் சேரி' என்றல் உயர்திணைக்கண் தலைமை பற்றிய வழக்கு. 'எயினர் நாடு' என்பது அத் திணைக்கண் பன்மை பற்றிய வழக்கு. பிற புல்லும் மரமும் உளவேனும், 'கமுகந் தோட்டம்' என்றல் அஃறிணைக்கண் தலைமை பற்றிய வழக்கு. பார்ப்பார் பலராயினும், கமுகு பலவாயினும் அவை தாமே பன்மை பற்றிய வழக்காம்.

'ஒன்றெனமுடித்தலான், அரசர் பெருந்தெரு ஆதீண்டு குற்றி, வயிரக் கடகம் என்னும் பொதுச் சொல் அல்லனவும் கொள்க.

பல குடி சேர்ந்தது சேரி. பல பொருள் தொக்கது தோட்டம்.

**கல் :**

என்ப தென் னுதலிற்றோ வெனின், ஒரு பெயர்ப் பொதுச் சொற்கண் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : ஒரு பெயர்ப்பட நின்ற பொதுச்சொல் [1]ஆண்டுள்ள பொருளொழிய உயர்திணைக்கண்ணுந் தெரிந்து கொண்டு, வேறே கிளத்தற்குக் காரணம் அப் பொருட்கட் டலைமையும் பன்மையும் ஆம், என்றவாறு.

உ-ம் : பார்ப்பனச் சேரி, என்பது உயர்திணைக்கட் தலைமை பற்றி வந்தது.

[2]எயினர் நாடு, என்பதுங் குற்றிளை நாடு என்பதும் அத் திணைக்கட் பன்மை பற்றிய வழக்கு.

கமுகந் தோட்டம், [3]என்பது அஃறிணைக்கட் [4]டலைமை பற்றி வந்தது. இது தானே பன்மை யுள்வழிப் பன்மை பற்றி வந்ததூஉ மாம்.

---

1. [யா] ஆண்டுள்ள 2. எயி[னர்] 3. என்ப[ன][து] 4. தலைமை

ஒடுவங் காடு, காரைக் காடு, என்பன பன்மை பற்றி வந்தன. சேரி என்பது பல குடியுஞ் சேர்ந்திருப்பது. தோட்டம் என்பது பல பொருளுந் தொக்கு நின்ற விடம். பிறவும் அன்ன.

இதனாற் சொல்லியது பல பொருளும் உள்வழிப் [1]பிறப்ப தோர் பெயர்ச் சொல்லினை அப் பல பொருளினையும் உடன்கூறி யன்றே கூறற்பாலது அவ்வாறன்றி அப் பொருட் டலைமையும் பன்மையும் பற்றிச் சொற் றொகுத் திறுத்தற் கண்டு அம் மீரபு வழு வமைத்தற் கூறியவா றுயிற்று.

அரசு :

என்பது ஒரு பெயர்பட நின்ற பொதுச் சொற்களைச் சொல் லுங்கா லாண்டுள்ள பொரு ளெல்லாம் மெடுத்துச் சொல்லா துயர்திணையிடத்து மஃறிணையிடத்துந் தெரிந்து வேறாகத் தலை மையானும் பன்மையானுங் கூறுக. ஒரு பெயர் பொதுச் சொல் லாவது, ஒரு பெயருமாய் பொதுச் சொல்லுமாய் வருவது. அது சேரி, நாடு, தோட்டம், காடு என்பன. சேரி, நாடு உயர்திணைப் பொதுச் சொல். தோட்டம், காடு அஃறிணைப் பொதுச் சொல்.

உதா :– சேரி என்பது பலரு மிருப்பது. அதனுட் சில பார்ப்பனக் குடி யுளவே லதனைப் பார்ப்பனச் சேரி யென பார்ப் பாரது தலைமை பற்றி: இது வுயர்திணைக்கட் டலைமைபற்றி வந்தது. எயினர் நாடு, குற்றிளைஞர் நாடு, என்பன பிறரு மாண் டுறைவா ருள ராயினும் எயினர் குற்றிளைஞர் பல ராதலா லுயர்திணைக்கட் பன்மை பற்றி வந்தன. தோட்ட மென்பது பல பொருளுந் தொக்கது. அதனுட் பிற புல்லு மாறு முளவே னுங் கமு காயினுந் தெங் காயினுஞ் சில வுளவாகிற் கமுகந் தோட்டம், தெங்கந்தோட்டம் என்பன அஃறிணைக்கட் டலைமை பற்றி வந்தன. ஒடுவங் காடு, காரைக் காடு, என்பன பிற புல்லு மாறு முளவேனு மொடுவை, காரை பல வாதலா லஃ றிணைக்கட் பன்மையாற் பெயர் பெற்றன வென் றறிக. பார்ப் பார் பல ராயினும் கமுகு பல வாயினும் தலைமையானும் பன்மையானும் பெற்ற பெய ரென்க. ஒன்றின் முடித்தலான் அரசர் பெருந்தெரு, வயிரகடகம், ஆ வுரிஞ்சு குற்றி யென்பன வும் பொதுச் சொல் லெனவுங் கொள்க.

---

1. பி[ர] [றப்]ப

50. பெயரினுந் தொழிலினும் பிரிபவை யெல்லா
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

உரை : மேனின்ற அதிகாரத்தால் உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரினானும், தொழிலினானும் பிரிந்து வருமவை யெல்லாம் மயங்குதற்குச் செல்லா; வழக்கு வழிப் பட்டன ஆகலான் என்பது, என்றவாறு.

அவைதாம் பெண்ணொழி மிகு சொல்லும், ஆணொழி மிகு சொல்லும் என இரு வகைப்படும்.

வரலாறு : உயர்திணைக்கண் பெயரிற் பிரிந்த பெண் ணொழி மிகு சொல் வருமாறு: வடு கரசர் ஆயிரவர் மக்களை யுடையர், என வரும்.

அத் திணைக்கண் பெயரிற் பிரிந்த ஆணொழி மிகு சொல் வருமாறு: பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கண் நால்வர் மக்கள் உளர், என வரும்.

இனி, அத் திணைக்கண் தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல் வருமாறு: அரசர் ஆயிர மக்களொடு தாவடி போயினர், என வரும்.

அத் திணைக்கண் தொழிலிற் பிரிந்த ஆணொழி மிகு சொல் வருமாறு: இன்று இவ் வூரெல்லாம் தைநீ ராடுப, என வரும்.

இனி, அஃறிணைக்கண் வருமாறு: நம் மரசன் ஆயிரம் யானை யுடையன் என வரும்; இஃது அத் திணையிற் பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்.

நம்பி நூறு எருமையுடையன், என வரும்; இஃது அத் திணையிற் பெயரிற் பிரிந்த ஆணொழி மிகு சொல்.

இனி, அத் திணைக்கண் தொழிலிற் பிரிந்து வருமாறு: இன்று இவ் வூர்ப் பெற்ற மெல்லாம் உழ வொழிந்தன, என வரும்; இஃது அத் திணைக்கண் தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்.

இன்று இவ் வூர்ப் பெற்ற மெல்லாம் அறங் கறக்கும், என வரும்; இஃது அத் திணைக்கண் தொழிலிற் பிரிந்த ஆணொழி மிகு சொல்.

இனி, எல்லாம் என்றதனால், ஆணொழி மிகு சொல்லும், பெண்ணொழி மிகு சொல்லும் அன்றிச் சிறப்புப் பற்றி நிற்பன வும், பொதுவாய் நிற்பனவும், மிகுதி வகையான் நிற்பனவும் கொள்க. அவை வருமாறு :

'அரசர் பெருந்தெரு,' என்பது சிறப்புப் பற்றி வந்தது. ஆ நீண்டு குற்றி; ஆ னதர், என்பன பொதுவாய் நிற்பன.

இனி, மிகுதி வகையாற் சொல்லுவன வருமாறு: இவர் பெரிதுங் கால்கொண் டோடுப; இவர் பெரிதுஞ் சோ றுண்ப. என வரும் உயர்திணைக்கண்.

இனி, அஃறிணைக்கண், 'இவ் வெருது புற் றின்னும், என வரும்.

இவை யெல்லாம் மிகுதி வகையான் விளக்கினவாறு.

தெய்வ :

எண்ணின்கட் கிடந்ததோர் மரபு உணர்த்துதல் நுதலிற்று வழூக் காத்தது மாம்.

இ-ள் : உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரானும் தொழிலானும் பொதுமையிற் பிரியும் பொரு ளெல்லாம் எண்ணுங்கால், தம்முள் மயங்குதல் கூடாத வழக்கு வழிப் பட்டன, எ-று.

மர பல என்றவாறு: எனவே, இனஞ் சேர எண்ணல் வேண்டும், என்றவா றாயிற்று. எண்ணுங்கால் என்பது, தந்து கொணர்ந் துரைத்தல், என்னுந் தந்திர உத்தியால் வருகின்ற சூத்திரத்தினின்றுங் கொணர்ந் துரைக்கப்பட்டது.

உ-ம் : முனிவரும் அந்தணரும் சான்றோரும் எனவும். பாணருங் கூத்தரும் விறலியரும் எனவும், முத்தும் மணியும் பவளமும் பொன்னும் எனவும், மாவும் மருதும் புன்னையும் ஞாழலும் எனவும், எண்ணுக: இவை பெயர். எறிவாரும் எய்வாரும் வெட்டுவாரும் குத்துவாரும் எனவும், ஆடுவாரும்

பாடுவாரும் நகுவாரும் எனவும், உண்பனவும் தின்பனவும் பருகு வனவும் நக்குவனவும் எனவும் எண்ணுக: இவை வினை. அஃதேல்.

ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங் கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின் (புறம் 9)

எனக் காட்டி இதனுள் அடங்காதால் எனின், அவையும் உய்யத் தகுவார் இவர், என்னும் இனங் குறித்து நின்றன வென்று கொள்க. பிறவும் அன்ன.

சேனா:

**இதன் பொருள்:** உயர்திணைக்கண்ணும் அஃறிணைக் கண்ணும் பெயரினும் வினையினும் பொதுமையிற் பிரிந்து ஆண்மைக்கும் பெண்மைக்கு முரியவாய் வருவன வெல்லாம் வழு வாகா, வழக்குவழிப் பட்டன வாகலான், என்றவாறு.

உயர்திணைக்கண்ணும், அஃறிணைக்கண்ணு மென்பது அதிகாரத்தான் வந்தது.

தொடியோர் கொய்குழை யரும்பிய குமரி ஞாழல், என்பது உயர்திணைக்கட் பெயரிற் பிரிந்த ஆணொழி மிகு சொல். வடு கரச ராயிரவர் மக்களை யுடைய ரென்பது பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல். இவர் வாழ்க்கைப்பட்டா ரென்பது தொழிலிற் பிரிந்த ஆணொழி மிகு சொல். இவர் கட்டி லேறினர், என்பது தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல். நம்பி நூ றெருமை யுடைய னென்பது அஃறிணைக்கட் பெயரிற் பிரிந்த ஆணொழி மிகு சொல். நம்மரச னாயிரம் யானை யுடைய னென்பது பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல். தொடி செறித்தலும், மக்கட் டன்மையும் இல்வாழ்க்கைப் படுதலும், கட்டி லேறுதலும், எருமைத் தன்மையும், யானைத் தன்மையும் ஒழிக்கப்படும் பொருட்கு முண்மையாற் பொதுவாய் நிற்கற் பாலன ஒரு பாற் குரியவாய் வருதலின், மரபு வழு வமைத்த வாறு.

பிற சொல்வாற் பிரிவன,

வேறுபடு வினையினு மினத்தினுஞ் சார்பினும் (சொல்—53) எனவும்,

'தெரிநிலை யுடைய வஃறிணை யியற்பெயர்' (சொல்—171)
எனவும்,

. நினையுங்காலைத் தத்த மரபின்
வினையோ டல்லது பாலறி பிலவே (சொல் — 172)
எனவும் முன்னோதப் படுதலானும், ஆண்டு வழு வின்மை யானும், ஈண்டுத் தாமே பிரிவனவே கொள்க.

தம்மாற்றும் பிரியு மென்பார் 'பெயரினுந் தொழிலினும்' என்றார். பெயர்க்கண்ணும் வினைக்கண்ணுந் தாமே பிரிவன வெனினு மமையும்.

அஃறிணைக்கட் டொழிலிற் பிரிந்தன வுளவேற் கண்டு கொள்க. இன்றிவ் வூர்ப் பெற்றமெல்லா மறங் கறக்கும், உழ வொழிந்தன என உரையாசிரியர் காட்டினராலோ வெனின் பெற்றமென்னும் பொதுப்பெயர் கறத்தலு முழுதலு மாகிய சிறப்பு வினையாற் பொதுமை நீங்குதல் வழு வன்மையான் ஈண்டைக் கெய்தாமையின், அவர்க் கது கருத்தன் றென்பது.

நச்சி :

இஃது, இரு திணை இரு பாற்கும் பொது வாகிய பெயர்க் கண் மரபு வழுக் காக்கின்றது.

இ-ள் : பெயரினும் தொழிலினும் பிரிபவை எல்லாம் — உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரினானும் தொழிலினானும் பொதுமையிற் பிரிந்த ஆண்பாற்கும் பெண் பாற்கும் உரியவாய் வருவன எல்லாம், மயங்கல் கூடா - வழு வாகா, வழக்குவழிப்பட்டன — வழக்கின் கண் அடிப்பட்டன ஆதலான், எ—று.

உ—ம் : 'பெருந்தேவி பொறை உயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்கள் உளர். இது பெயரிற் பிரிந்த ஆண் ஒழி மிகு சொல்.

'வடுகரசர் ஆயிரவர் மக்களை உடையர்' : இது பெயரிற் பிரிந்த பெண் ஒழி மிகு சொல்.

'இவர் வாழ்க்கைப் பட்டார்': இது தொழிலிற் பிரிந்த ஆண் ஒழி மிகு சொல்,

இவர் கட்டில் ஏறினர்: இது தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்.

இவை உயர்திணைக்கண் பெயரானும் தொழிலானும் பிரிந்தன.

'நம்பி நூறு எருமை உடையன்': இது பெயரிற் பிரிந்த ஆண் ஒழி மிகு சொல்.

'நம் அரசன் ஆயிரம் யானை உடையன்': இது, பெயரிற் பிரிந்த பெண் ஒழி மிகு சொல்.

'யானை ஓடிற்று': என்பது, தொழிலிற் பிரிந்த பெண் ஒழி மிகு சொல்.

'யானை நடந்தது': இது, தொழிலிற் பிரிந்த ஆண் ஒழி மிகு சொல்.

இவை அஃறிணைக்கண் பெயரானும் தொழிலானும் பிரிந்தன. இவை இரு பாற்கும் பொது வாயினும், ஒரு பாற்கண் தாமே பிரிந்தன.

'இவர் பெரிதும் சொல்லுமாறு வல்லவர்: இவர் பெரிதும் கால் கொண்டு ஓடுவர்', எனத் தொழிலின் மிகுதி விளக்கி வருவனவும் கொள்க.

கல் :

என்பதென் னுதலிற்றோ வெனின், ஆண் பெண்ணென்னும் இரு பாற்கும் பொது வாகிய பெயர்க்கண் மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : பெயரினுந் தொழிலினும் [1]ஆண் பெண்ணென்னும் இரு பாற்கு முரிய பொதுமையிற் பிரித்து, ஒரு பாற்கண்ணே நடப்பன வெல்லாம் இலக்கண முறைமையின் மயங்கின வென்று மாற்றல் கூடா; யாதோ காரண மெனின், அம் மயக்கம் வழக்கின் [2]அடிப்பட்ட வதனான் என்றவாறு. அப் பொதுப் பெயர் உயர்திணை யஃறிணை, ஆண்பால் பெண் பால் எனவும் பெயர் வினையோடு வைத் துறழ எண் வகைப் படும்.

1. [மா] (ஆ)ண்[டு] 2. [ய] (அ)டி

அவையாவன: உயர்திணைக்கட் பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்லும், ஆணொழி மிகு சொல்லும் தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்லும் ஆணொழி மிகு சொல்லும்; அஃறிணைக்கண் பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்லும். ஆணொழி மிகு சொல்லும், தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்லும் ஆணொழி மிகு சொல்லும், என விவை.

உ-ம்: வடுகரசர் ஆயிரவர் மக்களை யுடையர்; பெருந்தேவி பொறையுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்கள் உளர் எனவும், அரசனோடு ஆயிரவர் மக்கள் தாவடி போயினார்; இன்று இவ் வூரார் எல்லாந் தைநீர் ஆடுப எனவும், உயர்திணைக்கட் பெயரினுந் தொழிலினும் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்லும், ஆணொழி மிகு சொல்லும்; நம் அரசன் ஆயிரம் யானையை உடையன்; நம்பி நூறெருமை யுடையன் எனவும், இன்று இவ் வூர்ப் பெற்றம் எல்லாம் உழ வொழிந்தன; இன்று இவ்வூர்ப் பெற்றம் எல்லாம் [1]அறத்திற்குக் கறக்கும், எனவும் வரும். இவை அஃறிணைக்கட் பெயரினுந் தொழிலினும் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்லும் ஆணொழி மிகு சொல்லும் ஆம்.

'எல்லாம்' என்றதனான் மேற் சூத்திரத்தோடு பெயர்ப் பொதுச் சொல்லன்றித் தலைமை பற்றி வருவனவுஞ் சிறுபான்மை பற்றி வருவனவுங் கொள்க.

ஆ தீண்டு குற்றி; வயிரக் கடகம் என்னுந் தொடக்கத்தன இன்னு மதனானே இனஞ் செப்பாது ஒரு தொழிற்கண் மிகை விளக்குதற் பொருட்டாக வருவனவும் அமைத்துக் கொள்க.

இவர் பெரிதுஞ் சொல்லுமாறு வல்லர்; இவர் பெரிதுங் கால் கொண்டோடுப; இவ் வெருது புற்றின்னும், என வரும்.

இதனாற் சொல்லியது இரு திணையிடத்தும், ஆண்பாற்கும் பெண்பாற்கும் ஒரு சொல்லுதற்கண்ணே யுரிய பெயர்கள், அப் பொதுமை யொழிய ஒரு பாற்கண்ணே யோடுதன் மரபன்று. மரபன்றாயினும் அமையு மென்று மரபு வழு வமைத்தவாறு.

[2]இலேசினாற் கொண்டனவும் மரபு வழு வமைதி யென வுணர்க.

---

1. அ[ற](ற)த்திற்கு  2. இ[லே](லே)சினா[ர்](ற்)

அரசு:

என்பது உயர்திணைக்கண்ணு மஃறிணைக்கண்ணும் பெயரினானுந் தொழிலினானும் பிரிந்து வருமவை யெல்லாம் வழுவாகா, வழக்குவழி பட்டன வாகலான். உயர்திணை யஃறிணை யென்பன மேனின்ற வதிகாரத்தாற் கொள்க. அவை மயங்காது வழங்குமிடத்துப் பெண்ணொழி மிகுசொல்லு மாணொழி மிகு சொல்லுமென் றிரண்டு வகைப்படும்.

உதா: வடுகரய ராயிரவர் மக்களை யுடையவ ரென்றக்கால் மக்க ளென்பது பொது வாயினு மிது பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல். பெருந்தேவி 'கருவுயிர்த்த கட்டிற்கீழ் நால்வர் மக்க ளுள ரென்று மிது பெயரிற் பிரிந்த வாணொழி மிகுசொல். அரச ராயிரவர் மக்களொடு தாவடி போயினர்; இன் றிச் சேரியாரு மச் சேரியாரும் பொருப: இவை தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகுசொல். இன் றிவ் வூ ரெல்லாம் தைநீ ராடுப, குறுங்கானம் போப; இவை தொழிலிற் பிரிந்த வாணொழி மிகு சொல். உயர்திணைக்கட் பெயரானுந் தொழிலானு மாண் பெண் பிரிந்தவாறு காண்க. நம்மரச னாயிரம் யானையை யுடையன் என விது பெயரிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல்; யானை ²பொது. நம்பி நூறு எருமை யுடையனென்றக்கால் இது பெயரிற் பிரிந்த ஆணொழி மிகுசொல்: எருமை பொது. இன்றிவ் வூர் பெற்ற மெல்லா முழ வொழிந்தன வென விது தொழிலிற் பிரிந்த பெண்ணொழி மிகு சொல். இன் றிவ் வூர் பெற்றமெல்லா மறத்திற்குக் கறக்கும் ³எனத் தொழிலிற் பிரிந்த வாணொழி மிகுசொல்; பெற்றம் பொது. அஃறிணைக்கட் பெய ராயினுந் தொழி லாயினு மாண் பெண் பிரிந்தவாறு காண்க.

இனி எல்லா மென்றதனால், இவர் பெரிதுஞ் சொல்லுமாறு வல்லர்; இவர் பெரிதுங் கால் கொண்டோடுவர்; இவர் மிகவுஞ் சோ றுண்பர், எனத்தொழில் மிகுதி யுணர்த்துவனவுங் கொள்க. மற்றையார் சொல்லுமா றறியார், கைகொண்டோடுவர், புறற்றின்பா ரென்பது சொல்லிய தன்று, மிகுதி யுரைத்தவாறு காண்க.

1. திரு: திருத்தம் 2. பெரிது: திருத்தம் 3. யென: திருத்தம்

51. பலவயி னானு மெண்ணுத்திணை விரவுப்பெயர்
அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இது திணை வழு அமையுமாறு கூறுதல் நுதலிற்று.

உரை : பல விடத்தினானும் உயர்திணையும் அஃறிணையும் விரவி எண்ணப்படும் பொருள் அஃறிணை முடிபின வாம்; செய்யு ளகத்து, என்றவாறு.

வரலாறு :

வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை என்றிவை யாறும்
குறுகா ரறிவுடைய யார்.

என வரும்.

இனி, 'பலவயி னானும் அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே, எனவே, சில வயினான் அஃறிணை விரவாது உயர்திணை யான் எண்ணி, அஃறிணை முடிபிற் றாகலும் உண்டு செய்யு ளகத்து, என்றவா றாம்.

அது வருமாறு :

பாணன் பறையன் துடியன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை, (புறம் — 335)

என வரும்.

தெய்வ :

திணை வழு வமைத்தலை நுதலிற்று.

இ–ள் : எண்ணின்கண் திணை விரவி வரும் பெயர் பெரும் பான்மையும் அஃறிணை முடிபின செய்யுளுள், எ–று.

எனவே, சிறுபான்மை உயர்திணையான் முடியவும் பெறு மென்று கொள்க.

உ–ம் :– கோலஞ்சி வாழுங் குடியுங் குடிதழீஇ
ஆல்வீழ்பு போலும் அமைச்சனும் — வேலின்
கடைமணிபோற் றிண்ணியான் காப்புமிம் மூன்றும்
படைவேந்தன் பற்று விடல். (திரி — 33)

இது விரவி எண்ணி அஃறிணையான் முடிந்தது.

அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்குந்
திங்களுள் சான்றோரும் ஒப்பர் (நாலடி — 151)

எனவும்,

பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசுப்பெண்டிர் என்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைக்கட்
போற்றி எனப்படு வார் (ஆசாரக் கோவை — 64)

என்வும், இவை உயர்திணையான் முடிந்தன. யானையுங் குதிரையும் வீரரும் போர்க் களத்துப் பட்டன. அரசனும் படையும் பட்டன, எனவும், வழக்கின் கண்ணும் வருமால் எனின், மொழிந்த பொருளோ டொன்ற வைத்தல் என்னுந் தந்திர வுத்தியால் இச் சூத்திரத்திற்குப் பல வயினானும் அஃறிணை முடிபின செய்யுளுள் என்றமையான், சில வயினான் வழக்கினுள்ளும் விரவி வந்து தலைமையும் பன்மையும் பற்றி வந்து அஃறிணையான் முடியவும் பெறுமென்று கொள்க.

சேனா :

இதன் பொருள் : திணை விரா யெண்ணப்பட்ட பெயர் செய்யுளகத்துப் பெரும்பான்மையும் அஃறிணைச் சொற் கொண்டு முடியும், என்றவாறு.

உதாரணம் :

'வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங்
குறுகா ரறிவுடை யார்'

எனவும்,

கடுஞ்சினத்த கொல்களிறும்
கதழ்பரிய கலிமாவு
நெடுங்கொடிய நிமிர்தேரு
நெஞ்சுடைய புகன்மறவருமென
நான்குடன் மாண்ட தாயினும் (புறம் — 55)

எனவும் வரும்.

எண்ணுத் திணை விரவுப் பெயர் பெரும்பான்மையும் அஃறிணைச் சொற் கொண்டு முடியு மெனவே, சிறுபான்மை உயர்திணைச் சொற் கொண்டு முடியவும் பெறும், என்பதாம்.

உதாரணம் :

பார்ப்பா ரறவோர் பசுபத்தினிப் பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டு. (சிலப் — வஞ்சினமாலை) எனவும்,

'பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தா ரிளையார் பசுப்பெண்டி ரென்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி எனப்படு வார்' (ஆசாரக் கோவை — 64)
எனவும் வரும்.

இரு திணைப் பெயரும் விராய் வந்து ஒரு திணைச் சொல்லான் முடிதல் வழு வாயினும், செய்யுளகத் தமைக வெனத் திணை வழு வமைத்தவாறு.

'பாணன் பறையன் றுடியன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை' (புறம் — 335)
என விருதிணைப் பெயரும் விரவி வாராது, உயர்திணைப் பெயரே வந்து செய்யுளுள் அஃறிணை முடிபு கொண்டன வென்று உரையாசிரியர் கூறினரா லெனின் பாணன் முதலாயி னாரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக் கேற்ற தொகை கொடுத்தல் வழு வன்மையான், அவ் வுரைபோலி யுரையென்க. குடி யென்று சுட்டாதவழி பாணன் பறையன் றுடியன் கடம்ப னென் றிந் நால்வரு மல்லது குடி யில்லை யென்றே யாம்.

தம்முடைய தண்ணளியுந் தாமுந்தம் மான்தேரு
எம்மை நினையாது விட்டனரேல் விட்டகல்க
(சிலப். 7 : 32) எனவும்,

யானுந் தொழியு மாயமு மாடுந் துறைநண்ணித்
தானும் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்
எனவும், இவை யெவ்வாறு வந்தனவோ வெனின் அவை தலைமைப் பொருளையும், தலைமை யில் பொருளையும் விரா யெண்ணித் தலைமைப் பொருட்கு வினை கொடுப்பவே தலைமை யில் பொருளு முடிந்தன வாவதோர் முறைமை பற்றி வந்தன; ஈண்டைக் கெய்தா வென்பது. தானுந் தன் புரவியுந்தோன் றினு னென்பது மது.

நச்சி:

இது, திணை வழு அமையுமாறு கூறுகின்றது.

இ-ள்: பல வயினானும் எண்ணுத் திணை விரவுப் பெயர் — பல இடத்தும் திணை விராய் எண்ணப்பட்ட பெயர், செய்யுளுள்ளே அஃறிணை முடிபின — செய்யுளகத்துப் பெரும்பான்மையும் அஃறிணைச் சொற் கொண்டு முடியும், எ—று.

'வடுகர் அருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை என்றிவை ஆறும்
குறுகார் அறிவுடை யார்' (நன். சூ. 378. சங். ந. உரை. மேற்.)

கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகன் மறவருமென
நான்குடன் மாண்ட தாயினும் (புறம். 55:7-9)

என வரும்.

'பல வாயினானும்' என்றமையான், சில வயினான் திணை விரவாது உயர்திணையான் எண்ணி அஃறிணையான் முடிவனவும், திணை விராய் எண்ணி உயர்திணையான் முடிவனவும் கொள்க.

பாணன் பறையன் துடியன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியும் இல்லை, (புறம். 335:7, 7)

என்றது, 'பாண் குடி, பறைக் குடி' எனக் குடியைச் சுட்டியில்லாது பாணன், பறையன் எனப் பால் காட்டி நிற்றலான், உயர்திணைப் பொருள் நின்று அஃறிணை முடிபு கொண்டனவேயாம்.

'பார்ப்பார் தவரே சுமந்தோர் பிணிப்பட்டார்
மூத்தார் இளையார் பசுப்பெண்டிர் என்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பிடைப்
போற்றி எனப்படு வார்,' (ஆசாரக். 64)

பார்ப்பார் அறவோர் பசுபத்தினிப் பெண்டிர்
மூத்தோர் குழவி எனுமிவரைக் கைவிட்டு (சிலப். 21:53,54)

இவை திணை விராய் எண்ணி உயர்திணையான் முடிந்தன.

உயர்திணையும் பொருள் என்னும் பொதுமையான் அஃறிணைக்கண் அடங்குதலானும், உயர்திணைக்கண் அஃறிணை அவ்வாறு அடங்காமையானும் ஆசிரியர் அஃறிணை முடிபின. என்றார்.

திணை விராய் எண்ணி அஃறிணையானும் உயர்திணையானும் முடிந்தது தலைமை பற்றியும் பன்மை பற்றியும் இழிவு பற்றியும் என உணர்க.

'தானும் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்
யானும் தோழியும்: (யா. வி. சூ. 28. மேற்.)

என்றாற் போல்வன, தலைமைப் பொருட்கு வினை கொடுப்பவே தலைமை இல் பொருளும் உடன் முடிந்ததோர் முறைமை பற்றி வந்தன வாம்.

கல் :

என் னுதலிற்றோ வெனின் செய்யுள் அகத்துத் திணை வழு வமையுமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பல விடத்தானுந் திணை விரவி எண்ணப்படும் பெயர் அஃறிணை [1]முடிபின வாஞ் செய்யுளகத்து, என்றவாறு.

"வடுக ரருவாளர் வான்கரு நாடர்
சுடுகாடு பேயெருமை யென்றிவை யாறுங்
குறுகா ரறிவுடை யார்" என வரும்.

'பல வயினானும்' என்றதனாற் சில [2]வயின் திணை விரவாது. உயர்திணையான் எண்ணி அஃறிணையான் முடிவன கொள்க வென்பது.

"பாணன் பறையன் றுடியன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை, என வரும்.

சில [3]வயின் திணை விரவி எண்ணி உயர்திணையான் முடிவன வுங் கொள்ளாமோ வெனின், சான்றோர் செய்யுட் கவ்வாறு* வரு வனவா யின்மையிற் கொள்ளாம், என்பது.

1 முடிபி [ன்] (ன) 2. வயி (ன்) னாற் 3. வயி (ன்) னாற்
* தெளிவில்லை.

'வடுக ரருவாளர்' என்பதூஉஞ் சான்றோர் செய்யுள் அன்றோ வெனின்; "கடுஞ்சினத்த கொல்களிறுங்
கதழ்பரிய கலிமாவு நெடுங்கொடிய நிமிர்தேரு
நெஞ்சுடைய புகன்மற வருமென
நான்குடன் மாண்ட தாயினும்" என்பதும் ஊண்மையி னமையு மென்பது.

அஃதேல், திங்களுஞ் சான்றோரு மொப்பர், எனவும், வேந் தின் பெரும்பதி மண்ணுண் மாந்த ரீங்கிம் [1]மூவரிதற் குரியரே எனவுஞ் சான்றோர் செய்யுளுள்ளும் வருமால் எனின்: திங்களும், பதியும் என்பன அஃறிணை [2]முடிபின வெனினுந் தாம் உயர் திணைப் [3]பொருளவாகலான், அவை இந் நிகரன வல்ல. இவற்றின் கட் சிறுபான்மை வழுவினையும் இப் பல வயினானும் என்றதனா னுதல், அதிகாரப் புறநடையா னுதல் அமைத்தும், என்பது,

இதனாற் சொல்லியது செய்யுட்கண் திணை விரவி எண்ணிய வழிப் பொது வாக முடியாது ஒரு திணையான் முடிவது கண்டு அதனை யமைத்தவாறு.

இனிப் பொது முடி பில வென்று அஃறிணை முடிபிற் றூதற் குக் காரணம் என்னோ வெனின் அவ்வா றெண்ணிய வுயர்திணை யும் பொரு ளென்னும் பொதுமையான் [4]அஃறிணையு ளடங்கும்; உயர்திணையுள் அஃறிணை யவ்வா றடங்காது, என்பது போலும்.

அரசு:

என்பது பல விடத்தினு முயர்திணையு மஃறிணையுந் தம்முள் விரா யெண்ணப்படும் பொருள் செய்யுளிடத் தஃறிணைச் சொற் கொண்டு முடியும்.

உதா:- வடுக ரருவாளர் வான்கரு நாடர், சுடுகாடு பேயெ ருமை யென்றிவை யாறுங் குறுகா ரறிவுடை யார், என வரும், பல வயினானு மென்றதனாற் சில வயினாற் றிணை விரவாது உயர் திணையா னெண்ணி யஃறிணையான் முடிவனவுந் திணை விரவாது வுந் தஃறிணையான் முடிந்தது. பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார் மூத்தா ரிளையார் பசுப்பெண்டி ரென்றிவர்கட்,

---

1. மூவ [றி] த [ர] (ற்) 2. முடிபி [ன்] (ன) 3. பொரு[ள்] (ள)
4. அஃறிணைபி [ர] ளடங்கும்.

காற்ற வழிவிலங்கி னுரே பிறப்பிடைப், போற்றி யெனப்படுவார்;' எருது முழவனும் வந்தா ரொரு குடநீர் தாரா யாமகள்; "மூர்க்கனு முதலேயுங் கொண்டது விடார்; நங்கையுங் கிளியுமுண்டார்; வேந்தன் பெரும்பதி மண்ணுண மாக்க ளிங்கிவர் மூவ ரிதற் குரியோரே; வண்டா ரோதி நீயு நல்லே, தண்டார் மார்பி னிவரு நல்லாள், ஞெலிப்பாட்டி னிவ்வூரு நன்றே, தீயோர் யாவரு மில்லே,* என விவை திணை விரா யெண்ணி யுயர்திணை முடிந்தவாறு காண்க,

52. வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொலென்
றாயிரு வகைய பலபொரு ளொருசொல்.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், பல பொருள் ஒரு சொல்லின் வகைமை உணர்த்துதல் நுதலிற்று.

உரை : வினையான் வேறுபடும் பல பொருள் ஒரு சொல்லும், வினையான் வேறுபடாத பல பொருள் ஒரு சொல்லும் என அவ் விரண்டு வகைப்படும் பல பொருள் ஒரு சொல், என்றவாறு.

மற்றொரு பிரதியிற் கண்ட உரை : இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஒரு சொல்லான் வரும் பல்பொருள் வகை கூறுதல் நுதலிற்று.

உரை : பல் பொருள் குறிக்கும் ஒரு சொல், வினை வேறு படுகின்ற பல்பொருள் ஒரு சொல் என, வினை வேறுபடாஅப் பலபொருள் ஒரு சொல் என இரு வகைப்படும், என்றவாறு.

பல பொருள் குறிக்கும் ஒரு சொல்லினைப் பிறவகைப் படுத்திப் பகுத்தல் ஒல்லு மெனினும் வேறுபடுத்திக் கோடற் கண் வினையே சிறப்புடைமையின் இங்ஙனம் வகுத் தோதினர்.

**தெய்வ :**

பல பொருளொருசொற் பாகுபடுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

* தெளிவில்லை.

இ-ள்: பல பொருளுணர வருஞ் சொல்லாவன: பல பொருட்கும் தனித்தனிப் பெயராகி வருவதூஉம் பலபொருளொருசொல் லாம்; பல பொருட்கும் பொதுப் பெயராகி வருவதூஉம் பலபொருளொருசொல் லாம்.

அவற்றுள், வினை வேறுபடும் பலபொருளொருசொல்லாவன: மா, வேங்கை, எனவும், மக்கள், பெற்றம், எனவும் வருவன; வினை வேறுபடாஅப் பலபொருளொருசொல்லாவன: சேவல் பெடையென்பன. அவற்றுக்கு உதாரணம் வருகின்ற சூத்திரத்தாற் காட்டுதும்.

சேனா:

இதன் பொருள்: வினை வேறுபடும் பலபொருளொரு சொல்லும் வினை வேறுபடாப் பலபொருளொருசொல்லுமென இரண்டு வகைப்படும் பலபொருளொருசொல், என்றவாறு.

இனமுஞ் சார்பு முளவேனும் வேறுபடுத்தற்கண் வினை சிறப்புடைமையின், அதனாற் பெயர் கொடுத்தார், ஆதீண்டு குற்றி யென்பது போல.

இலக்கணச் சூத்திரங்களே யமையும்; இச் சூத்திரம் வேண்டா பிறவெனின், இரு வகைய வென்னும் வரையறை அவற்றாற் பெறப்படாமையானும், வகுத்துப் பின்னு மிலக்கணங் கூறியவழிப் பொருள் இனிது விளங்குதலானும், இச் சூத்திரம் வேண்டு மென்பது.

நச்சி:

இதனால், பல சொல்லான் ஒரு பொருள் உணர்த்தி, இனி ஒரு சொல்லான் வரும் பல பொருள் உணர்த்துகின்றார், அவற்றின் பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றார்.

இ-ள்: வினை வேறுபடூஉம் பலபொருள் ஒரு சொல் — வினையான் வேறுபடும் பல பொருள் ஒரு சொல்லும், வினை வேறுபடாஅப் பலபொருள் ஒரு சொல் — வினையான் வேறுபடாத பலபொருள் ஒருசொல்லும், என்று ஆயிரு வகைய பலபொருள் ஒரு சொல் — என அவ் விரண்டு வகைப்படும் பலபொருள் ஒரு சொல், எ-று.

கல் :

என் னுதலிற்றோ வெனின், மேற் பல சொல்லான் வரும் ஒருபொருள் [1]உணர்த்தினர்.

இனி, ஒரு சொல்லான் வரும் பலபொருள் உணர்த்துவான் அவற்றது பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வினையினான் வேறுபடும் பலபொருள் ஒருசொல் லும், வினையினான் வேறுபடாத பலபொருள் ஒரு சொல்லும் என விரு வகைய, பலபொருள் ஒருசொற்கள் [2]என்றவாறு.

உ-ம் : மா, வாள், கோல், கன்று, தளிர், பூ, காய், பழம் என்னுந் தொடக்கத்தன. இவற்றுள், 'மா' வென்பதே பல சாதியு முணர்த்திப் பொதுவாய் நின்றது. அல்லன வெல்லாம் ஒரு சாதியை யுணர நிற்றலிற் பொதுமை யிலவா லெனின், அவ்வாறு பொதுமைப் படாதாயினும் விகற்பித்து நோக்கத் தம்முள்ளே சாதி பாகுபா டுடைய வென வுணர்க.

இவற்றான் உலகத்துப் பெயர்கள் எல்லாம் ஒரு பொரு ளோடும் ஓ ரிடத்தோடும், [3]ஒரு காலத்தோடும் பண்போடுந் தொழிலோடும் *அப் பொடும்படுத்த நோக்கப் பலபொருள் ஒரு சொல் லெனப்படும் போலும்.

அரசு :

என்பது வினை வேறுபடும் பலபொரு ளொருசொல், வினை வேறுபடாப் பலபொரு ளொருசொல் என இரு வகைப்படும் பலபொரு ளொருசொல், அவை மா, வாள், கோல், கன்று, தளிர், பூ, காய், பழம் என்னுந் தொடக்கத்தன.

53. அவற்றுள்.
வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
வேறுபடு வினையினு மினத்தினுஞ் சார்பினுந்
தேறத் தோன்றும் பொருடெரி நிலையே.

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், வினை வேறுபடூஉம் பலபொரு ளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. உணர்த்தின[ன்](ர்) 2. [யெ](எ)ன்றவாறு 3. ஓர் : திருத்தம்
* தெளிவில்லை.

உரை: முற்படப் பகுத் தோதியவற்றுள் வினை வேறுபடூ உம் பல பொருள் ஒருசொல்லை அறியுமிடத்து, வேறுபடு வினையினானும் இனத்தினானும் சார்பினானும் அறியப்படும் என்றவாறு.

வேறுபடு வினையான் அறிய வருமாறு: மா தளிர்த்தது; மா பூத்தது; மா காய்த்தது; என வரும். இவ் வினை மர மாவிற்கல்லது ஏலாது. பிறவும் அன்ன.

'மாவும் மருதும் ஓங்கின' என்பது இனத்தான் மா மரம் என விளங்கும். 'மாவும் மரையும் புலம் படர்ந்தன', என்றால் விலங்கு மா என்பது அறியப்படும்.

இனிச் சார்பினான் அறிய வருமாறு: விற் பற்றிநின்று, 'கோல் தா' என்றால், கணைக் கோலின்மேல் நிற்கும், அதற்குச் சார்பு அது வாகலான். குதிரைமே லிருந்து 'கோல் தா' என்றால், மத்திகைக் கோ லாம் ஆகலானும், சுள்ளற் கோ லாம் ஆகலானும் செல்லும், அதற்குச் சார்பு அது வாகலான். பிறவும் அன்ன.

தெய்வ :

வினை வேறுபடும் பலபொரு ளொருசொல் பொருள் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:- மேற் கூறப்பட்டவற்றுள் வினை வேறுபடும் பல பொரு ளொருசொல் பொருள் தெரியுங் காலத்து வேறுபட்ட வினையினானும், இனத்தினானும், சார்பினானும் தெளியத் தோன்றும், எ-று.

உ-ம். மா காய்த்தது; வேங்கை பூத்தது, என்றவழி மரம் என்பது அறியப்பட்டது. மா ஓடிற்று; வேங்கை பாய்ந்தது, என்ற வழி, விலங்கு என்பது அறிப்பட்டது. இவை தனித் தனிப் பொரு ளுணர்த்தின. இவ்வூர் மக்க ளெல்லாம் போர்க் குப் போயினர், என்றவழி ஆண்பால் உணரப்பட்டது. இவ்வூர் மக்க ளெல்லாம் தைந்நீ ராடினர், என்றவழிப் பெண்பால் உணரப்பட்டது. இவ்வூர்ப்பெற்ற மெல்லாம் அறங் கறக்கும், என்றவழிப் பெண்பால் உணரப்பட்டது. இவ்வூர்ப் பெற்ற மெல்லாம் உழவு ஒழிந்தன, என்ற வழி, ஆண்பால் உணரப் பட்டது: இவை பொதுப் பொருள் உணர்த்தின:- இவை

வினையினாற் பொருள் விளக்கின. மாவும் மருதும் அவை, என்ற வழி, மா மர மென்பது அறியப்பட்டது. மாவும் புள்ளும் என்ற வழி, விலங் கென்பது அறியப்பட்டது: இவை இனம். இப் பொழிலகத்து நூறு மா வுள, என்ற வழி, மரம் என்பது அறியப்பட்டது. இப் போர்க்களத்து நூறு மா வுள, என்ற வழி, விலங் கென்பது அறியப்பட்டது; இவை சார்பு. பொதுமை யுணர்த்தும் பலபொரு ளொருசொல் இனமும் சார்பும் பற்றி வருவன வந்தவழிக் கண்டு கொள்க.

சேனு:

இதன் பொருள்: அவ் விரண்ட னுள்ளும், வினை வேறு படும் பலபொரு ளொருசொல், ஒரு பொருட்கே சிறந்த வினையானும், இனத்தானும், சார்பானும், பொரு டெரி நிலைக்கட் பொதுமை நீங்கித் தெளியத் தோன்றும், என்றவாறு.

மா வென்பது ஒருசார் விலங்கிற்கும் ஒரு மரத்திற்கும் வண்டிற்கும் பிற பொருட்கும் பொது. குரு கென்பது ஒரு பறவைக்கும் உலை மூக்கிற்கும் வளைக்கும் பிறவற்றிற்கும் பொது. நாக மென்பது மலைக்கும் ஒரு சார் மரத்திற்கும் யானைக்கும் பாம்பிற்கும் பிறவற்றிற்கும் பொது. சே வென்பது ஒரு சார்ப் பெற்றதிற்கும் ஒரு மரத்திற்கும் பிறவற்றிற்கும் பொது.

மாப் பூத்தது; மாவு மருது மோங்கின, என வேறுபடு வினையானும் இனத்தானும் மர மென்பது விளங்கிற்று. கவசம் புக்கு நின்று மாக் கொணு வென்றவழிக் குதிரை யென்பது சார்பினல் விளங்கிற்று. குருத முதலாயினவு மன்ன.

வேறுபடு வினையினு மென்றுரேனும், ஒன்றெண முடித்த லென்பதனுன், இம் மா வயிரம், வெளிறு, என வேறுபடுக்கும் பெயருங் கொள்ளப்படும்.

இனத்தொடு சார்பிடை வேற்றுமை யென்னையெனின், ஒரு சாதிக்க ணணைந்த சாதி இன மெனப்படும்; அணைந்த சாதி யன்றி ஒருவாற்ரு னியை புடையது சார் பெனப்படு மென்பது.

நச்சி :

இஃது, அவற்றுள் வினை வேறுபடுமாறு கூறுகின்றது.

இ-ள் : அவற்றுள் வினை வேறுபடூஉம் பலபொருள் சொல் — அவ்விரண்டனுள்ளும் வினையான் வேறுபடும் பலபொருள் ஒரு சொல், வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும் — ஒரு பொருட்கே சிறந்த வினையானும் இனத்தானும் சார்பானும், பொருள் தெரி நிலை தேறத் தோன்றும் — பொருள் தெரி நிலைமைக்கண் பொதுமை நீங்கித் தெளியத் தோன்றும், எ-று.

'மா' என்பது ஒருசார் விலங்கிற்கும் மரத்திற்கும் வண்டிற்கும் பிற பொருட்கும் பொது; 'குருகு' என்பது, ஓர் பறவைக்கும் உலைமூக்கிற்கும் வளைக்கும் பிற பொருட்கும் பொது.

'மா பூத்தது' — இது வினை. மாவும் மருதும் ஓங்கின — இஃது இனம். கவசம் புக்கு நின்று, 'மா கொணு' என்பது சார்பு.

ஒரு சாதிக்கண் அணைந்த சாதி இனம்; ஒருவற்குன இயை புடையது சார்பு. 'ஒன்றென முடித்தல்' என்பனுல், 'இம் மா வயிரம், வெளிறு, என வேறுபடுக்கும் பெயரும் கொள்க.

கழிப் பூக் குற்றுக் கானல் அல்கி என்றுற்போலச் சில பொருளை ஒழித்துச் சில பொருள்மேல் நிற்றல் உரையிற் கொள்க.

இனமும் சார்பும் பின்வரும் வினையொடு கூடி அல்லது பொருள் முடியாமையின், அவையும் வினை வேறுபட்டனவே யாம்.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், மேற்கூறிய பல பொருள் ஒருசொல்லினுள் வினை வேறுபடூஉம் பலபொருள் ஒருசொல் லாமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேற்சொல்லப்பட்ட விரண்டனுள் வினை வேறு படும் பலபொரு ளொருசொல் வேறுபடுக்கும் வினையானும்,

வினையொடு வரும் இனத்தானுஞ் சார்பினானும், இப்பொழுது இவன் கூறியது இப் பொருள், எனத் தெளியத் தோன்றும். பொருளாராய்ச்சிப்படும் நிலைமைக்கண், என்றவாறு.

உ-ம்: மாப் பூத்தது, காய்த்தது; இவை வேறுபடு வினை. மாவும் அரசும் புலம் படர்ந்தன; மாவும் மருதும் ஓங்கின; இவை [1]இனம் பற்றி வந்தன.

விற் பற்றி நின்று கோறு வென்பதூஉம், பலகை பற்றி நின்று, வா டா வென்பதூஉம், தூம்பு பற்றி நின்று, கொளு வென்பதூஉம் சார்பு பற்றி நின்றன.

* 'உரையிற் கோடல்' என்பதனாற் பலபொருளொருசொல் வினை இனஞ் சார்புகளைப் பற்றிப் பல பொருளை யொழித்து ஒரு பொருண்மேல் நில்லாது, சில பொருளொழித்துச் சில பொருண் மேல் நிற்பதூஉங் கொள்ளப்படும்.

உ-ம்: 'கழிப் பூக் குற்றுக் கானலல்கி' என்றாற் போல வரும்.

இனமுஞ் சார்பும் பற்றி வருமவையிற்றை வினை வேறு படூஉம் பலபொருள் ஒருசொல் லென்றது என்னை யெனின், அவ் வினமுஞ் சார்பும் அவ் வினைச் சொல்லை வேறுபடுக்கும்வழி அதனோடு கூடிநின்று வேறுபடுப்பினல்லது தாமாக நில்லாமை நோக்கி அவையிற்றையும் வினை வேறுபடூஉம் பலபொருள் ஒருசொல் லென்ப.

பொதுச் சூத்திரத்துள் இரண்டனுள் ஒன்றாக வடக்கி ஈண்டு அதன் பாகுபாடு தோன்ற விரித்துக் கூறினவாறு போலும்.

அதனாற் சூத்திரத்து இனமுஞ் சார்பு மென்பனவற்றை முன்னின்ற வினையோடு தொடர்புபடப் பொருள் உரைத்துக் கொள்க.

**அரசு:**

என்பது வினை வேறுபடூஉம் பலபொருளொருசொல்லை யறியுமிடத்து வேறுபட்ட வினையினானு மினத்தினானுஞ் சார்பினானும் பொருடெரிநிலை தெளியத் தோன்றும்.

1. [யின்மை] (இனம்) * திருத்தம்

உதா :- மா தளிர்த்தது, பூத்தது, காய்த்தது, என்ற விடத்து மா மரத்தின்மேலு மாவொடு மாப் பாயு மென்ற விடத்து விலங்கின்மேலுஞ் செல்லும் வினையா னறியப்பட்டன. இனி, மாவு மரையும் புலம் படர்ந்தன; மாவு நாயு மோடின, என்று வினத்தா லறியப்பட்டன. மாவு மருது மோங்கின வென்று விதுவு மினத்தா லறியப்பட்டது. விற் பற்றி நின்று, கொளு வென்ற விடத்துக் கணைக் கோன்மேலும், பலகை பற்றி நின்று வா டா வென்றவிடத்துக் கண்டக வாண்மேலும், குதிரை யேறி யிருந்து கொளு வென்ற விடத்து மத்திகைக் கோன் மேலுஞ் செல்லு மிவை சார்பா லறியப்பட்டன வெனக் கொள்க.

**54. ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன்றும் ***

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், அம் மூன்று வகையான் உணர்ந்தவாறு போலாது, உணராமை நிற்குமா றுடைத்து இச் சொல் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை : ஒன்று வினை என்பது – பொதுவினை; பொது வினை யாயிற் பகுதி யுணராமற் றோன்றும், என்றவாறு,

அது வருமாறு : 'மா வீழ்ந்தது' என்றவிடத்து, இன்ன மா என்பது உணர்த்தல் ஆகாது; பொதுவாய் நிற்கும்.

**தெய்வ :**

மேலதற் கோர் புறநடை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வினை வேறுபடும் பலபொருள் ஒரு சொல் வேற்று வினை கொண்டு முடிதலே யன்றி இரு பொருட்கும் பொருந்தின ஒரு வினை கொண்டு முடியின் பிறி தொரு சொல்லோடு (பொரு ளோடு இ—எ.) ஒன்றிப் பொருள் தோன்றும் எ-று. பிறி தொரு சொல் லென்பது எஞ்சி நின்றது.

உ-ம் : மா வீழ்ந்தது, என்றவழி இன்ன மா வென்பது அறிய லாகாமையின், யானை முறித்தலால் வீழ்ந்தது என்றவழி மரம் என்பதூஉம், அம்பு படுதலான் வீழ்ந்தது என்றவழி, விலங்கு என்பதூஉம் உணர்த்தியவாறு கண்டு கொள்க.

* சேனாவரையர் அடுத்த சூத்திரத்தையும் இதனுடன் இணைத்துள்ளார்.

54. ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல்
நினையுங் காலைக் கிளந்தாங் கியலும்.

சேனு:

இதன் பொருள்: வேறுபடாத வினை கொண்டவழி வேறு படாது தோன்றும் வினை வேறுபடாப் பலபொரு ளொருசொல் ஆராயுங்காற் கிளந்து சொல்லப்படும், என்றவாறு.

உதாரணம்: மா மரம் வீழ்ந்தது, விலங்கு மா வீழ்ந்தது, என வரும்.

வினை வேறுபடாப் பலபொரு ளொருசொ லென வேறு நிற்பன வில்லை; வேறுபடு 'வினை முதலாயினவற்றுன் வேறு படுவன தாமே பொது வினை கொண்டவழி வினை வேறுபடாப் பலபொரு ளொருசொல் லா மென்பது அறிவித்ததற்கு ஒன்று வினை மருங்கி னொன்றித் தோன்று மென்றார்.

'ஒன்றுவினை மருங்கி னொன்றித் தோன்றும்' என ஒரு சூத்திரமாக உரையாசிரியர் பிரித்தாரா லெனின், அங்ஙனம் பிரிப்பின் ஒன்று வினை மருங்கி னொன்றித் தோன்றுதலும் வினை வேறுபடூஉம் பலபொரு ளொருசொற்கே இலக்கணமாய் மாறுகோடலானும், வினை வேறுபடுவன தாமே பொது வினை கொண்டவழி வினை வேறுபடாதன வா மென்பது அதனாற் பெறப்படாமையானும் அது போலியுரை யென்க.

முன்னும் பின்னும் வருஞ் சார்பு முதலாயினவற்றுற் குறித்த பொருள் விளங்காக்கால் கிளந்தே சொல்லுக வென யாப்புறுத்தற்கு 'நினையுங் காலை' என்றார்.

ஆங் கென்பது உரையாசை. குறித்த பொருள் விளங் காமைக் கூறல் மர பன்மையின் மரபு வழுக் காத்தவாறு.

நச்சி:

இது, மேலிற் சூத்திரத்திற் கோர் புறனடை கூறுகின்றது.

இ-ள்: ஒன்று வினை மருங்கின் ஒன்றித்தோன்றும் — கூறிய வினை வேறுபடூஉம் பலபொருள் ஒருசொல் வினையான் வேறுபட லில்லாது பொது வினை கொண்டு பொதுமைப்பட நின்றுழியும்

வினை வேறுபட்டாற் போல 'இன்னது இது' என வேறுபட நிற்றலும் வழக்கினகத்து உண்டு, எ—று.

'மா வீழ்ந்தது' என்பது, வீழ்தல் வினை எல்லாவற்றிற்கும் பொதுவேனும், 'இவ்விடத்து இக்காலத்து இவன் சொல்லு கின்றது இம் மாவினை, என ஒன்றினை உணர்த்தி நின்றவாறு காண்க; என்றது வினை வேறுபடும் பலபொருள் ஒருசொல், ஒருகால் வினை வேறுபடாத பலபொருள் ஒருசொற் போல நிற்கும், என்றவாறு.

கல் :

என்ப தென் னுதலிற்றோ வெனின் மேற் சூத்திரத்திற் கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் கூறிய வினை வேறுபடூஉம், பலபொருள் ஒருசொல், வினையான் வேறுபட நில்லாது பொதுவாகிய வினை யோடு பொருந்தப் பொருட் பொதுமைபட நின்றுழியும், மேல் வினையான் வேறுபட்டாற் போல இன்ன திது வென வேறுபட நிற்றலும் வழக்கிடத்துண் டென்றவாறு.

உ—ம் :- மா வீழ்ந்தது, என்பது, வீழ்தல் வினை எல்லா மாவிற்கும் பொதுவே யெனினும் இவ்விடத்து இக் காலத்து இவன் சொல்கிறது இம் மாவினை யென்று உணர நிற்கும், என்றவாறு; என்றது, [1]முன் கூறிய, வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல்லும் ஒரு நிலைமைக்கண் வினை வேறுபடூ உம் பலபொரு ளொருசொற் போல வுணர நிற்கும், என்றவாறு.

அஃதேற் பலபொருள் ஒருசொல்வினை இரண்டாக [2]வாக்கியது என்னை ஒன்றே, யகற்பாற்று எனின், அவ்வா றொன் றுயதனையே உணர்பாட்டு வேற்றுமை நோக்கி இரண்டாகப் பகுத்தார் என வுணர்க.

அரசு :

என்பது மேற் சொன்ன மூன்று வகையானு மன்றி பொது வினையாலும் வினைபொருந்து மிடத்திற் பொருந்தித் தோன்று வனவு முள.

---

1. எ (ன்ற) து. 2. வா [தி] (க்கி) யது.

மா வீழ்ந்த தென்றவிடத் தின்ன மா வென் றறிய லாகாது வீழ்தற் ெறுழி லெல்லாவற்றிற்கும் பொதுவே யாயினு மிவ்விடத்திக் காலத் திவன் சொல்லுகின்ற திம் மாவினை யென வொன்றினை யுணர்த்தி நின்றவாறு காண்க. இதன் கருத்து, வினை வேறுபடும் பலபொரு ளொருசொ லொருகால் வினை வேறுபடாப் பலபொரு ளொருசொற் போலவு நிற்கு மென்பது.

55. வினைவேறு படாஅப் பலபொரு ளொருசொல்
நினையுங் காலைக் கிளந்தாங் கியலும்.

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், வினை வேறு படாஅப் பல் பொருள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : வினை வேறுபடாஅப் பலபொருள் ஒருசொல்லை ஆராயுமிடத்து இன்ன தென்று அறியக் கிளந்தே சொல்லுக, என்றவாறு.

வரலாறு: ஆன் கன்று, நீரூட்டுக, என வரும்.
நினைதல் என்பது ஆராய்தல்.

ஆராயு மிடத்துக் கிளந்து கூறுக, எனவே, ஆராய்ச்சி இல்லாத இடத்தாயிற் கிளவாதே கூற அமையும் என்பதே அமையும். ஆராய்ச்சி யுடைய நிலம் என்பது எரு நிலம்; யாதோ வெனின், 'கன்று, நீ ரூட்டுக' என்றவிடத்து, ஆன் கன்றும், எருமைக் கன்றும், பூங் கன்றும் எனப் பலவும் ஆங் குளவாயின், அவன் சொன்ன கன்று நிற்பப் பிறி தொரு கன்று நீ ரூட்டல் வழுவாம். அதனான், இன்னுழி இன்ன கன்று என்று கிளந்து சொல்லுக. அல்லாக்கால், இன்ன கன்று என்று கிளவாதே சொல்ல அமையும் மேற் சூத்திரத்தின் துணிபும் இதுமே.

வேறுபடு வினையும் இனமும் சார்பும் வேண்டமை உணர்புழி யாயின் அவை யின்றியும் அமையும் என்பது.

**தெய்வ :**

இது வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல் பொருள் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : வினை வேறுபடாத பலபொருள் ஒருசொல் பொருள் உணருங்கால் எடுத்துக் கூறல் வேண்டும், எ-று.

உ-ம் :- சேவல், பெடை என்பன வினையால் வேறுபடாமையால் அன்னச் சேவல், குயிற் சேவல், அன்னப் பெடை, குயிற் பெடை என எடுத்துகூறப் பொருள் விளங்கினவாறு கண்டு கொள்க.

— சேனா. சூ. 55 பக்கம் 241 பார்க்க. —

**நச்சி :**

இது, நிறுத்த முறையானே வினை வேறுபடாப் பலபொருள் ஒருசொல் ஆமாறு கூறுகின்றது.

இ-ள்: வினை வேறுபடாஅப் பலபொருள் ஒருசொல் - வினையான் வேறுபடாத பலபொருள் ஒருசொல், நினையுங் காலைக் கிளந்தாங்கு இயலும் — ஆராயுங் காலத்து இன்னது இது எனக் கிளக்கப்பட்டு அவ் வாராய்ச்சி உடையவிடத்து நடக்கும். எ-று.

'கன்று, நீர் ஊட்டுக', என்றவழிக் கேட்டான் இன்ன கன்று என்பது அறிய வாராதவழி ஆன் கன்று, பூங் கன்று என்று கிளந்தே சொல்லுக, என்றவாறு.

'நினையுங் காலை' என்றதனால், கருமச் சிதைவு உள்வழிக் கிளந்து கூறுக, என்பது கொள்க.

'கன்றூற்றுப் படுத்த புன்றலைச் சிறூர்' (குறுந். 241). என்றவழிக் கருமச் சிதைவு இல்வழிக் கிளத்தல் வேண்டாவாயினவாறு காண்க.

அன்றி,

'ஒன்றுவினை மருங்கின் ஒன்றித் தோன்றும்
வினைவேறு படாஅப் பலபொருள் ஒருசொல்'

என ஒரு சூத்திர மாக்கி, 'வேறுபடாத வினை கொண்டவழி வேறுபடாப் பலபொருள் ஒருசொல், என்று பொருள் கூறி. வினை வேறுபடும் பலபொருள் ஒருசொல் லாகிய 'மா' என்பது தானே 'வீழ்ந்தது' என்னும் பொது வினை கொண்டவழி வினை வேறுபடாதாய் நின்றதற்கு 'மா மரம் வீஉந்தது', எனக்

கிளந்து கூறுக, என்றார் சேனாவரையர். அங்ஙனம் பொருள் கூறின், 'வினை' வேறுபடாப் பலபொருள் ஒருசொல் என வேறோர் சொல் இன்றி, 'ஆயிரு வகைய' (கி. ஆ. சூ. 52) என்பதனோடு மாறுபடும், என மறுக்க.

கல்:

என்பது என் நுதலிற்றோ வெனின், வினை வேறுபடாப் பலபொரு ளொருசொல் லாமா றுணர்த்த னுதலிற்று.

இ-ள்: வினையினான் வேறுபடாத பலபொருள் ஒருசொல் லாராயுங் காலத்து இன்னது இது வெனக் கிளக்கப்பட்ட வாராய்ச்சியை யுடைய விடத்து நடக்கு மென்றவாறு.

உ-ம்:- கன்று, [1]நீ ரூட்டுக, என்புழிக் கேட்டான் [2]இன்ன கன் றென்ப தறியா னாமே யெனின், ஆன் கன்று, எருமைக் கன்று, பூங் கன்று எனக் கிளந்து சொல்லுக. வினையுங் காலை என்றதனாற் கிளவாது [3]கூறினாற் கருமச் சிதை வுண்டெனிற் கிளந்து கூறுக; அல்லாதுழி வேண்டியவாறு கூறுக வென்பது பெறப்பட்டது. "கன்றூற்றுப் படுத்த புன்றலைச் சிறார்" என்புழிக் கருமஞ் சிதைந்தது என்ப தின்மையிற் கிளவாது சொல்லவும் அமைந்தது. என்பது. [4]எனவே பலபொரு ளொருசொல் வேறுபடு வினையான் உணரப் பட்டு நிற்றலும், வேறுபடு வினை யின்றிப் பொது வினையான் உணரப்பட்டு நிற்றலும், பொது வினையாற் கருமச் சிதை வுள்வழிக் கிளந்து சொல்லப்பட்டு நிற்றலும், கருமச் சிதை வில்வழிப் பொது வினையாற் கிளவாது சொல்லப்பட்டு நிற்றலும் என நான்கு பகுதிப்பட்ட தென வுணர்க.

இச் சூத்திரங்களாற் கூறியது பலபொருள் ஒரு சொல் [5]வினைபற்றிப் பிறக்கும் மர பிலக்கணப் பாகுபாடு என வுணர்க.

அரசு:

வினை வேறுபடாஅப் பலபொரு ளொருசொ லாராயுங் காலத் திது வெனக் கிளக்கப்பட்ட வாராய்ச்சி யுடையவிடத்து நடக்கும்.

---

1. நீருட் [டரு] (டு) க.  2. (இன்ன) கன்றென்ப [த்தி] தறி  
3. கூறினா [ர்] (ற்)  4. எ [ன்பால்] (னவே பல)  5. வினை [ப்] பற்றி.

உதா: பல கன்றோ ரிடத் துள்வழிக் கன்று நீ ரூட்டுக வென்றக்கா லெல்லாவற்றிற்கு நீ ரூட்டுக வென்று பொதுவாகச் சொல்லாது, ஆன் கன்றை நீ ரூட்டுக. எருமைக் கன்றை நீ ரூட்டுக வெனக் கிளந்து சொல்லுக. மாக் கன்று பல நின்றுழியு மின்ன கன்றுக்கு நீ ரூட்டுக வெனக் கிளந்து கூறுக.

நினையுங்காலை யென்றதனு லாராய்ச்சி யில்லாத விடத்துக் கிளவாது சொல்லுக.

உதா: கன்றூற்றுப் படுத்தப் புன்றலைச் சிறாஅர், எனக் கிளவாது கூறியவாறு காண்க.

56. குறித்தோன் கூற்றந் தெரித்துமொழி கிளவி.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மரபு வழுக் காத்தல் நுதலிற்று.

உரை : தான் ஒரு பொருளைச் சொல்லக் கருதுமேல், அதனை இற் றென்று தெரித்துச் சொல்லுக, என்றவாறு.

வரலாறு: உலற்றற் றிற மின்றிப் பயின்றார் ஒரு சான்றார் மயிர் நீட்டி உலறி நின்றாரைக் கண்டு ஒருவன், எம்பெருமான் உலறி நின்றீரால், என்றக்கால் வாளாதே, உலறினேன், என்னற்க, இது காரணத்தால் உலறினேன், என்க; இது தனக்கு உற்ற துரைத்தது. பிறவும் அன்ன.

இது செப்பு வழுவற்க, என்று காத்தவாறு என்ப ஒரு சிறத்தார்.

இனித் தெரித்துச் சொல்லாக்கால் வழுவே யாயினு மமைக, எனக் காத்தவாறு.

இனி, ஒரு கருத்து :- உலகினுள் ஒப்ப முடிந்த பொருளை ஒருவன் ஒவ்வாமை சொல்லுமே யெனின், இது காரணத்தின் ஒவ்வாமை நோக்கிச் சொல்லினன் என்று தெரித்துச் சொல்லுக, என்றவாறு.

'பல்லோர்தோ டோய்ந்து வருதலாற் பூம்பொய்கை
நல்வய லூரநின் ருர்புலாஅல் — புல்லெருக்க
மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற்
காதற்ருய் நாறு மெமக்கு'

என வரும்.

தெய்வ :

மேலதற் கோர் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : தெரிந்து வேறுபடுக்க வருஞ் சொல்லைக் கிளந் துரைத்தலே யன்றி, குறித்தோன் கூற்றமும் ஆம், எ-று.

உம்மும் ஆமும் எஞ்சி நின்றன.

உ-ம் : நிவந்தோங் குயர்கொடிச் சேவலோய் (பரி. 3:18) என்றவழிச் சொல்லுவான் குறிப்பு மாயவனை நோக்கலிற் கருட னாயிற்று. சேவலங் கொடியோன் காப்ப (குறு. க.) என்றவழிச் சொல்லுவான் குறிப்பு முருகவேளை நோக்குதலிற் கோழி யாயிற்று. பிறவும் அன்ன.

சேனா:

இதன் பொருள்: ஒரு பொருள் வேறுபாடு குறித்தோன், அஃதாற்றன் முதலாயினவற்ருன் விளங்காதாயின், அதனைத் தெரித்துச் சொல்லுக, என்றவாறு.

உதாரணம்:

'அரிதாரச் சாந்தங் கலந்தது போல
வுருகெழத் தோன்றி வருமே — முருகுறழு
மன்பன் மலைப்பெய்த நீர்.'

எனவும்;

'வாரு மதுச்சோலை வண்டுதிர்த்த நாண்மலரா
றுறு மருவி நளிமலை நன்றுடை.'

எனவும் வரும். 'கலந்தது போல வருமே யிலங்கருவி யன்பன் மலைப் பெய்த நீர், எனவும், 'நாறு மருவி நளிமலை நன்றுடை' எனவும், தெரித்து மொழியாதவழிக் குறித்தது விளங்காது வழுப்படுதலின், மரபு வழுக் காத்தவாறு.

வடநூலார் இதனை நேய மென்ப.

'ஊட்டி யன்ன வொண்டளிர்ச் செயலை.' (அகம் 68)
என்புழி, இன்னதனை யென்று தெரித்து மொழியாமையின் வழுவாம் பிறவெனின், உவமை யென்னு மலங்கார மாயினன்றே இன்ன தொன்றனை யெனல் வேண்டுவது. செயலை யந்தளிரினது செய்யாத நிறத்தைச் செய்தது போலக் கூறுங் கருத்தின ராகலிற் பிறிதோ ரலங்கார மாம். அதனான் அது கடாவன் றென்பது.

'படுத்துவைத் தன்ன பாறை மருங்கி
னெடுத்து நிறுத்தன்ன விட்டருஞ் சிறுநெறி
(மலைபடு : 15-16)

என இன்னோ ரன்ன வெல்லாம் அவ் வலங்காரம் பற்றி வந்தன.

'ஒல்லேங் குவளைப் புலாஅன் மகன்மார்பிற்
புல்லெருக்கங் கண்ணி நறிது'

என்புழிக் குவளை புலா றுறுதற்கும் எருக்கங் கண்ணி நறி தாதற்கும் காரணங் கூறாமையின் வழுவாம் பிற வெனின் புதல்வற் பயந்த பூங்குழன் மடந்தை பரத்தையிற் பிரிந்து வந்த கிழவனொடு புலந் துரைக்கின்றா ளாகலிற் குவளை புலா றுறுதற்கு அவன் றவற்றோடு கூடிய அவன் காதல் காரண மென்பதூஉம், எருக்கங் கண்ணி நறி தாதற்கு மகிழ்நன் செய்த துனிகூர் வெப்பம், முகிழ் நகை முகத்தாற் றணிக்கும் புதல்வன் மேல் ஒருகாலைக் கொருகாற் பெருகு மன்பு காரண மென்பதூ உம் பெறப்படுதலின் வழு வாகா தென்பது.

மீக்கூற்ற மென்புழிப் போலக் கூற்றுக் கூற்ற மெனனின்றது.

நச்சி :

இது மரபு வழுக் காக்கின்றது.

இ-ள் : குறித்தோன் கூற்றம் – ஒரு பொருள் வேறுபடக் குறித்தோன் கூற்று ஆற்றல் முதலிய வற்றான் விளங்கா தாயின், தெரித்து மொழி கிளவி — அப் பொருளைத் தெரிவித்துச் சொல்லும் சொல்லும் சொல்லாகக் கூறுக, எ-று.

'அரிதாரச் சாந்தம் கலந்தது போல
உருகெழத் தோன்றி வருமே — முருகுறழும்
அன்பன் மலைப்பெய்த நீர்',

எனத் தெரித்து மொழிக. 'கலந்தது போல் வருமே இலங்கருவி அன்பன் மலைப்பெய்த நீர்', எனத் தெரித்து மொழியாக்கால் வழு வாம்.

'ஊட்டி யன்ன ஒண்டளிர்ச் செயலை', என்றது, ஊட்டாத தனை ஊட்டியது போலக் கூறலின் வேறோர் உவம இலக்கண மாம்.

'பல்லார்தோள் தோய்ந்து வருதலால் * பாய்புனல்
நல்லவய லூரநின் தார்புலால் — புல்லெருக்க
மாசில் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையால்
காதற்றாய் நாறும் எமக்கு'

இதுவும் தெரித்து மொழிந்தது.

* ஒல்லேம் குவளைப் புலாஅல் மகன்மார்பிற்
புல்லெருக்கங் கண்ணி நறிது,

எனத் தெரித்து மொழியா தாயிற்று ஆயினும், தலைவன் தவறும் புதல்வன்மேல் அன்பும் காரணமாகக் கூறலும் வழுவன்று என்றலும் ஒன்று.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், இதுவு மோர் செயற் கைப் பொருண்மேன் மரபு வழுக் காத்த னுதலிற்று.

இ-ள் : உலகத் தொப்ப முடிந்த பொருளை ஒவ்வாமற் சொல்லக் குறித்தவன் சொல்லுஞ் சொல்லாதற்கு ஓர் காரணங் கூறிக் கூறுஞ் சொல்லா யிருக்கு மென்றவாறு.

உ-ம் :—

"பல்லார்தோ டோய்ந்து வருதலாற் பூம்பொய்கை
நல்வய லூரநின் றார்புலால் — புல்லெருக்க
மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற்
காதற்றாய் நாறு மெமக்கு" என.

* பூம்பொய்கை, வே—ம். * புல்லேம், வே—ம்.

இதனுற் சொல்லியது ஓர் இயற்கைப் பொருளை ஒரியற்கை யாக வோர் காரணங் கருதிக் கூறு மிடத்துத் தான் கருதிய காரணத்தினை விளங்கச் சொல்லுக வென ஓர் மர பாராய்ச்சிக் கூறியவாறு.

இதுவும் ஓர் மரபு வழு வமைதி போலும்.

அரசு :

என்பது தா னொரு பொருளைக் கருதிச் சொல்லுமே லதனை யிற் றென்று தெரித்துச் சொல்லுக.

உதா : அரிதாரச் சாந்தங் கலந்தது போல
யுருகெழத் தோன்றி வருமே — முருகுறழு
மன்பன் மலைப்பெய்த நீர்,

எது எனத் தெரித்து மொழிக் கலந்தது போல வருமே யிலங்கருவி யன்பன் மலைப் பெய்த நீர் [1]என்று கூறற்க. அன்றியும்,

'பல்லார்தோ டோய்ந்து வருதலாற் பாய்புனல்
நல்வய லூரநின் ருர்புலால் புல்லெருக்க
மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற்
காதற்ருய் நாறு மெமக்கு

[2]எனவுந் தெரித்து மொழிந்த வாறு. ஒல்லேங் குவளைபுலால் மகன்மார்பிற் புல்லெருக்கங் கண்ணி [3]நறிது, [4]என்று கூறற்க, கூறில் வழு வாம்.

**57.** குடிமை யாண்மை யிளமை மூப்பே
அடிமை வன்மை விருந்தே குழுவே
பெண்மை யரசே மகவே குழவி
தன்மை திரிபெய ருறுப்பின் கிளவி
காதல் சிறப்பே செறற்சொல் விறற்சொலென்
ருவறு மூன்று முளப்படத் தொகைஇ
அன்ன பிறவு மவற்றெடு சிவணி
முன்னத்தி னுணருங் கிளவி யெல்லாம்
உயர்திணை மருங்கி னிலையின வாயினும்
அஃறிணை மருங்கிற் கிளந்தாங் கியலும்.

1. யென்று : திருத்தம் 2. மெனவுந் : திருத்தம் 3. நரிது : திருத்தம்
4. யென்று : திருத்தம்.

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், திணை வழுக் காத்தல் நுதலிற்று.

உரை: குடிமை யாண்மை தொடக்கத்தனவும், பிறவும் அந் நீகரன்ன எல்லாம் உயர்திணை யல்லவும், உயர் திணைப் பொருளைச் சார்ந்து நிகழுங் குணங்களும், உயர் திணைப் பொருளைப் பற்றுக் கோடாக நிகழ்தலின் உயர்திணையைப் போல வழங்கல் வேண்டுமே யெனினும், அஃறிணையைச் சொல்லியாங்குச் சொல்லுக, என்றவாறு.

வரலாறு:

அவர்க்குக் குடிமை நன்று: ... ... ... ... குடிமை
அவர்க்கு ஆண்மை நன்று: ... ... ... ... ஆண்மை
அவர்க்கு இளமை நன்று: ... ... ... ... இளமை
அவர்க்கு மூப்பு நன்று: ... ... ... ... ... மூப்பு
அவர்க்கு அடிமை நன்று: ... ... ... ... அடிமை
அரசு வன்மை நன்று: ... ...... ...... ... வன்மை
விருந்து வந்தது: ... ... ... ... ... ... ... விருந்து
அக் குழு நன்று: ... ... ... ... ... ... ... குழூஉ
பெண்மை அடங்கிற்று: ... ... ... ... ... பெண்மை
அரசு நிலைத்தது: ... ... ... ... ... ... ... அரசு
மகவு நலிந்தது: ... ... ... ... ... ... ... மகவு
குழவி யழுதது: ......... ... ... ... ... ... குழவி

என வரும்.

அலி வந்தது – இது தன்மை திரி பெயர்.
குருடு வந்தது – இஃது உறுப்பின் கிளவி.

'என் காதல் பொலிவாயிற்று;' 'என் யானை வந்தது' இவை முறையே காதலும் சிறப்பும் கெழீஇ வந்தன. காதல் கிள்ளையினையும், யானை மகவினையும் பற்றி வந்தன.

கெழீஇயிலி வந்தது–இது செறற்சொல்.
விறற் சொல் விறலை யுணர்த்துதல்; அது 'பெரு விறல் வந்தது', என வரும்.

பேடி வந்தது, குரிசில் வந்தது என்னுந் தொடக்கத்தனவும் அறிந்து கொள்க.

இதுவும் ஒருசார் ஆசிரியன் உரைப்பது: இனிக் குடிமை யாண்மை என்றித் தொடக்கத்தன ஒருவன், ஒருத்தி, பலர் என்னும் மூன்று பாற்கும் பொதுவாய்ப் பின் முடியுங்கால் அஃறிணை முடிபிற்ருக, என்பது. வன்மை என்பது மூன்று பாற்கும் பொதுவாய் நிற்பது யாண்டுப் பெறுதுமோ எனின், வழக்குப் பெற்றுழிக் கொள்க.

**தெய்வ :**

திணை வழுவமைதி யுணர்த்துதல் நுதலிற்று.

இ—ள் : குடிமை முதலாக எண்ணப்பட்டனவும் அத் தன்மைய பிறவும் அவற்ரேடு பொருந்திக் குறிப்பினன் உணருங் கிளவி யெல்லாம் உயர்திணை மருங்கில் நின்றன வாயினும் அஃறிணை யிடத்துச் சொல்லான் வழங்கப்படும், எ—று.

உயர்திணை மருங்கின் நிலையின வாயினும் என்ற உம்மையான் இவை யெல்லாம் பண்பு குறித்தவழி அஃறிணையாம் என்பதூஉம், பொருள் குறித்தவழி உயர்திணையாம் என்பதூம் கூறியவா ருயிற்று. குடிமையாவது குடியாகிய தன்மை. அது அக் குடியிற் பிறந்தாரைக் குறித்து நின்றது: இக் குடி வாழ்ந்தது; இக் குடி கெட்டது, என்ப. குடிமை என்பது குடி என வருமோ எனின்

மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் ஞென்ஞர்க்
கடிமை புகுத்தி விடும் (குறள். 608)

என்றவழிக் குடி எனப் பொரு ளாகியவாறு கண்டு கொள்க.

ஆண்மை என்பது ஆ ணுகிய தன்மை. அத் தன்மையைக் குறித்து ஒரு ஆண் வந்தது என்ப.

இளமை யென்பது இளையாரைக் குறித்து நிற்கும். இவ் வவை இளமை யின்று, என, இளையாரை இலது, என்னும் பொருள்பட வந்தது.

மூப்பு என்பது முதியாரைக் குறித்து நிற்கும்: இவ் வவை மூப்பு இன்று, என, முதியாரை இலது, என்னும் பொருள்பட வந்தது.

அடிமை என்பது அடிமைத் தொழில் செய்வோர் மேற்று: அவன தடிமை வந்தது, என அப் பொருள் குறித்து நின்றது.

வன்மை யென்பது வலி யாகிய தன்மை: அவனது வலி போயிற்றென அவற்குத் துணையாயினரைக் குறித்து நின்றது.

விருந்து என்பது புதுமை: விருந்து வந்ததெனப் புதியார் வந்தார், என்பது குறித்து நின்றது.

குழூஉ என்பது திரள்: குழூஉப் பிரிந்தது; அவை எழுந்தது; படை திரண்டது, என்ப குழுவிய மாந்தரைக் குறித்து.

பெண்மை என்பது பெண்ணாகிய தன்மை: ஒரு பெண் வந்தது, என்ப.

அரசு என்பது அரசத் தன்மை: அர சிருந்தது, என்ப அரசன் என்பதைக் குறித்து.

மக என்பது மகன், மகள் என்னும் முறைப் பெயர் இரண்டற்கும் பொதுவாகி நிற்பது: மகக் கிடந்தது, என்ப.

குழவி என்பது அப் பொருளின் இளமைகுறித்து நிற்கும்: குழவி அழுதது என்ப.

தன்மை திரி பெயர் என்பது தன் இயல்பிற் றிரிந்த பொருட் பெயர்; அது மருள் என்பது: அதனை மருள் வந்தது, என்ப.

உறுப்பின் கிளவி என்பது உறுப்பினாற் கூறப்படும் சொல். அஃதாவது குருடு முடம் என்பன: குருடு வந்தது; முடம் வந்தது என்ப.

காதல் என்பது காதல்பற்றி நிகழுஞ் சொல். காதற் சொல் சிறப்புச் சொல், என ஒரு சொல் வருவிக்க: என் பாவை வந்தது; என் யானை வந்தது, என்ப. தன் மகளை, ஈங்கிதோர் நல்கூர்ந்தார் செல்வமகள் (கலி. 56) என்றவழி, இது என்பது காதல் பற்றி வந்தது.

சிறப்பு என்பது சிறப்பைப் பற்றி வருஞ் சொல்: கண் போலச் சிறந்ததனை என் கண் வந்தது, என்ப.

செறற்சொல் என்பது செறலினாற் கூறுஞ் சொல்: என் பகை வந்தது; திருவிலி வந்தது, என்ப. ஏஎ இஃதொத்தன் (கலிகாஉ) என்றவழி, இஃதென்பதும் அது.

விறற் சொல்லென்பது வீரியத்தாற் கூறுஞ் சொல்: விறல் வந்தது; சிங்கம் வந்தது; புலி வந்தது, என்ப அவ் வீரியங் குறித்து.

அன்ன பிறவும் என்றதனால், குடும்பம் வாழ்ந்தது; வேந்து சென்றது; ஆள் வந்தது; அமைச்சு வந்தது; தூது வந்தது; ஒற்று வந்தது; நட்பு நன்று, என்பன கொள்க.

அவற்றொடு சிவணி முன்னத்தின் உணருங் கிளவி யெல்லாம் என்றதனால், உலகு வாழ்ந்தது; நாடு வந்தது, ஊர் வந்தது, என்பது அவ்விடத்திலுள்ள மாந்தரைக் குறித்தது. பிறவும் அந் நிகரன வெல்லாம் கொள்க. இவை யெல்லாம் ஆகுபெயர் அன்றோ எனின், ஆகு பெய ராயின் தன் பொருட்கு உரிய பாலான் முடியும். இவை அன்ன வன்றி வேறுபட்டு முடிதலிற் குறிப்பு மொழி யாயின.

**சேனா:**

**இதன் பொருள்:** குடிமை முதலாக விறற்சொ லீறாகச் சொல்லப்பட்ட பதினெட்டு முளப்பட அன்ன பிறவும் அவற் றொடு பொருந்தித் தொக்கு, முன்னத்தி னுணருங் கிளவிக ளெல்லாம், உயர் திணைப் பொருண்மேல் நின்றன வாயினும், அஃறிணைப் பொருளை யுணர்த்தி நின்றவழிப் போல அஃறிணை முடிபே கொள்ளும், என்றவாறு.

உதாரணம்: குடிமை நன்று, குடிமை தீது; ஆண்மை நன்று, ஆண்மை தீது, என வரும். ஒழிந்தனவற்றிற்கும் இவ்வாறு பொருந்தும் வினை தலைப்பெய்க.

தன்மை திரி பெயர்: அலி; இதனோ டொருபொருட் கிளவி யாய் வருவனவுங் கொள்க.

உறுப்பின் கிளவி: குருடு, முடம் என்னுந் தொடக்கத்தன.

காதற் சொல்; பாவை, யானை யென ஒப்புமை கருதாது காதல் பற்றி வருவன.

சிறப்புச் சொல்: கண் போலச் சிறந்தானைக் கண்ணென்றலும், உயிர் போலச் சிறந்தானை உயிரென்றலும் என இவை முதலாயின.

செறற் சொல் செறுதலைப்புலப் படுக்கும் பொறியறை, கெழீஇயிலி யென்னுந் தொடக்கத்தன.

விறற் சொல்: விறலை யுணர்த்தும் பெருவிறல், அருந்திற லென்னுந் தொடக்கத்தன.

தன்மை திரி பெயர் முதலாயின பொருள் வகையான் ஆறுக வடக்கப்பட்டன.

குடிமை, ஆண்மை, இளமை, மூப்பு, அடிமை, வன்மை, பெண்மை, உறுப்பின் கிளவி, சிறப்புச் சொல், விறற் சொல் என்பன உயர்திணைக்கண் ஆகுபெயரா யல்லது வாரா; அல்லன இரு திணைக்கண்ணும் ஒத்த வுரிமைய வெனக் கொள்க.

காதல் பற்றிச் சிறுவனை யானை யென்றலும், ஆகுபெயரா மன்றோ வெனின், யாதானு மோ ரியைபுபற்றி ஒன்றன் பெயரொன்றற் காயது ஆகுபெயராம்; இயைபு கருதாது காதன் முதலாயின வற்றான் யானை யென்றவழி ஆகுபெயருள் அடங்கா வென்பது. சிறுவனை யானை யென்றலும் ஒன்றன் பெயர் ஒன்றற் காத லொப்புமை யான் ஆகுபெய ரென்பாரு முளர்.

சொல்லா னன்றித் திணை வேறுபாடு சொல்லுவான் குறிப் பொடு படுத் துணரப்படுதலின், 'முன்னத்தி னுணருங் கிளவி.' என்றார்.

அஃறிணை முடிபின வென்றது அஃறிணை மருங்கிற் கிளந் தாங் கியலும், எனப் பொதுப்படக் கூறியவதனால், குடிமை நன்று, குடிமை நல்ல; அடிமை நன்று, அடிமை நல்ல என வேற்புழி ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்றலுங் கொள்ளப்படும்.

அன்ன பிறவு மென்றதனான் வேந்து, வேள், குரிசில், அமைச்சு, புரோசு என்னுந் தொடக்கத்தனவுங் கொள்க.

குடிமை முதலியன உயர்திணை யுணர்த்தும்வழி அஃறிணை யான் முடிதல் வழு வாயினும் அமைக வெனத் திணை வழு வமைத்தவாறு.

நச்சி :

இது, திணை வழுக் காக்கின்றது.

இ-ள்: குடிமை, ஆண்மை, இளமை, மூப்பே, அடிமை, வன்மை, விருந்தே, குழுவே, பெண்மை, அரசே, மகவே, குழவி, தன்மை திரி பெயர், உறுப்பின் கிளவி, காதல், சிறப்பே, செறற் சொல், விறற்சொல் என்று ஆவறு மூன்றும் உளப்பட அன்ன பிறவும் அவற்றொடு சிவணித் தொகைஇ — குடிமை முதலாக விறற்சொல் ஈறாகச் சொல்லப்பட்ட அப் பதினெட்டும் உளப்பட அவை போல்வன பிறவும் அவற்றொடு பொருந்தித் தொக்கு, முன்னத்தின் உணரும் கிளவி எல்லாம் – சொல்லுவான் குறிப் பொடு படுத்து உயர்திணைப் பொருளை உணரப்படும் சொற்கள் எல்லாம், உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும் – உயர்திணை இரு பாற்கண்ணும் பெரும்பான்மை நிலைபெற்றன ஆயினும், அஃறிணை மருங்கின் கிளத்தாங்கு இயலும் — அஃறிணைப் பொருளை உணர்த்தி நின்றவழி போல அஃறிணை முடிபே கொள்ளும், எ-று.

'என்னை உயர்திணைப் பொருள் உணர்த்தியவாறு' எனின், இக் குடிமை முதலியன எல்லாம் பெரும்பான்மையும் உயர் திணைக்குப் பண்பே யாய் நின்று அப் பண்பினை உணர்த்தி, அஃறிணையாய் நில்லாது, அப் பண்புச் சொல் தன் பண்பையும் தன்னை உடைய பொருளையும் ஒருங்கு தோற்றுவித்துப் பிரியாது நிற்றலின், உயர்திணைப் பொருளையே உணர்த்திற்றும். இங்ஙனம் நிற்கும் என்று உணர்தல் சொல்லுவான் குறிப்பினான் அன்றி உயர்திணைப் பொருளின் தீர்ந்து இன்னவாறு நிற்கும் என்று வேறோர் ஆற்றான் உணர்தல் இன்று என்றற்கு 'முன்னத்தின் உணரும்' என்றார். இவற்றுள் விரவுப் பெயராய் அஃறிணைப் பண்பை உணர்த்துவன உளவேனும் அவையும் சொல்லுவான் குறிப்பான் ஒருகால் உயர்திணைப் பண்பே உணர்த்தும் என்று கருதி, 'உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்' என்றார். உயர்திணைப் பெயரும் விரவுப் பெயரும் மேல் கூறுபடுத்துதும்.

இனி, குடிமை, ஆண்மை முதலியவற்றை ஆகுபெயர் என்பாரும் உளர். 'குடிமை' என்னும் குணப்பெயர் ஆகுபெய ராய்க் குடிமகனை உணர்த்திற்றேல், 'குடிமை நல்லன் என

உயர்திணையான் முடியும்; அன்றிக் 'குடிமை' எனத் தனக்கு உரிய பண்பை உணர்த்தி நிற்குமேல், பின்னர் அஃறிணை மருங்கின் கிளந்தாங் கியலும், என வேண்டா; தானே அஃறிணை யான் முடியும். ஆதலின் 'ஆகுபெயர்' என்றலும் 'பண்பு உணர்த்தி நிற்கும்' என்றலும் பொருந்தாமை உணர்க. இக் குடிமை முதலியவற்றிற்கு 'நன்று, தீது' என்றும், 'வந்தது, போயிற்று' என்றும் ஏற்ற அஃறிணை வினை கொடுத்து ஒட்டுக.

இனி, இவை உயர்திணைப் பண்பாய் அப் பொருளையும் ஒருங்கு உணர்த்தி நிற்குமாறு :-

குடிமையாவது, குடிப்பிறப்பிற் கேற்ற ஒழுக்கம் அஃது ஒழுக்கம் உடைமை குடிமை (குறள் – 133) என்றதனுன் உணர்க. 'மடிமை குடிமைக்கண் தங்கின்' (குறள் – 608) என உயர்திணை இரு பாலையும் உணர்த்திற்று.

ஆண்மையாவது, ஆளும் தன்மை; அஃது

'ஆயிடை இருபே ராண்மை செய்த பூசல் (குறுந். 43)
என இரு பாலையும் உணர்த்திற்று. இன்னும்

'ஊராண்மைக் கொத்த படிறுடைத்து (கலி 89; 2)
எனவும்,

வேளாண்மை செய்து விருந்தோம்பி வெஞ்சமத்து
வாளாண்மை யானும் வலியராய்த் – தாளாண்மை
எனவும் வரும். இது,

'வேளாண் எதிரும் விருந்தின் கண்ணும்
வாளாண் எதிரும் பிரிவினுனும் (களவியல் சூ. 16)
எனவும்,

உட்குடையாள் ஊராண் இயல்பினள் (நாலடி 384)
எனவும் விகாரமாயும் நிற்கும். இவ் வாண்மை ஆளுந் தன்மையே அன்றி ஆண்பா லாகிய தன்மையும் உணர்த்தும் என்றற்கு

'ஆண்மை சுட்டிய எல்லாப் பெயரும்' (பெயரியல்-சூ. 26) என்று ஆசிரியர் விரவுப் பெயர்க்கண் உடம்பொடு புணர்த்து ஓதினர். இவ் விரண்டு பண்பும்,

'பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோ
டுருவு நிறுத்த காம வாயில்
நிறையே அருளே உணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே (மெ. சூ. 52)

என்னும் மெய்ப்பாட்டியல் சூத்திரத்தால் தலைவற்கும் ஒப்ப உரிய என்றே ஓதுகின்றார்; ஆதலின் ஈண்டும் இரு பாற்கும் ஒப்பவே ஓதினார்.

இனி, ஆண்மையை 'ஆள்வினை' என்றும் உரைப்ப. இவ் வாண்மையும் மேல் கூறும் பெண்மையும் உயர்திணை ஆண் பாலையும் பெண் பாலையும் உணர்த்தா, என்று கருதி

'ஆண்பால் எல்லாம் ஆணெனற் குரிய,'
பெண்பால் எல்லாம் பெண்ணெனற் குரிய
(மரபியல் சூ. 50)

என அஃறிணைக்கே ஓதியவற்றையே,

'பெண்ணும் ஆணும் பிள்ளையும் அவையே
(மரபியல் சூ. 69)

எனக் கிளந்து கூறாதவழி உயர்திணையை உணர்த்தும் என்று மரபியலுள் கூறுவர். அன்றியும்,

'புல்லா வாழ்க்கை' (வாட்கை)
வல்லாண் பக்கமும் (புறத்திணையியல் சூ. 21)

என்றும்,

பாடாண் பகுதி (புறத்திணையியல் சூ. 25)

என்றும் பிறண்டும் 'ஆண்மை' என்னாது 'ஆண்' என்றே சூத்திரம் செய்ததனாலும், ஆண் மக்கள், பெண் மக்கள் என்னும் வழக்கானும் உணர்க.

இனி, ஆண்மையை விரவுப்பெயர் என்றால், முற்காட்டிய உதாரணங்கட்கும் விரவுப் பொருள் அஃறிணைப் பெயர்க்கும் ஏலாமை உணர்க.

'ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த (புறம் 242: 4)

என்பதற்கும் 'ஆளும் தன்மை தோன்ற' என்றே பொருள் உரைத்துக் கொள்க.

இளமையாவது காமச் செவ்வி நிகழ்வதோர் காலம்
'இளமை கழிந்த பின்றை வளமை
காமம் தருதலும் இன்றே (நற். 126: 9, 10)

என உயர்திணை இரு பாலும் உணர்த்திற்று.

மூப்பு, மூப்புடை முதுபதி, என உயர்திணை இரு பாலையும் உணர்த்திற்று.

இளமையும் மூப்பும் பொருள்மேல் நில்லாது பண்பின்மேல் நிற்பின், அஃறிணையையும் உணர்த்தும்.

'அடிமை' என்பது அடிமை புகுத்தி விடும் (குறள் 608) என உயர்திணை இரு பாலும் உணர்த்தும்.

வன்மையாவது ஒரு தொழிலை வல்லுதல். அது, சொல் வன்மை நன்று, என உயர்திணை இரு பாலும் உணர்த்தும். ஈண்டு வன்மை வலி யன்று.

விருந்து, 'விருந்தெதிர் கோடலும்' (சிலப். 16: 73) என உயர்திணை இரு பாலையும் உணர்த்திற்று.

'ஆங்கவை விருந்தாற்றப் பகல்அல்கி (கலி 66: 4) என அஃறிணைக்கும் இது வரும்.

குழு 'குழுவின் பெயர்,' எனவும், ஐம்பெருங் குழுவும் எண்பே ராயமும் (சிலப். 5: 157) எனவும் உயர்திணை இரு பாலும் உணர்த்தும்.

பெண்மையாவது கட்புலன் ஆயதோர் அமைதித் தன்மை. அது, பெண்மை அடுத்த மகளென் கிளவி (பெயரியல் சூ. 9) என்பதனால் உணர்க. இது மகள் என்பது பெண்பால் உணர்த்தப் பெண்மை என்பதும் பெண்பால் உணர்த்துமேல் கூறியது கூறலாம். ஆதலின், ஆசிரியர்க்கு இதுவே பொருளாயிற்று.

'ஆண்மை அடுத்த மகன்' (பெயரியல் சூ. 9) என்பதற்கும் இஃது ஒக்கும். அது,

'பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின் (கி. ஆ. சூ. 4) என்பதனாலும்,

'பிறனியலாள் பெண்மை நயவா தவன் (குறள் 147) என்பதனாலும் உணர்க. இப் பெண்மை, அமைதித் தன்மையே அன்றிப் பெண்பா லாகிய தன்மையும் உணர்த்தும், என்பது கருதி, ஆசிரியர்,

'பெண்மை சுட்டிய எல்லாப் பெயரும்' (பெயரியல் சூ. 26) என விரவுப் பெயர்க்கண் உடம்பொடு புணர்த்து ஓதினர். உயர்திணை ஆண்பாற்கு உரித்தன்றிப் பெண்பாற்கே வரினும் அதுவும் உயர்திணையே ஆதல் நோக்கி,

'உயர்திணை மருங்கின் நிலையின ஆயினும்' என்றார்.

அரசு, 'அரசுபடக் கடந்தட்டு' (கலி. 105: 1) என் உயர்திணை ஆண்பால் உணர்த்திற்று. 'பெண் அரசி ஏந்தினள்' (சீவக. 736) என ஈறு வேறுபவழிப் பெண்பாலும் உணர்த்தும்.

இஃது 'அரசுவா வீழ்ந்த களத்து' (களவழி 35) என அஃறிணைக்கும் வரும்.

இனி, மகவும் குழவியும்,

'குழவியும் மகவும் ஆயிரண் டல்லவை
கிழவ வல்ல மக்கட் கண்ணே' (மரபியல் சூ. 23)

என அஃறிணைக்கே அன்றி உயர்திணை இரு பாற்கும் வரும், என்றார்.

தன்மை திரி பெயர்: அலி.

உறுப்பின் கிளவி, குருடு, முடம்: இவை இரு பாற்கும் ஒக்கும். விரவுப் பெயர்க் காயின், 'முடவன், முடத்தி' என வரும்.

காதல், யானை வந்தது; பாவை வந்தது, என ஒப் பின்றிக் காதல் பற்றி நிற்கும். அது, போர்யானை வந்தீக ஈங்கு (கலி. 86: 10) என வரும்.

தன்னினம் முடித்தலால் 'தேமலர் அங்கண் திருவே புகுதக,' (சீவக. 21: 21) என உவப்பும் கொள்க.

சிறப்பு; கண் போலச் சிறந்தாரைக் 'கண்' என்றலும், உயிர் போலச் சிறந்தாரை உயிர் என்றலு மாம். அஃது,

'ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல்
போல வருமெம் (வருமென்) உயிர்' (கலி. 81: 9, 10)

என வரும்.

செறற் சொல்: செறுதலைப் புலப்படுக்கும் 'பொறியறை, கெழீஇயிலி' : அது, 'போ சீத்தை' (கலி. 94: 22) என்றாற் போல்வது.

தன்னினம் முடித்தலான்,
'ஏவவும் செய்கலான் தான் தேறான் அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய்' (குறள் 848)

என, இழிபும் கொள்க.

விறற் சொல்: விறலை உணர்த்தும் 'பெருவிறல்' (கலி 81: 10) அருந்திறல் போல்வன.

அன்ன பிறவும் என்றதனால், வேந்து, வேள், குரிசில், அமைச்சு, புரோசு (பதிற். 7: பதிகம்) என ஒரு பாற்கு உரிய காட்டலும் ஒன்று. இரு பாற்கு உரியன வந்துழிக் காண்க. இவையெல்லாம் 'பண்பு' என்று விளக்கிய பண்பு வாய்பாட்டால் ஓதினார். இவை உயர்திணைப் பண்புப் பெயராய் அப் பொருளையும் ஒருங்கு உணர்த்தினவேனும் அஃறிணைச் சொற்கொண்டு முடியும் என வழு வமைத்தார்.

கல் :

என்ப தென்னுதலிற்றோ வெனின், திணை வழுக்காத்த னுதலிற்று.

இதன் பொருள்:- குடிமை யென்னுஞ் சொல்லும், ஆண்மை யென்னுஞ் சொல்லும், இளமை யென்னுஞ் சொல்லும், மூப் பென்னுஞ் சொல்லும், அடிமை யென்னுஞ் சொல்லும், வன்மை யென்னுஞ் சொல்லும், விருந் தென்னுஞ் சொல்லும், குழு வென்னுஞ் சொல்லும், பெண்மை யென்னுஞ் சொல்லும் [1]அர சென்னுஞ் சொல்லும், மக வென்னுஞ் சொல்லும், குழவி யென்னுஞ் சொல்லும், தன்மை திரிந்ததனாற் பெற்ற பெயர்ச் சொல்லும், உறுப்பிற் பெயர்ச் சொல்லும், காத லென்னுஞ் சொல்லும், சிறப்பித்துச் சொல்லுஞ் சொல்லும், செறுத்துச் சொல்லுஞ் சொல்லும், [2]விற லென்னுஞ் சொல்லும், என்று சொல்லப்பட்ட பதினெட்டுச் சொல்லும் உட்பட வந்த [3]தன்மையனவும் பிறவும் அவற்றொடு கூடித் தொக்கு [4]இவ் வகை யாகிய குறிப்பினான் உணரப்படுஞ் சொற்க ளெல்லாம் உயர்திணை யிடத்தே நிலைபெற்றன வாயினும், அஃறிணை யிடத்துச் சொல்லுமாறு போலச் சொல்லப்பட்டு நடக்கும், என்றவாறு.

1. [ஆ] அ) ர 2. வி [ர] (ற) 3. (தன்மைய [ன்] (னவும்) 4. [வி] (இவ்)

உதாகரணம் :-

இவற்குக் குடிமை நன்று, தீது; ஆண்மை நன்று, தீது; இளமை நன்று, தீது; மூப்பு நன்று, தீது; அடிமை நன்று, தீது; வன்மை நன்று, தீது; விருந்து வந்தது, போயிற்று; குழு நன்று, பிரிந்தது; பெண்மை நன்று, தீது.

இவற்கு என்பதை ஏற்புழி யொட்டிக் கொள்க. அரசு வந்தது, போயிற்று; [1] மக நன்று, தீது; குழவி எழுந்தது, கிடந்தது.

தன்மை திரிபெயர்:- [2] அலி வந்தது, போயிற்று.

உறுப்பின் கிளவி :- குருடு வந்தது, போயிற்று; கூன் வந்தது, போயிற்று;

[சிறப்பு] காதல் :- என் யானை வந்தது, போயிற்று; என் பாவை வந்தது, போயிற்று.

சிறப்பு: கண் போலச் சிறந்தாரைக் கண் ணென்றலும், உயிர் போலச் சிறந்தாரை உயி ரென்றலு மாம். ஆதலின், அஃது,

"ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல் போல வருமெம் முயிர்"; என் உயிர் வந்தது, போயிற்று; என் கண் வந்தது போயிற்று, எனவும் வரும்.

செறற்சொல் : கெழீஇயிலி வந்தது, போயிற்று; [என் காதல் வந்தது, போயிற்று,] [3] பொறியறை வந்தது, போயிற்று.

விறற்சொல்: பெருவிறல் வந்தது, போயிற்று, என வரும்.

'அன்ன பிறவும்' என்றதனாற் பேடி வந்தது; பேடிகள் வந்தன; வேந்து வந்தது; வேள் வந்தது; குரிசில் (வந்தது); ஒரு கூற்றம் வந்தது; புரோசு வந்தது; உலகு வந்தது, என்னுந் [4] தொடக்கத்தனவுங் கொள்க.

இவற்குக் குடிமை நன்று, என்றதன் பொருள், [5] இவன் குடிமை [6] நல்லன், என்னும் பொருண்மையாகக் கொள்க. பிறவும் இவ்வாறே உயர்திணையாக வுணர்க. குடிமை யென்பது குடியாண்மை யெனவும், ஆண்மை யென்பது ஆண்மகனெனவும், இளமை யென்பது இளவல் எனவும், மூப் பென்பது

1. மகன்: திருத்தம் 2. [ஆ] (அ) லி 3. பொரி: திருத்தம்
4. தொடக்கத் [தன்] தன(வு)ங் 5. இவ [ர்குக்] (ன்) 6. [கன ](ந)ல்லன்

முதுமை யெனவும், அடிமை யென்பது அடி யெனவும், வன்மை யென்பது வலி யெனவும், விருந்தென்பது புதுமை எனவும், குழு வென்பது கூட்டம் எனவும், திரள் [1] எனவும், ஆய மெனவும், அவை யெனவும், பெண்மை யென்பது பெண் ணெனவும், குழவி யென்பது பிள்ளை யெனவும், மதலை யெனவும், பிறவும் வாய்பா டுற்றமை யறிக.

இவற்றுள், ஆண்மை, பெண்மை யென்றாற் போல்வன விரவுப் பெயராய் நிற்கும். குடிமை, அடிமை, அர சென்றாற் போல்வன உயர்திணைப் பெயராய் நிற்கும். இவ் விகற்பமும் அறிந்து கொள்க.

இக் குடிமை முதலியன வெல்லாம் உயர்திணைப் பண் பாகலான் அப் பண்புச் சொற் றன் பொருண்மேல் ஒருஞான்றும் நில்லாது தன்னையே யுடைய பொருண்மேலே தன் பொருளுந் தோன்றிப் பிரியாது நின்றமையின் உயர்திணை யாயிற்று, என்பது.

[2] அவற்றிற் கடி பண் பென்பது போதல் வேண்டிக் குடிமை யாண்மை, எனப் பண்பு வாய்பாடு படுத்துக் [3] கூறினார் போலும்.

தன் பொருண்மேல் நில்லாது, என்றது என்னை? இளமை மூப்பு [4] என்றாற் போல்வன, அவற்றிற்கு அப் பண்பு தன் மேலும் வழக் குண்டா லெனின், அவ்வாறு வருவனவுஞ் சிறுபான்மை யுளவேனும் அடிமை, அரசு [5] மக, குருடு, கூன் என்றாற் போல்வன பொருண்மே லன்றிப் பண்பின்மேல் வழங்க லின்மையின் அவற்றிற் கெல்லாம் முன் கூறியதே நினை வென்பது.

இனி, அவை யெல்லாம் பண்பின்மேல் எனவும், பண்பு கொள வருத லென்னும் ஆகுபெயராற் பொருண்மேலே நின்றன வெனவும் அவற்றுக்கண் ணது ஈண் டாராய்ச்சி யெனவும் அவற்றுப் பண்பு பொருண்மேல் வழக் கில்லனவற்றை இறந்த வழக் கென்று கூறியும் வரும். பிறவாறு கூறுவாரு முளர். அதுவும் அறிந்து கொள்க.

---

1. எ[ன்பது] (னவும்) 2. அ [வையற்று] (வற்றிற்)க்கடி 3. கூறினு [ன்] (ர்)
4. என்றார் போல்வன அவற்றிற்கு : திருத்தம். 5. [மக்]:. திருத்தம்

இதனாற் சொல்லியது பண்பு நிமித்தமாகப் பொருணிகழுஞ் சொற்கள் பலவுந் தம் பொருட்கேற்ப உயர்திணையாய் முடியாது சொற்கேற்றவாற்றான் அஃறிணையின் முடிவன கண்டு அதனை யீண்டு அமைத்தவாறெனவுணர்க.

அரசு:

என்பது குடிமை முதல் விறற் சொல் லீறாகச் சொல்லப் பட்ட பதினெட்டு முட்பட வவை போல்வன பிறவு மவற்றொடு தொக்குக் குறிப்பினா னுயர்திணைப் பொருளை யுணர்த்துஞ் சொற்களெல்லா முயர்திணை முப் பாற்கண்ணு நிலைபெற்றன வாயினு மஃறிணைப் பொருளை யுணர்த்தி நின்றுழிப் போல வஃறிணை முடிபே கொள்ளும்.

உதா: இவர்க்குக் குடிமை நன்று, குடிமை தீது. † இவர்க் கென்பதனை யாண்டு மொட்டிக் கொள்க: ஆண்மை நன்று, தீது; இளமை நன்று, தீது; மூப்பு நன்று, தீது; * அடுமை நன்று, தீது; [1]வன்மை நன்று, தீது; விருந்து வந்தது, போயிற்று; குழு நன்று; குழு பிரிந்தது; பெண்மை நன்று, தீது; அரசு வந்தது, போயிற்று; மக நன்று, தீது; குழவி யழுதது, கிடந்தது; இனித் தன்மைத் திரி பெயர்; அலி வந்தது, போயிற்று; இனி யுறுப்பின் கிளவி: குருடு வந்தது, போயிற்று; கூன் வந்தது, போயிற்று; இனிக் காதல் கிளவி: என் காதல் வந்தது, போயிற்று; இனி சிறப்பு: என் யானை வந்தது, போயிற்று; பாவை வந்தது, போயிற்று; இனி செறற் சொல்: கெழியிலி வந்தது, போயிற்று; இனி [2]விறல் சொல்: பெரு [3]விறல் வந்தது, போயிற்று, என வரு மிவை உயர்திணை யாயினவா றென்னை? குடிமை யென்ற விடத்து ஒருவன் மேலானு மொருத்தி மேலானும் பலர் மேலானு நிற்கும். ஒழிந்தனவு மிவ்வாறே காண்க. இனி யன்ன பிறவு மென்றதனால் பேடி வந்தது; வேந்து வந்தது; வேள் வந்தது; குருசில் வந்தது; பொறியறை வந்தது; புரோசு வந்தது; உலகு வந்தது, [4]எனவுங் கொள்க.

---

* அடுமை யென்பதிவர் பாடம் போலும்.

1. வண்மை: திருத்தம் 2. [விரதி] (விறல்) 3. விறலை: திருத்தம்
4. யெனவுங்: திருத்தம். † இதற்: திருத்தம்.

58. கால முலக முயிரே யுடம்பே
பால்வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்
ஆயீ ரைந்தொடு பிறவு மன்ன
ஆவயின் வரூஉங் கிளவி யெல்லாம்
பால்பிரிந் திசையா வுயர்திணை மேன.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் உயர் திணையான் முடியாத அஃறிணையான் முடியும் என்பது உணர்த் துதல் நுதலிற்று.

உரை : காலம், உலகம் என் றித் தொடக்கத்தனவும் உயர்திணை யெனினும் உயர்திணைப் பால் பிரிந்து இசையா, அஃறிணையான் இசைக்கும், என்றவாறு.

வரலாறு:

இவற்குக் காலம் ஆயிற்று ......... காலம்
உலகம் பசித்தது ..................... உலகம்
உயிர் போயிற்று ..................... உயிர்
உடம்பு நன்று... ..................... உடம்பு
* இவற்குத் தெய்வம் ஆயிற்று ...... தெய்வம்
இவ் வினை நன்று ..................... வினை
இவனைப் பூதம் புடைத்தது......... பூதம்
ஞாயிறு எழுந்தது...................... ஞாயிறு
திங்கள் எழுந்தது...................... திங்கள்
சொல் நன்று............................ சொல்

என வரும்.

'பிறவும் என்றதனால்', வெள்ளி எழுந்தது; செவ்வாய் எழுந்தது, என்பன கொள்க.

இச் சூத்திரந் தெய்வஞ் சுட்டிய பொருள் அஃறிணையான் முடி பேற்றல் கூறினர் என்ப ஒரு திறத்தார். அற் றன்று, ஈண்டுத் தெய்வமும் உள, மக்களும் உளர். இனி, மேற் சூத்திரம் முன்னர்த் தாம் உணரப்படும் என்றவாறு கூறினர்; இச் சூத்திரம் உயர்திணைப் பொருளே அஃறிணை முடிபு ஏற்பனவற் றிற்குக் கூறினர் என்பது. — உலகம் என்பது உலகத்தார் மேற்று; உடம்பு என்பது உடம் புடையார் மேற்று, என்பது.

* 'இவற்குப் பால் ஆயிற்று' எனவுமாம்.

தெய்வ :

உயர்திணைப் பொருட்கண் எஞ்சியது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: காலம் முதலாகச் சொல்லப்பட்டனவும் அத் தன்மைய பிறவு மாகிய பொருட்கண் வரும் சொல் லெல்லாம் உயர்திணை யிடத்தன; ஆண்டுப் பால் பிரிந் திசையா, எ-று.

காலம் என்பது முன்னும் பின்னும் நடுவு மாகி என்றும் உள்ள தோர் பொருள். உலகம் என்பது மேலும் கீழும் நடுவு மாகி எல்லா வுயிரும் தோற்றுதற்கு இட மாகிய பொருள். உயிர் என்பது சீவன். உடம்பு என்பது மனம், புத்தி, ஆங்காரமும் பூத தன்மாத்திரையு மாகி வினையினாற் கட்டுப்பட்டு எல்லாப் பிறப்பிற்கும் உள்ளாகி நிற்ப தோர் நுண்ணிய உடம்பு. இதனை மூலப் பகுதி எனினும் ஆம். பால் வரை தெய்வம் என்பது ஆணும் பெண்ணும் அலியு மாகிய நிலைமையை வரைந்து நிற்கும் பரம்பொருள். வினை யென்பது ஊழ். பூதம் என்பது நிலம், நீர், தீ, வளி, ஆகாயம் ஆகிய ஐம் பெரும் பூதம். ஞாயிறு என்பது தீத் திரளாய் உலகு விளக்குவது. திங்க ளென்பது நீர்த் திரளாய் உலகிற்கு அருள் செய்வது.

சொல் என்பது எழுத்தினான் இயன்று பொருள் உணர்வது. அச் சொல்லினான் இயன்ற மந்திரம் விடம் முதலாயின தீர்த்த லின் தெய்வம் ஆயிற்று. இந் நூல் செய்தான் [1]வைதிக முனிவன்; ஆதலின் சொல் லென்பது வேதம் என்று கொள்ளப் படும். பிறவும் என்றதனால் வியாழம், வெள்ளி முதலாயின கோண்மீனும், பரணி, கார்த்திகை முதலாயின நாண்மீனும், தாரகையும், பூதம், பேய் எனப் பா லுணர நில்லாத தெய்வப் பொருண்மையும் கொள்ளப்படும். உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

சேன :

இதன் பொருள்: கால முதலாகச்சொல்லப்பட்ட பத்தும் அத் தன்மைய பிறவு மாகிய அப் பகுதிக்கண் வருஞ் சொல் லெல்லாம், உயர்திணைச் சொல் லாயினும், உயர்திணைக்கட் பால் . பிரிந் திசையா, அஃறிணைப் பாலா யிசைக்கும், என்றவாறு.

---

1. பி. பே. வைதிரு முனிவன் (இ. எடு)

உதாரணம்: இவற்குக் கால மாயிற்று; உலகம் பசித்தது; உயிர் போயிற்று; உடம்பு நுணுகிற்று; தெய்வஞ் செய்தது; வினை விளைந்தது; பூதம் புடைத்தது; ஞாயிறு பட்டது; திங்களெழுந்தது; சொன் னன்று, என வரும்.

பிறவு மென்பதனால், பொழுது நன்று; யாக்கை தீது; விதி வலிது; கனலி கடுகிற்று; மதி நிறைந்தது; வெள்ளி யெழுந்தது; வியாழ நன்று, என்பன போல்வன கொள்க.

கால மென்றது காலக் கடவுளை. உலக மென்றது ஈண்டு மக்கட் டொகுதியை.

உயிரே யுடம்பே யெனப் பொது வகையாற் கூறினுரேனும், மக்க ளுயிரு முடம்புமே கொள்ளப்படும். என்னை? உயர்திணை முடிபு கொள்ளா வென விலக்கப்படுவன அவையே யாகலி னென்பது.

அஃறிணை யென்மனு ரவரல பிறவே, என்புழி அஃறிணையா யடங்கி உயர்திணை முடி பெய்தாமையின், அவையும் விலக்கற் பாட்டிற் கேலா வெனின், அற்றன்று; மக்கட் சுட் டுடைமை யான் அவை உயர்திணையே யா மென்பது. யாதோ மக்கட் சுட் டுடையவா றெனின், அறஞ் செய்து துறக்கம் புக்கான், எனவும் உயிர் நீத் தொரு மகன் கிடந்தான், எனவும், உயிரு முடம்பும் அவரின் வே றன்றி அவராக வுணரப்பட்டு உயர்திணைக் கேற்ற முடிபு கொண்டு நிற்றலின் மக்கட் சுட் டுடைய வென்பது. ஓ ராவை எம் மன்னை வந்தா ளென்றும், ஓ ரெருத்தை எந்தை வந்தானென்றும் உயர்திணை வாய்பாட்டாற் கூறியவாறு போல, உயிரு முடம்பும் அவ்வாறு கூறப்பட்டன வென்று கொள் ளாமோ வெனின், கொள்ளாம்: அவற்றுன் வரும் பய னேக்கிக் காதலால் எம் மன்னை, எந்தை யென்றுன் ஆண்டு; ஈண்டுக் காதன் முதலாயின வின்மையின் மக்கட் சுட் டுடைய வென்பது.

பால் வரை தெய்வ மென்பது எல்லார்க்கு மின்பத் துன்பத் திற்குக் காரண மாகிய இரு வினையையும் வகுப்பது; வினை யென்பது அறத் தெய்வம். சொல் லென்பது நா மகளாகிய தெய்வம்.

அஃதேல், குடிமை யாண்மை யென்பனவற்ருேடு இவற் றிடை வேற்றுமை யென்னை யெனின், அவை இருதிணைப் பொருட்கண் ணும் சேறன் மாலைய; இவை அன்ன வல்ல வென்பது.

உலக மென்பது இடத்தையும் ஆகுபெயரான் இடத்து நிகழ் பொருளாகிய மக்கட் டொகுதியையு முணர்த்து மாகலான். இரு திணைக்கண்ணுஞ் சென்ற தன்றோ வெனின், அற்றன்று: வடநூலுள் உலக மென்பது இரு பொருட்கு முரித்தாக ஓதப் பட்டமையின், மக்கட் டொகுதியை யுணர்த்தும்வழியும் உரிய பெயரே யாகலின் ஆகுபெய ரன்று; அதனால் ஒரு சொல், இரு பொருட்கண்ணுஞ் சென்ற தெனப்படாது இரு பொருட்கு முரிமையான் இரண்டு சொல் லெனவே படு மென்பது. வேறு பொரு ளுணர்த்தலின் வேறு சொல் லாதலே துணி வாயினும், பலபொரு ளொருசொ லென்புழி எழுத் தொப்புமை பற்றி ஒரு சொல் லென்றார்.

மே லென்பது ஏழாம் வேற்றுமைப் பொரு ளுணர்த்துவ தோ ரிடைச்சொல் லாகலின், ஈறு திரிந்து மேன வென நின்றது.

இதுவுந் திணை வழு வமைதி.

நச்சி :

இதுவும் திணை வழுக் காக்கின்றது.

இ-ள் : காலம் உலகம் உயிரே உடம்பே பால் வரை தெய்வம் வினையே பூதம் ஞாயிறு திங்கள் சொல் என வருஉம் ஆயீரைந்தொடு அன்ன பிறவும் — காலம் முதலாகச் சொல் ஈறாகச் சொல்லப்பட்ட அப் பத்தும் அத் தன்மையன பிறவு மாகிய, ஆவயின் வருஉம் கிளவி எல்லாம் — அவ் வுயர்திணைக் கண் வரும் சொல் எல்லாம், உயர்திணை மேன பால் பிரிந்து இசையா – உயர்திணைச் சொல் ஆயினும் உயர்திணைக்கண் பால் பிரிந்து இசையா; அஃறிணைப் பாலவாய் இசைக்கும் (எ-று).

இச் சூத்திரத்துக் கூறியவற்றுள் உலகமும் உயிரும் உடம்பும் ஒழிந்தன எல்லாம் தெய்வத்தையே [1] உணர்த்தின ஆதலின், 'தெய்வம்' என்பதனை,

'தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவியும்'
(கிளவியாக்கம் சூ. 4)

என்பதனான் உயர்திணை என்பது பெற்றும். இவை எல்லாம் 'தெய்வம்' என்னும் உயர்திணைப் பொருளை [2] உணர்த்தின வேனும் 'தெய்வம்' என்னும் சொல் அஃறிணை வாசகம் ஆதலின்

1. உணர்த்தின (உணர்த்திற்று)
2. உணர்த்தினவேனும் (உணர்த்திற்றேனும்)

அதற்கு ஏற்ப அஃறிணை முடிபே கொள்ளும் என்றார்.

இச் சொற்கள், கூறுகின்ற பொழுதே தத்தம் உயர்திணைப் பாற் பொருளே தோற்றுவித்து நிற்றலின், ஆகுபெயர் அன்மை உணர்க.

'இவற்குக் காலம் ஆயிற்று,' என்றது காலக் கடவுளை. 'உலகம் பசித்தது' என்றது உலகத்தாரை. 'உயிர் போயிற்று; உடம்பு நுணுகிற்று,' இவை உயர்திணை முடிபு கொள்ளா என விலக்குதலின் ஈண்டு உயர்திணைக்கே உரிய ஆயின. என்னை?

'அறஞ் செய்து துறக்கம் புக்கான்'.
'உயிர் நீத்து ஒரு மகன் கிடந்தான்,'

என உயிரும் உடம்பும் வரின், வேறன்றி அவராக உணரப்பட்டு உயர்திணைக்கு ஏற்ற முடிபு கோடலின் மக்களே ஆயின. இவை இங்ஙனம் உணர்த்தலின், ஆகுபெயர் *அல்ல.

'தெய்வம் செய்தது' — இதனைப் பால் வரை தெய்வம் என்றார், இன்ப துன்பத்திற்குக் காரணமாகிய இருவினையும் வகுத்தலின்.

'வினை விளைந்தது' — இஃது இருவினைத் தெய்வம்.

'பூதம் புடைத்தது; (சிலப் 5: 134) ஞாயிறு பட்டது, திங்கள் எழுந்தது'.

'சொல் நன்று' — இது நாமகளாகிய தெய்வம்.

'பிறவும்' என்றதனுல், பொழுது நன்று; யாக்கை தீது; விதி வலிது; கனவி கடுகிற்று; மதி நிறைந்தது; வெள்ளி எழுந்தது; வியாழம் நன்று என வரும்.

'காலம், உலகம்' என்பன, வடசொல் *அல்ல, ஆசிரியர் வடசொற்களை எடுத்தோதி இலக்கணம் கூறார், ஆகலின். 'உலகம்' என்பது மக்கள் தொகுதியை உணர்த்தியவழி உயர்திணையாயும் இடத்தை உணர்த்தியவழி அஃறிணையாயும் வருதலின், ஒரு சொல் இரு பொருட்கண்ணும் சென்றது எனப்படாது, இரு சொல் எனவே படும். அங்ஙனம் மக்கள் தொகுதியை உணர்த்துங்கால் உரிப்பெயராயே உணர்த்திற்று;

* அன்று : திருத்தம்.

ஆகுபெயர் அன்று. இங்ஙனம் வருவனவற்றைப் பலகால் எடுத்து ஓதாமை இலேசாகக் கருதி,

'ஒருசொற் பலபொருட் குரிமை தோன்றினும்'
(உரியியல் சூ. 1)

என எழுத்து ஒப்புமை பற்றி ஒரு சொல், என்றார். 'உலோகம்' என்றது வடமொழித் திரிபு.

**கல் :**

என்பது என் நுதலிற்றோ வெனின், இதுவுந் திணை வழுக் காத்தல் நுதலிற்று.

இ-ள் : கால மென்னுஞ் சொல்லும் உலக மென்னுஞ் சொல்லும் உயிர் என்னுஞ் சொல்லும் உடம் பென்னுஞ் சொல்லும் இரு வினை யாவர்க்கும் வரைந் தூட்டுந் தெய்வத்தின் மேற் 'பால்' என வருஞ் சொல்லும் வினை யென்னுஞ் சொல்லும் பூத மென்னுஞ் சொல்லும் ஞாயி றென்னுஞ் சொல்லும் திங்க ளென்னுஞ் சொல்லும் சொல் லென்னுஞ் சொல்லும் [1] என்று வருகிற பத்துச் சொல்லினோடு பிறவும் அத் தன்மை யாகிய உயர்திணைப் பொருள் போல் வருஞ் சொற்கள் எல்லாம் உயர் திணை யிடத்துப் பா லுணர்த்துஞ் சொல்லாற் பிரித்துச் சொல்லப்படா; அஃறிணைப் பாலாற் சொல்லப்படும், என்ற வாறு.

உ-ம் : [2] இவற்குக் கால மாயிற்று; உலகு பசித்தது; உயிர் போயிற்று; உடம்பு [3] நுணுகிற்று. இவர்க்குப் பா லாயிற்று. வினை நன்று; வினை தீது; இவனை பூதம் புடைத்தது. ஞாயி [4] றெழுந்தது, பட்டது; திங்கள் எழுந்தது, பட்டது; சொல் நன்று, தீது. பிறவும் என்றதனால் செவ்வாய் எழுந்தது, பட்டது; வெள்ளி எழுந்தது, பட்டது, என வரும்.

என்னை இவை உயர்திணை யாயினவாறு? [5] எனின், கால மென்றது காலனை; உலக மென்றது உலகத்தாரை; உயிர் கிழவனை; உடம் பென்றது [6] அஃது டையானை; பால் என்பது இன்ப துன்பங்களை வகுப்ப தோர் தெய்வம்; வினை யென்பது

1. என்று [சொல்] 2. இவற்[க்]கு 3. [னு](நு)ணுகிற்று
4. ெ[ர](ற)ழுந்தது 5. [என்னையெனின்] எனின் 6. (அஃது)டையானை

வினைத் தெய்வம்; பூதமென்பது தெய்வப் பகுதி; ஞாயிறு, திங்கள் என்பன தெய்வம்; சொல்லென்பது சொன்மடந்தையை.

ஆயின [1]இவற்றை [2]மேலவற்றோடொன்றாக வைத்த தென்னையெனின், அவையெல்லாம் பண்படியாகப் பொருண்மேல் நிகழ்தலின் அவற்றை முன்னத்தி னுணருங்கிளவி யெனவே றொருவகையாற் கிளவாது வரும் பெயரினையும் வேறொருவகையாக்கிக் [3]கூறினார் என வுணர்க.

இவற்றுள், பூதம் ஞாயிறு திங்கள் என்பன வொழிந்தல்லன வெல்லாம் ஆகுபெயரான் அஃறிணைப் பெயர் உயர்திணைமேல் நின்றன வென வுணர்க.

இதனாற் சொல்லியது இவையும் சில [4]வுயர்திணை யாதற் பொருட் டாகுபெயராய், அதற் கேற்ப முடியாது சொற் கேற்ப முடிவதனைக் கண்டு அதனை யமைத்தவாறாயிற்று.

அரசு:

என்பது, கால முதலாகச் சொல் லீறாகச் சொல்லப்பட்ட பத்து மத் தன்மையன பிறவு மாகிய சொல்லெல்லா முயர்திணையே யெனினு முயர்திணை யிடத்துப் பால் பிரிந் திசையா, வஃறிணைக்க ணிசைக்கும்.

உதா: இவர்க்குக் கால மாயிற்று; வினை நன்று, தீது; இவனைப் பூதம் புடைத்தது; ஞாயி றெழுந்தது, பட்டது; திங்க ளெழுந்தது, பட்டது, சொ னன்று, தீது. பிறவுமென்றதனால், வெள்ளி யெழுந்தது, பட்டது; வியாழமெழுந்தது, பட்டது; செவ்வா யெழுந்தது, பட்டது, என்பன வெல்லாங் கொள்க. மேற் சூத்திரத்திற் குள்ளன பிறவுமென்றதனால் ஆங்கு மீண்டுஞ் சூத்திரஞ் சொல்லிய தென்னையெனின், மேற் சூத்திரத்திற் சொல்லின வெல்லா மக்கண் மேலன வென்பது. கால மென்பது கூற்றத்தை. உலகு யுலகமுடையான். உயி ரென்பதனையுந் தெய்வ மென்ப. உடம்பு ஐம்

1. [யி](இ)வற்றை 2. மே[ல்](ல)வற் 3. கூறின[ன்](ர்)
4. வுயர்திணைப் போதப் பொருட்டாகு (பெயராய்) : திருத்தம்.

பெரும் பூதங்களி னியன்றமையிற் றெய்வ மென்ப. பால்வரை தெய்வம் எல்லார்க்கு மின்ப துன்பங்களை யவரவர் விதிவழியிற் பயப்ப தோர் தெய்வம். வினை வினையைப் படைப்பானை யன்றி யிரு வினையையும் தெய்வ மென்ப. பூத மென்ப தோர் தெய்வம். ஞாயிறு திங்க ளென்பனவு மவை. சொல், சொல்லின் கிழத்தியை யென யிவ்வாறு கொள்க.

இனி மூன்று மோர் கருத்து: மே லுயர்திணை யல்லாதன உயர்திணையா யஃறிணையான் முடிபு பெற்றமை காட்டினார். இதனு லுயர்திணையான தேவரையு மக்களையு முள்ளடக்கி யஃறிணையான் முடி பெய்தினமை காட்டினு ரென்க. உலகமு முயிரு முடம்பு மக்கட் பண்பு; அல்லன தெய்வமெனக் கொள்க. பால் பிரிந் திசையா வுயர்திணை மேன - யுயர்திணைமேற் பால் பிரிந் திசையா வென்க.

59. நின்றாங் கிசைத்த லிவணியல் பின்றே.

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், 'குடிமை யாண்மை' (கிளவி 57) என்பதற்குப் புறனடை கூறுதல் நுதலிற்று.

உரை: இச் சொல்லப்பட்டவற்றுக்கு நின்றாங்கு இசைத்தல் இயல்பின்று, என்பது.

எனவே, மேற் சூத்திரத்திற் சொல்லப்பட்டவற்றுக்கு நின்றாங்கு இசைத்தல் இயல்பு மாம், என்பது.

வரலாறு: குடிமை நல்லன்; வேந்து செங்கோலன், என வரும்.

தெய்வ:

மேலதற் கோர் புறநடை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேல் உயர்திணைக்கண் பால்பிரிந் திசையா என்று ஓதப்பட்டன வெல்லாம் அத் திணை யுணர நின்றனவேனும் அவ்வாறு உயர்திணை யுணர நின்று ஒலித்தல் இவ்விடத்து வழக்கின்று, எ-று. இவ்விடம் என்றது உயர்திணையை.

சேனா:

இதன் பொருள்: ஈறு திரியாது நின்றாங்கு நின்று உயர் திணையா யிசைத்தல் ஈண் டியல்பின்று, என்றவாறு.

ஈண்டென்றது கால முதலாகிய சொற்களை. அவை இடையீடின்றி மேற் சொல்லப்பட்டு நிற்றலின் 'இவண்' என்றூர்.

இவ ணியல் பின்றெனவே, குடிமை ஆண்மை முதலாயின சொல்லின்கண், குடிமை நல்லன்; வேந்து செங்கோலன், என நின்றாங்கு நின்று உயர்திணையா யிசைத்தல் இயல்புடைத் தென்பதாம்.

நச்சி :

இது, 'குடிமை ஆண்மை'த் (கிளவியாக்கம் சூ. 57) தொடக்கத்திற்கு ஓர் புறனடை.

இ-ள்: நின்றாங்கு இசைத்தல் – ஈறு திரியாது நின்றாங்கு நின்று உயர்திணையாய் இசைத்தல், இவண் இயல்பு இன்று– காலம் முதலிய சொற்களிடத்து இயல்பு இல்லை, (எ–று.)

எனவே, 'குடிமை, ஆண்மை' முதலிய சொற்களிடத்து இயல்பு உண்டாம் என்றவாறு. குடிமை நல்லன்; ஆண்மை நல்லன், மூப்புத் தீயன், என ஒட்டுக.

கல் :

என்பதென் னுதலிற்றோ வெனின், 'குடிமை ஆண்மை' என்றதற் கோர் புறனடை யுணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: நின்ற [1]வாய்பாட்டானே நின்று உயர்திணை முடிபு பெறுதல் இக் காலம், உலகம் என்னுந் தொடக்கத்தனவற்றிற் கியல்பன் றெனவே, மேற்கூறிய குடிமை ஆண்மை என்னுந் தொடக்கத்தனவற்றிற்கு இயல் பென்றவாறு.

உதாகரணம்:– குடிமை நல்லன்; வேந்து செங்கோ னல்லன், என வரும். உயர்திணை முடி பிழந்து நின்றனவற்றை யம் முடிபுடைய வென் றெய்துவித்தவாறு.

இம் முடி விலக்கண மாதலின் இதுவே பெரும்பான்மை யாகற்பாற் றெனின், இலக்கணமே யெனினும் வழக்குப் பயிற்சியான் அதுவே பெரும்பான்மை யாயிற் றென வுணர் வது. இச் சொற்கள் ஈறு வேறுபட்டு, குடிமகன் வேந்தன் ஆண்மகன் என நிற்பன உயர்திணை முடிபே முடி பெனக் கொள்க.

1. வாய் [ப்] பாட்டானே.

இதனாற் சொல்லியது மேற்கூறிய இருவகைத் திணை வழுவினையும் ஒருவகைத் தன்மேலும் முடி புடையவாயும், ஒருவகைத் தன்மேன் 'முடி பில்லனவாயும் வருவது கண்டு அவற்றது உண்மையும் இவற்றது இன்மையும் உடன்கொண்டு கூறியவா றாயிற்று.

அரசு :

என்பது ஈறு திரியாது நின்றாங்கு நின்று உயர்திணையாய் இசைத்தல் காலம் உலக முதலிய சொற்களிடத்து இயல்பில்லை யெனவே குடிமை முதலிய சொற்களிடத்து நின்றாங்கு இசைத்த லியல்பாம். இவண் என்பது கால முலக மென்னுஞ் சூத்திரம்.

உதா :— குடிமை நல்லன்; ஆண்மை நல்லன்; இளமை நல்லன்; மூப்புத் தீய னென வொட்டிக் கொள்க. இச் சூத்திரங் குடிமை ஆண்மை யென்னுஞ் சூத்திரத்துக்குப் புறநடை யென் றறிக.

60. இசைத்தலு முரிய வேறிடத் தான

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இது, 'காலம் உலகம்' (கிள. 58) என்பதற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை: வே றிடம் என்பது வேறு வாய்பாடு வேறு வாய்பாட்டாற் சொல்ல இசைக்கும், ஓதிய வாய்பாட்டாற் சொல்ல இசையாது, என்பது.

வரலாறு: காலன் கொண்டான்; உலகத்தார் பசித்தார், என வரும்.

தெய்வ :

மேற் கூறப்பட்ட சொற்கள் பா லுணர வருமாறு உணர்த் துதல் நுதலிற்று. வழு வமைதியும் ஆம். வே றிடம் என்பது அஃறிணையை.

இ-ள்: மேல் பால் பிரிந் திசையா என ஓதப்பட்ட சொற்கள் அஃறிணையாய் இசைத்தலும் உரிய, எ-று. உம்மை

2. முடி [பில்லே] (லன) [ய] (வ)ாயும்.

எச்சவும்மை ஆகலான் அஃறிணைக் குரிய சொல்லான் அன்றி இருதிணைக்கும் பொது வாகிய சொல்லானும் இசைத்தலும் உரிய, எ-று.

உ-ம்: காலம் வந்தது, வரும்; உலகு கிடந்தது; உயிர் போயிற்று; உடம்பு விட்டது; தெய்வம் தந்தது; வினை விளைந்தது; பூதம் செறிந்தது; ஞாயிறு எழுந்தது; திங்கள் எழுந்தது; சொல் பயன் தந்தது; வியாழம் எழுந்தது; வெள்ளி பட்டது; பரணி தோன்றிற்று; பூதம் புடைத்தது; பேய் பிடித்தது; பிறவு மன்ன.

**சேனு:**

இதன் பொருள்: கால முதலாகிய சொல் உயர்திணையா யிசைத்தலு முரிய, ஈறு திரிந்து வாய்பாடு வேறுபட்டவழி என்றவாறு.

காலன் கொண்டான்; உலகர் பசித்தார், என வாய்பாடு வேறுபட்டவழி உயர்திணையாய் இசைத்தவாறு கண்டு கொள்க.

**நச்சி:**

இது காலம் உலகத்திற்கு (கிளவியாக்கம் சூ. 58) ஓர் புறனடை.

இ-ள்: இசைத்தலும் உரிய - காலம் உலகம் முதலிய சொற்களும் உயர்திணையாய் இசைத்தலும் உரிய, வேறு இடத்தான - ஈறு திரிதற்கு ஏற்பன ஈறு திரிந்து வாய்பாடு வேறு பட்ட இடத்து, எ-று.

'காலன் கொண்டான்; உலகர் பசித்தார்' என ஈறு திரிவனவற்றோடு ஒட்டுக.

**கல்:**

என்பது என் னுதலிற்றோ வெனின், காலமும் உலகமும் என்பதற் கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: காலமும் உலகமும் என்னுந் தொடக்கத்தன உயர்திணை முடிபு பெறுதலு முடைய, அவ் வோதிய வாய்பா டொழிய வேறு வாய்பா டாயின விடத்து, எ-று.

உ-ம்: கால மென்பது மகர வீறு; காலன் என்னும் னகர வீருய் நின்றுழிக் காலன் கொண்டான், என முடியும். உலகத் தோர் பசித்தார்; உயிர்க் கிழவன் போயினுன், என்பனவும் அவை.

இதனுற் சொல்லியது மே னின்ருங் கிசைத்த விவணியல் பின்று, என்ற விலக்கு இவண் எனக் காலமு முலகமும் என்னும் வாய்பாட்டினையே நோக்கி விலக்காது அப் பொருண்மேல் வரும் வாய்பாடுக ளெல்லாம் விலக்குவது போலு நோக்கம் பட நின்ற தென்று கொள்ளினுங் கொள்ளற்க வென்று அவை வேறிடத் தாயின் இசைக்கும் எனவுங் கூற வேண்டிக் கூறினுர். என்பது.

அரசு :

என்பது கால முதலிய சொற்க ளுயர்திணையா யிசைத்தலு முரிய வீறு திரிந்து வாய்பாடு வேறுபட்ட விடத்து. வே றிடமாவது ஈறு திரிதல். கால மென்பது மகர வீறு; அது கால னெனத் திரிந்தது. பிறவு மேற்குமாறு திரித்துச் சொல்லுக.

உதா :- காலன் கொண்டான்;* உலகாப்பன்; உயிர்க் கிழவன் போயினு னென வொட்டுக. இச் சூத்திரங்கால முலக மென்பதற்குப் புறநடை.

61. எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்ருே வெனின், 'இசை சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை' (கிளவி. 18) என்னுஞ் சூத்திரத்திற்குப் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

உரை : மேற் 'பண்புகொள் பெயர்க்கொடை' (கிளவி. 18) வழக்கினுள் இனம் பெற்றே நிற்க என்ருன், இனி இன மின் றியும் நிற்கும் வழக்கினுள், என்றவாறு.

வரலாறு: பெருங்கொற்றன், பெருஞ்சாத்தன், என வரும்.

அற்றன்று, அவையும் ஆண்டே யடங்கும்; மற் றென்னை கருதியது எனின், இஃது அருத்தாபத்தி பெற்றது, என்க.

* தெளிவில்லை.

'விதந்த மொழியினம் வேறுஞ் செப்பும்', என்பது பரிமாண சூத்திரம்.

இதுவும் அப் பொருட்டு.

வரலாறு: 'மேலைச் சேரிக் கோழி அலைத்தது', எனக் கீழைச் சேரிக் கோழி அலைப்புண்டமை சொல்லாமையே முடிந்த தாம். 'குடங் கொண்டான் வீழ்ந்தான்', என்றவழிக் குடம் வீழ்ந்தமை சொல்லாமையே முடிந்த தாம்: இந் நிகரன இனஞ் செப்பின. 'செப்பலும் உரித்து', எனவே செப்பாதன, 'ஆ வாழ்க; அந்தணர் வாழ்க', என்றவழி, ஒழிந்தனவும், ஒழிந் தாரும் சாக, என்றவாறு அன்று என்ப தாம்.

தெய்வ:

இது செப்பின்கட் கிடந்த தோர் குறிப்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எடுத்துச் சொல்லப்பட்ட சொல் தனக்கு இன மாகிய பொருளைச் சொல்லுதலும் உரித்து, எ—று.

உம்மையாற் சொல்லாமையும் உரித்து, எ—று.

'தென் சேரிக் கோழி வென்றது' என்றவழி, வட சேரிக் கோழி தோற்றது, என்னும் பொருளும் காட்டி நின்றது: இது இனம் செப்பியது. அந்தணர் வாழ்க, என்றவழி, அரசரும் வணிகரும் கெடுக, என்றவா றன்றி அந்தணரையே குறித்து நின்றது: இது இனம் செப்பாது வந்தது. இன்னும் இச் சூத்திரத்தின்கண் இனம் செப்பலு முரித்து. என்றதனுலே இன மல்லாதன செப்பலு முரித்து, என்று கொள்ளப்படும். அவ்வாறு வருவன ஏற்புழிக் கொள்க. சுமந்தான் வீழ்ந்தான். என்றவழி, சுமவாதவன் வீழ்ந்திலன், என்னும் பொருள்படுதலே யன்றிச் சுமக்கப்பட்டதும் வீழ்ந்த தெனச் செப்பியவாறுங் கண்டு கொள்க. பிறவும் அன்ன.

சேனு:

இதன் பொருள்: இன மாகிய பல பொருட்கண் ஒன்றனை வரங்கிக் கூறியவழி அச் சொற் றன் பொருட் கின மாகிய பிற பொருளைக் குறிப்பா னுணர்த்தலு முரித்து, என்றவாறு.

உம்மை எதிர்மறை யாகலான் உணர்த்தாமையு முரித் தென்பதாம்.

உதாரணம்: அறஞ் செய்தான் றுறக்கம் புகும், எனவும், இழி வறிந் துண்பான்க ணின்ப மெய்தும் (குறள் — 946) எனவும் வரும் இவை சொல்லுவார்க்கு இனப் பொருளியல் புரைக்குங் குறிப் புள்வழி, மறஞ் செய்தான் றுறக்கம் புகான்; கழிபே ரிரையான் இன்ப மெய்தான், என வினஞ் செப்புதலும், அக் குறிப் பில்வழி இனஞ் செப்பாமையுங் கண்டு கொள்க.

எடுத்த பொருளை உணர்த்து மொழியை 'எடுத்த மொழி' என்றார். இன னல் பொருளி னீக்குதற்கு 'இனம்' என்றார்.

அஃதேல், மேற் சேரிக் கோழி யலைத்தது, எனக் கீழ்ச் சேரிக் கோழி யலைப்புண்டது, எனவும், குடங் கொண்டான் வீழ்ந்தான், எனக் குடம் வீழ்ந்தது, எனவும், இவை யினஞ் செப்பு மென்றும், ஆ வாழ்க; அந்தணர் வாழ்க, என்பன இனஞ் செப்பா வென்றும் உரையாசிரியர் கூறினுரா லெனின், அற்றன்று; கீழ்ச் சேரிக் கோழி யலைப்புண்ட லின்றி மேற்சேரிக் கோழி யலைத்த லமையாமையானும், குடம் வீழ்த லின்றிக் குடம் கொண்டான் வீழ்த லமையாமையானும், கீழ்ச் சேரிக் கோழி யலைப்புண்டலும், குடம் வீழ்தலும் சொல்லா னன்றி இன்றியமையாமை யாகிய பொரு ளாற்றலாற் பெறப்படு மாகலான் ஈண்டைக் கெய்தா, இது சொல் லாராய்ச்சி யாகலா னென்பது. இன்னோரன்ன சொல் லாற்றலாற் பெறப்பட்டன வெனின், புகை யுண் டென்றவழி எரி யுண்மை பெறுதலுஞ் சொல் லாற்றலாற் பெறப்பட்டதா மென்பது.

இனி, ஆ வாழ்க; அந்தணர் வாழ்க, என்புழிச் சொல்லுவான் ஒழிந்த விலங்கும் ஒழிந்த மக்களுஞ் சாக வென்னுங் கருத்தின னாயின் இவையு மினஞ் செப்புவன வன்றோ வென்பது. அதனான் அவை போலியுரை என்க.

ஒரு தொடர் ஒரு பொரு ளுணர்த்தி யமையாது வேறொரு பொருளுங் குறித்து நிற்றல் வழு வாயினும் அமைக வென மரபு வழுக் காத்தவாறு.

**நச்சி:**

இது, அருத்தாபத்தி கூறுகின்றது.

இ–ள் : எடுத்த மொழி — இன மாகிய பொருட்கண் ஒன்றை விதந்து வாங்கிக் கூறிய அச்சொல், இனம் செப்பலும் உரித்து — தன் பொருட்கு இன மாகிய பிற பொருளைக் குறிப்பால் உணர்த்துதலும் உரித்து, எ–று.

உம்மை எதிர்மறை ஆகலின், உணர்த்தாமையும் உரித்தாயிற்று.

'அறம் செய்தான் துறக்கம் புகும்', என்றவழி இன்பொருளாகிய 'மறம் செய்தான் நிரயம் புகும்' என்பது உணர்த்திற்று. 'இழிவறிந்து உண்பான்கண் இன்பம் எய்தும்,' (குறள் — 956) என்றவழிக் கழிபேரிரையான் இன்பம் எய்தான், என்பதும் இனப்பொருளை உணர்த்திற்று. 'கீழ்ச்சேரிக் கோழி அலைத்தது', என, 'மேற்சேரிக் கோழி அலைப்புண்டதும்' அது.

'ஆ வாழ்க! அந்தணர் வாழ்க!' என்பன, இனம் செப்பாதன. அருத்தாபத்தி இனம் செப்புமாறு தன்னொடு மறுதலைப்பட்டு நிற்பது ஒன்று உள்வழி ஆயிற்று; மறுதலைப்பாடு பல உள்வழிச் செப்பாது. ஆவிற்கு மறுதலை எருமை, ஒட்டகம் எனப் பல உள; அந்தணர்க்கு மறுதலை; 'அரசர், வணிகர், வேளாளர்' எனப் பிறரும் உளர். அங்ஙனம் பல மறுதலை உள்வழிச் செப்பாது.

கல் :

என்பது என்நுதலிற்றோவெனின், இஃது அருத்தாபத்தி [1]யாதற் கூறுத னுதலிற்று.

இ–ள் : விதந்த மொழி தன்னினத்தைக் காட்டி நிற்றலும் உரித்து; உம்மையாற் காட்டாது நிற்றலு முரித்து, எ–று.

உ–ம் :– கீழ்ச்சேரிக் கோழி அலைத்ததென, மேற்சேரிக் கோழி அலைப்புண்டது, என்பது சொல்லாமையே முடிந்ததாம். குடங் கொண்டான் வீழ்ந்தா னெனக் குடம் [2]வீழ்தலும் முடிந்தது.

இவை இனஞ்செப்பின. ஆ வாழ்க; அந்தணர் வாழ்க, என்பன இனஞ்செப்பாதன.

1. [மேற்று] (ாதற்) 2. வீ[ழுவய]ழ்தலும்

இவையும் இனஞ் செப்பின வென்னுமோ வெனின், சொல்லுவான் கருத்து [1] அஃதன்ரும். [2] மறுதலை பல வுளவழி இனஞ் செப்பாமையானும் இனஞ் செப்பா வாயின வுணர்க.

அரசு :

என்பது இது அருத்தாபத்தி கூறுகின்றது. இனமாகிய பொருட்கண் ஒன்றை விதந்து கூறியவழி யச் சொற் றனக் கின மாகிய பிற பொருளைக் குறிப்பா னுணர்த்துதலு முரித்து. எடுத்த மொழி — விதந்த சொல்.

உதா: அறஞ் செய்தான் றுறக்கம் புகுது மென்றவழி, மறஞ் செய்தா னிரையம் புகுது மென்ப துணர்த்திற்று. இழி பறிந் துண்பா னின்ப மெய்து மெனக் கழிபே ரிரையா னின்ப மெய்தா னென்ப துணர்த்திற்று. குடங் கொண்டான் வீழ்ந்தா னெனக் குடம் வீழ்ந்தது சொல்லாமன் முடிந்தது. பிறவு மன்ன. இனஞ் செப்பலு முரித்தே எனி லும்மையாற் செப்பா மையு முரித்து; ஆ வாழ்க; அந்தணர் வாழ்க வென்று மொழிந் தனவு மொழிந்தாருஞ் சாக வென்ப தன் றெனக் கொள்க.

62. கண்ணுந் தோளு முலையும் பிறவும்
பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி
பன்மை கூறுங் கடப்பா டிலவே
தம்வினைக் கியலு மெழுத்தலங் கடையே.

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்ரோ வெனின், திணை வழுக் காத்தல் நுதலிற்று.

உரை : கண்ணும் தோளும் முலையும் பிறவும் பன்மைப் பாலாற் கூறுதல் கடப்பா டில, தம் வினைக்கியலும் எழுத் தல்லாத விடத்து, என்றவாறு.

வரலாறு: கண் நல்லள்; தோள் நல்லள்; முலை நல்லள், என வரும்.

'பிறவும்' என்றதனுல், புருவம் நல்லள், காது நல்லள், என்பன போல்வன கொள்க.

---

1. அஃதன்யாம் : திருத்தம் 2. [அ](ம)றுதலை.

இனி, ஒருமை சுட்டிய சினைக் கிளவி ஒருமை கூறும் கடப்பா டில்லனவற்றிற்கு ஒத்து என்னை பிற வெனின், மேற், 'கால முலகம்' (கிள. 58) என்று திணை வழுக் காத்து வாராநின்ற அதிகாரத்திடையே, 'எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே' (கிளவி. 61) என்னும் சூத்திரத்தை இட னன்றி வைத்தார்; அது நிலமாகத் தந்து உரைத்தவற்றையும் கொள்க, என்பது.

வரலாறு: மூக்கு நல்லள்; கொப்பூழ் நல்லள், என வரும்.

(முதலாவது கிளவி ஆக்கம் முற்றிற்று)

**தெய்வ :**

ஒருசார் பா லறி சொற்கட் கிடந்த தோர் மரபு உணர்த்து தல் நுதலிற்று.

இ-ள்: கண்ணும், தோளும், முலையும் அத் தன்மைய பிறவும் ஆகிய பன்மை சுட்டிய சினை உணர வருஞ் சொல் தம் வினைக் கேற்ற எழுத்தான் முற்றுப்பெறுதவழிப் பன்மை யுணர்த்தும் மர பில, எ-று.

எனவே, பன்மை ஈற்றான் வாராக்கால் ஒருமை ஈற்றான் வரப்பெறும் என்ப தூஉம் அவ்வழி அவ் விரு பொருட்கண்ணும் கிடப்ப தொரு பொதுமையைக் குறிக்கும் என்ப தூஉம் கொள் ளப்படும். கண் நொந்தது; முலை எழுந்தது; தோள் தசைத்தது, என்றவழிப் பன்மை யுணர்த்திற் றில வாயினும் அச் சாதி யொருமையை உணர்த்தியவாறு கண்டு கொள்க. பிறவும் என்றதனுல் கை, கால் என்பனவுங் கொள்க. இரு நோக் கிவள் உண்கண் உள்ள து (குறள் — 1091) என்றவழி நோக் காகிய ஒருமை குறித்து வந்தது. ஒப்பக் கூறல் என்னுந் தந்திர வுத்தியால், சினைப் பொருளே யன்றி முதற் பொருளும் சாதி யொருமை பற்றி வருவனவும் அமைத்துக் கொள்க.

உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தான்
உள்ளான் வெகுளி யெனின் (குறள் — 39)

இதனுள் உள்ளிய வெல்லாம் எனற்பாலது நினைக்கப்படுதல் ஆகிய ஒருமை குறித்து வந்தது. அஃதேல், கண் ணல்லன், என்பது எவ்வாறு வந்த தெனின், கண்ண து நன்மை யுடையன், என்னும் பொருள்பட வந்தது. கண் நொந்தான், என்பது எவ்வாறு வந்த தெனின், கண் நோகப்பட்டா னெனச் செயப்படு பொருள் குறித்து நின்றது: இவை வினையியலுட் காணப்படும்.

முதலாவது கிளவி யாக்கம் முற்றும்.

இவ் வோத்தினுட் சூத்திர முட்பட்ட உரையினது அளவு கிரந்த வகையான் ஐந்நூற்று நாற்பது (ஐந்நூற்று அறுபது இ. எ.)

சேனா:

தம் வினைக் கியலு மெழுத்தான் முடிதலும் தம் முதல் வினைக் கியலு மெழுத்தான் முடிதலு மெனச் சினைநிலைக் கிளவி இரு முடி புடையவற்றுள், முதல் வினைக் கியலு மெழுத்தான் முடிவுழி யென்பார், தம் வினைக் கியலு மெழுத் தலங்கடை யென்றார்.

இதன் பொருள்: கண் முதலாயவும் பிறவும் பன்மை குறித்து நின்ற சினைநிலைக் கிளவி; அவை தம் வினைக் கியலு மெழுத்தான் முடியாது தம் முதல் வினைக் கியலு மெழுத்தான் முடியும்வழிப் பன்மையாற் சொல்லப்படும் யாப்புற வுடைய வல்ல; முத லொன் றாயின் ஒருமையானும், பல்வாயிற் பன்மை யானும் கூறப்படும், என்றவாறு.

உதாரணம்: கண் ணல்லள்; தோ ணல்லள்; முலை நல்லள், எனவும்; கண் ணல்லர்; தோ ணல்லர்; முலை நல்லர், எனவும் வரும்.

பிறவு மென்றதனாற் புருவங் கா தென்னுந் தொடக்கத் தனவுங் கொள்க.

பன்மை கூறுங் கடப்பா டிலவே யென்றதனாற் பால் வழுவும், தம் வினைக் கியலு மெழுத் தலங்கடை யென்றதனாற் றிணை வழுவு மமைத்தார்.

பன்மை கொண்டன, பன்மை யொருமை மயக்க மில்லாத் திணை வழு வாகலின், தம் வினைக் கியலு மெழுத் தலங்கடை யென்பதனான் அமைக்கப்படும்.

மூக்கு நல்லள்; கொப்பூழ் நல்லள், என ஒருமைச் சினைப் பெயர் நின்று உயர்திணை கொண்டனவும். நிறங் கரியள்; கவவுக் கடியள், எனப் பண்புந் தொழிலும் நின்று உயர்திணை கொண்ட னவும் தன்னின முடித்த லென்பதனா னமைக்கப்படும்.

கோடு கூரிது களிறு; குழம்பு கூரிது குதிரை, என வஃறிணைப் பன்மைச் சினைப்பெயர் நின்று முதல் வினை யாகிய ஒருமையான் முடிந்தனவும் அமையுமா றென்னை யெனின், ஆண்டுப் பன்மை யொருமை மயக்க மல்லது திணை வழு வின்மையின் ஈண்டைக் கெய்தா; அப் பன்மை யொருமை மயக்கம் ஒன்றென முடித்த லென்பதனு னமைக்கப்படும். அஃதேல், இச் சூத்திரத்தாற் றிணைவழுவோடு கூடிய பால் வழு வமைக்கப் பட்ட தென்பது எற்றாற் பெறுது மெனின், சினைக் கிளவிக்குத் தம் வினைக் கியலு மெழுத்தாவது அஃறிணை வினைக் குரிய வெழுத் தாம்; அஃதல்லாதது உயர்திணை வினைக் குரிய வெழுத்தே யாம்; என்னை? அஃறிணைக்கு மறுதலை உயர் திணையே யாகலான்; அதனுற் றிணை வழுவுதலும் பெறுது மென்பது. அஃதேல், தம் வினைக்கியலு மெழுத்தாவன சினைவினைக் குரிய வெழுத் தென்றும் அவை யல்லாதனவாவன முதல்வினைக் குரிய வெழுத் தென்று முரைக்க; உரைக்கவே, உயர்திணைச் சினையும், அஃறிணைச் சினையு மெல்லா மடங்கு மெனின், அற்றன்று: அஃறிணைக்கட் சினைவினைக் குரிய வெழுத்தோடு முதல்வினைக் குரிய எழுத்திற்கு வேறுபா டின்றி எல்லா மஃறிணை யெழுத்தே யாகலின் தம் வினைக் கியலு மெழுத் தலங்கடை யென்பதற் கேலா தாகலால், கண் முதலாயின உயர்திணைச் சினையே யா மென்பது.

நச்சி:

இதுவும் திணை வழுக் காக்கின்றது.

இ-ள்: கண்ணும் தோளும் முலையும் பிறவும் – கண்ணும் தோளும் முலையும் அவை போல்வன பிறவும், பன்மை சுட்டிய சினைநிலைக் கிளவி — பன்மையைக் குறித்து நின்ற சினை நிலைமையை உணர்த்திய சொற்கள், தம் வினைக்கு இயலும் எழுத் தலங்கடை – அவை தமக்கு உரிய பன்மை வினைக்கு ஏற்ற அகர ஈற்றால் கூறக் கருதாது தம் முதல் வினைக்கு ஏற்ற ஒருமை ஈற்றானும் பன்மை ஈற்றானும் கூறக் கருதியவழி, பன்மை கூறும் கடப்பாடு இல – தமக்கு உரிய பன்மையால் கூறப்படும் யாப் புறவு உடைய அல்ல, எ-று.

உ-ம். கண் நல்லள்; முலை நல்லள், எனவும், கண் நல்லர்; தோள் நல்லர், முலை நல்லர், எனவும், கண் நொந்தாள்; தோள் நொந்தாள்; முலை நொந்தாள், எனவும் வரும்.

'பிறவும்' என்றதனுல் புருவம், காது முதலியனவும் கொள்க.

மூக்கு நல்லள்; கொப்பூழ் நல்லள் என ஒருமைச் சினைப் பெயர் நின்று உயர்திணை கொண்டனவும், நிறம் கரியள்; கவவுக் கடியள், எனப் பண்பும் தொழிலும் நின்று உயர்திணை கொண்டனவும் தன்னினம் முடித்தலால் கொள்க.

கண் னொந்தது; முலை எழுந்தது, என்ருற் போல்வன சாதி ஒருமை உணர்தலும் இதனுல் கொள்க. கோடு கூரிது கரி; குளம்பு கூரிது குதிரை, எனப் பன்மைச் சினைப்பெயர் நின்று, முதல்வினை யாகிய ஒருமையான் முடிவனவும் கொள்க.

கல் :

என்பதென் னுதலிற்ரே வெனின், திணை வழுக் காத்தல் நுதலிற்று.

பொருள் :– கண்ணுந் தோளும் முலையும் பிறவும் ஆகிய பன்மைப் பொருளை யுணர்த்திய சினை நிலைமை யுணர நின்ற சொற்கள் தம் பன்மையாற் கூறுதலையே இலக்கண முறைமை யாக வுடையவல்ல, அதிகாரத்தானும் உயர் திணையாய் முடிதலுடைய. [1]அஃது எப்பொழுதுமோ எனின், அற்றன்று: தமது வினைக் கேற்ற வெழுத்திஞற் சொல்ல நினையாது தம் முதல் வினையாற் சொல்லக் கருதியபொழுது, என்றவாறு.

உ-ம் :- கண் ணல்லள்; தோ ணல்லள்; முலை நல்லள், என்பனவாம். பிறவும் என்பதனுற் புருவம் நல்லள்; காது நல்லள், என வரும்.

திணை வழு வதிகாரங் கூறி வாராநின்றத னிடையே எடுத்த மொழி யென்று இயை பில்லது கூறியவதனுன் ஒருமைச் சினை உயர்திணையாய் முடிவனவுங் கொள்க.

உதாகரணம்:- மூக்கு நல்லள்; கொப்பூழ் நல்லள், என வரும்.

இதனுற் சொல்லியது உயர்திணைச் சினைப் பொருள் தனக் கேற்ற சினை வினை கொள்ளாது முதல் வினை கொண்டு முடிவன கண்டு அதனை அமைத்தவாறு, என்க.

---

1. (அஃது)

"வினையிற் றோன்றும் [1]பா லறி கிளவி" (கி. ஆ. 11) முதலாக இத்துணையுஞ் சென்ற வாராய்ச்சி யெண்வகை இலக்கணத்துள்ளும் எழுவகை வழு வாராய்ச்சி யென வுணர்க.

முதலாவது கிளவியாக்கம் முற்றும்.

கல்லாடனர் விரித்தியுரை.

அரசு:

என்பது கண்ணுந் தோளு முலையும் அவை போல்வன பிறவும் பன்மையைக் குறித்து நின்ற சினை நிலைமையை யுணர்த்திய சொற்க டமக் குரிய பன்மை வினைக் கேற்ற அகர வீற்றுற் கூறக் கருதாது தம் முதல் வினைக் கேற்ற ஒருமை யீற்றானும் பன்மை யீற்றானும் கூறக் கருதியவழி தமக் குரிய பன்மையாற் கூறப்படு முறைமை யுடைய வல்ல.

உதா:- கண் ணல்லன்; கண் ணல்லள்; கண்ணல்லர்; தோ ணல்லன்; தோ ணல்லள்; தோ ணல்லர்; முலை நல்லன், முலை நல்லள்; முலை நல்லர், [2]எனவும் கண் ணொந்தான்; முலை நொந்தாள், [3]எனவும் வரும். பிறவு மென்றதனாற் புருவங் காது கான் முதலியன கொள்க. பன்மை கூறுங் [4]கடப்பா டில வென்ற தனால் ஒருமைக்குங் கொள்க. மூக்கு நல்லள்; கொப்பூழ் நல்லள், என்க. 'தம்வினைக் கியலு மெழுத்தலங் கடையே' என்றதனால் தம் முதலுக்கு இயலும் எழுத்தான் முடியு மென்பதாம்.

இச் சூத்திர மஃறிணை யுயர்திணையான் முடியுமாறு கூறித் திணை வழு வமைத்தது.

தன்னின முடித்த லென்பதினாற் கோடு கூரிது; குளம்பு கூரிது குதிரை யெனத் திணை வழு வின்றி யஃறிணைப் பன்மைச் சினைப் பெயர் நின்று முதல் வினை யாகிய வொருமை யான் முடிவனவுங் கொள்க.

முதலாவது கிளவி யாக்க வுதாரண முற்றும்.

---

1. பால [ரி] (றி) 2. யெ: திருத்தம் 3. யெ: திருத்தம் 4. கடை: திருத்தம்.

## II. வேற்றுமை யியல் *

**63. வேற்றுமை தாமே யேழென மொழிப.** (1)

**இளம் :**

என்பது சூத்திரம்.

இவ் வோத்து என்ன பயத்ததோ வெனின், வேற்றுமை எனப்பட்ட சில பொருள் உணர்த்தினமையின், வேற்றுமை யியல் என்னும் பெயர்த்து. மேல் ஓத்தினுள் நால் வகைப்பட்ட சொற்களையும் பொருள்களமே லாமாறு கூறிப் போந்தான்; அவற்றுள் முதலது பெயர்ச்சொல்; அதனது இலக்கணம் உணர்த்திய எடுத்துக் கொண்டான். இதுமே லோத்தினொடு இயைபு எங்ஙனம் உணர்த்தினானோ வெனின், பயனிலை செப் பலும், உருபேற்றலும், காலந் தோன்றாமையும் பெயரது இலக்கணம் என உணர்த்தினன், என்பது.

மற்று, இத் தலைச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், தன்னால் உணர்த்தப்படும் பொருளை இனைத்து என்று வரை யறுத்தல் நுதலிற்று.

உரை : வேற்றுமை என்று சொல்லப்படுவன எழு வகைய என்றவாறு.

இவ் வேற்றுமைகள் பொருள்களை வேற்றுமை செய்யு மாறு, அவற்றவற்றுச் சிறப்புச் சூத்திரத்தான் அறிக.

**தெய்வ :**

இஃது என்ன பெயர்த்தோ எனின், வேற்றுமை யியல் என்னும் பெயர்த்து; பொருள்களை வேறுபடுத்தினமையாற் பெற்ற பெயர். என்னை வேறுபடுத்தியவாறு எனின், ஒரு பொருளை யொருகால் வினைமுத லாக்கியும், ஒருகாற் செயப்படு பொரு ளாக்கியும், ஒருகாற் கருவி யாக்கியும், ஒருகால் ஏற்பது ஆக்கியும், ஒருகால் நீங்க நிற்பது ஆக்கியும், ஒருகால் உடையது ஆக்கியும் ஒருகால் இடம் ஆக்கியும் இவ்வாறு வேறுபடுத்தது, என்க. மேல் அல்வழித் தொடர் கூறி இனி வேற்றுமைத் தொடர் கூறுகின்றார், ஆதலின் அதன்பின் கூறப்பட்டது.

---

* வேற்றுமை மரபு : அரசு.

இவ் வோத்தினுள், தலைச் சூத்திரம் என் நுதலிற்றோ எனின், வேற்றுமை இனைத் தென வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :- வேற்றுமை என்பன தாம் ஏ ழென்று சொல்லுப ஒரு சாரார், விளி கொள்வதன்கண் நிகழும் விளியோடு எட்டாம். எ-று. *

ஏ காரம் தேற்றம். விளி கொள்வது என்றது பெயரை. ஏ ழென்று சொல்லுவார் விளி வேற்றுமையை எழுவாயுள் அடக்குவார்.

சேனு :

நான்கு சொற்கும் பொது விலக்கணம் உணர்த்தினர். அதற் கிடையீ டின்றி அவற்றது சிறப் பிலக்கணம் உணர்த்துதன் முறைமையானும், வேற்றுமை யிலக்கணம் உணர்த்துதற்கு வே றிட மின்மையானும், பொது விலக்கண மாதல் ஒப்புமை யானும், உரு பேற்றல் பெயர்க் கிலக்கண மாகலின் வேற்றுமை யுணர்த்திப் பெய ருணர்த்தல் முறை யாகலானும், கிளவி யாக் கத்திற்கும் பெய ரியற்கு மிடை வேற்றுமை இலக்கணம் உணர்த்திய எடுத்துக்கொண்டார். வேற்றுமையாவன பெயரும் ஓரிடைச் சொல்லு மாகலின், அவற்ற திலக்கணமும் பொது விலக்கணமே யாம்.

வேற்றுமை இலக்கண மென ஒன் ருயினும், சிறப்புடைய எழு வகை வேற்றுமையும் அவற்றது மயக்கமும் விளி வேற்று மையுந் தனித்தனி யுணர்த்தத் தகும் வேறுபாடு யாப்புடைமை யான், மூன் றோத்தா னுணர்த்தினர்.

பொது விலக்கண முணர்த்திச் சிறப் பிலக்கணம் உணர்த் துதல் முறைமை யாகலின், முதற்கண்ண தாகிய பெயர்ச் சொற்குப் பயனிலை கோடலும், உரு பேற்றலும், காலந் தோன் ருமையு மாகிய இலக்கண முணர்த்துவார் இயைபுபட்டமையான் வேற்றுமை யிலக்கணம் உணர்த்தினு ரென மே லோத்தினேடு இவ் வோத்திடை யியைபு கூறினுரால் உரையாசிரியர், எனின், அற்றன்று; இவ் வோத்துப் பெய ரிலக்கணம் நுதலி யெடுத் துக்கொள்ளப்பட்ட தாயின், உரு பேற்றலும், பயனிலை

* வேற்றுமை தாமே யேழென மொழிப
விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே, எனச் சூத்திரம் அமைத்தார்.

கோடலும், காலந் தோன்றுமையு மாகிய பெய ரிலக்கணம் முன் ஞேதி, இயைபுபடுதலான் வேற்றுமை யுணர்த்துங் கருத்தின ராயின் அவற்றையும் இன்ன விலக்கணத்த என உணர்த்திப் பின்னும் எடுத்துக்கொண்ட பெய ரிலக்கணமே பற்றி யோதிப் பெயரிய லென ஓ ரோத்தான் முடியற் பாற் றன்றே; அவ்வா றன்றி, வேற்றுமை யிலக்கணமே முன் கூறி

'அன்றி யனைத்தும் பெயர்ப் பய னிலையே' (சொல் — 66) எனவும்,

'ஈறு பெயர்க்காகு மியற்கைய வென்ப' (சொல் — 69) எனவும், வேற்றுமை யிலக்கணம் கூறி அச் சூத்திரத்தாற் பயனிலை கோடலும் உரு பேற்றலும் பெயர்க் கிலக்கண மென்பது உய்த்துணர வைத்துப் பின்னும் வேற்றுமை யிலக்கணமே யுணர்த்தி, இதனை வேற்றுமை யோத் தென்றும், அவற்றது மயக்க முணர்த்திய ஒத்தை வேற்றுமை மயங்கிய லென்றும், சிறப்பில்லா விளி வேற்றுமை யுணர்த்திய ஓத்தை விளிமர பென்றும், நுதலியதனுற் பெயர் கொடுத்து, மூன் ஞேத்தாக வைத்து, பெயரிய லென வே ஞே ரோத்திற்குப் பெயர் கொடுத்தமையானும்,

'எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே' (சொல். 155) என்பது முதலாகிய ஐந்து சூத்திரமும் பெய ரிலக்கண முணர்த்து மோத்தின் முன் வையாது இடை வைத்தல் பொருந் தாமையானும், இவ் வோத்துப் பெய ரிலக்கணம் நுதலி யெடுத்துக் கொள்ளப்பட்ட தன்று, வேற்றுமை யிலக்கணமே நுதலி யெழுந்த தெனவே படும்; அதனுன், அவர்க் கது கருத்தன் றென்க. அஃதேல்,

'பெயர்நிலைக் கிளவி காலந் தோன்ரு' (சொல் — 70) எனப் பெய ரிலக்கணம் ஈண்டுக் கூறியது என்னை யெனின், பயனிலை கோடலும் உரு பேற்றலும் பெய ரிலக்கண மென்பது ஈண்டுப் பெறப்பட்டமையான், அவற்ருே டியையக் காலந் தோன்ருமையும் ஈண்டே கூறினுர், பெயரி லக்கண மாத லொப்புமையா னென்பது.

இ-ள் : வேற்றுமையாவன ஏ ழென்று சொல்லுவர் தொல் லாசிரியர், எ-று.

செயப்படு பொருண் முதலாயின வாகப் பெயர்ப் பொருளை வேறுபடுத் துணர்த்தலின், வேற்றுமை யாயின. செயப்படு பொருண் முதலாயினவற்றின் வேறுபடுத்துப் பொருண் மாத்திர முணர்த்தலின், எழுவாயும் வேற்றுமை யாயிற்று. அல்லதூஉம், வேற்றுமை என்பது பன்மை பற்றிய வழக் கெனினு மமையும்.

தாமே யென்பது கட்டுரைச் சுவைபட நின்றது.

**நச்சி :**

இவ் வோத்து, செயப்படு பொருள் முதலியன வாகப் பெயர்ப் பொருளை வேறுபடுத்து உணர்த்தலின், வேற்றுமை ஒத்து என்று காரணப் பெயர் பெற்றது. முன்னர் நான்கு சொற்கும் பொது இலக்கணம் உணர்த்திய அதிகாரத்தானே இப் பொது இலக்கணம் கூறுகின்ற ஒத்தினையும் சேரக் கூறினர். அப் பொது இலக்கணம் என்னை எனின், வேற்றுமை தாமும் பெயரும் 'ஒருசார் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லு மாகிய பொது இலக்கண மாதல் உடைமை யானும்,

'எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே' (வே-மை-ல் சூ. 4) எனவும்,

'அன்றி அனைத்தும் பெயர்ப்பய னிலையே' (வே-மை-ல் சூ. 5) எனவும்,

'ஈறுபெயர்க் காகும் இயற்கைய என்ப' (வே-மை-ல் சூ. 8) எனவும்,

'பெயர்நிலைக் கிளவி காலம் தோன்று' (வே-மை-ல் சூ. 9) எனவும்; தொழிற்பெயர் காலம் தோன்றும் எனவும் மேற்கூறும் சிறப்புடைப் பெயர்க்குப் பொது இலக்கணம் ஈண்டுக் கூறுதல் உடைமையானும் இவ்வோத்து பொது இலக்கணமே கூறிய தாயிற்று.

'ஆயின், வேற்றுமை மயங்கியலும் விளி மரபும் இடை வைத்தது என்னை' எனின், இவ் வேற்றுமையின் மயக்கம் யாப் புடைமையின் வேறு ஒத் தாக்கி, விளி இவைபோற் சிறப்பின் மையின் வேறு ஓர் ஒத் தாக்கி வைத்தார். இங்ஙனம் வைத்துப் பின்னர்ச் சிறந்த பெயர், வினை, இடை, உரிகளை முறையே கூறி,

இவற்றுள் எஞ்சி நின்ற இலக்கணத்தை எச்சவியலிற் கூறினர் என்று உணர்க.

'பொருண்மை சுட்டல்' (வே-மை-ல் சூ. 5) முதலிய ஆறு பொருளையும் குறித்து அவற்றால் தான் வேறுபட நிற்றலானும், முடிக்கும் சொல்லைத் தான் விசேடித்து நிற்றலானும் எழுவாயும் வேற்றுமை யாயிற்று.

இச் சூத்திரம் வேற்றுமை இனைத்து, என்கின்றது.

இ-ள் : வேற்றுமை தாமே ஏழென மொழிப — வேற்றுமையாவன ஏழென்று சொல்லுவர் தொல்லாசிரியர், எ-று.

'தாமே' என்பது சந்த இன்பம் செய்து நின்றது.

கல் :

இவ் வோத்து என்ன பெயர்த்தோ வெனின், வேற்றுமை யோத்து என்னும் பெயர்த்து. வேற்றுமை யென்பது சில பொருளை யுணர்த்தினமையாற் காரணப் பெய ராயிற்று. மற்று, வேற்றுமை யென்னும் பொருண்மை என்னை யெனின், பொருள்களை வேற்றுமை செய்தலிற் பெயர் முதலிய வெட்டற்கும் வேற்றுமை யென்று பெயராயிற்று. யாதோ வேற்றுமை [1]செய்தவா றெனின், ஒரு பொருள் ஒருவழி யொன்றனைச் செய்யும் வினைமுத லாகியும், ஒருவழி யொன்று நிகழ்தற்கு ஏது வாகியும், ஒருவழி யொன்று செய்தற்குக் கருவி யாகியும், ஒருவழி யொன்று செய்தற்குச் செயப்படுபொரு ளாகியும், ஒருவழி யொன்று கொடுப்பதனை ஏற்ப தாகியும், ஒருவழி யொன்றற்கு உவம மாகியும், ஒருவழி யொன்று நீங்குதற்கு இடமாகியும், ஒருவழி ஒன்றற் கெல்லை யாகியும், ஒருவழி யொன்றற்குக் கடமையாகியும், ஒருவழி யொன்று செய்தற்கு இடமாகியும், ஒருவழி முன்னிலை யாதற் பொருட்டு விளிக்கப்படுவ தாகியும், இன்னோரன்ன பிறவு மாகிய பொதுப்பட நிற்ற லுடைத்து.

அவ்வாறு நின்றதனைப் பெயர் முதலியன வோரோ வொன்றாகச் சென்று அப் பொதுமையின் வேற்றுமைப்படுத்தி ஒரு பொருட் குரிமைசெய்து நிற்றலின் வேற்றுமை யெனப்பட்டது. இவ்வா றெட்டற்கும் பொதுப்பட நின்ற தோர் பொருணிலை

1. செய்தவா [ரே] றெனின்

யல்லது பொதுப்பட நின்றதோர் சொன்னிலைமை வழக்கிடைக் காணுமா லெனின் அவ்வாறு வழக் கில்லை யெனினும், சாத்தன், சாத்தனை, சாத்தனோடு, சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண், சாத்தா! என வொன்றன் வடிவோ டொன்றன் வடி வொவ்வாது இவ் வேற்றுமைகள் வரும்வழிச் சாத்தனென் னும் வாய்பாடு எங்கு நின்றமையிற் பொது நிலைமை யென்ப துய்த்துணரப்படும். எழுவாய் அதனோடு வேற்றுமைப் பட்டதோ வெனின் சாத்தனை யென்றது போல்வ தோர் வாய்ப்பா டில்லெனினும் அவ் வேழனோடும் ஒவ்வா நிலைமை யுடைமையின் இதுவும் ஓர் வாய்பா டாயிற்று, என வுணர்க. அன்றியும், செயப்படு பொருண் முதலாயினவற்றின் வேறு படுத்துப் பொருண்மாத்திரம் உணர்த்தலின், எழுவாய் வேற்றுமை யாயிற்று, என்பாரும் உளர்.

அல்லதூஉம், வேற்றுமை யென்பது பன்மை பற்றிய வழக் கெனினும் அமையும். இவ் வேற்றுமை செய்யும்வழிப் பல சொல் லொரு பொரு ளாகியும் பல பொருள் ஒரு சொல் லாகியும் வரும்.

இனிப் பல சொல் லொரு பொரு ளாகி வரும்வழி, பல வேற்றுமை பல சொல் லாகியும், ஒரு வேற்றுமை பல சொல் லாகியும் வரும். அவை யாமா றறிந்து கொள்க.

மேலோத்தினோடு இவ் வோத் தியை பென்னையோ வெனின், மேலோத்தினுள் நான்கு வகைப்பட்ட சொற்களையும் பொருட்கண்மே லாமாறு சொல்லிப் போந்தார். அவற்றுள் முதலாவது பெயர்ச்சொல். அதற் கிலக்கண முணர்த்தியவெடுத் துக் [1]கொண்டார் என்பது. யாங்ஙன [2]முணர்த்தினரோ வெனின் எல்லாப் பெயர்களும் எழுவா யாகிப் பயனிலை கோட லும், ஒருவழி எழுவா யாகாது வேறோர் நிலைமையவாய் நிற்றலும், உரு பேற்றலும், ஒருவழிச் சில பெயர் உரு பேலாது நிற்றலுங் காலந் தோன்றாமை நிற்றலும், ஒருவழித் தொழிற் பொரு ளொரு கூ றுயக்காற் காலந் தோற்றி நிற்றலும், விளி யேற்று நிற்றலும், சில பெயர் விளியாது நிற்றலும், இன்னோ ரன்ன பிறவும் பெயரது இலக்கண மென வுணர்த்தினரென்பது.

1. கொண்டா[ண]ர் 2. முணர்த்தின[ு](ரா)

பெயரது இலக்கணமே யன்றி உரு பிலக்கண [1]முணர்த் திறரா லெனின் அவ் வாராய்ச்சியும் பெயரது இலக்கணமாய் விழுத லுடைமையின் அமையு மென்பது.

மற் றித் தலைச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், தன்னா லுணர்த்தப்படும் பொருளை இனைத்தென்று வரையறுத்தல் நுதலிற்று.

இ-ள்: வேற்றுமை யென்று சொல்லப்படுவன தாம் ஏ ழென் று சொல் லுவர் ஆசிரியர், எ-று.

தாம் என்பது சந்த வின்பம். ஏ என்பது ஈற் றசை யாம், என்க.

அரசு:

என்பது வேற்றுமை யென்று சொல்லப்படுவன வெழு வகைய வேற்றுமை யாவது சொற்களை வேற்றுமை செய்வது. எழு வகை யாவது சாத்த னுண்டா னென்ற விடத்து எழுவாயும் சாத்தன் சோற்றை யுண்டா னென்ற விடத்து இரண்டாவதும், சாத்தன் கொற்றனொடு வந்தா னென மூன்றாவதுஞ், சாத்தற்குக் கொடுத்தா னென நாலாவதும் சாத்தனின் வலிய னென்ற விடத் தைந்தாவதுஞ் சாத்தன தாடை யென்ற விடத் தாறாவதுஞ் சாத்த னிருந்தான் முற்றத்துக்க ணென வேழாவதுமாம். இப்படியாக [2]வேற்றுமைப்பட்டுப் பொருள் கொண்டு வருதலான் வேற்றுமை யே ழெனப்பட்டது.

**64. விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே.** (2)

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஒழிந்த வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

உரை: விளி கொள்வதன்கண் விளியோடு எட்டு வகைப் படும், என்றவாறு.

வேற்றுமை விளி கொள்வது என்பது பெயரதன்கண் விளி என்றவாறு. விளித்தல் என்பது கூறுதல்.

---

1. முணர்த்திற[னு](ஈ) 2. வேற்றுப்பட்டு: திருத்தம்.

இதுவும் மேலவற்றோடு ஒத்த சிறப்பின்றாகலான் வேறு போந்து கூறினர், என்பது. என்னை ஒவ்வாவாறு எனின், இதனை ஏற்கும் பெயரும் ஏலாப் பெயரும் உள, என்க. அஃதாமாறு விளி மரபினிற் கூறுதும்.

சேனு :

இ-ள்: விளி கொள்வதன்கண்ணதாகிய விளியோடு தலைப்பெய்ய வேற்றுமையெட்டாம், எ-று.

வேற்றுமையென்பது அதிகாரத்தான் வந்தது. முன்னர்,

'விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு

தெளியத் தோன்றும் இயற்கைய வென்ப' (சொல்-118) என்பவாகலின், விளி கொள்வதென்றது விளி கொள்ளும் பெயரை. அதன்கண் விளி யென்றதனுல், பெயருமன்று, பெயரின் வேறுமன்று. விளிவேற்றுமை யாவது திரிந்தும் இயல்பாயும் நிற்கும் பெய ரிறுதி, யென்பதாம்.

'வேற்றுமை தாமே யேழென மொழிப' (சொல்-62) எனப் பிறர் மதங்கூறி இச்சூத்திரத்தால் தந் துணி புரைத்தார்.

நச்சி :

இஃது, ஒழிந்த வேற்றுமையும் கூறித் தொகை கூறுகின்றது.

இ-ள்: விளி கொள்வதன்கண் விளியோடு — விளி ஏற்கும் பெயர்க்கண்ணதாகிய விளியோடு முற்கூறியவற்றைத் தலைப்பெய்ய, எட்டே — வேற்றுமை எட்டாம், எ-று.

விளி கொள்வதன்கண் விளி, என்றதனுல், பிறிதோர் இடைச்சொல்லை ஏலாது தானே திரிந்தும் இயல்பாயும் நிற்கும் பெயர் இறுதி விளி, என்பது பெற்றும்.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், ஒழிந்த வேற்றுமை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: விளி கொள்வதன்கண் விளியோடு எட்டு வகைப்படும் வேற்றுமை, எ-று.

விளி கொள்வ தென்பது பெயரின்கண் விளி யென்றவாறு. விளியோ டெட் டென்றது பெயர்க்கண் விளி யென்றதனாற் பெற்ற தென்னை யெனின், மற்ற வேற்றுமை போலப் பெயர்ப் புறத்துப் பிரிய வாராது அப் பொருளே ஈறு திரிதன் முதலாய வடிவின தாகி வருதல் உணர்த்திய வென்றவாறு.

'வேற்றுமை தாமே யெட் டென' ஒரு சூத்திரமாகக் கூறாதது என்னை யெனின்; இதனது சிறப்பின்மை யறிவித்தற்கு வேறு கூறினார், என்பது.

யாதோ சிறப்பின்மை யெனின், விளி யேலாப் பொருள்களும் உண்மையின், என்பது. அஃதேற் பயனில கொள்ளாப் பெயரு [1]முளவா லெனின், அதனோ டிதனிடை வேற்றுமை யுண்டு. அஃது ஒருவழிக் கொள்வது, ஒருவழிக் கொள்ளாதாய் நிற்கும் அதுதானுஞ் சிறுபான்மை. இஃது [2]யாண்டுங் கொள்ளா தென கொள்ளாவாயே நிற்கும் என்பது.

வேற்றுமையினை ஏ ழென்பது, எட் டென்ப தாகின்றது சொல்லானோ, பொருளானோ? சொல் லெனினும் பல வகைய. பொரு ளெனினும் பல வகைய. யாதோ கொள்ளுமா றெனின், ஒருவழிச் சொல்லானும் ஒருவழிப் பொருளானும், என்பது.

இவ்வா றன்றி எல்லாஞ் சொல்லா னென்பதும் ஒன்று. பல சொல்லு முள வெனினும், ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்பன பெருவழக்கின வாகலின் உருபினுள் அவ் வாறனையுமே கொண்டு அவற்றோ டெழுவாயினையும் விளியினையுங் கூட்டி யெட் டென்றார், என்பது.

அரசு :

என்பது விளி யேற்கும் பெயரோடு வேற்றுமை யெட்டாம். விளி கொள்வதன்கண் [3]என்றதனால் விளி யேலாதனவு முள; அவை விளி மரபிற் காண்க.

65. அவைதாம்,
பெயர் ஐ ஒடு கு
இன்அது கண்விளி யென்னு மீற்ற (3)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், வேற்றுமைகளின் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

---

1. முள [ே] வா [வெ] (லெ)னின் 2. யாண்டு [ம்] (ங்)
3. என்றறனால் : திருத்தம்.

உரை: அப்பெயரே பெயர், அம்முறையே முறை. ஈற்ற என்பது இவ்விளி வேற்றுமை ஈருக வுடைய, என்றவாறு. அவைதாம் என்பது மேற்சொல்லப்பட்டன, என்றவாறு.

தெய்வ :

வேற்றுமைச் சொற்கு ஈற்றெழுத்து வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் சொல்லப்பட்ட வேற்றுமைகள் தாம் பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி யென்று சொல்லப்பட்ட ஈறுகளை யுடைய, எ–று.

விளி யீருவது விளிக்கண் வரும் எழுத்துக்கள். பிறவும் வேற்றுமை ஈறு உளவாயினும், சிறப்புடைப் பொருளைத் தானினிது கிளத்தல் என்பதனால் இவை எடுத்து ஓதப்பட்டன. எடுத் தோதாதன, மூன்ருவதன்கண் ஆன், ஆல், ஒடு; ஆருவதன்கண் அ; ஏழாவதன்கண் இடப்பொருண்மை உணர்த்துஞ் சொற்கள்.

உ–ம் : சாத்தன், சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண், சாத்தா என வரும்.

ஐ முதலாயின மற்றொரு பெயர்க்கு ஈருகி வருதலின், பெயரீறு என்பதும் மற்றொரு பெயர்க்கு ஈருகி வரல் வேண்டும், எனின், அஃதன்று கருத்து. பெயர் தானே ஈருகியும் பிற எழுத்தோடு கூடி ஈருகியும் வருமென்று கொள்ளப்படும். இவ் வேற்றுமைகளை இவ் வீற்று வேறுபாட்டானே, பெயர் வேற்றுமை ஐகார வேற்றுமை, ஒடு வேற்றுமை, குவ் வேற்றுமை, இன் வேற்றுமை, அது வேற்றுமை, கண் வேற்றுமை, விளி வேற்றுமை எனவும் குறியிட்டு வழங்குப. அஃது யாண்டுப் பெறுதும் எனின்,

ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி (சொல். 68)

ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி (சொல். 70)

என்புழியும் பிறுண்டும் பெறுதும்.

சேனு :

இ-ள் : எட்டெனப்பட்ட வேற்றுமை யாவன விளி வேற்றுமையை இறுதியாக வுடைய பெயர். ஐ. ஒடு. கு. இன், அது, கண்ணும், எ–று.

பெயர் ஐ ஒடு கு இன் அது கண் என்பன பல பெயர் உம்மைத் தொகை. அஃது ஒருசொல்லாய், விளி யென்னு மீற்ற, என்பதனுன் விசேடிக்கப்பட்டது. பெயரும் ஐயும் ஒடுவும் குவ்வும் இன்னும் அதுவும் கண்ணும் என விரியும்.

சிறப்புடைப் பொருளைத் தா னினிது கிளத்தல், என்பதனுன் ஒடுவென்றும் அது வென்றும் ஓதினு ராகலின், ஆனுருபும் அகர வுருபுங் கொள்ளப்படும்.

விளி வேற்றுமையினது சிறப்பின்மை விளக்கிய பெயர் ஐ ஒடு கு இன் அது கண் விளி யென்ருது, விளி யென்னு மீற்ற. எனப் பிரித்துக் கூறினர்.

**நச்சி :**

இஃது, அவற்றின் பெயரும் முறையும் உணர்த்துகின்றது.

**இ-ள் :** அவைதாம் — எட்டு எனப்பட்ட வேற்றுமை யாவன, விளி என்னும் ஈற்ற — விளி வேற்றுமையை இறுதி யாக உடைய பெயர் ஐ, ஒடு, கு, இன், அது, கண் பெயரும் ஐயும் ஒடுவும் குவ்வும் இன்னும் அதுவும் கண்ணு மாம், எ—று.

'சிறப்புடைப் பொருளைத் தா னினிது கிளத்தல்', என்பதனுன் ஒடுவும் அதுவும் ஓதினு ரேனும், மூன்ருவதற்குச் சிறுபான்மை ஒடும் ஆனும்; ஆருவதற்கு அகர ஈறும் ஆதுவும் (பி—ம் அதுவும்) கொள்க.

**கல் :**

என்பது என் நுதலிற்ரோ வெனின், வேற்றுமை[1]களது பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள்:** மேல் வேற்றுமை யென்று சொல்லப்பட்டவைதாம் பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி யென்று கூறும் வழி இறுதிக்கண் நிற்கின்ற வவ் விளி வேற்றுமையினை இறுதி யாக வுடையன, வென்றவாறு.

அப் பெயர்ப் பெயர், அம் முறை முறை. எழுவாய் வேற்றுமை ஏனை வேற்றுமைக்குஞ் சார் பாத னேக்கி முன் வைக்கப்பட்டது. விளி வேற்றுமை எல்லா வற்றினுஞ் சிறப் பின்மை நோக்கி பின் வைக்கப்பட்டது. ஐயினை இரண்டாவ

1. க[ளை](ளது)

தென்றும், ஒடுவினை மூன்ருவ தென்றும், இவ்வாறே இவை கூறுதற்குக் காரண முண்டோ வெனின்; காரண மில்லை. இல்லையேல் வேண்டியவாறு கூறினும் அமையு மெனின், அமையாது. முன் னூலுள் ஓதிய முறை யது வென்பது.

அரசு:

என்பது எட்டு வேற்றுமையும் விளி வேற்றுமையை யிறுதியாக வுடைய பெயரும் ஐயும் ஒடுவும் குவ்வும் இன்னும் அதுவும் கண்ணும் ஆம்.

66. அவற்றுள்,
எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே. (4)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்ரே வெனின், நிறுத்த முறை யானே முதற்கண் நின்ற பெயர் வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

உரை: எழுவாய் வேற்றுமைப் பெயர் முதல் வேற்றுமைப் பெயர், என்றவாறு.

இனித் 'தோன்று நிலை' என்றதனுல் மேற் சூத்திரத்துக் கூறப்படும் அறுவகைப் பயனிலையும் தோன்ற நிற்கும் பெயர் எழுவாய் வேற்றுமையாவது, என்றவா ரும்.

என்னை, 'ஆயன் சாத்தன் வந்தான்' என்புழி, ஆயன் என்பதூஉம் பெயர்; சாத்தன் என்பதூஉம் பெயர்; ஆயினும் இரண்டிற்கும் இரண்டு பயனிலை தோன்ற நில்லாமையாற் சாத்தன் என்பதூஉம் வந்தான் என்பதூஉம் ஆயன் என்ப தற்கே பயனிலை; அதனுல், சாத்தன் என்பது ஆண்டு எழுவாய் வேற்றுமை யாயிற்று, என்பது.

இனி, பெயரை எழுவாய் வேற்றுமை என்றும் விளி வேற் றுமை யென்றும் உரைத்தாரால், இரண்டனுக்கும் தம்முள் வேற்றுமை யென் னெனில், ஈறு திரியாது உரு பேற்றல் எழுவாய் வேற்றுமையது இலக்கணம்; ஈறு திரிந்து உரு பேற்றல் விளி வேற்றுமையது இலக்கணம் என்பது அறிக.

தெய்வ:

மேல், வேற்றுமை எட்டு என்பதும், அவற்றுக்கண் வரும் ஈறும் கூறிஞரல்லது, அவற்றது பெயரும் முறையும் கூறிற்

றிலர் அன்றே. அவை கூறுவார், முற்பட, முதல் வேற்றுமை யாவது இது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேற் சொல்லப்பட்டவற்றுள் முதல் வேற்றுமை யாவது பெயர் தோன்றும் நிலை, எ-று.

அஃதேல், பெயர் என அமையும்; தோன்றும் நிலை என்றதனாற் பயன் என்னை யெனின், பெயர் கண்டுழி யெல்லாம் வேற்றுமை யென்று கொள்ளற்க என்பது அறிவித்தற் கெனக் கொள்க. அஃது யாதோ எனின்; ஆயன் சாத்தன் வந்தான் என்றவழி ஆயன் என்பது சாத்தற்கு அடை யாகி நிற்றலானும் இரு பெயரும் ஒரு பொருட்கண் வருதலின் இரண்டினையும் வேற்றுமை 'எனப்படாது (பட்டது: இ. ஏ.) ஆகலானும் இறுதி நின்றதே வேற்றுமை எனப்படுவது என்று கொள்க. இதனை எழுவாய் வேற்றுமை யடுக் கென்றார் உளரால் எனின், ஆயன் சாத்தனை வெட்டினான் என்றவழி, இறுதி நின்ற பெயர் உரு பேற்று இரண்டாம் வேற்றுமை யாயிற்று: ஆண்டு உருபு ஏலாத ஆயன் முதல் வேற்றுமை யாதல் வேண்டும். அவ்வாறாக, வெட்டினான் என்பது ஒற்றுமைப்பட்டு முடியா தாகலான் அது பொருளன்று என்க. அஃதற்றாக பெயரை முதல் வேற்றுமை என்றது, எட்டு வேற்றுமையுள்ளும் யாதானும் ஒன்றை முதல் வேற்றுமை எனினும் அமையும் எனின், ஒருவன் ஒன்றை ஒன்றனே யியற்றி ஒருவற்குக் கொடுப்ப, அவன் அவனை அவனினின்றும் தனது ஆக்கி ஓ ரிடத்து வைத்தான். கொற்றா என்றவழி, செய்கின்றான் முதல் வேற்றுமை யாகி இம் முறையே கிடத்தலின் அமையாது என்க. அஃதேல் யாற்றினது கரைக்கண் நின்ற மரத்தை அறச் சாலை யியற்றுதற்கு ஊரினின்றும் வந்து மழுவினானே வெட்டினான் சாத்தன் என்றவழி, எழுவா யாகிய பெயர் ஏழாவதுமாய் நின்றதால் எனின், சொல்லுவான் குறிப்பினால் முதல் வேற்றுமை யாயிற்று என்பது (என்பதன்று. இ. ஏ.) கருத்து.

யாதானும் ஒரு தொழிலும் செய்வான் உள்வழி அல்லது நிகழாமையின் அது செய்து முடிக்குங் கருத்தா முன் வைக்கப் பட்டான். அவன் ஒரு பொருளைச் செய்து முடிக்குங்கால் செய்யத் தகுவது இது, எனக் குறிக்கவேண்டுதலின் செயப்படு பொருள் இரண்டாவது ஆயிற்று. அவ்வாறு அப் பொருளைச் செய்து முடிக்குங்கால் அதற் காங் கருவி தேடு மாதலின் அக்

கருவி மூன்ருவ தாயிற்று. அவ்வாறு செய்து முடித்த பொருளைத் தான் பயன் கோடலே யன்றிப் பிறர்க்குங் கொடுக்கும் ஆதலின் அதனை ஏற்று நிற்பது நான்காவது ஆயிற்று. அவ்வாறு கொடுப்புழி அவன் கையினின்றும் அப் பொருள் நீங்கி நிற்பது ஐந்தாவது ஆயிற்று. அவ்வாறு நீங்கின பொருளைத் தனதென்று கிழமை செய்தலின் அக் கிழமை ஆருவது ஆயிற்று. ஈண்டுக் கூறப்பட்ட எல்லாவற்றிற்கும் இடமும் காலமும் பொதுவாகி நிற்றலின், அவை ஏழாவது ஆயின. இவையிற்ருேடு ஒத்த இயல்பிற்று அன்றி எதிர்முகம் ஆக்குதற் பொருட்டு ஆகலின், விளி என்பது எல்லாவற்றிலும் பிற் கூறப்பட்டது. அஃதேல் ஆருவ தாகிய கிழமை, கொண்டான்கண் ணுதலே யன்றிச் செய்தான்க ணியையாதோ வெனின், தோற்றுவித்தாற்குக் கிழமை சொல்லாமலும் பெறும்; அதனைக் கொண்டாற்கே கிழமை கூறல் வேண்டுவது, என்க.

**சேஞ:**

இ-ள்: மேற் சொல்லப்பட்ட வேற்றுமையுள், முதற்கட் பெயரென்று கூறப்பட்ட வேற்றுமையாவது பெயர் தோன்றிய துணையாய் நிற்கும் நிலைமை யாம்; எ-று.

பெயர் தோன்றிய துணையாய் நிற்கும் நிலைமையாவது, உருபும் விளியு மேலாது பிறி தொன்றனேடு தொகாது நிற்கும் நிலைமை. எனவே, உருபும் விளியு மேற்றும் பிறி தொன்றனேடு தொக்கும் நின்ற பெயர் எழுவாய் வேற்றுமை யாகா தென்றவாரும்.

எ-டு: ஆ. அவன் என வரும்.

**நச்சி:**

இது, முறையானே எழுவாய் வேற்றுமை கூறுகின்றது.

இ-ள்: அவற்றுள் – மேற் கூறிய வேற்றுமை எட்டனுள், எழுவாய் வேற்றுமை – முதல் வேற்றுமையாவது, பெயர் தோன்றும் நிலையே – பெயர்ப் பொருள் அறுவகைப்பட்ட பயனிலையும் தன்கண் தோன்ற நிற்கும் நிலைமை, எ-று.

அஃது, உருபும் விளியும் ஏலாது நிற்கும் நிலையது ஆயிற்று.

உ-ம்: மக்கள், ஆ என வரும்.

இதனை முற் கூறியது என்னை எனின் 'சாத்தன் குடத்தைக் கையால் வனைந்து கொற்றற்குக் கொடுத்தான்' என வினைமுதல் நின்று ஏனையவற்றை நிகழ்த்துதல் வேண்டுதலின் அவ் வினை முதலாகிய எழுவாயை முற் கூறினர். அன்றியும் மேல் இரண்டாவது, மூன்றாவது, என்று ஆளு மிடத்து இதனை முதல் வேற்றுமை என்றே ஆள வேண்டுதலின் அப் பொருள் தருதற்கு முன்னிற் சூத்திரத்திற் பெய ரென்று கூறிய அதற்கே எழுவாய் வேற்றுமை என்று வே றோர் பெயர் கொடுத்தார். இதற்கு இப் பெயர் கூறிய அதனானே உருபும் விளியும் ஏற்பனவற்றைப் பெயர் என்று வழங்குதல் பெற்றாம். அஃது, 'ஈறு பெயர்க்கு ஆகும்' (வே - மை - ல் சூ. 8) என்றதனாலும் உணர்க.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே முதற்கண் நின்ற பெயர் வேற்றுமை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : மேற் சொல்லப்பட்ட வேற்றுமை யெட்டனுள் முதல் வேற்றுமையாவது பெயர்ச் சொல் பயனிலைப் பாடு தோன்ற நிற்கு நிலைமை யென்றவாறு.

உதாகரணம் : ஆ, மக்கள் என வரும்.

விளியோ டிதனிடை வேற்றுமை என்னை யெனின், ஈறு திரிதலும், ஈறு திரியாமையும், ஈறு திரியாதவழி ஒருவழிப் படர்க்கை யாதலும் முன்னிலை யாதலும் எனக் கொள்க.

அரசு :

என்பது எழுவாய் வேற்றுமை யுருபும் விளியு மேலாது பெயராகவே தோன்று நிலைமையது வாம்.

உதா : ஆ என வரும்.

67. பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினை நிலை யுரைத்தல் வினவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்
றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே. (5)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மேற் சொல்லப் பட்ட எழுவாய் வேற்றுமை என்பது இவ் வறுவகைப்பட்ட பய

னிலையும் ஏற்பது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

'ஆ உண்டு' என்பது பொருண்மை சுட்டல்.
'ஆ செல்க' என்பது வியங்கொள வருதல்.
'ஆ கிடந்தது' என்பது வினைநிலை யுரைத்தல்.
'ஆ எவன்' என்பது வினவிற் கேற்றல்.
'ஆ கரிது' என்பது பண்புகொள வருதல்.
'ஆ பல' என்பது பெயர்கொள வருதல்.

இவை எல்லாம் பெயர் வேற்றுமைப் பொருள் என்பது.

'அன்றி அனைத்தும்' என்பது அத்துணைப் பொருள் எல்லாம் என்றவாறு.

தெய்வ:

எழுவாய் வேற்றுமைக்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொருண்மை சுட்டல் என்பது, முடிக்குஞ் சொல் எழுவா யாகி நின்ற பொருடன்னையே சுட்டி, அதன் தொழில் முதலாயின சுட்டாது நிற்கும் நிலைமை, எ-று. உ-ம்: சாத்தன் உளன், என வரும்.

வியங்கொள வருத லாவது தொழிலைப் பெயர்ப் பொருண்மை கொள்ளுமாறு வரும் ஏவற்சொல். உ-ம்: சாத்தன் செல்க.

வினைநிலை யுரைத்தலாவது அப் பொருளின் தொழிலின் நிலைமையை உணர்த்த வருஞ் சொல். உ-ம்: சாத்தன் சென்றான்.

வினவிற் கேற்றலாவது அப் பெயர்ப் பொருண்மையை வினவுதற்கு ஏற்புடைய சொல். உ-ம்: சாத்தன் யாவன்? சாத்தன் யாண்டையன்? சாத்தன் எத் தன்மையன்? என்பன.

பண்புகொள வருதலாவது அப் பெயர்ப் பொருண்மை பண்பு கொள்ளுமாறு வருஞ் சொல். உ-ம்: சாத்தன் கரியன், நெடியன், என்பன.

பெயர்கொள வருதலாவது. அப் பெயர்ப் பொருண்மை யுணரப் பிறிதோர் காரணத்தான் வந்து முற் பெயரோடு ஒட்டுப் படாது நிற்பது. உ-ம்: சாத்தன் வணிகன், முடவன், என்பன.

என்று அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே என்பது. என்று சொல்லப்பட்ட அவ்வனைத்தும் பெயர்க்குப் பயனிலை யாம், எ-று.

பயனிலை என்பது பெயர் வாளாது நிற்குமாயின், செப்பின்கட் பயனின்றாம் ஆதலான் அதனை முடிக்கும் சொல் பயனிலை என்றாயிற்று. அஃதேல், இவை யெல்லாம் பெயர்ப் பொருண்மையைச் சுட்டி நிற்றலின், பொருண்மை சுட்டல் என அடங்கும் எனின், அடங்குமாயினும், பொருண்மை சுட்டல் பொருண்மை மாத்திரதைக் குறித்தலானும், வியங்கொள வருதல் அப்பொருண்மை புடைபெயர்தற்கு நிமித்தம் ஆகி வருதலானும், வினைநிலை யுரைத்தல் அப் பொருளின் புடை பெயர்ச்சி யாகலானும், வினவிற் கேற்றல் அவ்வா றன்றி வினவப்படும் நிலைமையதாகி நிற்றலானும், பண்புகொள வருதல் அப் பொருட்கண் உள்ளதோர் குணத்தைக் குறித்து நிற்றலானும், பெயர்கொள வருதல் அப் பொருண்மை முழுதும் உணரப் பிறிதோர் வாய்பாடாக வருதலானும், வகுத்துக் கூறினர், என்க.

சாத்தன் தலைவன் ஆயினான்; இரும்பு பொன் ஆயிற்று, என்பன எவ்வாறு வந்தன எனின், அவையும் பொருளின் புடைபெயர்ச்சி யாகலானும், ஒன்று ஒன்றாகித் திரிதலாகிய வினையான் வருதலானும், வினைநிலை யுரைத்தலுள் அடங்கும். அஃதேல், தலைவன் பொன் என்னும் பெயரை எழுவாய் என்னுமோ பயனிலை என்னுமோ எனின், இரண்டு அல்ல; தலைவன் ஆதல்; பொன் ஆதல், எனத் திரிபு குறித்து நின்றன; பெயர் குறித்து நின்றன எனப்படா வென்க.

அன்றி யனைத்தும் பெயர் முடிபு என்னுது பயனிலை என்றதனால் பயனிலை பெயர்க்கு முன் னிற்றலே யன்றிப் பின்னிற்றலும் ஆம் என்று கொள்க. உ-ம்: உளன் சாத்தன்; வந்தான் சாத்தன்; யாண்டையான் சாத்தன்; கரியன் சாத்தன்; வாணிகன் சாத்தன், என வரும்.

ஈண்டுக் காட்டப்பட்ட உதாரணத்துள் வினை பற்றி வருவனவெல்லாம் முற்றுச்சொல் பெயர் கொண்டு முடிந்தநாம், பயனிலை மாறி நின்றன ஆகா வெனின்; முற்றுச்சொல் எனவே முடிந்த சொல் என்பது பெறுதும்; அது பின்னும் மற்றொரு சொல்லை அவாவி நிற்கும் என்றல் பொருந்தாமையானும்,

முற்றுச்சொ னேக்கா மரபின; அனைத்தும்

முற்றி நிற்பது முற்றியன் மொழியே, என அகத்தியனார் ஓதுதலானும், மொழி மாறுதல் இலக்கணமாக எச்ச வியலுள் ஓதுகின்றமையானும் அது சொல் லறியாதார் உரை யென்க.

சேனு:

இ—ள்: பொருண்மை சுட்டல் — ஆ வுண்டு, என்பது. வியங்கொள வருதல் — ஆ செல்க, என்பது. வினைநிலை யுரைத்தல் — ஆ கிடந்தது, என்பது. வினுவிற் கேற்றல் — அஃ தியாது; அஃதெவன், என வினுச்சொல்லொடு தொடர்தல். பண்புகொள வருதல் — ஆ கரிது, என்பது; தன்னின முடித்த லென்பதனுல், ஆ வில்லை; ஆ வல்ல, என்னுந் தொடக்கத்துக் குணப் பொருள வல்லா வினைக் குறிப்போடு தொடர்தலுங் கொள்க. பெயர் கொள வருதல் — ஆ பல, என்பது. அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே யென்பது அவ் வாறும் பெயர் வேற்றுமைப் பயனிலை யாம்; எ—று.

முடிக்குஞ் சொற்பொருள் அத் தொடர் மொழிக்குப் பயனு கலின் பயனிலை யென்ருர்.

உண் டென்பது பண்பு முதலாயின சுட்டாது உண்மையே சுட்டலின் வேறு கூறினுர். பொய்ப் பொருளின் மெய்ப் பொருட்கு வேற்றுமை யுண்மை யாகலின், அவ் வுண்மையைப் பொருண்மை யென்ருர்.

வியங்கொள வருதல் வினைநிலை யுரைத்தற்கண்ணும், வினுவிற் கேற்றல் பெயர் கொள வருதற்கண்ணும், வினைக் குறிப் பாயவழிப் பண்பு கொள வருதற் கண்ணும் அடங்கு மாயினும் வினையும் பெயரும் பண்பும் முடிக்குஞ் சொல் வாதலே யன்றி முடிக்கப்படுஞ் சொல் லாதலு முடைய; வியங்கோளும் வினுவும் முடிக்குஞ் சொல்லா யல்லது நில்லாமையின், அவ் வேறுபா டறிவித்தற்கு வேறு கூறினு ரென்பது.

‘பெயர் தோன்று நிலை’ (சொல் — 65) என்றதனுனும், ‘அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே’ யென்பதனுனும், பெயர் தோன்றிய துணையாய் நின்று பயனிலைத் தாதல் எழுவாய் வேற்றுமைய திலக்கண மென்பது பெற்ரும்.

ஆ பல என்புழிப் பல வென்பதற்குப் பயனிலை யா தெனின், அதுபயனிலையாய் ஆ வென்பதனை முடித்தற்கு வந்த தாகலின், தான் பிறி தோர் சொன் னுேக்காது ஆ வென்பதனுேடு தொடர்ந்து அதனை முடித் தமைந்து மாறு மென்பது.

அஃதேல், பயனிலை கொள்ளாதது எழுவாய் வேற்றுமை யாமா றென்னை யெனின், உரு பேற்றல் பெயர்க் கிலக்கண மாயினும் உரு பேலாதவழியும் பெய ராமாறு போல, எழுவாய் வேற்றுமை பயனிலை கொள்ளாதவழியும் எழுவாய் வேற்றுமையே யா மென்பது. இலக்கிய மெங்குஞ் செல்லாதன இலக்கண மாமா றென்னை யெனின், ஆண் டிலக்கண மாவன உரு பேற்றற் கேற்ற தன்மையும் பயனிலையும் பயனிலை கோடற் கேற்ற தன்மையு மாகலின் அத் தன்மை எல்லாவற்றிற்கு முண்மையின் இலக்கண மா மென்பது.

அகரச் சுட்டு அன்றியென ஈறு திரிந்து நின்றது. அன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலை யெனவே, பயனிலை கோடல் பெயர்க் கிலக்கண மென்பதூஉம் பெற்றாம்.

நச்சி:

இஃது, அவ் வெழுவாய் ஆறு பயனிலையும் ஏற்கும் என் கின்றது.

இ-ள்: பொருண்மை சுட்டல் — ஒரு பொருளினது பண்பு முதலியன சுட்டாது அப் பொருட் டன்மையது உண் மைத் தன்மையே சுட்டி நிற்க வருதல், வியங்கொள வருதல் — தான் ஏவலைக் கொள்ள வருதல், வினைநிலை உரைத்தல் — தனது தொழிலினைச் சொல்ல வருதல், வினாவிற்கு ஏற்றல் — தான் வினா விற்குப் பொருந்தி வருதல், பண்பு கொள வருதல் — தனது பண்பினைத் தான் கொள்ள வருதல், பெயர் கொள வருதல் — தான் பெயரைக்கொண்டு முடிய வருதல், என்று அன்றி அனைத் தும் என்று சொல்லப்பட்ட அவ் வனைத்து வரவும், பெயர்ப் பயனிலையே — அவ் வெழுவாய் வேற்றுமையது பயனாகிய நிலைமை, எ-று.

தன்னை முடித்தற்குப் பின்வரும் சொல்லின் பொருண்மை யைத் தான் அவாவி நிற்கும் நிலை வேறுபாட்டைப் பயனிலை என்றார். உ-ம்: ஆ உண்டு; ஆ செல்க; ஆ கிடந்தது; ஆ யாது? ஆ எவன்? ஆ கரிது; ஆ பல, என வரும்.

'தன்னினம் முடித்தல்' என்பதனான், ஆ இல்லை; ஆ அல்ல என வினைக் குறிப்பும் கொள்க.

'பொருள்' என்னுது 'பொருண்மை' என்ருர், அப் பொருளினது தன்மை உணர்த்துதற்கு. பொருள் தன்மையாவது, அப் பொருள்களின் சாதித் தன்மை. ஆ என்னும் தன்மை எக் காலத்தும் கெடாது நிற்கும் என்பது உணர்த்துதற்கு ஆ உண்டு, என்ருர். 'கட்புலனுகிய ஆ கெடவும், அச் சாதித் தன்மை கெடாது' என்பது தோன்றப் 'பொருண்மை சுட்டல்' என்று சூத்திரம் செய்தார்.

வினைநிலை உரைத்தல் தன் தொழில்; வியங்கொள வருதல், மேல் தன்கண் தொழில் நிகழ்வதாக ஒருவன் ஏவப்படுதல். இரண்டற்கும் இதுவே வேறுபாடு.

வினைநிலை உரைத்தலும், பண்பு கொள வருதலும், பெயர் கொள வருதலும், முடிக்கும் சொல் ஆதலே அன்றி, முடிக்கப் படும் சொல் ஆதலும் உடைய. வியங்கோளும், வினுவும், முடிக்கும் சொல்லா யல்லது நில்லா. வினைக்குறிப்பு, முடிக்கும் சொல்லா யல்லது வராது.

'ஆ பல', என்பது பிறிது ஓர் சொல் நோக்காது', ஆ என்பதனேடு அமைந்து மாறும்.

முன்னிற் சூத்திரத்துத் 'தோன்றுநிலை' (வேற்றுமையியல், சூ. 4) என்றதனுனே 'ஆயன் சாத்தன் வந்தான்' எனப் பண்பு ஒட்டு ஆகாது விட்டிசைத்து நின்று மற்ருேர் எழுவாயின் பயனிலையோடு தானும் பயனிலை கோடலும், 'ஆயன் வந்தான்' என வினைப்பின்னும் நிற்றலும், 'சாத்தன் தலைவன் ஆயினுன்' எனப் பயனிலைக்கு அடையாய் நிற்றலும், 'சாத்தன் கண் நல்லன்,' எனச் சினைவினை முதற்கு ஏற்றிக் கூறலும், 'இம் மணி நிறம் நன்று' எனத் தொழிலின் தொழிலைத் தொழில் அடைந்த பொருட்கு ஏற்றிக் கூறலும், 'இவ் யாறு நீர் ஒழுகும்' என இடத்து நிகழ் பொருளின் தொழில் அந்த இடத்திற்கு ஏற்றிக் கூறலும், 'இறைவன் அருளல் எம் உயிர் காக்கும்; இறைவன் அருளலின் யாம் உயிர் வாழ்தும்,' என எழுவாய்க்குப் பயனிலையாய் வந்த பெயர் தானும் எழுவாயாய்ப் பயனிலை கோடலும், அஃது உருபு ஏற்றலும், 'ஆ செல்க; செல்க ஆ' என முன்னும் பின்னும் பயனிலை நிற்றலும் பிறவும் கொள்க.

'சிறுமை பெருமையிற் காணுது துணிந்தே' (நற்றிணை 50) எனவும்,

'கோலல் செம்மையிற் சான்ரோர் பல்கி' (புறம் 117: 6) எனவும் வரும் பண்புகளும் பொருள் இயைபு இன்றேனும் பெயர்கொள வருகற்பாற் படுதலும், 'ஆசிரியன் பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான்,' எனப் பல பெயர் ஒருங்கு எழுவாயாய் நின்று ஒரு பயனிலை கோடலும் இதனாற் கொள்க. இன்னும் எழுவாய் வேற்றுமையின் விகற்ப மெல்லாம் வழக்கினகத்து அறிந்து இவ்விலேசான் முடித்துக் கொள்க.

கல்:

என்பது என் நுதலிற்றோ வெனின், மேற் சொல்லப்பட்ட எழுவாய் வேற்றுமை என்பது ஆறு வகைப்பட்ட பயனிலையு மேற்று நிற்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பொருட் டன்மை கருதி வரும் வரவும், ஏவலைக் கொள்ள வரும் வரவும், தனது தொழிலினைச் சொல்ல வரும் வரவும், வினவுதற் பொருண்மைக் கேற்று வரும் வரவும், தனது பண்பினைக் கொள்ள வரும் வரவும், ஒரு பெயரினோடு தனது பொருண் முடிவதாக வரும் வரவும், என்று சொல்லப்பட்டவை யனைத்தும் வரும் பெயர்ச் சொலது பயனாகிய நிலைமை யென்றவாறு, என்றது, முதல் வேற்றுமையாவது இவ்வாறு பொருண்மையுந் தோன்ற நிற்பது என்றவாறு. அவ்வப் பொருண்மையை விளக்குவன பின்வரும் சொற்கள், என்றவாறு.

பெயர்ப் பயனிலை யென்றது பின்வருகின்ற சொற்களே யன்று; அவ்வச் சொல்லின் பொருண்மையினைக் குறித்த பெயர் நிற்கு நிலைமை வேறுபாடுகளை, என்றவாறு.

நிலை யென்னுது பயனிலை யென்றது 'அப் பெயர்களைக் கேட்டான் இப்பொழுது இப் பொருள் இன்ன நிலைமைத்து என வுணரும் உணர்ச்சிக்குப் பயன்பட நிற்கும் நிலைமைய வென்றற் கென்பது.

உதாகரணம்:-

பொருண்மை சுட்டல்: ஆ உண்டு, என்பது. இதன் பண்பு முதலியவற்றைக் கருதாது பொருட் டன்மையைக் கருதி நிற்றலாற் பொருண்மை சுட் டென்னப்பட்டது. உண்மை

1. [ஆ] (அ)ப்

யென்பது பண்பன்றோ வெனின், அன்று; அப் பொருட் டன்மை யென்பது போலும் கருத்து; [1] ஆ வில்லை யென்பது இதன்கட் பட் டடங்கும்.

வியங்கோள் வருதல்: ஆ செல்க, என்பது. இது மேற் சொல்லுகின்ற வினைநிலை [2] யுணர்த்தலுள் அடங்குமே யெனினும் வேறுபா டுண்டு. அது தன்கண் நிகழ்ந்த தோர் வினை. இது மேற் [3] றன்கட் டொழில் நிகழ்வதாக ஒருவனால் ஏவப் பட்டு நிற்கும் நிலை என வுணர்க.

வினைநிலை யுரைத்தல்: ஆ கிடந்தது, என்பது.

வினாவிற் கேற்றல்: ஆ யாது? ஆவோ? என வரும்.

பண்புகொள வருதல்: ஆ கரிது, என்பது. இதுவும் வினை நிலை யுரைத்தலுள் அடங்காதோ வெனின், அடங்கும். எனினும் வினைக்குறிப் பாகலான் வேறு கூறினா ரென்பது.

பெயர்கொள வருதல்:- ஆ பல; ஆ வி து, என வரும்.

மேற் சூத்திரத்து 'எழுவாய் வேற்றுமைப் பெயர்' என்றது தோன்றுநிலை யென்றதனாற் பெயர்கள் ஓரோவழி [4] எழுவாயாகத் தாம் பயனிலை கொள்ளாது மற்றோ ரெழுவாயின் பயனிலையோடு தாமும் பயனிலை யாயும், ஓரோர்வழித் தாமே பயனிலை யாயும், ஓரோர்வழி எழுவாயோடு இயைபுபடாது பயனிலைக் கடை யாயும், பிறவா றாயும் வருவனவும் உள வென்பது கொள்ளப் பட்டது.

உதாகரணம்:- தாமும் பயனிலை யாயது: ஆயன் சாத்தன் வந்தான், என்பது. இது, ஆயன் வந்தான் சாத்தன், என வினைப் பின்னும் நிற்கும் என்பது. சாத்தன் என்பது எழுவாய். ஆயன் என்பது முன்னே பயனிலையாய் நின்றதன்றாலோ வெனின், அவ் வாறு மா மெனினும் [5] சொல்லுவான் கருத்து அன்னதன் றென் பது. ஆயனாகிய சாத்தன் என்பது பண்புத்தொகை யானாலோ வெனின், ஓசை பிளவுபட் டிசைத்தலா னாகா தென்பது.

தானே பயனிலை யாயது; ஆ பல, வென்பது.

---

1. ஆ [பி] (வி)ல்லை 2. யு [ணர்] (ரை)த்தலுள் 3. றன் [க்] கட்.
4. [ய] (எ) ழுத. 5. சொல்லுவா [ன்த்தருத்தன்னரெ] (ன்கருத்து அன்ன தன்றெ) ன்பது.

பயனிலைக் [1]கடை யாயது: சாத்தன் றலைவ னாயினா னென்பது.

பிறவாறாய் வருதல்: ஆசிரியன் [2]பேரூர் கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன் வந்தான். ஒரு பெயர் எழுவாயாய் நில்லாது பல பெயரும் ஒருங்கே எழுவாயாய் நிற்பன வெனக் கொள்க.

இன்னும் இவ் விலேசினான் பெயர்கள் எழுவாயாய் பயனிலை கொண் டமைந்து மாற்றி நில்லாது எழுவாய் தானும் பயனிலையுங் கூடி யொருசொ னீர்மை பட்டு மற்றோர் எழுவாய்க்குப் பயனிலையாய் வருவனவுங் கொள்ளப்படும். அவை சினையின் தொழிலை முதற் கேற்றிக் கூறலும், பண்பின்தொழிலை பண் படைந்த பொருட் கேற்றிக் கூறலும், தொழிலின் வினையைத் தொழி லடைந்த பொருட் கேற்றிக் கூறலும். இடத்து நிகழ் பொருளின் றொழிலை இடத்திற் கேற்றிக் கூறலும், என வின்னோரன்ன பல வகைப்படும்.

உ-ம்: சினைவினை முதற் கேற்றிக் கூறல்: சாத்தன் கண்ணல்லன்; இவ் யானைக்கோடு கூரிது என்பன போல்வன. பண்பின் வினை பண்படைந்த பொருட்கேற்றிக் கூறல் :- இம் மணி நிற நன்று; இம் மலர் நாற்றம் பெரிது, என்பன.

தொழிலின் வினையைத் தொழி லடைந்த பொருட் கேற்றிக் கூறுதல்: இக் குதிரை நடை நன்று; இத் தேர் செலவு கடிது. என்பன. இடத்து நிகழ் பொருளின் றொழி லிடத்திற் கேற்றிக் கூறல்: இவ் யாறு நீ ரொழுகும்; இவ் வயல் நெல் விளையும் என்பன. பிறவும் வந்தவழி கண்டு கொள்க.

இன்னும் அவ் விலேசானே எழுவாய்க்குப் பயனிலையாய் வந்த பெயர் தானும் *எழுவாயாகிப் பயனிலை கொண்டும், உருபேற்றும் வருவனவுங் கொள்ளப்படும்.

உ-ம்: இறைவன் அருளில் எம் முயிர் காக்கும், எனவும். இறைவன் அருளவின் யா முயிர் வாழ்தும், எனவும் வரும். இஃது ஆறுவ தா மெனினு நோக் கஃதன் றென்பது.

பயனிலை முன்னும் பின்னும் நிற்றலும், பயனிலை சில சொல் விடைகிடப்ப வருதலும் ஈண்டே கொள்ளப்படும். ஆ செல்க;

---

1. (க) டையா (ய)து. 2. பே(ரு)ர் கிழா (ன்) * எழுவாய்ப் : திருத்தம்.

செல்க ஆ, என முன்னும் பின்னும் நின்றது. ஆ சாத்த னுய்ப்ப நெறியைத் தன் கன்றினேடு *மரங்கரத்தாகிவ் வூரினின்றும் அவ்வூரின்கட் செல்லும்: இஃது இடைகிடந்த சொல்லொடு வந்தவாறு. இறைவன் அருளல் என்பது எழுவாயொடு பொருளியை பின்ருயினும் வினைமுதற்பொரு டோன்ற வந்தமையின் பெயர்கொள வருதல் என வழங்கு மென்பது.

"சிறுமை பெருமையிற் காணது துணிந்தே" எனவும், "கோஒல் செம்மையிற் சான்றோர் பல்கி" எனவும் வரும் பண்புகளும் பொருளியை பில வெனினும் ஒருவாற்ருன் பெயர் [1]கொள வந்த[2]தன்மேற் பட்டடங்கும் என்பது.

[3]இன்னு மிவ் வெழுவாய் வேற்றுமையின் விகற்பங்க ளெல்லாம் வழக்கினகத் தறிந்து இவ் விலேசினகத்து அமைத்துக் கொள்க.

அரசு :

என்பது எழுவாய் வேற்றுமை பொருண்மை சுட்டல் முதலாகிய ஆறு வகைப்பட்ட பயனிலையையும் ஏற்கும்.

உதா : பொருண்மை சுட்டல்: ஆ வுண் டென்பது. வியங்கோள் வருதல் : ஆ செல்க, என்பது. வினைநிலை யுரைத்தல்: ஆ கிடந்த தென்பது. வினவிற் கேற்றல் : ஆவோ வென்பது. பண்புகொள்ளுவருதல் : ஆ கரி தென்பது. பெயர்கொள வருதல் : ஆ வொன்று, பல வென்பது. பொரு ளென்னுது பொருண்மை யென்றதனுல் ஆ வென்னும் பொருள் கெட்ட [4]தெனினு மவ் வாவினது சாதித் தன்மையெக் காலத்துங் கெடாது நிற்கு மென்பது கொள்க.

68. பெயரி னுகிய தொகையுமா ருளவே
யவ்வு முரிய வப்பா லான. (6)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்ரே வெனின், தொகைச் சொல்லும் பயனிலை ஏற்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

---

* மரங்கரந்தாகிவ் : தெளிவில்லை. 1. கொ[ள்]ள 2. தன்[மே](ம)ற்
3. (இன்னுமிவ்) 4. தென்று : திருத்தம்.

உரை: அறுவகைத் தொகைச் சொல்லும் எழுவாய்வேற்றுமைப் பயனிலைப் பாடும் பிழையாது வரும், என்றவாறு.

வரலாறு:

யானைக் கோடு உண்டு; யானைக் கோடு செல்க; யானைக் கோடு வீழ்ந்தது; யானைக் கோடு யாது; யானைக் கோடு வெளிது; யானைக் கோடு பத்து, என வரும். பிறவு மன்ன.

இனி ஒரு கருத்து :– 'பெயரி னாகிய தொகையு மா ருளவே' என்பது, பெயரும் பெயருந் தொக்க தொகையும் என்றவாறு. உம்மையான் வினையும் பெயருந் தொக்க தொகையும் எழுவாய் வேற்றுமைப் பயனிலைப் பாடு பிழையாது வரும் என்று கொள்க.

அது, 'கொல் யானை' என்பது.

தெய்வ:

இ–ள்: பெயரான் ஆகிய தொகைச் சொல்லும் உள; அவையும் எழுவா யாகிப் பயனிலை கோடற்கு உரிய, எ–று.

எற்புழிக் கோடல் என்பதனால் பல பொருள் குறித்த பெயரே கொள்ளப்படும். உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை.

உ-ம்: யானை குதிரை உள; செல்க; வந்தன; கரிய; யாண்டைய; பல, என வரும்.

அஃதேல், பலபொருள் குறித்து வருதல் வேண்டு மென்றதென்னை? ஒரு பொருட்கண் வரும் பெயரும் தொகை யாகாதோ எனின், தொகை யாம்; ஆயினும், இறுதிக்கண் நின்ற பெயர் பயனிலை கொண்டும் ஏனைய பெயர் பயனிலை ஏலாதும் நிற்கும். இவை இரண்டு பெயர்மேலும் பயனிலை ஒத்து வருதலின் வேறோதப்பட்டன.

சேஞ:

இ–ள்: பெயரும் பெயருந் தொக்க தொகையு முள; அவையு முரிய எழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கோடற்கு; எ–று.

எ–டு; யானைக் கோடு கிடந்தது; மதிமுகம் வியர்த்தது; கொல்யானை நின்றது; கருங்குதிரை யோடிற்று; உவாப் பதினான்கு கழிந்தன; பொற்றொடி வந்தாள், என வரும்.

பெயரி னுகிய தொகையு மென்னும் உம்மையாற், பெய ரொடு பெயர் தொக்கனவே யன்றி, நிலங் கடந்தான்; மாக் கொணர்ந்தான், எனப் பெயரொடு வினை வந்து தொக்க வினையி னுகிய தொகையு முள, என்பதாம். ஆகவே, பெயரொடு பெயரும், பெயரோடு தொழிலுந் தொக்கன தொகை யென்பது பெற்ரும்.

அவ்வு முரிய எனப் பொது வகையாற் கூறினுரேனும், ஏற்புழிக் கோட லென்பதனுன் எழுவாய் வேற்றுமை யாதற் கேற்புடைய பெயரி னுகிய தொகையே கொள்ளப்படும்.

இரு தொடர்படச் சூத்திரித் திடர்ப்படுவ தென்னை? பெயரி னுகிய தொகையும் எழுவாய் வேற்றுமை யா மென் ருேத அமையாதோ எனின், அங்ஙன மோதின் பெயரொடு பெயரும், பெயரோடு வினையுந் தொக்கன தொகைச் சொல்லா மென்னுந் தொகையிலக்கணம் பெறப்படா தாம்; அவ் விலக்கண முணர்த்துதற்கு இவ்வாறு பிரித் தோதினு ரென்பது.

பெயரி னுகிய தொகையு மென்ற உம்மையான் வினையி னுகிய வினைத்தொகை தழுவப்பட்ட தென்றும், 'எல்லாத் தொகையு மொருசொன் னடைய' (சொல் — 420) என்பதனுல் தொகைச் சொல்லெல்லாம் எழுவாய்வேற்றுமை யாதல் பெறப் படுதலின், ஈண்டு அவ்வு முரிய அப்பாலான என்றது தொகைச் சொற்குப் பயனில கோடன் மாத்திர மெய்துவித்தற் கென்றும், உரையாசிரியர் கூறினுரா லெனின் அற்றன்று: வினைத் தொகைக்கு நிலைமொழி வினை யென்பது உரையாசிரியர்க்குக் கருத்தன்மை 'வினையின் ருெகுதி காலத் தியலும்' (சொல்–415) என்னுஞ் சூத்திரத்திற் சொல்லுதும்.

இனி 'எல்லாத் தொகையு மொருசொன் னடைய' (சொல்– 420) என்பதற்கு ஒருசொன் னடைய வா மென்பதல்லது எழுவாய் வேற்றுமை யா மென்னுங் கருத் தின்மையானும், அக் கருத் துண்டாயின் அவையும் எழுவாய் வேற்றுமையாய் நின்று 'அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே' (சொல் — 66) என்றதனுல் பயனிலை யெய்து மாகலின் அவ்வு முரிய அப்பா லான, வென்றல் கூறியது கூறிற் ரு மாகலானும், அதுவு முரையாசிரியர் கருத்தன் றென்க.

அஃதேல், தொகையும் எழுவாய்வேற்றுமை யா மென்பதே இச் சூத்திரத்திற்குக் கருத்தாயின் எழுவாய் வேற்றுமை பெயர் தோன்று நிலையே (சொல் — 65) என்னுஞ் சூத்திரத்தின்பின் வைக்க வெனின், பெயர் தோன்றிய துணையாய் நிற்றலும் பயனிலை கோடலு மாகிய எழுவாய்வேற்றுமை யிலக்கண மிரண்டுந் தொகைச் சொற்கு மெய்துவித்தற்கு அவ் விரண்டு சூத்திரத்திற்கும் பின் வைத்தா ரென்பது. ஆண்டு வைப்பின், 'அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே' (சொல் — 66) என்றதனாற் பயனிலை கோடல் பெயர்க்கே யாய்த் தொகைக் கெய்தா தா மென்பது.

நச்சி :

இது, தொகைப் பெயரும் பயனிலை கொள்ளும் என்கின்றது.

இ-ள் : பெயரி னாகிய தொகையு மா ருளவே-பெயரும் பெயரும் தொக்க தொகையும் உள (உம்மையால், பெயரும் வினையும் தொக்க தொகையும் உள); அவ்வும் உரிய அப்பா லான — அவ் விரண்டனுள் பெயரும் பெயரும் தொக்க தொகை யும் உரிய அவ் வெழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளு மிடத்து, எ-று.

'அவ்வும் உரிய', என்றது இரண்டற்கும் பொதுவேனும், 'ஏற்புழிக் கோட' லான் ஒன்றற்கே ஆயிற்று.

உ-ம் : யானைக் கோடு கிடந்தது; மதிமுகம் வெயர்த்தது; கொல் யானை நின்றது; கருங் குதிரை ஓடிற்று; உவாஅப் பதினான்கு கழிந்தன; பொற்றொடி வந்தாள், (பி-ம். கழிந்தது) என வரும்.

'நிலம் கடந்தான்; குன்றத்து இருந்தான்,' எனப் பெயரொடு வினை தொக்கன எழுவாயாய்ப் பயனிலை கொள்ளாது முற்றாய் நிற்கும் என்று உணர்க. இதனால் தொகை இரு வகைய, என்பதூஉம் கூறினார் ஆயிற்று.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், தனிப் பெயரே யன்றித் தொகைப் பெயர்களும் பயனிலை கொள்ளும் என்கின்ற துணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இரண்டு பெயர்ச் சொன் முதலாக வுளவாகிய தொகைச் சொற்களும் உள. உம்மையால் ஒருவினையும் பெயர் முதலாக வுளவாகிய தொகைச் சொல்லும் உண்டு. அவ் விரு திறத்துத் தொகைச்சொல்லும் மேற் சொல்லப்பட்ட பயனிலைக் கூற்றின்கண் ணுரிய வென்பது.

உ-ம்: யானைக் கோடு உண்டு, செல்க, வீழ்ந்தது, யானைக் கோடோ? பெரிது, பல, என வரும்: இவை பெயரி ணுகிய தொகை.

கொல்யானை உண்டு. செல்க, வீழ்ந்தது, கொல்யானையோ, யாது, பெரிது, பல, என. இவை வினையி ணுகிய தொகை.

தொகையும் பயனிலை கொள்ளும் என்கின்றமையின் இவை யும் எழுவா யாகற் பால பிற.

அதற்கு விதி யாதோ வெனின் எச்சவியலுள் "எல்லாத் தொகையும்" என்னும் (தொல்-சொல்-எச்ச-ல். 420) சூத்திரத் துரையுட் கூறப்படும் என்பது.

அரசு:

என்பது பெயரும் பெயருந் தொக்க தொகையு முள. அதுவு முரிய வவ் வெழுவாய்வேற்றுமையாய்ப் பயனிலை கோடற்கு.

உதா: யானைக் கோ டுண்டு, செல்க, வீழ்ந்தது, கோடே பெரிது, [1]பல வென வரும். உம்மையால் வினையொடு [2]பெயர்தொக்கதூஉ மெழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளும். கொல் யானை உண்டு, செல்க, என வொட்டிக் கொள்க. அன்றியுந் தொகையுமா ருளவே என்றதனு லறு வகைப்பட்ட தொகைச் சொல்லு மெழுவாய்வேற்றுமை யாய்ப் பயனிலை கொள்ளு மென்க.

உதா: யானைக் கோடு கிடந்தது; மதிமுகம் வியர்த்தது; கொல் யானை நின்றது; கருங் குதிரை யோடிற்று; உவாப் பதினுன்கு கழிந்தது; பொற்றொடி வந்தாள், என வரும்.

1. பலயென: திருத்தம் 2. பெயர்த்தொக்: திருத்தம்

69. எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
யவ்விய னிலையல் செவ்வி தென்ப. (7)

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இன் னும் எழுவாய்வேற்றுமைக் காவ தோர் திற முணர்த்துதல் நுதலிற்று.

உரை: எல்லாப் பெயரும் பயனிலைப் பட நிற்றற் றன்மையில் திரியாமை அதற்குச் செவ்விது என்ப; பிறிது அதற்குச் செவ்விய தாகாமையு முடையது, என்றவாறு.

யாதோ எனின், உரு பேற்றலும் பெயர திலக்கணம்; அவ் வுரு பேற்றலை யுடைய தாகாது எனலு மாம்.

ஓரோ பெய ரென்பது என்னை? நீயிர் என்பது பெயர்: பெய ராயினும், நீயிரை என்று உரு பேலாது. பிறவும் அன்ன.

**தெய்வ:**

இது எழுவாய்வேற்றுமைக்கு உரிய தோர் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மூன்றிடத்துப் பெயரும் வெளிப்படத் தோன்றிப் பயனிலைப் பட நிற்றல் செவ்விது, எ-று.

எனவே, வெளிப்படத் தோன்றாது பயனிலை கோடல் செவ்விது அன்று, என்றவாறும்.

அவையாவன :— 'சோறு உண்ணுயோ சாத்தா' என்றவழி 'உண்பல்' என்பது செப்பின்கண் 'யான் உண்பல்' என எழுவாயும் பயனிலையு மாக நிற்கற்பாலது 'உண்பல்' என்னும் பயனிலை வெளிப்பட, 'யான்' என்னும் பெயர் தோன்றாது நிற்பினும், அப் பொருள் பட நிற்றலின் அத் தொடர் வழு எனப் படாமையால் செவ்வி தன்று ஆயிற்று. இது இத் தொடர்ச்சிக் கண் வழு வமைத்தவாறு: இது தன்மை.

'யான் யாது செய்வல்' என்றானை 'இதுசெய்' என்பது: இதன் கண் 'நீ' என்னும் பெயர் வெளிப்படாது நின்றது: இது முன்னிலை.

'அவன் யார்' என்றார்க்குப் 'படைக் கை மறவன்' என்ற வழி 'அவன்' என்னும் பெயர் தோன்றாது நின்றது; இது படர்க்கை.

அஃதேல், இவை, பெயரெச்சம் என்று எச்ச வியலுட் (37) கூறுகின்றதனுள் அடங்காதோ வெனின், அடங்கு மாயினும், எழுவாயும் பயனிலையும் ஆகி நிற்குங்கால், பெயர் தோன்றாது நிற்பின் வழுவாம் என்பதனால் ஈண்டுக் கூறல் வேண்டும், என்க.

இன்னும் இச் சூத்திரத்திற்குப் பொருள், வெளிப்படத் தோன்றாத பெயர் திரிபு உடைய, என்றவா றும்.

அவையாவன :— இரும்பு பொன் ஆயிற்று; குயவன் குடத்தை வனைந்தான், என்றவழி, எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடைக் கிடைந்த பொன், குடம் என்பன ஆயிற்று என்பதனோடும் வேற்றுமை யுருபினோடும் திரிந்தவாறு கண்டு கொள்க.

அஃதற்றாக, வனைந்தான் என்பது குயவனோடு முடிக; இடைக்கிடந்த குடத்தை யென்பதற்கு முடிபு யாதோ எனின், அது 'குடத்தை வனைந்தான்' என ஒருசொல் நீர்மைப்பட்டுக் 'குயவன்' என்பதற்குப் பயனிலை யாகி நிற்பின்அல்லது வேறு முடிபு உரைக்கப்படா தென்க.

ஆயின், எழுவாயும் பயனிலையும் என எல்லாச்சொல்லும் அடங்கும்; வேற்றுமை எட்டு எனல் வேண்டா எனின்; குயவன் வனைந்தான் என்றவழி, வனையப்பட்டதும், அதற் காம் கருவியும் அதனாற் பயனும், பிறவும் தோன்று மாதலின், அப் பொருள் களே வேற்றுமை யாகி இடைக்கிடக்கின் றன வென்க. இவை யெல்லாம் இடைக்கிடப்பன ஆகலின் செய்கின்றானை முன் வைக் கப்பட்டது.

சேனா :

இ-ள்: மூன் றிடத்துப் பெயரும் செவிப் புலனாகத் தோன்றி நின்று பயனிலை கோடல் செவ்வி தென்ப ஆசிரியர், எ-று. எனவே, அவ்வாறு தோன்றாது நின்று பயனிலை கோடலு முண்டு; அது செவ்வி தன்று என்றவா றும்.

பெய ரென்றது ஈண்டு எழுவாயை. கருவூர்க்குச் செல் வாயோ. சாத்த, என்றவழிச் செல்வல் எனவும், யான் யாது

செய்வல் என்றவழி, இது செய். எனவும், இவன் யார் என்ற வழிப் படைத் தலைவன் எனவும் செப்பியவழி, யான், நீ, இவன் என்னும் எழுவாய் வெளிப்படாது நின்று, செல்வல், இதுசெய். படைத்தலைவன் என்னும் பயனிலை கொண்டவாறு கண்டு கொள்க.

எவ்வயிற் பெயரும் என்றது என்னை எனின், செல்வல், இதுசெய் என்னுந் தன்மை, முன்னிலை வினைகளான் யான், நீ என்பனவற்றின் பொருளு முணரப்படுதலின் யான் செல்வல், நீ இது செய், எனப்பெயர் வெளிப்படுதல் பயமின் றாயினும் வழக்கு வலியுடைத் தாகலின் அவ்வாறு வருதல் பயமின் றெனப் படா தென்பது விளக்கிய எவ்வயிற் பெயரு மென்றா ரென்பது.

அவ் வியலா னிலைய லென விரியும். பயனிலைக்கு இரு நிலைமையு மோதாது எழுவாய்க்கே யோதுதலாற் பயனிலை வெளிப்பட்டே நிற்கும்.

எவ்வயிற் பெயரும் பயனிலை கோடல் செவ்வி தென, உரு பேற்றல் செவ்வி தன்றா மென உரைத்து அவ்வாய் நீயிர் என்பன உரு பேலா வென்று காட்டினுரால் உரையாசிரிய ரெனின்; அவ்வாய் என்பது இடைச்சொல்லாய் ஆண் டென்னும் பொருள் பட நின்றவழி உருபே யன்றிப் பயனிலையும் ஏலாதாம். இனி அல்வழிக்கண் நும் மென்பது திரிந்து நீயி ரென நின்ற திரிபைப் பெய ரெனக் கொண்டு உரு பேலா தென்றாராயின், நீ என்பதன் திரி பாகிய நின் என்பதனையும் பெயராகக் கொண்டு பயனிலை கொள்ளா தென்றும் கூறல் வேண்டும். அன்றி நும்மின் திரி பாகிய நீயிர் என்பதனை 'எல்லா நீயிர் நீயெனக் கிளந்து'. (சொல் – 174) என இயற்கைப் பெயரோடு ஒருங்கு வைத்தது நீயிர் என்னும் திரிபே இயல்பாக வேற்றுமைக்கண் நும் மெனத் திரியினு மமையு மென்னுங் கருத்தினரா யன்றே. அதனுல் இயல்பாகக் கொள்ளப்பட்ட நிலைமைக்கண் நீயிர் என்பதனை உரு பேலா தென்றாராயின் நும் மெனத் திரிந்து உருபேற்பதனை உரு பேலா தென்றல் பொருந்தா தாம். அதனு னதுபோலியுரை யென்க.

**நச்சி :**

இஃது, அவ்வெழுவாய் புலப்பட்டும் புல்ப்படா தும் நிற்கும் என்கின்றது.

இ-ள் : எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி – மூன்றிடத்து எழுவாயும் செவிப் புலனாகத் தோன்றி நின்று, அவ்வியல் நிலையல் செவ்விது என்ப — பயனிலை கோடல் செவ்விது என்ப ஆசிரியர், எ–று.

எனவே, அவ்வாறு தோன்றாது நின்று பயனிலை கோடலும் உண்டு; அது செவ்விது அன்று என்றவாறாம்.

"அவ்வியல் நிலையல்" என்பது எவ் வியல் நிலையலோ எனின், மேற்கூறிய ஆறு பயனிலையும் கொண்டு நிற்றல்; செவ்விது, அப் பயனிலை கோடலில் திரியாவாய்ப் பயனிலைப் பட்டு நிற்றல். 'செவ்விது' எனவே பிறிது ஏற்றற்குச் செவ்விய ஆகாமையும் உடைய அவை; நீயிர், என்பதும். 'அவ்வாய்க் கொண்டான்,' என்பதும் உருபு ஏற்றற்குச் செவ்விய அல்ல.

'கருவூர்க்குச் செல்வையோ சாத்தா' என்றவழிச் 'செல்வல்' எனவும், யான் எது செய்வல்?' என்றவழி, 'இது செய்' எனவும், 'இவன் யார்?' என்றுழிப் 'படைத் தலைவன்' எனவும் செப்பியவழி 'யான், நீ, இவன்' என்னும் எழுவாய்வேற்றுமை வெளிப்படாது நின்று, 'செல்வல். இது செய், படைத்தலைவன்' என்னும் பயனிலை கொண்டவாறு காண்க.

கல் :

என்பது என் நுதலிற்றோ வெனின், பெயர் உரு பேற்கும் வழிப் படுவதோர் இலக்கண முணர்த்தல் நுதலிற்று.

இ-ள் : எவ்விடத்துப் பெயரும் விளங்கத் தோன்றி மேற் சொல்லப்பட்ட வேற்றுமையாய்ப் பயனிலை கொள்ளும் இயல்பின்கண்ணே நிற்றல் செவ்வி தென்று சொல்லுப வாசிரியர், எ–று.

உ–ம் : மேற் காட்டினவவை யாம்.

இவ் விதி மேல் [1] பெற்று மன்றோ வெனின், மேற் பெற்ற தனையே ஈண்டும் மெலிதந்து வலி[2]யுறுத்தார் பிறிதொன்று [3]விளக்கிய தென்பது. அஃது யாதோ வெனின் பயனிலையேற்றலிற் செவ்வி தென உரு பேற்றலும் [4]பெயர்க் கிலக்கண மன்றே, அதனிற் செவ்விய வாகாதனவு முள வென்பது.

1. [ே](ெ) பற்று 2. வலியுறுத்தா [ன்] (ர்) 3. விள [ங்] (க்) கிய
4. பெயர் [த்தி] (க்கி)

உ-ம்: நீயி ரென்பதும் பெயர்: நீயிரை யென உரு பேலாது. இது நும் என்னும் [1]பெயரது அல்வழிப் புணர்ச்சித் திரி பென்றது. உம்மை யென உரு பேற்குமா லெனின், பிற சந்தித் திரிபு போல நிலைமொழி நிலை தோற்ற மில்லாது திரிந்த பின் பிறி தோர் பெயர் நிலைமை பட நிற்றலின் வே றோர் பெய ரென வேண்டியது போலும். இதனகத்து விகற்ப மெல்லாம் உரையிற் கொள்க. இந் நிகரன வோ ருருபு மேலாதன அவ் வாய்க்'கொண்டான், என்பது. அவ்வாய்க் கட் கொண்ட...... விழா முரு பேலாதது. [2]இந் நிகரன பிற வுரு பேற்கு மேலும் அறிந்து கொள்க.

அரசு:

என்பது தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றி டத்துப் பெயரும் விளங்கத் தோன்றி யெழுவாய் வேற்றுமை யாய் பயனிலை கோடல் செவ்வி தென்ப. முன் எழுவாய்வேற் றுமைப் பெய ரின்ன தென்று வரைந்த தின்மையின் அம் மூன் றிடத்துப் பெயருமே எழுவாய் வேற்றுமைப் பெய ரென் றுணர்த்தியவாறு காண்க.

70. கூறிய முறையி னுருபுநிலை திரியா
தீறுபெயர்க் காகு மியற்கைய வென்ப. (8)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், உரு பேற்றலும் பெயர திலக்கணமும் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: மேல் அவைதாம், ஐ, ஒடு, கு, இன், அது, கண் என் றோதிய முறையாற் கிடந்த உருபு முறைமையிற் றிரியாதே பெயரது ஈற்றுக்கண் வந்து *நிற்கும் இயல்பின யுடைய, என்றவாறு.

வரலாறு: சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண் என வரும்.

'நிலை திரியாது' என்றது, இவை இடைச்சொல் லாகலால், தம் மீறு திரிதல் என்னும் இலக்கண முடையகொல்லோ எனின், அவை இல என்றற்குக் கூறினன், என்பது. அன்றியும்

1. பெய[ர்](ரது) 2. தெளிவில்லை
* நிற்றல் இயல்பு – எனவும் பாடம்.

முன்னர் வேற்றுமை மயங் கியலுள்

கு, ஐ, ஆன் என வரூஉம் இறுதி

அவ்வொடு சிவணும் செய்யு ளுள்ளே (25) என்று செய்யுட் கண் திரிபு கூறுப வாகலானும் அது சொல்லினர், என்பது.

தெய்வ.

இ-ள்: சொல்லப்பட்ட உருபு முறையானே நின்ற நிலை யைத் திரியாது பெயர்க்கு ஈருகும் இயல்பினே யுடைய, எ-று.

முறையானே என்றது அடைவே ஒன்ருென்ருக என்ற வாறு. நிலையைத் திரியாது என்றது உருபேற்று நிற்கும் பெய ரைத் திரியாது அதன்கண் இயல்பாகி நிற்கும் என்றவாறு. இச் சூத்திரங் கூற வேண்டா; மேலைச் சூத்திரத்து, பெயர் ஐ. ஒடு கு இன் அது கண் விளி யென்னும் ஈற்ற என்பதனுற் பெறுதும் எனில், அது கருதி யன்று கூறியது. வடமொழிக்கண் எழுவா யாகிய பெயர் ஈறு கெட்டு உரு பேற்கும், அவ்வா றன்றித் தமிழ் மொழி ஈறு திரியாது எழுவா யாகிப் பெயரின் மேலே உருபு நிற்கும் என்பது அறிவித்தற் கெனக்கொள்க. உதாரணம் மேற் காட்டப்பட்டன. வருகின்ற சூத்திரத்தின்கண்ணும் விளங்கும்.

சேனு:

எழுவாய் வேற்றுமை யுணர்த்தி ஏனே யறுவகை வேற்றுமை யிலக்கணமு முணர்த்திய எடுத்துக் கொண்டார்.

இ-ள்: பெயர், ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்று கூறப் பட்ட முறைமையை யுடைய உருபு தந் நிலை திரியாது பெயர்க் கீரு மியல்பை யுடைய வென்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

எ-டு :- சாத்தனே, சாத்தனெடு, சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண் என வரும்.

அம் முறை பற்றி அவை யெண்ணுப் பெயரான் வழங்கப் படுதலின் கூறிய முறையி னுருபு என்ருர்.

வினைச்சொ லிறுதி நிற்கு மிடைச்சொல் தா மென வேறு உணரப்படாது அச் சொற் குறுப்பாய் நிற்கு மன்றே. இவை யவ்வாறு பெயர்க் குறுப் பாகாது தா மென வே றுணரப்பட் டிறுதி நிற்கு மென்பார் 'நிலை திரியாது' என்ருர்.

உருபு பெயர் சார்ந்து வரு மெனவே, உருபேற்ற வாகிய பெய ரிலக்கணமும் பெறப்பட்டது.

நச்சி:

இஃது, உருபு நிற்கும் இடம் கூறுகின்றது.

இ-ள்: கூறிய முறையின் உருபு நிலை திரியாது – மேல் ஐ ஒடு, கு, இன், அது, கண் என்று கூறிய முறைமையை உடைய உருபுகள் தத்தம் நிலை திரியாது, பெயர்க்கு ஈறு ஆகும் இயற்கைய என்ப–பெயர்க்கு ஈறு ஆகும் இயல்புடைய என்று கூறுவர் ஆசிரியர், எ–று.

உ–ம்: சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண் என வரும்.

இவ்விடைச் சொற்கள் பெயர்க்கு உறுப்பு ஆகாது தாம் என வேறு உணரப்பட்டு இறுதி நிற்றலின், 'நிலை திரியாது' என்றார். எனவே, வினைக்குத் தாம் என வேறுபடாது நிற்கும் ஆயின.

கல்:

என்ப தென் னுதலிற்றோ வெனின், உரு பேற்றலும் [1]பெயர்க் கிலக்கண மென்ப துணர்த்துத னுதலிற்று.

இ-ள்: மேற் கூறப்பட்ட முறைமையி னிடைநின்று வருகிற ஐ முதலாய உருபும் தந்தம் வாய்பாட்டு நிலைமையின் வேறாகாது திரியாது பெயர்க் கீறாய் வரு மியல்பினை யுடைய வென்று சொல்லுவர் ஆசிரிர், என்றவாறு.

உ–ம்: சாத்தனை, சாத்தனோடு, சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண் என வரும்.

மேற் "கு ஐ ஆன் என வரூஉ மிறுதி" என்று செய்யுட் கண் உரு பீறு திரிபு கூறுகின்றார். ஆதலின் அஃ தொழிய வழக்கினுட் டிரி பில்லை யென்றதற்கு 'நிலைதிரியா' தெனப்பட்ட தென்க.

அரசு:

என்பது மேல் ஐ ஒடு கு இன் அது கண் [2]என்று கூறிய முறையை யுடைய யுருபுக டத்த நிலை திரியாது பெயர்க் கீறா மியல்பை யுடைய வென்ப.

உதா: சாத்தனை, சாத்தனொடு, சாத்தற்கு, சாத்தனின், சாத்தனது, சாத்தன்கண் என வரும்.

1. [பெ] பெயர் [த்தி] (க்கி) ணமென்ப 2. யென்று : திருத்தம்.

71. பெயர் நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழி னிலை யொட்டு மொன்றலங் கடையே. (9)

**இளம்:**

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் அது, பெயர்க்கண்ணே கிடந்ததோர் இலக்கணம் நுதலிற்றாகலின்.

உரை : பெயர்ச் சொல் காலந்தோன்றா; தொழிற் பெயராயிற் காலம் தோன்றும், என்றவாறு.

வரலாறு : சாத்தன் என்பது காலந்தோன்றாது, உண்டான் என்பது காலந் தோன்றிற்று. மற்றுத் தொழிற் பெயரெல்லாங் காலந் தோன்றும்.

அற்றன்று, பெயர்ச் சொல் காலந் தோன்றா எனவே, தொழிற் பெயர் காலந்தோன்றுதலும் தோன்றாமையும் உடைய என்பதாம்.

இனி ஒரு கருத்து : தொழில் நிலைப் பெயர்ச்சொல் காலந் தோன்றா, காலம் ஒட்டும் தொழிற் பெயர் அல்லாத விடத்து என்றவாறு.

காலந்தோன்றாதன : உண்டல், தின்றல் என்பன; இவை அத் தொழின்மேல் நின்ற பெயர். இனிக் காலம் ஒட்டும் தொழிற் பெயராவன : உண்டான், தின்றான் என்பன; இவை அத் தொழில் செய்வான்மேல் நின்ற பெயர்.

**தெய்வ :**

மேற் பல சூத்திரத்தானும் பெயர் என்று எடுத் தோதிப் போந்தார். அது இத்தன்மைய தென அதன் இலக்கணங் கூறுதல் நுதலிற்று.

இ-ள்: பெயர் நிலைமையுடைய சொல் காலம் தோன்றா; தொழில் நிலையோடு ஒட்டி நிற்கும் பெயரும் ஒருவகை யல்லன காலம் தோன்றா, எ—று.

காலம் தோன்றா என்றது மத்திம தீப மாகி நின்றது. உம்மை இறந்தது தழீயிற்று. பெயர்க்கு இலக்கணம் பயனிலை கோடலும், உருபு ஏற்றலும், காலந் தோன்றாமையும் ஆம். அவற்றுள், பயனிலை கோடலும், உரு பேற்றலும் முற்பட்ட சூத்திரத்தாற் கூறலின் காலந் தோன்றாமை கூறப்பட்டது.

பெயராவன — தனிப் பெயர், ஒட்டுப் பெய ரென இரு வகைப்படும். அவற்றுள் தனிப்பெயர் — பொருள்மேல் வருவனவும், தொழில்மேல் வருவனவும் என இரு வகைப்படும். ஒட்டுப்பெயர் தெரிநிலைவினை யொட்டுப் பெயரும், குறிப்புவினை யொட்டுப் பெயரும் என இரு வகைப்படும். அவற்றுள் பொருள்மேல் வரும் தனிப்பெயர்: சாத்தன், கொற்றன், யானை, குதிரை, மா, தெங்கு என்பன. தொழில்மேல் வரும் தனிப்பெயர்: உண்டல், தின்றல், கொடுத்தல், எடுத்தல் என்பன. தெரிநிலை வினை யொட்டுப் பெயராவன: தொழிற் பெயரோடு ஒட்டி ஒரு பொருட்குப் பெயராகி வருவன. அவை: உண்டான், தின்றான், கொடுத்தான், எடுத்தான் என்பன. இவை வினைக்கருத் துள்வழி வினைச்சொல் லாம். பெயர்க்கருத் துள்வழி பெய ராம். குறிப்பு வினை யொட்டுப் பெயராவன: மற்றொரு பெயரோடு ஒட்டி யொரு பொருட்குப் பெயராகி வருவன. அவை: குழலன், கோட்டன், கச்சினன், கழலினன் என்பன. இவையும் வினைக் கருத் துள்வழி வினைக்குறிப் பாம். பெயர்க்கருத் துள்வழி பெய ராம்.

இவற்றுள் தெரிநிலை வினைப்பெய ரல்லாதன காலந் தோன்றா. இப் பெயர்கள் — சாத்தனை, உண்டலை, உண்டானை, குழலனை என உரு பேற்கும்.

சேனு:

இ-ள்: பெயர்ச்சொற் காலந் தோன்றா, வினைச் சொல்லோ டொக்கும் ஒருகூ றல்லாத விடத்து, எ—று.

சாத்தன், கொற்றன், உண்டல், தின்றல் எனக் காலந் தோன்றாது நிற்றலும், உண்டான், தின்றான் எனத் தொழினிலை யொட்டுவன காலந் தோன்றி நிற்றலுங் கண்டு கொள்க.

உண்டான், தின்றான் என்னுந் தொடக்கத்துப் படுத்துச் சொல்லப்படும் தொழிற்பெயர் வினைச்சொற் போலத் திணையும், பாலுங் காலமும் முதலாயினவற்றை விளக்கி, அன் ஆன் முதலாகிய ஈற்றவாய் வருதலின், 'தொழில் நிலையொடும்' என்றார். ஒட்டு மென்பது உவமச் சொல்.

பெயராகிய நிலையை யுடையது பெயர்நிலை யென அன் மொழித்தொகை. பெயர் — பொருள். தொழில் நிலையு மது.

காலந் தோன்று என்பன ஒருசொல்லாய்ப் பெயர்நிலைக் கிளவி யென்பதற்கு முடி பாயின.

பயனிலை கோடலும் உரு பேற்றலு மாகிய பெய ரிலக்கணம் ஈண்டுப் பெறப்படுதலின், அவற்றோ டியையக் காலந்தோன் றுமை யாகிய பெய ரிலக்கணமும் ஈண்டே கூறினார். பெரும் பான்மை பற்றிக் காலந் தோன்றுமை பெய ரிலக்கண மாயிற்று.

**நச்சி :**

இது, பெயர்க்கு ஓர் இலக்கணம் கூறுகின்றது.

இ-ள்: பெயர்க் கிளவி — பெயர்ப் பெய ராகிய சொல்லும், நிலைக் கிளவி — அப் பெயரது நிலையிலே நிற்றலை உடைய சொல்லும், காலம் தோன்று — காலம் தோன்றுவாய் நிற்கும், தொழில்நிலை ஒட்டும் ஒன்றலங்கடையே — ஒரு பொருளது புடை பெயர்ச்சியாய்க் காலம் தோன்றுதற்குப் பொருந்தும் ஒருகூற் றுத் தொழிற்பெயர் அல்லா இடத்து, எ-று.

‘பெயர், தொழில் நிலை’ என்பன ஆகுபெயர். பெயர் — பொருள்; தொழில் நிலை — காலம்; ஒட்டும் — பொருந்தும்.

இதனால், திணையும் பாலும் காலமும் இடனும் தோன்றும் தொழிற்சொல் படுத்தல் ஓசைப்பட்டு நின்றால், தொழிற் பெயராய் நின்று, பயனிலை கொண்டும் உருபு ஏற்றும் காலத்தைத் தோற்றுவித்தலும், பெயர்ப் பெயரும், பெயரது நிலையிலே நிற்றலை யுடைய சொல்லும் காலத்தை யாண்டும் தோற்றுவியாமையும் கூறினார்.

இடுகுறியாய்ச் ‘சாத்தன், கொற்றன்’ என வரும் பெயர்ப் பெயரும், புடைபெயர்ச்சி மாத்திரம் உணர்த்தி நிற்கும் ‘உண்டல், தின்றல்’ என வரும் வினைப்பெயரும், ‘பூசல், வேட்டை’ என்றாற் போலப் புடை பெயர்ச்சி விளக்காது நிற்கும் வினைப்பெயரும் ‘உண்டான், தின்றான்’ என்றாற் போலக் காலம் தோன்றி வினைமுதன்மேல் நின்ற படுத்தல் ஓசையான் ஆம் தொழிற் பெயரும், ஓசை வேறுபாட்டான் அன்றி ‘உண்டவன், உண்ணுமது’ என்றாற் போலத் தானே பெயராய்க் காலம் தோன்றி வினைமுதல்மேல் நிற்கும் தொழிற் பெயரும்,

'கொலைவர் கொடுமரம் தேய்த்தார் (கலி. 12: 1, 2) அவன் ஏறிற்றுக் குதிரை, என்றாற் போலச் செயப்படு பொருட்கண் காலம் காட்டி நின்ற தொழிற்பெயரும் 'யான் சொன்னவன், உண்பது (உண்பவை) நாழி' (புறம் 189: 5) என்றாற் போலச் செயப்படு பொருண் மேல் பெயராய்க் காலம் தோன்றி நிற்கும் தொழிற்பெயரும், பிறவாற்றாய் வரும் பெயர் வேற்றுமையும் உணர்க.

கல் :

என்பதென் னுதலிற்றோ வெனின், இதுவும் பெயர்க் கோரிலக்கண முணர்த்த னுதலிற்று.

இ-ள் : பெயராகிய நிலைமையுடைய சொற்கள் காலந் தோன்றா; யாவை யெனில், தொழிலாகிய நிலைமையுடைய தொழிற்பெயர்கள். யாண்டுமோ வெனின், அன்று. காலந் தோன்று[1]தற்குப் பொருந்தும் ஒருகூற்றுத் தொழிற்பெயரல்லாத விடத்து, என்றவாறு. என்றது:

பெயர் தாம் பெயர்ப் பெயரும், தொழிற்பெயரு மென விரு வகைப்படும். பெயர்ப் பெயராவன : சாத்தன், கொற்றன் என ஒரு தொழிலாற் பெயரன்றி அவ்வப் பொருட்கு இடுகுறியாய் வருவன. இவை, காலந் தோன்றா; தொழிற்பெயர் ஆயிற் றோன்றும்.

தொழிற்பெயர் தாமும் தொழின்மே னின்ற தொழிற் பெயரும், பொருண்மே னின்ற தொழிற்பெயரும் என விரு வகைப்படும்.

அவற்றுட் டொழின்மே னின்றனவுங் காலந் தோற்றா: அவை, உண்டல், தின்றல், எனப் பொருளது [2]புடைபெயர்ச்சியை யறிவித்து நிற்கு மென்பது. இவற்றுள், பூசை, வேட்டை என்றாற் போல்வன வினைச்சொற் கடியாய்ப் புடைபெயர்ச்சியை விளக்காது பெயர்ப்பெயரே போல் நிற்பன வுள, என்பது.

இனிப் பொருண்மே னின்றனவும், வினைமுதற்பொருண்மே னிற்பனவுஞ் செயப்படு பொருண்மே னிற்பனவு மென இரு வகைப்படும். அவ் விரு வகையுங் காலந் தோன்றி நிற்கும்.

---

1. தற்[றன்]கு(ப்) 2. புடைப் பெயர்ச்சி : திருத்தம்

என்றவாறு. அவை தாமும் ஓசை வேற்றுமையான் ஒருவழி வினையெனப் பட்டு நிற்பனவும் வினை யாகாது பெயரே யாய் நிற்பனவும் [1]என இரு வகைப்படும்.

உதாகரணம்: உண்டான், தின்ருன், உண்டது, தின்றது, எனப் படுத்த லோசையால் வினை யெனப்பட்டுக் காலந் தோன்றி [2]நின்றன.

உண்டவன், தின்றவன், உண்ணுமது, தின்னுமது என்பன ஓசை வேற்றுமையான் அன்றித் [3]தாமே பெயராய்க் காலங் காட்டி நின்றன. இவை, வினைமுதற்கட் பாகுபாடு.

'கொலைவர் கொடுமரந் தேய்த்தார்' 'அவ னேறிற்றுக் குதிரை' என்ருற் போல்வன வினைப்பெயரே அச் செயப்படு பொருட்கட் காலங் காட்டி நின்றது. யான் சொன்னவன்; உண்பவை நாழி [4]உடுப்பவை இரண்டு என்ருற் போல்வன [5]தாமே செயப்படுபொருண்மேற் பெயராய்க் காலந்தோன்றி [6]நின்றன. இவை செயப்படு பொருட் பாகுபாடு. நிலமுங் காலமுங் கருவியும் பற்றி வருந் தொழிற்பெயர் விகற்பமுங் [7]கொள்க.

உ-ம்: உண்டது என்பது. இத் தொழிற்பெயர்களின் கால விகற்பமும் அறிக.

பெயர்ப்பெயர் காலந் தோன்ருவென்பதற்கு விதி யாதோ வெனின், இச் சூத்திரத்தான் [8]எய்தவும் பெறுதும் என்பது.

அரசு:

என்பது பெயரது நிலையிலே நிற்றலுடைய சொற் காலந் தோன்ருதொரு பொருளது புடைபெயர்ச்சியாய்க் காலந் தோன்றுதற்குப் பொருந்துந் தொழிற்பெய ரல்லாத விடத்து. [9]ஒட்டும் — பொருந்தும்.

உதா:- சாத்த னென்றது காலந்தோன்ருது உண்டா னெனக் காலந் தோன்றி நின்றது. தொழிற்பெயர் இனி யொட்டு மொன்றலங் கடையே யென்றதனுல் தொழிற் பெயராய் நிற்குஞ் சொல்லுங் காலந் தோன்ருதனவு முள.

---

1. [யெ](எ)ன 2. தின்ற[து](ன) 3. தானே: திருத்தம்.
4. [வ](அ)டுப்பவை 5. தாமே[ன](ம) 6. தின்ற[து](ன)
7. கொள்க. [மறிக] 8. எய்[து](த)வும். 9. யொட்டு: திருத்தம்.

அவை யுண்டல், தின்றல், பூசல், வேட்டை யென்பன. அவை தொழிலது புடைபெயர்ச்சி மாத்திர முணர்த்துவ தல்லது காலந் தோன்ரு. இனி யெல்லாத் தொழிற்பெயருங் காலந் தோன்று மென்பதுபடச் சொல்லுதல் குற்றம். இனி, உண்டான் தின்ருன் என்புழித் தொழிலினை யொட்டுவன. காலந்தோன்றி நிற்றலுங் கண்டு கொள்க.

72 இரண்டா குவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்
பவ்விரு முதலிற் ருேன்று மதுவே,
காப்பி னேப்பி னூர்தியி னிழையி
ஞெப்பிற் புகழிற் பழியி னென்ரு
பெறலி னிழவிற் காதலின் வெகுளியிற்
செறலி னுவத்தலிற் கற்பி னென்ரு
வறுத்தலிற் குறைத்தலிற் ருெகுத்தலிற் பிரித்தலி
னிறுத்தலி னளவி னெண்ணி னென்ரு
வாக்கலிற் சார்தலிற் செலவிற் கன்றலி
னேக்கலி னஞ்சலிற் சிதைப்பி னென்ரு
வன்ன பிறவு மம்முதற் பொருள
வென்ன கிளவியு மதன்பால வென்மனுர். (10)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்ருே வெனின், இஃது இரண்டாம் வேற்றுமை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: இரண்டாம் எண்ணு முறைமைக் கண்ணது ஐ என்னும் பெயரை யுடைய வேற்றுமைச் சொல்; அது யாண்டு வரினும் வினையும் வினைக்குறிப்பும் என அவ் விரண்டையும் தனக்குத் தோற்று நிலமாக உடைத்து என்றவாறு.

அவ் விரண்டும் நிமித்தமாகத் தோன்றும் எனினும் அமையும்.

'மரத்தைக் குறைத்தான்' என்பது வினைபற்றி வந்தது.

'குழையை யுடையன்' என்பது வினைக்குறிப்புப் பற்றி வந்தது.

'அதுவே' என்பது அவ் விரண்டாம் வேற்றுமை தானே என்று தெரிந்தவாறு.

இனி, அவ் வினையும் வினைக்குறிப்பும் பற்றி அது வருமாற்றுக்கு உதாரணப் பகுதி காட்டுதும்:

ஊரைக் காக்கும்; கிளியை யோப்பும்; யானையை யூரும்; எயிலை யிழைக்கும்; தாயை ஒக்கும்; ஊரைப் புகழும்; நாட்டைப் பழிக்கும்.

என்று என்பது எண்ணிடைச் சொல்.

ஊரைப் பெறும்; ஊரை யிழக்கும்; மனைவியைக் காதலிக்கும்; படையை வெகுளும்; ஊரைச் செறும்; தாயை யுவக்கும்; நூலைக் கற்கும்.

என்று என்பது எண்ணிடைச் சொல்.

ஞாணை யறுக்கும்; மரத்தைக் குறைக்கும்; நெல்லைத் தொகுக்கும்; வேலியைப் பிரிக்கும்; பொன்னை நிறுக்கும்; அரிசியை அளக்கும்; அடைக்காயை எண்ணும்; ஊரை யாக்கும்; வாய்க்காலைச் சாரும்; நெறியைச் செல்லும்; குதிரைக் கன்றும்; செய்யை நோக்கும்; கள்ளரை யஞ்சும்; நாட்டைச் சிதைக்கும், என வரும்.

என்று என்பன எண்ணிடைச் சொற்கள். ஈண்டு நின்ற 'இன்' னெல்லாஞ் சாரியை ஆயின.

'பிறவும்' என்றது இவை யல்ல பிறவும் என்றவாறு. வினையும் வினைக் குறிப்பும் பற்றி வருவன வெல்லாம் இரண்டாம் வேற்றுமைப் பொருள்.

அவை: விரலை முடக்கும்; நாவினை வளைக்கும், என்பன போல்வன வினை.

ஊரை யின்புடையான் என்பது போல்வன வினைக்குறிப்பு.

'அம் முதற் பொருள் என்ன கிளவியும் அதன்பால என்மனார்' என்பது — அவ் வினையும் வினைக்குறிப்பும் பற்றி வருவன வெல்லாம் முதலாய வரூஉம் எவ் வகைப்பட்ட சொல்லும் இவ் விரண்டாம்வேற்றுமைக் கூற்றன என்ப, என்றவாறு.

**தெய்வ :**

(இரண்டாகுவதே ......... தோன்று மதுவே)

நிறுத்த முறையானே இரண்டாம் வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இரண்டாம் வேற்றுமையாவது ஐ எனக் குறித்த வேற்றுமைச் சொல். அஃ தியாதானும் ஒரு பெயர் வழினும் வினையும் வினைக்குறிப்பு மாகிய அவ் விரண்டு முதற்கண்ணும் தோன்றும், எ—று.

ஐகார வேற்றுமை இரண்டாவ தென்னும் குறியும் பெற்றது. வினை யென்பது செயல். வினைக்குறிப் பென்பது அவ் வினையினாற் குறிக்கப்பட்ட பொருள். அஃதாவது செயப்படு பொருள். முதல் என்பதனை வடநூ லாசிரியர் காரகம் என்ப. அஃது தொழிலை யுண்டாக்குவது. அது பல்வகைத்து: செய்வானும், செயலும், செயப்படு பொருளும், கருவியும், கொள்வானும், பயனும், காலமும், இடமும் என.

வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்ரு
இன்னதற் கிதுபய னாக வென்னும்
அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின் முத னிலையே,

என எட்டென்ரு ராதலின் அவற்றுள் இது செயப்படுபொருள் மேலும் செயல் மேலும் வரும். குடத்தை வனைந்தான் என்பது செயப்படுபொருள்மேல் வந்தது. வனைதலைச் செய்தான் என்பது செயன் மேல் வந்தது. தொழின் முதனிலை யெட்டென்றமையால் காரகப் பொருண்மேல் வரும் வேற்றுமை யெல்லாம் வினையான் முடியும் என்று கொள்க.

(காப்பின் ......... அதன்பால எமனார்)

இரண்டாம் வேற்றுமைப் பொருள் வேறுபாடு உணர்த்து தல் நுதலிற்று.

இ-ள்: காப்பு முதலாகச் சிதைப் பீருக ஓதப்பட்டனவற்றினும், அத் தன்மைய பிறவினும் வருஞ் சொல்லும், செயப்படு பொருள வாகி வரும் எல்லாச் சொல்லும் இரண்டாம் வேற்றுமைப் பாலன, எ—று.

காப்பு என்பது காவற்ரெழிலையும், காக்கப்படும் பொருளையும் உணர்த்தும். ஏனைய தொழிலும் பொருளும் உணர்த்துமாறு அறிந்து கொள்க. 'அன்ன பிறவினும்' என 'இன்' செய்யுள் விகாரத்தால் தொக்கது. இவை யெல்லாம் வகுத்துக்கூற

வேண்டா; வினைக்குறிப் பென அடங்கும் எனின், அடங்கும் எனினும், செயப்படுபொருள் காரியகாரணம் தோன்றி நிற்பன வும் தோன்ருது நிற்பனவும் என இரு வகைப்படும் எனற்கு வேறு ஓதினர், என்க. ஆடையை நெய்தான்; குடத்தை வனைந் தான்: இவை காரண காரியம் தோன்ற நின்றன. ஊரைக் காத்தான். என்பது தோன்ருது நின்றது. ஈண்டு ஓதின வெல்லாம் தொழிற்சொல்; ஆதலின், இவற்றை முடிக்குஞ் சொல்லும் இவை யடியாகப் பிறந்த சொல்லென்க. ஊரைக் காக் கும். என்பது காக்கப்படும் பொருள். காவலைக் காக்கும். என்பது காவற்ருெழில் மேல் வந்தது. தந்தையை ஒக்கும்; தேரை ஊரும். இழை என்பது அணிகலன்; ஆடகத்தைப் பூணும். அன்றியும், நூலை யிழைக்கும்; கிளியை ஒப்பும்; கொடுப்பா ரைப் புகழும்; கொடாதாரைப் பழிக்கும்; புதல்வனைப் பெறும்; பொருளை இழக்கும்; அகத்தைக் காதலிக்கும்; பகைவரை வெகு ளும்; செற்ருரைச் செறும்; நட்டாரை உவக்கும்; நூலைக் கற்கும்; வினையை அறுக்கும்; ஆசையைக் குறைக்கும்; பலவற் றைத் தொகுக்கும்; சிலவற்றைப் பிரிக்கும்; பொன்னை நிறுக்கும்; அரிசியை அளக்கும்; அடைக்காயை எண்ணும்; அறத்தை யாக்கும்; தூணைச் சாரும்; நெறியைச் செல்லும்; சூதினைக் கன்றும்; கணையை நோக்கும்; கள்வரை யஞ்சும்; அறிவைச் சிதைக்கும்.

அன்ன பிறவும் என்றதனுல், இசையைப் பாடும்; பகை வரைப் பணிக்கும், எனவும், குழையை யுடையன்; வலியை யுடையன்; கல்வியை யுடையன்; காவலை யுடையன், என ஆறும் வேற்றுமைப் பொருள் மொழிமாற் ருகி வருவனவும் கொள்க. பிறவும் அன்ன. அம் முதற் பொருள என்ன கிள வியும், என்றதனுல், செயப்படு பொருளே யன்றி அதற்குக் காரணமாகிய பொருள்மேலும் பொருளினது உறுப்பின் மேலும் பொருள் வருவன கொள்க. மண்ணை வனைந்தான்; நூலை நெய்தான்: இவை காரணம். விளிம்பை நெய்தான்; உறுப்பு. சுவரை யெழுதினுன்: இடம். பிறவும் அன்ன.

சேனு:

(இரண்டாகுவதே? ........ தோன்றுதுமே)

இ-ள்: பெயர் ஐ ஒடு கு என்னுஞ் சூத்திரத்து ஐ எனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொல் இரண்டாவதாம். அஃ

டியாண்டு வரினும் வினையும் வினைக்குறிப்பு மாகிய அவ் விரண்டு முதற்கண்ணும் தோன்றுமவை பொருளாக வரும், எ-று.

எ-டு: குடத்தை வனைந்தான்; குழையை யுடையன், என வரும்.

எண்ணு முறையான் இரண்டாவ தென்பது பெறப்படு மாயினும், இக் குறி தொல்லாசிரியர் வழக்கென்ப தறிவித்தற்கு ஐ யெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி யிரண்டாவ தென்றார்.

இது மூன்றாவது முதலாயினவற்றிற்கு மொக்கும்.

பெயரிய என்பது பெய ரென்பது முதலாக முடிந்த தோர் பெயரெச்சம்.

தம்மை யுணர்த்துவனவும் பெய ரெனப்படுதலின் 'ஐயெனப் பெயரிய' வென்றார்.

வினையே வினைக்குறிப் பென்று ராயினும் அவற்றின் செயப் படுபொருளே கொள்ளப்படும். அவ் விரு முதலிற் றோன்று மென்றமையான், முத லாதற்கும் வேற்றுமைப்பொரு ளாதற் கும் ஏற்பன அவையே யாகலின். என்னை அவை முத லாதற் கேற்றவா றெனின், செயப்படுபொருள் முதலாயின தொழிற்குக் காரண மாகலானும்,

'ஆயெட் டென்ப தொழின்முத னிலையே' (சொல் — 112) என அவற்றை முதனிலை யென்று கூறுப வாகலானு மென்பது. அஃதேல், செயப்படுபொருளாவது வினைமுதல் தொழிற்பய னுறுவ தாதலால், குழை முதலாயினவற்றிற்கு அவ் விலக்கண மேலாமையிற் செயப்படுபொரு ளன்மையான் வினைக்குறிப் பெனல் வேண்டா வெனின், அற்றன்று;

'அம்முக் காலமுங் குறிப்பொடுங் கொள்ளு
மெய்ந்நிலை யுடைய' (சொல் — 200)

என்று ராகலின், குறிப்புச் சொற் காலமொடு தோன்றித் தொழிற் சொல் லாதலும், குழை முதலாயின தொழிற்பய னுறுதலும் ஆசிரியர் துணி பாகலின், அவையுஞ் செய்யப்படு பொருளா மென்பது. ஆயின், செயப்படுபொருட்கட் டோன்று மென வமையும், வினையே வினைக்குறிப் பெனல் வேண்டா வெனின், அங்ஙனங் கூறின், செயப்பா டினிது விளங்குஞ்

சிறப்புடைத் தெரிநிலைவினைச் செயப்படு பொருளையே, கூறினரோ, குறிப்புப் பொருளு மடங்கப் பொதுவகையாற் கூறினரோ வென் றைய மாம்; ஐயம் நீங்க வினையே வினைக்குறிப் பென்று ரென்பது. வினை, வினைக்குறிப்பு என்பன ஈண் டாகுபெயர்.

புகழை நிறுத்தான், புகழை நிறுத்தல், புகழை யுடையான், புகழை யுடைமை என இரண்டாவது பெயரொடு தொடர்ந்த வழியும் வினைச் செயப்படு பொருளும் குறிப்புச் செயப்படு பொருளும் பற்றியே நிற்கு மென்பார், எவ்வழி வரினு மென்று யாப்புறுத்தார்.

இயற்றப்படுவதும், வேறுபடுக்கப்படுவதும், எய்தப் படுவது மெனச் செயப்படு பொருள் மூன்றும். இயற்றுதலாவது முன் னில்லதனை யுண்டாக்குதல். வேறுபடுத்தலாவது முன் னுள்ளதனைத் திரித்தல். எய்தப்படுதலாவது. இயற்றுதலும் வேறுபடுத்தலு மின்றித் தொழிற் பயனுறுந் துணையாய் நிற்றல்.

(காப்பின் ......... அதன்பால என்மனர்)

செயப்படுபொருள் மூன்றனையும் பற்றி வரும் வாய்பாடுகளை விரிக்கின்றார்.

இ-ள் : காப்பு முதலாகச் சிதைப்பு ஈறாகச் சொல்லப்பட்ட இருபத்தெட்டுப் பொருளும் அவை போல்வன பிறவு மாகிய அம் முதற் பொருள்மேல் வரும் எல்லாச் சொல்லும் இரண்டாம் வேற்றுமைப் பால என்று சொல்லுவர் புலவர்; எ-று.

என்று வென்பது எண் ணிடைச் சொல்.

இன் னெல்லாம் புணரிய னிலையிடைப் பொருணிலைக் குதவாது (சொல் —250) எண்ணின்கண் வந்தன.

முன்னர் வருவனவற்றிற்கும் ஈ தொக்கும்.

'அம்முதல்' என்றது கூறப்பட்ட செயப்படுபொருள், என்றவாறு.

எ-டு :- எயிலை யிழைத்தான், என்பது இயற்றப்படுவது. கிளியை யோப்பும்; பொருளை யிழக்கும்; நாணை யறுக்கும்; மரத்தைக் குறைக்கும்; நெல்லைத் தொகுக்கும்; வேலியைப் பிரிக்கும்; அறத்தை யாக்கும்; நாட்டைச் சிதைக்கும், என்பன

வேறுபடுக்கப்படுவன. குறைத்தல் சுருக்குதலும், சிறி திழுக்கச் சிதைத்தலு மாம். அறுத்தல் சிறி திழுவாமற் சினையை யாயினும் முதலை யாயினும் இரு கூறு செய்தல். ஊரைக் காக்கும்; தந்தையை யொக்கும்; தேரை யூரும்; குரிசிலைப் புகழும்; நாட்டைப் பழிக்கும்; புதல்வரைப் பெறும்; மனைவியைக் காதலிக்கும்; பகைவரை வெகுளும்; செற்றுரைச் செறும்; நாட்டாரை யுவக்கும்; நூலைக் கற்கும்; பொன்னை நிறுக்கும்; அரிசியை யளக்கும்; அடைக்காயை யெண்ணும்; ஊரைச் சாரும்; நெறியைச் செல்லும்; சூதினைக் கன்றும்; கணையை நோக்கும்; கள்வரை யஞ்சும், என்பன எய்தப்படுவன. வெகுளலுஞ் செறலும் கொலைப் பொருள வாயவழி வேறுபடுக்கப் படுவன வாம். செறல் வெகுளியது காரியம்.

இயற்றப்படுவது ஒருதன்மைத் தாகலின், அதற் கொரு வாய்பாடே கூறினர். ஏனைய பல விலக்கணத்த வாகலின் பல வாய்பாட்டான் விரித்துக் கூறினர்.

அன்ன பிறவு மென்றதனால், பகைவரைப் பணித்தான்; சோற்றை யட்டான்; குழையை யுடையான்; பொருளை யிலன், என்னுந் தொடக்கத்தன கொள்க.

காப்பு முதலாயின பொருள்பற்றி யோதப்பட்டமையான், ஊரைப் புரக்கும்; ஊரை யளிக்கும்; தந்தையை நிகர்க்கும்; தந்தையை யொட்டும்; தேரைச் செலுத்தும்; தேரைக் கடாவும், என்பன போல்வன வெல்லாங் கொள்க.

இயற்றப்படுதல் முதலாகிய வேறுபாடு, குறிப்பு வினைச் செயப்படு பொருட்கண் ஏற்பன கொள்க.

**நச்சி :**

(இரண்டாகுவதே ......... தோன்றுமதுவே.)

இது, முறையே இரண்டாவது இப் பொருட்கண் வரும் என்கின்றது.

இ-ள் : ஐ எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி இரண்டாகுவதே – 'பெயர் ஐ ஒடு கு இன் அது கண்' (வே-மை-ல். சூ. 3) என்னும் சூத்திரத்து ஐ எனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொல் இரண்டாவது ஆம்; அது எவ்வழி வரினும் — அஃது யாண்டு வரினும், வினையே வினைக்குறிப்பு அவ் விரு முதலின்

தோன்றும் – வினைச் சொல்லினும் வினைக்குறிப்புச் சொல்லினும் பிறந்த செயப்படு பொருளாகிய அவ்விரண்டு காரணத்தின் கண்ணும் தோன்றும், எ–று.

'பெயரிய' என்பது, கவிரம் பெயரிய (அகம். 198 : 15) என்றாற்போல நின்றது.

'வினை, வினைக்குறிப்பு' என்பன ஈண்டு ஆகுபெயர், அம் முதனிலைகளால் பிறந்த அச்சொற்களை உணர்த்தலின்.

'முதல்' என்றது காரணத்தை.

'ஆயெட் டென்ப தொழின்முத னிலையே' (வே. மயங். சூ. 29) என்றமையால், அக் காரணங்கள் எட்டு உளவேனும், 'ஏற்புழிக் கோடல்' என்பதனால் செயப்படு பொருளே ஈண்டுக் கோடும்.

காரியத்தை நிகழ்த்துவிப்பது காரணம். ஒரு வினைமுதல் செய்யும் தொழிலினை உறுவது செய்யப்படுபொருள்.

உ–ம் :– குடத்தை வனைந்தான்; குழையை உடையன், என வரும்.

'எவ்வழி வரினும்' என்றதனான் புகழை நிறுத்தல்; புகழை உடைமை, என வினைப்பெயரிற் புடைபெயர்ச்சி பற்றியும் முடியும்.

இயற்றப்படுவதும், வேறுபடுக்கப்படுவதும், எய்தப்படுவதும் எனச் செயப்படுபொருள் மூன்றாம். அவை முறையே இல்லதனை உண்டாக்கலும், உள்ளதனைத் திரித்தலும், தொழிற் பயனுறுந் துணையாய் நிற்றலும் ஆம். இவ்வுருபை முடித்தற்கு மேலிற் 'காப்பு' முதலிய வாய்பாடு பற்றி வரும் பொருள்களை இம் மூன்று கூற்றானும் பகுக்கின்றார், ஈண்டு வினை மாத்திரையும் வினைப்பெயருமாகப் பகுப்பர்.

'குடத்தை வனைந்தான்', என்றது, மேல் வரும் 'இழை' என்னும் இயற்றப்படும் பொருள். அஃது, 'எயிலை இழைத்தான்', என வரும்; என்றது, 'எயிலை இழைத்தலைச் செய்தான்' என்னும் பொருட்டு. 'இழை' என்னும் வினை மாத்திரையை உணர்த்தும் முதனிலைப் பெயர் நின்று, 'முன்னர் இழைத்தல்' என வினைப்பெயரையும் தோற்றுவித்து, 'இழைத்தலை' என்னும் உருபையும் ஏற்பித்து, 'செய்தான்' என வினை ஒழிந்த காரணங்

கள் எழானும் நிகழும் காரியத்தினையும் தோற்றுவித்து நிற்றலின், 'இழை' என்னும் முதனிலைப் பெயரை வேற்றுமைப் பொருளாக எடுத்து ஓதினார். இப் பொருட்கண் தோன்றிய 'செய்தான்' என்னும் காரியத்துடன் அல்லது 'எயிலை' என்னும் இரண்டாவது முடியாமை உணர்க. என்னை? செய்தற்கு இழைத்தல் செயப்படு பொருள் நீர்மைத்தாய்க் காரணமாய் நிற்றலானும், ஒழிந்த காரணங்கள் தன்கண் நிகழ்ந்து காரியமாம் தன்மை இழைத்தற் கின்றாம் ஆதலானும் என்பது. இவ்வாறே மேலிற் சூத்திரத்து ஒழிந்த பொருள்களையும் விரிக்க.

இனி, வினைக்குறிப்பிற்கும், 'குழையை உடையன்' என்புழி, உடையன் எனக் கருதுதல் வினை; அக் கருத்தை நிகழ்த்துகின்றான் வினைமுதல்; அக் குழை அவன் கருத்து நிகழ்த்தப்படும் பொருளாய்க் கிடக்கின்ற தன்மை செயப்படு பொருள். இவ்வாறே ஒழிந்தனவும் குறிப்பால் காண்க.

(காப்பின் ......... அதன்பால என்மனார்)

இஃது, அதனை முடிக்கும் பொருள் வேறுபாடு கூறு கின்றது.

இ-ள்: காப்பின் ......... சிதைப்பின் என்று — காப்பு முதலாகச் சிதைப்பு ஈறாகச் சொல்லப்பட்ட இருபத்தெட்டுப் பொருளும், அன்ன பிறவும் அம் முதற்பொருள என்ன கிளவியும் —அவை போல்வன பிற பொருளு மாகிய அச் செயப்படுபொருள் மேல் வரும் எல்லாச் சொல்லும், அதன் பால என்மனார் — அவ் விரண்டாம் வேற்றுமையின் கூற்றன என்று கூறுவர் புலவர், எ-று.

உ-ம்: எயிலை இழைத்தான்: இவ் வியற்றப்படுவது ஒரு தன்மைத்து ஆகலின், ஒரு வாய்பாடே கூறினார்.

கிளியை ஓப்பும்; பொருளை இழக்கும்: இவற்றிற்கு வேறுபாடு, ஒரு தொழில் உறுவிக்கப்பட்டுத் தானே போதலும் தொழிற் பயன் உற்ற மாத்திரையாய் ஒருவன் கொண்டு போகப் போதலும்.

நாணை அறுக்கும்; மரத்தைக் குறைக்கும்: இவற்றிற்கு வேறுபாடு, சிறிது இழவாமல் வேறுபடுத்தலும், சிறிது இழக்க வேறுபடுத்தலும், பெருமையைச் சுருக்குதலும்.

நெல்லைத் தொகுக்கும்; வேலியைப் பிரிக்கும்: இவற்றிற்கு வேறுபாடு, விரிந்தது தொகுத்தலும், தொகுத்தது விரித்தலும்.

அறத்தை ஆக்கும்; நாட்டைச் சிதைக்கும்: இவற்றிற்கு வேறுபாடு, மிகுத்தலும் கெடுத்தலும்: இவ் வெட்டும் வேறுபடுக்கப்படுவன.

ஊரைக் காக்கும்; தந்தையை ஒக்கும்; தேரை ஊரும்; குரிசிலைப் புகழும்; நாட்டைப் பழிக்கும்; புதல்வனைப் பெறும்; மனைவியைக் காதலிக்கும்; பகைவரை வெகுளும்; செற்றாரைச் செறும்; நாட்டாரை உவக்கும்; நூலைக் கற்கும், பொன்னை நிறுக்கும்; அரிசியை அளக்கும்; அடைக்காயை எண்ணும்; ஊரைச் சாரும்; நெறியைச் செல்லும்; சூதினைக் கன்றும்; கணையை நோக்கும்; கள்ளரை அஞ்சும், எனப் பத்தொன்பதும் எய்தப்படுவன.

இவை தாம் தொழி லுறுவனவும் தொழிற் பயன் உறுவனவுமாய் வரும் வேறுபாடும் உணர்க.

வெகுடலும் செறலும் கொலைப் பொருளாயவழி வேறுபடுக்கப்படுவன. செறல் வெகுளியது காரியம்; உவத்தல் காதலது காரியம்.

இனிச் செய்வான் கருத்து இல்வழி நிகழும் செயப்படுபொருளும், செய்வானும் செயப்படுபொருளும் தானே யாய் நிற்பனவும் கொள்க.

உ-ம்: சோற்றைக் குழைத்தான்; சாத்தன் தன்னைக் குத்தினன், என வரும்.

இன்னும் செயப்படுபொருள் தன்கண் தொழில் நிகழ்ந்தும் நிகழாதும் வரும். அறுத்தல் முதலியன தன்கண் நிகழ்வன; சார்தல் முதலியன தன்கண் நிகழாதன.

'அன்ன பிறவும்' என்றதனால், "பகைவரைப் பணித்தான்; சோற்றை அட்டான்; குழையை உடையன்; பொருளை இலன்," என்றாற் போல்வன கொள்க.

கல் :

என் னுதலிற்றோ வெனின், எழுவாய் வேற்றுமை யதிகார முணர்த்[1]தினர். இனி அம் முறையானே இரண்டாம் வேற் றுமை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : இரண்டாம் எண்ணு முறைமைக் கண்ணதாகிய ஐ யென்னும் பெயரை யுடைய வேற்றுமைச் சொல் யாதானு மோ ரிடத்து வரினும் வினையும் வினைக்குறிப்பு மென்றுஞ் சொல்லப்படுகின்றது. இரண்டு மடியாக வரும் பொருள்பற்றிச் சொல்லிற் 'காப்பெ'ன்பது முதலாய் 'சிதைப்பு' ஈறாய் ஓதப் பட்ட விவையும் இவை போல்வன பிறவு மாகிய அவ்வவ் வினை வினைக்குறிப் பென்னுநின்ற முதற்பொருளைப் பற்றி வருகின்ற எல்லாச் சொற்களும் இரண்டாவதன் பொருள வென்பர் புலவர், என்றவாறு.

உ-ம்: மரத்தைக் குறைத்தான், என்பது வினை. குழையை யுடையன், என்பது வினைக்குறிப்பு. காப்பு — என்பது ஊரைக் காக்கும், என்பது. ஒப்பு – [2]தாயை யொக்கும், என்பது.

[3]ஊர்தி: யானையை யூரும், என்பது.

இழை: எயிலை யிழைக்கும்.

ஒப்பு — [4]கிளியை யோப்பும் என்பது. [5]இவை வினை.

புகழ்: ஊரைப் புகழும். பழி: நாட்டைப் பழிக்கும். பெறல்: ஊரைப் பெறும். இழவு: ஊரை யிழக்கும்,

காதல்: [6]தாயைக் காதலன்: இது வினைக்குறிப்பு.

வெகுளி: படையை வெகுளும். செறல்: [7]செற்றாரைச் செறும்.

உவத்தல்: தாயை யுவக்கும்: இது வினைக்குறிப்பு.

கற்பு: நூலைக் கற்கும். அறுத்தல்: ஞாணை யறுக்கும். [8]குறைத்தல்: மரத்தைக் குறைக்கும். தொகுத்தல்: நெல்லைத் தொகுக்கும். பிரித்தல்: வேலியைப் பிரிக்கும். நிறுத்தல்: [9]பொன்னை நிறுக்கும். அளவு: [10]அரிசியை அளக்கும். எண்: அடைக்காயை யெண்ணும். ஆக்கல்: [11]அறத்தை யாக்கும்;

---

1. திரு[ன்](ர்) 2. [கிளியை யெ(ர)[ப்பு](க்கு)ம்] (தாயை யொக்கும்)
3. ஊ[ற்](ர்)தி 4. (கிளியை) [யொக்கு] (யோப்ப)ம் 5. இ[து]வை
6. [தாயைக் காதலன்] மனைவியைக் காதலிக்கும் இ[து](வை)
7. [ஊரை](செற்றாரை) 8. குறை[ர](ற)த்தலின் 9. [தூணை](பொன்னை)
10. அரி(சி)யை 11. [ஊரை](அறத்தை)

சார்தல்: வாய்க்காலைச் சாரும். செலவு: நெறியைச் செல்லும். கன்றல்: சூதினைக் கன்றும். நோக்கல்: சேயை நோக்கும். அஞ்சல்: கள்ளரை யஞ்சும். [1]சிதைப்பு: நாட்டைச் சிதைக்கும், எனவும்; 'அன்ன பிறவும்' என்றதனால், விரலை முடக்கும்; நாவினை வணக்கும் என வருவனவுங் கொள்க: இவை வினை.

அறிவினை யுடையன்; ஊரை யின்புறும்: இவை வினைக் குறிப்பு. [2]பிறவும் அன்ன.

'காப்பின்' என்பது முதலாக இன் னெல்லாம் உருபும் அன்று; சாரியையும் அன்று, அசைநிலை யெனக் கொள்க. இடைநின்ற என்ரு வென்பன எண் ணிடைச்[3]சொற்க ளாம்.

[4]மற்றைய வேற்றுமைபோல் இது படும் பொருண்மை யுணர்த்தாது முடி புணர்த்தியது. என்னை?

இம் முடிபு ஏனை வேற்றுமைக்கும் உளவா லெனின், ஈண்டு முடி பன் றுணர்த்தியது, வினை வினைக்குறிப்பின் மேலிட்டு அது படுஞ் செயப்படுபொருளினை யுணர்த்திற் ருக உரைக்கப் படும். செயப்படுபொருண்மை யாவ தென்னையோ வெனின், ஒருவன் செய்யுந் தொழிலினைத் தா னுறுத லெனக் கொள்க. அத்தொழிலினை யுறுவ திதுவேயோ? அத் தொழில் செய்வானுங் கருவியுஞ் செய்கின்ற காலமும் இடனும் என வின்னோரன்னவும் அத் [5]தொழிலுறுமா லெனின், அவை யுறுமெனினும் பெரும் பான்மையும் இதன்கண்ண தென்பது கருத்து.

வினை யென்னது வினைக்குறிப் பென்றது என்னையோ வெனின், மரங் குறைத்தான், என்புழிக் குறைக்கப்படுத லென்பதுபோ லாகாது, குழையை யுடையன் என்புழிக் குழையி னுடைமைப்பாடு செயப்படுபொருளாய் விளங்கி நில்லா மையின் வேறு [6]கூறினர், என்பது.

அச் செயப்படுபொருள் தான் இல்ல தொன்ருய் உண்டாக் கப்படுவதும், உள்ள தொன்ருய் உடல் வேறுபடுக்கப்படுவதும், உள்ள [7]தொன்ருக ஒரு தொழில் உறுவிக்கப்படுவதும், உள்ள தொன்ருய் [8]ஒன்றனு னுறப்படுவதும், எனப் பலவகையவாம்.

1. [தி] (சி) தைப்பு 2. பி[ர] (ற) வும் 3. சொ[ல்] (ற்களாம்)
4. மற்(ரை)ற(ய) 5. தொழி [ளு] (லு) று 6. கூறினு [ன்] (ர்)
7. தொன்ரு [த] (க) [யோ] (னு) 8. ஒன்ரு [னு] (லு) றப்.

இல்லதொன் றுண்டாக்கல்: எயிலை யிழைத்தான், என்பது. உள்ள தொன்றனை யுடல் வேறாக்கல்; மரத்தைக் குறைத்தான், என்பது. உள்ள தொன் றோர் தொழி லுறுவித்தல்: கிளியை யோப்பு மென்பது. உள்ள தொன்றனை யொன் றுறுதல்: நூ னூற்ருன், என்பது. பிறவும் அன்ன.

இன்னும் இச் செயப்படுபொருள் தான், தன்கண்ணு மோர் [1]தொழி னிகழ்ந்து செயப்படுபொரு ளாவனவும், தன்கட் டொழி னிகழாது செயப்படுபொரு ளாவனவு மென விரு வகைய.

தன்கண்ணுந் தொழில் நிகழ்ந்தது: [2]அறுத்தல், குறைத்தல் என்பன வாம், அறுத்தல் குறைத்தல் ஆய வவ் விரு தொழில் மர முதலாய தன்கண்ணு நிகழ்ந்தன வாகலின்.

தன்கண் நிகழாதது: வாய்க்காலைச் [3]சாரும், என்றாற் போல்வன. பிறவு மன்ன.

இன்னும் இரண்டாவதன் செயப்படுபொருள் தெரிநிலைச் செயப்படுபொருளுந் [4]தெரியா நிலைச் செயப்படுபொருளு மென இரு வகைத் தாம்.

தெரிநிலை: மரத்தைக் குறைத்தான், என்பது. தெரியாநிலை: [5]சாத்தனுல் மரங் குறைக்கப்பட்டது, என்பது. மற் றிஃது எழுவா யன்றோ வெனின், சொன் னிலை யன்ன தாயினுஞ் சாத்தனு னென நின்ற வுருபினை நோக்கப் பொரு ணிலை யன்ன தன் றென வுணர்க. சோற்றை யட்டான், எனச் செய்வான் கருத் துள்வழிச் செயப்படு பொரு ளாதலும், சோற்றைக் குழைத்தான் எனக் கருத் தில்வழி யாதலு மென இரு வகைய.

இனிச் செய்வானுஞ் செயப்படுபொருளு மென்னும் இரண்டும் ஒன்றே யாயும் வரும்.

உ-ம் :- சாத்தன் தன்னைக் குத்தினுன், என வரும்.

இனிச் செயப்படுபொருட் கேது வாயதூஉஞ் செயப்படு பொருளாய் வரும். அவை, கற்கப்படும் ஆசிரியர், கற்கப்படா வாசிரியர், என வரும்.

மற்றும் இதன் கருத்து [6]விகற்ப முறையிற் கொள்க.

---

1. தொழி [லி] னிகழ் 2. அ [கு] (று)த்தல் 3. சா[று] (ரு) ம்
4. தெரியா [னி] (நி) லைச். 5. சாத்த[ன்] (னுல்) 6. [வ] (வி)கற்ப

(இரண்டா குவதுவே ...... தோன்று மதுவே)

அரசு :

என்பது பெயர் ஐ ஒடு கு என்னுஞ் சூத்திரத்து ஐ யெனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொ லிரண்டாவ தா மஃ தியாண்டு வரினும் வினையும் வி னை க் கு றி ப் பு மாகிய விரண்டு முதற் கண்ணுந் தோன்று மவை பொருளாக வென்றவாறு.

உதா:— குடத்தை வனைந்தான்; குழையை யுடையன், என வரும். பெயரிய வென்பது பெய ரென்பது முதனிலையாக முடிந்த தோர் பெயரெச்சம். தன்மை யுணர்த்துவனவும் பெய ரெனப்படுதலின் ஐ யெனப் பெயரிய வென்றார். வினையே வினைக்குறிப் பென்று ராயினு மவற்றின் செயப்படுபொருளே கொள்ளப்படும். செயப்படுபொரு ளாவது ஒரு வினை செய்யுந் தொழிலினை யுறுவது. அவ் விருமுதலிற் றோன்று மென்றவ தனுன் முத லாதற்கும் வேற்றுமைப்பொரு ளாதற்கும் ஏற்பன அ வை யே ஆதலின் முதற் காரணம் அவை; முத லாதற் கேற்றவா றென்னை யெனின் செயப்படுபொருண் முதலாயின தொழிற்குக் காரண மாகலான் ஆயெட்டென்ப தொழின் முத னிலையே யென்னு மவற்றை முதனிலை யென்று கூறுப வாகலான். அஃதேற் செயப்படுபொரு ளாவது தொழிற் பய னுறுவ தா கலான் குழை முதலாயினவற்றிற் கவ் விலக்கண மேருமையிற் செயப்படுபொரு ளன்மையான் வினைக்குறிப் பெனல் வேண்டா வெனின் அற்றன்று:

* அம்முக் காலமுங் குறிப்பொடு கொள்ளு
[1]மெய்ந்நிலை யுடைய

வென்று ராகலிற் குறிப்புச் சொற் காலமொடு தோன்றிற் றொழிற் சேர லாதலுங் குழை முதலாயின தொழிற் பய னுறுதலு மாசிரியரது துணி பாதலி னவையுஞ் செயப்படு பொரு ளா மென்பது. ஆயிற் செயப்படுபொருட்கட் டோன்று மென வமையும் வினையே வி னை க் கு றிப் பெனல் வேண்டா வெனின், தெரிநிலைவினைச் செயப்படுபொருளையே கூறினரோ குறிப்புச் செயப்படுபொருளு மடங்கப் பொதுவகையாற் கூறினரோ வென் றைய மாகாமையின் வினையே வினைக் [2]குறிப் பென்றது. வினை வினைக்குறிப் பென்பன வீண்டு ஆகு பெயர். எவ்வழி வரினு மென்றதனுல், புகழை நிறுத்தான்

* வினையியல் – 3.
1. மென்னிலை : திருத்தம் 2. வினைகுறிப்பாரென்றது : திருத்தம்.

புகழை நிறுத்தல்; புகழை யுடையன்; புகழை யுடைமை. என விரண்டாவது பெயரொடு [1]தொடர்ந்தவழியும் வினைச் செயப்படு பொருளுங் குறிப்புச் செயப்படுபொருளும் பற்றியே நிற்கும். செயப்படுபொருள் — இயற்றப்படுவதும் வேறுபடுக்கப் படுவதும் எய்தப்படுவதும் என மூன்றும். இயற்றப்படுத லாவது முன் இல்லதனை யுண்டாக்குவது. வேறுபடுத்தல் முன் னுள்ளதனைக் *குறித்தல். எய்தப்படுவது தொழிற் பயனுறுந் துணையாய் நிற்றல்.

இவ் வுருபை முடித்தற்கும் மேற் காப்பு முதலிய வாய்பாடு பற்றி வரும் பொருள்களை யிம் மூன்று கூற்றானும் பகுக்கின்றார் வினை மாத்திரையும் வினைப் பெயரு மாகப் பகுப்பர். ஈண்டு, குடத்தை வனைந்தான், என்றலு மேல்வரு மிழை யென்னு மியற் றப்படும் பொருளை. [2]அது, எயிலை யிழைத்தானென வரும் [3]என்றது எயிலை யிழைத்தலைச் செய்தா னென்னும் பொருட்டு. இழை யென்னும் வினை மாத்திரை யுணர்த்தும் பெயர்நிலை முன்ன ரிழைத்தலென வினைப்பெயரைத் தோற்றுவித் திழைத் தலை யென வுரிமையு மேற்பித்துச் செய்தா னென வினை யொழிந்த காரணங்க ளேழானு நிகழுங் காரியத்தினையுந் தோற்றுவித்து நிற்றலி னிழை யென்னு முதனிலைப் பெயரை வேற்றுமைப் பொருளாக வெடுத்தோதினார். இப் பொருட்கட் டோன்றிய செய்தா னென்னுங் காரியத்துடனல்ல[4]து எயிலை யென்னு மிரண்டாவது முடியாமை யுணர்க.

இவ்வாறே [5]மேலிற் சூத்திரத்தி லொழிந்த பொருள்களையும் விரிக்க. இனி வினைக்குறிப்பிற்குங் குழையை யுடையனென் புழி யுடைய மெனக் கருதல் வினை. அக் கருத்தை நிகழ்த்து கின்றான் வினைமுதல்; அக் குழையவன் கருத்து நிகழ்த்தப்படும் பொருளாய்க் கிடக்கின்ற தன்மை செயப்படும் பொருள். இவ் வாறே யொழிந்தனவுங் குறிப்பாற் காண்க.

---

1. [ா](தொ)டர்ந்த    2. அதுவே யிலை : திருத்தம்
3. என்றதே யிலை : திருத்தம்    4. தேயிலை : திருத்தம்
5. மேலிச் : திருத்தம்

* குறித்தல் என்பது சேனாவரைய குரையில் திரித்தல் எனக் காணப்படுகிறது. இதன் பிற்பகுதி அவ்வுரையில் காணப்படாதது.

காப்பி......... பால வென்மனார்

என்பது செயப்படும் பொருண் மூன்றனையும் பற்றி வரும் வாய் பாடுகளை விரிக்கின்றார். காப்பு முதலாகச் சிதைப்பி னீறாகச் சொல்லப்பட்ட விருபத்தெட்டுப் பொருளு மவை போல்வன பிறவு மாகிய வச் [1]செயப்படுபொருண்மேல் வரு மெல்லாச் சொல்லு மவ் விரண்டாம் வேற்றுமைப் பால வென்று சொல் லுவர் புலவர்.

[2]என்ரு வெண்ணிடைச்சொல். இன் னெல்லாம் புணரிய னிலையிடைப் பொருணிலைக் குதவா வெண்ணின்கண் வந்தன. அம்முத லென்றது மேற் கூறப்பட்ட [3]செயப்படுபொருள்.

உதா:- எயிலை யிழைத்தான், என வியற்றப்படுவது. இஃ தொரு தன்மைத் தாகலின் ஒரு வாய்பாடே கூறினார். கிளியை யோப்பும்; பொருளை யிழக்கும்: இவற்றிற்கு வேறுபா டோர் தொழி லுறுவிக்கப்பட்டுத் தானே போதலுந் தொழிற் பெய ருற்ற மாத்திரையாய் ஒருவன் கொண்டு போதலும். நாணை யறுக்கும்; மரத்தைக் குறைக்கும்: இவற்றிற்கு [4]வேறுபாடு சிறி திழவாமல் வேறுபடுத்தலும் சிறி திழக்க வேறுபடுத்தலும் பெருமையைச் சுருக்குதலும்; நெல்லைத் தொகுக்கும்; வேலியைப் பிரிக்கும்: இவற்றிற்கு வேறுபாடு விரிந்தது தொகுத்தலும், தொகுத்ததும் விரித்தலும். அறத்தை யாக்கும்; நாட்டைச் சிதைக்கும்: இவற்றிற்கு வேறுபாடு மிகுதலும் கெடுதலும்: இவ் வெட்டும் வேறுபடுக்கப்படுவன. ஊரைக் காக்கும்; தந்தையை யொக்கும்; தேரை யூரும்; குருசிலைப் புகழும்; நாட்டைப் பழிக்கும்; புதல்வனைப் பெறும்; மனைவியைக் காதலிக்கும்; பகை வரை வெகுளும்; செற்றாரைச் செறும்; நட்டாரை யுவக்கும்; நூலைக் கற்கும்; பொன்னை நிறுக்கும்; அரிசியை யளக்கும்; அடைக்காயை யெண்ணும்; ஊரைச் சாரும்; நெறியைச் செல் லும்; சூதினைக் கன்றும்; கணையை நோக்கும்; கள்வரை யஞ்சும், எனப் பத்தொன்பதும் எய்தப்படுவன. இவை தாந் தொழி லுறுவனவுந் தொழிற்பய னுறுவனவுமாய் வரும். வேறுபாடு முணர்க. வெகுடலுஞ் செறலுங் கொலைப் பொரு ளாம்வழி வேறுபடுக்கப்படுவன வாம். செறல் வெகுளியது காரியம்;

1. செயபட்டு : திருத்தம் 2. யென்ரு : திருத்தம்
3. செயப்பட்டு : ,, 4. வேறுபட்டுச் : ,,

உவத்தல் காதலது காரியம். வேறுபடுக்கப்படுவது மெய்தப் படுவதும் பல் லிலக்கணத்த வாதலிற் பல வாய்பாட்டான் விரித்துக் கூறினர்.

அன்ன பிறவு மென்றதனுன், பகைவரைப் பணிந்தான்; சோற்றை யட்டான்; குழையை யுடையன்; பொருளி யிலன், என்னுந் தொடக்கத்தன கொள்க. இயற்றப்படுதன் முதலாகிய வேறுபாடு குறிப்புவினைச் செயப்படுபொருட்க ணேற்பன கொள்க.

73. மூன்ருகுவதே
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி யனைமுதற் றதுவே
யதனி னியற லதற்றகு கிளவி
யதன்வினைப் படுத லதனி னுத
லதனிற் கோட லதனெடு மயங்க
லதனே டியைந்த வொருவினைக் கிளவி
யதனே டியைந்த வேறுவினைக் கிளவி
யதனே டியைந்த வொப்ப லொப்புரை
யின்னு னேது வீங்கென வரூஉ
மன்ன பிறவு மதன்பால வென்மனர். (11)

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்ரே வெனின், முறையானே மூன்ரும் வேற்றுமை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை:- மூன்ரும் எண்ணு முறைமைக்கண்ணது ஒடு என்னும் பெயரை யுடைய வேற்றுமைச் சொல்; அது வினை முதலும் கருவியும் என இரண்டினையும் தனக்குப் பொருளாக உடையது, என்றவாறு.

வரலாறு: 'நாயாற் கோட்பட்டான்', என்பது வினைமுதல் பற்றி வந்தது. 'வேலால் எறிந்தான்' என்பது கருவி பற்றி வந்தது.

இனி, அவ் வினை முதலும் கருவியும் பற்றி வருமாற்றை விரிக்கின்ருர் :—

அதனினியறல்: 'தச்சன் செய்த சிறுமா வையம்' (குறுந் தொகை-61) இது தச்சனுற் செய்யப்பட்டது என்பதாம்.

அதற்றகு கிளவி:

'வாயாற் றக்கது வாய்ச்சி' என்பது.

அதன் வினைப்படுதல்:
'நாயாற் கோட்பட்டான்' என்பது.

அதனி னாதல்:
'வாணிகத்தா னாயினான்' என்பது.

அதனிற் கோடல்:
'காணத்தாற் கொண்ட அரிசி' என்பது.

அதனொடு மயங்கல்:
'எள்ளொடு விராஅய அரிசி' என்பது.

அதனொடு இயைந்த ஒருவினைக் கிளவி:
'சாத்தனொடு வந்தான் கொற்றன்' என்பது.

அதனொ டியைந்த வேறுவினைக் கிளவி:
'மலையொடு பொருத மாஅல் யானை' என்பது.

அதனொ டியைந்த வொப்பல் ஒப்புரை:
'முத்தொடு முழாக் கோத்து' என்பது.

ஒவ்வாததனை ஒப்பித்தல் ஒப்ப லொப்புரை.

இன்னான் என்புழியும் ஏது வினைக்கண்ணும் வரும் மூன்றாம் வேற்றுமை. இன்னான் என்பது, 'கண்ணாற் கொத்தை; காலான் முடவன்' என்பன.

ஏது என்பது, 'முயற்சியாற் பிறத்தலான் சொல்லு நிலையாது' என்பது.

அன்ன பிறவும் என்றதனால், பிறவும் வருவன எல்லாம் கொள்க.

தெய்வ:

மூன்றாம் வேற்றுமை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:- மூன்றாம் வேற்றுமையாவது ஒடு வெனப் பெயர் பெற்ற வேற்றுமைச்சொல். அது வினைமுதலுங் கருவியு மாகி அவ் விரண்டு காரகத்தையும் உடைத்து, எ-று.

ஈண்டு, முதல் என்பது காரகம். கருத்தாவின்கண்ணும், கருவியின்கண்ணும் வரும், எ-று; கொடியொடு தொடக்குண்டான்; இது வினைமுதல். ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்; இது கருவி.

(அதனினியறல் .. ...... வென்மனார்)

இதுவும் மூன்றாம் வேற்றுமைக் குரிய தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்:- அதனி னியறன் முதலாக ஒப்பல் ஒப்புரை ஈறாக எடுத் தோதப்பட்ட சொல்லினுன் வரும் பொருண்மையும், இன் ஆன் ஏது என இவ்விடத்து வரும் அத் தன்மைய பிற சொற்களு மூன்றும் வேற்றுமைப் பாலன, எ-று.

அதனின் இயறலாவது: இயலப்படுவதற்குக் காரண மாகிய பொருண்மேல் உதாரண வாய்பாட்டான் வந்தது: மண்ணினு னியன்ற குடம்; அரிசியா னுகிய சோறு. அதற்றகு கிளவி யாவது: அ த னு ற் ற கு தி யை யு டை த் தாயிற் றென்னும் பொருண்மை தோன்ற வருவது: கண்ணுன் நல்லன்; குணத்தான் நல்லன்; நிறத்தான் நல்லன், என உறுப்பும், பண்பும் பற்றி வருவன. அதன் வினைப்படுதலாவது: ஒன்றன் றொழின்மேல் வருதல்: புலி பாய்தலாற் பட்டான்; ஓட்டாற் கடிது குதிரை, என்பன. அதனி னுதலாவது: ஆக்கத்திற்கு ஏதுவாகி வருவது; வாணிகத்தி னுயினுன்; எருப் பெய்து இளங் களை கட்டமையாற் பைங்கூழ் நல்ல வாயின. அதனிற் கோடலாவது: ஒன் றனுனே ஒன்றைக் கோடல்: காணத்தாற் கொண்ட வரிசி. அதனெடு மயங்கலாவது: ஒன்ருே டொன்று விரவி வருதல்: பாலொடு கலந்த நீர். அதனெடு இயைந்த ஒரு வினைக் கிளவியாவது: ஒரு வினையான் இரு பொருள் முடிவது; படையொடு வந்தான் அரசன். அதனெடு இயைந்த வேறு வினைக் கிளவியாவது: வேறு வினை யுடையன இரண்டு சொல் ஒரு வினையொடு தொடர் வது: காவோ டறக்குளந் தொட்டான். அதனேடு இயைந்த ஒப்ப லொப் புரையாவது: உவமை யின்றி யிதுவும் அதுவும் ஒக்கு மென அளவினுலும் நிறையினுலும் எண்ணினுலும் வருவன: இதனேடு ஒக்கும் இது; இக் கூற்ருே டொக்கும் இக் கூறு.

இன் னென்பது இன் என்னும் சொல். ஆ னென்பது ஆன் என்னும் சொல். ஏது வென்பது ஏது என்னும் சொல். அன்ன பிற வாவன: காரணம், நிமித்தம், துணை, மாறு என்பன. இவை யும் மூன்றும் வேற்றுமைப் பொரு ளுணர்த்து முருபுகளும் பொரு ளுணர்த்தும் சொற்களு மாம், எ-று. புகை யுண்மையின் நெருப் புண்மை யறிக; புகை யுண்மையான் நெருப் புண்மை யறிக; புகை யேது வாக நெருப் புண்மை யறிக; புகை காரணமாக நெருப் புண்மை யறிக; புகை நிமித்தமாக நெருப் புண்மை யறிக; சுக்கிரீவன் துணையாக இலங்கை கொண் டான். "அனையை யாகன் மாறே மன்னுயி ரெல்லாம் நின்னஞ் சும்மே" (புறம் 20)

இன்னும், அன்ன பிறவு மென்றதனுன், ஒடு ஆல் என வரும் உருபுங் கொள்க.

"என்னே டிருப்பினும் இருக்க இளங்கொடி
தன்னே டெடுப்பினும் தகைக்குந ரில்"
(மணி – சிறைவிடு காதை, 35 – 9)

"கணிகொண் டலர்ந்த நறவேங்கை யோடுங் கமழ்கின்ற
காந்த ளிதழா
லணிகொண்ட" (சூளா - அரசியல் - 167) என்புழி, ஒடு வந்தது. ஆன் வந்துழி யெல்லாம் ஆல் வருதல் வழக்கினிற் கண்டு கொள்க.

சேனு:

இ-ள்: மேல் ஒடு வெனப் பெயர் கொடுத் தோதிய வேற்றுமைச் சொல் மூன்ருவ தாம். அது வினைமுதலுங் கருவியுமாகிய இரண்டு முதலேயும் பொருளாக வுடைத்து, எ-று.

மேல் ஐ யொடு குவ் வென் ஞேதியவழி ஆ னுருபுந் தழுவப் பட்டமையான், ஈண்டும் அவ்வாறே கொள்ளப்படும்; படவே, மூன்ருவ தாதலும் வினைமுதல் கருவிப் பொருட் டாதலும் ஆ னுருபிற்கு மெய்தும்.

வினைமுதலாவது கருவி முதலாயின காரணங்களைத் தொழிற் படுத்துவது. கருவியாவது வினைமுதற் ஞெழிற் பயனைச் செயப் படு பொருட்க ணுய்ப்பது.

அனை யென்பது அத் தன்மைய வாகிய முத லென அவற்ற திலக்கணத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு.

முத லென்பதற்கு மேலே யுரைத்தாம்.

எ-டு: கொடியொடு துவக்குண்டான்; ஊசியொடு குயின்ற தூசும் பட்டும் எனவும்; அகத்தியனுல் தமி ழுரைக்கப்பட்டது; வேலா னெறிந்தான், எனவும் வரும்.

பிற பொருளு முளவேனும் வினைமுதல் கருவி சிறந்தமை யான் "வினைமுதல் கருவி யனைமுதற்று" என்ருர்.

வினைமுதல் கருவிக்கண் ஒடு வெ னுருபு இக் காலத் தருகி யல்லது வாராது.

அதனின் இயறல்: மண்ணு னியன்ற குடம், என்பது. மண் முதற் காரணம். முதற் காரண மென்பது காரியத்தோ டொற் றுமை யுடையது. அதன்தகு கிளவி: வாயாற் றக்கது வாய்ச்சி,

அறிவா னமைந்த சான்றோர், என்பன: இவை கருவிப்பாற் படும். அதன் வினைப்படுதல்: சாத்தனுன் முடியு மிக் கருமம், என்பது: இது வினைமுதற் பாற் படும். அதனின் ஆதல்: வாணிகத்தா னுயினுன் என்பது. அதனின் கோடல்: காணத்தாற் கொண்ட வரிசி, என்பது; இவையுங் கருவிப்பாற் படும்.

இவை யைந்து பொருளும் ஒடு வுருபிற்குஞ் சிறுபான்மை யுரிய வாயினும் பெரும்பான்மை பற்றி ஆ னுருபிற்கே யுரிய போலக் கூறினர். அதனெடு மயங்கல்: எண்ணெடு விராய வரிசி, என்பது. அதனெடு இயைந்த ஒரு வினைக் கிளவி: ஆசிரியனெடு வந்த மாணுக்கன், என்பது: வருதற் றெழில் இருவர்க்கு மொத்தலின் ஒரு வினைக் கிளவி யாயிற்று. அதனேடு இயைந்த வேறு வினைக் கிளவி: மலையொடு பொருத மால் யானை, என்பது: பொருதல் யானைக் கல்ல தின் மையின் வேறு வினைக் கிளவி யாயிற்று. அதனேடு இயைந்த ஒப்பல் ஒப்புரை: பொன்னே டிரும் பனையர் நின்னெடு பிறரே, என்பது: ஒப் பல்லதனை ஒப்பாகக் கூறலின் ஒப்ப லொப்புரை யாயிற்று. இம் மூன்றற்கும் உடனிகழ்தல் பொது வென்பதூ உம் அவை ஒடு வெ னுருபிற்கே யுரிய வென்பதூஉம் உணர்த் திய, அதனே டியைதல் மூன்றற்கும் கூறினர். அதனெடு மயங்கற்கும் ஈ தொக்கும். எல்லாப் பொருட்கண்ணும் அது வென்றது உரு பேற்கும் பெயர்ப் பொருளை. 'அகற்கு வினை யுடைமையின்' (சொல்-76) என்பதற்கும் ஈ தொக்கும். இன் னு னேது என்பது முயற்சியிற் பிறத்தலா னெலி நிலையாது என்பது. அதனி னுத லெனக் காரக ஏது முற்கூறப்பட்டமை யான், இது ஞாபக வேதுவாம். இப் பொருள் ஆ னுருபிற்கும் இன் னுருபிற்கும் உரித் தென்பது விளக்கிய ஏது என்னுது இன் னு னேது என்ருர். இன் னு னென்பது உம்மைத் தொகை: அவற்ற தேதுப் பொருண்மை, எ-று.

என வென்பதனை மாற்றி ஏது வென்பதன் பின் கொடுத்து, ஈங்கு வருஉ மன்ன பிறவு மென வியைக்க. ஈங்ஙன மென்று பாட மோதுவாரு முளர்.

அதனி னியறல் என்பதற்குத் தச்சன் செய்த சிறு மா வைய மென்றும், இன் னு னென்பதற்குக் கண்ணுற் கொத்தை, காலான் முடவ னென்றும், உதாரணங் காட்டினுரால் உரையா சிரிய ரெனின், அற்றன்று; தச்சன் செய்த சிறு மா வைய

மென்பது 'வினைமுதல் கருவி யனைமுதற்று' (சொல்-73) என்புழி யடங்கு மாதலான் ஈண்டும் பாற்படுக்க வேண்டாமையானும், சினை விகாரத்தை முதன்மே லேற்றிக் கூறும் பொருண்மை இன்னு னென்பதனுற் பெறப்படாமையானும், அது போலி யுரை யென்க.

ஒடுவும் ஆனும் இரண்டு வேற்றுமை யாகற்பால வெனின், அற்றன்று; வேற்றுமை மயக்கமாவது ஒரு வேற்றுமைத்து ஒரு பொருட்கண் ணுக, சில பொருட்கண் ணுக ஏனை வேற்றுமையுஞ் சேற லன்றே; அவ்வா றன்றிச் சிறி தொழித்து எல்லாப் பொருட்கண்ணும் இரண் டுருபுஞ் சேறலானும், வடநூலுள் பொருள் வேற்றுமை யல்லது உருபு வேற்றுமையான் ஒரு வேற்றுமையாக வோதப் படாமையானும், ஈண் டெல்லா வாசிரியரும் ஒரு வேற்றுமையாகவே யோதினு ரென்க. வடநூலொடு மாறு கொள்ளாமைக் கூறல் ஆசிரியர்க்கு மேற்கோ ளாயின் விளி வேற்றுமையை எழுவாய் வேற்றுமைக் கண் அடக்கற்பால ராவர்; அவ்வா றடக்க விலரெனின், அற் றன்று; விளி வேற்றுமையை எழுவாய் வேற்றுமைக்கண் அடக் கல் ஆண்டு எல்லார்க்கும் ஒப்ப முடிந்த தன்று;

'ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை
வேறென விளம்பான் பெயரது விகாரமென்
றோதிய புலவனு முளனொரு வகையா
னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்',

என்ப வாகலின், ஐந்திர நூலார் விளி வேற்றுமையை எட்டாம் வேற்றுமையாக நேர்ந்தா ரென்பது பெறப்படும்; ஆசிரியர் அவர் மதம் பற்றிக் கூறினு ராகலின் அதனெடு மாறு கொள்ளா தென்பது. இக் கருத்து விளக்கிய வன்றே, பாயிரத்துள் 'ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்' எனக் கூறிற் றென்க.

அன்ன பிறவு மென்றதனல், கண்ணுற் கொத்தை; தூங்கு கையா னேங்கு நடைய, (புறம்-22) மதியோ டொக்கு முகம்; சூலொடு கழுதை பாரஞ் சுமந்தது, என்பன போல்வன கொள்க.

நச்சி:

இது, முறையானே மூன்ருவது இப் பொருட்கண் வரும் என்கின்றது.

இ-ள்: ஒடு எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி மூன்றுருவதே – மேல் ஒடு எனப் பெயர் கொடுத்து ஓதப்பட்ட வேற்றுமைச் சொல் மூன்றுருவ தாம்; அது வினைமுதல் கருவி அனை முதற்று – அது வினைமுதலும் கருவியு மாகிய அவ் விரண்டு காரணத்தையும் பொருளாக உடைத்து, எ-று.

மேல் 'அதனின் இயறல் (வே-மை-ல் சூ. 11) முதலியன ஆன் உருபிற்கு ஏற்ப உடம்பொடு புணர்த்துச் சூத்திரஞ் செய்தலின், அவற்றிற்கு முற்கொண்ட ஒடு என்பதற்கும் ஆல் என்பதற்கும் வினைமுதல் கருவி கொள்க. ஆன், ஆலாய்த் திரிந்தும் நிற்கும்.

வினைமுதல், கருத்தா என்பன ஒன்று. கருத்தா நின்று தன்னை ஒழிந்த கருவி முதலிய காரணங்கள் ஏழனையும் காரியத்தின்கண் நிகழ்த்துதலின், அதனை வினைமுதல் என்றார்.

இஃது, இயற்றும் வினைமுதலும் ஏவும் 'வினைமுதலும் என இரு வகைப்படும். கொடியொடு துவக்குண்டான் என்பது, இயற்றும் வினைமுதல். அது, கொடி தன்னொடு துவக்குதலைச் செய்யப்பட்டான் சாத்தன், என்னும் பொருட்டு. கொடியினது நிகழ்ச்சி, ஈண்டுக் கருவி. கொடி சாத்தனைத் தொழி லுறுவிக்குங்கால் தான் அவனை நீங்கா உடனிகழ்ச்சியை விளக்கிற்று. ஒடு என் உருபு. அரசனால் இயற்றப்பட்ட தேவகுலம், என்பது ஏவும் வினைமுதல்.

இனி, 'கருவி, காரணம், ஏது, நிமித்தம்' என்பன, தம்முள் வேறுபாடு உடைய வேனும், ஒத்த பொருளன. அக் காரணம் முதற் காரணம் துணைக் காரணமும் என இரு வகைப்படும். முதற்காரணமாவது காரியத்தோடு ஒற்றுமை யுடையது; துணைக் காரணமாவது அம் முதற் காரணத்திற்குத் துணை யாகிய வினை முதலிய எட்டும். அக் கருவி யாவது, வினைமுதற்றொழிற் பயனைச் செயப்படு பொருட்கண் உய்ப்பது. அதுவும் இயற்றுதற் கருவி யாகிய காரகக் கருவியும், அறிதற் கருவி யாகிய ஞாபகக் கருவியும் என இரு வகைப்படும். ஊசியொடு குயின்ற தூசும் பட்டும், என்பது காரகக் கருவி. அஃது, ஊசி கொண்டு சாத்தன் குயிலுதலைச் செய்யப்பட்ட தூசும் பட்டும், என்னும் பொருட்டு சாத்தன் தொழிற் பயனை ஊசி தூசிலும் பட்டிலும் நிகழ்த்திற்று. இது துணைக்காரணம். மண்ணுன்

இயன்ற குடம்: முதற் காரணம். இதுவும் காரகக்கருவி. உணர்வினான் உணர்ந் தான்; புகையினான் எரியுள்ளது உணர்ந் தான்: இவை ஞாபகக் கருவி. இவற்றிற்கு உணர்வு முதற் காரணம். காரகமாவது, தொழிலை இயற்றுவிப்பது. ஞாபகமாவது, அறிவிப்பது.

இனி, ஆல்: அகத்தியனால் தமிழ் உரைக்கப்பட்டது வேலால் எறிந்தான், எனவும்; ஓடு,

'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' (குறள் 140)

'காவோடு அறக் குளம் தொட்டானும்' (திரிகடுகம் 70)

'நாவீற் றிருந்த புலமா மகளோடு நன்பொற்
பூவிற் றிருந்த திருமா மகள்' (சீவக. 30) எனவும் வரும்.

'இது நனி பயக்கும் இதனான் என்னும்': இஃது, ஆன் வந்தது.

(அதனினியறல் ......... வென்மனார்)

இது, அதனை முடிக்க வரும் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

அதனின் இயறல் — ஒன்றான் என்று பண்ணப்படுதல் என்னும் பொருண்மை; அதற்றகு கிளவி — ஒன்றினான் ஒன்று தகுதல் என்னும் பொருண்மை; அதன் வினைப்படுதல் — ஒன்றனான் ஒன்று தொழி லுறுதல் என்னும் பொருண்மை; அதனின் ஆதல் — ஒன்றனான் ஒன்று ஆதல் என்னும் பொருண்மை; அதனிற் கோடல் - ஒன்றனான் ஒன்றைக் கோடல் என்னும் பொருண்மை; அதனொடு மயங்கல் — ஒன்றனோடு ஒன்று மயங்குதல் என்னும் பொருண்மை; அதனோடு இயைந்த ஒரு வினைக் கிளவி — ஒன்றனோடு ஒன்று இயைந்த ஒரு வினை யாகல் என்னும் பொருண்மை; அதனோ டியைந்த வேறு வினைக் கிளவி — ஒன்றனோடு ஒன்று இயைந்த வேறு வினை ஆகல் என்னும் பொருண்மை; அதனோடு இயைந்த ஒப்பல் ஒப்புரை — ஒன்றனோடு ஒன்று இயைந்த ஒப்பு அல்லாத ஒப்பினை உரைத்தல் என்னும் பொருண்மை; இன் ஆன் ஏது — இன்னும் ஆனு மாகிய ஏதுப் பொருண்மை; என வரூஉம் — என்று சொல்லப்பட்டு வரும் பத்தும்; ஈங்கு வரூஉம் அன்ன பிறவும் — வினைமுதலும் கருவியு மாகிய பொருளிடத்து வரும் அவை போல்வன பிற பொருள்களும்; அதன்பால என்மனார் — அம் மூன்றுவதன் கூற்றன என்று கூறுவர் புலவர், எ-று.

உ-ம்: மண்ணான் இயன்ற குடம்; வாயான் தக்கது வாய்ச்சி; அறிவான் அமைந்த சான்றோர்: இவை கருவி. நாயாற் கோட்பட்டான்; சாத்தனுன் முடியும் இக்கருமம்: இவை வினைமுதல். வாணிகத்தான் ஆயினான்; காணத்தாற் கொண்ட அரிசி: இவை கருவி; ஆன் உருபான் வந்தன.

எண்ணோடு விராய அரிசி; ஆசிரியனோடு வந்த மாணாக்கன்; மலையொடு பொருத மாஅல் யானை (மலைக்கு வினை இன்மையின், இது வேறு வினை ஆயிற்று)

'பொன்னொடு இரும்பனையர் நின்னொடு பிறரே'

(பொன்னொடு இரும்பை உவமித்தலை ஒப் பார் நின்னோடு பிறரை உவமிக்கு மிடத்து, என்றவாறு)
இவை வினைமுதல்; ஒடு உருபான் வந்தன.

முயற்சியின் பிறத்தலான் ஒலி நிலையாது — இதனுள் 'முயற்சியின்' என்பது காரக ஏது; பிறத்தலான் ஒலி நிலையாது. என்பது ஞாபக ஏது.

ஐந்தாவதற்கு உரிய ஏதுவும், ஈண்டு ஓதினது ஏதுவை வரையறுத்தற்கு.

'அன்ன பிறவும் என்றதனால்' கண்ணாற்'கொத்தை: இது சினை வினை முதற்கு ஏறியது.

'உறழ்மணியான உயர்மருப்பின' (புறம் 22: 2)

பெண்ட கையாற் பேரமர்க் கட்டு (குறள் 1083) இவை, ஆன், ஒடு வாயின.

மனத்தொடு வாய்மை மொழியின்: ஒடு ஆன் ஆயிற்று (குறள் 295)

'மதியொடு ஒக்கும் முகம்: இஃது ஒப்பு.

குலொடு கழுதை பாரம் சுமந்தது: இது கட்புல னகா ஒரு வினை ஒடு: இவை முதலியன கொள்க. இவற்றின் வேறுபாடு உய்த்து உணர்க.

கல்:

என் னுதலிற்றோ வெனின், மே னிறுத்த முறையானே மூன்றும் வேற்றுமை யாமா றுணர்த்தல் நுதலிற்று.

பொருள்: மூன்றா மெண்ணு முறைமைக்கண்ண தாகிய ஒடு வென்னும் பெயரை யுடைய வேற்றுமைச் சொல் வினைமுதல் கருவி யாகிய காரணங்களை யுடைத்து. அஃது வருமாற்றைச் சொல்லின், ஒன்றனு லொன்று பண்ணப்படும் பொருண்மை, ஒன்றனுல் ஒன்று தகுதல் என்னும் பொருண்மை, ஒன்றனு லொன்று தொழிலுறுத லென்னும் பொருண்மை, ஒன்றனு னொன்று ஆத லென்னும் பொருண்மை, ஒன்றனு னொன்றைக் கோட லென்னும் பொருண்மை, ஒன்றனோ டொன்று மயங்க லென்னும் பொருண்மை, ஒன்றனோ டொன்றியைந்து ஒரு வினை யாத லென்னும் பொருண்மை, ஒன்றனோ டொன் றியைந்து வேறு வினை யாத லென்னும் பொருண்மை, ஒன்றனோ டொன் றியைந் தொப் பல்லா வொப்பினை யுரைத்த லென்னும் பொருண்மை, இத் தன்மை யா னென்னும் பொருண்மை ஏதுப் பொருண்மை யென்னு மிவையும், இப் பெற்றியானே இதனிட் த்துவருகின்ற வத் தன்மையான பிற பொருள்களும் அம் மூன் ருவதன் கூற்றன வென்று சொல்லுவர் புலவர், என்றவாறு.

மூன்ருவதற் குருபு ஒடுவும், ஆனு மென இருவகைத்து. ஆ னென்ப தெடுத் தோதிற்றில ரெனினும், "அதனி னியற லதற்றகு கிளவி" யென வோதிய வாய்பாட்டாற் பெறுது மென்பது.

வினைமுதல் கருவி யென் றோதிய பொருண்மை இவ் விரண் டுருபிற்கு மொக்கும் என்பது.

உ-ம்: வினைமுதல்: கொடியொடு துவக்குண்டான்; நாயாற் கோட்பட்டான். கருவி: ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்; வேலா னெறிந்தான், என வரும்.

அதனி னியறல்: தச்சன் செய்த சிறு மா வையம், என்பது.

அதற்றகு கிளவி: வாயாற் றக்கது வாய்ச்சி யென்பது.

அதன் வினைப் படுதல்: நாயாற் கோட்பட்டான்; சாத் தனுன் முடியு மிக் கருமம், என்பன.

அதனி னுதல்: வாணிகத்தா னுயினுன், என்பது.

அதனிற் கோடல்: காணத்தாற் கொண்ட வரிசி, என்பது.

அதனொடு மயங்கல்: எண்ணொடு விராய வரிசி யென்பது.

அதனொடு இயைந்த ஒரு வினைக் கிளவி: சாத்தனொடு வந்தான், என்பது.

அதனொ டியைந்த வேறு வினைக் கிளவி: மலையொடு பொருத மால் யானை, என்பது. காவொ டறக் குளந் தொட்டல், என்பது. வேறு வினை யென்பது ஒன்றன்கண்ணே வினை யாதல்.

அதனோ டியைந்த வொப்ப லொப்புரை: நூலொடு நாரியைந்தது போலும்; முத்தொடு முழாக் கோத்தது போலும், என்பன.

இன்னா னென்பது இத் தன்மையான் என ஒருவன் பெற்றிக் கூறல்: அஃது கண்ணுற் கொத்தை; காலான் முடவன், என்பன. ஏது: முயற்சியிற் பிறத்தலா னிசை நிலையாது, என்பது.

அதனி னியறன் முதலாக வதனிற் கோடல் ஈறாக வோதிய பொருண்மை யெல்லாஞ் சூத்திரத்துள் ஆ னுருபின் சுவடுபட வோதினமையிற் பெரும்பான்மை ஒடு வுருபிற்கும் வருவன வுளவேற் கொள்க.

இவற்றுள் அதனி னியறல், அதன் வினைப்படுதல் என்றோதிய விரண்டும் வினைமுதற் பாகுபாடு. அதனிற் கோடல் கருவியின் பாகுபாடு போலும். அதற்றகு கிளவியும், அதனுணுதலும் ஏதுவின் பாகுபாடு. அதனொடு மயங்கல் முதலாக அதனோ டியைந்த வொப்ப லொப்புரை ஈறாக ஓதின வெல்லாம் ஒடு வுருபு கொடுத் தோதினமையின் பெரும்பான்மையும் ஒடு உருபிற்கே யுரிய. சிறுபான்மை ஆ னுருபிற்கும் வருவன வுளவேற் கொள்க.

இன்னா னென்னும் பொருண்மையும், ஏதுவென்னும் பொருண்மையும் ஓ ருருபி னெடுத் தோதாமையின் வழக்கிற் கேற்றவாறு கொள்ளப்படும்.

முன்னும் ஏதுவின் பாகுபா டோதி வைத்தும் பின்னும் ஏதுவென வோதிய தவ்வா றொழிய வருவனவற்றைக் கருதிப் போலும். அவ் வேது காரக வேதுவும், ஞாபக வேதுவும் என இரு வகைத்து. முயற்சியிற் பிறத்தல் காரகம். பிறத்தலா னிசை நிலையாது என்பது ஞாபகம். அஞ் ஞாபகத்தைப் போலும்

ஈண்டு ஏதுவென ஓதியது. அன்ன பிறவும் என்றது சூத்திரத்துள் எடுத்தோதின பாகுபாட்டி னொழிந்தனவும் பிற பொருட்பாடுங் கருதிப் போலும். அவையெல்லாம் வந்தவழிக் கண்டுகொள்க.

அரசு:

என்பது மேல் ஒடு வெனப் பெயர் கொடுத்தோதிய வேற்றுமைச் சொன் மூன்றுருவ தாம்; அது வினைமுதலுங் கருவியுமாகிய விரண்டு காரணத்தையும் பொருளாக வுடைத்து. மேல் தன்னிலை முதலியன வா னுருபிற் கேற்ப வுடம்பொடு புணர்த்துச் சூத்திரஞ் செய்தலினவற்றிற்கு முன்னர் கொண்ட வொடுவென்பதற்கு மா னென்பதற்கும் வினைமுதல் கருவி கொள்க.

ஆன் ஆலாய்த் திரிந்து நிற்கும். வினைமுதல் கருத்தா வென்றலு மொன்று. கருத்தா நின்று தன்னை யொழிந்த கருவி முதலிய காரணங்க ளேழனையுங் காரியத்தின்கண் ணிகழ்த்துவது. வினைமுதல், அது வியற்றும் வினைமுதலு மேவும் வினைமுதலு மென விருவகைப்படும்.

உதா:- கொடியொடு துவக்குண்டான், என்ப தியற்றும் வினைமுதல்; அது கொடி தன்னோடு தொடக்குதலைச் செயப்பட்டான் சாத்தன் என்னும் பொருட்டு. கொடியினது நிகழ்ச்சியீண்டு கருவி. கொடி சாத்தனைத் தொழி லுறுவிக்குங்காற் றுணவனை நீங்கா வுடனிகழ்ச்சியை விளக்கிற்று, ஒடு வெ னுருபு. அரசனு னியற்றப்பட்ட தேவகுலம் என்பவும், வினை முதலினிக் கருவி, காரண மேது, நிமித்த மென்பன தம்முள் வேறுபாடுடையவேனு மொத்த பொருட்கு அக் காரண முதற் காரணமுந் துணைக் காரணமு மெனவிரு வகைப்படும். முதற் காரணமாவது காரியத்தோ டொற்றுமை யுடையது. துணைக் காரணமாவது அம் முதற் காரணத்திற்குத் துணையாகிய வினை முதலிய வெட்டுங் கருவியாவது. வினைமுத றொழிற் பயனைச் செயப்படுபொருட்க ணுய்ப்பது. அதுவு மியற்றுதற்குக் கருவியாகிய காரணக் கருவியும் ஞாபகக் கருவியு மென விரு வகைப்படும்: ஊசியொடு குயின்ற தூசும் பட்டு மென்பது காரகக் கருவி. அது ஊசிகொண்டு சாத்தன் குயிலுதலைச் செய்யப்பட்ட தூசும் பட்டு மென்னும் பொருட்டு; சாத்தன் றொழிற் பயனை யூசி தூசிலும் பட்டிலு நிகழ்த்திற்று. மண்ணு னியன்ற குட மென்பது முதற்காரணம். இதுவுங் காரகக் கருவி.

உணர்வினு னுணராதான்; புகையினு லெரியுள்ள துணர்ந்தான்: இவை ஞாபகக் கருவி. இவற்றிற் குணர்வு முதற் காரணம். காரகமாவது தொழிலை யியற்றுவிப்பது. ஞாபகமாவ தறி விப்பது. இனி ஆன் அகத்தியனுற் றமி ழுரைக்கப்பட்டது; வேலா னெறிந்தா னென வரும். வினைமுதல் கருவிக்க ணொடு வெ னுருபு இக் காலத் தருகி யல்லது வாராது. ஓடு: உலக்தோ டொட்ட வொழுகல்; காவோ டறக் குளந் தொட்டானும்; நா வீற்றிருந்த புல மா மகளோடு பூ வீற்றிருந்த வெனவும்.

அதனி னியறல்; மண்ணு னியன்ற குடம். அதற்றகு கிளவி: வாயாற் றக்கது வாய்ச்சி; அறிவா னமைந்த சான்ருேர்: இவை கருவி பாற் படும். அதன் வினைப்படுதல்: நாயாற் கோட் பட்டான்; சாத்தனுன் முடியு மிக் கருமம்: இவை வினைமுதற் பாற் படும். அதனி னுத லென்பது: வாணிகத்தா னுயினன். அதனிற் கோடல்: காணத்தாற் கொண்ட வரிசி: இவையுங் கருவிபாற் படும். இவை யைந்து பொருளும் ஒடு வுருபிற்குஞ் சிறுபான்மை யுரிய வாயினும் பெரும்பான்மைபற்றி ஆ னுரு பிற்கே யுரிய போலக் கூறினர். அதனொடு மயங்கல்: எண்ணொடு விராய வரிசி யென்பது. அதனொ டியைந்த யொருவினைக் கிளவி: ஆசிரியனொடு வந்த மாணுக்கன்; வருதற் றெழி லிருவர்க்கு மொத்தலி னொரு வினைக் கிளவி யாயிற்று. அதனொ டியைந்த வேறு வினைக் கிளவி: மலையொடு பொருத மால் யானை: மலைக்கு வினை யின்மையி னிது வேறு வினைக் கிளவி யாயிற்று. அதனொ டியைந்த ஒப்ப லொப்புரை: பொன்னொ டிரும்பனையர் சின்னொடு பிறர்: ஒப் பில்லதனை ஒப்பாகக் கூறுதலி னொப்ப லொப்புரை யாயிற்று. இந்நான்கற்கும் உடனிகழ்தல் பொது வென்பதூஉ மவையொடு வே றுருபிற்கே யுரிய வென்பதூஉ முணர்த்திய வதனொ டியைந்த நான்கற்குங் கூறினர். இன் னு னேது: இன்னு மானு மேதுவின்கண் வரும்: முயற்சியிற் பிறத் தலா னொலி நிலையாது; தவத்தான் பெற்றுன் வீடு. அதனி னுத லெனக் காரக வேது முன் கூறப்பட்டமையா னிது ஞாபக வேது வாம்.

ஐந்தாவதற் குரிய வின் னுரு பீண்டுச் சொல்லிய இன்னு மானு மேதுப் பொருண்மைக் குரியன வென்று வரை யறை செய்தற் பொருட்டு. இன் னு னென்ப தும்மைத் தொகை. இன் னு னென்பது, கண்ணுற் கொத்தை, அவ்வன்; காலான் முடவ னவன், என்று மாம், சினை வினை முதற் றெரியாவாறு:

என வன்பதனை மாற்றி யேது என்பதன்பின் கொடுத்து ஈங்கு வரூஉ மன்ன பிறவு மென வமைக்க "உறழ்மணியா னுயர் மருப்பின"; "பெண்டகையாற் பேரமர்க் கட்டு": இவை ஆன் ஒடு உருபாயிற்று. மனத்தொடு வாய்மை மொழியில; இது ஒடு ஆ னு யி ற் று. அன்ன பிறவு மென்றதனான் 'தூங்குகையா னோங்கு நடைய; மதியொ டொக்கு முகம். சூலொடு கழுதை பாரஞ் சுமந்தது;' இது கட்புல னாகா வொரு வினை யொடு வென் றறிக.

74. நான்கா குவதே
கு எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெப்பொரு ளாயினும் கொள்ளு மதுவே
யதற்குவினை யுடைமையி னதற்குடம் படுதலி
னதற்குப்படு பொருளி னதுவாகு கிளவியி
னதற்கியாப் புடைமையி னதற்பொருட் டாதலி
னட்பிற் பகையிற் காதலிற் சிறப்பினென்
றப்பொருட் கிளவியு மதன்பால வென்மனார். (12)

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், முறையானே நான்காம் வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

உரை: நா ன் கா ம் எண்ணு முறைமைக்கண்ணது கு என்னும் பெயரை யுடைய வேற்றுமைக் கிளவி; ஈவ தோர் பொருளை யேற்க நிற்கும் அதுவே, என்பது.

வரலாறு: 'சாத்தற்குச் சோறு, என வரும்'. 'எப்பொரு ளாயினும்', என்றார், மூன்றிடத்துப் பன்மை நோக்கி.

அதற்கு வினையுடைமை: கரும்பிற்கு வேலி, என்பது.

அதற் குடம்படுதல்: சாத்தற்கு மக ளுடம்பட்டார் சான்றோர், என்பது.

அதற்குப் படுபொருள்: சாத்தற்குப் ப டு பொ ரு ள் கொற்றன், என்பது.

அது வாகு கிளவி: கடி சூத்திரத்திற்குப் பொன், என்பது.

அதற் கியாப்புடைமை: கைக் கியாப் புடையது கடகம், என்பது:

அதன் பொருட் டாதல்: கூழுக்குக் குற்றேவல் செய்யும், என்பது.

நட்பு: நாய்க்கு நட்புடையன், என்பது.

பகை: மக்கட்குப் பகை பாம்பு, என்பது.

காதல்: தாய்க்குக் காதலன், என்பது.

சிறப்பு: வடுகரசர்க்குச் சிறந்தார் சோழிய வரசர், என்பது.

'அப் பொருட் கிளவி,' என்பது, ஈண்டு ஏற்ற பொரு ளெல்லனவும் வேற்றுமைக்கு உரிமை காட்டுவான் சொல்லினுன், என்பது. ஏற்ற பொருண்மை விதந்து கூறினுன், என்பது சிறப்பு நோக்கி.

பிறவும் அதன் பால ஆவன: பண்ணுக்குத் தக்கது பாடல்; பூவிற்குத் தக்கது வண்டு, என்பன போல்வன.

இன் னெல்லாஞ் சாரியை.

(நான்காகுவதே ......... கொள்ளு மதுவே)

**தெய்வ:**

நான்காம் வேற்றுமை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள்:** நான்காம் வேற்றுமையாவது கு எனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொல். அது யாதானு மொரு பொருளா யினும் ஏற்று நிற்கும் நிலைமைத்து, எ-று. எனவே, ஏற்கும் பொருண்மைக்கண் வரும், எ–று.

அந்தணர்க்குக் கொடுத்தான், என வரும்.

(அதற்கு வினை......... பால வென்மனர்)

இதுவும் நான்காம் வேற்றுமைக்கண் வரும் பொருள் வேறு பாடு உணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள்:** அதற்கு வினை யுடைமை முதலாகச் சிறப் பீருகச் சொல்லப்பட்டவற்றின்கண் அப் பொருள்பட வருஞ் சொல்லும், உம்மையால் அந் நிகரன பிற பொருட்கண் வருஞ் சொல்லும் நான்காம் வேற்றுமைப் பாலன, எ–று. உம்மை எச்சவும்மை.

அதற்கு வினை யுடைமையின் என்பது மேற் சொல்லப் பட்ட கொடைப் பொருண்மையே யன்றி உரு பேற்கும் பொருட்கு வினை யாத லுடைமை கூறும்வழியும் நான்காம் வேற் றுமைப் பாலனவாம், எ–று. உ-ம்: அவர்க்குப் போக் குண்டு;

அவர்க்கு வர வுண்டு: இவை வீணை, கரும்பிற்கு உழுதான், என்பது மது. அதற்கு உடன்படுத லென்பது உடம்பாடு கூறும்வழியும் நான்காவ தாம், எ-று. உ-ம்: கொலைக் குடம் பட்டான். அதற்குப் படுபொருளாவது – உரு பேற்கும் பொருட்கு இயல்பு கூறும் வழியும் நான்காவதாம், எ-று. உ-ம்: இதற்கு நிறங் கருமை; இதற்கு வடிவு வட்டம்; இதற்கு அளவு நெடுமை; இதற்குச் சுவை கார்ப்பு; இச்சொற்குப் பொருள் இது; இவ் வாடைக்கு விலை இது, எனவும், இவ்வாறு வருவன வும் கொள்க. இன்னும் அதற்குப் படுபொருள் என்றதனுன், உடைப் பொருளும் அவ் விடத்திற்கு ஆம் பொருளும், காலத் திற்கு ஆம் பொருளு மாகி வருவனவுங் கொள்க. அவற்குச் சோறுண்டு; ஈழத்திற் கேற்றின பண்டம்; காலத்திற்கு வைத்த விதை, என வரும். அது வாகு கிளவி – ஒன் றொன்றாகத் திரிந்து வரும் பொருட்கு வருவது: கடிசூத்திரத்துக்கு பொன்; கும்மாயத்திற்குப் பயறு. அதற் கியாப்புடைமை யாவது – உரு பேற்கும் பொருட்கு வலி யாத லுடைமை. யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம் பெற்ற, யாக்கை (நாலடி-28) என்றவழி வலி எனப் பொரு ளாயிற்று. உ-ம்: போர்க்கு வலி குதிரை; நினக்கு வலி வாள், என வரும். அதற் பொருட் டாகலின் என்பது — ஒரு பொருட்காக வென்பது பட வருதல். உ-ம்: கூழிற்குக் குற்றேவல் செய்யும்; கூலிக் கொலிக்கும். நட்பு: அவற்குத் துணை; அவற்கு நட்பு, என வரும். பகை: அவற்குப் பகை. காதல்: மகற்குக் காதலன். சிறப்பென்பது – இன்றியமையாமை பற்றி வரும் உ-ம்: யா முமக்குச் சிறந்தன மாத லறிந்தனி ராயின், எனவும், "நிலத்திற் கணி யென்ப நெல்லுங் கரும்பும்." (நான்மணி–9) எனவும் வரும். உம்மையாற் கொள்ளப்படுவன: இவ் வூர்க் கவ் வூர் காதம்; நாளைக்கு வரும். இவர்க்குத் தகும் இது; இவர்க்கு நன்மை பயக்கும்; அவற்குப் பிறந்த மகன். பிறவும் இந் நிகரன வெல்லாம் கொள்க.

**(நான்காகுவதே......... கொள்ளும் அதுவே)**

**சேனு :**

**இ-ள்:** மேல் கு எனப் பெயர் கொடுத் தோதப்பட்ட வேற்றுமைச் சொல் நான்காவ தாம். அது யாதானு மொரு பொரு ளாயினும் அதனை யேற்று நிற்கும்; எ-று.

எ-டு: அந்தணற் காவைக் கொடுத்தான், என வரும்.

மாணுக்கற்கு நூற் பொருளுரைத்தான், எனக் கொடைப் பொருள வாகிய சொல்லா னன்றிப் பிற வாய்பாட்டாற் கூறப் படுவனவும், மாணுக்கற்கு அறிவு கொடுத்தா னெனக் கொடுப் பான் பொருளாய்க் கொள்வான்கட் செல்லாது ஆண்டுத் தோன் றும் பொருளு மெல்லா மடங்குதற்கு எப்பொரு ளாயினும், என்ருர்.

பிற பொருளு முள வாயினும், கோடற் பொருள் சிறந்த மையின், எப் பொரு ளாயினுங் கொள்ளு மென்ருர்.

(அதற்கு வினை ..... ... வென்மனுர்)

இ-ள்: அதற்கு வினையுடைமை: கரும்பிற்கு வேலி, என்பது. வினை — ஈண் டுபகாரம். அதற் குடம்படுதல்: சாத் தற்கு மக ளுடம்பட்டார், என்பது. சான்ருேர் கொலைக் குடம் பட்டார், என்பது மது. அதற்குப் படுபொரு ளாவது: பொது வாகிய பொருளைப் பகுக்குங்கால் ஒரு பங்கிற் படும் பொருள்: அது சாத்தற்கு கூறு கொற்றவன், என்பது. அது வாகு கிளவி: கடி சூத்திரத்திற்குப் பொன் என்பது. பொன் கடிசூத் திரமாய்த் திரியு மாகலின் அது வாகு கிளவி என்ருர். கிளவி — பொருள். அதற்கு யாப்புடைமை: கைக்கு யாப்புடையது கடகம், என்பது. அதற் பொருட் டாதல்: கூழிற்குக் குற்றே வல் செய்யும், என்பது. நட்பு: அவற்கு நட்டான்; அவற்குத் தமன், என்பன. பகை: அவற்குப் பகை; அவற்கு மாற்ருன் என்பன. காதல்: நட்டார்க்குக் காதலன்; புதல்வற் கன் புறும், என்பன. சிறப்பு: வடுகரசர்க்குச் சிறந்தார் சோழிய வரசர்; கற்பார்க்குச் சிறந்தது செவி, என்பன.

அப் பொரு ளென்றது அன்ன பொருளை; இவ் வாடையு மந் நூலா வியன்றது என்றது போல. எனவே, அன்ன பிறவு மென்றவா ரும்.

அப் பொருட் கிளவியு மென்றதனல், பிணிக்கு மருந்து; நட்டார்க்குத் தோற்கும்; அவற்குத் தக்கா ளிவள்; உற்ருர்க் குரியர் பொற்ருெடி மகளிர், என்பன போல்வன வெல்லாங் கொள்க.

(நான்காகுவதே ........ கொள்ளு மதுவே)

நச்சி:

இது, முறையானே நான்காவது இப் பொருட்கண் வரும் என்கின்றது.

இ-ள்: கு எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி நான்காகுவதே – மேல் கு எனப் பெயர் கொடுத்து ஓதப்பட்ட வேற்றுமைச் சொல் நான்காவ தாம்; அது எப் பொரு ளாயினும் கொள்ளும் – அஃது யாதானு மொரு பொரு ளாயினும் அதனைத் தான் ஏற்று நிற்கும், எ-று.

உ-ம்: அந்தணர்க்கு ஆவைக் கொடுத்தான். என வரும். மாணாக்கற்கு நூற் பொருள் உரைத்தான், எனக் கொடைப் பொருள வாகிய சொல்லா னன்றிப் பிற வாய்பாட்டால் கூறு வனவும், மாணாக்கற்கு அறிவு கொடுத்தான், எனக் கொடுப்பான் பொருளாய்க் கொள்வான்கண் செல்லாது ஆண்டுத் தோன்றும் பொருளும் அடங்குதற்கு 'எப்பொரு ளாயினும்' என்றார்.

( அதற்குவினை......... வென்மனார். )

இஃது, அதனை முடிக்க வரும் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

இ-ள்: அதற்கு வினை உடைமை – ஒன்றற்கு ஒன்று பயன் படுதல், அதற்கு உடம்படுதல் – ஒன்றற்கு ஒரு பொருளை மேற் கொடுப்பதாக உடம்படுதல், அதற்குப் படுபொருள் – ஒன்றற்கு உரிமை உடையவாகப் பொதுவாகிய பொருளைக் கூறு இடப் படுதல், அது ஆகு கிளவி – உருபு ஏற்கும் பொருள் தானே யாய்த் திரிவதோர் பொருண்மை, அதற்கு யாப்புடைமை – ஒன்றற்கு ஒன்று பொருத்தமுடைத் தாதல், அதற் பொருட்டு ஆதல் – ஒரு பொருளின் மேற் பெறுதல் காரணமாக ஒரு தொழில் நிகழ்தல், நட்பு – ஒன்றற்கு ஒன்று நட்பாதல், பகை – ஒன்றற்கு ஒன்று பகையாதல், காதல் – ஒன்றற்கு ஒன்று காதல் உடைத் தாதல், சிறப்பு – ஒன்றற்கு ஒன்று சிறத்தல், என்ற கிளவியும் – என்று சொல்லப்பட்ட பொருள் களும், அப் பொருளும் – அன்ன பொருள்களும், அதன் பால என்மனார் – அந் நான்கன் உருபின் கூற்றன என்று கூறுவர் புலவர், எ-று.

உ-ம்: கரும்பிற்கு வேலி; 'நிலத்துக் கணியென்ப நெல்லும் கரும்பும்' (நான்மணி – 9) என்பதும் அது. வினை – உபகாரம். சாத்தற்கு மகள் உடம்பட்டார். 'சான்றோர் கொலைக்கு உடம் பட்டார்' என்பதும் அது.

சாத்தற்குக் கூறு கொற்றன்; கடி சூத்திரத்திற்குப் பொன்: பொன் கடி சூத்திரமாய்த் திரியும் ஆதலின், 'அதுவாகு கிளவி' என்றார். கிளவி – பொருள். கைக் கியாப் புடையது கடகம். 'உண்டி வெய்யோர்க் குறுபிணி எளிது' (முதுமொழி 77) என்பதும் அது.

கூழிற்குக் குற்றேவல் செய்யும்; அவற்கு நட்டான் அவற்குத் தமன் என்பதும் அது. அவற்குப் பகை; 'கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை' (குறள் – 290) என்பதும் அது.

நாட்டார்க்குக் காதலன்; 'புதல்வற்கு அன்புறும்' என்பதும் அது.

வடுகரசர்க்குச் சிறந்தார் சோழிய அரசர்; 'கற்பார்க்குச் சிறந்தது செவி,' என்பதும் அது.

'அப் பொருளும்' என்றதனானே, இச் சொற்குப் பொருள் இது. அவர்க்குச் சோறு உண்டு; நினக்கு வலி வாள்; அவ் வூர்க்கு இவ் வூர் காதம்;

'மனைக்குப் பாழ் வாள்நுதல் இன்மை' (நான்மணி 20)

'போர்க்குப் புனைமன்' (பு. வெ. 80) 'பிணிக்கு மருந்து' (குறள் 1102)

'நட்டார்க்குத் தோற்றலை நாணாதோன் (கலி 43: 10, 11) தன்சீரியல் நல்லாள் தானவற் கீன்ற மைந்தன்; அவற்குத் தக்காள் இவள்; உற்றூர்க் குரியர் பொற்றொடி மகளிர் (இறை சூ. 14, உரை) என்றாற் போல்வன கொள்க.

கல் :

என் னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே நான்காம் வேற்றுமை யுணர்த்த னுதலிற்று.

பொருள்: நான்கா மென்னு முறைமைக்கண்ண தாகிய குவ் வென்னும் பெயரை யுடைய வேற்றுமைச் சொல் யாதொரு பொருளை யாயினும் ஒரு பொரு ளீவ தோர் பொருளினை யேற்ப தாக வுணர்த்தி நிற்கும். இன்னும் அதுதான் வரும் பொருட் பாகுபாட்டினைச் சொல்லின் ஒன்றற் கொன்று பயன்படுத

லென்னும் பொருண்மை, ஒன்றற் கொன்று பொருண் மேற் கொடுப்பதாக வுடம்படுத லென்னும் பொருண்மை, ஒன்றற் கொரு பொரு ளுரிமையுள்வழிக் கூ றிடப்படுத லென்னும் பொருண்மை, அம் முதற் பொருட்டா யாகலான் என்னும் பொருண்மை, ஒன்றற் கொன்று பொருத்த முடைத் தாதல் என்னும் பொருண்மை, ஒரு பொருளினை மேற்[1]பெறுதல் காரணமாக ஒரு தொழில் நிகழ்த லென்னும் பொருண்மை, ஒன்றற் கொன்று நட்பாத லென்னும் பொருண்மை, பகையாத லென்னும் பொருண்மை, ஒன்றற் கொன்று காத லுடைத் தாத லென்னும் பொருண்மை, ஒன்றற் கொன்று சிறத்த லென்னும் பொருண்மை என்று சொல்லப்பட்ட வப் பொருண்மேல் வருஞ் சொற்களும் நான்கா முருபின் கூற்றன வென்று கூறுவர் புலவர் [2]என்ற வாறு.

எப் பொருளாயினும் என்றது மூன்றிடத்துப் பொருள்க ளது பன்மை நோக்கி. சொற்கள் பொருள்களை உணர்த்துதல் உரிமை நோக்கிச் சொற்றன்மேல் வினைப்பட எப் பொருளாயி யினுங் கொள்ளு மென்று கூறினா ரெனினும் கோடலை யுணர்த்து மென்றவாறாகக் கொள்க.

உ-ம்: சாத்தற்குச் சோறு கொடுத்தான், என்பது.

அதற்கு வினையுடைமை: கரும்பிற்கு வேலி; மயிர்க் கெண் ணெய்; என்பன.

அதற் குடம்படுதல்: சாத்தற்கு மக ளுடம்பட்டார் சான் றோர், என்பது.

அதற்குப் படு பொருள்: சாத்தற்குப் படுபொருள் கொற் றன், என்பது.

அதுவாகு கிளவி: கடி சூத்திரத்துக்கு ப் பொன், என்பது.

அதற் கியாப் புடைமை: கைக் கியாப் புடையது கடகம்.

அதற் பொருட்டாதல்: [3]கூழிற்குக் குற்றேவல் செய்யும், [4]என்பன.

நட்பு: [5]அவற்கு நட்புடையன்; அவ ற்குத் தமன், என்டன

பகை: மக்கட்குப் பகை [6]பாம்பு; அவற்குப் பகை; அவற்கு மாற்றான், என்பன.

---

1. பெ[ரு] (று)தல் 2. [யெ] (எ)ன்றவாறு 3. [அதற்குப் பொருட்டாக்கல் வரிஸைச் சூழும்] 4. எனவறிக [தொடக்கத்தன], 5. [நாய்க்கு] (அவற்கு) 6. [மர] (பாம்)பு

காதல்: நட்டார்க்குக் காதலன்; தாய்க்குக் காதலன், என்பன.

சிறப்பு: வடுகரசர்க்குச் சிறந்தோர் சோழிய வரசர்; கற்பார்க்குச் சிறந்தது செவி, என்பனவாம்.

அதற்கு வினையுடைமை முதலாகக் கூறப்பட்டன வெல்லாம் முன்கூறிய கொடைப் பொருளின் பாகு பாடல்ல; பிற பொருளென வுறிக. அவற்றுள், அதற் குடம்படுதல் அதற்குப் படு பொருள் என்னும் இரண்டுங் கொடை நீர்மையுஞ் சிறிதுடைய.

உம்மையால் [1]பிறவும் அதன் [2]பால பல வுள. அவை: பண்ணிற்குத் தக்கது பாட்டு; பூவிற்குத் தக்கது வண்டு, என்பன போல வரும். பிறவும் அன்ன.

உம்மை இறந்தது தழீஇய எச்ச வும்மை யாகலான் இங்[3]கிக ரன கோடற் குடம்படாதா லெனின், இறந்தது தழீஇய வதனையே இரட்டுற மொழித லென்னும் ஞாபகத்தினான் எதிரது தழீஇயதூஉ மாக்கிக் கூறப்பட்ட தெனக் கொள்க.

(நான்காகுவதே,......... கொள்ளு மற்றதுவே)

அரசு:

என்பது மேல் கு எனப் பெயர் கொடுத் தோதப்பட்ட வேற்றுமைக் கிளவி நான்காவ தாம். அஃ தியாதானு மொரு பொருளாயினு மதனைத் தா னேற்று நிற்கு மென்றவாறு.

உதா: அந்தணர்க் காவைக் கொடுத்தான், என வரும். மாணுக்கர்க்கு நூற்பொருளை யுரைத்தான், எனக் கொடைப் பொருள வாகிய சொல்லா னன்றிப் பிற வாய்பாட்டாற் கூறப் படுவனவு மாணுக்கற்கு அறிவு கொடுத்தா னெனக் கொடுப்பான் பொருளாய்க் கொள்வான்கட் செல்லா தாண்டுத் தோன்றும் பொருளு மடங்குதற் கெப் பொருளாயினு மென்றார்.

(அதற்கு வினை...... பால வென்மனார்)

என்பது, அதற்கு வினையுடைமை—கரும்பிற்கு வேலி; மயிர்க் கெண்ணெய்; மேனிக்கு மஞ்சள்; உயிர்க்குண்டி, என்பன.

---

1. பி[ர]றவும் 2. [ே]பா[ல்](லபல)வுள 5. திக[ரி](ர)ன.

வினை யீண் டுபகாரம். அதற்குடம் படுதலிற் சாத்தற்கு மக்க ளுடம்பட்டார், சான்றூர் கொலைக் குடம்பட்டார் என்பன. அதற்குப் படுபொருளின் சாத்தற்குக் கூறு கொற்றன், கொற் றற்குக் கூறு தேவன், என்பன: பொது வாகிய பொருளைப் பகுக்குங்கால் ஒருவர்க்குப் படும் பொருளென வறிக. அதுவாகு கிளவியின் கடி சூத்திரத்திற்கு பொன்: பொன் கடி சூத்திர மாய்த் திரியு மாதலி னதுவாகு கிளவி யென்றூர். கிளவி-பொருள். அதற்கு யாப்புடைமையின் கைக்கு யாப்புடைத்துக் கடகம், என்பது. அதற் பொருட். டாதலின் கூழிற்குக் குற்றேவல் செய்யும்; வரிசைக் குழும், என்பன. நட்பின் அவற்றிற்கு நட்டான்; அவற்குத் தமன். என்பன. பகையின் அவற்குப் பகை; அவற்கு மாற்றான், என்பன. காதலின் நட்டார்க்குக் காதலன்; புதல்வர்க் கன்புறும், என்பன. சிறப்பின் வடுகரசர்க்குச் சிறந்தார் சோழிய வரசர்; கற்பார்க்குச் சிறந்தது செவி, என்பன.

அப்பொருளென்றது அன்ன பொருளது; அன்ன பிறவுமென வாகும். அது அவ் வாடையு மந் நூலா வியன்ற தென்றதுபோலக் கொள்க. அப் பொருட் கிளவி யென்றதனுற் பிணிக்கு மருந்து; நட்டார்க்குத் தோற்றலை நாணுதோன்; அவற்குத் தக்கானிவன்; உற்றூர்க் குரியர் பொற்றொடி மகளிர்; இச் சொற்குப் பொருளிது; அவருக்குச் சோறுண்டு; நினக்கு வலி வாள்; மக்கட்குப் பகை பாம்பு; இவ் வூர்க் கவ்வூர் காதம்; மனைக்குப் பாழ் வாணுத லின்மை யென்பன கொள்க.

75. ஐந்தா குவதே
இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யிதனி னிற்றிது வென்னு மதுவே
வண்ணம் வடிவே யளவே சுவையே
தண்மை வெம்மை யச்ச மென்று
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை யென்று
முதுமை யிளமை சிறத்த லிழித்தல்
புதுமை பழமை யாக்க மென்று
வின்மை யுடைமை நாற்றந் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதலென்
றன்ன பிறவு மதன்பால வென்மனூர். (13)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், முறையானே ஐந்தாம் வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஐந்தாம் எண்ணு முறைமைக் கண்ணது' இன் என்னும் பெயரை யுடைய வேற்றுமைக் கிளவி; இப் பொருளின் இத் தன்மைத்து இப் பொருள் என்பதனைப் பயப்ப வரும் அது. என்றவாறு.

வரலாறு: 'காக்கையிற் கரிது களம் பழம்', என வரும். இதனின் என்பது காக்கையின் என்பது: இற்று என்பது கரிது என்பது; இது என்பது களம் பழம். எனவே, பொருஉப் பொருளைத் தனக்குப் பொருளாக வுடைத்து, என்றவாறு.

ஐந்தாம் வேற்றுமை நான்கு பொருள் உடைத்து, பொருஉப் பொருளும், நீக்கமும், எல்லையும், ஏதுவும் என.

அவற்றுள், பொருஉப் பொருளை எடுத்துக் கூறினர் சிறப் புடைமையின்: ஒழிந்தனவற்றைப் போக்கிச் சொல்லுதும்.

வண்ணம்: 'காக்கையிற் கரிது களம் பழம்' என்பது.
வடிவு: 'இதனின் வட்டம் இது', என்பது.
அளவு: 'இதனின் நெடிது இது', என்பது.
சுவை: 'இதனிற் றீவிது இது', என்பது.
தண்மை: 'இதனிற் றண்ணிது இது', என்பது.
வெம்மை: 'இதனின் வெய்யது இது', என்பது.
அச்சம்: 'கள்ளரின் அஞ்சும்' என்பது.
என்ரு என்பது எண் ணிடைச்சொல்.

நன்மை: 'இதனின் நன்று இது', என்பது.
தீமை: 'இதனிற் றீது இது,' என்பது.
சிறுமை: 'இதனிற் சிறிது இது' என்பது.
பெருமை: 'இதனிற் பெரிது இது', என்பது.
வன்மை: 'இதனின் வலிது இது' என்பது.
மென்மை: 'இதனின் மெலிது இது,' என்பது.
கடுமை: 'இதனிற் கடிது இது', என்பது.
'என்ரு' என்பது எண்ணிடைச்சொல்.

முதுமை: 'இவனின் மூத்தான் இவன்', என்பது.
இளமை: 'இவனின் இளையான் இவன்', என்பது.
சிறத்தல்: 'இவனிற் சிறந்தான் இவன்', என்பது.
இழித்தல்: 'இவனின் இழிந்தான் இவன்', என்பது.
புதுமை: 'இவனிற் புதியன் இவன்', என்பது.
பழமை: 'இவனிற் பழையன் இவன்,' என்பது.
ஆக்கம்: 'இவனின் ஆயினன் இவன்', என்பது.
'என்ற' என்பது எண்ணிடைச்சொல்,

இன்மை: 'இவனின் இலன் இவன்', என்பது.
உடைமை: 'இவனின் உடையன் இவன்,' என்பது.
நாற்றம்: இதனின் நாறும் இது, என்பது.
இவை யெல்லாம் பொரூஉப் பொருள்.
தீர்தல்: ஊரிற் றீர்ந்தான், என்பது: இது நீக்கம்.
பன்மை: இவரிற் பலர் இவர், என்பது.

சின்மை: 'இவரிற் சிலர் இவர்,' என்பது.
இவையும் பொரூஉப் பொருள்.

பற்று விடுதல்: ஊரிற் பற்று விட்டான்: இதுவும் நீக்கம் என்பது.

'அன்ன பிறவும்' என்றதனால் எல்லைப் பொருளும், ஏதுவும் கொள்க.

எல்லை: 'கருவூரின் கிழக்கு'; 'மருவூரின் மேற்கு' என்பன.

ஏது: 'முயற்சியிற் பிறத்தலின் ஒலி நிலையாது' என்பது.

(ஐந்தா குவதே ......... வென்னு மதுவே)

தெய்வ:

ஐந்தாம் வேற்றுமை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஐந்தாம் வேற்றுமை யாவது இன் என்று பெயர் கொடுத் தோதப்பட்ட வேற்றுமைச் சொல். அஃது இப் பொருளின் இத் தன்மைத்து இப் பொருள் என உணர்த்தும், எ-று. எனவே, இவ் வாய்பாட்டான் வரும் பொருண்மை யெல்லாம் ஐந்தாவ தாம், எ-று.

அவை யாவன:- நீங்க நிற்பதூஉம், பொருவும், ஏதுவும் என்பன. அவற்றுள், நீங்க நிற்பது, பொருள் நீங்கி நிற்பதூஉம், இடம் நீங்கி நிற்பதூஉம் என இரு வகைப்படும். பொருவும் மிகுதலும், குறைதலும், ஒத்தலும் என மூன்று வகைப்படும். அவற்றுள் பொருவும், ஏதுவும் வருகின்ற சூத்திரத்தால் கூறுத லானும், பல் பொருட் கேற்பின் நல்லது கோடல் என்பதனானும் இச் சூத்திரம் நீங்க நிற்பது குறித்ததென்பது கொள்ளப்படும்.

உ-ம்: வரையி னின்றும் வீழாநின்றது அருவி.

(வண்ணம் ......... வென்மனார்)

ஐந்தாம் வேற்றுமைப் பொருள் வேறுபா டுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வண்ணம் முதலாகப் பற்று விடுதல் ஈறாக ஓதப் பட்டனவும், அத் தன்மைய பிறவும் ஐந்தாம் வேற்றுமைப் பாலன, எ-று.

யாதானும் ஒன்றைப் பொருவிக் கூறும்வழி, பண்பினானுதல், தொழிலினானுதல், பொருளினானுதல் கூறல் வேண்டுத லின், அவை யெல்லாம் எடுத் தோதப்பட்டன.

உ-ம்: இதனிற் கரிது; இதனின் வட்டம்; இதனின் நெடிது; இதனிற் கைக்கும்; இதனிற் றண்ணிது; இதனின் வெய்து; இதனின் அஞ்சும்; இதனின் நன்று; இதனிற் றீது; இதனிற் சிறிது; இதனிற் பெரிது; இதனின் வலிது; இதனின் மெலிது; இதனிற் கடிது; இதனின் முதிது; இதனின் இளைது; இதனிற் சிறந்தது; இதனின் இழிந்தது; இதனிற் புதிது; இதனிற் பழைது; இதனின் ஆக்கம்; இவனின் இலன்; இவனின் உடையன்; இதனின் நாறும்; இதனிற் றீரும்; இவரிற் பலர் இவர்; இவற்றிற் சில ஏறும்; இதனிற் பற்று விடும்.

அன்ன பிறவும் என்றதனான் இவனிற் காக்கும்; இவனிற் பண்ணும்; இவனிற் பாடும், என வருவன கொள்க. இவற்றுட் பெரிதென்பது மிகுதி குறித்து நின்றது. சிறிதென்பது குறைவு குறித்து நின்றது. ஏனையவும் இவ்வாறு நோக்கிக் கொள்க. இவை யெல்லாம் ஒப்புக் குறித்துழி உவமை யாம். ஏதுக் குறித்துழிக் கரி தாயிற்று; வட்ட மாயிற்று, என உதார ணங் காட்ட உரு பேற்ற பொரு ளெல்லாம் ஏது வாம்.

(ஐந்தாகுவதே ......... வென்னு மதுவே)

சேனு:

இ-ள்: மேல் இன் னெனப் பெயர் கொடுத் தோதப்பட்ட வேற்றுமைச் சொல் ஐந்தாவ தாம். அஃது இப் பொருளி னித் தன்மைத்து இப் பொரு ளென்னும் பொருண்மையை உணர்த் தும், எ–று.

ஐந்தாவது நான்கு பொருண்மை யுடைத்து, பொருவும், எல்லையும், நீக்கமும், ஏதுவு மென. அவற்றுட் பொருவு இரு வகைப்படும், உறழ்பொருவும், உவமப் பொருவு மென ஏதுவும் இரு வகைப்படும். ஞாபக வேதுவும், காரக வேதுவு மென. அவற்றுள் ஞாபக வேதுப் பொருண்மை மேலே கூறப்பட்டது. காரக வேதுப் பொருண்மை அச்ச மாக்க மென்பனவற்றுற் பெறப்படும். நீக்கப் பொருண்மை தீர்தல், பற்று விடுதல் என்பனவற்றுற் பெறப்படும். ஏனை யிரண்டும் இதனி னிறந்து என்பதனுற் கொள்ளப்படும். அவ் விரண்டனையும் அஃ திரு முறையா னுணர்த்து மாகலான் எல்லைப் பொருள்: கருவூரின் கிழக்கு; இதனி னூங்கு, என வரும். கிழக்கு ஊங்கு என்பன, வினைக்குறிப் பல்லவேனும் இற் றென்னும் பொருள்பட நிற்ற லின் இற் றென்றலே யாம். பொருஉப் பொருட் குதாரணம் முன்னர்ப் பெறப்படும்.

(வண்ணம் ......... வென்மனுர்)

இ-ள்: வண்ண முதலாகப் பற்றுவிடுத வீருகச் சொல்லப் பட்டனவும் அவை போல்வன பிறவும் ஐந்தாம் வேற்றுமைத் திறத்தன வாம்; எ-று.

வண்ணம் வெண்மை, கருமை முதலாயின. வடிவு வட்டஞ் சதுர முதலாயின. அளவு நெடுமை, குறுமை முதலாயின. சுவை கைப்புப் புளிப்பு முதலாயின. நாற்றம் நறு நாற்றம், தீ நாற்றம் முதலாயின.

எ–டு: காக்கையிற் கரிது களம் பழம்; இதனின் வட்ட மிது; இதனி னெடிதிது; இதனிற் றீவி திது: இதனிற் றண்ணி திது; இதனின் வெய் திது; இதனி னன் றிது; இதனிற் றீ திது; இதனிற்சிறி திது; இதனிற் பெரி திது; இதனின் வலி திது; இதனின் மெலி திது; இதனிற் கடி திது; இதனின் முதி திது; இதனி னிளை திது; இதனிற் சிறந்த திது: இதனின்

இழிந்த திது; இதனிற் புதி திது; இதனிற் பழை திது; இவனி னில னிவன்; இவனி னுடைய னிவன்; இதனி னுறு மிது; இதனிற் பல விவை; இதனிற் சில விவை எனவும், அச்சம்: கள்ளரி னஞ்சும் எனவும்; ஆக்கம்: வாணிகத்தி னாயினான், எனவும்; தீர்தல்: ஊரிற் றீர்ந்தான் எனவும்; பற்று விடுதல்: காமத்திற் பற்று விட்டான், எனவும் வரும்.

அச்ச முதலிய நான்கும் ஒழித்து ஒழிந்த இருபத்து நான்கும் ஒத்த பண்பு வேறுபாடு பற்றிப் பொரூஉப் பொருள் விரித்த வாறு.

அன்ன பிறவு மென்றதனால், அவனி னளிய னிவன்; அதனிற் சேய்த் திது; இகழ்ச்சியிற் கெட்டான்; மகிழ்ச்சியின் மைந் துற்றான், என்பன போல்வன கொள்க.

பல வாய்பாட்டோடு வழக்கின்கட் பயின்று வருத லுடைமையாற் பொரூஉப் பொருள் இதற்குச் சிறப் புடைத் தாகலின், பெரும்பான்மையும் அதனையே விரித்தார்.

(ஐந்தாகுவதே......... வென்னு மதுவே)

நச்சி:

இது, முறையானே ஐந்தாவது இப் பொருட்கண் வரும், என்கின்றது.

இ-ள்: இன் எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி ஐந் தாகுவதே – மேல் இன் எனப் பெயர் கொடுத்து ஓதிய வேற்று மைச் சொல் ஐந்தாவ தாம்; அது 'இதனின் இற்று இது,' என் னும் – அஃது இப் பொருளின் இத் தன்மையாய் இருக்கும் இப் பொருள் என்னும் பொருண்மையை உணர்த்தும், எ–று.

ஐந்தாவது, பொருவும், எல்லையும், நீக்கமும், ஏதுவும் என நான்கு வகைப்படும். பொரு உறழ் பொருவும், உவமப் பொரு வும் என இரு வகைப்படும். உறழ்தல், ஒன்றனான் ஒன்றை மிகுத்தல். ஏதுவும் ஞாபக ஏதுவும், காரக ஏதுவும் என இரு வகைப்படும். ஞாபக ஏது முன் கூறிற்று. காரக ஏது, 'அச்சம், ஆக்கம்' என்பனவற்றால் பெறப்படும். நீக்கப் பொருண்மை, 'தீர்தல், பற்று விடுதல்' என்பனவற்றால் பெறப்படும். ஏனை இரண்டும் 'இதனின் இற்று இது' என்பதனால் பெறப்படும்.

அவ் விரண்டனையும் அஃது இரு முறையான் உணர்த்தும்; ஆதலின் எல்லைப் பொருள், கருவூரின் கிழக்கு இவ் வூர்; இதனின் ஊங்கு, என வரும்; இவையும் 'இற்று' என்னும் பொருள்.

(வண்ணம் ......... வென்மனார்)

இஃது, அதனை முடிக்க வரும் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

இ-ள்: வண்ணம் ...... விடுதல் என்று – வண்ணம் முதலாகப் பற்று விடுதல் ஈறாகச் சொல்லப்பட்ட பொருள்களும், அன்ன பிறவும் அதன் பால என்மனார் – அவை போல்வன பிற பொருள்களும் ஐந்தாம் வேற்றுமைத் திறத்தன என்று கூறுவர் புலவர், எ-று.

வண்ணம் வெண்மை, கருமை முதலியன. வடிவு வட்டம். சதுரம் முதலியன. அளவு நெடுமை, குறுமை முதலியன. சுவை கைப்பு, புளிப்பு முதலியன. நாற்றம் நறு நாற்றம், தீ நாற்றம் முதலியன.

உ-ம்: காக்கையிற் கரிது களம் பழம்: இதனின் என்பது, காக்கை; இற்று என்பது, கரிது; இது என்பது களம் பழம். இதனின் வட்டம் இது; இதனின் நெடிது இது; இதனின் தீவிது இது; இதனின் தண்ணிது இது; இதனின் வெய்யது இது; இதனின் நன்று இது; இதனின் தீது இது; இதனின் சிறிது இது; இதனின் பெரிது இது; இதனின் வலிது இது; இதனின் மெலிது இது; இதனின் கடிது இது; இதனின் முதிது இது; இதனின் இளைது இது; இதனின் சிறந்தது இது; இதனின் இழிந்தது இது; இதனின் புதிது இது; இதனின் பழைது இது; இவனின் இலன் இவன்; இவனின் உடையன் இவன்; இதனின் நாறும் இது; இதனின் பல இவை; இதனின் சில இவை: இவற்றிற்கு இரு வகைப் பொருளும் விரிக்க.

அச்சம்: கள்ளரின் அஞ்சும். ஆக்கம்: வாணிகத்தின் ஆயினான்.

கோட்டிற் செய்த கொடிஞ்சி நெடுந்தேர் (பொருந. 163) என்பதும் அது.

நீர்தல்: ஊரின் நீர்ந்தான்; 'தலையின் இழிந்த மயிர் அனையர் (குறள் 964) என வரும்.

பற்று விடுதல்: 'காமத்திற் பற்று விட்டான்' என வரும்.

'அன்ன பிறவும்' என்றதனுன், அவனின் அளியன் இவன்; அதனிற் சேய்த்து இது; இகழ்ச்சியிற் கெட்டான் (குறள்539)

மகிழ்ச்சியின் மைந்து உற்ருன் (குறள் 539) என்பன போல்வன கொள்க.

கல்:

என் னுதலிற்ருே வெனின், நிறுத்த முறையானே ஐந்தாம் வேற்றுமை யாமா றுணர்த்துத னுதலிற்று.

இ-ள்: ஐந்தா மெண்ணு முறைமைக் கண்ண தாகிய இன் னென்னும் பெயரை யுடைய வேற்றுமைச் சொல் இப் [1]பொருளின் இத் தன்மைத்து இப்பொருள் என வரூஉம் பொரூஉப் பொருளினைத் தனக்குப் பொருளாக வுடைத்து; அது வருமாற்றை விரிப்பின், வண்ணம் முதலாகப் பற்று விடுதலீருகச் சொல்லப்பட்ட இப் பொருண்மைகளும் [2]பிற பொருண் மைகளும் அவ் வைந்தாவதின் கூற்றன வென்று சொல்லுவர் புலவர், என்றவாறு.

இனி, ஐந்தாவது பொரூஉப் பொருளும், நீக்கப் பொருளும், எல்லைப் பொருளும், ஏதுப் பொருளும் என நால் வகைய. அவற் றுள், பொரூஉப் [3]பொருள் சிறப்புடைமையின் முன்னரெடுத் [4]தோதப்பட்டது. பொரூஉ வென்பது ஒன்றை யொன்றின் மிகுத்துக் கூறல். இதனி னெறி வாகிய உவமமும் இரட்டுற மொழித லென்னுஞ் ஞாபகத்தான் ஈண்டே கொள்ளப்படும். நீக்கம் உதாரணப் பகுதி கூறுகின்றவழிக் கொள்ளவைத்தா ரென்பது.

எல்லையும், ஏதுவும், அன்ன பிறவாற் கொள்ள வைத்தார், எ-று.

உ-ம்: காக்கையிற் கரிது களாம் பழம், என்ருற் போல்வன. இதனின் என்பது காக்கையின் என்பது. இற் றென்பது கரிது, என்பது. இது வென்பது களாம் பழம் என்பது: என்றது

1. பொருளி [னுமிருவி]ன் 2. பி [ற்] [ற] 3. பொரு [ளே] (ள்) 4. தோ [தினர்] (தப்பட்டது)

காக்கையினுங் கரியது களாம் பழம், என்று மிகுத்துக் கூறியவா ருயிற்று. உவமத்திற்கும் இதுவே யுதாரணமாம். காக்கையைப் போலக் கரிது களாம் பழம், என்றவா ரும்.

இனி வண்ண மென்பது ஐந்து வகைப்படும், கருமை முதலியனவாய்.

உ-ம்: காக்கையிற் கரிது களாம் பழம் என்றாற் போல்வன.

* வடி வென்பது முப்பத் திரண்டு வகைக்கு; அவை வட்டஞ் சதுரங் கோண முதலியன.

உ-ம்: இதனின் வட்டமிது வென்பது. அளவு:- நெடுமை, குறுமை, [1] நீளம் எனப் பலவாம். இதனி னெடி திது, எ-து. சுவை: அறுவகைப்படும். அவை கைப்பு முதலாயின. இதனிற் றீவி திது, என்பது. தண்மை: இதனிற் றண்ணி திது, என்பது. வெம்மை: இதனின் வெய்ய திது, எ-து. அச்சம்: கள்ளரின் அஞ்சும், என்பது: இஃது ஏதுவின் கண்ணும் வரும். நன்மை: இதனின் நன்று இது வென்பது. தீமை: இதனிற் றீது இது, எ-து. சிறுமை: இதனிற் [2] சிறி திது வென்பது. பெருமை: இதனிற் பெரி திது வென்பது. வன்மை: இதனின் வலி திது வென்பது. மென்மை: இதனின் மெலி திது. கடுமை: இதனிற் கடி திது, எ-து. முதுமை: இதனின் [3] மூத்தது இது; இவனின் மூத்தோன் இவன் என்பது. இளமை: இவனின் இளையோன் இவன் என்பது. இதனி னிளை திது; முதிது. என வரும். சிறத்தல்: இவனிற் சிறந்தவன் இவன்; இதனிற் சிறந்தது இது. என்பன. இழித்தல்: இவனின் இழிந்தவன் இவன்; இதனின் இழிந்த திது, என்பன. புதுமை: இவனிற் புதியன் இவன்; இதனிற் புதி திது; என்பன. பழமை: இவனிற் பழையன் இவன்; இதனிற் பழை திது. என்பன. ஆக்கம்: இவனின் ஆயினன் இவன்; வாணிகத்தி னாயினன் இவன், என்பன. இது ஏதுப் பொருட்கண்ணும் வரும். இன்மை: இவனின் இலன் இவன், என்பது. உடைமை: இவனின் உடையன் இவன், என்பது. நாற்றம்: இதனின் நாறும் இது, என்பது.

இவை யெல்லாம் பொருஉப் பொருளாம்.

---

* தெளிவில்லை 1. [நிகர] (நீள)ம் 2. சி [ருமை] றிதிது.
3. மூத் [தான்] (தது இது)

நீர்தல்; ஊரிற் றீர்ந்தான் என்பது. பன்மை: இவரிற் பலர்; இதனிற் பல விவை. என்பன. சின்மை: இவரிற் சிலர்; இதனிற் சில விவை. என்பன.

இவையும் பொரூஉப் பொருளனவாம்.

பற்று விடுதல்: ஊரிற் பற்று விட்டான்; காமத்திற் பற்று விட்டான், என்பன:

இவை நீக்கம்.

மருவூரின் மேற்கு; கருவூரின் கிழக்கு, என்பன.

இவை எல்லைப் பொருளன வாம்.

முயற்சியிற் பிறத்தலின் இசை நிலை யாகாது, என்பது ஏதுப் பொருளது.

அன்ன பிறவும் என்றது [1]எடுத் தோதினது பொரூஉப் பொருளின் பாகுபாட்டினும், நீக்கப் பொருளின் பாகுபாட்டினும் ஒழிந்தவற்றிற்கும், பிற பொருட் பாகுபாட்டிற்கும் புறனடை யென வுணர்க.

(ஐந்தா குவதே, ........ வென்னு மதுவே)

**அரசு:**

என்பது மேல் இன் னெனப் பெயர் கொடுத் தோதப்பட்ட வேற்றுமைக் கிளவி ஐந்தாவது அஃ திப் பொரு ளித் தன்மைத் திப் பொரு ளென்னும் பொருண்மையை யுணர்த்தும். ஐந்தாவது பொருவு மெல்லையு நீக்கமு மேதுவு மென்று நான்கு பொருண்மைத்து. அவற்றுட் பொரு விரு வகைப்படும், உறழ் பொருவும் உவமைப் பொருவு மென. உறழ்தல் ஒன்றி னொன்றை மிகுத்தல், ஏதுவு மிரு வகைப்படும், ஞாபக வேதுவுங் காரக வேதுவு மென. அவற்றுள் ஞாபக வேதுப் பொருண்மை மேலே கூறப்பட்டது. காரக வேதுப் பொருண்மை அச்ச மாக்க மென்பனவற்றுற் பெறப்படும். நீக்கப் பொருண்மை தீர்தல் பற்று விடுத லென்பனவற்றுற் பெறப்படும். ஏனை இரண்டும் இதனி னிற் றிது வென்பதனுற் கொள்ளப்படும், அஃ திரு முறையா னுணர்த்து மாகலான். எல்லைப் பொருள் கருவூரின்

1. எடுத்தேதி [ரத்தண] ஊது.

கிழக்கு; இவ் வூர் இதனி னூங் குளது [1]கிழக்கு, ஊங்கு [2]என்பன, அவை வினைக் குறிப் பல்லவேனும் இற் றென்னும் பொருள்பட நிற்றலிற் இற் றென்றலே யாம். பொருஉப் பொருட் குதாரணம் முன்னர்க் காட்டுதும்.

(வண்ணம் ......... வென்மனார்.)

என்பது வண்ண முதலாக பற்று விடுத லீருகச் சொல்லப் பட்டனவும் அவை போல்வன பிறவு மைந்தாம் வேற்றுமைத் திறத்தன வா மென்று கூறுவர். வண்ணம்: வெண்மை, கருமை முதலாயின. வடிவு: வட்டஞ் சதுர முதலாயின. அளவு: நெடுமை, குறுமை முதலாயின. சுவை: கைப்பு, புளிப்பு, முதலாயின. நாற்றம்: பூதி நாற்ற மென்பு நாற்ற முதலாயின.

உதா:- காக்கையிற் கரிது களம் பழம், என்புழி இதனி னென்பது. காக்கையின் இற் றென்பது கரிது; இது வென்பது களம் பழம். இதனின் வட்ட மிது; இதனிற் சிறி திது; இதனிற் பெரி திது; இதனின் வலி திது; இதனின் மெலி திது; இதனிற் கடி திது; இதனின் முதி திது: இதனி னிளை திது; இதனிற் சிறந்த திது; இதனி னிழிந்த திது; இதனிற் புதி திது; இதனிற் பழை திது; இவனி னில னிவன்; இவனி னுடைய னிவன்; இதனி னூறு மிது; இதனிற் பல விவை; இதனிற் சில விவை: இவற்றிற் கிரு வகைப் பொருவும் விரிக்க. அச்சம்: கள்ளரி னஞ்சும். ஆக்கம்: வாணிகத்தி னாயினன். தீர்தல்: ஊரிற் றீர்ந் தான்; தலையி னிழிந்த மயி ரனையர். பற்று விடுதல்: காமத்திற் பற்று விட்டான், என வரும்.

அன்ன பிறவு மென்றதனால் அவனி னளிய னிவன்; அதனிற் சேய்த் திது; இகழ்ச்சியிற் கெட்டான்; மகிழ்ச்சியின் மைந் துற்ருன், என்பன போல்வன கொள்க. அவற்றுட் பொருஉப் பொருள் பெருஞ் சிறப்பிற் ருகலான் முன் வைத்துப் பல வாய்பாட்டான் விரித்தார்.

76. ஆரு குவதே
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினு மிதன திதுவெனு
மன்ன கிளவிக் கிழமைத் ததுவே
யியற்கையி னுடைமையின் முறைமையிற்
கிழமையிற்

1. உழக்கு: திருத்தம். 2. வென்னே: திருத்தம்.

செயற்கையின் முதுமையின் வினையி னென்ரு
கருவியிற் றுணையிற் கலத்தின் முதலி
ஞெருவழி யுறுப்பிற் குழூஉவி னென்ரு
தெரிந்துமொழிச் செய்தியி னிலையின் வாழ்ச்சியிற்
றிரிந்து வேறுபடூஉம் பிறவு மன்ன
கூறிய மருங்கிற் ருேன்றுங் கிளவி
யாறன் பால வென்மனுர் புலவர். 14

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்ருே வெனின், முறையானே ஆரும் வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

**உரை:** ஆரும் எண்ணு முறைமைக்கண்ணது அது என்னும் பெயரை யுடைய வேற்றுமைச் சொல்; தன்ஞெடு தொடர்ந்த தோர் பொருளையும் தன்னின் வேருய தோர் பொருளையும் இதன திது என்று கிழமை செப்பி நிற்றல் ஆரும் வேற்றுமையது இலக்கணம் என்றவாறு. அதுவே என்பது அப் பொருளை விரிப்பான் தெரித்தவாறு.

'இதனதிது' என்னுங் கிளவிக் கிழமைத்து என்றது, 'அன்ன' என்றதனுன், இதற்குப் பிறிது மொரு பொருள் உண்டு என்க. அஃ தியாதோ வெனின், அவன, அவள என்னும் ஈற் றகரம்.

தன்னினும் என்புழித் தற்கிழமை ஐந்து வகைப்படும்: ஒன்று பல குழீஇய தற்கிழமையும், வேறு பல குழீஇய தற்கிழமையும், ஒன்றியற் கிழமையும், உறுப்பின் கிழமையும், மெய் திரிந் தாய கிழமையும், என.

ஒன்று பல குழீஇய தற்கிழமையது, 'எட் குப்பை' என்பது.

வேறு பல குழீஇய தற்கிழமையது; படையது குழாம் என்பது.

ஒன்றியற் கிழமையது. நிலத்தினது அகலம், என்பது.

உறுப்பின் கிழமையது; யானையது கோடு, என்பது.

மெய். திரிந் தாகிய கிழமையது: 'எள்ளினது சாந்து' என்பது.

பிறிதின் கிழமை இது போலப் பகுதிப் படாது.

இனி, அவ் விரண்டு கிழமையும் ஒட்டுமாறு காட்டுதும்:

இயற்கை: சாத்தன தியற்கை, என்பது.

உடைமை: சாத்தன துடைமை, என்பது.

முறைமை: ஆவினது கன்று, என்பது.

கிழமை: சாத்தனது கிழமை, என்பது.

செய்ற்கை: சாத்தனது செயற்கை, என்பது.

முதுமை: அவனது முதுமை, என்பது.

வினை: அவனது வினை, என்பது.

கருவி: சாத்தனது வாள், என்பது.

துணை: அவனது துணை, என்பது.

கலம்: சாத்தனது கலம், என்பது. கலம் என்பது ஒற்றிக் கலத்தை.

முதல்: சாத்தனது முதல், என்பது.

ஒருவழி யுறுப்பு: 'யானையது கோடு' என்பது.

குழூஉ: படையது குழூஉ, என்பது.

தெரிந்து மொழிச் செய்தி: கபிலரது பாட்டு, என்பது.

நிலை: சாத்தனது நிலை, என்பது.

வாழ்ச்சி: சாத்தனது வாழ்ச்சி, என்பது.

திரிந்து வேறுபட்டது: எள்ளினது சாந்து, என்பது. சாத்தனது சொல், என்பதும் அது.

பிறவும் என்பது புறனடை. கூறிய மருங்கிற் றோன்றும் கிளவி ஆறன் பால என்பது இரு கிழமையும் பற்றி வருவனவும் பிறவும் அதன் பால, என்றவாறு.

(ஆறு குவதே......... கிழமைத் ததுவே.)

தெய்வ:

ஆறும் வேற்றுமை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆறும் வேற்றுமை யாவது அதுவெனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொல். அது தன்னினும் பிறிதினும், இதனது இது என வரும் பெற்றிப்பட்ட பொருட் கிழமையை யுடைத்து, எ-று.

தன் என்றது உடையானை; பிறி தென்றது உடைப் பொருளை. ஈண்டுக் கிளவி என்பது பொருள்; கிளக்கப்படுவது கிளவி யாயிற்று. கிழமை என்பது உரிமை. தன்னோடும் பொரு ளோடும். உள்ள உரிமை யுணர வரும் ஆறுவ தென்றவாறு.

அது வென்பது ஒருமை யுணர்த்தும் சொல் லாகலின், வந்தது கண்டு வராதது முடித்தல் என்பதனுல் பன்மை யுணர்த்தும் அகர உருபுங் கொள்க.

உ-ம்: சாத்தனது குழை; சாத்தன குழைகள். உலகத்துக் குழை யுடையாரும் பலர்; குழையும் பல. ஆயினும், இக் குழை இவன தென்னும் உரிமை தோன்ற வந்தவாறு கண்டு கொள்க.

( இயற்கையி ......... புலவர் )

**தெய்வ:**

ஆரும் வேற்றுமைப் பொருள் வேறுபா டுணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள்:** இயற்கை முதலாக வாழ்ச்சி யீருக எண்ணப்பட்ட கிழமையினும், திரிந்து வேறுபடூஉம் பிறவற்றினும், அத் தன்மைய வாகி மேற் சொல்லப்பட்ட இதனது இது என்னும் பொரு டோன்றும் சொல் லெல்லாம் ஆரும் வேற்றுமைப் பாலன, எ-று.

மேலைச் சூத்திரத்தான், உடையானும் உடைப்பொருளு மாகிய கிழமை எடுத் தோதினர்; இச் சூத்திரத்தான் அதனின் வேறுபட்டு வருவன எடுத்தோதினர், என்று கொள்க. இயற்கை என்பது இயல்பாகிய கிழமை. அஃதாவது பொருட்கு இயல்பாகிய பண்பு. நிலத்தது வலி; நீரது தண்மை; தீயது வெம்மை, என வரும். உடைமை என்பது உடைப் பொருளின் பாகுபாடு உணர நில்லாது பொதுமை உணர நிற்பது. அப் பொது கிழமையினும் வரும், என்றவாறு: சாத்தனது உடைமை என வரும். சாத்தனது குழை என்றதனேடு இதனிடை வேற்றுமை என்னை யெனின், சாத்தன துடைமை குழை எனவும் வந்து, குறிப்பு வினைப் பொருளொடு முடிதலின் வே ருதைப் பட்டது. வினைக்குறிப்பு ஓதுகின்றவழி,

'அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும்' (வினை இயல் – 16) என்று ஓதினர் ஆகலின், ஈண்டுக் குழை என நிற்றலே யன்றிக் குழையை யுடையன் எனவும் வருதலின், ஈண்டு வேறுபடுத்து ஓதல் வேண்டு மென்று உணர்க. முறைமை என்பது உடையானும் உடைப்பொருளு மன்றி, முறைமை யாகிய கிழமையான் வருவது; ஆவினது கன்று; மறியது தாய்.

கிழமை என்பது உரிமை: அஃதாவது இவற்கு இவள் உரியள் என்னும் பொருள்பட வருவது. முறைமை சார வைத்ததனுல் கிழத்திய ரென்று கொள்ளப்படும்: அரசனது உரிமை. செயற்கையாவது, செயற்கையான் வருவது: சாத்தனது கல்வி; சாத்தனது கோலம். முதுமை என்பது பரிணுமம் குறித்து நிற்கும்: சாத்தனது முதுமை.

வந்தது கண்டு வராதது முடித்தல் என்பதனுல், இளமையுங் கொள்க: சாத்தனது இளமை. வினை யென்பது தொழில் உணர வருவது; சாத்தனது வரவு. கருவி என்பது உடைமை குறியாது இதற் கிது கருவி யென்னும் பொருள்பட வருவது: யானையது தோட்டி; வனை கலத்தது திகிரி. துணை என்பது நட்பின்மேல் வரும்: சாத்தனது துணை இது.

வந்தது கண்டு வராதது முடித்தல் என்பதனுல் பகையும் கொள்க: சாத்தனது பகை. மாறுபாடும் இனம் ஆகுமோ எனின், மாறுபடும் அப் பொருள் குறித்தலின் இன மாம். கலம் என்பது பாலது கலம்; நிலத்தது விலைக் கலம். முத லென்பது சினையோடு அடுத்து முத லுணர வருவது: கொடியது முதல். ஒருவழி யுறுப்பு என்பது முதலோடு சினை யடுத்து வருவது: சண்பகத்துக் கோடு. குழா மென்பது பல பொருட் டொகுதி: படையது குழாம்; நெல்லது குப்பை. தெரிந்து மொழிச் செய்தி யாவது தெரிந்த மொழியினது செயல் கூறல்: பாட்டது கருத்து; பாட்டது பொருள். நிலை என்பது அவரவர் நின்ற நிலைமை குறித்து வருவது: சாத்தனது இல்வாழ்க்கை; சாத்தனது தவம். வாழ்ச்சி என்பது இடம் பற்றி வரும்: யானையதுகாடு; காட்டது யானை. திரிந்து வேறுபடுவன: எண்ணது சாந்து; கோட்டது நூறு.

கூறிய மருங்கிற் றோன்றுவன, சாத்தனது தோப்பு; பொருளது கேடு; ஆவினது பால்; கரும்பினது சாறு, என இந் நிகரன வெல்லாம் கொள்க.

இன்னுங் கூறிய மருங்கிற் றோன்றுங் கிளவி என்பதனுல், உருபின் பொருள்பட வரும் உடைய வென்னுஞ் சொல்லுங் கொள்க.

(ஆரு குவதே ......... கிழமைத் ததுவே.)

சேநு :

இ-ள்: அது வெனப் பெயர் கொடுத்து ஓதப்பட்ட வேற்றுமைச் சொல் ஆறுவ தாம். அது உடையதாய் நிற்குந் தன்னனும் பிறிதொன்றனும் இதன திது வென்பதுபட நிற்குங் கிளவியிற் றோன்றுங் கிழமையைப் பொருளாக வுடைத்து, எ-று.

எனவே, ஆறுவது கிழமைப் பொருட் டென்றும், அக் கிழமை தன்னான் வந்த தற்கிழமையும், பிறிதான் வந்த பிறிதின் கிழமையு மென இரண் டென்றுங் கூறியவா றும்.

தன் னென்றது தன்னோ டொற்றுமை யுடைய பொருளை; பிறி தென்றது தன்னின் வே றாகிய டொருளை.

அஃதேல், தன்னினும் பிறிதினு மாகிய கிழமைத் தென்னது இதன திது வெனு மன்ன கிளவிக் கிழமைத் தென்ற தென்னை யெனின், பொருட் கிழமையும், பண்புக் கிழமையும், தொழிற் கிழமையும், அவை போல்வனவு மெனக் கிழமை தாம் பல. அவற்று ளொன்று சுட்டாது இதன திது வென்னுஞ் சொல்லாற் றோன்றும் கிழமை மாத்திரம் சுட்டு மென்றற்கு 'இதன திது வெனு மன்ன கிளவிக் கிழமைத்து' என்றார்.

இதன வீவை யென்னும் பன்மை யுருபுத் தொடரு மடங்குதற்கு அன்ன கிளவி யென்றார்.

ஒன்று பல குழீஇய தற்கிழமையும், வேறு பல குழீஇய தற்கிழமையும், ஒன்றியற் கிழமையும், உறுப்பின் கிழமையும், மெய் திரிந் தாய தற்கிழமையு மெனத் தற்கிழமை ஐந்து வகைப் படும்.

பொருளின் கிழமையும், நிலத்தின் கிழமையும், காலத்தின் கிழமையும் எனப் பிறிதின் கிழமை மூவகைப்படும். அவற்றிற்கு உதாரணம் முன்னர்க் காட்டுதும்.

(இயற்கையின்...... என்மனார் புலவர்.)

இ-ள்: இயற்கை முதலாக வாழ்ச்சி யீறாகச் சொல்லப் பட்டனவும், திரிந்து வேறுபடூஉ மன்ன பிறவு மாகிய மேற்

கூறப்பட்ட கிழமைப் பொருட்கண் தோன்றும் சொல் லெல்லாம் ஆறும் வேற்றுமைத் திறத்தன வென்று சொல்லுவர் புலவர், எ–று.

திரிந்து வேறுபடூஉ மன்ன பிறவு மென்முரேனும், திரிந்து வேறுப்படுதல் அன்ன பிறவு மென்றதனுல் தழுவப் படுவனவற் றுள் ஒரு சாரனவற்றிற்கே கொள்க.

எ–டு:– எள்ளது குப்பை; படையது குழாம், என்பன குழூஉக் கிழமை: அவை முறையானே ஒன்று பல குழீஇயதும், வேறு பல குழீஇயது மாம். சாத்தன தியற்கை; நிலத்த தகலம், என்பன இயற்கைக் கிழமை. சாத்தனது நிலைமை; சாத்தன தில்லாமை, என்பன நிலைக்கிழமை: இவை யொன்றியற் கிழமை. யானையது கோடு; புலிய துகிர், என்பன உறுப்பின் கிழமை. உறுப்பாவது பொருளின் ஏகதேச மென்ப தறிவித்தற்கு ஒரு வழி யுறுப் பென்முர். சாத்தனது செயற்கை; சாத்தனது கற்றறிவு, என்பன செயற்கைக் கிழமை. அரசனது முதுமை; அரசனது முதிர்வு, என்பன முதுமைக் கிழமை. முதுமை யென்பது பிறி தோர் காரணம் பற்ருது காலம் பற்றி ஒரு தலையாக அப் பொருட்கட் டோன்றும் பருவ மாகலின் செயற்கையு ளடக்காது வேறு கூறினுர். சாத்தனது தொழில்; சாத்தனது செலவு, என்பன வினைக் கிழமை: இவை மெய் திரிந் தாய தற்கிழமை. சாத்தனது உடைமை; சாத்தனது தோட்டம், என்பன உடைமைக் கிழமை. மறியது தாய்; மறியது தந்தை, என்பன முறைமைக் கிழமை. இசையது கருவி; வனை கலத்தது திகிரி, என்பன கருவிக் கிழமை. அவனது துணை; அவன தணங்கு, என்பன துணைக் கிழமை. நிலத்த தொற்றிக் கலம்; சாத்தனது விலைத் தீட்டு, என்பன கலக் கிழமை. ஒற்றியது முதல்; ஒற்றியது பொருள், என்பன முதற் கிழமை. கபிலரது பாட்டு; பரணரது பாட் டியல், என்பன செய்யுட் கிழமை. தெரிந்து மொழியாற் செய்யப்படுதலின் தெரிந்து மொழிச் செய்தி யாயின: இவை பொருட் பிறிதின் கிழமை. முருகனது குறிஞ்சி நிலம்; வெள்ளிய தாட்சி, என்பன கிழமைக் கிழமை. காட்ட தியானை· யானையது காடு, என்பன வாழ்ச்சிக் கிழமை. அவற்றுள் முருகனது குறிஞ்சி நிலம்; யானையது காடு, என்பன நிலப் பிறிதின் கிழமை. காட்ட தியானை, என்பது பொருட் பிறிதின் கிழமை. ஏனையது காலப் பிறிதின் கிழமை.

திரிந்து வேறுபடூஉ மன்ன பிறவும் என்றதனால், எட்சாந்து: கோட்டு நூறு: சாத்தனது தொப்பு; தொகையது விரி; பொருளது கேடு; சொல்லது பொருள், என்னுந் தொடக்கத்தன கொள்க. அவற்றுள் எட்சாந்து; கோட்டு நூறு, என்பன முதலாயின முழுவதூஉந் திரிதலின், வேறு கூறினர்.

மேற் சொல்லப்பட்ட தற் கிழமை, பிறிதின் கிழமை யென்பனவற்றை விரித்தவாறு.

(ஆருகுவதுவே ......... கிழமைத் ததுவே)

நச்சி:

இது, முறையானே ஆறுவது இப் பொருட்கண் வரும், என்கின்றது.

இ-ள்: அது எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி ஆறுகுவதே – மேல் அது எனப் பெயர் கொடுத்து ஓதப்பட்ட வேற்றுமைச் சொல் ஆறுவ தாம்; அது – அவ் வேற்றுமைச் சொல், தன்னிலும் – ஒரு பொருளினது உடைமைப் பொருளாகி நிற்கும் தன்னோடு ஒற்றுமை யுடைய பொருளாலும், பிறிதினும் – ஒரு பொருளினது உடைமைப் பொருளாய் நிற்கும் தன்னின் வேறாகிய பொருளானும், இதனது இது எனும் – இப் பொருளினுடையது இப் பொருள் என்பது பட நிற்கும், அன்ன கிளவிக் கிழமைத்து – அன்ன பொருளால் தோன்றும் கிழமையைப் பொருளாக உடைத்து. எ–று.

ஈண்டுத் 'தன்' என்றது, உருபு ஏற்கும் பொருளை. அன்ன என்றார் இதன இவை என்னும் பன்மை உருபும் ஆது என்னும் ஒருமை உருபும் அடங்குதற்கு.

உ-ம்: சாத்தன ஆடை; தனது வெள் வேல்; யானை வளவன் கொல்லி மீமிசை, என வரும்.

ஒன்று பல குழீஇயதும், வேறு பல குழீஇயதும் ஒன்றியற் கிழமையும், உறுப்பின் கிழமையும், மெய் திரிந்து ஆயதும் எனத் தற்கிழமை ஐந்து வகைப்படும்.

'ஐம்பால் உரிமையும் அதன்தற் கிழமை' என்பது அகத்தியம் ஆதலின்.

பொருளின் கிழமையும், நிலத்தின் கிழமையும், காலத்தின் கிழமையும் எனப் பிறிதின் கிழமை மூவகைப்படும்.

(இயற்கையி ......... கிழமைத் ததுவே.)

நச்சி :

இஃது, அதனை முடிக்க வரும் பொருள் வேறுபாடு கூறு கின்றது.

இ-ள்: இயற்கை ...... வாழ்ச்சியின் – இயற்கை முதலாக வாழ்ச்சி ஈறுகச் சொல்லப்பட்டனவும், திரிந்து வேறுபடூஉம் அன்ன பிறவும் – ஒரு சாரன திரிந்து வேறுபடும் அவை போல்வன பிறவு மாகிய, கூறிய மருங்கில் தோன்றும் கிளவி – முற் கூறிய கிழமைப் பொருட்கண் தோன்றும் சொல் எல்லாம். ஆறன் பால என்மனுர் புலவர் – ஆறும் வேற்றுமைத் திறத்தன என்று கூறுவர் புலவர், எ–று.

உ–ம்: எண்ணது குப்பை: இஃது ஒன்று பல குழீஇய தற்கிழமை.

படையது குழாம்: இது வேறு பல குழீஇய தற்கிழமை.

சாத்தனது இயற்கை: நிலத்தது அகலம்: இவை இயற் கைக் கிழமை.

சாத்தனது நிலைமை; சாத்தனது இல்லாமை: இவை நிலைக் கிழமை: இந் நான்கும் ஒன்றியற் கிழமை.

ஒரு பொருளின் ஏகதேசம் அறிவித்தற்கு 'ஒரு வழி உறுப்பு', என்றார். அவை, யானையது கோடு; புலியது உகிர்: இவை, உறுப்பின் கிழமை. செயற்கை யாவது, தன் தன்மை திரிந்து வேறோர் தன்மை ஆதல்: அவை, சாத்தனது செயற்கை: சாத்தனது கற் றறிவு. முதுமைக் கிழமை; அரசனது முதுமை; அரசனது முதிர்வு: இஃது அறிவின் முதிர்ச்சி என்பது அறிவித் தற்கு இளமை, கூறு ராயினர்.

வினைக் கிழமை; சாத்தனது வினை; சாத்தனது செலவு: இவை, மெய் திரிந்து ஆய தற்கிழமை.

உடைமைக் கிழமை; சாத்தனது உடைமை; சாத்தனது தோட்டம்.

முறைமைக் கிழமை: மறியது தாய்; மறியது தந்தை.

கருவிக் கிழமை: இசையது கருவி; வினைக் கலத்தது திகிரி.

துணைக் கிழமை; அவனது துணை; அவனது அணங்கு.

கலமாவது, ஓலை: நிலத்தது ஒற்றிக் கலம்; சாத்தனது விலைத் தீட்டு.

இஃது, இரு பொருட்கு உரிமை உடைமையின், உடைமையின் வேறாயிற்று.

முதற்கிழமை: ஒற்றியது முதல்; ஒற்றியது பொருள். தெரிந்து, மொழிச்செய்தி தெரிந்து மொழியால் செய்யப்படுதலின் தெரிந்து மொழிச்செய்தி ஆயிற்று: கபிலரது பாட்டு.

இது 'பாரியது பாட்டு' எனவும் நிற்றலின் இரு பொருட்கு உரிய தாம்.

பரணரது பாட்டியல்: இதுவும் அது: இவை பொருட் பிறிதின் கிழமை.

கிழமைக் கிழமை; முருகனது குறிஞ்சி நிலம்: இது நிலப் பிறிதின் கிழமை.

வெள்ளியது ஆட்சி: இது காலப் பிறிதின் கிழமை
வாழ்ச்சி: காட்டது யானை; இது பொருட்பிறிதின் கிழமை.
யானையது காடு: இது நிலப் பிறிதின் கிழமை.
வாழ்ச்சி வாழ்தலை உணர்த்துங்கால் தற்கிழமையுமாம்.

'அன்ன பிறவும்' என்றது, எட் சாந்து; கோட்டு நூறு: இவை முழுதுந் திரிந்தன.

சாத்தனது ஒப்பு; தொகையது விரி; பொருளது கேடு; சொல்லது பொருள்: இவை சிறிது திரிந்தன.

(ஆறு குவதே........ வென்மனார்)

கல் :

என் னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே ஆறும் வேற்றுமை யாமா றுணர்த்த னுதலிற்று.

இ-ள்: ஆருமெண்ணு முறைமைக்கண்ண தாகிய அது வென்னும் பெயரை யுடைய வேற்றுமைச் சொல் தன்ளுேடு தொடர்ந்த தோர் பொருளேயும் தன்னின் வேருகிய தோர் பொருளேயும் [1]இதனது இது வென்னு கிழமை செப்பி நிற்றலே இலக்கண்மாக வுடைத்து; வருமாற்றைச் சொல்லின், இயற்கை யென்பது முதலாகத் திரிந்து வேறுபடுதலிருக வோதப்பட்ட பொருட் பாகுபாடுகளும், பிறவும் அத் தன்மை தன்னினும் பிறி தினு மென வோதிய இரு வகையிடத்து வரும் பாகுபாடுகளும் அவ் வாரும் வேற்றுமைக் கூற்றன வென்று சொல்லுவர் புலவர், என்றவாறு.

இதன திது வென்னுங் கிளவி யென்றுது 'அன்ன' வென்ற தனுன், அஃறிணை யொருமை தோன்ற வரும் ஆது வென்பதும் [2]அது வென்பதன் அஃறிணைப் பன்மை தோன்ற வருவ தோர் அகர உருபும் உண் டென்று கொள்ளப்படும். அஃதேல், அவை அஃறிணை யிரு பாற்கும் உரிய உருபாயின் அவ் வாறு போல உயர்திணை முப் பாற்கும் உரிய உருபு கூருரோ வெனின், அவ்வாறு வரும் வழக் கின்மையிற் கூரு ராயினுர், என்பது. நமன், நமள், நமர் என்பனவற்றுள் அன், அள், அர் என்பன உயர்திணை உருபன்ருே வெனின் பிற வுருபு போலத் தொகுத் தலும் விரித்தலும் இன்மையானும் தற்கிழமையும் பிறிதின்கிழ மையும் என்னு மிரண்டிடத்தும் வாராமையானும், மற்றைப் பெயரும் உருபுமாகக் கொள்ளாத ஆரும் வேற்றுமைத் தொகைச் சொற் போல் இருபொரு ணிலேமைத் தொரு சொல் லென எச்ச வியலுள் கூறுகின்ருரென்பது. அஃதேல், உயர்திணைப் பொருட்கு உயர்திணைப் பொருளே யுடைமை செப்புமாறென்னே யெனின், அதற்கு மேல் வருகின்ற வோத்தினுள் அது வென் வேற்றுமை யென்புழிக் கூறுவர், என்பது. தன்னினும் என் புழித் தற்கிழமை ஐந்து வகைப்படும்: அவை ஒன்று பல குழீஇய தற்கிழமையும், வேறு பல குழீஇய தற்கிழமையும், ஒன்றியற் கிழமையும், உறுப்பின் கிழமையும், மெய் திரிந் தாகிய தற்கிழமையும் என. பிறிதின் கிழமை இது போலப் பகுதி படாது, என்க.

ஒன்று பல குழீஇயது: [3]எட் குப்பை; எண்ணது குப்பை யென்றவாறு.

---

1. இத [ன்] (னது) 2. அது வென்பதன் [ஆது வென்பதும்] அஃறிணை
3. எட்குப் [வி] (பை)

வேறு பல குழீஇயது: படைக் குழாம்.
ஒன்றியற் கிழமை: நிலத்த தகலம்; சாத்தன தியற்கை.
உறுப்பின் கிழமை: [1]யானையது கோடு; புலிய துகிர்.
மெய் திரிந் தாகியது: எட் சாந்து.
பிறிதின் கிழமை: சாத்தனது தோட்டம், என வரும்.
இனி, அவ் விரு கிழமையும் ஒட்டுமாறு:

இயற்கை: சாத்தன தியற்கை: இது தற்கிழமையுள் ஒன்றியற் கிழமை.

உடைமை: சாத்தன துடைமை: இது பிறிதின் கிழமை. தற்கிழமையும் படும் போலும்.

முறைமை: ஆவினது கன்று: இது பிறிதின் கிழமை.
கிழமை: சாத்தனது கிழமை.

செயற்கை: சாத்தனது செயற்கை: இவ் விரண்டும் தற்கிழமை. ஆகுபெய ராயவழி பிறிதின் கிழமையு மாம்.

முதுமை: அவனது முதுமை: இது தற்கிழமை.

வினை: சாத்தனது வினை: இதுவும் ஆகுபெய ராயவழி பிறிதின் கிழமையு மாம்.

கருவி: சாத்தனது வாள்: இது பிறிதின் கிழமை.

துணை: சாத்தனது துணை: இதுவு மது. கலம்: சாத்தனது கலம். கல மென்பதனை யொற்றிக் கலத்தின்மேற் கொள்க. பிற கலத்தின்மேற் கொள்ளாமைக்குக் காரணம் என்னை யெனின், இஃ தொரு பொருள் இருவர்க் குடைமை யாக நிற்கும் [2]வேறு பாட்ட தாகலின், என்க.

இஃது உரையிற்கோடல். இதுவு மது. முதல்: சாத்தனது முதல், இத் தோட்ட மென [3]வோர்க. இதுவும் ஒருடைமை வேறுபா டெனக் கொள்க. இதுவும் அது. ஒருவழி யுறுப்பு: யானையது கோடு. உறுப் பென்னுது ஒருவழி யுறுப் பென்றது ஒருறுப்பினை யுடைமையாகக் கருதாது பலவற்றையுங் கருதி உரிமை யாகாத பொருடா னு மென்பது போலும். இது தற்கிழமையுள் உறுப்பின் தற்கிழமை.

1. யானை [க்] (யது) 2. வேறுபட்ட : திருத்தம் 3. வோர் [க்] க,

குழுவு: எட் குப்பை; படைக் குழாம், என்பன. [1] இவை தற்கிழமையுள் ஒன்று பல குழீஇயதூஉம், வேறு பல குழீஇய தூஉம் ஆம். குழு வென்பது உடல் நோக்கிற்று. [2] தெரிந்த மொழிச் செய்தி: கபிலரது பாட்டு. இதுவும், பாரியது பாட்டு, எனவும் நிற்றலின் இரு பொருட் குரிமை யாம். கபிலரது என்புழி மெய் திரிந் தாகியதன்பாற் படும். பாரியது என நிற்புழிப் பிறிதின் கிழமை யாம்.

நிலை: பெண்ணுடைகத்துப் பெருஞ்சங்கரனரது நிலை: இஃது ஒன்றியற் கிழமை. வாழ்ச்சி: சாத்தனது வாழ்ச்சி: இது வாழ்த லென்னுந் தொழில் கருதினவழித் தற்கிழமை; வாழு மிடங் கருதியவழிப் பிறிதின் கிழமை யாம்.

திரிந்து வேறுபடுவன: எட் சாந்து; கோட்டு நூறு. [3] என் பன. சாத்தனது சொல், என்பதும் பிறவும் ஒரு பொருண் முழுவ தூஉம் திரியாதன, பரணரது பாட்டியல், என்றாற் போல்வன, வருவன வெல்லாம் உதாரண வாய்பாடாக எடுத் தோதாது, திரிந்து வேறுபடு மெனப் பொதுப்பட ஒரு பொருண்மையாக எடுத் தோதினமையிற் கொள்ளப்படும். பிறவும் என்றதனாற் சாத்தனது வனப்பு; சாத்தன தாண்மை; சாத்தனது நடை; சாத்தனது புத்தகம், என வரும். பிறவு மன்ன.

(ஆருகுவதே, ......... கிழமைத் ததுவே)

அரசு:

என்பது மேல் அது வென்று பெயர் கொடுத் தோதப்பட் டது வேற்றுமைச் சொல் லாருவதாம். அது வொரு பொருளின துடைமைப் பொருளாய் நிற்குந் தன்னோ டொற்றுமை யுடைய பொருளானு மொரு பொருளின துடைமைப் பொருளாய் நிற்குந் தன்னின் வேறாகிய பொருளானு மிப் பொருளி னுடைய திப் பொரு ளென்பது பட நிற்கு மன்ன கிளவியாற் றோன்றுங் கிழமைப் பொருளாக வுடைத்து. தன்னினும் பிறிதினு மாகிய கிழமைத் தென்றது இதன திது வெனு மன்ன கிளவிக் கிழமைத் தென்ற தென்னை? பொருட் கிழமையும், பண்பு கிழமையுந் தொழிற் கிழமையு மவை போல்வன பிறவு மெனக் கிழமை தாம் பல. அவற்று ளொன்று சுட்டா தித னிது வென்னுஞ் சொல்லாற் றோன்றுங் கிழமை மாத்திரஞ் சுட்டு

1. இ [து] (வை) 2. [தி] (தெ) ரிந்த. 3. என்ப [ர்ன்] (வ)

மென்றதற்கு இதன இது வெனு மன்ன கிளவி கிழமைத் தென்றூர். ஒருமை மாத்திரை மன்றி இதனது இவை யென்னும் பன்மை யுருபுத் தொடரு மடங்குதற் கன்ன கிளவி யென்றூர்.

உதா:- சாத்தன தாடை, தனது வெள் வேல் வானவன் கொல்லி மிசை யென வரும். தற்கிழமை ஐந்து வகைப்படும்: அவை, ஒன்றுபல குழீஇயதும், வேறுபல குழீஇயதும்,

ஒன்றியற் கிழமையு, முறுப்பின் கிழமையு
மெய்திரிந் தாகியது மென ஐம்பா
லும்மையு மன்ற தற்கிழமை

யென்பது அகத்திய மாகலின். இனிப் பிறிதின் கிழமை மூவகைப்படும்: பொருளின் கிழமையும் நிலத்தின் கிழமையும் காலத்தின் கிழமையு மென. இவற்றிற்கு உதாரணம் முன்னர் காட்டுதும்.

(இயற்கையி ......... புலவர்.)

உதா: குழுவி னென்றது குப்பை: இது ஒன்று பல குழீஇய தற்கிழமை. படையது குழாம்: இது வேறு பல குழீஇய தற்கிழமை: இது யானைத் தேர்க் குதிரைக் காலாள் ஆதலால் வேருயிற்று. இயற்கை: சாத்தன தியற்கை; நிலத்த தகலம், என்பன, ஒன்றிய தற்கிழமை. நிலை: சாத்தனது நிலைமை; சாத்தன தில்லாண்மை, என்பன. நிலைக் கிழமை யிவையு மொன்றியற் கிழமை.

உறுப்பு: யானையது கோடு; புலிய துகிர், என்பன. உறுப் பின் கிழமை: உறுப்பாவ தொரு பொருளின் ஏகதேச மென்ப தறிவித்தற்கு ஒருவழி யுறுப் பென்றூர். செயற்கை: சாத்தனது செயற்கை; சாத்தனது கற் றறிவு, என்பன செயற்கைக் கிழமை. அது தன்மை திரிந்து வேறோர் தன்மை யாதல். முதுமை: அரசனது முதுமை; அரசனது முதிர்வு என்பன முதுமைக் கிழமை. முதுமை யென்பது பிறி தோர் காரணம் பற்றாது காலம் பற்றி யொருதலையாகப் பொருட்கட் டோன்றும் பருவ மாதலிற் செயற்கையுள் அடக்காது வேறு கூறினுர். வினை: சாத் தனது தொழில்; சாத்தனது செலவு என்பன: வினைக் கிழமை. இவை மெய் திரிந் தாகியதற் கிழமை. உடைமை: சாத்தனது தோட்டம்; சாத்தன துடைமை, என்பன யுடைமைக் கிழமை. முறைமை: மறியது தாய்; மறியது தந்தை யென்பன, முறை

மைக் கிழமை. கருவி: இசையது கருவி; வனை கலத்தது திகிரி யென்பன கருவிக் கிழமை. அவனது துணை; அவன திணங்கு, என்பன துணைக் கிழமை. கலம்: கலமாவ தோலை: நிலத்தொற் றிக் கலம்; சாத்தனது விலைத் தீட்டு, என்பன கலக் கிழமை. முதல்: ஒற்றியது முதல்; ஒற்றியது பொருள், என்பன முதற் கிழமை. தெரிந்து மொழிச் செய்தி: கபிலரது பாட்டு: தெரிந்து மொழியாற் செயப்படுதலிற் றெரிந்து மொழிச் செய்தி யாயிற்று. பரணரது பாட்டியல் என்பன செய்திக் கிழமை. இவை பாரியது பாட்டு எனவும் நிற்றலி னிரு பொருட் குரிய வாம். இவை பொருட் பிறிதின் கிழமை. முருகனது குறிஞ்சி நிலம்; வெள்ளிய தாட்சி யென்பன கிழமைக் கிழமை: இவை முறையே நிலப் பிறிதின் கிழமையுங் காலப் பிறிதின் கிழமையும். வாழ்ச்சி: காட்ட தியானை. இது பொதுப் பிறிதின் கிழமை. யானையது காடு; இது நிலப் பிறிதின் கிழமை. இவ் வாழ்ச்சி வாழ்தலை யுணர்த்துங்காற் றற்கிழமையு மாம். திரிந்து வேறுபடூஉ மன்ன பிறவு மென்றதனுன் எட்சாந்து; கோட்டு நூறு, என்பன முழு தூஉந் திரிந்தன. சாத்தன் தேர்ப் புரவி; தோகையது விரி; பொருளது கேடு; சொல்லது பொருள்: இவை சிறிது திரிந்தன. இவ் வாய்பாடுகண்மேற் சொல்லப்பட்ட தற்கிழமை பிறிதின் கிழமை யென்பனவற்றை விரித்தவா றறிக.

77. ஏழாகுவதே
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைசெய் யிடத்தி னிலத்திற் காலத்தி
னனைவகைக் குறிப்பிற் றோன்று மதுவே
கண்கால் புறமக முள்ளுழை கீழ்மேல்
பின்சா ரயல்புடை தேவகை யெனாஅ
முன்னிடை கடைதலை வலமிட மெனாஅ
வன்ன பிறவு மதன்பால வென்மனார். (15)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், முறையானே ஏழாம் வேற்றுமை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஏழாம் எண்ணு முறைமைக் கண்ணது கண் என் னும் பெயரை யுடைய வேற்றுமைச்சொல்; வினை செய் யிடமும் நிலமும் காலமும் என்பன மூன்று பொருட்கண்ணும் வரும் அது, என்றவாறு.

வினை செய் யிடம்: தட்டுப்புடைக்கண் வந்தான் என்பது.

நிலம்: மாடத்துக்கண் இருந்தான், என்பது.

காலம்: மாரியுள் வந்தான், என்பது.

இனி, அவ் வேற்றுமை யுருபு பலவாகலின், அவற்றை விரிக்கின்றார்; அவை வருமாறு:

ஊர்க்கண் ணிருந்தான்; ஊர்க்கா லிருந்தான், ஊர்ப்புறத் திருந்தான்; ஊரகத் திருந்தான்; ஊரு ளிருந்தான்; சான்றோ ருழைச் சென்றான்; மாடத்தின்கீ ழிருந்தான்; மாடத்தின்மே லிருந்தான்; ஏர்ப்பின் சென்றான்; காட்டுச்சா ரோடும்; ஊரய லிருந்தான்; ஊர்ப்புடை யிருந்தான்.

தே வகை என்பது திசைக் கூற்று: அது, 'வடக்கண் வேங் கடம், தெற்கண் குமரி' எனவரும்.

எனாஅ என்பது இடைச்சொல்.

தேர்முன் சென்றான்; சான்றோரிடை யிருந்தான்; கோயிற்கடைச் சென்றான்; தந்தைதலைச் சென்றான், கைவலத் துள்ள கொடுக்கும்; கையிடத் திருந்தான், எனவும் வரும்.

'அன்ன பிறவும்' என்றதனால் 'கிழவோ டேத்து' என்னுந் தொடக்கத்தன கொள்க.

(ஏழாகுவதே ......... தோன்றுமதுவே.)

தெய்வ:

ஏழாம் வேற்றுமை யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஏழாம் வேற்றுமை யாவது கண் எனப் பெயர் பெற்ற வேற்றுமைச் சொல். அது வினை நிகழுமிடத்து நிலத் தினும், காலத்தினும், அவ் விருவகைக் குறிப்பினும் தோன்றும், எ-று.

எனவே, தொழில் நிகழாதவழி, நிலமும், காலமும் ஏழாம் வேற்றுமை யாகா, என்றவாறும்.

உ-ம்: அரங்கின்கண் வனைந்தான்; மாடத்தின்கண் இருந் தான்: இவை நிலம். காலைக்கண் வனைந்தான்; மாலைக்கண் வனைந்தான்: இவை காலம். போரின்கண் வந்தான், என்றவழி

இடங்குறித்தான். ஆயின், போர் அட நின்றவிடத்து வந்தான் எனவும், காலங் குறித்தா னாயின் பொராநின்ற காலத்து வந்தான் எனவும், நிலமும், காலமும் குறித்துக் கொள்ளக் கிடந்தது. ஆவின்கீழ்க் கிடந்தது ஆ; மேலிருந்தது குரங்கு: இவ்வாறு வரும் இடவேறுபாடுங் குறித்துக் கொள்ளப்படும். பிறவும் அன்ன. இவை பொருண்மைக்கண் உருபு புலப்படாமல் இட வேறுபாடு காட்டுவன. சில கண்டவற்றை எடுத்தோது கின்றார் வருகின்ற சூத்திரத்தான்.

(கண்கால் ......... வென்மனார்.)

இது ஏழாம் வேற்றுமைப் பொருள் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கண் முதலாக இடம் ஈருக ஓதப்பட்டனவும், அத்தன்மைய பிறவும் ஏழாம் வேற்றுமைப் பால, எ-று.

இவை யெல்லாம் பெயரைச் சார்ந்து தனித்தனி வரின் பெயராகி உருபேற்கும். பெயரைச் சாராது இடமும் காலமும் ஆகிய பொதுமை உணர வரினும், உருபு மாத்திரமாகி நிற்கும். இடம் வேறுபாடு உணர வரின் உருபு புலப்படாது பொருள் உணர வரும்.

அகத்தை, அகத்தொடு, புறத்தை, புறத்தொடு என்பன தனித்து உரு பேற்றன. அரங்கினுள் அகழ்ந்தான்; மரத்துழை இருந்தான், என்பன உரு பாகி நின்றன. இனி இடம் வேறுபாடு காட்டுமாறு: கண் என்பது இடம். அரசர்கட் சென்றான். என்பது; நெறிக்கட் சென்றான் என்றாற்போல, ......... அரசன் ஆதாரம் ஆதலின்றி அவனிடத்துச் சென்றான் என உருபு புலப் படாமல் இடம் என்ப தோர் பொருள் உணர்த்தியவாறு கண்டு கொள்க. கால் – ஊர்க்கா னிவந்த பொதும்பர்: ஊரை......... ஆகிய பொருள்மேல் வந்தது. புறம் – சுவர்ப்புறத்துப் பாவை. பாவைக்கு ஆதார மாகின்றது சுவ ராயினும் அச் சுவரகத்துப் பாவை யின்மையின் புற மென ஒரு பொருள் தோன்ற நின்றது. அகம்-எயி லகத்துப் புக்கான்: புறம் உண்டாகலின் அகம் என ஒரு பொருள் தோன்ற நின்றது. உள் - சிலேயுட் பொருள்: சிலேப் புறத்துப் பொருள் இன்மையின் உள் என ஒரு பொருள் தோன்றி நின்றது. உழை அரசனுழை இருந்தான்: அரசன்

அரு கென ஒரு பொருள் தோன்ற நின்றது. கீழ்–மாடத்தின்கீழ் இருந்தான்: மேல் அன்மை காட்டிற்று. மேல்–மாடத்தின்மே லிருந்தான்: கீழ்அன்மை காட்டிற்று. பின் – அரசன்பின் இருந் தான்: முன் அன்மை காட்டிற்று. சார் – காட்டுச்சார் ஓடும் குறுமுயல்: காட்டைச் சார்ந்த இடம் என்பது தோன்றிற்று. அயல் – மனை அயல் இருந்தான்: மனை அல்லாத பிற இடம் தோன்ற வந்தது. புடை என்பது பக்கம்–எயிற்புடை நின்ருன்: எயிலின்கண் ஒரு பக்கம் என்பது தோன்றிற்று. தே வகை என்பது திசைக் கூறு: அரங்கின் வடக் கிருந்தான், தெற் கிருந் தான் என்றவழி, வடக்கு, தெற் கென ஒரு பொருள் தோன்றி நின்றது. முன்–அரசன்முன் இருந்தான்: பின் அன்மை காட் டிற்று. இடை, கடை, தலை என்பன கலத்தின்இடை நின்ருன்; கலத்தின் கடை நின்ருன்; கலத்தின்தலை நின்ருன், என மரக் கலத்தின் இட வேறுபாடு காட்டின. வலம், இடம் என்பன – அரசன் வலத் திருந்தான் அமைச்சன்; அரசன் இடத் திருந்தான் சேனுபதி. என வலம், இடம் எனச் சில பொருள் தோன்றி நின்றன.

அன்ன பிறவும் என்றதனுல், இல், வயின், வழி, மாட்டு, தேம், மருங்கு, பால், முதல் என வருவன வெல்லாம் கூறிய நெறி யினுல் வேறுபாடு உணர்த்துவனவும், உருபு மாத்திர மாகி நிற்பனவும், பெய ராகி நிற்பனவும் அறிந்து கொள்க.

(ஏழாகுவதே......... தோன்றும் அதுவே)

சேனு:

இ-ள்: கண் ணெனப் பெயர் கொடுத் தோதப்பட்ட வேற் றுமைச் சொல் ஏழாவ தாம். அது வினை செய்யாநிற்ற லாகிய இடத்தின்கண்ணும், நில மாகிய இடத்தின்கண்ணும், கால மாகிய இடத்தின்கண்ணு மென அம் மூவகைக் குறிப்பின் கண் ணுந் தோன்றும், எ-று.

எனவே, ஏழாவது இடப் பொருண்மைத் தென்றவா ரும்.

குறிப்பின் தோன்று மது என்றது அவற்றை இடமாகக் குறித்தவழி அவ் வேற்றுமை தோன்று மென்றவாறு.

எனவே, இடமாகக் குறிக்கப்படாதவழி அப் பெயர்க்கண் வேற்றுமை தோன்ரு தென்ப தாம்.

தன்னின முடித்த லென்பதனுன் ஏனை வேற்றுமைச் சொற் களும் அவ்வப் பொருட்கண் குறிப் பில்வழி அவ்வப் பெயர்க் கண் வாராமை கொள்க.

எ—டு: தட்டுப்புடைக்கண் வந்தான்; மாடத்தின்க ணிருந் தான்; கூதிர்க்கண் வந்தான், என வரும்.

(கண்கால் ......... வென்மனுர்.)

இ—ள்: கண் முதலாக இட மீருகச் சொல்லப்பட்ட பத் தொன்பது பொருளும் அவை போல்வன பிறவும் ஏழாவதன் றிறத்தன, எ—று.

கண் ணென்னும் பொருள்வது 'கண்ணின்று கூறுதலாற்ரு னவனுயின்' (கலி-37) எனவும், 'கண்ணகன் ஞாலம்' எனவும், கண் ணென்னு மிடைச் சொல்லா னுணர்த்தப்படும் இடப் பொருண்மை. தே வகை என்பது திசைக் கூறு. கண் கால் புறம் அகம் உள் என்பன முதலாயினவற்றது பொருள் வேற் றுமை வழக்கு நோக்கி யுணர்ந்து கொள்க.

கண் ணின்று சொல்லியானை என்கண் ணின் றிவை சொல் லற்பாலை யல்லை என்றும், ஊர்க்காற் செய்யை ஊர்க்கட் செய் என்றும், ஊர்ப்புறத்து நின்ற மரத்தை ஊர்க்கண் மரம் என்றும், எயிலகத்துப் புக்கானை எயிற்கட் புக்கான் என்றும், இல்லு ளிருந்தானை இற்க ணிருந்தான் என்றும், அரசனுழை இருந்தானை அரசன்க ணிருந்தான் என்றும், ஆவின்கீழ்க் கிடந்த ஆவை ஆவின்கட் கிடந்தது என்றும், மரத்தின்மே லிருந்த குரங்கை மரத்தின்க ணிருந்தது என்றும், ஏர்ப்பின் சென்ருனை ஏர்க்கட் சென்ருன் என்றும், காட்டுச்சா ரோடுவ தனைக் காட்டின்க ணோடும் என்றும், உறையூர்க்கய னின்ற சிராப்பள்ளிக் குன்றை உறையூர்க்கட் குன்று என்றும், எயிற்புடை நின்ருரை எயிற்கண் நின்ருர் என்றும். வடபால் வேங்கடம், தென்பாற் குமரி என்பனவற்றை வடக்கண் வேங்கடம் தெற்கட் குமரி என்றும், புலிமுன் பட் டானைப் புலிக்கட் பட்டான் என்றும், நூலி னிடையுங் கடையுந் தலையு நின்ற மங்கலத்தை நூற்கண் மங்கலம் என்றும், கைவலத் துள்ளதனைக் கைக்க ணுள்ளது என்றும், தன்னிடத்து நிகழ்வ தனைத் தன்கண் நிகழ்வது என்றும் அவ் விடப் பொருள்பற்றி ஏழாம் வேற்றுமை வந்தவாறு கண்டு கொள்க.

எனுஅ வென்பது எண் ணிடைச்சொல்.

கண் முதலாயின வெல்லாம் உரு பென்றுரால் உரையாசிரிய ரெனின், உரு பாயின், ஏழாவதற்குக் கண் ணென்பது உரு பாதல் மேலே பெறப்பட்டமையாற் பெயர்த்துங் கண் கா லென்றல் கூறியது கூறிற்று மாகலானும், ஊர்ப்புறத் திருந்தான், ஊரகத் திருந்தான், கைவலத் துள்ளது கொடுக்கும் எனப் புறம் அகம் வல மென்பனவற்றுழி அத்துச் சாரியை கொடுத்து உதாரணங் காட்டினமையானும், அவர்க் கது கருத்தன் றென்க. உரு பல்லவேல், என்னுழை, என்முன் என நிலைமொழி உருபிற் கோதிய செய்கை பெற்றவா றென்னை யெனின்: ' அதற் பொருட் டாகலின்' (சொல்-76) எனவும் தம்முடைய தண்ண ளியுந் தாமும் எனவும் உருபின் பொருள்பட வரும் பிற மொழி வந்துழியும் நிலைமொழி அச் செய்கை பெற்று நிற்றலின், அச் செய்கை உருபு புணர்ச்சிக்கே யென்னும் யாப்புற வின் றென்க.

அன்ன பிறவு மென்றதனுல், பொருட்கண் உணர்வு. என் கண் அன்புடையன், மலர்க்கண் நாற்றம், ஆகாயத்துக்கட் பருந்து என்னுந் தொடக்கத்தன கொள்க.

(ஏழாகுவதே......... தோன்று மதுவே)

நச்சி:

இது. முறையானே ஏழாவது இப் பொருட்கண் வரும் என்கின்றது.

இ-ள்: கண் எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி ஏழாகு வதே - மேல் கண் என்று பெயர் கொடுத்து ஓகப்பட்ட வேற் றுமைச் சொல் ஏழாவ தாம்; அது வினை செய் இடத்தின் நிலத்தின் காலத்தின் அனைவகைக் குறிப்பின் தோன்றும் - அது வினை செய்யாநிற்ற லாகிய இடத்தின்கண்ணும் வினை நிகழாது வரையறை உடையதோர் நில மாகிய இடத்தின்கண்ணும் வினை நிகழாது வரையறைப்பட்டு நிற்கும் கால மாகிய இடத்தின் கண்ணும் என மூவகைக் குறிப்பின்கண்ணும் தோன்றும், எ-று.

எனவே, ஏழாவது இடப் பொருட்டு ஆயிற்று.

உ-ம்: தட்டுப்புடைக்கண் வந்தான்; மாடத்தின்கண் இருந்தான்; கூதிர்க்கண் வந்தான்; என வரும்: இவை இடமும் இடத்து நிகழ் பொருளும் வேருய் வந்தன.

குன்றத்தின்கண் குவடு: இஃது அவ் விரண்டும் ஒன்ருய் வந்தது.

'குறிப்பின் தோன்றும்,' என்றது, அவற்றை இடம் எனக் கருதிய வழியே அவ் வேழன் உருபு தோன்றுவது; அல்லுழித் தோன்ருது, என்றவாறு.

(கண்கால் ......... வென்மனுர்.)

இஃது, இவ் வேழாவதற்கு முடிக்க வரும் பொருள் வேறு பாடு இன்றி உருபின் பாகுபாடே உடைமையின், உருபின் பாகுபாடே கூறுகின்றது.

இ-ள்: கண் – கண் என்னும் பொருளும், கால்...... புடை கால் முதலாகப் புடை ஈருகச் சொல்லப்பட்ட உருபுகளும், தே வகை எனு – தே வகை என்னும் திசைக் கூற்றுப் பொருண் மையும், முன்...... இடம் எனு – முன் முதலாக இடம் ஈருக ஓதப்பட்ட உருபுகளும், அன்ன பிறவும் – அவை போல்வன பிற உருபுகளும், அதன் பால என்மனுர் – ஏழா வதன் கூற்றன என்று கூறுவர் புலவர், எ-று.

இச் சூத்திரத்தால் கூறிய உருபுகள் ஓர் இடத்தின் ஏக தேசத்தினை வரையறுத்து உணர்த்தும்வழி ஆருவதனை உணர்த்தியும், ஓர் இடத்தினை வரையறுத்து உணர்த்தாது கண் என்பது போல இடம் என முழுதுணர்வு செல்ல நின்றவழி ஏழாவதனையே உணர்த்தியும் நிற்கும் சிறப்பின்மை கருதி வேருக எடுத்து ஓதினுர். ஏழாவதற்கு இம் மூவகைப் பொருட் பாகு பாடு அன்றி வேறு பொருட் பாகுபாடு இன்மையின், முன்னையன போலப் பொருளினைப் பகுத்து ஓதார் ஆயினுர்.

ஆசிரியர் 'கூறிய முறையின் உருபு' (வே-மை-ல். 8) 'இறுதியும் இடையும்' (வே-ம-ல்-20) என்னும் சூத்திரங்களால் பெயர் இறுதிக்கும் முடிக்கும் சொற்கும் முன் நிற்பது உருபு என்று கூறினமையால் பொருளிடை நில்லாமையும் பெற்ரும்.

சிறந்த கண் என்னும் உருபை முற்கூறி, ஈண்டுக் கண் என் பதனைச் சிறப்பில்லா உருபுகளோடு எடுத்து ஓதினுர்: 'கண்ண கல் ஞாலம்' (நள–சுயம்வர 154) என்புழி அக் கண் ஞாலந் தன்னையே உணர்த்தி ஓர் இடத்தினை வரையறுத்து உணர்த் தாது நிற்ப தோர் இடைச்சொல் என்பது உணர்த்துதற்கு.

தே வகை என்னும் பொருள் வரையறைப்படாது, சொல்லு வான் குறிப்பிற்றாய் நிற்றலின், இடத்துள் அடக்கார் ஆயினர்.

இவ் விரண்டு பொருட்கும் வேறு ஓர் சூத்திரம் செய்யாது இவ் வுருபுகளுடனே ஓதினர், சூத்திரம் சுருங்குதற்கு.

உ-ம்: ஊர்க்கால் இருந்தான்; ஊர்ப்புறத்து இருந்தான்; மாடத்தகத்து இருந்தான்; ஊருள் இருந்தான்; சான்றோருழைச் சென்றான்; மாடத்துக்கீழ் இருந்தான்; மாடத்துமேல் இருந் தான்; எர்ப்பின் சென்றான்; காட்டுச்சார் ஓடும் களிறு; ஊரயல் இருந்தான்; ஊர்ப்புடை இருந்தான்; வடக்கண் வேங்கடம்; தேர்முன் சென்றான்; சான்றோரிடை இருந்தான்; கோயிற்கடைச் சென்றான்; தந்தைதலைச் சென்றான்; கை வலத்து உள்ளது கொடுக்கும்; கையிடத்துப் பொருள் என வரும்.

அன்ன பிறவால் வருவன: குடத்தில் விளக்கு; ஊரிலே இருந்தான்; கிழவோள் தே எத்து (இறை. அகப். சூ. 8) எனவும், பொருட்கண் உணர்வு; மலர்க்கண் நாற்றம்; ஆகாயத்துக் கண் பருந்து, எனவும் வரும்.

இன்னும், மணியின்கண் ஒளி; கையின் கண் விரல்; நிறத்தின் கண் எழில்; ஆடற்கண் அழகு, எனக் கிழமையும் சினையும் பண்பும் வினைப்பெயரும் பற்றி வரும்.

இனி, கண் கால் முதலியன உருபை விளக்குதற்கு அவ் வுருபின் பொருளாய் நின்று, கண் ணென் உருபு விரித்துக் கொண்டு நிற்கும் எனின், கண் என்னும் உருபின் பொருளாவது, கண் என்னும் இடைச்சொல்லால் உணர்த்தப்படும் இடப் பொருண்மை என்று பொருள் உரைத்தால், பின் வருகின்ற இடப் பொருண்மையை முன்னும் கூறிற்றே யாம் ஆகலின், கூறியது கூறிற்றாம்.

அல்லதூஉம், 'கண்ணகல் ஞாலம்' என் புழிக் கண் என்னும் இடைச் சொல்லான் உணர்த்தும் இடப் பொருண் மைக்கும் இடத்துக்கண் எனக் கண் ணென் உருபு மீண்டுங் கூறல் வேண்டும்.

அல்லதூஉம்,

'கண்ணின்று கூறுதல் ஆற்ருன் அவனுயின் (கலி. 37: 8) என்பதற்கு என்க ணின்று எனத் தோன்ருு எழுவாயாய் நின்று கண் ணென் உருபு ஏற்று நின்றதாம்

அல்லதூஉம், வடக்கண் வேங்கடம், என்புழிக் கண் ணென் உருபு விரித்தலின், ஒழிந்தவற்றிற்கு ஒவ்வாதாம்.

அல்லதூஉம், ஆலின்கீழ்க் கிடந்த ஆ; மரத்தின்மேல் இருந்த குரங்கு, என்பன முதலியவற்றிற்குக் கண் ணெ னுருபு கொடுத்து உலகம் வழங்காமை உணர்க.

முன்னர் இரண்டாவது முதலிய உருபுகளை முடித்தற்கு எடுத்து ஓதிய காப்பு முதலிய பொருள்களைப் போல உருபை முடித்து நில்லாது ஈண்டுக் கூறிய பொருள்கள் கண் என்னும் உருபையே உணர்த்தி நின்றன என்றலின், சேனுவரையரும் இப் பொருள்களை உருபு என்றே கூறினுர் ஆயிற்று. அங்ஙனம் கூறி அத்துச் சாரியை கொடுத்து உதாரணம் காட்டவே, உருபின் பின்னரும் அத்துச் சாரியை வருதல் தாமும் நேர்ந்தார் ஆயிற்று.

கல்:

என் னுதலிற்ருே வெனின், நிறுத்த முறையானே ஏழாம் வேற்றுமை யாமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஏழா மெண்ணு முறைமைக்கண்ண தாகிய கண் ணென்னும் பெயரை யுடைய வேற்றுமைச் சொல், வினை செய் யிடமும், நிலமுங் காலமு மாகிய மூன்று பொருட்கண்ணும் வரும். அத னுருபு வரும் பாகுபாட்டைச் சொல்லின், கண் ணென்னும் உருபு முதலாய் புடை யென்னும் உருபு ஈருக ஓதப் பட்ட உருபுகளும், இடையே தே வகை யென வோதிய திசைக் கூற்றுப் பொருண்மையும், பின்னரும் முன் னென்னும் உருபு முதலாக இடம் என்னும் உரு பீருக எடுத் தோதப்பட்ட வுருபு களும் அத் தன்மைய பிற வுருபுகளும் அவ் வேழாவதன் கூற்றன வென்பர் புலவர், என்றவா று.

வினை செய் யிடம் - ஒரு தொழில் நிகழு மிடம். நிலம் என்பது, ஒரு தொழில் நிகழாது வரையறை யுடைய தோர் இடம். கால மென்பது ஒரு தொழில் நிகழ்தற்கு இடமாய் வரையறைப்பட்டு நிற்பது. இம் மூன்றன்கண்ணும் ஏழாவது

வருமிடத்து, இடமும் இடத்து நிகழும் பொருளும் வேறுபட வருவனவும் வேறுபடாமல் வருவனவும் இரு வகைய.

உ-ம்: வினை செய் யிடம்: தட்டுப்புடையுள் வந்தான்; தட்டுப் புடையுள் வலி யுண்டு.

நிலம்: குன்றத்துக்கட் கூகை; குன்றத்துக்கட் குவடு; ஆகாயத்துட் பருந்து.

காலம்: மாரிக்கண் வந்தான். மாரிக் கண்ணுள் வந்தாள். என வரும்.

கண் ணென்பது: ஊர்க்கண் ணிருந்தான். கால்: ஊர்க்கா லிருந்தான். புறம்: ஊர்ப்புறத் திருந்தான். அகம்: மாடத்தகத் திருந்தான். உள்: ஊருள் இருந்தான். உழை: சான்றோருழைச் சென்றான். கீழ்: மாடத்துக்கீ ழிருந்தான். மேல்: மாடத்துமே லிருந்தான். பின்: ஏர்ப்பின் சென்றான். சார்: காட்டுச் சார் ஓடுங்களிறு. அயல்: ஊரய லிருந்தான். புடை: ஊர்ப்புடை யிருந்தான். இவையெல்லாம் உருபு.

தே வகை என்பது திசைக் கூறு. இது பொருள். திசை யென்பது ஆகாயம்போல் வரையறைப்படாது சொல்லுவான் குறிப்பினவாய் நிற்றலின் வேறு பொரு ளென்று நில மென்புழி யடக்காது கொண்டு போந்து கூறினர் போலும். வடக்கண் வேங்கடம்; தென்கண் குமரி, என வரும்.

முன்: தேர்முன் சென்றான். இடை: சான்றோரிடை இருந் தான். கடை: கோயிற்கடைச் சென்றான். தலை: தந்தைதலைச் சென்றான். வலம்: கைவலத் துள்ளது கொடுக்கும். இடம்: [1]கையிடத்துப் பொருள் என வரும்.

பிறவு மென்றதனால், கிழவோ டேத்து. [2]கிழவி மாட்டு, என்றாற் போல்வன கொள்க.

ஏனை வேற்றுமை போல பொருட்பாகுபா டன்றி உருபின் பாகுபா டுண்மையின் அஃதனை விரித் தோதினா ரெனக் கொள்க. ஓதின உருபுக ளெல்லாவற்றினுங் கண் ணென்னும் உருபு சிறந்த மையின் முன் வைத்த தென்பது.

---

1. கையிடத்து [இருந்தான்] (ப்பொருள்) 2. கிழவி [ன்ன] மாட்டு.

மற்றும் புறம் அகம் என்பன போல்வன வெல்லாம் பெய ராய், ஆருவதன் பொருண்மையாய் வருகின்றமையின் ஏழ னுருபு ஆமாறு என்னை யெனின், அகம், புறம் என்பன ஓ ரிடத்தினை வரையறுத் துணர்த்தும்வழி ஆருவ தாம். அவ்வா றன்றிக் கண் ணென்பதுபோல இட மென முழுதுணர்வு செல்ல நின்றவழி ஏழாவ தாம் எனக் கொள்க. இது நோக்கிப் போலும் கண், கா லெனக் கண் என்பதனை இருகா லாவது கூறியது என்பது. இவ்வா றன்றிக் கண் ணென்பது ஓர் இடத்தினை வரையறுது முழுவது முணர நிற்கும் உரு பென்றும், அல்லன ஓ ரிடங்களையும் வரையறுத்துக் கொண்டு இடப் பொருள் உணர்த்தி நிற்கும் உருபு எனவுங் கூறுவ தோர் நய முண்டு போலும்.

(ஏழாகுவதே, ......... ரூன்று மதுவே.)

அரசு:

என்பது கணி ணென்று பெயர் கொடுத் தோதப்பட்ட வேற்றுமைச் சொ லேழாவதா மது வினை செய்யாநிற்ற லாகிய விடத்தின்கண்ணும் வினை நிகழாது வரையறை யுடைய தோ ரிடத்தின்கண்ணும் வினைநிகழாது வரையற்றப்பட்டு நிற்குங் கால மாகிய இடத்தின்கண்ணு மென மூவகைக் குறிப்பின் கண்ணுந் தோன்றும். எனவே, ஏழாவ திடப் பொருட் டாயிற்று.

உதா: தட்டுப்புடைக்கண் வந்தான்; மாடத்தின்க ணிருந் தான்; கூதிர்க்கண் வந்தான், என வரும்: இவை இடமும் இடத்தி னிகழ் பொருளும் வேருய் வந்தன. குன்றத்துக்கட் குவடு: இது அவ் விரண்டு மொன்ருய் வந்தது. குறிப்பிற் ரூன்று மென்றவற்றை யிட மெனக் கருதியவழி அவ் வேற் றுமை தோன்று மிடமாகக் குறிக்கப்படாதவழி யப் பெயர்க் கண் ணவ் வேற்றுமை தோன்ரு தென்ப தாம்.

(கண்கால் ......... வென்மனர்.)

என்பது கண் ணென்னும் பொருளுங் கான் முதலாகப் புடை யீருக வோதப்பட்ட யுருபுகளுந் தே வகை யென்னுந் திசைக் கூற்றுப் பொருண்மையு முன் முதலாக விட மீருக வோதப்பட்ட யுருபுகளு மவை போல்வன பிற வுருபுகளு மவ்

வேழாவதன் கூற்றன வென்று கூறுவர் புலவர்.

சிறந்த கண் ணெ னுருபு முற் கூறி மீட்டுங் கண் ணென்பதனைச் சிறப் பில்லா வுருபுகளோ டெடுத் தோதினர். கண்ணகன் ஞாலம், என்புழி யக் கண் ஞாலந் தன்னையே யுணர்த்தி யோ ரிடத்தினை வரையறுத் துணர்த்தாது நிற்ப தோ ரிடைச்சொ லென்பது உணர்த்துதற்கு தே வகை யென்னும் பெருள் வரையறைப்படாது சொல்லுவான் குறிப்பிற்றாய் நிற்றலின் நிலத் துள் அடக்கா ராயினர். அவ் விரண்டு பொருட்கும் வேறோர் சூத்திரஞ் செய்யாது இவ் வுருபுகளுடனே ஓதினர், சூத்திரஞ் சுருங்குதற்கு. இச் சூத்திரத்தாற் கூறிய வுருபுக ளோ ரிடத்தின் ஏகதேசத்தினை வரையறுத் துணர்த் தும்வழி யாருவதனை யுணர்த்தியு மோ ரிடத்தினை வரையறுத் துணர்த்தா து கண் ணென்பது போல இட மென முழுதுணர்வு செல நின்றுழி ஏழாவதனையே உணர்த்தியு நிற்குஞ் சிறப் பின்மை கருதி வேறுக வெடுத் தோதினர்.

உதா: ஊர்க்கா விருந்தான்; ஊர்புறத் திருந்தான்; மாடத் தகத் திருந்தான்; ஊரு ளிருந்தான்; சான்றுருழைச் சென்றான்; மாடத்துக்கீ ழிருந்தான்; மாடத்துமே லிருந்தான்; ஏர்ப்பின் சென்றான்; காட்டுச்சா ரோடுங் களிறு; ஊரய லிருந்தான்; ஊர் புடை யிருந்தான்; வடக்கண் வேங்கடம்; தெற்கட் குமரி; கிழ்க்கட் கடல்; மேற்கண் மலை; தேர்முன் சென்றான்; சான்று ரிடை யிருந்தான்; கோயிற்கடைச் சென்றான்; தந்தைதலைச் சென்றான்; கைவலத் துள்ளது கொடுக்கும்; கையிடத்துப் பொருள்.

அன்ன பிறவால் வருவன: குடத்திலே விளக்கு; ஊரிலே யிருந்தான்; கிழவோ டேத்து; கிழவி மாட்டு, எனவும் பொருட் கண் ணுணர்வு; மலர்க்கண் நாற்றம்; ஆகாயத்துக்கட் பருந்து, எனவும் வரும்.

இன்னும், மணியின்க ணொளி; கையின்கண் விரல்; நிறத்தின் கண் ணெழில்; ஆடற்க ணழகு, எனக் கிழமையுஞ் சினையும் பண்பும் வினைப் பெயரும் பற்றி வரும்.

இனிக் கண் கால் முதலான வுருபை விளக்குதற் கவ் வுருபின் பொருளாய் நின்று கண் ணெ னுருபு விரித்துக் கொண்டு நின்ற தேரின்கண் ணென்னும் பொருளாவது கண் ணென்னு

மிடைச் சொல்லா னுணர்த்தப்படு மிடப் பொருண்மை யென்றா பொரு ளுரைத்தாற் பின் வருகின்ற விடப் பொருண்மையை முன்னுங் கூறிற்று மாதலிற் கூறியது கூறிற்றே யாம். அல்ல தூஉங் கண்ணகன் ஞாலம், என்புழி கண் ணென்னு மிடைச் சொலா.னுணர்த்தவே யிடப் பொருண்மை குறிக்கு மிடத்துக் கண்ணே கண் ணெனுருபு மீட்டுங் கூறல் வேண்டும். அல்லதூ உங் கண் ணின்று கூறுதலாற் று னவ னுயினு னென்புழி கண் இற் றெனத் தோன்று வெழுவாய் நின்று கண்ணென் னுரு பேற்று நின்ற தாம். அல்லதூஉம், வடக்கண் வேங்கட மென் புழிக் கண் ணெ னுருபு விரித்தலி னுெழிந்தவற்றிற் கொவ்வா வாம். அல்லதூஉ மரத்தின்கீழ்க் கிடந்த வா; மரத்தின்மே லிருந்த குரங் கென்பன முதலியவற்றிற்குக் கண் ணெ னுருபு கொடுத் துலகம் வழங்காமையு முணர்க. ஆதலாற் கண் கால் புற மக முள் ளென்பன முதலாயினவற்றது பொருள் வேற் றுமை வழக்கு நோக்கி யுணர்ந்து கொள்க. ஆசிரியர் கூறிய முறைமையி னுருபு இறுதியு மிடையும் என்னுஞ் சூத்திரங்க ளாற் பெய ரிறுதிக்கு முடிக்குஞ் சொற்கு முன்னுற நிற்ப துரு பென்று கூறினமையானும் பொருளிடை நில்லாமையும் பெற்றும். உருபிற்குப் பின்னே அத்து சாரியை கொடுத்து முடித்து, பிறிதவ ணிலையலு மென்பதனுற் கொள்க.

இச் சூத்திர் மேழாவதற்கு மூவகைப் பொருட் பாகுபாடு அன்றி வேறு பொருட் பாகுபா டின்மையின் முன்னையன போல பொருளினைப் பகுத்தோதா துருபின் பாகுபாடே கூறியவாறும்.

78. வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை
யீற்றுநின் றியலுந் தொகைவயிற் பிரிந்தே. (16)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், வேற்றுமைக் கெல்லாம் கிடந்த தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அக் கூறிய வேற்றுமைகள் தொக்கு முடியவும் வேண்டும்; அத் தொக்க வேற்றுமை யுருபு விரியுங்கால் யாண்டு நின்று புலப்படுமோ வெனின், மொழி யீற்றுக்கண்ணே புலப்படும் என்றவாறு.

மற்று, 'ஈறுபெயர்க் காகும்' [வேற்-8] என்புழி விளங் காதோ வெனின், 'விளங்காது; ஆண்டு, அது, உருபு பெயர் திறுதி வந்து நிற்கும் என்றார்; அங்ஙனம் நின்ற உருபு தொகும்

தொகுத்தல் என்பது புலப்படாமை யன்றே; மற்று அது பின்பு புலப்படுங்கால் தான் நின்ற ஈற்றே புலப்படும் என்பது சொல்ல வேண்டும், என்பது.

79. பல்லா றுகப் பொருள்புணர்ந் திசைக்கு
மெல்லாச் சொல்லு முரிய வென்ப. (17)

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் வேற்றுமைக்கண்ணே கிடந்த தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: உருபு தொக்கும் விரிந்தும் நிற்கும் என்றார், அவ் வுருபேயும் அன்று, ஆண்டுப் பிற சொற்களும் உள, அவ் வுருபே போல வந்து ஒட்ட நிற்பன; அவ்வை யெல்லாம் அவ் வுருபே போல ஆண்டே தொகுத்தலும் விரித்தலும் உடையன, என்றவாறு.

குதிரைத் தேர், என்பது, குதிரையாற் பூட்டப்பட்ட தேர்; ஆன் என்பது ஆண்டு உருபு; பூட்டப்பட்டது என ஆண்டு உருபல்லது. ஆண்டு உருபு தொக்கு நின்றாங்கே நிற்கவும் அமையும்; விரித்துக் காட்டவும் அமையும், என்பது.

'பல்ஆறுகப் பொருள்புணர்ந்து இசைக்கும்' என்பது, பலவாற்றானும் பொருள் ஏற்ப வந்து ஒட்டுவன, என்றவாறு.

இரண்டாவது வேற்றுமை யியல் முற்றிற்று.

* (வேற்றுமை ......... வென்ப.)

தெய்வ:

அறுவகை வேற்றுமைக்கும் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேற்றுமைக்கும் உரிய பொருளை விரியக் கூறுங்கால், முதற்பெயர் இறுதிக்கண் இயலும் தொகைச் சொல்லின் கண், தொகையாம் தன்மையிற் பிரிந்து, பல நெறியாகப் பொருளைப் புணர்ந்து ஒலிக்கும் எல்லாச் சொல்லும் உரிய என்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

தொகுத்தல் என்பது செறிதல். முதற் பெயரோடு செறிவது தொகை என்று பெயர் ஆயிற்று.

* இளம் பூரணரும் கல்லாடரும் 16, 17 என இரண்டாகக் கொண்டவற்றைப் பிற ரெல்லாம் ஒன்றாகக் கொண்டுள்ளார்.

இவையாவன: படைக் கை, குழைக் காது தாய் மூவர், குதிரைத் தேர், கருப்பு வேலி, வரை யருவி, பாண்டிய நாடு, குன்றக் கூகை என்பன.

இவற்றுள் இறுதிப் பெயர் முகற் பெயரோடு ஒன்றி நிற்ற லின் தொகை என்றார். இவை விரிய நின்ற காலத்து, இவற் றைப் புணர்ந்து ஒலிக்கும் சொல்லாவன: படைக் கை என்றவழி படையைப் பிடித்த கை, எடுத்த கை, ஏந்திய கை எனவும்; குழைக் காது என்றவழி குழையை யுடைய காது, செறித்த காது இட்ட காது, அணித காது எனவும்; தாய் மூவர் என்ற வழித் தாயோடு கூடி மூவர், கூடிய மூவர் எனவும்; குதிரைத் தேர் என்றவழிக் குதிரையாற் பூட்டப்பட்ட தேர், பூணப்பட்ட தேர், ஓட்டப்பட்ட தேர் எனவு கரும்பு வேலி என்றவழி கரும் பிற்கு ஏமமாய வேலி, வலியாகிய வேலி எனவும்; வரையரு என்ற வழி வரையினின்றும் வீழாநின்ற அரு ஒழுகாநின்ற அருவி எனவும்; பாண்டிய நாடு என்றவழிப் பாண்டியனது நாடு, உடைய நாடு எறிந்த நாடு, கொண்ட நாடு எனவும்; குன்றக்கூகை என்ற வழி, குன்றத்துக்கண் வாழாநின்ற கூகை, இராநின்ற கூகை எனவும் இவ்வாறு வருவன இவை யெல்லாம் எடுத்தோ தின் வரம்பில ஆதலின், எல்லாச் சொல்லும் உரிய எனப் புறநடை ஓதல் வேண்டிற்று.

இவற்றுள் ஆறும் வேற்றுமை உருபு புலப்பட்டவழிப் பெயரோடு முடிந்தும், புலப்படாத சிறுபான்மை வினைக்குறிப் போடும், வினையோடும் முடிந்தும், ஏனை வேற்றுமைகள் எல்லாம் வினையோடும், வினைக்குறிப்போடும் முடிந்தும் வருதலால் பெயர்ச் சொல்லும் வினைச் சொல்லும் ஆகிய எல்லாச் சொல்லும் வேற்றுமைக்கு முடிபாம் என்று கொள்க. அவ்வழி வினையும் வினைக்குறிப்பும் ஆகிய சொற்கள் இறுதி நின்ற பெயரோடும் முடிபுழிப் பெயரெச்ச மாகியும், தனி வரின் முற் றாகியும் வரும் என்று கொள்க. இச் சூத்திரத்தானே வேற்றுமைக்கு முடிபு கூறினாரும் ஆம்.

வேற்றுமை ஓத்து முடிந்தது.

இவ் வோத்தினுள் சூத்திரம் உட்பட உரையினது அளவு கிரந்த வகையால் முந்நூற்று முப்பது.

( வேற்றுமை ......... வென்ப. )

சேனு:

இ-ள்: வேற்றுமைத் தொகையை விரிக்குமிடத்து, வேற்றுமையே யன்றி, அன்மொழித் தொகையை விரிப்புழிப் பல்லாற்றான் அன்மொழிப் பொருளொடு புணர்ந்து, வரும் எல்லாச் சொல்லும், விரிக்கப்படும்; எ-று.

உருபு தொகப் பொருள் நிற்றலின், வேற்றுமைத் தொகையை வேற்றுமைப் பொருளென்றார். தொகையை வேற்றுமைப் பொருளென்றும், பொருளென்றும் யாண்டு மாள்ப.

அன்மொழித்தொகை, பண்புத்தொகை முதலாகிய தொகை இறுதி நின்றியறலின், ஈற்று நின்றியலுந் தொகை, என்றார்.

தாழ்குழல், பொற்றொடி, மட்காரணம் என்னும் அன்மொழித் தொகைகளை விரிப்புழி, தாழ் குழலையுடையாள், பொற்றொடியை யணிந்தாள், மண்ணாகிய காரணத்தா னியன்றது, என வரும். உடைமையும், அணிதலும், இயற்றலும், கருங்குழற் பேதை, பொற்றொடி யரிவை, மட்குடம் என்னும் வேற்றுமைத் தொகைகளை விரிப்புழியும் கருங்குழலை யுடைய பேதை, பொற்றொடியை யணிந்த அரிவை, மண்ணா னியன்ற குடம், என வந்தவாறு கண்டு கொள்க.

பொருள் புணர்ந் திசைக்கு மெனவே, இரு தொகைக் கண்ணும், ஒரு வாய்பாட்டா னன்றிப் பொருள் சிதையாம லுணர்த்துதற் கேற்ற வாய்பா டெல்லாவற்றானும் வருமென்பதாம். அவ்வா றாதல் மேற் காட்டப்பட்டனவற்றுள் கண்டு கொள்க.

அன்மொழித்தொகையிற் சொற் பெய்து விரித்தல் யாண்டுப் பெற்றா மெனின், அதுவும் அநுவாத முகத்தான் ஈண்டே பெற்றா மென்க. பெறவே, இரண்டு தொகையும் விரிப்புழி வரும் வேறுபாடு கூறியவா றாம்.

இதனை 'வேற்றுமைத் தொகையே யுவமைத் தொகையே' (சொல் – 412) என்னுஞ் சூத்திரத்தின் பின் வைக்க வெனின், அதுவு முறை யாயினும், இனி வருஞ் சூத்திரங்களான் வேற்றுமைத் தொகை விரி பற்றிய மயக்க முணர்த்துதலான், ஆண்டுப்படு முறைமை யுணர்த்துதல் ஈண்டு மியைபுடைத் தென்க.

உரையாசிரியர் இரண்டு சூத்திரமாக அறுத்து ஆசிரியர் மத விகற்பங் கூறித் தம் மத மிது வென்பது போதர ஒன்றாக வுரைப்பாரு முள ரென்றார். இரண்டாய் ஒன்றாயவழிப் பிறிதுரை யின்மையின், உரையாசிரியர் கருத்து இதுவே யாம்.

நச்சி:

இது, வேற்றுமை தொக்குழி விரிக்குமாறும் அதற்கு இனமாகிய அன்மொழி தொக்குழி விரிக்குமாறும் கூறுகின்றது.

இ-ள்: வேற்றுமைப் பொருளை ஈற்று நின்று இயலும் தொகைவயின் பொருளை விரிக்கும் காலை-வேற்றுமைத் தொகைவயின் நின்ற பொருளை அன்மொழித் தொகைவயின் நின்ற பொருளை விரிக்கும் காலத்து, பொருள் புணர்ந்து – அவ் வேற்றுமைப் பொருளோடும் அன்மொழிப் பொருளோடும் புணர்ந்து, பல் ஆறாகப் பிரிந்து இசைக்கும் எல்லாச் சொல்லும் உரிய என்ப - பல நெறியாகப் பிரிந்து ஒலிக்கும் எல்லாச் சொல்லும் விரித்தற்கு உரிய என்று கூறுவர் ஆசிரியர், எ-று.

மேலும், 'ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே.' (எச்சவியல் சூ. 22) என்பர்.

'கருங்குழற் பேதை, பொற்றொடி அரிவை, மட்குடம்' என்னும் வேற்றுமைத் தொகைகள், 'கருங்குழலை உடைய பேதை, பொற்றொடியை அணிந்த அரிவை, மண்ணான் இயன்ற குடம்' என விரிந்தவாறு காண்க.

'தாழ்குழல், பொற்றொடி, மட்காரணம்' என்னும் அன்மொழித்தொகைகள், 'தாழ்குழலை உடையாள், பொற்றொடியை அணிந்தாள், மண்ணாகிய காரணத்தின் இயன்றது' என விரிந்தவாறு காண்க.

(வேற்றுமைப் ......... பிரிந்தே) (16)

கல்:

என் னுதலிற்றோ வெனின், ஐ முதலிய ஆறு உருபிற்கும் பொதுவாய இலக்கண முணர்த்துத னுதலிற்று.

இ-ள்: வேற்றுமைச் சொல்லினது பொருளை விரித்துணர்த்துங் காலத்து அவ் வேற்றுமைப் பொருள்கள் பெயரது ஈற்றின்கண்ணே நின்று நடக்கும், தொக்கவிடத்து நின்று, என்றவாறு.

உ-ம்: மரங் குறைத்தான், என்பது. மரத்தைக் குறைத்தான், என இறுதிக்கண் விரிந்து நின்றது. தாய் மூவர், என்பது தாயோடு மூவ ரென விரிந்தது. பிறவும் அன்ன.

இது, "கூறிய முறையின்" என்றதனுன் அடங்காதோ வெனின், அஃது உருபு நிற்கு மிடங் கூறியது. அங்ஙனம் நின்ற உருபு விகாரப்பட்டுத் தொக்கு நின்று பின் விரியும் வழியும், பிருண்டு விரியாது, முன் கூறிய வீற்றின்கண்ணே விரியு மென முற் கூறிய வதனையே திரிபுபடுவழிக் கூறிய தெனக் கொள்க.

(பல்லா ருகப் ......... வென்ப.) (17)

என் னுதலிற்றோ வெனின் உருபு நோக்கி வரும் சொற்கள தோர் இலக்கண முணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: பல நெறியாக அவ்வவ் வேற்றுமையின் பொருளொடு பொருந்தி யொலிக்கும் எவ் வகைப்பட்ட சொல்லும் வேற்றுமை போலப் பிரியாது இறுதிக்கண் விரிந்து நிற்றற் குரிய வென்றவாறு. விரித்தற் குரிய வென்பது முன் னின்ற அதிகாரத்தாற் கொள்க. இனித் தொகுத்தலும் உரிய வென்பது [1] ஒன்றின முடித்தல் என்பதனுற் கொள்க.

உ-ம்: படைக் கை, என்பது படையினைப் பிடித்த கை என விரிந்தது. குதிரைத் தே ரென்பது குதிரையாற் பூட்டப் பட்ட தேர், என, விரிந்தது. பிறவும் அன்ன. ஆருவதற்குப் பொருள் விரிதல் இல்லை.

உருபுகள் தொகுத்தலும் விரிதலுங் கூறியவழியே அவ் வுருபு நோக்கி வருஞ் சொற்கள் தொகுத்தலும், விரித்தலும் அடங்குமா லெனின், அவ் வுருபு தொக்குழித் தொக்கும் விரிந்துழி விரிந்தும் நிற்றல் ஒருதலை யன்மையின், அதற்கும் வேறு கூறவேண்டு மென்பது.

மரங் குறைத்தான், குழை யுடையன் என விவை உருபு தொக்குழித் தொகா வாயிற் றெனக் கொள்க.

இரண்டாவது வேற்றுமை இயல் முற்றும்.

---

1. ஒன் [றெ] (றி) ன.

(வேற்றுமைப் ......... வென்ப.)

அரசு:

என்பது வேற்றுமைத் தொகையை விரிக்குமாறும் அதற் கினமாகிய அன்மொழித்தொகையை விரிக்குமாறுங் கூறுகின் றார்.

வேற்றுமைத் தொகைவயி னின்ற பொருளை, அன்மொழித் தொகையி னின்ற பொருளை விரிக்குங் காலத் தவ் வேற்றுமைப் பொருளோடும் அன்மொழிப் பொருளோடும் புணராது பல நெறியாகப் பிரிந் தொலிக்கு மெல்லாச் சொல்லும் விரித்தற் குரிய வென்று கூறுவா ராசிரியர்.

அன்மொழித்தொகை யேனைத் தொகைகளி னிறுதியி னின் றியறலின் ஈற்று நின்றியலு மென்றார்.

உதா: கருங்குழற் பேதை, பொற்றொடி யரிவை, மட் குடம் என்னும் வேற்றுமைத் தொகைகள் கருங்குழலை யுடைய பேதை, பொற்றொடியை யணிந்த வரிவை, மண்ணா னியன்ற குடம் என விரிந்தவாறும், தாழ்குழல், பொற்றொடி, மட்காரணம் என்னு மன்மொழித்தொகைகள் தாழ்குழலை யுடையாள், பொற் றொடியை யணிந்தாள், மண்ணாகிய காரணத்தா னியன்ற தென விரிந்தவாறுங் காண்க.

ஈற்று நின் றியலுந் தொகைவயின் வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை யீற்றி னின் றியலுந் தொகைவயிற் பொருளை விரிக்குங் காலை யெனவுங் கூட்டுக.

* சேனாவரையர் கருத்தும் உரையாசிரியர் கருத்தும் இரு திறத்தன வாக மேலே கூறுமாறு காண்க:-

(வேற்றுமைப் பொருளை......யுரிய வென்ப.)

என்பது மேல் வேற்றுமை விரிந்து நிற்குமாறு கூறினார். இதனாற் றொக்குழிப் படுமாறு கூறுகின்றார். வேற்றுமை தொக் குழி யவ் வேற்றுமையை விரிக்குமிடத் தவ் வேற்றுமையே யன்றி யாண்டுப் பிற சொற்களும் முள, அவ் வேற்றுமை போல வந் தொட்டி நிற்பன. அவையே யெல்லாம் வேற்றுமை போல ஆண்டே தொகுத்தலும் பின் விரித்தலு முரிய வென்ப.

---

* N. B. (இவ் வுரையாசிரியர் சேனாவரையருக்கும் இளம்பூரணருக்கும் பிற்பட்டவர் என்பது இதனால் அறியலாம்.)

உதா: குதிரைத்தேர், என்புழி குதிரையாற் பூட்டப்பட்ட தேர், என விரியும். ஆனென்ப துருபு; பூட்டப்பட்ட வென்பன பிற சொற்கள்; அவையுந் தொக்கும் விரிந்து நின்றன. கருப்பு வேலி யென்பது மது.

• பல்லாறுகப் பொருள்புணர்ந் திசைக்கு மென்பது அங்ஙனம் வேற்றுமைப் பொருட் கேற்ப வந் தொட்டுவன பலவு மொட்டுதற் குரிய.

இன்னு மோர் கருத்து: வேற்றுமை தொக்கது விரிக்கு மிடத் தொரு வகைப் பொரு ளன்றிப் பலவகைப் பொருளு மச் சொற் பற்றி ஒட்டப்படு மெல்லாச் சொற்கு முரிய வாகும்.

உதா: நீர் நீந் துடும்பு, என்புழி, நீரை நீந் துடும்பு, நீர்க்கு நீந் துடும்பு, நீரி னீந் துடும்பு, நீரு ணீந் துடும்பு, எனப் பல வகைப் பொருளும் பட நிற்கும் ஒரு தொகை யென்பதும், குரங் கெறி விளங்காய், இலை மறை காய் என்பனவும் பல பொருள் பட விரித்துக் காண்க. பிறவு மன்ன.

வேற்றுமை யியல் முற்றும்.

---



## III. வேற்றுமை மயங்கியல்

80. கரும மல்லாச் சார்பென் கிளவிக்
குரிமையு முடைத்தே கண்ணென் வேற்றுமை. (1)

இளம்:

என்பது சூத்திரம்.

இவ் வோத்து என்ன பெயர்த்தோ வெனின், வேற்றுமை தம்மின் மயங்கினமை உணர்த்தினமையின், வேற்றுமை மயங்கியல் என்னும் பெயர்த்து.

இத் தலைச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இரண்டாவதனொடு ஏழாவது மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: இரண்டாவது கருமச் சார்பும் கரும மல்லாச் சார்பும் என இரு பொருள் உடைத்து: தூணைச் சார்ந்தான் என்பது கருமச் சார்பாவது அதனை யுறச் சாரு மாதலால். இனி, அரசரைச் சார்ந்தான் என்பது கரும மில் சார்பு. அக் கரும மில் சார்ச்சிப் பொருண்மைக்கண் ஏழாவது வருதல் உரிமை யுடைத்து, என்பது.

வரலாறு: அரசரைச் சார்ந்தான் என்புழி அரசர்கட் சார்ந்தான் என்பதும் ஆக, என்பது.

தெய்வ:

இவ் வோத்து என்ன பெயர்த்தோ எனின், வேற்றுமை மயங்கியல் என்னும் பெயர்த்து: ஒன்றற்கு உரிய உருபு ஒன்றனோடு மயங்குதலும், ஒன்றற்கு உரிய பொருள் ஒன்றனோடு மயங்குதலும் கூறினமையாற் பெற்ற பெயர்.

இதனுள் இச் சூத்திரம் என் நுதலிற்றோ எனின், இரண்டாவது ஏழாவதனொடு மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

கருமம் என்பது வடமொழிச் சிதைவு. செயப்படு பொருளை அவர் கருமம் என்று வழங்குப.

இ-ள்: செயப்படு பொருள் அல்லாத சார்பு என்னுஞ் சொற்கு ஏழாம் வேற்றுமை உரிமை யாதலும் உரித்து , எ-று.

உம்மை எதிர்மறை யாதலால் இரண்டாம் வேற்றுமை உரித் தாதல் பெரும்பான்மை.

உ-ம்: மனையைச் சார்ந்தான்; மனைக்கட் சார்ந்தான், என வரும். தூணைச் சார்ந்தான், என்றாற் போலச் சாரப்பட்ட பொருள் தோன்றாது இடம் தோன்றுவதற்கும், பொருள் தோன்றுவதற்கும் உரித்தாவ தாயிற்று. ஒரு பொருள் இரண்டு உருபிற்கும் உரித் தாகி வருதலின் உருபு மயக்கம் ஆயிற்று.

சேறு:

வேற்றுமையு யுருபுகள் தம்முள் மயங்கிப் பொருள் வேறுபாடு கொள்ளும் இயல் புணர்த்துவது. வேற்றுமை யுருபுகள் மயங்குதல்.

மேற் கூறிய வேற்றுமை தம்முண் மயங்குமா றுணர்த்திய எடுத்துக் கொண்டார். அம் மயக்கம் இரு வகைப்படும்: பொருள் மயக்கமும் உருபு மயக்கமு மென. பொருள் மயக்கமாவது தன் பொருளில் தீராது பிறி தொன் றன் பொருட்கண் சேறல்.

'யாத னுருபிற் கூறிற் றாயினும்' (சொல் – 106) என்பதனான் உருபு மயக்க முணர்த்தினர்; அல்லனவற்றான் எல்லாம் பொருண் மயக்க முணர்த்தினர். இவ் விரு வகை மயக்க முணர்த்துதலான், இவ் வோத்து வேற்றுமை மயங் கியல் என்னும் பெயர்த் தாயிற்று.

மயக்கமே யன்றி வேற்றுமைக் கோதிய இலக்கணத்திற் பிறழ்ந்து வழீஇ யமைவனவும் பிறவும் இயை புடையன ஈண் டுணர்த்துதலான், இக் குறி பன்மை நோக்கிச் சென்ற குறி யென வுணர்க.

இ-ள்: இரண்டாவதற் கோதப்பட்ட சார்புப் பொருண்மை கருமச் சார்புங் கரும மல்லாச் சார்பு மென இரண்டு வகைப்படும். அவற்றுள் கருமச் சார்பு, தூணைச் சார்ந்தான், என ஒன்றனை யொன்று மெய் யுறுதலாம். கரும மல்லாச் சார்பு மெய் யுறுத லின்றி, அரசரைச் சார்ந்தான், என வருவதாம். கரும மல்லாத சார்புப் பொருண்மைக்கு உரித்தாய் வருதலு முடைத்து ஏழாவது, எ-று.

எ-டு: அரசர்கட் சார்ந்தான், என வரும். கருமமாவது ஈண்டு மெய்யுறுத லாயின், அரசர்கட் சார்ந்தான் என்புழி

உறுத லின்மையிற் சார் பாமா றென்னை யெனின், தூண் பற்றுக ஒரு சாத்தன் சார்ந்தாற் போல அரசர் பற்றுக அச் சார்ந்தான் ஒழுகுதலின் சார் பாயிற் றென்பது.

உம்மை எதிர்மறை.

தூணின்கட் சார்ந்தான், எனக் கருமச் சார்ச்சிக்கண் ஏழாவது சென்றுற் படு மிழுக் கென்னை யெனின், அன்ன தோர் வழக் கின்மையே. பிறி தில்லை யென்க. இக் காலத்து அவ்வாறு வழங்குபவா லெனின், கரும மல்லாச் சார்ச்சிக்கண் வரு முருபைச் சார்த லொப்புமையாற் கருமச் சார்ச்சிக்கண்ணும் கொடுத்து உலகத்தார் இடைத்தெரி வின்றி வழங்குகின்று ரெனவே படும்; ஆசிரியர், கரும மல்லாச் சார்பென் கிளவி யென விதந்து கூறினமையா னென்பது.

நச்சி:

இது. தன் பொருளின் தீராது பிறிது ஒன்றன் பொருட்கண் செல்லும் பொருள் மயக்கமும், தன் பொருளின் தீர்ந்து செல்லும் உருபு மயக்கமும் என்னும் இரு வகை மயக்கமும் உணர்த்தலின், வேற்றுமை மயங்கியல் என்னும் பெயர்த்து ஆயிற்று.

இச் சூத்திரம், இரண்டாவதன் பொருளும், அதிகாரத்தான் நின்ற ஏழாவதன் பொருளும் மயங்கும் மயக்கம் கூறுகின்றது.

இ-ள்: கருமம் அல்லாச் சார்பு என் கிளவிக்கு – கருமச் சார்ச்சி அல்லாத 'அரசரைச் சார்ந்தான்' என வரும் சார்பு என்னும் பொருண்மைக்கு, கண் என் வேற்றுமை உரிமையும் உடைத்து– ஏழாம் வேற்றுமை உரித்தாய் வருதலும் உடைத்து. எ–று.

உ-ம்: 'தூணினைச் சார்ந்தான்' என்றாற் போல, மெய் யுறல் இன்றி 'அரசர்கண் சார்ந்தான்' என வரும்.

இதனுள் அரசரது சார்தற்கு இடமாகிய அருள், தன் பொருளதனின் நீங்காதே பிறிதின் பொருளாகிய செயப்படு பொருட்கண் சென்றது ஏழாவது. 'தூணின்கண் சார்ந்தான்' என்பது வழக்கம் இன்று, ஆசிரியர் மறுத்தலின்.

கல்:

இனி இவ் வேர்த்து என்ன பெயர்த்தோ வெனின், உருபும் பொருளும் உடன் மயங்குதலும், ஒருவழி உருபே மயங்குதலும்,

ஒன்றற் குரியதனோடு ஒன்று மயங்குதலும், இரண்டு மொத்து மயங்குதலும், ஒரு பொருண்மை ஒன்றற்கே உரிய தாகாது பலவற்றோடு மயங்குதலும், ஓர் உருபு பல வுருபோடு மயங்குதலும், [1]ஒன்றனது ஒரு பொருளோடு ஒன்று மயங்கு தலும், ஒன்றனது பல பொருளோடு ஒன்று மயங்குதலும், ஒன்றற் குரிமை பூண்டெடுத்தோதின பொருள்வழி மயங்கு தலும், ஓதாத பொருள்வழி மயங்குதலும், ஒன்றதன் மரபாய் மயங்குதலும், இலக்கண வழக்குள்வழி மயங்குதலும், இலக்கண மில்வழி மயங்குதலும், மயக்க வகையான் மயங்குதலும், சொல்லுதல் வகையான் மயங்குதலும், ஒன்றனோடு பொருண் முடிந்து தொடர்ந் தடுக்கி மயங்குதலும், ஒன்றனோடு பொருண் முடியாது தொடர்ந் தடுக்கி மயங்குதலும், தொகையுள் மயங்குதலும், தொகையில் மயங்குதலும், உருபு வேற்றுமையாய் மயங்குதலும், உருபும் உருபும் மயங்குதலும் என் றின்னோரன்ன பல மயக்கங்கள் கூறலின் வேற்றுமை மயக்கங் கூறலின் வேற்றுமை மயங்கியலென்னும் பெயர்த் தாயிற்று.

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே இரண்டாவது, அதிகாரத்தானே நின்ற ஏழாவத னோடும் மயங்குமா றுணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: கருமச் சார்ச்சி அல்லாத சார்தல் என்னும் பொருண்மைக் குரித் தாதலை யுடைத்துக் கண் ணென்னும் வாய்பாட்ட தாகிய ஏழாம் வேற்றுமை யென்றவாறு.

உ-ம்: அரசரைச் சார்ந்தார், அரசர்கட் சார்ந்தான், என வரும்.

கருமச் சார்ச்சிக்கண் அரச ரிடமாகச் சாரப்பட்டது [2]பிறிதாவன்சொலிற் கரும மல்லாச் சார் பென்று ஓதப்பட்டது.

அரசு :

என்பது இரண்டாவது கருமச் சார்புங் கரும மல்லாச் சார்பு மென விரண்டு வகைத்து. அவ் விரண்டனுள் கருமச் சார்ச்சி யல்லாது வருஞ் சார் பென்னும் பொருண்மைக் கேழாம் வேற்றுமை யுரித் தாதலு முரித்து.

உதா: தூணைச் சார்ந்தா னென்பது கருமச் சார்பு: அதனை மெய் யுறச் சார்தலாற் கரும மாயிற்று. அரசரைச் சார்ந்தா

1. ஒன்றெனா : திருத்தம் 2. தெளிவில்லை.

னென்பது கரும மல்லாச் சார்பு: ஆண்டு மெய் யுறுதற் றொழி லன்மையாற் கரும மில்லை யாயிற்று.

இனிக் கருமச் சார்ச்சி யல்லாத விடத் திரண்டாவது மேழாவதும் மயங்கும்.

உதா: அரசரைச் சார்ந்தான் – அரசர் கட் சார்ந்தான் என வரும். உம்மையா லிது சிறுபான்மை.

81. சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும்
வினைநிலை யொக்கு மென்மனார் புலவர். (2)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் இரண்டாவதனோடு ஏழாவதன் மயக்கமே கூறுதல் நுதலிற்று.

உரை : சினைப் பொருட்கு இரண்டாம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் ஒத்த கிழமை யாம், என்றவாறு.

வரலாறு: கண்ணைக் குத்தினார், கண்ணுட் குத்தினார், என வரும்.

தெய்வ :

இதுவும் அது.

இ-ள் : சினைப் பொருண்மைக்கண் நிற்கும் பெயர்க்கும் இரண்டாவதும் ஏழாவதும் வினைநிலைக்கண் ஒத்த இயல்பின, எ-று.

உ-ம்: கண்ணைக் குத்தினான்; கண்ணுட் குத்தினான், என வரும். கண் என்பது குத்தப்படு பொருளு மாகிக் குத்துதற்கு இடமும் ஆகி வருதலின், இரண்டும் ஒத்த இயல்பின ஆயின. இடம் ஆயினவாறு என்னை யெனின், கண்ணின்கண்ணும் குத்தப்படுவது ஓர் இடம் ஆகலின், என்க. வினை நிலை ஒக்கும் என்றார் ஆயினும் ஒக்கும் வினையே கொள்ளப்படும்,

சேன :

இ-ள் : சினைமேல் நிற்குஞ் சொல்லிற்கு இரண்டாவதும் ஏழாவதும் வினைநிலைக்கண் ஒக்கு மென்று சொல்லுவர் புலவர், எ-று.

எ-டு : கோட்டைக் குறைத்தான்; கோட்டின்கட் குறைத் தான், என வரும்.

வினைக்குறிப்பை நீக்குதற்கு வினை யென்றார்.

வினை நிலை யொக்கு மென்றாரேனும், புகழ்தல் பழித்தல் என்னுந் தொடக்கத்தன வொழித்து மயங்குதற் கேற்கும் அறுத்தல், குறைத்தல் முதலாயின வினையே கொள்ளப்படும்.

இரண்டாவதன் பொருட்கண் ஏழாவது சென்ற தாயினும், சிறுவரவிற் றன்றி இரண்டாவது போல ஏழாவது வழக்கின்கட் பயின்று வருதலின் ஒக்கு மென்றார்; அது காரணத்தால், கரும மல்லாச் சார்ச்சிக்கும் சினைக் கிளவிக்கும் ஏழாவது உரிமை யுடைத் தென உடன் கூறாது, வேறு கூறினா ரென்பது.

நச்சி :

இதுவும் அவ் விரண்டன் மயக்கம் கூறுகின்றது.

இ-ள் : சினை நிலைக் கிளவிக்கு — சினைப் பொருள்மேல் நிற்கும் சொல்லிற்கு, ஐயும் கண்ணும் வினை நிலை ஒக்கும் என்மனார் புலவர் — இரண்டாவதும் ஏழாவதும் வினை கூறும் நிலைமைக்கண் ஒக்கும் என்று கூறுவர் புலவர், எ-று.

உ-ம் : கோட்டைக் குறைத்தான்; கோட்டின் கண் குறைத்தான், என வரும்.

அறுத்தல், குறைத்தல் முதலிய இரண்டாவதன்கண் ஏழாவது வந்ததேனும், வழக்குப் பயிற்சி நோக்கி, 'வினைநிலை ஒக்கும்', என்றார்.

கல் :

என்பதென் னுதலிற்றோ வெனின், இதுவும் அவ் விரண்டன் மயக்கமே உணர்த்தல் நுதலிற்று.

இ-ள் : சினையாகிய நிலைமையை யுடைய பொருண்மைக்கு இரண்டாவதும் ஏழாவதும் அதன் வினைகூறு நிலைமைக்கண் ஒத்த பொருள் என்று சொல்லுவர் புலவர், என்றவாறு.

உ-ம் :- கண்ணைக் குத்தினான்; கண்ணின்கட் குத்தினான், என வரும்.

சினைக்கண் இவ் விரண்டும் வரும் என்ற தென்னை? பிறவும் வருமா லெனின், முன் னிடப் பொருட்கண் வரும் என்ற ஏழாவது மற்றொரு வேற்றுமையோடு தொடர்ந்துக் கூறும்வழிச் செயப்படுபொருட்கண் வருதலும் கண்டது கூறியவா றெனக் கொள்க.

தொடர்த்துக் கூறும்வழி யாமாறு உணரச் சொல்லுகின்றார். 'வினைநிலை' என்றது இரண்டாவதற்கோதிய வினை, வினைக்குறிப் பென உணர்க.

அரசு :

என்பது சினைப் பொருண்மே னிற்குஞ் சொல்லிற்கு இரண்டாவது மேழாவதும் வினை கூறு நிலைமைக்க ணொக்கும் என்பர்.

உதா :- கோட்டைக் குறைத்தான்; கோட்டின்கட் குறைத்தான், என்பது.

82. கன்றலுஞ் செலவு மொன்றுமார் வினையே. (3)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் அவை இரண்டன் மயக்கமே யுணர்த்துதல் நுதலிற்று.

உரை : கன்றல், செலவு என்னும் பொருட்கு இரண்டாவ தும் ஏழாவதும் தொழிலான் ஒக்கும், என்றவாறு.

வரலாறு : சூதினைக் கன்றினான்; சூதின்கட் கன்றினான்; நெறியைச் சென்றான்; நெறிக்கட் சென்றான், என வரும்.

தெய்வ :

இதுவும் அது.

இ-ள் : கன்றலும், செலவும் ஆகிய வினைப் பொருண்மை மேற் சொல்லப்பட்ட இரண்டாவதனோடும், ஏழாவதனோடும் ஒன்றித் தோன்றும், எ-று.

இரண்டும், ஏழும் என்பது மேலைச் சூத்திரத்தினின்றும் தந் துரைக்கப்பட்டது.

உ-ம்: சூதினைக் கன்றினான்; சூதின்கண் கன்றினான்; நெறியைச் சென்றான்; நெறிக்கண் சென்றான்: அவை பொருளு மாகி இடமு மாகி நிற்றலின் இரண்டற்கும் உரிய வாயின.

சேன :

இ-ள் : கன்றல் பொருண்மேல் வருஞ் சொல்லும் செலவுப் பொருண்மேல் வருஞ் சொல்லும் இரண்டாவதற்கும் ஏழாவ தற்கும் ஒரு தொழில், எ-று.

எ—டு :— சூதினைக் கன்றினன்; சூதின்கட் கன்றினன்; நெறியைச் சென்றான்; நெறிக்கட் சென்றான், என வரும்.

பொருள் பற்றி யோதினமையால், சூதினை யிவறினன்; சூதின்க ணிவறினன்; நெறியை நடந்தான்; நெறிக்க ணடந்தான், என வருவனவுங் கொள்க.

இரண்டாவதற்கு இப்பொருள் மேலே கூறப்பட்டமையால், கன்றல், செல வென்னும் பொருட்கு ஏழாவது முரித்தென்றோத அமையுமெனின், அங்ஙன மோதின் ஏழாவதன் வரவு சிறுபான்மையென்பது படும்; ஆகலின் உடனோதினா ரென்பது. வினை நிலைக் கிளவி நிலைமொழி வரையறை யாகலானும், இது வருமொழி வரையறை யாகலானும், வேறு கூறினா ரென்பது.

நச்சி :

இதுவும் அது.

இ—ள் : கன்றலும் செலவும் — கன்றற் பொருள்மேல் வரும் சொல்லும் செலவுப் பொருள்மேல் வரும் சொல்லும், ஒன்றுமார் வினையே — இரண்டாவதற்கும் ஏழாவதற்கும் ஒரு தொழில், எ—று.

உ—ம் : சூதினைக் கன்றினன்; சூதின்கண் கன்றினன்; நெறியைச் சென்றான்; நெறிக்கண் சென்றான், என வரும்.

பொருள் பற்றி ஓதினமையால், சூதினை இவறினன்; சூதின்கண் இவறினன்; நெறியை அடைந்தான்; நெறிக்கண் அடைந்தான், என வரும்.

இஃது இரண்டாவதன் பொருளை எடுத்து ஓதலின் வேறு கூறினார்; வழக்கின்கண் பயின்று வருதலின் ஏழாவதனையும் ஒப்பக் கூறினார். சினை, முதல் மயக்கம் கூறுகின்றதற்கு இடையே இச் சூத்திரம் வைத்தார், இரண்டாவதும் ஏழாவதும் அதிகாரத்தால் பெறுகின்ற இலேசு நோக்கி.

கல் :

என்ப தென் னுதலிற்றோ வெனின், இதுவும் அவ் விரண்டன் மயக்கமே யுணர்த்த னுதலிற்று.

இ-ள் : மேற் கூறிய இரண்டாவதற்கும் ஏழாவதற்கும் கன்ற லெனும் பொருண்மையும், செலவு என்னும் பொருண்மை யும் பொருந்தி வரும், அவ் வுருபுகளது வினை கூறு மிடத் தென்றவாறு.

உ-ம் : சூதினைக் கன்றினான்; சூதின்கட் கன்றினான்; நெறியைச் சென்றான்; நெறிக்கட் சென்றான், என வரும்.

அரசு :

என்பது கன்றற்குஞ் செலவிற்கும் வருந் தொழில் ஏழாவ தற்கு மொக்கும்.

உதா :- சூதினைக் கன்றினான்; சூதின்கட் கன்றினான்; நெறியைச் சென்றான்; நெறிக்கட் சென்றான், என வரும்.

83. முதற்சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை
முதற்கண் வரினே சினைக்கை வருமே. (4)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், 'சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும்' [சூத்தி. 2] என்னும் சூத்திரத்திற் குப் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை : முதலும் சினையும் தொடருங்கால் முதற் பொருட் கண் ஆறாவது வருமேயெனின், சினைப் பொருட்கு இரண்டாவது வருக, என்றவாறு.

வரலாறு : 'யானையது கோட்டைக் குறைத்தான்', என வரும்.

(தெய்வ : பக். 417 பார்க்க.)

சேனு :

இ-ள் : முதற் சொல்லோடு தொடர்ந்த சினைச் சொல்லிற்கு ஆறும் வேற்றுமை முதற்கண் வருமாயின், சினைச் சொல்லின்கண் இரண்டாம் வேற்றுமையே வரும், எ-று.

எ-டு : யானையது கோட்டைக் குறைத்தான், என வரும்.

'சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும்' (சொல் — 85) என்றதனான் முதற் சினைக் கிளவிக்கும் இரண்டு வேற்றுமையு மெய்துவதனை நியமித்தவாறு.

இது வருஞ் சூத்திரத்திற்கு மொக்கும்.

நச்சி :

இஃது, உருபு மயக்கமாய் வருவனவற்றைக் கூறுமாறு கூறுகின்றது.

இ-ள் : முதல் சினைக் கிளவிக்கு — முதற் சொல்லோடு தொடர்ந்த சினைச் சொல்லிற்கு, அது என் வேற்றுமை முதற்கண் வரின் – ஆறும் வேற்றுமை முதற்கண்ணே வருமாயின், சினைக்கு ஐ வருமே – சினைச் சொல்லின்கண் இரண்டாம் வேற்றுமை வரும், எ–று.

உ–ம் : யானையது கோட்டைக் குறைத்தான், என வரும்.

இஃது ஒரு தொடர்க்கண் இரண்டு உருபு வருதலின் மயக்கம் ஆயிற்று.

கல் :

என் னுதலிற்றோ வெனின் வேற்றுமைக்கண்ண தோர் சொல்லுதல் வகைமை யுணர்த்த னுதலிற்று. மேற்கூறிய சினை நிலைக் கிளவி யென்பதற்குப் புறனடை எனினு மமையும்.

இ-ள் : முதற் பொருட்கும், முதலோடு தொடர்ந்து சினைப் பொருட்கும் உருபுகள் வருமாறு கூறினார்.

அது வென் வேற்றுமை முதற்கண் வரின் அதன் சினைக்கு இரண்டாம் வேற்றுமை வரும் என்றவாறு.

உ–ம் : யானையது கோட்டைக் குறைத்தான்; சாத்தனது கண்ணைக் குத்தினான், என வரும்.

அரசு :

என்பது முதற் சொல்லோடு தொடர்ந்த சினைச் சொல்லிற்கு ஆறுவது முதற்கண் வரின் இரண்டாவது சினைக்கண் வரும்.

உதா : யானையது கோட்டைக் குறைத்தான், என வரும். முதல் யானை; சினை கோடு.

84. முதன்முன் னைவரிற் கண்ணென் வேற்றுமை
சினைமுன் வருத றெள்ளி தென்ப (5)

இளம்:

இச்சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் அதற்கே புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை: முதற் பொருட்கு, இரண்டாவது வருமே யெனின், சினைப் பொருட்கண் ஏழாவது வருதல் தெளிவுடைத்து, என்றவாறு.

வரலாறு: 'யானையைக் கோட்டுக்கட் குறைத்தான்' என வரும்.

'தெள்ளிது' என்றதனுல், 'யானையைக் கோட்டைக் குறைத்தான்', எனலு மாம்.

**தெய்வ:**

(4, 5 – இரு சூத்திரங்களையும் ஒன்ருகக் கொண்டார்)

இதுவும் இரண்டாவதும் ஏழாவதும் ஒரு பொருட்கண் நிகழ்வ தோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதலும் சினையும் சேர வருஞ் சொற்கு, முதற்கண் அது வரின் சினைக்கு ஐ வரும்; முதற்கண் ஐ வரின் சினைக்கண் கண் வருதல் தெளியப்பட்டது என்று சொல்லுவர் புலவர், எ–று. மயக்கம் அன்று என்றவா ரும்.

உ-ம்: யானையது கோட்டைக் குறைத்தான். யானையைக் கோட்டின்கண் குறைத்தான், என வரும்.

'கண் என் வேற்றுமை சினைமுன் வருதல் தெள்ளிது' எனவே தெள்ளி தன்றிச் சிறுபான்மை ஐ வருதலும் கொள்ளப் படும்.

உ-ம்: யானையைக் கோட்டைக் குறைத்தான்.

**சேனு:**

இ-ள்: அம் முதற் சினைக் கிளவிக்கண், முதற் சொல்முன் ஐகார வேற்றுமை வரின், சினைச் சொல்முன் கண் ணென்னும் வேற்றுமை வருதல் தெள்ளிது, எ–று.

எ–டு: யானையைக் கோட்டின்கட் குறைத்தான், என வரும்.

தெள்ளிது என்றதனுன், யானையைக் கோட்டைக் குறைத் தான், எனச் சிறுபான்மை ஐகார வேற்றுமையும் வரு மென்பதாம்.

சினைக் கிளவிக்கண் மயக்க முணர்த்துகின்ற சூத்திரத்திடைக் 'கன்றலுஞ் செலவும்' என்னுஞ் சூத்திரம் வைத்த தென்னை யெனின் ஐயுங் கண்ணு மென்பது அதிகாரத்தான் வரச் சூத்திரஞ் சுருங்கு மாகலின், 'சினைநிலைக் கிளவிக்கு' என்னுஞ் சூத்திரத்தின்பின் அதனை வைத்தா ரென்பது.

நச்சி:

இது, பொருள் மயக்கம் உணர்த்துகின்றது.

இ-ள்: முதல்முன் ஐ வரின் – அம் முதற் சினைக்கிளவிக்கண் முதற்சொல்முன் இரண்டாம் வேற்றுமை வரின், சினைமுன் கண் என் வேற்றுமை வருதல் தெள்ளிது என்று கூறுவர் ஆசிரியர், எ-று.

உ-ம்: யானையைக் கோட்டின்கண் குறைத்தான்: இது பொருள் மயக்கம்.

'தெள்ளிது' என்றதனான், யானையைக் கோட்டைக் குறைத்தான், என ஐகாரம் வருதலும், முன்னர்க் கூறிய எல்லாம் பண்பும் தொழிலும் பொருள் தொடர்ச்சியும் பற்றி வருதலும் கொள்க.

மணியது நிறத்தைக் கெடுத்தான்; மணியை நிறத்தின்கண் கெடுத்தான்; மணியை நிறத்தைக் கெடுத்தான், என முற்கூறியதும் இவையும், ஒரு தொடரின் இரண்டு உருபும் மயங்கலின், உருபு மயக்கம்.

தலைமகனது செலவை அழுங்குவித்தல்; தலைமகனைச் செலவின்கண் அழுங்குவித்தல்; தலைமகனைச் செலவை அழுங்குவித்தல்; சாத்தனை நூலை ஓதுவித்தான்; யாற்றை நீரை விலக்கினான், என வரும்: இவை உருபு மயக்கம்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், இதற்கும் அக் கருத் தொக்கும் என்ப துணர்த்த னுதலிற்று.

இ-ள்: முதற்கண்ணே இரண்டாம் வேற்றுமை வரின் ஏழாம் வேற்றுமை சினைக்கண்ணே வருதல் விலக்கின் றென்று சொல்லுவர் புலவர், என்றவாறு.

உ-ம் வருமாறு: யானையைக் கோட்டின்கட் குறைத்தான்; சாத்தனைக் [1] கண்ணின்கட் குத்தினான், என.

தெள்ளி தென்றதனாற் சிறுபான்மை இரண்டாவது தானேயும் வரப் பெறும். அஃது யானையைக் கோட்டைக் குறைத்தான்; சாத்தனைக் கண்ணைக் குறைத்தான், எனக் இவற்றுண், கொள்க. முதற் சினைப் பொருட்குக் கண்ணுருபினைத் தொடர்த்துக் கூறும் வழி இரண்டாவதனோடொப்பச் செயப்படுபொருட்கண் ஏழாவது வந்தவாறு கண்டு கொள்க.

தெள்ளி தென்றதனான், முதற் சினைப் பொருட்கண்ணே யன்றிப் பிற பொருட்கண்ணும் இவ் வுருபுகளை இவ்வாறு கொடுத்துச் சொல்லுதல் கொள்ளப்படு மெனக் கொள்க.

மணியது நிறத்தைக் கெடுத்தான்; மணியை நிறத்தின்கட் கெடுத்தான்; மணியை நிறத்தைக் கெடுத்தான்: இது பண்பு.

தலைமகனது செலவை யழுங்குவித்தல்; தலைமகனைச் செலவின்கண் ணழுங்குவித்தல். தலைமகனைச் செலவை யழுங்குவித்தல்: இது தொழில். பிறவு மன்ன.

இவ்வாறு மூன்று மூன் றுருபு பாராது ஒரு பொருளது இரண்டாவதன் தொடர்ச்சி பற்றி இரண்டாவதுதானே வருவனவுங் கொள்க.

உதாசரணம்: சாத்தனை நூலை யோதுவித்தான்; யாற்றை நீரை விலக்கினான், என்பன போல்வன. பிறவு மன்ன.

அரசு :

என்பது அம் முதற் சினைக்கண் முதன்முன் இரண்டாவது வரின் சினைக்கு ஏழாவது வருத றெள்ளி தென்ப.

உதா : யானையைக் கோட்டின்கட் குறைத்தான், என வரும். தெள்ளி தென்றதனால் யானையைக் கோட்டைக் குறைத்தான், என் இரண்டாவது தானேயும் வரு மென்பது.

85. முதலுஞ் சினையும் பொருள்வேறு படாஅ
நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே. (6)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஐய மறுத்தல் நுதலிற்று.

1. கண்[ணு] (ணின்க)ட்

உரை: இதுதான் சொல்லுவான் குறிப்பொடு படுத்த விடத்துச் சினை தான் முதலு மாம், என்றவாறு.

வரலாறு: கோட்டது நுனியைக் குறைத்தான்; கோட்டை நுனிக்கட் குறைத்தான்; கோட்டை நுனியைக் குறைத்தான். எனச் சொல்லுவான் குறிப்பொடு படுத்த விடத்துச் சினை தான் முதலு மாயிற்று.

முதல் சினையாவது வந்தவழிக் கண்டு கொள்க.

தெய்வ:

முதல் சினைக் கிளவி யாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதல் சினை என்பன பொருளால் நியமம் இல. அவற்றைச் சொல்லு மிடத்துச் சொற் குறிப்பினுல் அறியப் படும், எ-று.

என்றது, ஒருகாற் சினை யாகி வந்தது தானே ஒருகால் முதலும் ஆகி வரும், என்றவாறு.

உ-ம்: கோட்டது நுனியைக் குறைத்தான்; கோட்டை நுனியைக் குறைத்தான், என வரும்.

சேனு:

இ-ள்: முதலுஞ் சினையும் முதலாயது முதலேயாய்ச் சினை யாயது சினையேயாய்த் தம்முள் வேறு பொரு ளாகா; சொல்லுங் கால், சொல்லுவானது சொல்லுதற் குறிப்பினுன் முத லென்றுஞ் சினை யென்றும் வழங்கப்படும், எ-று.

சொற் குறிப்பின வென்றது முத லெனப்பட்டது தானே தன்னைப் பிறி தொன்றற்கு ஏகதேசமாகக் குறித்தவழிச் சினையு மாம். சினை யெனப்பட்டது தானே தன்கண் ஏகதேசத்தை நோக்கி முத லெனக் குறித்தவழி முதலு மாம், எ-று.

கோட்டது நுனியைக் குறைத்தான்; கோட்டை நுனிக்கட் குறைத்தான்; கோட்டை நுனியைக் குறைத்தான், என முதற் கோதப்பட்ட உருபு சினைக்கண்ணும் வந்ததா லென்று ஐயுற்ருர்க் குக் கருத்துவகையாற் கோ டென்பது ஆண்டு முதலாய் நிற்றலின், முதலிற் கோதிய உருபே முதற்கண் வந்த தென, ஐய மகற்றியவாறு.

நச்சி :

இது, முதல் சினைகளை ஆராய்கின்றது.

இ-ள் : முதலும் சினையும் பொருள் வேறுபடாஅ-முதலும் சினையும் முதலாயது முதலேயாய்ச் சினையாயது சினையேயாய்ப் பொருள்கள் தம்முள் வேறுபட நில்லா; நுவலுங் காலைச் சொற் குறிப்பின — சொல்லுங்கால் சொல்லுவானது சொல்லுதற் குறிப் பினுல் முதல் என்றும் சினை யென்றும் வழங்கப்படும், எ-று.

உ-ம் : கோட்டது நுனியைக் குறைத்தான்; கோட்டை நுனிக்கண் குறைத்தான்; கோட்டை நுனியைக் குறைத்தான்; என ஒரு முதலின் சினையை முதலாகக் குறித்தவழி அது தான் முதலாய் நின்றவாறு காண்க. 'படை' என்பதனை முதலாகப் பார்க்கும்வழிப் 'படையினது யானை' என முதல் சினையாய் நிற்கும்.

கல் :

என் னுதலிற்றோ வெனின், முதல் சினை யென்னும் பொருண்மை அதிகாரப்பட்டமை கண்ட பொருளை ஆராய்த னுதலிற்று.

இ-ள் : முத லென்னுஞ் சினை யென்னுஞ் சொல்லப் படுகின்ற பொருள்கள். இது முதல் இது சினை யெனத் தம்மின் வேறுபட நில்லாது ஒருவன் சொல்லுங் காலத்து அவன் சொல்லுங் கருத்தின்கண் இது முதல் இது சினை யென வேறுபா டுணர நிற்கு மென்றவாறு.

உ-ம் : கோட்டது நுனியைக் குறைத்தான்; கோட்டை நுனிக்கட் குறைத்தான்: இது சினை முதலாய் வந்தவாறு.

படை யென்பதனை முதலாகப் பார்க்கும்வழி படையின் யானை யென முதல் சினையாயே நிற்கும், என்பது.

அரசு :

என்பது, முதலாயது 'முதலேயாய்ச் சினையாயது சினையே யாய்ப் பொருட்கள் தம்முள் வேறுபட நில்லா; சொல்லுங்காற் சொல்லுவானது குறிப்பினனே முத லென்றுஞ் சினை யென்றும் வழங்கப்படும்.

உதா :- கோட்டது நுனியைக் குறைத்தான்; கோட்டது நுனிக்கட் குறைத்தான்; கோட்டை நுனியைக் குறைத்தான், என வரும். ஒரு முதலினது சினையை முதலாகக் குறித்தவழி யது தான் முதலாய் நிற்கு மென்பது கருத்து.

86. பிண்டப் பெயரு மாயிய றிரியா
பண்டியன் மருங்கின் மரீஇய மரபே. (7)

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் ஐய மறுத்தல் நுதலிற்று.

உரை : பிண்டப் பெயரும் அதுவே; தெரியில் அப் பொருளின் வேறு பிண்டம் ஒன் றில்லை, விலக்கப்பட்டுக் கிடந்தது; வழங்கு மாற்றால் உண்டு போலு மாம் என்பது பிண்டப் பெயர், என்றவாறு.

உறுப்பின் கிழமை ஒழித்து ஒழிந்த தற்கிழமையி னுயிற்று.

வரலாறு : எட் குப்பை; நெற் குப்பை, என்றால், எள்ளின் வேறு குப்பை; நெல்லின் வேறு குப்பை, என்ப தொன் றில்லை. எட் சாந்து; கோட்டு நூறு, என்பனவும் அவை.

**தெய்வ :**

பிண்டப் பெயருக்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : பிண்டப் பெயராவது திரட்சியா னுகிய பெயர்; அதுவும் திரட்சியும் திரண்ட பொருளும் பொருளான் வேறுபடா; அவையிற்றைச் சொல்லுங் திறம் பண்டு வழங்கின பக்கத்து மரபின வாம், எ-று. எனவே, மேற் சொல்லியவாறு போலச் சொல்லுவான் குறித்த வழியோ டா மென்றவா ரும்.

உ-ம் :- படையது குழாத்தைக் கெடுத்தான்; நெல்லது குப்பையைச் சிதறினுன்; குப்பையைத் தலைக்கட் சிதறினுன்; குப்பையைத் தலையைச் சிதறினுன், என வரும். குழாத்தைத் தலைக்கட் கெடுத்தான், எனவும், படையைக் குழாத்தின்கட் கெடுத்தான், எனவும், நெல்லைக் குப்பையின்கட் சிதறினுன், எனவும் வரின், பொருள் ஒற்றுமைப்பட்டுத் தோன்றாமையின் மரீஇய மரபு அன் றுயிற்று. பிறவும் அன்ன.

சேனா:

இ-ள்: பிண்டத்தை யுணர்த்தும் பெயரும் முதற் சினைப் பெய ரியல்பிற் றிரியா; அவ்வாறு அவற்றை முதலுஞ் சினையு மாக வழங்குதல் மேற்றொட்டு வழங்கி வாராநின்ற கூற்றான் மருவிய முறை, எ-று.

பிண்டம் பல பொருட் டொகுதி.

ஈண்டு ஆயியல் திரியா வென மாட்டெறிந்தது, முதற் சினைக் கிளவிக்குப் போலப் பிண்டப் பெயர்க்கு முதற்கண் ஆறாவது வரின் சினைக்கு இரண்டாவது வருதலும், முதற்கு இரண்டாவது வரின் சினைக்கு ஏழாவது வருதலும், சிறுபான்மை இரண்டாவது வருதலு மாம்.

எ-டு: குப்பையது தலையைச் சிதறினான்; குப்பையைத் தலைக்கட் சிதறினான்; குப்பையைத் தலையைச் சிதறினான், என வரும்.

பிண்டமும் முதலுஞ் சினையுமே யாகலின் வேறு கூறல் வேண்டா எனின், குப்பை யென்புழி, தொக்க பல பொரு ளல்லது, அவற்றின் வேறாய் அவற்றா னியன்று தா னொன் றெனப் படும் பொரு ளின்மையின், தொல்லாசிரியர் அதனை முத லென்று வேண்டார்; அதனான் வேறு கூறினா ரென்பது. படை, காடு, கா முதலாயினவு மன்ன.

நச்சி:

இது, 'பிறன் உடம்பட்டது தான் உடம்படுதல்,
(மரபியல் சூ. 110)

இ-ள்: பிண்டப் பெயரும் ஆயியல் திரியா—பல பொருள் தொகுதியை (பகுதியை) உணர்த்தும் பெயரும் முதற் சினைப் பெயர் இயல்பின் திரியா, பண்டு இயல் மருங்கின் மரீஇய மரபே—அவ்வாறு அவற்றை முதலும் சினையு மாக வழங்குதல் மேல்தொட்டு வழங்கி வாராநின்ற கூற்றான் மருவிய முறை, எ-று.

உ-ம்: குப்பையது தலையைச் சிதறினான்; குப்பையைத் தலைக்கண் சிதறினான்; குப்பையைத் தலையைச் சிதறினான், என வரும்.

இது, முதல் சினை அதிகாரத்தின் இலக்கணம் அல்லா மருஉக் கூறினர். இது, வேறு பல் குழீஇய படை முதலிய வற்றிற்கும் ஒக்கும்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், மேலதன் முடிபு முடிதலு டையது பிறிதும் உண் டென்ப துணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: திரட்சி என்னும் பொருளினை யுணர நின்ற பெயர் களும், மேற்கூறிய சினை முதல்களது இயற்பிற் [1]றிரியா. அவை கோடற்குக் காரணம் என்னை யெனின், முற்காலத்து நடந்த கூற் றேதுவாகப் பிற்காலத்து நடந்து மருவின முறைமை யுடைமை யவை யாகலான், என்றவாறு.

ஆயிய [2]றிரியா என்றது மேற் சினையே முதலாய், முதல் சினையாய் வந்தவாறு போலப் *பிண்டமே பொருளாய் அப் பொருளே பிண்டமாய் வரு மென்றவா றன்றி, பொரு ணிலைமை சொல்லுவான் [3]குறிப்பின வாயின [4]வாறு போலப் பொருளின் வேறு பிண்டம் என்ப தொன் றுள தாகல், அச் சொல்லுவான் குறிப்பின்பால தென்றவாறு.

உ-ம்: அப் பிண்டந்தான் ஒன்று பல குழீஇயதும், வேறு பல குழீஇயது மாக இருவகைத்து. ஒன்று பல குழீஇயது: எட் குப்பை. எண்ணின் வேறு குப்பை என் றுண்மை வகையி னில்லை, என்றவாறு. வேறு பல குழீஇயது: படைக் குழாம்.

முதல் சினை யெனவும் பொருள் பிண்ட மெனவும் இவை யாராய நின்றமையின் மற்றொன்று விரித்த லென்னுங் குற்றமாம் பிற வெனின், அதற்கோர் அதிகாரப்பட்டு நின்ற தாகலானும், பொரு ளாராய்ச்சியும் இச் சொல் லாராய்ச்சிக்குப் பயன்படு நிலைமைத் தாகலானும் அமையும், என்பது.

அரசு:

என்பது பல பொருட் டொகுதியாய் வரும் பிண்டப் பெயரு முதலுஞ் சினையுமாய் வரு மியல்பிற் றிரியா, முன் முதலுஞ் சினையு மாக வழங்கி வாராநின்ற முறைமை [5]யுடைய.

1. றிரியா (து) 2. றிரியா (து) * பிண்டமெய்ப் : திருத்தம்
3 குறிப்பினவாருயின் 4. [வ்]வாறு : திருத்தம். 5. யுடைத்து : திருத்தம்.

உதா: குப்பையது தலையைச் சிதறினன்; குப்பையைத் தலைக்கட் சிதறினன்; குப்பையைத் தலையைச் சிதறினன், என வரும். இது வேறு பல குழீஇப படை முதலியவற்றிற்கு மொக்கும்.

87. ஒருவினை யொடுச்சொல் லுயர்பின் வழித்தே. (8)

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இது மூன்றாம் வேற்றுமைப் பொருட்கண்ண தோர் சொல் *வகைமை யுணர்த் துதல் நுதலிற்று.

உரை: மூன்றாம் வேற்றுமைப் பொருள் விரிப்புழி, 'அதனொ டியைந்த ஒருவினைக் கிளவி' [வே-மை-ல். 11] என்றான் அதாவது, ஒரு வினையினுழை ஒடுக் கொடுத்துச் சொல்லுக. என்றவாறு. ஆகலான் இவ்வாறு இச் சொல்வினன் இயை புடைத்தாய் ஒரு வினைகொண்டு வருங்கால் அவ் வொடு உயர்பு பற்றி வரும், என்றவாறு.

வரலாறு: அரசனொடு வந்தார் சேவகர், என வரும்.

மற்று, நாயொடு நம்பி வந்தான், என இழிவு பற்றி வருமால் எனின், உயர்வு, தாம் பல: குலத்தால் உயர்தலும், தவத்தால் உயர்தலும், நிலையால் உயர்தலும், உபகாரத்தால் உயர்தலும் என; அவ் விழிந்தவழி ஒடு வைத்துச் சொல்லியது அந் நிலைக் கண் அது சிறப்புடைத் தாகலின், என்பது.

**தெய்வ:**

மூன்றாம் வேற்றுமை உடனிகழ்ச்சிக்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இரு பொருட்கண் ஒருதலை பற்றி வரும் ஒடுச்சொல் அவ் விரு பொருளினும் உயர்ந்த பொருளின் வழியை உடைத்து, எ-று.

வழி என்றது அப் பொருளின் வழியாகிய பொருள் என்று கொள்க. உயர்வு என்பதைச் சிறப் பென்று கொள்க. கொள்ளவே அத் தொழிற்குச் சிறவாத பொருட்கண் வரும், என்றவா றாம்.

* வன்மை: திருத்தம்.

உ-ம்: அமைச்சரொடு இருந்தான் அரசன்: இருந்தான் என்னும் தொழிற்குச் சிறந்தான் அரசன் ஆதலின், சிறவாத அமைச்சர்மேல் ஒடுவந்தது. அரசனொடு இருந்தார் அமைச்சர். என்றவழி இருந்தார் என்னும் தொழிற்குச் சிறந்தார் அமைச்சர் ஆதலின் ஒடு அரசர்மேல் வந்தது. இஃது உடனிகழ்ச்சி ஆகலான் அத்தொழிற்கு இருவரும் சிறந்தார் எனிற் குற்றம் என்னை யெனின், அரசரொடு இருந்தார் அமைச்சர் அவரை, மந்திரம் இருமின் என்றார். என்றவழி அச்சுட்டு ஈரிடத்தும் செல்லாமையாலும் தொழில் முடியும் பெயரே சிறப்புடைய தெனவுங் கொள்க.

இனிச் சிறப்புடைய பொருண்மேல் ஒடு வருமெனப் பொருள் உரைத்தார் உளர். ஆயினும் இப்பொருள் பாணினி யார்க்கும் ஒக்கும்.

சேனா:

இ-ள்: அதனோடியைந்த ஒரு வினைக்கிளவி யென மூன்றாவதற்கோதிய ஒரு வினை யொடுச்சொல் உயர் பொருளை யுணர்த்தும் பெயர்வழித் தோன்றும். எ-று.

எ-டு: அரசனொடிளையர் வந்தார், ஆசிரியனொடு மாணாக்கர் வந்தார், என வரும்.

உயர் பொருட் பெயர்வழி ஒடுக்கொடுக்க, எனவே, உயர் பில்வழி, சாத்தனுங்கொற்றனும் வந்தார், என இரு பெயரும் எழுவாயாய் நிற்குமென்ப தாம். நாயொடு நம்பி வந்தான், என இழி பெயர்க்கண்ணும் ஒரு வினை யொடுச் சொல் வந்ததா லெனின், யாதானுமோராற்றான் அதற் குயர் புண்டாயி னல்லது அவ்வாறு கூறார்; கூறுபவாயின், அஃது ஒருவினை யொடுச்சொல் லெனப்படாது, கைப் பொருளொடு வந்தான், என்பது போல, அது தனக் குண்டாக வந்தா னெனப் பிறிது பொருள் படுவதோரொடு வுருபாமென்க.

இதனை வேற்றுமை யோத்தின்கண் 'அதனி னியறல்' (வே-மை-ல். 11) என்னுஞ் சூத்திரத்தின்பின் வையாது ஈண்டு வைத்த தென்னை யெனின், வேற்றுமையது பெயரும் முறையுந் தொகையும் பொதுவகையான் அவற்ற திலக்கணமும் உணர்த் தியல்லது, இன்ன வேற்றுமை இன்ன பொருட்கண் இன்னவா றாமென்னும் விசேட இலக்கணம் அதிகாரப்பட்டின்றாகலான்.

ஆண்டு வையாது, மூன்றுவது இப் பொருட்கண் இவ்வாறு மென விசேட விலக்கணம் 'மூன்றனு மைந்தனும்' (சொல்-92) எனக் கூறுகின்றுராகலின், அதனோ டியைய ஈண்டு வைத்தார். இதுவும் ஒரு பொருள் பற்றி யோதுகின்ற விசேட இலக்கண மாகலானென்பது.

நச்சி:

இது, மூன்றுவதன்கண் சொல்லுதல் வகைமை கூறு கின்றது.

இ-ள்: ஒரு வினை ஒடுச் சொல் - அதனோ டியைந்த ஒரு வினைக் 'கிளவி' என மூன்றுவதற்கு ஓதிய ஒருவினை ஒடுச்சொல், உயர்பின் வழித்து - உயர்ந்த பொருளை உணர்த்தும் பெயர்வழித் தோன்றும், எ-று.

உ-ம்: அரசனொடு இளையர் வந்தார், என வரும்.

இஃது உயர் பொருளும் இழி பொருளும் பற்றி மயங்கி வருதலின், ஈண்டுக் கூறி, இழி பொருளை விலக்கினர்.

சாத்தனொடு கொற்றன் வந்தான், என உயர்பு இல்வழி எண் ஒடு வந்தது. குலம், தவம், கல்வி, வினை, உபகாரம் முதலிய வற்றான் உயர்பு கொள்க.

நாயொடு நம்பி வந்தான், என்றாற் போல்வன இழி பொருட் கண்ணும் ஒரு வினை ஒடுச் சொல் வந்ததால், எனின், அது யாதானும் ஒருவாற்றான் உயர்பு உண்டாயின் அல்லது அவ்வாறு கூறுர்; கூறுப ஆயின், அஃது ஒரு வினை ஒடுச் சொல், எனப் படாது. கைப்பொருளொடு வந்தான், என்றாற் போல்வன பிறி தோர் பொருள் தந்த ஒடு, அது பொருள் உண்டாக வந்தான், என்றலின்.

கல்:

என் னுதலிற்றோவெனின், மூன்றும் வேற்றுமைப் பொருட் கண்ண தோர் சொல்லுதல் வகைமை யுணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: ஒரு வினை கொண்டு முடிதலுடைய ஒடு வென்னுஞ் சொல் அவ் விரு வினையையுடைய இரு பொருளினு மாய் அதன்பின் வருமோ எனின், அது கூறுவானப் பொருளின் அப் பொழுது உயர்ந்ததாகக் கருதியததன் பின் வருமென்ற வாறு.

உ-ம்: அரசரொடு வந்தார் சேவகர், என்பது. சேவகரொடு வந்தார் அரசர், எனற்க.

இனி, அவ் வுயர்புதாம் குலத்தா னுயர்தலும், தவத்தா னுயர்தலும், நிலைமையா னுயர்தலும், உபகாரத்தா னுயர்தலும் எனப் பல வகைய. [1]இழிந்தவழி யொடு வைத்துச் சொல்லுவது அந் நேரத்து அவற்றுய தொழின்மைச் சிறப்பு நோக்கி யென வுணர்க. அவை, நம்பி நாயொடு வந்தான், [2]என்றாற் போல்வன.

அரசு:

என்பது இரண்டு பொருட்கு ஒரு வினை கொண்டு வரும் மூன்று முருபு உயர்வு பற்றி வரும்.

உதா: அரசரொடு வந்தார் சேவகர், என வரும்.

உயர்பின் வழித்தென்றதனல் குலத்தானுந் தவத்தானும் ஞானத்தானுங் கல்வியானும் வீரத்தானு முபகாரத்தானு முயர்பு கொள்க. நூற்றுவர் மக்களொடு வந்தான் நாடு காப்பா னரசன், எனவும், நாயொடு வந்தான் நம்பி, எனவும் வருவன வுபகார வுயர்ச்சி யென்க.

88. மூன்றனு மைந்தனுந் தோன்றக் கூறிய
வாக்கமொடு புணர்ந்த வேதுக் கிளவி
நோக்கோ ரனைய வென்மனார் புலவர். (9)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மூன்றாவதும் ஐந்தாவதும் ஏதுப் பொருட்கு ஒத்த கிழமைய, என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை: மூன்றும் வேற்றுமையானும் ஐந்தாம் வேற்றுமை யானும் எடுத் தோதப்பட்ட ஆக்கமொடு புணர்ந்த ஏதுப் பொருண்மை ஆராயுங்கால் ஒரு தன்மைய, என்றவாறு.

வரலாறு: வாணிகத்தான் ஆயினன்; வாணிகத்தின் ஆயினன், என வரும்.

தெய்வ:

மூன்றாவதற்கும் ஐந்தாவதற்கும் உரிய தோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

1. இ [ழ] (ழி) ந்த 2. என்று [ச்] (ற்) போல்வன.

இ—ள் : மூன்ருவதன்கண்ணும் ஐந்தாவதன்கண்ணும் விளங்க எடுத்தோதப்பட்ட ஆக்கம் என்னும் சொல்லோடு தொடர்புபட்ட ஏதுக் கிளவி, இருவகை வேற்றுமைக்கும் நோக்கு ஒரு தன்மைய, எ—று.

உ-ம்: வாணிகத்தான் ஆயினான்; வாணிகத்தின் ஆயினான். என இருவாற்ருனும் வரும்.

ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி. என விதந்தோதிய அதனான், ஏனை ஏதுக்கள் நோக்கு ஒவ்வாத நிலைமைய. என்பது பெறுதும். "அமைத்தனாற் றக்கான் அரசன்," என்னும் பொருட்கண், "அமைத்தனிற் றக்கான் அரசன்," என்றவழித் திரி பின்றி ஏதுப்படுதலே யன்றி, அமைத்தனைப் போல வென்றுதல், அமைத்தனிற் காட்டில் என்றுதல் பொருள் உரைக்கவும் படு மாகலால், ஆக்கமொடு புணர்ந்த ஏதுவே ஒப்ப முடிவது; ஏனை ஏதுக்கள் திரி புடைய என்பது அறிவித்தற்கு இச் சூத்திரங் கூறப்பட்டது.

சேனு:

இ—ள் : மூன்ரும் வேற்றுமைக்கண்ணும் ஐந்தாம் வேற்றுமைக்கண்ணும் விளங்கச் சொல்லப்பட்ட ஆக்கத்தோடு கூடிய ஏதுச் சொல் அவ் வேதுப் பொருண்மையை நோக்கும் நோக்கு ஒரு தன்மைய, எ—று.

எ—டு: வாணிகத்தா னாயினான்; வாணிகத்தா னாய பொருள், எனவும், வாணிகத்தி னாயினான்; வாணிகத்தி னாய பொருள், எனவும் வரும்.

வாணிகத்தான், வாணிகத்தின் என வுருபொடு தொடர்ந்து நின்ற சொல்லை ஏதுக் கிளவி யென்றார்.

'அதன்வினைப் படுத லதனி னாதல்' (சொல்–74) என்றும். 'புதுமை பழமை யாக்கம்' (சொல்–78) என்றும் மூன்ருவதற்கும் ஐந்தாவதற்கும் ஏதுப் பொருள் மேற் கூறப்பட்டமையான் இச் சூத்திரம் வேண்டா வெனின், அற்றன்று; பிரிநிலை யேகார முதலாகிய இடைச் சொல்லும் ஒருசார் வினைச் சொல்லும் முன் னோதப்பட்டனவேனும், எச்ச மாதல் லொப்புமையான் எச்ச வாராய்ச்சிக்கண் அவை தம்மையே,

'பிரிநிலை வினையே பெயரே யொழியிசை
யெதிர்மறை யும்மை யெனவே சொல்லே'
(சொல் – 430)

எனப் பின்னுங் கூறினாற் போல ஏதுப் பொருண்மை மூன்றுவ தற்கும் ஐந்தாவதற்கும் மேற் கூறப்பட்ட தாயினும், மயக்கமாத லொப்புமையான் மயக்க வாராய்ச்சிக்கண் ஈண்டுங் கூறினா ராகலின், கூறியது கூறல் குற்ற மின் றென்பது.

இஃது 'அச்சக்கிளவி' (சொல்-100) என்பதற்கு மொக்கும்.

அஃதேல், மயக்கமாவது ஒரு வேற்றுமை பிறி தொன்றன் பொருட்கட் சேற லன்றே. ஏதுவின்கண் வரும் மூன்றுவதும் ஐந்தாவதும் தம் பொருளே பற்றி நிற்றலின் மயங்கின வெனப் படா வெனின், நன்று சொன்னாய்; ஏதுப் பொருண்மை தனக் குரியவாற்றான் அவற்றிற்குத் தன் பொரு ளாயினவாறு போலப் பிறிதொன்றற் குரியவாற்றாற் பிறி தொன்றன் பொரு ளாதலு முடைமையின், அம்முகத்தான் மயங்கின வெனவே படு மென்பது. அல்லதூஉம் ஒரு பொருட்கண் இரண் டுருபு சென்ற துணையான் மயக்க மாயிற் றெனினு மமையும்.

ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி எனவே ஆக்கமொடு புணராது ஞாபக வேதுப் பொருண்மைக்கண் வரும் இன்னும் ஆனும் ஒத்த வரவின வல்ல, என்பதாம். ஆண் டைந்தாவது பெருவரவிற் றெனக் கொள்க.

நச்சி:

இது, மூன்றுவதற்கும் ஐந்தாவதற்கும் ஏது ஒத்த கிழமைய, என்கின்றது.

இ-ள்: மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய–மூன்றும் வேற்றுமைக்கண்ணும் ஐந்தாம் வேற்றுமைக்கண்ணும் விளங்கச் சொல்லப்பட்ட, ஆக்கமொடு புணர்ந்த ஏதுக் கிளவி – ஆக்கத்தோடு கூடிய ஏதுச் சொல், நோக்கு ஓரனைய என்மனார் புலவர் – அவ் வேதுப் பொருண்மையை நோக்கும் நோக்கு ஒரு தன்மைய என்று கூறுவர் புலவர், எ–று.

உ-ம்: வாணிகத்தான் ஆயினான்; வாணிகத்தான் ஆய பொருள்; வாணிகத்தின் ஆயினான்; வாணிகத்தின் ஆய பொருள், என வரும்.

எனவே, ஞாபக ஏதுவின்கண் வரும் இன்னும் ஆனும் ஒத்த உரிமை இல. என்பது பெற்றும். இஃது, உருபும் பொருளும் மயங்கிற்று.

கல்:

என் னுதலிற்றோ வெனின், மூன்றும் வேற்றுமையும் ஐந்தாம் வேற்றுமையும் ஏதுப் பொருண்மைக் கொத்த கிழமைய, என்ப துணர்த்தல் நுதலிற் றென்க.

இ-ள்: மூன்றுவதனுனும் ஐந்தாவதனுனும் விளங்கச் சொல்லப்பட்ட ஆக்கப் பொருண்மையோடு [1]கூடிய ஏது வென்னும் பொருண்மை [2]அவ் வுருபுகளான் அப் பொருள் விளங்குமிடத்துப் பெரும்பான்மை யுள என் றுராயுமிடத்து அஃ தில்லை, இரண்டு மொருதன்மைய வென்றவாறு.

உ-ம்: வாணிகத்தா னுயினுன்; [3]வாணிகத்தின் ஆயினு னென்பது.

கிளவி யென்றதற்குப் பெயராற் பொருளினை ஆக்கமொடு. புணர்ந்த தென்று விசேடித்துக் கூறினமையின் ஆக்க மல்லா வேது; ஒத்த கிழமைத் தன் [4]றென்பது போலுங் கருத்து.

அரசு:

என்பது மூன்றும் வேற்றுமைக்கண்ணும் விளங்கச் சொல் லப்பட்ட ஆக்கத்தொடு கூடிய வேதுப் பொருண்மையை நோக்குமிடத் தவ் விரண்டு மீண் டொத்த பொருள வா மென்பர்.

உதா: வாணிகத்தா னுயினுன்; வாணிகத்தி னுயினுன். என வரும்.

89. இரண்டன் மருங்கி னேக்க னேக்கமவ்
விரண்டன் மருங்கி னேதுவு மாகும். (10)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் மேற் சூத்திரத்திற் கூறிய முடிவே சார்ந்தது. என்றவாறு உணர்த் துதல் நுதலிற்று.

---

1. கூடிய [பொருந்திய] 2. [ய] அவ்வுருபு
3. •வாணிகத் [தா] (தி)ன் 4. ெ[ர] (ற)ன்பது

உரை: இரண்டாம் வேற்றுமை, நோக்கிய நோக்கமும், நோக்கல் நோக்கமும் என இரண்டு பொருளும் உடைத்து. மேற்ருன், 'நோக்கலின்' [வே.ம-ல். 10] என்ருன்; என்புழி 'நோக்கலின்' எனவே அவ் விரண்டு நோக்கமும் அடங்கின.

நோக்கிய நோக்கம் என்பது பொறியான் நோக்குதல்: அது, தூணை நோக்கினுன், என வரும்.

'நோக்கல் நோக்கம்' என்பது
'வானேக்கி வாழும்' [குறள் – 542]

என்பது: இது கண்ணுன் நோக்கியது அன்மையின் நோக்கல் நோக்கமாயிற்று. அப் பொருண்மைக்கண்ணுயின் முன்னர்ச் சொல்லிய இரண்டு வேற்றுமைப் பொருளும் ஆம், என்றவாறு.

வரலாறு: 'வானேக்கி வாழும்' [குறள் — 542] என்றக்கால் வானை நோக்கி வாழும், என்பது; இனி, வானுனுய உபகாரம் நோக்கி வாழும், என்பது; வானினுய உபகாரம் நோக்கி வாழும், என்பதூஉ மாம்.

தெய்வ:

இரண்டாவதனேடு மூன்ருவதும் ஐந்தாவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இரண்டாம் வேற்றுமைக்கண் ஒகப்பட்ட பொருண்மையின் நோக்குதல் அல்லாத நோக்கம், மூன்ருவதினும் ஐந்தாவதினும் ஒ.தப்பட்ட எதுவினும் ஆம், எ-று.

அறனேக்கி யாற்றுங்கொல் வையம் புறநோக்கிப்.
புன்சொல் உரைப்பான் பொறை (குறள் – 189)

என்றவழி அறத்தை நோக்கியென விரித்தலே யன்றி, அறத்தான் நோக்கி யாற்றுங்கொல், அறத்தின் நோக்கி யாற்றுங் கொல், என விரிப்பினும் ஆம், என்றவாறு. புன்சொல் உரைப்பானை நிலம் பொறுக்கின்றது பொறை யாகிய தருமத்தைக் குறித்தோ, அத் தருமம் தனக் கியல் பாதலின் அஃ தேதுவாகவோ, என இருவாற்ருனும் விரிப்பினும் அமைந்தவாறு கண்டு கொள்க.

சேனு: (நோக்கப் பொருளில்)

இ-ள்: 'நோக்கலி னஞ்சலின்' (சொல்-72) என இரண்டாவதற் கோதிய நோக்கப் பொருண்மை நோக்கிய நோக்கமும் நோக் கல் நோக்கமு மென இரண்டு வகைப்படும். நோக்கிய நோக்கம் கண்ணு னேக்குதல்; நோக் கல் நோக்கம் மனத்தா னென்றனே நோக்குதல்; அந் நோக் கல் நோக்க மாகிய பொருள் மூன்ருவதற்கும் ஐந்தாவதற்கு முரிய ஏதுப் பொருண் மையு மாம், எ-று.

நோக் கல் நோக்கத்தால் நோக்கப்படும் பொருளை நோக் கல் நோக்கம் என்ருர்.

நோக் கல் நோக்க மவ் விரண்டன் மருங்கின் ஏதுவு மாகு மெனவே, அவ் வேதுப் பொருண்மைக் குரிய இரண் டுருபும் அவ் வேதுப் பொருண்மையிற் றீராது இரண்டாவதன் பொருட் கண் வரு மென்ப தாம்.

ஓம்படைப் பொருட்கண் வருவனவற்றிற்கும் ஈ தொக்கும்.

எ-டு: 'வானேக்கி வாழு முயிரெல்லாம் மன்னவன்
கோனேக்கி வாழுங் குடி (குறள் – 542)

என்புழி, வானை நோக்கி வாழும், கோலை நோக்கி வாழும், என இரண்டாவது வருதலே யன்றி, வானு னேக்கி, வாழும். வானி னேக்கி வாழும், கோலா னேக்கி வாழும். கோலி னேக்கி வாழும் என மூன்ருவதும் ஐந்தாவதும் வந்தவாறு கண்டு கொள்க.

ஏது வாயினவா றென்னை யெனின், உயிருங் குடியும் வானையுங் கோலையும் நோக்குவது அவற்ருனுய பயன் பற்றி அவற்றைத் தா மின்றியமையாமை யன்றே; அதனுன் அவ்வாறு பயன்படுவன அவற்ற தின்றியமையாமைக்கு ஏது வாதலு முடைய வென்பது.

அஃதேல், வானுங் கோலும் ஏது வாயவழி நோக்கப்படுவன பிற வாவான் செல்லு மெனின், அற்றன்று; கண் ணுட் குத்தினுன், என்றவழி கண்ணே செயப்படு பொருளாதலும் பெறப்பட்டாற் போல, வானு னேக்கும், கோலா னேக்கும், என்புழியும் அவைதாமே செயப்படு பொரு ளாதலும் பெறப் பட்டமையால், நோக்கப்படுவன பிற வாவான் செல்லா வென்பது.

நச்சி:

இது, நோக்கு அல் நோக்கத்திற்கு ஏதுவும் செயப்படு பொருளும் ஒத்த உரிமைய, என்கின்றது.

இ-ள்: இரண்டன் மருங்கின் நோக்கு அல் நோக்கம் — இரண்டாவதற்கு உரித்தாக ஓதிய கண்ணால் நோக்கும் நோக்கம் இன்றி மனத்தால் நோக்கும் நோக்கம், அவ் விரண்டன் மருங்கின் ஏதுவும் ஆகும் — அம் மூன்றாவதற்கும் ஐந்தாவதற்கும் உரிய ஏதுப் பொருண்மையும் ஆம், எ-று.

உ-ம்: வா னோக்கி வாழும் (குறள் — 542) என்புழி வானை நோக்கி வாழும், என விரியும்வழி, வானான் ஆய பயனைக் கருதி உயிர் வாழும், எனவும், வானின் ஆய பயனைக் கருதி உயிர் வாழும், எனவும், செயப்படு பொருளும் ஏதுவும் ஒப்பப் பிறந்து நிற்றல் இச் சூத்திரத்திற்குக் கருத்து.

இஃது உருபும் பொருளும் மயங்கிற்று.

கல்:

என்ப தென் னுதலிற்றோ வெனின், இரண்டாவது மூன்றாவதனோடும் ஐந்தாவதனோடும் மயங்குமா றுணர்த்த னுதலிற்று, என்க.

இ-ள்: இரண்டாம் வேற்றுமையிடத்துப் [1]பொறியா னோக்கப்படுத லின்றி மனத்தா னோக்கப்படும் [2]நோக்கும், மூன்றாவதன் கண்ணும், ஐந்தாவதன் கண்ணும் ஒத்த கிழமைய வென் றோதிய ஏதுப் பொருள்படு மென்றவாறு.

உ-ம்: வா னோக்கி வாழும், என்பது, வானை நோக்கி வாழும்; வானா னுயபயன் நோக்கி வாழும்; வானி னுய பயன் நோக்கி வாழும், என வரும். ஏதுவு மாகும், என்ற வும்மையாற் றன்பொருட்பாடே சிறந்தது.

இனி, ஏது வாம்வழிச் செயப்படு [3]பொருள்படக் கூறிய நோக்கி யென்பதனை ஒழிய, வானை வாழு மென்றாற் போல நிற்க வேண்டு மெனிற் செயப்படு பொருள் ஒழிய ஏதுப் பொருள் படும், என்பதன்று கருத்து; ஏதுப் பொருட் குறிப்போடு செயப்படு பொருளாய் நிற்கும், என்பது போலும் கருத்து.

---

1. பெ [ற்] (ர) றி 2. நோக்கும் என : திருத்தம்
3. பொருள்படு கூறிய : திருத்தம்

அரசு:

என்பது இரண்டாவதற்குக் கண் ணேக்கு நோக்கம், மனத்தால் நோக்கும் நோக்கம் என நோக்க மிரண்டு வகைப் படும். அவ் விரண்டனுள் மனத்தா னேக்கு நோக்கிற்கு மூன்ருவதற்கு மைந்தாவதற்கு முரிய வேறுப் பொருண்மையு மாம்.

உதா:- வா னேக்கி வாழு மென்புழி, வானை நோக்கி வாழும், என இரண்டாவது விரியும். அவ்வழி வானு னுய பயனைக் கருதி வாழு மெனவும், வானி னுய பயனைக் கருதி வாழு மெனவும், மூன்ருவது மைந்தாவதும் ஏதுவின்க ணேத்த நோக்க நோக்குமாறு. நோக் கல்லாத நோக்கம் பொறியா னேக்கு நோக்க மன்று, மனத்தா னேக்கு [1]நோக்க மென்ப.

**90. அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயி**
**னதுவென் னுருபுகெடக் குகரம் வருமே. (11)**

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஆருவது நான்கா வதனெடு மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**உரை:** மேல், இயற்கையி னுடைமையின் முறைமையின் [வே-மை-ல். 14] என, ஆருவதனை முறைமைப் பொருட்கு உரித்தென்று ஓதினுன்; அம் முறைமைப் பொருள் உயர்திணைக் காயின், அது என் உருபு கெடக் குகரம் வரும், என்றவாறு.

வரலாறு: நம்பிக்கு மகன், என வரும். நம்பியது மகன் என்புழி இழுக் குள்ளது கண்டு, அது காத்தவாறு.

**தெய்வ:**

ஆருவது நான்காவதனேடு மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயர்திணைத் தொகைப் பொருண்மேல் வரும் அது வென் வேற்றுமை அது என் உருபு கெடக் குகரம் வரும், எ-று.

உ-ம்: நம்பிமகன், என்பதனைக் கிழமைப் பொருள்பட விரிப்புழி, நம்பிக்கு மகன், என விரியும். நம்பியது மகன், எனின் வழுவாம்.

---

1. னேக்க: திருத்தம்.

சேனு : (உடைமைப் பொருளில்)

இ-ள்: ஆறும் வேற்றுமைப் பொருண்மேல் வரும் உயர் திணைத்தொகைக்கண் உருபு விரிப்புழி அது வென்னு முருபு கெட அதன் பொருட்கண் நான்கா முருபு வரும். எ-று.

ஈண்டு அது வெ னுருபு கெடுதலாவது அவ் வுருபு ஆண்டு வாராமை.

நம்பி மகள்; நங்கை கணவன், என்னுந் தொகைகளை விரிப்புழி, நம்பிக்கு மகன்; நங்கைக்குக் கணவன், என நான்க னுருபு வந்தவாறு கண்டு கொள்க.

உயர்திணைத் தொகைவயி னது வெ னுருபு கெடக் குகரம் வரு மென்றதனுன், ஆற னுருபு அஃறிணைப்பால் தோன்ற நிற்றல் பெற்றும்.

உயர்திணைத் தொகைவயின் ஆறுவதனை விலக்கி நான்கா வதே சேறலின், 'இதன திதுவிற்று' (சொல்-110) என்னுஞ் சூத்திரத்தாற் கூறப்படும் பொருளோடு உடன்வையாது இதனை வேறு கூறினர்.

நச்சி:

இஃது, ஆறுவதற்கு ஓதிய முறைப் பொருட்கண் நான் காவது விரியுமாறும், ஆறன் உருபு கெட அதன் உடைமைப் பொருள் விரியுமாறும் கூறுகின்றது.

இ-ள்: உயர்திணைத் தொகைவயின் குகரம் வரும் - உயர் திணைப் பொருள் இரண்டு சேர்ந்தவிடத்து உருபு விரிப்புழி நான்கன் உருபு விரியும், அது என் வேற்றுமை அது என் உருபு கெட வரும் - அதுவன்றி அவ் வுயர்திணைத் தொகைவயின் ஆறும் வேற்றுமையை விரிப்புழி அவ் வது என் உருபு தான் கெட்டுப்போக அதன் உடைமைப் பொருள் விரியும், எ-று.

உ-ம்: நம்பி மகன், என்னும் தொகை நம்பிக்கு மகன் என விரியும்: இஃது உருபு மயக்கம். இனி,

'நின்மகள். பாலும் உண்ணுள் பழங்கண் கொண்டு (அகம். 48: 1)

'யாம்எம் மகனைப் பாராட்ட (கலி. 85: 29)

'என் னணியியற் குறுமகள் ஆடிய (நற். 184) என்பவற்றுள் அது என் உருபு கெட, அதன் உடைமைப் பொருள் விரிந்தவாறு காண்க: இவை உருபு நிலைக்களத்துப் பொருள் மயங்கின. இவற்றிற்கு நான்கன் உருபு விரிப்பின் 'நினக்கு மகளாகியவள்; எனக்கு மகனாகியவனை; எனக்கு மகளாகிய குறுமகேள், என ஆக்கம் கொடுத்துக் கூறல் வேண்டும்; ஆண்டு அம் முறைமை செயற்கை யாம் ஆகலின், அது பொருள் அன்மை உணர்க.

**கல்:**

என்ப தென் னுதலிற்றோ வெனின், ஆறாவது நான்காவதனோடும் மயங்குமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அது வென்னும் வாய்பாட்டை யுடைய ஆறாம் வேற்றுமை உயர்திணைத் தொகை 'வயிற்கட் டொக்க தொகையிடத்து அவ் வது வென்னும் வாய்பாடு கெட நான்காவதாய் வரும், என்றவாறு.

உ-ம்: நம்பி மகன் – நம்பிக்கு மகன், என்பது, இலக்கணமில்வழி மயங்கல், நம்பியது மகன் என்ப தின்மையின், என்பது.

இச் சூத்திர நயத்தானே இவ் வுருபு போல தம் பொருள்பட நில்லாது பெயர் போல் ஆறாவது பா றோன்றி நிற்கும் என்பது பெற்றாம்.

இந் நயத்தானே வினைக்குறிப் புரிமைப்பட நிற்கும்வழியு முண்டேனும் கொள்க.

**அரசு:**

என்பது, ஆறா முருபு முயர்திணைக்கண் விரியுழி யது வென்னு முருபு கெட்டுக் குகரம் வரும்.

உதா: நம்பி மக னென்னுந் தொகை, நம்பியது மக னென்னாது நம்பிக்கு மக னெனவிரிந்து வரும். நம்பியது மக னெனின், ஆவினது மக ளென்றாற் போல வழு வாமாறு காண்க.

91. தடுமாறு தொழிற்பெயர்க் கிரண்டு மூன்றுங்
கடிவரை யிலவே பொருள்வயி னான. (12)

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இரண்டாவதும் மூன்றாவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. வயி [க்] (ற்) கட்.

உரை: தடுமாறு தொழிற் பெயர்க்கு இரண்டாம் வேற்றுமைப் பொருளும் மூன்றும் வேற்றுமைப் பொருளும் ஒக்கும், என்றவாறு.

வரலாறு: புலி கொல் யானை, என்பது: அது விரிப்புழிப், புலியைக் கொன்ற யானை – புலி கொல் யானை; புலியாற் கொல்லப்பட்ட யானை – புலி கொல் யானை, என இரண்டிற்கும் வரும்.

தடுமாறுதல் என்பது இரண்டிற்கு உரித்தாய்ச் சென்று வருதல், ஈண்டுக் கோறற் றொழில் இரண்டிற்கும் ஒக்கும்.

**தெய்வ:**

இரண்டாவதும் மூன்றுவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இரண்டு பொருள் தடுமாறி வரும் தொழிலையுடைய பெயர்க்கு இரண்டாவதும், மூன்றுவதும் வருதல் நீக்கப்படா, பொருள் கொள்ளு மிடத்து, எ-று.

அஃதாவது 'புலி கொல் யானை' என்பது. இதற்குப் பொருள் உரைக்குங்கால், புலியைக் கொன்ற யானை, எனவும், புலியாற் கொல்லப்பட்ட யானை, யெனவும் இவ்வாறு இருவகை வேற்றுமைக்கும் உரித்தாகலின் மயக்கம் ஆயிற்று.

பொருள் துணியுமாறு வருகின்ற சூத்திரத்துட் கூறுப.

**சேனா:** ( தடுமாறு பொருளில் )

இ-ள்: தனக்கே யுரித்தாய் நில்லாது ஒருகால் ஈற்றுப் பெயரோடுஞ் சென்று தடுமாறு தொழிலொடு தொடர்ந்த பெயர்க்கு இரண்டாவதும் மூன்றுவதும் கடியப்படா, அவ் வேற்றுமை தொக அவற்றின் பொருள் நிற்குந் தொகையிடத்து, எ-று.

எ-டு: புலி கொன்ற யானை; புலி கொல்யானை என்புழிப், புலியைக் கொன்ற யானை, எனவும், புலியாற் கொல்லப்பட்ட யானை, எனவும், இரண்டாவதும் மூன்றுவதும்; மயங்கியவாறு கண்டு கொள்க.

கொன்ற, கொல் லென்பன வினைமுதற் பொருட் குரிய வாகப் புலி யென்பது செயப்படு பொரு ளாயவழி யல்லது இரண்டாவது வாராமையானும், அச் சொற்கள் செயப்படு பொருட் குரியவாகப் புலி வினைமுத லாயவழி யல்லது மூன்றாவது வாராமையானும், இவை ஒரு பொருட்கண் வந்தன அன்மையின், மயக்க மாமா றென்னை யெனின், ஒரு பொருட்கண் வாராமையின் மயக்க மெனப்படா தாயினும், தடுமாறு தொழிற் றொகைக்கண் இரண்டும் வந்து நிற்றலின் மயக்கம்பாற் படு மென்பது.

நச்சி:

இஃது இரண்டாவதும் மூன்றாவதும் மயங்குமாறு கூறு கின்றது.

இ-ள்: தடுமாறு தொழிற் பெயர்க்கு—தனக்கே உரித்தாய் நில்லாது ஒருகால் ஈற்றுப் பெயரொடும் சென்று தடுமாறும் தொழிலொடு தொடர்ந்த பெயர்க்கு, இரண்டும் மூன்றும் கடி நிலை இல — இரண்டாவதும் மூன்றாவதும் கடியப்படா, பொருள் வயினான — அவ் வேற்றுமை தொக்கு அவற்றின் பொருள் நிற்கு மிடத்து, எ-று.

உ-ம்: 'புலி கொல் யானை,' என்புழிப் புலி செயப்படு பொரு ளாயவழி இரண்டாவதும், அது வினைமுத லாயவழி மூன்றாவதும் விரியும். அது, 'புலியைக் கொன்ற யானை; புலியால் கொல்லப்பட்ட யானை,' என வரும்.

வினைத்தொகைக்கண்ணும் செயப்படு பொருள் பிறக் குமோ எனின், செய் குன்று; உறை பதி, என்றாற் போல்வன வற்றுள் பிறந்தவாறு காண்க. இஃது உருபு மயக்கம்.

கல்:

என்ப தென் னுதலிற்றோ வெனின், இரண்டாவது மூன்றாவதும் மயங்குமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வினையினை யுடைய பெயர்க்கண் இரண்டாவது மூன்றாவது [1]நீங்க நிற்கும் நிலைமை யில், பொருள்படு மிடத்து. என்றவாறு.

1. [நீ][க]: திருத்தம்

உ-ம்: புலி கொல் யானை யென்பது, ஒருகாற் புலியைக் கொன்ற யானை; புலியாற் கொல்லப்பட்ட யானை யெனவும், *கொற் றொழி லிரண்டிற்குஞ் சென்று வருதலிற் றடுமாறு தொழிற் பெயர் என்னப்பட்டது. புலியா னென்புழி வினை யாதோ வெனின், ஆண்டும் வினை [1]கொன்ற வென்பது. அஃதேற் புலி கருவியாக யானை தான் பிறி தொன்றனைக் கொன்ற தென்புது பொருளாமா [2]லெனின், 'செயப்படு பொருளைச் செய்தது போல' என்பதனாற் [3]கொல்லப்பட்ட [4]வென்பது பொருளாக நோக்க அவ்வா றாகா தென்பது.

செயப்படு பொருட்கண் வினை தொகுமா லெனின், செய் குன்று; உறை பதி, எனப் பிற பொருட்கண்ணுந் தொகு மென்பது.

அரசு:

என்பது தடுமாறு தொழிற் பெயர்ப்பொருட்டு இரண் டாவதன் பொருளு மூன்றாவதன் பொருளுங் கடியப்படா வொக்கும்.

உதா: புலி கொல் யானை, என வரும். என்புழி புலி செயப்படு பொரு ளாயவழி யிரண்டாவதும், அப் புலி வினைமுத லாயவழி மூன்றாவதும் விரியும். அது புலியைக் கொல்யானை; புலியாற் கொல்லப்பட்ட யானை யென வரும். தடுமாறு தொழிற் கொத்த தொழி லிரண்டற்குஞ் சேறல்.

92. ஈற்றுப்பெயர் முன்னர் மெய்யறி பனுவலின்
வேற்றுமை தெரிப வுணரு மோரே. (13)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மேல் எடுத் தோதப்பட்ட தடுமாறு தொழிற் பெயரை உணரும் ஆறு இது, என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை: புலி கொல் யானை, என்பது; அத் தொகைக்கு யானை என்பது ஈற்றது. இவ் வீற்றுப் பெயர் முன்னர்ப் பொரு ளறிய வருஞ் சொல், 'மெய்யறி பனுவல்' என்பதனான், அவ் விரண்டன் வேற்றுமையும் தெரியப்படும், என்றவாறு.

---

* சொற் : திருத்தம் 1. தோன்ற : திருத்தம் 2. றெனின் : திருத்தம்
3. சொல்லப்பட்ட : திருத்தம் 4. வென்பது [என்பது]

வரலாறு: புலி கொல் யானைக் கோடு வந்தது எனின், புலியாற் கொல்லப்பட்டது யானை, என விளங்கும்.

இனிப் புலி கொல்யானை ஓடுகின்றது, எனின், புலியைக் கொன்றது யானை, என விளங்கும்.

இனி, ஈற்றுப் பெயர்முன்னர்ப் பொரு ளறிய வந்த சொல்லான் அவ் வேற்றுமை தெரிப, என்பது, பொருளறிய வாராத சொல்லான் அவ் வேற்றுமை தெரிய லாகா, என்பது.

வரலாறு: புலி கொல் யானை கிடந்தது, தோன்றும், என்பது.

**தெய்வ:**

மேலதற்கோர் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இறுதிக்கண் நின்ற பெயர்முன்னர்ப் பொருள் அறிய வரும் முறையினல், வேறுபா டறிப, அதன் இயல்பு உணர வேண்டுவார்.

உ-ம்: புலி கொல் யானை ஓடுகின்றது; புலி கொல் யானைக் கோடு வந்தது, என்றவழி, கொலையுண்ட பொருள் விளங்கிய வாறு கண்டு கொள்க.

**சேன:**

இ-ள்: தடுமாறு தொழிலொடு புணர்ந்த பெயருள், இறுதிப் பெயர்முன்னர்ப் பொருள் வேறுபா டுணர்த்துஞ் சொல் வரின், அச் சொல்லான் அப் பொருள் வேற்றுமை தெரிவர் உணர்வோர், எ-று.

எ-டு: புலி கொல் யானை யோடாநின்றது; புலி கொல் யானைக் கோடு வந்தன, என வரும்.

பிற மயக்கம் போலாது ஈண்டுப் பொருள் வேறுபா டுணர்ந்தல்லது உருபு விரிக்க லாகாமையின், 'மெய்யறி பனுவலின் வேற்றுமை தெரிப', என்றார்.

முன் புலியைக் கொன்ற யானே, பின் பிறி தொன்றனுன் இறந்துழியும். புலி கொல் யானேக் கோடு வந்தன வென்பர் அவ்வழி, கொன்றது, கொல்லப்பட்ட தென்னும் வேறுபாடு குறிப்பா னுணரப்படு மென்பார், 'உணருமோர்' என்ருர். பிறவு மன்ன.

நச்சி:

இது, மேலதற்கு ஓர் புறனடை.

இ-ள்: ஈற்றுப் பெயர் முன்னர் – தடுமாறும் தொழிலொடு புணர்ந்த இருவகைப் பெயருள் இறுதிப் பெயர்முன்னர் வந்த. மெய்யறி பனுவலின் – பொருள் வேறுபாடு உணர்த்தும் சொல்லான், வேற்றுமை தெரிப உணருமோரே – அப் பொருள் வேற்றுமை தெரிவார் உணர்வோர், எ-று.

உ-ம்: புலி கொல் யானே ஓடாநின்றது; புலி கொல் யானே ஓடாநின்றன; புலி கொல் யானேக் கோடு வந்தன, என வரும். முன் புலியைக் கொன்ற யானே பின் பிறிது ஒன்ருன் இறந்துழியும் 'புலி கொல் யானேக் கோடு வந்தன', என்ப. இது குறிப்பான் உணரப்படும் என்றற்கு 'உணருமோரே' என்ருர். இன்னும், இதனுனே, புலி கொல் யானே கிடந்தது, என்புழிச் சொல்லுவான் குறிப்பான் உணர்தலும் கொள்க.

கல்:

என் னுதலிற்ரே வெனின், மேலதற் கோர் புறனடை யுணர்த்த னுதலிற்று.

இ-ள்: இறுதிப் பெயர்முன்னர்ப் பொரு ளறிய வருஞ் சொல்லான் இன்ன வேற்றுமை யென அறிய அத் தொகைச் சொல்லது பொருளினே [1]உணர்வா ரென்றவாறு.

உ-ம்: புலி கொல் யானே ஓடுகின்றது; புலி கொல் யானேக் கோடு வந்தது, என வரும்.

மெய்யறி பனுவ லென்றதனுற் பொரு ளியைய வாராதனவு முள. புலி கொல் யானே கிடந்த தென்ருற் போல்வன, ஆண்டுச் சொல்லுவான் குறிப்பினுன் அறிக.

1. உணர்வாெ[ற] (ர)ன்ற

அரசு:

என்பது தடுமாறு தொழிலொடு புணர்ந்த இருவகைப் பொருளிறுதிப் பெயர்முன்னர் வந்த பொருள் வேறுபாடுணர்த்துஞ் சொல்லானப் பொருள் வேற்றுமை தெரிவருணர்வோர்.

மெய்யறி பனுவல்—பொருள் வேறுபாடுணர்த்துஞ் சொல். ஈற்றுப் பெயர் – யானை.

உதா: புலி கொல் யானைக்கோடு வந்தன வெனிற் புலியாற் கொல்லப்பட்ட யானை யென்பது விளங்கும். புலி கொல் யானை யோடுகின்ற தெனில், யானை புலியைக் கொன்ற தென்பது விளங்கும். இது குறிப்பா னுணரப்படுமாறு காண்க.

**93. ஓம்படைக் கிளவிக் கையு மானுந்
தாம்பிரி விலவே தொகைவரு காலை. (14)**

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இன்னும் அவற்றுக்கண்ணே ஆவதோர் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

**உரை:** ஓம்படைப் பொருட்கு ஐயும் ஆனும் ஒத்த கிழமைய, என்றவாறு.

ஓம்படுத்தல் என்பது போற்றுதல். 'தொகை வரு காலை,' என்பது, தொகையி னிலைக்கண்ணே இம் மயக்கம் ஆவது, என்றவாறு.

வரலாறு: 'புலிபோற்றி வாவாழி யைய' என்புழிப் புலியைப் போற்றி வா, என்றும், புலியினுன் ஆய ஏதம்போற்றி வா, என்றும் ஆக, என்பது.

'தொகை வரு காலை' என்பதனை யாண்டும் ஒட்டிக் கொள்க, என்பது.

**தெய்வ:**

இரண்டாவதும் மூன்றாவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் :' ஓம்படுத்துச் சொல்லுதற்கண் வருஞ் சொற்கண், உருபு தொகையாகி வருங் காலத்து. இரண்டாவதும் மூன்ருவதும் நீங்குதல் இல, எ—று. இரண்டாவதன் பொருளும் மூன்ருவதன் பொருளும் படும், எ—று.

உ-ம்: 'அறம்போற்றி வாழ்மின்' என்றவழி, அறத்தைப் போற்றி வாழ்மின், எனப் போற்றப்படுவது அறம், என்னும் பொருளும் பட்டது. அறத்தாற் போற்றி வாழ்மின், எனப் போற்றப்படுவார் தாம், என்னும் பொருளும் பட்டது.

சேனு : (பாதுகாத்தற் பொருளில்)

இ-ள் : ஓம்படைப் பொருண்மைக்கு ஐகார வுருபும், ஆனுருபும் ஒத்த வுரிமைய, அவ் வேற்றுமை தொக்கவழி. எ—று.

ஓம்படுத்தல் — பாதுகாத்தல்.

புலி போற்றி வா, என்புழி, ஓம்படைக் கிளவி இரண்டாவதற் கோதிய காப்பின்கண் அடங்குதலின், புலியைப் போற்றி வா, வென ஐகார வுருபும், புலி அவன் போற்றி வருதற்கு ஏதுவாதலு முடைமையால், புலியாற் போற்றி வா வென, ஆனுருபும் ஒத்த வுரிமையவாய் வந்தவாறு கண்டு கொள்க.

புலி யேது வாதலு முடைத்தாயின்,
" இரண்டன் மருங்கி னேக்க னேக்கமு
மோம்படைக் கிளவியு மேதுவு மாகும்,"

என வமையும்; இச் சூத்திரம் வேண்டா வெனின், அங்ஙன மோதின் ஓம்படைப் பொருண்மைக்கு ஐந்தா முருபு மெய்தும்; அதனை விலக்குதற்கு 'ஐயு மானுந் தாம் பிரிவில,' வென வேறு கூறினுர். இவை பிரிவில வெனவே, இன் னுருபு பிரி வுடைத்தாய், புலியிற் போற்றி வா, வெனச் சிறுபான்மை வரு மென்ப தாம்.

இரண்டு வேற்றுமைக்கும் ஓம்படைப் பொருண்மை இச் சூத்திரத்தா னெய்துவித்தா ரெனினு மமையும்.

தா மென்பது செய்யுட் சுவைபட நின்றது.

நச்சி :

இஃது, இரண்டாவதும் மூன்றாவதும் மயங்குமாறு கூறுகின்றது.

இ-ள்: ஓம்படைக் கிளவிக்கு — பாதுகாத்த லாகிய பொருண்மைக்கு, ஐயும் ஆனும் தாம் பிரிவு இல — இரண்டாவதும் மூன்றாவதும் ஒத்த உரிமைய, [1]தொக வரு காலை — வேற்றுமை தொக்கவழி, எ-று.

உ-ம்: புலி போற்றி வா, என்புழிப் புலியைப் போற்றி வா, என விரியும்வழிப் புலியானுய ஏதத்தைப் போற்றி வா, என இரண் டுருபும் பொருளும் ஒப்ப விரிந்துழி, இரண்டும் மயங்கியவாறு காண்க.

இன் உருபு பிரிவுடைத்தாய், புலியிற் போற்றி வா, எனச் சிறுபான்மை வரும்.

கல் :

என் னுதலிற்றோ வெனின், இதுவும் இரண்டாவதும் மூன்றாவதும் ஒத்த உரிமைய தொகைக்கண் வருங் காலத்து, என்றவாறு.

உ-ம்: புலி போற்றி வா வாழி யைய வென்புழிப் [2]புலியைப் போற்றி வா, எனவும், புலியானுய வேதம் போற்றி வா, எனவும் விரியும் என்பது. புலி என்றது புலியான் வரும் [3]ஏதத்தினை. ஓம்படை என்பது போற்றுதல்.

ஈண்டும் இரண்டாவது செயப்படு பொருளொடு ஏதுப் பொருள் படுகின்றது போலும். தொகை வருங் காலை, என்றதனுன் இவ் வேற்றுமை மயக்கமெல்லாந் தொக்குழியே மயங்கு மென்பது கொள்ளப்பட்டது. முன்னே ஆ னுருபினேடு இன் னுருபும் ஏதுப் பொருட் [4]டாகும் என் றோதப்பட்டமையின், [5]ஒன்றின முடித்தல் என்பதனுன் புலியிற் போற்றி வா, என ஐந்தாவதுங் கொள்க.

---

1. 'தொகவரு காலை,' எனப் பாடங் கொண்டுள்ளார். 2. [வோலிகூந்த வின்னல்ல தியாரு மிலன்] புலியை. 3. [அ] (ஏத)த்தினை 4. டா [காக்]கும். 5. ஒன் [றி] றின.

அரசு:

என்பது பாதுகாத்த லாகிய பொருண்மைக்கு இரண்டாவது மூன்றாவது மொத்த வுரிமைய, வேற்றுமை தொக்கவிடத்து.

உதா: புலி போற்றி வா, என்புழி, புலியைப் போற்றி வாவென்று விரிப்பினு மமையும்.

'புலிபோற்றி வாவாழி யைய ஒலிகூந்த
லின்னல தியாரு மிலள்: இதனுள்ளுங் காண்க.

94. ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்
கேழு மாகு முறைநிலத் தான. (15)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஆறாவதனோடு ஏழாவதன் மயக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஆறாவதனோடு எடுத் தோதப்பட்ட வாழ்ச்சிப் பொருட்கு ஏழாவதும் ஆம், உறையும் நில மாகலான், என்றவாறு.

வரலாறு: காட்டது யானை, என்புழிக் காட்டுள் யானை, என்று மாம், என்பது.

தெய்வ:

ஆறாவதனோடு ஏழாவது மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆறும் வேற்றுமைக்கண் வாழ்ச்சிக் கிழமைக்கு ஏழாவதும் ஆம், பொருள் உறையும் நிலத்துக்கண், எ-று. எனவே உறையும் பொருட்கண் வாராது, என்றவாறும்.

உறை பொருள்மேல் வந்தது: யானையது காடு. உறையும் நிலத்துக்கண் வந்தது: காட்டது யானை. அது காட்டுள்யானை, என வரும்.

சேனா: (வாழ்தற் பொருளில்)

இ-ள்: ஆறும் வேற்றுமைக்கண் ஓதிய வாழ்ச்சிக் கிழமைக்கு உறை நிலத்தின்கண் ஏழாவதும் வரும், எ-று.

காட் டியானை, என்பது காட்ட தியானை யென விரிதலே யன்றிக் காட்டின்கண் யானை யெனச் சிறுபான்மை ஏழாவது விரியினு மமையு மென்றவாறு.

யானைக் காடு, நம்பி யூர், என்பன வாழ்ச்சிக் கிழமைப் பொருள வாயினும், ஆண் டேழாவது மயங்கா தென்றற்கு 'உறைநிலத் தான' வென்றார். எனவே, உறை நிலப் பெயர் பின்மொழி யாய வழியது இம் மயக்க மென்பதாம்.

நச்சி:

இஃது, ஆறாவதும் ஏழாவதும் மயங்குமாறு கூறுகின்றது.

இ-ள்: ஆறன் மருங்கின் வாழ்ச்சிக் கிழமைக்கு - ஆறும் வேற்றுமைக்கண் ஓதிய வாழ்ச்சிக் கிழமைக்கு, உறை நிலத்து ஆன ஏழும் ஆகும் - உறை நிலப் பெயர் பின்மொழி யாயவழி ஏழாவதும் வரும், எ-று.

உ-ம்: காட்டது யானை; காட்டின்கண் யானை, என வரும். அந் நிலத்து வாழ்வதனை அதனது எனப்படும், அது பற்றுக்கோடாக உண்டாய், அது இன்றி விடின் தான் வாழ்தல் இல்லாமையின். 'யானைக் காடு' என்பது உறை நிலப் பெயர் முன்மொழியாய் வருதலின், 'யானைக்கண் காடு' என ஏழ னுருபு விரியா தாயிற்று: இது பொருள் மயக்கம்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், ஆறாவதனோடு ஏழாவதும் மயங்குமா றுணர்த்த னுதலிற்று.

இ-ள்: ஆறாவதனிடத்து வாழ்ச்சி யென்னும் உரிமைக்கு ஏழாவதும் ஆகும், யாண்டோ வெனின், ஆண் டஃ துறை நிலத்துக்கண், என்றவாறு.

உ-ம்: காட் டியானை; காட்ட தியானை; காட்டின்கண் யானை யென விரியும்.

'உறைநிலத் தான' என்றதனால் உறையா நில மாயக்கால் [1]ஆறாவதன்கண் வந்த தாகாது ஏழாவது தானே யாம், என்ற வாறு. அஃது ஊருள் யானையாய்க் காட்டுள் மேய விட்டதனைக் காட் டியானை யென்னும்வழிக் கொள்க.

---

1. ஆறுவத (த) ன்.

மற் றிஃது வாழ்ச்சியும் [1]ஆறன் மருங்கின் வாழ்ச்சி யாயினவா றென்னை, யஃ தியானைக் கா டென்ப தன்றே. ஆண்டு யானையுட் கா டென வாகாதா லெனின், யானைக் [2]காட்டின்கண் வாழ்தலால் உடைமை யாயிற் றன்றே. அதனாற் காட் டியானை யென அக் காட்டிற்கு யானையை உறுப்பாகக் கூறும்வழி வாழ்த லடியாக நின்ற தாகலின், அதனையும் வாழ்ச்சிக் கிழமை யென்று கூறியவாறு போலும். அதனாற் போலு மென்றுவது சிறுபான்மை, என்றவாறு.

அரசு:

என்பது ஆறும் வேற்றுமைக் கோதிய வாழ்ச்சிக் கிழமைக்கு உறைநிலப் பெயர் நிலைமொழி யாயவழி யேழாவது வரும்.

உதா: காட்ட தியானை; காட்டுள் யானை, என வரும். அந்நிலத்து வாழ்தலி னதன தெனப்படும். அது பற்றுக் கோடாக உண்டா யஃ தின்றிவிடின் வாழ்த லில்லாமையி னென்பது.

95. குத்தொக வருஉங் கொடையெதிர் கிளவி
யப்பொரு ளாறற் குரித்து மாகும். (16)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், நான்காவதன் பொருள் ஆறுவதற்குச் செல்லுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: நான்காம் வேற்றுமை தொக்குக் கொடை யெதிர்ந்து நின்றவழி ஆறுவது சொல்லவும் அமையும், என்றவாறு.

வரலாறு: நாகர் பலி, என்பது, ஆண்டு, நாகர்க்குப் பலி, என நான்காவது தொக்கு நின்றது; அந் நிலைக்கண் நாகரது பலி, என ஆறுவதும் ஆக, என்றவாறு.

கொடை எதிர்தல் என்பது விழுப்ப முடையாரை நுதலி யக்காற் கொண்டு வைத்து விரும்பிக் கொடுத்தல். நாகர் பலி என்பது அவர்க்குத் திரி பில்லாமையினான், நாகரது பலி. என உடைமைக் கிழமை செப்ப லாயிற்று, என்பது கருத்து.

1. ஆ[ர](ற)ன் 2. காட்(டி)[த]ன் கண்.

**தெய்வ:**

நான்காவதோடு ஆருவது மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள்:** நான்காம் உருபு தொக எதிர்காலம் பற்றிவரும் கொடைப் பொருண்மை ஆருவது விரித்தற்கு உரித்தும் ஆகும், எ-று.

**உ-ம்:** 'தேவர் பலி' என்பது 'தேவர்க்கு நோக்கின பலி', என விரிதலே யன்றித் 'தேவரது பலி,' எனவும் விரியும்.

**சேனு:** (கொடைப் பொருளில்)

**இ-ள்:** குவ் வென்னு முருபு தொக வருங் கொடையெதிர் கிளவியாகிய தொகையினது கொடை யெதிர்த லாகிய அப் பொருண்மை ஆரும் வேற்றுமைக் குரித்து மாம், எ-று.

நாகர் பலி, என்பது நாகர்க்கு நேர்ந்த பலி யென விரிதலே யன்றி, நாகரது பலி யென விரியினு மமையு மென்றவாறு.

'கொடை யெதிர் கிளவி' யென்பதற்குத் தருசொல் வருசொற் குரைத்த துரைக்க.

கொடையெதிர்தல் கொடையை விரும்பி மேற்கோடல்.

நாகர்க்குக் கொடுத்தலே விரும்பி மேற்கொண்டவழித் திரிபின்றி அவர்க் கஃ துடைமை யாதலின், கிழமைப் பொருட் குரிய உருபாற் கூறினு மமையு மென்றவாறு.

**நச்சி:**

இது, நான்காவதன் பொருள் ஆருவதற்குச் செல்லும், என்கின்றது.

**இ-ள்:** குத் தொக வரூஉம் கொடை எதிர் கிளவி — நான்கன் உருபு தொக வரும் கொடையை விரும்பி மேற்கோடலை உணர்த்தும் தொகைச் சொல்லினது, அப் பொருள் — அக் கொடை எதிர்த லாகிய அப் பொருண்மை, ஆறற்கு உரித்தும் ஆகும் — ஆரும் வேற்றுமைக்கு உரித்து மாம், எ-று.

**உ-ம்:** நாகர் பலி, என்பது நாகர்க்கு நேர்ந்த பலி; நாகரது பலி, என விரியும். 'நாகர்க்கு நேர்ந்த பலி, எனவே, பிறர்க்கு ஆகாத பலி அவர் உடைமை ஆயிற்று ஆதலின், ஆருவதும்

உரித்தாகப் பெற்றது. சாத்தற்கு நேர்ந்த சோறு, என்புழி அது பிறர்க்கும் ஆதலின், ஆண்டு ஆருவது ஏலாது. தெய்வம் அல்லாதாரிலும் சிறந்தார்க்கு நேர்ந்ததேல், ஆண்டும் ஆருவதும் வரும், என்று உணர்க.

கல்:

என் னுதலிற்றோ வெனின் நான்காவதன் பொருள் ஆருவ தன்கட் செல்லுமா றுணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: குவ் வென்னும் வாய்பாடு [1]தொக வருகின்ற கொடைத் தொழிலை ஏற்றுக் கொண்டு நின்ற சொன் மயங்கு மாறு கூறின வப் பொருண்மை ஆருவ துடைமைப் பொரு ளாதற் [2]குரித்து மாம், என்றவாறு.

உ-ம்: நாகர் பலி, என்பது நாகர்க்குப் பலி; நாகரது பலி, என விரியும்.

கொடைக் கிளவி யென்றது 'எதிர் கிளவி' என்றதனுன் இவ்வாறு மயங்குவது எதிர் கிளவி யாயக்கால், அல்லாக்கான் மயங்காது, என்பது.

[3]எதிர்த லென்பது விருப்ப முடையாரை நுதலியக்காற் கொண்டு வைத்து விரும்பிக் கொடுப்பது. மற் றிது கொடை நிகழ்ந்ததின்மையின் நான்காவ தாயவா றென்னை யெனின், நிகழ்ந்தே யன்று கொடை; நிகழ்கின்றதும், நிகழ்வதும் பொருண்மை வகையாற் கொடை யெனப்படு மென்பது.

அரசு:

என்பது நான்காம் வேற்றுமைத் தொகைக்குக் கொடை யெதிர்ந்து நின்றவழி ஆருவது கொடுத்துச் சொல்லவும் அமையும்.

உதா: நாகர் பலி, நாகர்க்குப் பலி யென விரியும்; நாகரது பலி யென வாருவதுஉமாய் விரியும். நாகர் பலி, நாகர்க்கு நேர்ந்த பலி, எனவே பிறர்க் காகா தவ ருடைமை யாயிற்று. ஆகலி னுருவது முரித்தா யேற்றது. சாத்தற்கு நேர்ந்த சோ றென்புழி யது பிறர்க்கு மாதலின் ஆண்டு ஆருவ தேலாது. தெய்வ மல்லாத சிறந்தார்க்கு நேர்ந்ததே லாண்டும் ஆருவது வரினு மமையும்.

1. தொ[க்]க 2. கு[றி] (ரி)த்து 3. எதிர்த [ர] லென்பது.

96. அச்சக் கிளவிக் கைந்து மிரண்டு
மெச்ச மிலவே பொருள்வயி னுண. (17)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஐந்தாவதனோடு இரண்டாவதன் மயக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அச்சப் பொருண்மைக்கு ஐந்தாம் வேற்றுமையும் இரண்டாம் வேற்றுமையும் ஒத்த கிழமைய, என்றவாறு.

வரலாறு: புலியின் அஞ்சும்; புலியை அஞ்சும், என வரும்.

புலியை அஞ்சும், என்புழிப் புலி காரணமாக அஞ்சும், என மாறு கொள்க.

தெய்வ:

ஐந்தாவதும் இரண்டாவதும் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அச்சம் என்னும் பொருண்மைக்கு ஐந்தாவதும் இரண்டாவதும் பொருட் பக்கத்தான் ஒழி பில, எ-று. எனவே சொற் பக்கத்தான் ஏனை வேற்றுமையும் ஒழி பில, என்றவாறு.

உ-ம்: கள்ளரை அஞ்சும், என்பது செயப்படு பொருள் குறித்து நின்றது. கள்ளரின் அஞ்சும், என்பது பொருஉப் பொருளும், ஏதுவும் குறித்து நின்றது. இனிக் கள்ளரின் அஞ்சும்; கள்ளர்மாட்டு அஞ்சும், என வரின், அவை ஏதுக் குறித்து நிற்றலின் பொருள் வகையான் ஏது வாகி யடங்கின.

சேனு: (அச்சப் பொருளில்)

இ-ள்: அச்சப் பொருண்மைக்கு ஐந்தாம் வேற்றுமையும் இரண்டாம் வேற்றுமையும் ஒத்த கிழமைய, வேற்றுமை தொக அவற்றின் பொருள் நின்றவழி, எ-று.

பழி யஞ்சும், என்புழி, பழியி னஞ்சும்; பழியை யஞ்சும், என இரண்டும் ஒத்த கிழமையவாய் நின்றவா றறிக.

அஃதேல், ஒரு பொருட்கண் வரினன்றே மயக்கமாவது; இவை செயப்படு பொருளும் ஏதுவு மாகிய பொருள் வேறுபா டுடைய வாகலின் மயக்க மாமா றென்னை யெனின், அற்றன்று;

ஈண்டேது வாதலே அஞ்சப்படுதலாய் வேறன்றி நிற்றலின், ஒருபொருட்கண் வந்தனவே யாம்; அதனுன் மயக்கமா மென்பது.

நச்சி:

இஃது, ஐந்தாவதும் இரண்டாவதும் மயங்குமாறு கூறுகின்றது.

, இ-ள்: அச்சக் கிளவிக்கு - அச்சப் பொருள்மேல் வரும் சொல்லிற்கு, ஐந்தும் இரண்டும் எச்சம் இல - ஐந்தாவதும் இரண்டாவதும் ஒத்த உரிமைய, பொருள்வயி ஞன-வேற்றுமை தொக அவற்றின் பொருள் நின்றவழி, எ-று.

உ-ம்: பழி அஞ்சும், என்பது பழியின் அஞ்சும்; பழியை அஞ்சும், என வரும். கள்ளரின் அஞ்சும், என்பதற்கு, அவரின் மிக அஞ்சும், என்னும் பொருண்மையையும் தருமேனும், அப் பொருள் கொள்ளற்க; கள்ளரான் அஞ்சும், என்பதே கொள்க.

இஃது உருபும் பொருளும் மயங்கிற்று.

கல்:

என்ப தென் னுதலிற்றோ வெனின், ஐந்தாவதும், இரண் டாவது மயங்குமா றுணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: அஞ்சுத லென்னும் பொருண்மைக்கு ஐந்தாவதும் இரண்டாவதும் தம்மில் ஒத்த நிலைமைய, பொருள்படு மிடத் தென்றவாறு.

உ-ம்: புலி யஞ்சும், என்பது புலியி னஞ்சும்; புலியை யஞ்சும், என விரியும். அவ் வச்சங் கள்ளரின் மிக அஞ்சும், என்னும் வழக்கிற் பொருள்படு நிலைமையும் உண்டு; ஈண்டு அது கொள்ளற்க.

'ஓம்படை' என்பதற்கட் [1]கூறிய வற்றுற் புலியான் அஞ்சும், என மூன்றுவதன் வரவுங் கொள்க.

அரசு:

என்பது அச்சப் பொருளுக்கு ஐந்தாவது மிரண்டாவது மொத்த கிழமைய், வேற்றுமை தொக அவற்றின் பொரு ணின்றவழி.

---

1. கூறி [யாய]ய வத்தாற்.

உதா: புலி யஞ்சு மென்பது, புலியி னஞ்சும்; புலியை யஞ்சும், என விரண்டு மேற்று விரியும்.

*எச்சமில மிகுதி குறைவு படா திரண்டு மொக்கும். கள்ளரி னஞ்சு மென்பது அவரினு மிக வஞ்சு மென்பதூஉம் படு மது கொள்ளற்க; கள்ளரினை வேத மஞ்சு மென்பது கொள்க.

97. அன்ன பிறவுந் தொன்னெறி பிழையா
துருபினும் பொருளினும் மெய்தடு மாறி
யிருவயி னிலையும் வேற்றுமை யெல்லாந்
திரிபிட னிலவே தெரியு மோர்க்கே. (18)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், சொல்லப்பட்ட மயக்கத்திற்குப் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

உரை; அவை போல்வனவும் பிறவும் மேற்கொண்டு அடிப்பட வழங்கும் வழக்கொடு மலையாது உருபும் பொருளும் தம்முள் ஒன்றனோ டொன்று தடுமாறி அவ் விரண்டிடத்தும் நிலைபெற்ற வேறுபாடு வழு என்று களையப்படா, ஆராயு மிடத்து, என்றவாறு.

'உருபினும் பொருளினும் மெய் தடுமாறி,' என்பது, யாண்டு உருபு சென்றது ஆண்டுப் பொருள் சென்றது, எனப் படும்; யாண்டுப் பொருள் சென்றது ஆண்டு உருபு சென்றது, எனப்படும், என்பது.

பிறவும் என்றதனல், முறைக் குத்தினர், என்புழி, முறையிற் குத்தினர், என்றும், முறையாற் குத்தினர், என்றும்; கடலொடு கா டொட்டாது, என்புழிக், கடலைக் கா டொட்டாது, என்றும் வருவன கொள்க.

தெய்வ:

வேற்றுமை மயக்கத்திற்குப் புறனடை யுணர்த்துதல் நுதலிற்று.

---

* எச்சமில் மிகுதிக் குறைவு : திருத்தம்.

இ-ள்: மேற்சொல்லப்பட்டன போல்வன பிறவும் ஆகித் தொன்னெறியிற் றப்பாது, உருபானும் பொருளானும் இயல்பு தடுமாறி, இரண் டிடத்தும் நிலைபெறும் வேற்றுமைச் சொல்லெல்லாம் ஆராய்ந்து உணர்வார்க்குப் பொருள் திரியும் இடன் இல, எ—று.

என்றது, பரந்துபட்ட சொல்லெல்லாம் எடுத்து ஓதப்படாமையின், ஈண்டு எடுத்து ஓதப்பட்ட நிகரன வாகி உயர்ந்தோர் வழக்கினும், சான்றோர் செய்யுளினும் வரூஉம் வேற்றுமை மயக்கம் எல்லாம் இதுவே ஓத்தாகப் பொருள் உரைத்துக் கொள்க, என்றவா ருயிற்று.

உ-ம்: நோயின் நீங்கினான், என்பது நோயை நீங்கினான், எனவும், சாத்தனை வெகுண்டான், என்பது, சாத்தனொடு வெகுண்டான், எனவும் ஆம்.

இத்துணையும் ஒரு வேற்றுமைக் குரிய பொருள் மற்றொரு வேற்றுமைக்கண்ணும் மயங்கல் கூறப்பட்டது.

சேனா: (வேற்றுமை மயக்கத்திற்கு வழக்கு முதன்மை.)

இ-ள்: மேல் மயக்கங் கூறப்பட்ட வேற்றுமையே யன்றி, அவை போல்வன பிறவும், தொன்றுதொட்டு வரும் வழக்கிற் பிழையாது, உருபானும் பொருளானும் ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்று, பிறி தொன்றன் பொருளுந் தன் பொருளு மாகிய ஈரிடத்தும் நிலைபெறும் வேற்றுமை யெல்லாந் திரி புடையவல்ல தெரிந் துணர்வோர்க்கு, எ—று.

பொதுவகையான் இருவயி னிலையு மென்றாரேனும், வழி போயினா ரெல்லாங் கூறை கோட்பட்டார் என்றவழிக் கூறை கோட்படுதல் கடவுளரை யொழித்து ஏனையோர்க்கே யாயின வாறு போல ஏதுப் பொருட்கண் வரும் மூன்றாவதும் ஐந்தாவதும் ஒரு பொருளே பற்றி நிற்றலின் இருவயி னிலையற் கேலாமையான், அவற்றை யொழித்து அஃ தேனையவற்றிற்கே யாம். என்னை? ஏனைய தன் பொருளிற் றீராது பிறி தொன்றன் பொருட்கட் சேற லுடைமையான் இருவயி னிலையற் கேற்றவா றறிக.

அன்ன பிறவாவன: நோயி னீங்கினான்; நோயை நீங்கினான், எனவும், சாத்தனை வெகுண்டான்; சாத்தனொடு வெகுண்டான்,

எனவும், முறையாற் குத்துங் குத்து; முறையிற் குத்துங் குத்து, எனவும், கடலொடு கா டொட்டாது; கடலைக் கா டொட்டாது, எனவும் வருவனவும் பிறவு மாம்.

இக் காலத்துச் சிதைந்து வழங்கும் மயக்கமு முண்மையால், தொன்னெறி பிழையாதன ஆராய்ந் துணரப்படு மென்பார், 'தெரியு மோர்க்கு' என்றார்.

நச்சி :

இது, வேற்றுமை மயக்கத்திற்குப் புறனடை.

இ-ள்: அன்ன பிறவும் – மேல் வேற்றுமை மயக்கம் கூறப்பட்ட வேற்றுமையே அன்றி அவை போல்வன பிறவும், தொன்னெறி பிழையாது – தொன்றுதொட்டு வரும் வழக்கிற் பிழையாது, உருபினும் பொருளினும் மெய் தடுமாறி — உருபானும் பொருளானும் ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்று, இருவயின் நிலையும் வேற்றுமை எல்லாம் – பிறிது ஒன்றன் பொருளும் தன் பொருளு மாகிய ஈரிடத்தும் நிலை பெறும் வேற்றுமை எல்லாம், திரிபிடன் இலவே தெரியு மோர்க்கே – திரிபு உடையவல்ல தெரிந்து உணர்வோர்க்கு, எ–று.

ஏதுப் பொருட்கண் வரும் மூன்றாவதற்கும் ஐந்தாவதற்கும் இருவயின் நிற்றல் இன்மையின், அவற்றை ஒழித்து, ஏனையவற்றிற்கே இருவயின் நிற்றல் கொள்க. என்னை? வழிபோயினார் எல்லாரும் கூறை கோட்பட்டார், என்றவழிக் கடவுளரை ஒழித்து ஏனையோர்க்கே அக் கூறை கோட்படுதல் எய்தினாற் போல.

'அன்ன பிற' ஆவன; நோயின் நீங்கினான்; நோயை நீங்கினான்; சாத்தனை வெகுண்டான்; சாத்தனொடு வெகுண்டான்; முறையாற் குத்தும் குத்து; முறையிற் குத்தும் குத்து, என வரும். இது முறைக் குத்துக் குத்தினான், எனத் தொக்கு நின்றதன்கண் இரண்டும் விரிந்தன. கடலொடு காடு ஒட்டாது; கடலைக் காடு ஒட்டாது; தந்தையொடு சூளுற்றான்; தந்தையைச் சூளுற்றான் என இவை தொகையாயும், தொகையின்றியும் மயங்கி நிற்குமாறு உணர்க.

கல்:

என்ப தென் னுதலிற்றோ வேனின், வேற்றுமை மயக்கத் திற்குப் புறநடை யுணர்த்த னுதலிற்று.

இ-ள்: மேல் எடுத் தோதப்பட்ட அத் [1] தன்மையனவும் பிறவு மாகிய பழைதாகிய நெறிமுறைமையினைப் பிழையாது உருபானும் பொருளானும் தத்தம் வடிவு தடுமாறித் [2] தமக்குரிய விடம் பிறிதி னிடமாகிய அவ் விரண்டிடத்து நிலைபெறுகின்ற வேற்றுமையுள் எல்லாம் அமையா வழு வென்று கழிக்கப்படு தலைத் *தம்மிடத் துடையவல்ல, ஆராய்வார்க்கு, என்றவாறு.

இதனாற் சொல்லியது வேற்றுமை யோத்தின்கண் இன்ன பொருட் கின்ன துரித் தென எடுத் தோதப்பட்ட வேற்றுமைகள் அவ்வப் பொருட் குரியவாய் நில்லாது பிற பொருட்கண்ணுஞ் சென்று மயங்குத [3] லுண்மை கண்டு, இவை வழு வன்றோ வென்று வினய மாணாக்கற்கு, அவை மேற்றொட்டுப் பிற பொருண்மேலும் வழங்கி வருதலான் வழக்கு முடிவினை ஆராய்ந்த [4] முதனூ லாசிரியர்களும் வேற்றுமை வழு வென்று புறத்திட்டார் அல்லர். அதனானே, யானும் அம் முடிபே [5] நேர்ந்தேன், என்பது கூறியவாறு. இதுவும் மரபு வழு வமைதி.

அன்ன பிறவும் என்றதனாற் கொள்வனவற்றிற் குதாரணம்: முறைக் குத்துக் குத்தினான், என்ப தோர் தொகை, முறையாற் குத்தினான், என மூன்றாவதும் முறையிற் குத்தினான், என வைந்தாவதும் ஏதுப் பொருட்கண் மயங்கி விரிந்தது.

இனித் தொகை யன்றி நின்று, கடலொடு கா டொட்டாது, என்னும் வழக்கின்கட் கடலைக் கா டொட்டாது, என இரண் டாவது மயங்கி வந்தது. இன்னுந் தொகையல்லாத, தந்தை யொடு சூளுற்றான், என்னும் வழக்கின்கண், தந்தையைச் சூளுற்றான், என இரண்டாவது மயங்கி வந்தது. பிறவும் அன்ன.

அரசு:

என்பது மேன் மயக்கங் கூறப்பட்ட வேற்றுமையே யன்றி யவை போல்வன பிறவுந் தொன்றுதொட்டு வரும், வழக்கிற் பிழையா துருபானும் பொருளானு மொன்ற னிலைக்களத்து

1. தன்மை[ெ]யனவும் 2. தனக்கு[றி] (ரி)ய 3. லு[டி](ண்)மை
4. முத[நூ](னூ)லாசிரியர் 5. நேர்ந்தே[ர]ன் * தன்னிடத் : திருத்தம்

ஒன்று சென்று பிறி தொன்றன் பொருளுந் தன் பொருளு மாகிய வீ ரிடத்து நிலைபெறும் வேற்றுமை யெல்லாந் திரி புடையவல்ல, தெரிந் துணர்வோர்க்கு.

உதா: புலி போற்றி வா வென்பது, புலியைப் போற்றி வா வென இரண்டாவதன் உருபும் அதன் பொருளுஞ் சென்றது. புலியா னுயை வேதம் போற்றி வா வென, மூன்ருவத னுருபும் அதன் பொருளுஞ் சென்றது. நம்பிக்கு மக னென்புழி, 'உருபே [1]'சென்ற தவ் வுருபின் பொருள் சென்ற தில்லை யெனின், 'உருபினும் பொருளினு மெய்தடு மாறி' யென்றதனு லுருபு சென்றவழி அவ் வுருபின் பொருளுஞ் செல்லு மென்றே கொள்க.

பிறவு மென்றதனுல், நோயி னீங்கினுன்; நோயை நீங்கினுன்; சாத்தனை வெகுண்டான், எனவும், முறைக் குத்துக் குத்தினுன், என்பது, முறையிற் குத்தினுன்; முறையாற் குத்தினுன், என விரியும். கடலொடு கா டொட்டாது; கடலைக் கா டொட்டாது. தந்தையொடு சூளுற்ருன்; தந்தையைச் சூளுற்ருன், என்றும் இவை யெல்லாந் தம் முருபினுனும் பொருளினுனு முடன் சென்று தடுமாறி யொன்றன் நிலைக்களத் தொன்று சென்றவா றுணர்க.

98. உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி
யொருசொன் னடைய பொருள்சென் மருங்கே. (19)

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்ருே வெனின், பல உருபு தொடர்ந்து அடுக்கி நின்றவழிப் படுவ தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: பல உருபு தொடர்ந்து அடுக்கி நின்ற விடத்து இறுதி யுருபு முடிந்த முடிவே ஒழிந்தனவற்றிற்கும் முடி பாக, என்றவாறு.

வரலாறு: யானையது கோட்டை நுனிக்கட் குறைத்தான், என வரும்.

இரண்டாம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும், குறைத்தான், என்னும் ஒரு வினையானே முடிந்தவா றறிக. தினையிற் கிளியைக் கடியும், என்பதும் அது.

1. சென்றவ் வுருபின்: திருத்தம்.

தெய்வ:

ஓர் உருபு பல தொடர்ந்து அடுக்கியவழி வரும் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

ஒரு சொல் பல அடுக்கி வரும்வழி பெய ரடுக்கு, வேற்றுமை யடுக்கு, முற்றுச்சொல் லடுக்கு, பெயரெச்ச அடுக்கு, வினை யெச்ச அடுக்கு, இடைச்சொல் லடுக்கு, உரிச்சொல் லடுக்கு, எனப் பல வகைப்படும். அவற்றுள், வேற்றுமை யடுக்காவது ஓ ருருபு அடுக்கி வருதலும், பல உருபு அடுக்கி வருதலும் என இரு வகைப்படும். அவற்றுள், ஓ ருருபு அடுக்கி வருதல், ஒரு பொருண்மேல் அடுக்கி வருதலும், பல பொருண்மேல் அடுக்கி வருதலும் என இரு வகைப்படும். அவ் விரு வகையும் இச் சூத்திரத்தாற் கூறப்படும்.

இ-ள்: உருபு தொடர்ந்து அடுக்கிய வேற்றுமைச் சொல் ஒருசொல் நடைய வாம், முடிக்கும் பொருண்மை செல்வுழி, எ–று.

ஓர் உருபு ஒரு வினையான் முடியாது, பல உருபு ஒரு வினையான் முடியும் என்றதனுன், வழு வமைதி கூறியவாறும் ஆம்.

தேம்பைந்தார் மாறனைத் தென்னர் பெருமானை
வேந்தனை வேந்தர்மண் கொண்டானை — யாஞ்சிறிதும்
அங்கோல் வளைகவர்ந்தான் என்னலும் ஆகுமோ
செங்கோல் சிறுமை யுற.

இதனுள் ஐகார உருபு பல அடுக்கி ஒரு பொருட்கண் வந்து, 'வளைகவர்ந்தான் என்னலும் ஆகுமோ', என்பதனோடு முடிந்த வாறு கண்டு கொள்க.

கொல்லிப் பொருப்பனுற் கொங்கர் பெருமானுல்
வில்லிற் பகைதடிந்த வேந்தனுல் — அல்லியந்தார்க்
கோதையால் வையங் குளிர் தூங்க என்கொலோ
பேதையார் எய்துவது பேது.

இதுவும் மூன்ருவது அடுக்கி வந்து, 'குளிர் தூங்க', என்ப னோடு முடிந்தது.

"வாராய்நீ புறமாற வருந்திய மேனியாட்கு
ஆரிருட் டுணையாகி யசைவளி யலைக்குமே
கமழ்தண்டா துதிர்ந்துக வூழுற்ற கோடல்வீ
யிதழ்சோருங் குலைபோல விறைநீவு வளையாட்கு."
(கலி - நெய்: 4)

இதனுள் நான்காவ துடன் அடுக்கி வந்து, 'அலைக்கும்' என்பதனோடு முடிந்தது.

வீரப் புலியானின் வெல்போர் வளவனிற்
கோரப் பரியுறந்தைக் கோமானின் — ஆரலங்கல்
மற்படுதோட் செம்பியனின் மல்லன் மணிநேரி
வெற்பனிற் றீர்ந்துளவோ வேந்து.

இதனுள் ஐந்தாவது பல வடுக்கி வந்து, 'தீர்ந்து' என்பதனோடு முடிந்தது.

பெற்றி திரிந்து பெருவறங் கூரினும்
மற்றுயிர்கள் நோயால் வருந்தினுங் - கொற்றக்
குடையான்கண் நீதிபுரி கோலான்கண் ஆழிப்
படையான்கண் நிற்கும் பழி.

இதனுள் ஏழாவது பல வடுக்கி வந்து, 'நிற்கும்' என்பதனோடு முடிந்தது. இவை ஒரு பொருண்மேல் ஓருருபு அடுக்கி வந்தன. உழவை, வாணிகத்தைச் செய்யும், எனவும்; சோற்றால், தண்ணீரால் வயிறு நிறைக்கும், எனவும்; அந்தணர்க்குச் சான்றோர்க்கு, எனவும்; நிலத்தினும், வானினும் பெரிது, எனவும்; நல்லாற்றது, தீயாற்றது, என்னுது கொள்ளும், எனவும்; அரங்கிலே அறையிலே நடிக்கும், எனவும்; இவ்வாறு வருவன பல பெயர்க்கண் ஓருருபு வந்து ஒரு சொல்லான் முற்றுப்பெற்றன.

துணிநீராற் றூமதி நாளா லணிபெற
ஈன்றவ டிதலைபோ லீர்பெய்யுந் தளிரொடும்
ஆன்றவ ரடக்கம்போல் அலர்ச்செல்லாச் சினையொடும்
வல்லவர் யாழ்போல வண்டார்க்கும் புதலொடு
நல்லவர் நுடக்கம்போல் நயம்வந்த கொம்பொடும்
உணர்ந்தவர் ஈகைபோல் இணருழ்த்த மரத்தொடும்
புணர்ந்தவர் முயக்கம்போற் புரிவுற்ற கொடியொடு
நயந்தார்க்கோ நல்லைமன் இளவேனில் (கலி. 32)

என்பதனுள் ஆலும், ஓடும் பல அடுக்கி வந்து, 'நல்லை', என்பதனோடு முடிந்தன.

சேனா: (அவ்வுருபுகளின் இயல்புகள் : உருபு தொடர்ந் தடுக்கி வருதல்.)

இ-ள்: பல வுருபுந் தம்முட் டொடர்ந் தடுக்கி வந்த வேற்றுமைச் சொற்க ளெல்லாம் முடிக்குஞ் சொல் லொன்றனான் முற்றுப்பெற்று நடக்கும், அவ் வொன்றனாற் பொருள் செல்லு மிடத்து, எ-று.

ஈண்டு, வேற்றுமைக் கிளவி யென்றது, வேற்றுமை யுருபை யிறுதியாக வுடைய சொல்லை.

எ-டு: 'என்னொடு நின்னொடுஞ் சூழாது' எனவும்,
'அந்தணர் நூற்கும் அறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்' (குறள் - 543)
எனவும் வரும்.

சாத்தன் றாயைக் காதலன்; நாய் தேவ னுயிற்று, என்புழித் தாயை, தேவன் என்பன, காதலன், ஆயிற் றென்னும் பயனிலைக்கு அடையாய் இடைநின்றாற் போல, கோட்டை நுனிக்கட் குறைத்தான்; தினையிற் கிளியைக் கடியும், என்புழி, நுனிக்கண், கிளியை யென்பன, குறைத்தான், கடியு மென்னும் முடிக்குஞ் சொல்லிற்கு அடையாய் இடைநின்ற வாகலான், அவை யடுக்கன்மையின், அவை யுதாரண மாதல் உரையாசிரியர் கருத்தன் றென்க.

குழையைச் சாத்தனது கள்ளரின், என இவ்வாறு தொடராது வருவனவற்றை நீக்குதற்கு, உருபு தொடர்ந் தடுக்கிய வென்றும், நீ தந்த சோற்றையுங் கூறையையு முண்டுடுத் திருந்தேம், என இன்னோ ரன்னுழி ஒருசொல்லாற் பொருள் செல்லாமையின் அவற்றை நீக்குதற்குப் பொருள் சென் மருங் கென்றுங் கூறினார். பிறவு மன்ன.

நச்சி:

இது, பல உருபு தொடர்ந்து அடுக்கியவழிப் படுவதோர் இலக்கணம் கூறுகின்றது.

இ-ள்: உருபு தொடர்ந்து அடுக்கிய வேற்றுமைக் கிளவி- ஓர் உருபும் பல உருபும் தம்முள் தொடர்ந்து அடுக்கி வந்த வேற்றுமை உருபை இறுதியாக உடைய சொற்கள், ஒரு சொல் நடைய-முடிக்கும் சொல் ஒன்றனான் முற்றுப் பெற்று நடக்கும், பொருள் செல் மருங்கே-அவ் வொன்றனால் பொருள் செல்லும் பக்கத்து, எ-று.

உ-ம்: என்னொடும் நின்னொடும் சூழாது (அகம் 128: 7)

துடுப்பெனப் புரையுநின் திரண்டநேர் அரிமுன்கைச்
சுடர்விரி *வினைவாய்ந்த தூதையும் பாவையும்,
விளையாட ......... (கலி. 59: 4-6)

என்புழி, முன்கையால் தூதையாலும் பாவையாலும் விளையாட, என அடுக்கி முடிந்தது. 'அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்' (குறள் – 543) யானையது கோட்டை நுனிக்கண் குறைத்தான், என வரும்.

இச் சூத்திரத்தின் கருத்து, முன்னர்ப் பல உருபு தொடர்ந்த சொற்கள் ஒரு சொல்லான் முடிதலும், ஓர் உருபு தொடர்ச்சியும் ஒரு சொல்லான் முடிதலும் கூறுதல் ஆயிற்று.

கோட்டை நுனிக்கண் குறைத்தான், என்புழி, முன் மொழிக்கண் பொருள் நிற்றலானும், தினையிற் கிளியைக் கடியும், என்புழிப் பின்மொழிக்கண் பொருள் நிற்றலானும், இவற்றை அடை யென்று கூறுதல் பொருந்தாது, என்று உணர்க.

கல்:

என்பது என் நுதலிற்றோ வெனின், பல வுருபு தொடர்ந் தடுக்கியவழிப் படுவதோர் இலக்கண முணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: ஐம் முதலிய அறுவகை யுருபும் தம் பொருட் டொடர்ச்சிபட அடுக்கி வருகின்ற அவ் வேற்றுமைப் பொருண் மையினை யுடைய சொற்கள் அவ் வடுக்கின் கடைக்க ணின்ற வேற்றுமைச் சொல்லிற்கு முடி பாகிய சொல்லினையே தமக்கு முடிபாக உடைய, பொருள்படுத்து மிடத்து, என்றவாறு.

உ-ம்: யானையது கோட்டை நுனிக்கட் குறைத்தான்: யானையது, என்பது கோ டென்பதனோடு தற்கிழமைப் பட்டு ஆண்டே முடிந்தது. நுனிக்கண், என்னும் ஏழாவது குறைத் தான், என்பதனோடு முடிந்தது. இடைக்க ணின்ற கோட்டை யென்னும் இரண்டாவது முடிபு இன்றி நின்றது. அவ்வாறு தனக் குரிய தோர் முடிபின்றே யெனினும் ஏழாவதன் முடி போடு முடிந்ததாகக் கொள்ளப்படும், அவ்வாறு பொருள்பட

* வரிவாய்த்த: வே. பா.

சின்றமையான், என்பது. 'தினையிற் கிளியைக் கடியும்', என்பது. தினையி னென்னும் ஐந்தாவது, கிளியை யென்னும் இரண்டாவதன் வினையொடு முடிந்தது. பிறவு மன்ன.

அதிகாரத்தான் இதுவு மோர் மரபு வழு வமைதி யென வுணர்க.

அரசு:

என்பது பல வுருபுந் தொடர்ந் தடுக்கிய வேற்றுமைச் சொற்க ளிறுதி யுருபு முடிந்த முடிபே தமக்கு முடிபாக வுடைய பொருள் செல்லு மிடத்து.

உதா: யானையது கோட்டை நுனிக்கட் குறைத்தான், என வரும். உருபு தொடர்ந் தடுக்கிய வென்றதனால் ஓ ருருபு தொடர்ந் தடுக்கலுங் கொள்க.

உதா: நின்னோடு என்னோடு சூழாது, எனவும், அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய், எனவும் வரும்.

99. இறுதியு மிடையு மெல்லா வுருபு
நெறிபடு பொருள்வயி னிலவுதல் வரையார். (20)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், உருபு நிற்கும் இட வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இறுதி: கடந்தான் நிலத்தை; வந்தான் சாத்தனொடு; கொடுத்தான் சாத்தற்கு; வலியான் சாத்தனின்; ஆடை சாத்தனது; இருந்தான் குன்றத்துக்கண், என வரும்.

இனி, இடை வருமாறு: நிலத்தைக் கடந்தான்; சாத்தனொடு வந்தான்; சாத்தற்குக் கொடுக்கும்; சாத்தனின் வலியன்; சாத்தனது ஆடை; குன்றத்துக்கண் இருந்தான், என வரும்.

இனி, நெறிப்படுத்துதல் என்பது வழக்குப்படுத்துதல்; வழக்குப்படு வழியே அவை நிலை*யுடைய வாவது, அல்லாத வழி அவை நில்லா என்பது. அவ்வழிக் கொண்டான், என்புழி, அவ்வழிக்கட் கொண்டான் என வேண்டுவது, என்றவாறு. பிறவும் அன்ன.

---

* யுடைத்தாவது : திருத்தம்.

தெய்வ:

பல உருபு தொடர்ந்து அடுக்கி வருமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முதற்கண் நின்ற வேற்றுமை உருபே பொருளோடு முடிதலன்றி, இறுதிக்கண்ணும் எல்லா உருபும் விரவி வந்து முடிக்கும் பொருண்மைக்கண்ணே நிலைபெறுதல் நீக்கார், எ-று.

நெறிபடு பொருள் என்பது முதலும் இடையும் இறுதியும் நின்ற பலவகை உருபிற்கும் ஏற்புடைப் பொருள்.

உ-ம்: குயவன் குடத்தைத் திரிகையால் அரங்கின்கண் வனைந்தான், எனவும், சாத்தனது ஆடையை வலியினுற் காட்டின்கண் பறித்தான், எனவும் இறுதியும் இடையும் முதலும் நின்ற உருபெல்லாம் ஒரு வினையால் முடிந்தவாறு கண்டுகொள்க.

சேனு: (உருபு விரிந்து நிற்கும் இடம்.)

இ-ள்: வேற்றுமைத்தொடரிறுதிக்கண்ணும் அதனிடைநிலத்தும் ஆறுருபுந் தத்தமக் கோதிய பொருட்கண் நிற்றலை வரையார், எ-று.

எ-டு: கடந்தான் நிலத்தை; வந்தான் சாத்தனெடு; கொடுத்தான் சாத்தற்கு; வலியன் சாத்தனின்; இருந்தான் குன்றத்துக்கண், எனவும், நிலத்தைக் கடந்தான்; சாத்தனெடு வந்தான்; சாத்தற்குக் கொடுத்தான்; சாத்தனின் வலியன்; சாத்தன தாடை; குன்றத்துக்க ணிருந்தான், எனவும் வரும்.

'நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையா' ரெனவே, அப் பொருளுணர்த்தாக்கால் நிலவுதல் வரையப்படு மென்பதாம். அங்ஙனம் வரையப்படுவன யாவை யெனின், ஆருவதும் ஏழாவதும், சாத்தன தாடை; குன்றத்துக்கட் கூகை, என இடைநின்று தம் பொருளுணர்த்தினுற் போல, ஆடை சாத்தனது; கூகை குன்றத்துக்கண், என இறுதி நின்றவழி அப் பொருளுணர்த்தாமையான், அவ் வுருபுகள் ஆண்டு வரையப்படும்.

ஆறனுருபேற்ற பெயர் உருபொடு கூடிப் பெயராயும் வினைக்குறிப்பாயும் நிற்ற லுடைமையான், அந்நிலைமைக்கண் ஆடை சாத்தனது, என இறுதிக்கண்ணும் நிற்கு மென்பது.

இவ் வரையறை யுணர்த்துதற்கும், 'மெய்யுருபு தொகாஅ இறுதி யான' (சொல்-101) என, முன்ன ருணர்த்தப்படும் வரையறைக்கு இடம் படுத்தற்கும் 'ஈறு பெயர்க்காகும்' (சொல்-70) என் றோதப்பட்ட உருபு தம்மையே இறுதியு மிடையும் நிற்கு மென வகுத்துக் கூறினா ரென்பது.

நச்சி :

இஃது, உருபு நிற்கும் இடம் கூறுகின்றது.

இ-ள்: இறுதியும் இடையும் - வேற்றுமைத் தொடர் இறுதிக்கண்ணும் அதன் இடை நிலத்தும், எல்லா உருபும் - ஆறு உருபும், நெறிபடு பொருள்வயின் நிலவுதல் வரையார் - தத்தமக்கு ஓதிய பொருட்கள் நிற்றலை நீக்கார், கொள்வார் ஆசிரியர், எ-று.

இவற்றுள் இறுதிக்கண் நிற்பனவற்றின் ஆறன் உருபு இறுதிக்கண் நில்லாது; நின்றதேல், வினைக்குறிப் பாம், என்று உணர்க. இதற்காக அன்றே 'ஈறுபெயர்க்காகும் இயற்கைய' (வே-மை-ல். சூ 8) என்று ஓதிய அதனை மீட்டும் ஈண்டு "இறுதியும்' என்று வகுத்துக் கூறிற்று, என்று உணர்க.

ஆறன் உருபு ஒழிந்தவற்றிற்கு உதாரணம்: கடந்தான் நிலத்தை; வந்தான் சாத்தனொடு; கொடுத்தான் சாத்தற்கு; வலியன் சாத்தனின்; இருந்தான் குன்றத்துக்கண், என வரும்.

இனி இடை நிற்பன: நிலத்தைக் கடந்தான்; சாத்தனொடு வந்தான்; சாத்தற்குக் கொடுத்தான்; சாத்தனின் வலியன்; சாத்தனது ஆடை; குன்றத்துக்கண் இருந்தான், என வரும். "சாத்தனது ஆடை', என்புழி 'அது' என்பது பெயராய் நிற்கும். 'ஆடை சாத்தனது' என்புழி 'ஆடை' என்னும் உடைமைப் பெயர் எழுவாயாய்ச் 'சாத்தனது ஆயிற்று,' என்னும் பயனிலை யோடு முடிதலின், வினைக் குறிப்பு ஆயிற்று.

கல் :

என் னுதலிற்றோ வெனின், உருபு நிற்கு மிடங் கூறுத னுதலிற்று.

இரு பொருளி னிறுதிக் கண்ணும் அவ் விரு பொருளி னிடையின்கண்ணும் அறுவகை' வேற்றுமை யுருபு வழக்குப்படும் பொருளிடத்து நிலைபெறுதலை நீக்கார் ஆசிரியர், என்றவாறு.

உ-ம்: கடந்தா னிலத்தை; வந்தான் சாத்தனோடு; கொடுத்தான் சாத்தற்கு; வலியன் சாத்தனின்; ஆடை சாத்தனது; இருந்தான் குன்றத்துக்கண்: இவை இறுதிக்கண் வந்தன.

நிலத்தைக் கடந்தான்; சாத்தனொடு வந்தான்; சாத்தற்குக் கொடுத்தான்; சாத்தனின் வலியன்; சாத்தன தாடை; குன்றத்துக்கண் இருந்தான்: இவை இடையின்கண் வந்தன.

*மற்று 'ஈறு பெயர்க்காகும்' என்றவழி அடங்கிற்று பிறவெனின், [1]அஃ தொருசொற்கண் ணுருபு நிற்குமாற்றிற்குச் சொல்லியது; இஃது [2]இரு சொற்கண் உருபு நிற்குமாற்றிற்குச் சொல்லிய தென வுணர்க. அஃதேல், அவ் வொரு சொற்கண் நின்ற உருபினை அதன் முடிப்பாகி வருஞ் சொல்லோடு படுத்து நோக்க இரு சொற்கண் வந்ததா மென்பது சொல்லாமையும் அமையவும் பெறுமன்றோ வெனின், அவ்வா றுய்த் துணர்வதனையே இனி துணர்தற்பொருட்டாகவும், உருபு நோக்கி வருஞ் சொல் அவ் வுருபின் முன் னில்லாது பின் னிற்றன் மயக்க [3]நீர்மைத் தெனற்பொருட்டாகவும் ஈண்டு கூறினா ரென வுணர்க.

வரையா ரெனவே, வழு வுடைத் தென்பது போந்தது.

[4]நெறிபடு பொரு ளென்றதனால், இவ்வாறு இடையு மிறுதியும் உருபு நிற்பது உரு பேற்று வழங்கும் பெயர்க்கண்ணே; வழங்காத பெயர்க்கண் ணில்லா வென்பது.

உ-ம்: அவ்வழிக் கொண்டான், என்பது, அவ் வழிக்கட் கொண்டான், எனவும், கொண்டான் அவ் வழிக்கண், எனவும், அவ்வாறு வழங்குவா ரின்மை யில்லா தாயிற்று. [5] வழங்குவாருண்மையின் அவ்விட மென்னும் பெயர்க்கண் அவ்விடத்துக் கட் கொண்டா னெனவும், கொண்டான் [6] அவ்விடத்துக்கண்ணெனவு நின்ற தென வுணர்க.

மற் றிஃது [7]'எவ்வயிற் பெயரு' மென்புழி யடங்கிற் றன்றோ வெனின், இதுவும் அவ் விரு சொற்கண் வருமாற்றிற்குக் கூறினா ரென்பது.

---

1. அஃதொருகண்: திருத்தம். 2. இருகண: திருத்தம்
3. நீர்மைத் தெ[ன்] (னற்) 4. நெறி[ப்] படு.
5. வழங்குவாரிண்மையின: திருத்தம்.
6. அவ்விடத்துப்பொரு[ண](ள)னவு: திருத்தம்.
7. எவ்வழியிற் : திருத்தம் * மற்றிது : திருத்தம்

அரசு:

என்பது இறுதிக்கண்ணும் மாறுருபுந் தமக் கோதிய பொருட்க ணிற்றலை நீக்கார்.

உதா: கடந்தா னிலத்தை; வந்தான் சாத்தனொடு; கொடுத்தான் சாத்தற்கு; வலியன் சாத்தனின்; ஆடை சாத்த னது; இருந்தான் குன்றத்துக்கண், என விறுதிக்கண் வந்தவாறு. நிலத்தைக் கடந்தான்; சாத்தனொடு வந்தான்; சாத்தற்குக் கொடுத்தான்; சாத்தனின் வலியன்; சாத்தன தாடை; குன்றத் துக்க ணிருந்தான், என்பன, இடைக்கண் நின்றவாறு.

100. பிறிதுபிறி தேற்றலு முருபுதொக வருதலு
நெறிபட வழங்கிய வழிமருங் கென்ப. (21)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் அவ் வேற்றுமை மயக்கத்துட் புறத்துப் படுவ தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஓர் உருபு ஓர் உருபினை யேற்றலும், உருபுகள் புலப்படாது நிற்றலும், இலக்கணத்துப் பட்டன, என்றவாறு.

பிறிது பிறி தேற்றல் என்பது, ஆறும் வேற்றுமை உருபு தா னல்லாத உருபுகளை ஏற்பது.

அது வருமாறு: சாத்தனதனை, சாத்தனதனொடு, என ஆறுவது ஒழித்து, எழாவதன் கண்காறும் ஒட்டுக.

இனி, உருபுதொக வருதல்: நிலத்தைக் கடந்தான், என்புழி. வேற்றுமை யுருபு தொக்கு, நிலங்கடந்தான், என வரும்.

இறுதிக்கண், கடந்தான் நிலத்தை என்புழிக் கடந்தான் நிலம், என வரும். மற்றையனவும் அவ்வாறே தொகும், என்பது.

தெய்வ:

இது பல உருபுந் தொடர்ந்து அடுக்கியவழி வரும் வேறு பாடும், உருபு தொகுமாறும் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இறுதியும் இடையும் நின்ற எல்லா உருபும் முடிக்கும் வினை ஒன்றனோடு முடிதலே யன்றி, வேறு வினை

யேற்று ஒரு வினையோடு முடிதலும், அவ் வுருபுகள் தொக்கு நின்று முடிக்குஞ் சொல்லோடு முடிதலும் நெறிபட வழங்கிய பக்கத்தன, என்று சொல்லுவர்.

இறுதியும் இடையும், என்பது மேலைச் சூத்திரத்தி னின்றும் தந்துரைக்கப்பட்டது. நெறிபட வழங்கிய பக்கம், என்ற பெயரான், ஏற்கும் வினையே கொள்ளப்படும்.

பிரிது பிரி தேற்றல் கூற வேண்டா, வேற்றுமை உருபு வினையோடு முடியும், என்பதனுற் பெறுது மெனின், மேல்நின்ற அதிகாரம் பல உரு படுக்கியவழி ஒரு வினையான் முடியும், என்றமையால், தனித் தனி வினை கொண்டு முடியவும் பெறுமோ என நின்ற ஐயம் தீர்த்தற்குக் கூறல் வேண்டு மென்க.

ஈண்டு உருபு தொகுதல் கூறிய தென்னை? வேற்றுமைத் தொகை என எச்ச வியலுட் கூறுகின்ரு ராதலின் எனின், தொகைச் சொல்லாவது இறுதிப் பெயரோடு தொக்கு ஒரு சொன் னீர்மைப் பட்டு நிற்பது; இஃதன்ன தன்றித் தொகா நிலைத் தொடர்ச்சிக்கண் உருபு மாத்திரம் தொக்கு நிற்கும், என்று கொள்க.

உ-ம்: காதலியைக் கொண்டு கவுந்தியொடு கூடி மாதரிக்குக் காட்டி மனையி னகன்று போய் கோதி விறைவனது கூடற்கட் கோவலன் சென் றேத முறுதல் வினை.

இதனுள், பல உருபு பல வினையான் வந்தன; ஒரு வினை யான் முற்றுப் பெற்றன.

உருபு தொக வருமாறு: நிலத்தைக் கடந்தான்; வாளால் வெட்டினுன்; கொலைக்கு உடம்பட்டான்; வரையினின்றும் பாய்ந்தான்; சாத்தனது பொத்தகம்; மாடத்துக்கண் இருந்தான், என்பன, நிலம் கடந்தான்; வாள் வெட்டினுன்; கொலை யுடம்பட்டான்; வரை பாய்ந்தான்; சாத்தன் பொத்தகம்: மாடத் திருந்தான், என உருபு தொக்கவழியும் ஒட்டுப்படாது நின்று தொகாநிலைத் தொடர்ச்சி யாகிப் பொருள்பட்டவாறு கண்டு கொள்க.

தொகைச் சொல்லும், உருபு தொகைச் சொல்லும் வேறுபாடில ... ... ... ... மோசை வேற்றுமையான் வேறுபா டறிந்து கொள்க.

பிறிது பிறி தேற்றல், என்பதனை ஆற னுருபு ஏனை யுரு பேற்கும் எனப் * பொருளுரைத்து, சாத்தனதனை, சாத்தனதொடு, என உதாரணங் காட்டுபவா லெனின், அவ்வாறு வரும் 'அது' என்பது உருபுநிலை யொழிந்து பொருளாய் நிற்றலானும், சாத்தனதனைக் கொணர்ந்தான், என்றவழி இடைநின்ற 'அது' என்பது உரு பாயிற் சாத்தனைக் கொணர்ந்தான் என்னும் பொருள்படல் வேண்டும்; அவ்வாறு பொருள்படாது உடைப் பொருளையே காட்டுதலானும், அஃறிணை யொருமை 'அது' என்னும் பெயர்க் காதலானும், சாத்தன் பொத்தகத்தைக் கொணர்ந்தான் என்றாற்போல் வந்த தல்லது, உருபு உருபி லேற்றல், என்றல் அமையா தென்க.

சேனு : ( உருபு மற்றென் றேற்றலும் தொக்கு வருதலும் )

இ-ள்: பிறி தோ ருருபு பிறி தோ ருருபை யேற்றலும் ஆ றுருபுந் தொக்கு நிற்றலும், நெறிபட வழங்கிய வழக்கைச் சார்ந்து வருதலான் வழு வாகா, எ-று.

ஏற்புழிக் கோட லென்பதனால், பிறி தோ ருரு பேற்பது ஆறுவதே யாம்.

பிறி தேற்றலு மென்றமையால், தா னல்லாப் பிற வுரு பேற்றல் கொள்க.

எ-டு: சாத்தனதனை, சாத்தனதனொடு, சாத்தனதற்கு, சாத்தனதனின், சாத்தனதன்கண், என உருபு உருபேற்ற வாறும், நிலங் கடந்தான், தாய் மூவர், கருப்பு வேலி, வரை வீழருவி; சாத்தன் கை; குன்றக் கூகை, எனவும், கடந்தா னிலம்; இருந்தான் குன்றத்து, எனவும், உருபு தொக்கு நின்றவாறுங் கண்டு கொள்க.

இறுதியு மிடையு மென்பதனை அதிகாரத்தான் வருவித்து இரண்டிடத்துங் கூட்டி யுரைக்க.

சாத்தனதனது எனச் சிறுபான்மை தன்னையு மேற்றல் உரையிற் கோட லென்பதனாற் கொள்க.

பெய ரிறுதி நின்ற உருபு தன் பொருளொடு தொடராது பிறி தோ ருருபை யேற்றலும், தாம் நின்று தம் பொரு ளுணர்த் தற்பாலன தொக்கு நிற்றலும், இலக்கண மன்மையின், வழு வமைத்தவாறு.

---

* இளம்பூரணர், முதலியோ ருரை.

நச்சி :

இஃது, ஆறன் உருபிற்கு உரிய தோர் இலக்கணமும் எல்லா உருபிற்கும் பொது இலக்கணமும் கூறுகின்றது.

இ-ள் : பிறிது பிறிது ஏற்றலும் – ஆறன் உருபு தன்னை ஒழிந்த உருபினை ஏற்றலும், (பெயர்க்குப் பிறிதாய் நிற்றலின், 'பிறிது' என்றார்.) உருபு தொக வருதலும் — இடையிலும் இறுதியிலும் ஆறு உருபும் தொக்கு நிற்றலும், நெறிபட வழங்கிய வழிமருங்கு என்ப – நெறிபட வழங்கிய வழக்கைச் சார்ந்து வரும், என்று சொல்லுவர் புலவர், எ–று.

உ-ம்: சாத்தனதனை; சாத்தனதனொடு; சாத்தனதற்கு; சாத்தனதனின்; சாத்தனதன்கண், என வரும்.

உருபு தொகுமிடத்து உருபும் பொருளும் உடன் தொகுதலும், உருபு தானே தொகுதலும் உடைய.

உ-ம்: கடந்தான் நிலம்; இருந்தான் குன்றத்து, என வரும்.

நிலங் கடந்தான்; தாய் மூவர்; கருப்பு வேலி; வரைவீழ் அருவி; சாத்தன் கை; குன்றக் கூகை, (குறுந். 153) என வரும். இவை உருபு தொக்கன. 'படைக் கை' என்பது உருபும் பொருளும் தொக்கது. சாத்தன்றனது எனத் தன்னையும் *ஏற்றல் உரையிற் கொள்க.

கல்:

என் னுதலிற்றோ வெனின், விசேட வகையான் உருபிற் குரிய தோ ரிலக்கணமும் எல்லா உருபிற்கும் பொதுவாய தோர் இலக்கணமும் உணர்த்த னுதலிற்று.

இ-ள் : ஓர் உருபு ஓர் உருபினை ஏற்று நிற்றலும் எல்லா உருபுகளுந் தொக்கு வருதலும் இவை இரண்டு முறைமைப்பட வியலும். ... ... ... ... ... ... கண்ணே யுள வென ... ... ... ... வராசிரியர், என்றவாறு.

பிறிது பிறிதேற்றற்கு உதாரணம்: சாத்தனதனை; சாத்தனதனொடு, என [1]ஏழாவதன்காறு மொட்டுக.

---

* ஏற்றல் (ஏற்றுதல்) 1. ஏழாவ [அ] தன்.

சாத்தன துவது, எனத் தன் னுருபு தன்னை யேலாது பிறிது பிறி¹தேற்கு மென வேற்பது ஆருவ தென .............. மதனை யொழிய வேற்கு மென்பதூஉம் பெறுமா றென்னை யெனின், முன்னர் உருபேற்பது பெய ரென்று கூறினமையிற் பிறி தென வெய்துப வல்லா தென்பது பெற்றும். அஃதேயெனின், பிற சொற்களும் பிறி தெனப்படுமா லெ ... ... ... ... ... ... ... கோட லென்புதனுன் 'இதுவயிற் றென்பது. பிறி தேற்ற லெனவே தன்னை யேலா தென்பது பெற்றும்.

இனி, ஒன்றின முடித்தல் என்பதனுற் சாத்தனது நன் றெனப் பயனில கோடலுஞ் சாத்தன் ... ... ... ... ... விளி யேற்றலு முடைத் தென்பது கொள்ளப்படும்.

உருபு தொக்கு வருவதற் குதாகரணம்: நிலங் கடந்தான்; தாய் மூவர்; கருப்பு வேலி; வரை வீழருவி; சாத்த னுடை; குன்றக் கூகை, என வரும்.

இவ் வுருபுகள் தொகுமிடத்து உருபும் பொருளும் உடன் றொகலும், ஒருவழி யுருபே தொகுதலும் என இருவகைய.

அவ்வாறு உருபினுள்ளும் ஆருவது ஒன்று முருபே தொகுவது, அல்லன வெல்லாம் இவ்வாறு தொகு மெனக் கொள்க: படைக் கை யென்பது உருபும் பொருளும் உடன் றொக்கது. நிலங் கடந்தா னென்பது உருபு தொக்கது. பிறவும் அன்ன.

இதனுற் சொல்லியது உருபு தன் னிலக்கண மாறிப் ²பெயர திலக்கணம் எய்துதலும், தன் பொருள்வழித் தா னில்லா தாகலும் வழுவே யெனினும் முற்கொண் டமைந்த வழக் காதலாற் கடியலாவன வல்ல வென, மரபு வழு வமைதி கூறிய வாறு.

அரசு:

என்பது ஒ ருரு போ ருருபினை யேற்றலு மா றுருபுந் தொக்கு நிற்றலு நெறிபட வழங்கிய வழக்கைச் சார்ந்த தென்பர்.

ஒ ருரு போ ருருபை யேற்கு முரு பாறு முருபு; மற்றையன வேலா. அஃ துருபேற்புழித் தன்னை யொழிய வல்லனவற்றை யேற்கும்.

உதா: சாத்தனதனை; சாத்தனதனொடு; சாத்தனதற்கு; சாத்தனதனின்; சாத்தனதன்கண், என வரும். நிலங் கடந்தான்;

1. இது [வெ] வயிற். 2. பெயர [அதில்இ] (தி) லக்கணம்.

தாய் மூவர்; கருப்பு வேலி; வரை வீ ழுருவி; சாத்தன் கை; குன்றக் கூகை, எனத் தொக்கு வந்தன. சாத்தனதனது, எனத் தன்னை யேற்றலு முறையிற் கொள்க.

101. ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகாஅ விறுதி யான. (22)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மேல் உருபுகள் தொக வருவன என்றான், அத் தொக வருவனவற்றது நிலைமை ஒவ்வாதது கண்டு அஃது உணர்த்துதல் நுதலிற்று.

உரை : இரண்டாம் வேற்றுமைப் பொருளும், ஏழாம் வேற்றுமைப் பொருளும், அல்லாதவழி இறுதிக்கண் தொக வாரா, என்றவாறு.

அது சொல்லவே, மற்றைய உரு பெல்லாம் இறுதிக்கண் விரிந்தே வருகுவ, என்பதாம்.

வரலாறு: கடந்தான் நிலம்; கடந்தான் நிலத்தை; இருந்தான் குன்றத்து; இருந்தான் குன்றத்துக்கண், எனத் தொக்கும் விரிந்தும் வந்தவாறு.

வந்தான் சாத்தனொடு, என்பது, வந்தான் சாத்தன், என ஒடு தொகுநிலைப் படுங்கொலோ எனின், படாது, என்பது. மற்றையனவும் அன்ன.

தெய்வ :

* உரு பேற்ற சொல்லும் முடிக்குஞ் சொல்லும் மாறி நிற்கவும் பெறும், என்பது பெற்றாம். என்னை? அவை இறுதியிற் றொகா, என்றமையின்.

அவை மொழி மாறி நிற்குமாறு: கடந்தான் நிலத்தை; வெட்டினான் வாளால்; கொடுத்தான் சாத்தற்கு; நீங்கினான் ஊரின்; ஆடை சாத்தனது; இருந்தான் குன்றத்துக்கண், என்பன: இவற்றுள் உருபு தொக வந்தன: கடந்தான் நிலம்; இருந்தான் குன்றத்து. என்னை? இவை உருபு தொக்கவழியும் தம் பொருண்மை விளக்கின. ஏனையவும் இவ்வாறு வருமெனக் கருதின் அவை தம் பொருள் படாமையிற் றொகா, என்றார்.

* இச் சூத்திரத்திற்கு நுதலியது உரைத்தலும் பொழிப்புரையுங் காணப்பட்டில.

வெட்டினன் வாள்; கொடுத்தான் சாத்தன்; நீங்கினன் ஊர்; ஆடை சாத்தன், என்றவழித் தம் பொருள் படாமை கண்டு கொள்க.

சேனா :

இ-ள்: ஐகார வேற்றுமைப் பொருளுங் கண் ணென் வேற்றுமைப் பொருளு மல்லாத பிற பொருண்மே னின்ற உருபு தொடர்மொழி யிறுதிக்கண் தொக்கு நில்லா, எ-று.

இறுதியு மிடையு மென்பது அதிகரிக்க உருபு தொக வருதலு மென்றமையான் வரைவின்றி எல்லா வுருபும் இறுதிக் கண்ணுந் தொகு மென்பது பட்டதனை விலக்கி, இவ் விரு பொருட்கண்ணும் வருவனவே இறுதிக்கட் டொகுவன, அல்லன தொகா வென வரையறுத்தவாறு.

அறங் கறக்கும், என இடைக்கண் தொக்கு நின்ற நான் காவது கறக்கு மறம், என இறுதிக்கண் தொக்கு நில்லாமை கண்டு கொள்க. பிறவு மன்ன.

நச்சி :

இஃது, எய்தியது விலக்கிற்று.

இ-ள்: ஐயும் கண்ணும் அல்லாப் பொருள்வயின் மெய் உருபு — ஐகார வேற்றுமைப் பொருளும் கண் ணென் வேற்றுமைப் பொருளும் அல்லாத பிற பொருள்மேல் நின்ற உருபு. இறுதியான தொகா — தொடர்மொழி இறுதிக்கண் தொக்கு நில்லா, எ-று.

உ-ம்: அறம் கறக்கும், என்பது, கறக்கும் அறம், என இறுதிக்கண் தொகாமை காண்க.

'தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க் கழலே' (குறுந். 35) என ஆன் உருபு இறுதிக்கண் தொக்கதால் எனின், அது வினைச் சொல் காரணப் பொருட்டாய் நின்றது.

கல் :

என் னுதலிற்றோ வெனின், மேல் உருபுகள் தொக்கு வரும் என்றுழித் தொக்கு வருவனவற்றது நிலை யொவ்வாமை கண்டு அஃ துணர்த்த னுதலிற்று.

பொருள்: இரண்டாவதன் பொருண்மையும், ஏழாவதன் பொருண்மையும், அல்லாத பொருள்களிடத்து வருகின்ற உருபுகள் தமக் குண்மையாகிய வடிவு தொக்கு வரு மொழியி னிறுதிக்கண் ணென்றவாறு.

உதாகரணம்:- கடந்தான் நிலம்; இருந்தான் குன்றத்து, என வரும்.

வந்தான் சாத்தனொடு, என்பது, வந்தான் சாத்தன், என ஒடுத் தொக்குழி யப் பொருள் விளங்காமையின், அந் நிகர்ன இறுதிக்கட் டொகாவாயின. 'நாணில மன்ற' வென்னுங் குறுந்தொகையுள், பிரிந்திசினோர்க் கழ லென வா னிறுதிக்கட் டொக்கு நின்றதா லெனின், அந் நிகரன வழக்கினுள் இன்மையிற் செய்யுள் விகார மென்க.

அரசு:

என்பது இரண்டாம் வேற்றுமைப் பொருளும் ஏழாம் வேற்றுமைப் பொருளு மல்லாத பிற பொருண்மே னின்ற வுருபு தொடர்மொழி யிறுதிக்கட் டொக்கு நில்லா. எனவே, அவ் விரண் டுருபு மிறுதிக்கட் டொக்கும், விரிந்து நிற்கு மல்லாதன விறுதிக்கண் விரிந்தே நிற்கும்.

உதா: கடந்தா னிலம்; கடந்தா னிலத்தை; இருந்தான் குன்றத்து; இருந்தான் குன்றத்துக்கண், என விருவகையு மாயிற்று. வந்தான் சாத்தனொடு; கொடுத்தான் சாத்தற்கு; வலியன் சாத்தனின், ஆடை சாத்தனது, என விரிந்து நின்றவாறு.

102. யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும். (23)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், உருபுகள் ஓரோவழித் தத்தம் பொருண்மை யின்றியும் மயங்குத லுரிய, என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை: யாதானும் ஓர் உருபிற் கூறப்பட்டதே ஒரு சொல் லெனினும், கூறிய அவ் வுருபின் பொருள் படுங்கொல்லோ எனின், படாது, என்பது. அக் கூறப்படாத பிற உருபு உள வன்றே, அவற்றது மாகும், அச் சொல் அவற்றுப் பொருள்படச் சொல்லின், என்றவாறு.

வரலாறு:

'கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய் (அகம். 212)

என்னும் பாட்டினுள், 'மணற்கீன்ற' என நான்காவதன் உருபு வந்ததேனும், மணலுள் ஈன்ற, என ஏழாவதன் உருபே கொள்க. அதற் கேற்ற பொருட் டாகலின்.

இது, வழக்கினுள் ஒன்றன் பொருண்மைக்கட் பிறிதோர் உருபு பொருளொடு படாது சென்று நிற்ப வழங்குதலும் உண்மை கண்டு அது காத்தவாறு.

தெய்வ :

வேற்றுமை உருபு தம்முள் மயங்குத லின்றிப் பிற உருபொடு மயங்கும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: யா தொன்றன் உருபிற் கூறினும் பொருள் செல்லும்வழி வேற்றுமையும் செல்லும்.

யாத னுருபு என்பது வேற்றுமை யல்லாத் உருபு. உருபு எனினும் வடிவு எனினும் ஒக்கும்.

அம் மூ வுருபின தோன்ற லாறே (சொல். பெயர். 6) என வடிவிற்குப் பெயராகிப் பிறண்டும் வந்தது.

வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று. (குறள். வான். க.)

எனவும், மருந் துண்டு நோய் தீர்ந்தது, எனவும் வருவழி, உலகம் வழங்கி வருதற்கு மழை ஏது வாகலானும், நோய் தீர்தற்கு மருந்து ஏது வாகலானும் இவற்றிற்குப் பொரு ளுரைக்குங்கால் மழை நிலைநிற்றலான் உலக நடை தப்பாது வருதலான், எனவும். மருந் துண்டலால் நோய் தீர்ந்தது, எனவும் உரைக்க வேண்டு தலின், இவை வேற்றுமை உருபான் வந்தில வாயினும், பொருண் முகத்தான் வேற்றுமை யாதலின், இவை இவ்வாறு வரப் பெறும், என்று வழு வமைத்தவா றும்.

சேனு: (வேற்றுமை பொருள் பற்றியது.)

இ-ள்: ஒரு தொடர் யாதானு மோர் வேற்றுமைய துருபு கொடுத்துச் சொல்லப்பட்ட தாயினும் அவ் வுருபு தன் பொருளான் அத் தொடர்ப் பொருள் செல்லாதவழிப் பொருள் செல்லும் பக்கத்து வேற்றுமையைச் சாரும், எ-று.

பொருள் சொல்லாமை யாவது உருபேற்றசொல்லும் உருபு நோக்கிய சொல்லுந் தம்மு ளியையாமை. அவ் வேற்றுமையைச் சார்தலாவது அதன் பொருட் டாதல்.

'இளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்'
(அகம். — 212)

என்றவழி நான்காவதன் பொருளான் அவ்வுருபேற்றசொல்லும் அவ் வுருபு நோக்கிய சொல்லும் தம்மு ளியையாமையின், அவற்றை யியைக்கும் ஏழாவதன் பொருட் டாயினவாறு கண்டு கொள்க.

உருபு தன் பொருளிற் றீர்ந்து பிற வுருபின் பொருட் டாயும் நிற்கு மென உருபு மயக்கங் கூறியவா றுயிற்று.

அஃதேல், அரசர்கட் சார்ந்தான், என்புழியும் இரண் டாவதன் பொருட்கண் ஏழாவது சென்ற தென்றமையான், அதனோ டிதனிடை வேற்றுமை யென்னை யெனின், அரசர்கட் சார்ந்தான், என்புழி, அரசரது சார்தற் கிட மாதலே சாரப் படுதலு மாய் இரு பொருண்மையும் ஒற்றுமைப்பட்டு நிற்றலின், தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணு மாகுபெயர் போல, இடப் பொருண்மைக் குரிய கண்ணெ னுருபு அவ்விடப் பொருண்மையோடு ஒற்றுமை யுடைத் தாகிய செயப்படு பொருட்கும் ஆண் டுரித்தே யாம். மணற்கீன்ற என்புழி நான் காவதன் பொருளோடு ஏழாவதன் பொருட் கென்னு மியை பின்மையான், ஒப் பில்வழியாற் பிறிது பொருள் சுட்டும் ஆகுபெயர் போல, அப் பொருட் குரித் தன்றிவந்த தெனப்படும். அன்ன பிறவற்றுள்ளும் இவ் வேறுபாடு தெரிந் துணர்க.

தன் பொருளிற் றீர்தல் இலக்கண மன்மையின் இதனை யிலக்கணத்தோ டுறழ்ந்து வருவனவற்றொடு வைத்தார்.

நச்சி:

இஃது, உருபுகள் தம் பொருள அன்றி மயங்குமாறு கூறுகின்றது.

இ-ள்: யாதன் உருபிற் கூறிற் றாயினும் — ஒரு தொடர் யாதானும் ஒரு வேற்றுமையது உருபு கொடுத்துச் சொல்லப் பட்டது ஆயினும் (அவ் வுருபேற்றசொல்லும் உருபு நோக்கிய

சொல்லும் பொருள் இயையாதவழி) பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும் — பொருள் செல்லும் பக்கத்து வேற்றுமையைச் சாரும், எ-று.

உ-ம் :

'கிளையரில் நாணற் கிழங்கு மணற்கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்'
(அகம். 212 : 4, 5)

என்புழி 'மணலுள் ஈன்ற' என ஏழாவதன் பொருள் ஆயிற்று.

'கொக்கினுக் கொழிந்த தீம்பழம் கொக்கின்' (நற்-280) என்புழியும் 'கொக்கினின்றும்' என ஐந்தாவதன் பொருளாயிற்று.

முற்கூறிய எல்லாம் தம்முள் இயைபுடைய பொருள் மயக்கமே மயங்குமாறு கூறி, இஃது ஓர் இயைபும் இல்லாத உருபு மயக்கமே கூறிற்று, என்று உணர்க.

கல் :

என் னுதலிற்றோ வெனின், உருபுகள் ஓரோவழித் தம் பொருண்மை யின்றியும் மயங்குத லுடைய வென்ப துணர்த்த னுதலிற்று.

இ-ள் : ஒரு பொருண்மை யாதானு மோர் உருபினாற் கூறப்பட்ட தாயினும் அப் பொருண்மை யவ் வுருபின தாகாது அப் பொருள் செல்லுங் கூற்றினை யுடைய வேற்றுமை ஆண்டு வந்து சார்ந்த பொருளினைக் கொள்ளும், என்றவாறு.

உ-ம் :

"கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்",

என்னும் பாட்டினுள், மணலுள் ஈன்ற வென்பது, மணற் கீன்ற வென் றாயிற்று.

இவ்வாறு பொரு ளன்றியு மயங்கு மென்றதேல் வேண்டிய வாறு எல்லாம் வரப்பெறும், என்றவா றாம் பிற வெனின், அது வன்று, வழக் குள்வழிய தம் முடிபு, எனக் கொள்க.

அரசு :

என்பது ஒரு சொல் யாதானு மோ ருருபிற் கூறப்பட்டதாயினு மவ் வுருபிற்குப் பொரு ளியையாதவழி பொருள் செல்லும் பக்கத்துப் பொருந்தும் வேற்றுமையைச் சாரும்.

உதா :-

'கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்'

என்புழி நான்காவது கொள்ளாது, மணலு ளீன்றதென ஏழாவது கொள்க.

'கொக்கினுக் கொழிந்த தீம்பழ'

மென்புழி, கொக்கினின்றும், என 'ஐந்தாவதன் பொருளாயிற்று. பிறவும் வந்தவழி காண்க.

103. எதிர்மறுத்து மொழியினுந் தத்த மரபிற்
பொருணிலை திரியா வேற்றுமைச் சொல்லே. (24)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், வேற்றுமை யுருபுகள் தம் பொருள் மாறுபட நின்றுழியும் தம் பொருள, என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை: எதிர்மறுத்துச் சொல்லிற்றுழியும் தம் பொருண்மை மரபு திரியா, என்றவாறு.

வரலாறு: மரத்தைக் குறையான், என்புழி, இரண்டாவதன்பின் அப் பொருள் இல்லை மன்; இல்லையெனினும் அப் பொருட்டாக, என்பது.

பிற வேற்றுமைப் பொருள்களையும் இவ்வாறே எதிர் மறுத்து ஒட்டிக் கொள்க.

தெய்வ:

எல்லா வேற்றுமைக்கு முரிய தோர் இயல் புணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வேற்றுமைச் சொல் தமக் குரிய பொருணிலையை எதிர்மறுத்து மொழியினும் திரியா, எ-று.

---

1. வந்தாலதன் : திருத்தம்.

உ-ம்:* குடத்தை வனையான்; சாத்தனெடு கூடான்; அந்தணர்க்குக் கொடான்; ஊரின் நீங்கான்; சாத்தன தன்று ஆடை; குன்றத்துக்கண் இரான், என வரும். குடத்தை வனையான், என்றவழிச் செயப்படு பொருள் தோன்றிற்றின் றாயினும் இவ்வாறு சொல்லப்பெறும் என வழு வமைத்தவாறு.

சேனு: (எதிர்மறைக் கண்ணும் வேற்றுமை ஒக்கும்)

இ-ள்: விதிமுகத்தாற் கூருது எதிர்மறுத்துக் கூறினும், தத்த மிலக்கணத்தான் வரும் பொருணிலைமை திரியா, வேற்றுமை யுருபு, எ-று.

எ-டு: மரத்தைக் குறையான்; வேலா னெறியான், என வரும்.

என் சொல்லியவாறோ வெனின், குறையான், எறியான் என்றவழி வினை நிகழாமையின், மரமும் வேலுஞ் செயப்படு பொருளுங் கருவியு மெனப்படா வாயினும், எதிர்மறை வினையும் விதி வினையோ டொக்கு மென்பது நூன்முடி பாகலான், ஆண்டு வந்த உருபுஞ் செயப்படு பொருண் முதலாயினவற்றுமேல் வந்தன வெனட்டடு பென வழு வமைத்தவாறு. பிறவு மன்ன.

நச்சி:

இது, வேற்றுமைகள் தம் பொருள் மாறுபட்டுழியும் அப் பொருள, என்கின்றது.

இ-ள்: எதிர்மறுத்து மொழியினும்-விதிமுகத்தால் கூருது எதிர்மறுத்துக் கூறினும், தத்தம் மரபின் பொருள்நிலை திரியா — தத்தம் இலக்கணத்தான் வரும் பொருள்நிலை திரியா, வேற்றுமைச் சொல்லே — வேற்றுமை உருபுகள், எ-று.

உ-ம்: மரத்தைக் குறையான்; வேலான் எறியான், என வரும்.

வினை நிகழாமையின், மரமும் வேலும் செயப்படு பொருளும் கருவியும் ஆகாவேனும், எதிர்மறையும் விதி வினையோடு ஒக்கும், என ஆணை கூறிற்று.

கல்:

என் னுதலிற்றோ வெனின், அவ் வேற்றுமைக டம் பொருண் மாறுபட நின்றவழியுந் தம் பொருள வென்பது துணர்த்த னுதலிற்று.

இ-ள்: ஐ முதலிய ஐ வகை யுருபிற்குஞ் [1]செயப்படு பொருண் முதலாக வோதப்பட்ட பொருண்மைகளை எதிர்மறை படச் [1]சொல்லினுந் தமக் குரிய மர பாகிய அப் பொருணிலைமை யிற் றிரியா, அவ் வேற்றுமைச் சொற்க ளென்றவாறு.

உ-ம்: மரத்தைக் குறையான்; சாத்தனொடு வாரான், என வரும். பிறவும் அன்ன.

அரசு:

என்பது விதிமுகத்தான் கூறு தெதிர்மறுத்துக் கூறினுந் தத்த மிலக்கணத்தான் வரும், பொருணிலை திரியா, வேற்றுமை யுருபுகள்.

உதா: மரத்தைக் குறைத்தா னென்புழி, மரத்தைக் குறையா னெனவும், வேலான் எறிவன் என்புழி, வேலா னெறியா னென்றும் வரும். மற்றையவற்றையு மிவ்வாறே மறுத் தொட்டிக் கொள்க.

104. கு ஐ ஆன்என வருஉ மிறுதி
அவ்வொடுஞ் சிவணுஞ் செய்யு ளுள்ளே (25)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், அவ் வுருபுகள் ஒருசார் செய்யுளுள் திரிபுபட நிற்றல் கண்டு, அஃது உணர்த் துதல் நுதலிற்று.

உரை: கு ஐ ஆன் என வருஉம் மூன் றுருபின் இறுதியுஞ் செய்யுளுள் அகர ஈ றாகி நிற்கும், என்றவாறு.

வரலாறு: முன்னர்ச் சூத்திரத்துட் காட்டுதும்.

தெய்வ:

வேற்றுமை யுருபினுள் சிலவற்றிற்கு உரியதோர் இலக் கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: கு, ஐ, ஆன் என்று சொல்லப்பட்ட தொடர் மொழி இறுதிக்கண் வரும் உருபு அவ்வொடு சிவணும், செய்யு ளகத்து, எ-று.

உதாரணம் வருகின்ற சூத்திரத்துட் காட்டுதும்.

1. சொல்லுந் திருத்தம்.

சேனா: (உருபுகளின் திரிபு)

இ-ள்: கு ஐ ஆன் என வருஉ மூன் றுருபும் தொட ரிறுதிக்கண் ணின்றவழி அகரத்தோடு பொருந்தி நிற்றலு முடைய, செய்யுளுள், எ-று.

எ-டு: 'கடிநிலை யின்றே யாசிரி யற்க' (தொல். புள். 94) எனவும்.

'காவ லோனக் களிறஞ் சும்மே';
'களிறு மஞ்சுமக் காவ லோன', எனவும்,
'புரைதீர் கேள்விப் புலவ ரான', எனவும்,
'உள்ளம் போல வுற்றுழி யுதவும்
புள்ளியற் கலிமா வுடைமை யான,' எனவும் வரும்.

குகரமும் ஐகாரமும் ஈறு கெட அகரத்தொடு சிவண லுடைமையான், ஐ ஆன் கு என முறையிற் கூறாது, கு ஐ என அவற்றை இயைய வைத்தார். இயைய வைக்கின்றவர் ஐகாரம் முன் வைக்க வெனின், முறை அதுவாயினுஞ் செய்யு ளின்பம் நோக்கிக் குகரம் முன் வைத்தா ரென்பது.

அஃதேல், இத் திரிபு 'தம்மீறு திரிதல்' (சொல் 251) என இடைச்சொற் கோதிய பொது விலக்கணத்தாற் பெறப்படு தலின் ஈண்டுக் கூறல் வேண்டா வெனின், அப் பொது விலக் கணத்தான் எய்துவன உருபிற்கு மெய்துமேல், பிறிது பிறி தேற்றலும், 'பிறிதவ ணிலைய' (சொல் – 251) லா யடங்கு தலான், ஈண்டுக் கூறல் வேண்டா வாம்; அதனுன் அன்ன பொது விலக்கணம் உருபிற் கெய்தா தென மறுக்க.

நச்சி:

இஃது, அவ் வுருபுகளுள் சில செய்யுளுள் திரியும், என்கின்றது.

இ-ள்: கு ஐ ஆன் என வருஉம் இறுதி – கு ஐ ஆன் என வரும் மூன்று உருபும் தொடர் இறுதிக்கண் நின்றவழி, அவ் வொடும் சிவணும் செய்யுளுள்ளே – அகரத்தோடு பொருந்தி நிற்றலும் உடைய, செய்யுளுள், எ-று.

உ-ம்: 'கடிநிலை இன்றே ஆசிரி யற்க' (எழுத். புள். 94)

'காவ லோனக் களிறஞ் சும்மே';

'களிறு மஞ்சுமக் காவ லோன';

'புரைதீர் கேள்விப் புலவ ரான,' என வரும்.

'உள்ளம் போல உற்றுழி உதவும்
புள்ளியற் கலிமா உடைமை யான' (கற்பியல், சூ.53)
என்பது வினைக்குறிப்புக் காரணம் பெற்றது.

கல் :

என் னுதலிற்றோ வெனின், அவ் வுருபுகள் ஒரு சாரான் செய்யுளுட் டிரிபுபட நிற்ற லுடைமை கண்டு அஃ துணர்த்த னுதலிற்று.

இ-ள்: குவ் வென்றும், ஐ யென்றும், ஆ னென்றும் சொல்லவருகின்ற உருபு ஈறுகள் அகரத்தோடு பொருந்தி யீறு திரிந்து நிற்றலு முடைய, செய்யுளிடத்து, என்றவாறு. அவைகளை முன்னர்ச் சொல்லுதும்.

அரசு :

என்பது கு, ஐ, ஆன் என வரும் மூன் றுருபுந் தொடரிறுதிக்க ணின்றவழி அகரத்தோடு பொருந்தி நிற்ற லுடைய, செய்யுளுள்.

உதா: 'கடிநிலை யின்றே ஆசிரி யற்க,' எனவும்,

'காவ லோனக் களிறஞ் சும்மே'

'களிறு மஞ்சுங் காவ லோன,' எனவும்,

புரைதீர் கேள்வி புலவ ரான, எனவும், கு, ஐ, ஆன் மூன்றும் அகரமாய் வந்தவாறு காண்க.

105. அவற்றுள்
அஎனப் பிறத்த லஃறிணை மருங்கிற்
குவ்வு மையு மில்லென மொழிப (26)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

உரை: அவற்றுள் குவ்வும் ஐயும் அஃறிணைக்கண் அகர வீருகல் எய்தா, என்றவாறு.

மற்றை ஆன் உருபாயின் அஃறிணைக்கண்ணும் உயர்திணைக் கண்ணும் எய்தும், என்பது.

இனி, உயர்திணைக்கட் குவ்வும் ஐயும் வருமாறு:

'கடிநிலை யின்றே யாசிரி யற்கு.' எனற்பாலது, 'ஆசிரியற்க' [தொல் – எழுத். புள். 94] என்றாயிற்று.

'காவ லோனைக் களிறஞ் சும்மே' எனற்பாலது, 'காவ லோனக் களிறஞ் சும்மே,' என்றாயிற்று.

இனி, ஆன் இரு திணைக்கண்ணும் வருமாறு:

'புள்ளினுன'; 'புலவரான'," என இருவழியுங் கண்டு கொள்க.

தெய்வ :

எய்தியது ஒரு மருங்கு விலக்குதல் நுதலிற்று.

இ-ள்: அஃறிணைப் பொருட்கண் குவ்வும், ஐயும் அகரத் தொடு சிவணு, எ-று.

எனவே, உயர்திணைக்கண் மூன்றுருபும் சிவணும், என்ப தாம். அஃறிணைக்கண் ஓருருபு சிவணும், என்பதூஉம் கூறியவாறும்.

உ-ம்: கடிநிலை இன்றே ஆசிரி யற்க (தொல். புள். 94); புள்ளினுன; புலவரினுன, என வந்தன. ஐகாரம் அகரத்தொடு சிவணுமாறு வந்தவழிக் கண்டு கொள்க.

பரிபாடலகத்து,
நின்னெக்கும் புகழ்நிழலவை (1 : 55)
நீழனேமியன,

என்பன அகரத்தொடு சிவணி வந்தன, எனினும் அமையும். இவை அஃறிணைப் பொருள் அன்றோ எனின், தெய்வப் பொருண்மையான் உயர்திணை யாம்.

சேனு:

இ-ள்: அஃறிணைப் பெயர்க்கண், அகரத்தொடு சிவணி ஈறு திரிதல் குவ்வும் ஐயு மில் லென, எய்தியது விலக்கியவாறு.

அ எனத் திரிதலை, 'அ எனப் பிறத்த' லென்றார்..

நச்சி:

இஃது, எய்தியது விலக்கிற்று.

இ-ள்: குவ்வும் ஐயும் அஃறிணை மருங்கின் அ எனப் பிறத்தல் இல் லென மொழிப - குவ்வும் ஐயும் அஃறிணைப் பெயர்க்கண் அகரத்தோடு சிவணி ஈறு திரிதல் இல்லை, என்று சொல்லுவர் புலவர், எ-று.

எனவே, 'புள்ளினுன' என அஃறிணைக்கண் ஆன் பிறக்கு மாறு ஆயிற்று.

கல்:

என்ப தென் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்குத னுதலிற்று.

இ-ள்: அ என ஈறு திரிந்து நிற்றல் அஃறிணையிடத்துக் குவ் வென்னும் உருபும், ஐ யென் னுருபு நில்லாமையை யுடைய வென்றவாறு. எனவே, உயர்திணை யிடத்து மூன் றுருபுந் திரியு மென்பதூஉம், அஃறிணைக்கண் ஆ னென்னும் உரு பொன்று திரியு மென்பதூஉம் பெற்றும்.

உ-ம்: "கடிநிலை யின்றே யாசிரி யர்க்க" என்புழி ஆசிரி யர்க்கு எனற்பாலது ஆசிரியர்க்க வென் ருயிற்று.

'காவலோனைக் களிறுஞ்சும்மே' எனற்பாலது 'காவலோன' என்ருயிற்று.

புலவரினுன் என்பது புலவரினுன என்ருயிற்று: இவை யுயர்திணைக்கட் டிரிந்தவாறு. புள்ளினுன் என்றது புள்ளினுன என்ருயிற்று: இஃது அஃறிணைக்கட் டிரிந்தவாறு.

அ ஒடும் என்ற உம்மை யெதிர்மறை யாகலான் ஈறு திரியாம[1] னிற்றல் பெரும்பான்மை.

இவை யிடைச்[2] சொல் லாதலின் 'தம் மீறு திரித' லென்புழி யடங்காவோ வெனின், வழக்கினுள் இவ்வாறு வாரா மையின் அடங்கா வென்பது.

அரசு:

என்பது அஃறிணை யிடத்து குவ்வும் ஐயும் அகரத்தோடே யாகா; மற்றையதற் கஃறிணைக்கண்ணு முயர்திணைக்கண் ணும் அகர மெய்தும்.

1. னிற்றல்[ற்](ல்) 2. சொல்லாதலி[ற்](ன்)

உதா: உள்ளம் போல யுற்றுழி யுதவும்
புள்ளியற் கலிமா வுடைமை யான;

*புள்ளிதான வென வஃறிணைக்கண் நான்காவதொடு வந்தவாறு காண்க.

106. இதன திதுவிற் றென்னுங் கிளவியு
மதனைக் கொள்ளும் பொருள்வயி னானு
மதனாற் செயற்படற் கொத்த கிளவியு
[1]முறைக்கொண் டெழுந்த பெயர்ச்சொற் கிளவியும்
[2]பால்வரை கிளவியும் பண்பி னாக்கமுங்
காலத்தி னறியும் வேற்றுமைக் கிளவியும்
பற்றுவிடு கிளவியுந் தீர்ந்துமொழிக் கிளவியு
மன்ன பிறவு நான்க னுருபிற்
றொன்னெறி மரபின தோன்ற லாறே. (27)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், நான்காம் வேற்றுமை ஏனைய வேற்றுமைக்கண் ணெல்லாஞ் சென்று மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: இதனது இது விற்று என்பது: யானையது கோடு கூரிது, என்புழி, ஆண்டு நான்காவது சென்று, யானைக்குக் கோடு கூரிது, என் றாக, என்பது.

அதனைக் கொள்ளும் பொருள் என்பது: இவளைக் கொள் ளும் இவ் வணி, என்புழி, இவட்குக் கொள்ளும் இவ் வணி, என் றாக, என்பது.

அதனாற் செயற்படற் கொத்த கிளவி என்பது: வாயாற் றக்கது வாய்ச்சி, என்புழி, வாய்க்குத் தக்கது வாய்ச்சி, என் றாக, என்பது.

முறைக்கொண் டெழுந்த பெயர்ச் சொற் கிளவி என்பது: ஆவினது கன்று, என்புழி ஆவிற்குக் கன்று, என் றாக, என்பது.

பால்வரை கிளவி என்பது: கருவூரின் கிழக்கு, என்புழிக் கருவூர்க்குக் கிழக்கு, என் றாக, என்பது.

பண்பின் ஆக்கம், என்பது: சாத்தனின் நெடியன், என் புழிச், சாத்தற்கு நெடியன், என் றாக, என்பது.

---

* புள்ளிதான் வென : திருத்தம்.

1. முறைகொண்
2. வரைக்கிளவி
} கல். அரசு. பாடம்.

காலத்தின் அறியுங் கிளவி, என்பது: மாரியுள் வந்தான், என்புழி, மாரிக்கு வந்தான், என்றாக, என்பது.

பற்றுவிடு கிளவி என்பது: ஊரிற் பற்று விட்டான், என்புழி, ஊர்க்குப் பற்று விட்டான், என்றாக, என்பது.

தீர்ந்து மொழிக் கிளவி என்பது: ஊரிற் றீர்ந்தான், என்புழி, ஊர்க்குத் தீர்ந்தான், என்றாக, என்பது.

அன்ன பிறவும் என்றதனால், ஊரிற் சேயன்; ஊர்க்குச் சேயன்; என்றாக, என்பதும், உறையூரிற் பெரிது கருவூர், என்புழி, உறையூர்க்குப் பெரிது கருவூர், என்றாக, என்பதும், பிறவும் இவ்வாறாக வருவன கொள்க.

இவை யெல்லாம் நான்கனுருபிற் றோன்றுதன் மேற் கொண்டு அடிப்பட்டு வந்த வழக்கு, என்றவாறு.

தெய்வ:

ஓருருபு பல பொருட்கண் மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: இதனது இது இற்று என்பது முதலாகச் சொல்லப்பட்டனவும், அத் தன்மைய பிறவும் நான்கன் உருபில் பண்டையோர் வழக்காகிய மரபின வாகித் தோன்றுதல் நெறி, எ-று.

இதனது இது இற்று என்பது, யானையது கோடு வெள்ளிது; என்பது யானைக்குக் கோடு வெள்ளிது, என வரும்.

அதனைக் கொள்ளும் பொருள்வயி னானும், என்பது, ஒன்றைக் கொள்ளும் பொருட்கண்ணும் வரும், எ-று. ஆன் இடைச்சொல். 'காணத்திற்குக் கொண்ட அரிசி' எனவும் வரும்.

அதனாற் செயப்படற் கொத்த கிளவி, என்பது அவனாற் செய்யப்படும் என்னும் பொருண்மைக்குப் பொருந்திய சொல், என்றவாறு: அவனான் முடியும், என்பது அவற்கு முடியும், என வரும்.

முறைக்கொண் டெழுந்த பெயர்ச் சொற் கிளவி என்பது, முறையைக் கொண் டெழுந்த பெயர்ச் சொற் பொருண்மை, என்றவாறு: 'ஆவினது கன்று', என்பது, 'ஆவிற்குக் கன்று' என வரும்.

பால்வரை கிளவி என்பது இடம் வரைந்த சொல், என்றவாறு: கருவூரின் கிழக்கு, என்பது கருவூர்க்குக் கிழக்கு, என வரும்.

பண்பின் ஆக்கம், என்பது........................என்றவாறு: இதனின் நெடிது. என்பது இதற்கு நெடிது, என வரும்.

காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவி, என்பது காலத்தான் உணருஞ் சொல், என்றவாறு: காலைக்கண் வரும், என்பது, காலைக்கு வரும், என வரும்.

பற்றுவிடு கிளவி, என்பது இதனிற் பற்றுவிடும், என்னும் ஏதுப் பொருண்மைக்கண், இதற்குப் பற்றுவிடும், என வரும்.

தீர்ந்து மொழி கிளவி, என்பது மருந்தில் தீர்ந்தது, என்பது மருந்திற்குத் தீர்ந்தது, என வரும்.

அன்ன பிறவும், என்றதனால்,

கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற (அகம். 212)

என ஏழாவதன்கண் இடப் பொருண்மைக்கண் நான்காவது வந்தது.

பிறவும் இந் நிகரன வெல்லாம் வந்தவழி அனுமித்துக் கொள்க.

சேனு: (உருபுகள் பல பொருள்களிலும் மயங்குதல்)

இ-ள்: இதன திது இத் தன்மைத் தென்னும் ஆருவதன் பொருண்மையும், ஒன்றனை யொன்று கொள்ளுமென்னும் இரண்டாவதன் பொருண்மையும், ஒன்றனு ளொன்று தொழிற்படற்கு ஒக்கும் என்னும் மூன்ருவதன் பொருண்மையும், முறைப் பொருண்மையைக் கொண்டுநின்ற பெயர்ச் சொல்லினது ஆரும் வேற்றுமைப் பொருண்மையும், நிலத்தை வரைந்து கூறும் பொருண்மையும், காலத்தின்கண் ணறியப்படும் ஏழாம் வேற்றுமைப் பொருண்மையு மாகிய ஐந்தாவதன் பொருண்மையும், அவை போல்வன பிறவும், நான்க னுருபாற் ரேன்றுதற்கண் தொன்னெறி மரபின, எ-று.

எ-டு: யானைக்குக் கோடு கூரிது, எனவும், இவட்குக் கொள்ளு மிவ் வணி, எனவும், அவற்குச் செய்யத் தகுமக் காரியம் எனவும், ஆவிற்குக் கன்று. எனவும், கருவூர்க்குக்

கிழக்கு, எனவும், சாத்தற்கு நெடியன், எனவும், ஊர்க்குத் தீர்ந்தான், எனவும், அப் பொருளெல்லாவற்றின்கண்ணும் நான்காமுருபு வந்தவாறு கண்டு கொள்க.

வன்பால் மென்பால் என்ப வாகலின் நிலத்தைப் பாலென்றார்.

"சிறப்பே நலனே காதல் வலியோ
டந்நாற் பண்பும் நிலைக்கள மென்ப" (பொருள் - 276)

என உவமை நிலைக்களத்தைப் பண் பென்ப வாகலின், 'பண்பினுக்கம்' என்றார்.

இதுவும் வேற்றுமை மயக்க மாகலின் மேற்கூறப்பட்டவற்றோடு வைபாது இத்துணையும் போதந்து வைத்த தென்னையெனின், அது தொகை விரிப்ப மயங்கு மதிகாரம்; இது தொகையல்வழி, யானையது கோடு கூரிது, என்னுந் தொடர்மொழிப் பொருள் சிதையாமல், யானைக்குக் கோடு கூரிது, என நான்காவது ஆண்டுச் சென்று நின்ற தாகலான், அவற்றோடு வையாராயினு ரென்பது.

அஃதேல், ஆவின் கன்று, எனவுங் கருவூர் கிழக்கு, எனவுந் தொகையாயும் வருதலின், அப் பொருட்கண் நான்காவது வருதல் ஈண்டுக் கூறற்பாற்றன் றெனின், அஃ தொக்குமன்றுயினும், பிற வேற்றுமைப் பொருட்கண் நான்காவது சேறலொப்புமையான் அவற்றிற்கு வேறோர் சூத்திரஞ் செய்யாது இவற்றோ டொருங் கோதினு ரென்பது.

அன்ன பிறவு மென்றதனுன், ஊர்க்கட் சென்றான்; ஊர்க்கணுற்றது செய்வான், என்னு மேழாவதன் பொருட்கண்ணும், ஊரிற் சேயன், என்னும் ஐந்தாவதன் பொருட்கண்ணும், ஊர்க்குச் சென்றான்; ஊர்க் குற்றது செய்வான்; ஊர்க்குச் சேயன், என நான்காவது வருதல் கொள்க. பிறவுமன்ன.

நச்சி:

இது, நான்காவது ஏனை யுருபுகளின் பொருள்களோடு மயங்கும் என்கின்றது.

இ-ள்: இதனது இது இற்று என்னும் கிளவியும் — இப் பொருளினுடையது இப் பொருள்; அதுதான் இத் தன்மைத்து, என்னும் ஆறாவதன் பொருண்மையும், அதனைக்

கொள்ளும் பொருள்வயினானும் — ஒன்றனை ஒன்று கொள்ளும் என்னும் இரண்டாவதன் பொருண்மையும், முறைக் கொண்டு எழுந்த பெயர்ச் சொற் கிளவியும் – முறைப் பொருண் மையைக் கொண்டு எழுந்த பெயர்ச் சொற் கிளவியும் – முறைப் பொருண்மையைக் கொண்டு நின்ற பெயர்ச் சொல்லினது ஆறாம் வேற்றுமைப் பொருண்மையும், பால் வரை கிளவியும் பண்பின் ஆக்கமும் – நிலத்தை வரைந்து கூறும் பொருண்மை யும் பண்பின்கண் ஆம் பொருவு மாகிய ஐந்தாவதன் பொருண் மையும், காலத்தின் அறியும் வேற்றுமைக் கிளவியும் – காலத் தின்கண் அறியப்படும் ஏழாம் வேற்றுமைப் பொருண்மையும், பற்று விடு கிளவியும் தீர்ந்து மொழிக் கிளவியும் – பற்று விடும் பொருண்மையும் தீர்ந்து மொழிப் பொருண்மையும் ஆகிய ஐந்தாவதன் பொருண்மையும், அன்ன பிறவும் நான்கன் உருபிற் தோன்றலாறு தொன்னெறி மரபின – அவை போல்வன பிறவும் நான்கன் உருபிடத்துக் கூறுதலைப் பழைய நெறி முறைமையாக உடைய, எ–று.

உ–ம்: யானைக்குக் கோடு கூரிது: இஃது ஆறாவது. இவட்குக் கொள்ளும் இவ் வணி: இஃது இரண்டாவது. அவற் குச்செய்யத் தகும் காரியம்: இது மூன்றாவது. ஆவிற்குக் கன்று: இஃது ஆறாவது. அவற்குக் கிழக்கு: இஃது ஐந்தாவது. சாத் தற்கு நெடியன்: இதுவும் அது. காலைக்கு வரும்: இஃது ஏழாவது. மனை வாழ்க்கைக்குப் பற்று விட்டான்: இஃது ஐந்தாவது. ஊர்க்குத் தீர்ந்தான்: இதுவும் அது.

'அன்ன பிறவும்' என்றதனால், ஊர்க்கட்சென்றான்; ஊர்க் கண் உற்றது செய்வான்; ஊரிற் சேயன், என்பனவற்றிற்கு நான்கன் உருபு கொள்க.

இது தொகாது நின்றவிடத்து நான்கன் உருபு சென்று மயங்குதலின் வேறு கூறினர்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், நான்காம் வேற்றுமை ஏனைய வேற்றுமைக்கண் ணெல்லாஞ் சென்று மயங்குமா றுணர்த்த னுதலிற்று.

இ-ள்: இப் பொருளி னுடைய திப் பொருள்; அது தான் [1]இன்ன தன்மைத்து என்று சொல்லப்படும் ஆறாவதன் பொருண் மையும், ஒன்றனை ஒன்று கொண்டிருக்கும், என்று சொல்லப்

1. இன்: திருத்தம்.

படும் இரண்டாவதன் பொருண்மையும், ஒன்றனுன் ஒன்று செயற்பாடுடைத் தாதற்குப் பொருந்துதலென்னு மூன்றுவதன் பொருண்மையும், முறைப் பொருண்மையைக் கொண்டெழுந்த ஆறுவதன் பெயர்ச் சொல்லாகிய சொல்லின் பொருண்மையும், எல்லைப் பொருண்மையை வரைந் துணர்த்தலுடைய ஐந்தாம் வேற்றுமைப் பொருண்மையும், பண்பினுகி வருகின்ற ஐந்தாவதின் பொருஉப் பொருண்மையும், காலப் பொருண்மையான் அறியப்படுகின்ற ஏழாம் வேற்றுமைப் பொருண்மையும், [1]பற்று விடுதலாகிய ஐந்தாவதன் நீக்கப் பொருண்மையும், தீர்த லென்னும் வாய்பாட்ட தாகிய ஐந்தாவதன் நீக்கற் பொருண்மையும், அத் [2]தன்மைய பிற வேற்றுமைப் பொருளிடத்து நான்க [3]னுருபிற் [4]கூறுதலைப் பழைய நெறிமுறையாக வுடைய, அவை தோன்று நெறிக்கண், என்றவாறு.

உம்: யானையது கோடு கூரியது, என்புழி, யானைக்குக் கோடு கூரிது, என்றவா றுயிற்று. இவளைக் கொள்ளும் இவ் [5]வணி யென்புழி, இவளுக்குக் கொள்ளும் இவ் வணி யென் றுயிற்று. வாயாற் றக்கது வாய்ச்சி யென்புழி, வாய்க்குத் தக்கது வாய்ச்சி யென் றுயிற்று. ஆவினது கன்று, என்புழி, ஆவிற்குக் கன்று, என் றுயிற்று. கருவூரின் கிழக்கு, என்புழி, கருவூர்க்குக் கிழக்கு, என் றுயிற்று. சாத்தனின் நெடியன் என் புழி, சாத்தற்கு நெடியன், என் றுயிற்று. மாரியுள் வந்தான், என்புழி, மாரிக்கு வந்தான், என் றுயிற்று. ஊரிற் பற்று விட்டான், என்புழி, ஊர்க்குப் பற்று விட்டான், என் றுயிற்று. ஊரிற் றீர்ந்தான், என்புழி, ஊர்க்குத் தீர்ந்தான், என் றுயிற்று, என விவை யாம்.

இனி, அன்ன பிறவு மென்றதற் குதாகரணம்: ஊரிற் சேயன், என்புழி, ஊர்க்குச் சேயன், என் றுயிற்று. காட்டிற் கணியன், என்பது மது.

இவை யெல்லாம் உருபும் பொருளும் உடன் மயங்கின வெனக் கொள்க. மற்றிம் மயக்கம் அன்ன பிறவு மென்புழி, அதிகாரத்தானே யடங்காதோ வெனின், அஃது ஒன்றனோடு சென்று பரிமாறும் அதிகாரத்தது. இஃ தொன்று பலவற்றோடு சென்று மயங்கும் அதிகாரத்த தாகலின், அதனுள் அடங்கா தென்ப.

1. பற்று பற்று: திருத்தம். 2. தன்மைய[ன்] ன)
3. னுருபி[ற்](ல்)அ(ன)ட்த்துக் 4. கூறுதலை[நீக்க]ப் 5. வ[ழி](ணி)

அரசு:

என்பது இதன திது 'இற்று என்பது முதலாகத் தீர்ந்து மொழிக் கிளவி யீறாக வரு மேனை யுருபுகளோடு நான்க னுருபு மயங்குமாறு சொல்லியது.

இதன திது இற்று என்பது, யானையது கோடு கூரியது. என்பதனுள் இதன தென்பது, யானை; அது இது என்பது கோடு; இற் றென்பது கூரிது, என்க.

இனி, யானையது கோடு கூரி தென்புழி, யானைக்குக் கோடு கூரி தென்றும், அவளைக் கொள்ளு மிவ் வணி யென்புழி, அவட்குக் கொள்ளு மிவ் வணி யென்றும்; அதனாற் செயப்படற் கொத்த கிளவியும்: ²அவனாற் செயத் தகுமக் காரியம் என்புழி, அவற்குச் செயத் தகுங் காரிய மென்றும், வாயாற் றக்கது வாச்சி யென்புழி, வாய்க்குத் தக்கது வாச்சி யென்றும்; முறை கொண் டெழுந்த பெயர்ச் சொற் கிளவியும்: ஆவினது கன் றென்புழி, ஆவிற்குக் கன் றென்றும்; பால் வரைக் கிளவியும்: கருவூரின் கிழக் கென்புழி, கருவூருக்குக் கிழக்கு, என்றும்; பண்பி னாக்கமும்: சாத்தனின் நெடியன் என்புழி, சாத்தற்கு நெடிய னென்றும், காலத்தி னறியும் வேற்றுமைக் கிளவியும்: மாரியின் வந்தா னென்புழி, மாரிக்கு வந்தா னென்றும்; பற்று விடு கிளவியும்: ஊரின் பற்று விட்டா னென்புழி, ஊருக்குப் பற்று விட்டா னென்றும்; தீர்ந்து மொழிக்கிளவியும்: ஊரிற் றீர்ந்தா னென்புழி, ஊருக்குத் தீர்ந்தா னென்றும், நான்கா முருபு வந்தவாறு காண்க.

அன்ன பிறவு மென்றதனால், ஊருட் சேயன்; காட்டு ளணியன்; ஊரிற் பெரிது கருவூர்; ஊரு ளூற்றது செய்யான், என்புழி நான்காவது கொடுத்துச் சொல்லுக.

107. ஏனை யுருபு மன்ன மரபின
மான மிலவே சொன்முறை யான. (28)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் மயக்கமே உணர்த்துதல் நுதலிற்று.

உரை: நான்காம் வேற்றுமை உருபல்லன பிறவும் ஒன்றன் பொருண்மைக்கண் 'அது சென்றுழிச் செல்வன உளவேற் குற்ற மில்லை, என்றவாறு.

1. இத்து : திருத்தம். 2. அதனாற் : திருத்தம்.

வரலாறு: வழக்குப் பெற்றவழிக் கண்டு கொள்க.

தெய்வ:

நான்காவது ஒழிந்த உருபுகள் ஏனை உருபிற்கும் உரிய பொருளோடு மயங்கும், என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: நான்காவது ஒழிந்த உருபுகளும் ஏனைப் பொருளோடு மயங்கும் மரபினை யுடைய; அவை சொல் விலக்கணத் தாற் குற்ற மில, எ-று.

உ-ம்: "கோட்டுப்பூச் சூடினுங் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினிர் என்று" (குறள். 132-3)

இதனுள் ஒருத்திக்கு எனற்பாலது ஒருத்தியை யென இரண்டாவதனோடும் மயங்கி வந்தது.

"அறல்சாஅய் பொழுதோடெம் அணிநுதல் வேருகி" (கலி. பாலை. 26)

என்றவழிப் பொழுதின்கண் எனற்பாலது பொழுதோடென மூன்றுவது ஏழாவதனோடு மயங்கிற்று. பிறவும் அன்ன.

சேனா:

இ-ள்: நான்க னுரு பல்லாத பிற வுருபுந் தொகை யல்லாத தொடர் மொழிக்கண் ஒன்றன் பொருள் சிதையாமை ஒன்று மயங்குதற்கட் குற்ற மில, வழங்கு முறைமையான், எ-று.

எ-டு: நூலது குற்றங் கூறினன், என்னுந் தொடர் மொழிக்கண் நூலைக் குற்றங் கூறினன், எனவும், அவட்குக் குற்றேவல் செய்யும், என்னுந் தொடர் மொழிக்கண் அவளது குற்றேவல் செய்யும், எனவும் வருவன கொள்க. பிறவு மன்ன.

நச்சி:

இது, நான்கன் உருபு ஒழிந்தனவும் தம்முள் மயங்கும், என்கின்றது.

இ-ள்: ஏனை உருபும் அன்ன மரபின மானம் இல – நான்கன் உருபு அல்லாத பிற உருபும் தொகை அல்லாத தொடர் மொழிக்கண் ஒன்றன் பொருளிற் சிதையாமல் ஒன்று மயங்கு தற்கண் குற்றம் இல, சொல் முறையான – வழக்கு முறையான், எ-று.

உ-ம்: நூலது குற்றம் கூறினன்: நூலைக் குற்றம் கூறினன்; அவட்குக் குற்றேவல் செய்யும்: அவளது குற்றேவல் செய்யும், என வரும். பிறவும் அன்ன.

கல்:

என் னுதலிற்றோ வெனின், நான்காவ தொழித்து ஒழிந்த வேற்றுமை மயங்குமா றுணர்த்தல் நுதலிற்று.

நான்காவ தொழிந்த உருபுகள் ஐந்தும் நான்காவது போல பல வேற்றுமைப் பொருட்கண்ணுஞ் சென்று மயங்கு மிடத்துக் குற்ற மில்லை, அவ்வாறு சொல்லி வரும் வழக்கு முறைமைக்க ணென்றவாறு.

உ-ம்: வழக்கி னுளவேற் கண்டு கொள்க, என்பன, காணு மையிற் காட்டா மரபின வாம்.

அரசு:

என்பது நான்கா முரு பல்லாத பிற வுரு பொன்றன் பொருள் சிதையாமன் மயங்குதல் குற்றமில்லை, வழக்கு முறையால்.

உதா: நூலது குற்றங் கூறினன்: நூலைக் குற்றங் கூறினன். அவட்குக் குற்றேவல் செய்யும்: அவளது குற்றேவல் செய்யும், என ஒன்றன் பொருட்கண் ஒன்று வந்தவாறு காண்க.

108. வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்றா
வின்னதற் கிதுபய னாக வென்னு
மன்ன மரபி னிரண்டொடுந் தொகைஇ
யாயெட் டென்ப தொழின்முத னிலையே. (29)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், வினைச்சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: இவ் வெட்டொடுந் தோன்ற நிற்கும் வினைச்சொல், என்றவாறு.

வரலாறு: வனைந்தான், என்ற சொல்லாலே அவ் வெட்டும் பெறும், என்பது. பெறுமாறு: வனைந்தான், என்ற வினை விளங்கிற்று; அதனால் வனைதற் றொழின்மை விளங்கும்.

செய்வது என்பது, செய்தான் ஒருவன், என்பது விளங்கும். செயப்படுபொருள் என்பது, குடந்தொடக்கத்தன, என்பது விளங்கும். நிலம் என்பது, ஒரிடத்திருந்த தென்பது விளங்கும். காலம் என்பது, இரவானும் பகலானும், என்பது விளங்கும். கருவி என்பது, கோலும் திரிகையும், என இத் தொடக்கத்தன விளங்கும். இன்னதற்கு என்பது, ஒருவற்கு. என்பது விளங்கும். இது பயன் என்பது, அறமானும் பொருளானும் ஒரோவொன்று பயக்கும், என்பது விளங்கும்.

இஃது அவ் வெட்டிலக்கணமும் தோன்ற நிற்குமாறு. பிறவும் அன்ன.

தெய்வ:

எழுவகை வேற்றுமையினும் காரக வேற்றுமை வரையறுத்து உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: வினையும், கருத்தாவும், செயப்படுபொருளும், இடமும், காலமும், கருவியும் என்று சொல்லப்பட்டவற்றோடு, கொள்வதூம், பயனும் ஆகிய அவ் விரண்டொடும் தொகைஇ. அவ் வெட்டென்று சொல்லுவர், தொழிற் காரகம், என்றவாறு.

நெய்தான், என்றவழி, நெய்யப்பட்ட பொருளும், நெய்வதாகிய தொழிலும், நெய்தற்குக் கருவியும், நெய்தற்குக் காலமும், நெய்தற்கு இடமும், நெய்யுங் கருத்தாவும், அதனைக் கொள்வானும், அதனாற் பயனும் உள்ளவழியல்லது நெய்தற்றொழிலாற் செய்யப்பட்ட பொருள் உளதாகாமையின், அவற்றை முதனிலை, என்றார். அவற்றுள், பயனும் கொள்வதூம் ஏனையவற்றோடு ஒத்த சிறப்பின்மையின், இரண்டென வகுத்துக் கூறினார்.

இவற்றுள், தொழிலும் செயப்படு பொருளும் இரண்டாவதாயின: ஆடையை நெய்தான்; நெய்தலை நெய்தான்.

கருவியும் கருத்தாவும் மூன்றாவதாயின: சாலியனால் நெய்யப்பட்டது; நெம்பினால் நெய்யப்பட்டது.

கொள்வதூம். பயனும் நான்காவது ஆயின: அந்தணர்க்கு நெய்தான்; கூலிக்கு நெய்தான்.

இடமுங் காலமும் ஏழாவ தாயின: கூடத்துக்கண் நெய்தான்; காலைக்கண் நெய்தான்.

இவற்றுள் கருத்தா முதல் வேற்றுமையும் ஆம்: சாலியன் நெய்தான். அஃதேல். ஐந்தாவ தாகிய நீங்க நிற்றல் காரக மன்றோ வெனின், காரகம் என்பது தொழில் முதனிலை யாகலிற் காரகம் அன் றென்பது போலும் கருத்து. நீங்க நிற்றல் முதனிலை யாகாவாறு என்னை யெனின், ஆடையை நெய்து முடித்தான் பட்டமரத்தினின்றும் வாங்குதல் நீக்கம் ஆகலின், அத் தொழில் முடிந்தபின் நிகழினல்லது தொழிற் குறிப்பு அன்மையால் காரகம் அன் றாயிற்று. ஆறுவது அவ் வாடையைக் கிழமை செய்தான்மாட்டே நிகழ்தலின் அதுவும் காரகம் அன் றாயிற்று. முதற் காரணம் கருவியின் அடங்கும்: நூலால் நெய்தான்.

சேனு: (வேற்றுமை தோன்றுதற்கு ஏது)

இ-ள்: வினையும், வினைமுதலும், செயப்படு பொருளும், நிலமும், காலமும், கருவியு மாகிய ஆறும், இன்னதற்கு, இது பயனாக, என்று சொல்லப்படும் இரண்டொடுந் தொக்குத் தொழிலது முதனிலை யெட்டா மென்று சொல்லுவார் ஆசிரியர், எ-று.

ஈண் டேதுப் பொருண்மை கருவிக்கண் அடக்கப்பட்டது.

தொழின் முதனிலை யென்றது தொழிலது காரணத்தை. காரியத்தின் முன் னிற்றலின் முதனிலை யாயிற்று. காரண மெனினும் காரக மெனினு மொக்கும்.

வனைந்தான், என்றவழி, வனைதற் றொழிலும், வனைந்த கருத்தாவும், வனையப்பட்ட குடமும், வனைதற் கிடமாகிய நிலமும், அத் தொழில் நிகழுங் காலமும், அதற்குக் கருவி யாகிய திகிரி முதலாயினவும், வனையப்பட்ட குடத்தைக் கொள்வானும், வனைந்ததனா னாய பயனு மாகிய எட்டும் பற்றி அத் தொழில் நிகழ்ந்தவா று கண்டு கொள்க.

அஃதேல், தொழிலின் வேறாயது காரக மாகலின் வனைதற் றொழிற்கு அத் தொழில்தான் காரக மாமா. றென்னை யெனின், வனைந்தா னென்பது, வனைதலைச் செய்தா னென்னும். பொருட்

டாகலின், செய்தற்கு வினைதல் செயப்படு பொருள் நீர்மைத் தாய்க் காரக மா மென்பது. அற்றாகலி னன்றே, கொளலோ கொண்டா னென்பது இரண்டாம் வேற்றுமைத் தொட ராயிற் றென்பது.

இன்னதற்கு இது பய னாக, என்னும் இரண்டும் அருகி யல்லது வாராமையின், அன்ன மரபி னிரண்டொடு மெனப் பிரித்துக் கூறினார்.

அஃதேல், செய்வது முதலாகிய முதனிலை வேற்றுமை யோத்தினுள் கூறப்பட்டமையின் இச் சூத்திரம் வேண்டா வெனின், அற்றன்று; இரண்டாவதற் கோதிய பொரு ளெல்லா வற்றையுஞ் செயப்படு பொரு ளெனத் தொகுத்து, ஏதுவைக் கருவிக்கண்ணும் வினை செய் யிடத்தைக் காலத்தின்கண்ணும் அடக்கி ஏழாகச் செய்து அவற்றொடு ஆண்டுப் பெறப்படாத வினை யென்னு முதனிலை கூட்டி, எட்டென்று ராகலின், இப் பாகுபாடு ஆண்டுப் பெறப்படாமையான், இச் சூத்திரம் வேண்டு மென்பது.

இதனாற் பயன்

"நிலனும் பொருளுங் காலமும் கருவியும்" (சொல் – 234)

எனவும், "செயப்படு பொருளைச் செய்தது போல"

(சொல் – 246)

எனவும் வினைக் கிலக்கணங் கூறுதலும் பிறவு மாம்.

நச்சி:

இது, வேற்றுமைப் பொருள்கள் தோன்றும் இடம் கூறு கின்றது.

இ-ள்: வினையே–வினைப் பெயரையும் வினைச் சொல்லையும் தோற்றுவிக்கும் உண், தின், செல், கொள், வனை என்பன முதலாகிய வினையும், செய்வது – அவ் வினையைச் செய்யும் வினை முதலும், செயப்படு பொருளே – அவ் வினைமுதல் அதனைச் செய்ய அத் தொழிலை யுறும் பொருளும், நிலனே – அத் தொழி லைச் செய்கின்ற இடமும், காலம் – அத் தொழிலைச் செய்யும் காலமும், கருவி – அவ் வினைமுதல் தொழிலினைச் செய்யுங் காலத்து அதற்குத் துணையாம் கருவிகளும் ஆகிய ஆறும், இன்னதற்கு–ஒரு பொருள் நின்று அவ் வினைமுதல் செய்யப்பட் டதனை ஏற்றுக் கோடற்கு உபகாரமாக, இது பயன் ஆக –

அப் பொருள் அதனை ஏற்றுக் கொண்டதனுன் அவ் வினைமுதற்கு இப் பயன் உண்டாக, என்னும் அன்ன மரபின் இரண்டொடும் தொகைஇ - என்று சொல்லப்படும் அத் தன்மைத் தாகிய முறைமையினையுடைய இரண்டோடும் தொக்கு, தொழில் முதல் நிலை ஆ யெட்டு என்ப - காரியத்திற்கு முன்னிற்கும் காரணம் அவ் வெட்டும் என்று சொல்லுவர் புலவர், எ-று.

'ஆக' என்றதனை 'இன்னதற்காக' என்றும் கூட்டுக.

உ-ம்: வனைந்தான், என்றவழி 'வனை' என்னும் வினையும், வனைந்த கருத்தாவும், வனையப்பட்ட குடமும், வனைதற்கு இடமாகிய நிலமும், அத் தொழில் நிகழும் காலமும், அதற்குக் கருவியாகிய திகிரி முதலியனவும், அதனைக் கொள்வானும், அவன் கொண்டதனுல் பெறும் பயனும் ஆகிய எட்டுக் காரணத்தானும் தொழில் நிகழ்ந்தவாறு காண்க. ஒழிந்த வினைகட்கும் அவ்வாறு விரிக்க.

வினையை முன் வைத்தார், சொற்களையும் தோற்றுவித்து, மேல்நிகழும் காரியத்திற்கு ஏனை ஏழினும் சிறந்த காரணமாய் நிற்றலின். வினையும் தொழிலும் வேறு என்பது இச் சூத்திரத்தான் உணர்தற்கு 'வினை' என்று எடுத்து 'தொழில் முதல் நிலையே,' என முடித்தார்.

வனைந்தான் என்பதற்குக் குடத்தை வனைதலைச் செய்தான், என்று பொருள் தந்துழிச் செய்தான், என்ற தகரம் காலம் காட்டித் தொழிலைத் தோற்றுவித்தவாறும், வனை என்னும் வினை காலம் காட்டாமல் நின்றவாறும், வனைதல் என விரிந்துழியும் புடைபெயர்ச்சி மாத்திரம் அன்றிக் காலம் காட்டாமல் நின்றவாறும் உணர்க. காரியத்திற்கு யாண்டும் காலங் காட்டும் எழுத்துக்களோடு கூடிய செய் என்பதே வாசகம் என்றுணர்க.

இக் காரிய வாசகம், இவ்வா றன்றி, ஒரு சொல் முழுவதும் தானுய் நிற்பனவும் உள. அவை,

'கறைமிட றணியலும் அணிந்தன்று' (புறம் 1: 5) என்புழிக் கறை மிடற்றை அழகு பெறுதலையும் செய்தது, எனவும்,

'இனியான் உண்ணலும் உண்ணேன்' (கலி. 23; 7) என்புழி, இனி யான் சோற்றை உண்ணுதலையும் செய்யேன், எனவும்,

'வாழ்தலும் (வாழலும்) வாழேன் (கலி, 23:7) என்புழி, இனி யான் உயிரை வாழுதலையும் செய்யேன், எனவும் வந்தவற்றுள் அணிந்தன்று, உண்ணேன், வாழேன் என்பன முழுதும் காரிய வாசக மாயே நின்றவாறு காண்க.

இனி, வனைந்தான், என்பதன்கண் செய்வது எழுவாயாயும், வினையும், செயப்படு பொருளும் இரண்டாவ தாயும், வினை முதலும், கருவியும் மூன்றாவ தாயும், ஒருவன் ஏற்றுக்கொண்டவழி, இன்னதற்கு இது பயன் நான்காவ தாயும், நிலமும் காலமும் ஏழாவ தாயும் சேர்ந்தன. இன்னும், வனைந்தவன் கொடுத்த குடம் அவன் கையினின்று நீங்குதல் ஐந்தாவ தாயும், அதனை ஒருவன் ஏற்றுக் கொண்டவழி, அஃது அவன் உடைமை யாதல் ஆறாவ தாயும் சேருமாறும் உணர்க. கருவிக்கண் அடங்கும் ஏதுவும் ஐந்தாவதற்கு வரும்.

இங்ஙனம் இவ் வுருபுகள் இவ் வினைச்சொற்கண் தோன்றுதல் பற்றி இச் சூத்திரத்தை வினையியலிற் கூறாது ஈண்டுக் கூறினர்.

'பெயர்நிலைக் கிளவி' (வே-மை-ல். சூ.9) 'இரண்டாகுவதே' (வே-மை-ல். சூ. 10) என்னும் சூத்திரங்களால் இக் கருத்து உணர்க.

**கல்:**

என் னுதலிற்றோ வெனின், இஃது வினைச்சொல் விலக்கண முணர்த்த னுதலிற்று.

இ-ள்: தொழிலினையும், தொழில் நிகழ்த்துங் கருத்தா வினையும், அவனாற் செயப்படும் பொருளினையும், அவன்றொழில் நிகழ்த்தற்கு இட மாகிய நிலத்தினையும், அதற் கினமாகிய காலத்தினையும், அவற்குத் துணை யாயின கருவியினையும், இன்னாற்கு [1]'இவன் இதைச் செய்கின்றான், என்று சொல்லப்படுகின்ற வப் பொருளினையும், இவனை......... ... ... ... ... ... ... பய மாகச் செய்யப்படுகின்ற வப் பொருண்மையினையும், தொகை செய்து அவ் வெட்டு மென்று சொல்லுவ ராசிரியர், வினைச்சொற் பிறத்தற் கிட மாகிய பொருள துநிலைமையை, என்றவாறு.

---

1. இவன் [இது செய்யப்படுகின்றான்] (இதைச் செய்கின்றான்)

உ-ம்: வனைந்தான், என்பது. இதனுள் எட்டும் வந்தவாறு: வனைந்தா னென வனைதற் றொழினைமை விளங்கிற்று. வனைந்தான் எனத் தொழி லியற்றுவான் ஒருவனும் விளங்கினான். வனையப் பட்ட குண்ட முதலாய செயப்படு பொருள் விளங்கின. வனைந்தோ ரிடம் அகமானும் புறமானும் விளங்கிற்று. கோலுந் திகிரி முதலாகிய கருவியும் [1]விளங்கின. வனைவித்துக் கொண் டானும் [2]விளங்கினான். வனைந்தான் பெற்ற தொரு பயனும் மரபானும் அறமானும் பொருளானும் விளங்கிற்று. பிறவு மன்ன.

வினைய திலக்கணம் வினை யியலுட் கூறற் பாலது; அதனை ஈண்டுக் கூறிய தென்னை யெனின், வேற்றுமைகளைப் பெயர்க்கே உரிமை செய்து கூறினமையின் வினையோ டென்னு மியல் பில வென்பது பட்டு நின்றமையின் அவ் வினை வருங்காலும் வேற்றுமைகளோடு வருவ தென்ப தறிவித்தற்கு ஈண்டுக் கூறப் பட்டது.

[3]இங்ஙனங் கூறிய எட் டிலக்கணங்களுள் வினை யென்பது பொருட் குறிப்பால் இரண்டாவதாய்ச் சேர்ந்தது. செய்வது எழுவாயாய்ச் சேர்ந்தது. செயப்படு பொருள் இரண்டாவதாய்ச் சேர்ந்தது. நிலமுங் காலமும் ஏழாவதாய்ச் சேர்ந்தன. கருவி மூன்றாவதாய்ச் சேர்ந்தது. இன்னதற் கிது பயனாக வென்னு மிவ் விரண்டும் நான்காவதாய்ச் சேர்ந்தன. இவ்வாறு ஆறா வதும், விளியும் ஒழிய மற்றைய வாறும் வந்தவாறு கண்டு கொள்க.

அரசு:

என்பது, வினைப் பெயரையும் வினைச் சொல்லையும் தோற்று விக்கும் உண், தின், செல், சொல், வனை யென்றது முதலாகிய வினையு மவ் வினையைச் செய்யுங் கருத்தாவுங் கருத்தாவாற் செய்யப்படும் பொருளும், அது செய்யுமிடமும், அது செய்யுங் காலமும், அது செய்கற்குத் துணையாகிய கருவியு மாக வாறும், இன்னாற் கிது பயம்படு மென்று சொல்லப்படு மத் தன்மைத் தாகிய முறைமையினை யுடைய விரண்டோடுந் தொக்குக் காரி யத்திற்கு முன்னிற்குங் காரண மவ் வெட் டென்று சொல்லுவர் ஆசிரியர்.

---

1. விளங்கிற்று: திருத்தம். 2. விளங்கி[ற்று](னான்) 3. இ[து]ங்ஙனம்

வனைந்தா னென்றவழி, வனை யென்னும் வினையும் வனைதற்குக் கருத்தாவும், வனையப்பட்ட குடமும், வனைதற் கிட மாகிய நிலமும், அத் தொழி னிகழுங் காலமும், அதற்குக் கருவி யாகிய திகிரி முதலியனவும், அதனைக் கைக்கொள்வானும், அதனைக் கொண்டதனாற் பெறும் பயனு மாக வெட்டுக் காரணத்தானுந் தொழி னிகழ்ந்தவாறு காண்க. ஒழிந்தனவற்றிற்கு மிவ்வாறு விரிக்க.

இதனை வினையியலுட் கூறு தீண்டுக் கூறியது, தொழில் வருங்கால் வேற்றுமையோ டல்லது வாரா தென்றற்கு. அவை வருமாறு: அட்டா னென்புழி, சாத்தன் சோற்றைக் குழிசியாற் பார்ப்பார்க்கு மச்சி நெற் கொண்டு கூ............யு ளென்பது விளங்கும். இதனு ளெழுவாயு மிரண்டாவது மூன்ருவது நாலாவது மைந்தாவது மேழாவதும் வந்தவாறு காண்க. சோறு பார்ப்பாரது ஆதலின் ஆருவதூஉம் வந்தது. பிறவு மன்ன.

109. அவைதாம்
வழக்கியன் மருங்கிற் குன்றுவ குன்றும். (30)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மேற் சொல்லப் பட்ட வினைத்திறம் படுவ தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: மேற் சொல்லப்பட்ட எட்டும் உடன் விளங்காது குறைய நிற்பனவும் உள, வழக்கினுள் வினைச்சொற்கள், என்றவாறு.

வரலாறு: கொடி யாடிற்று, என்புழிச் செயப்படு பொருளும், இன்னார்க்கு என்பதும், இன்னது பயக்கும் என்பதும் இல்லை. பிறவும் அன்ன.

தெய்வ:

மேலதற்கு ஓர் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் சொல்லப்பட்ட எண்வகைப் பொருளினும் வழங்கிய நெறிக்கண் குறைவன குறையும், எ-று. தொழில் கண்டுழி யெல்லாம் இவை யெட்டும் வருதல் நியம மன்று, என்றவாரும்.

உ-ம்: ஆடையை நெய்தான் றனக்கு, என்றவழிக் கொள்வான் பிறன் ஒருவன் இன்மையின் பொருண்மை குறைந்து நின்றது. உலகினைப் படைத்தான், என்றவழிக் கொள்வானும் பயனும் இன்றி வந்தது. கொடி ஆடிற்று, என்றவழி கருத்தாவும் கொள்வானும் பயனும் இன்றி வந்தது. பிறவும் அன்ன.

சேனா:

இ-ள்: மேற் கூறப்பட்ட தொழின் முதனிலை தாம் எல்லாத் தொழிற்கும் எட்டும் வருமென்னும் யாப்புறவில்லை; வழக்கின்கட் சில தொழிற்கட் குன்றத் தகுவன குன்றி வரும். எ-று.

குன்றத் தகுவன வாவன செயப்படு பொருளும், ஏற்பதும், பயனு மாம்.

கொடி யாடிற்று; வளி வழங்கிற்று, என்புழி, செயப்படு பொருளும் ஏற்பதும் பயனு மாகிய முதனிலை யில்லை யாயினும், ஒழிந்தனவற்றான் ஆடுதலும் வழங்கலு மாகிய தொழி னிகழ்ந்தவாறு கண்டு கொள்க.

இதனாற் பயன், எல்லாத் தொழிற்கும் முதனிலை யெட்டுங் குன்றாது வருமோ, சில தொழிற்குச் சில குன்றி வருமோ வென்னும் ஐயம் நீங்குதலும், செயப்படுபொருள் குன்றிய வினையை யுணர்த்துஞ் சொல் இரண்டாவததனோ டியையா தென்பது பெறுதலு மாம்.

நச்சி:

இது, மேலதற்கு ஓர் புறனடை.

இ-ள்: அவைதாம் – மேல் கூறப்பட்ட தொழில் முதல் நிலைகள்தாம், வழங்கியல் மருங்கிற் குன்றுவ குன்றும்– (எல்லாத் தொழிற்கும் எட்டும் வரும் என்னும் யாப்புறவு இல்லை) வழக்கின்கண் சில தொழிலிற் குன்றத் தகுவன குன்றும், எ–று.

குன்றத் தகுவன செயப்படு பொருளும், இன்னதற்கு இது பயன் என்பனவு மாம்.

உ–ம்: கொடி ஆடிற்று; வளி வழங்கிற்று, என வரும்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், மேலதற் கோர் புறனடை யுணர்த்துத னுதலிற்று

இ-ள்: மேற் சொல்லப்பட்ட வெண் வகை இலக்கணமும் வழக்கு நடத்துமிடத்துக் குறைவன குறைந்து வரும், என்றவாறு.

உ-ம்: கொடி யாடிற்று, என்பது, செயப்படு பொருளும், இன்னார்க் கென்பதும், இது பயனாக வென்பதும் இல்லை. துஞ்சும், என்புழியும், இவ்வாறு குன்றின வுள. பிறவு மன்ன.

அரசு:

என்பது மேற் சொல்லப்பட்ட வெட்டு முடன் விளங்காது வழக்கின்கட் சில தொழிற்கட் குன்றத் தகுவன குன்றி வரும்.

உதா – கொடி யாடிற்று: இதனுட் செயப்படு பொருளும், இன்னதற் கிது பய னென்பதூஉங் குறைந்து, [1]வந்தன. பிறவு மன்ன.

110. முதலிற் கூறுஞ் சினையறி கிளவியுஞ்
சினையிற் கூறு முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள் பெயரு
மியன்றது மொழிதலு மிருபெய ரொட்டும்
வினைமுத லுரைக்குங் கிளவியொடு தொகைஇ
* யனைமர பினவே யாகுபெயர்க் கிளவி (31)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஆகுபெயர் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: முதலிற் கூறுஞ் சினையறி கிளவித் தொடக்கத்தன ஏழு கூறிய பின்னை, அனை மரபினவே என்றார், அவ் விலக்கணத் தன அவை, என்றவாறு.

முதலிற் கூறுஞ் சினையறி கிளவி என்பது, முதலாற் சினையைச் சொல்லுதல், என்றவாறு: அது, தெங்கு தின்றான்; கடுத் தின்றான், என வரும்.

1. வந்தது: திருத்தம்.

சினையிற் கூறும் முதலறி கிளவி என்பது, சினையின் பெயர் கூற முதல் விளங்குவது, என்றவாறு: அது, இலை நட்டு வாழும்; பூ நட்டு வாழும், என வரும்.

பிறந்தவழிக் கூறல் என்பது, ஓரிடங் கூற அவ் விடத் தாயின பொருண்மையி னிற்றல், என்றவாறு: அது, குழிப் பாடி, என வரும்.

பண்பு கொள் பெயர் என்பது, ஒரு குணங் கூற அக் குண மடைந்த பொருள் விளங்க நிற்றல்: அது வருமாறு: நீலம், என்ப தோர் பண்பு; அப் பண்புச் சொல் அப் பண்பினை யடைந்த ஆடையானும் பிறவாற்றானும் விளங்கும், என்பது.

இயன்றது மொழிதல் என்பது, இயன்றது என்பது செய்கை; அச் செய்கை சொல்; அச் செய்கை நிகழ்ச்சியி னுய வேறுபாடும் அப் பெயர்த்தாய் விளங்கும் அது வருமாறு: ஏறு, குத்து என, எறியவும் குத்தவு மாயின அத் தொடக்கத்தன விளங்கி நிற்கும், என்பது.

இரு பெய ரொட்டு என்பது, இரண்டு பெயர் ஒட்டி நிற்பது: அது சொல்லப் பிறிது பொருள் விளங்கும்; அது வருமாறு: பொற் றொடி, என்பது, இரு பெயர் நின்று ஒட்டிற்று; அது சொல்லப் பொற் றொடி தொட்டாளை விளக்கும், என்பது.

வினைமுத லுரைக்குங் கிளவி என்பது, வினை செய்தான் பெயர் சொல்ல, அவன் செய் பொருளை யறிய நிற்றல், என்ற வாறு. அது, தொல்காப்பியம், (கபிலம்) என்பது.

ஆகுபெயர் என்ற பொருண்மை யென்னை யெனின், ஒன்றன் பெயர் ஒன்றற் காய் நிற்றல், என்றவாறு.

**தெய்வ:**

ஆகுபெயர்க்கு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

வேற்றுமைப் பொருள் மயக்கம் உணர்த்திற்று எனினும் அமையும்.

---

* அளவை மரபின: தெய்வ; சேனா; நச்சி; கல்; அரசு; பாடம்.

இ-ள்: முதலிற் கூறும் சினையறி கிளவி முதலாக எண்ணப் பட்டனவும், வினைமுதல் உரைக்கும் கிளவியொடு கூட அத் தன்மை யாகிய மரபினை யுடையவும் ஆகுபெயர்ச் சொல்லாம், எ-று.

மரபினவும் என்னும் உம்மை எஞ்சி நின்றது. ஏகாரம் எண்ணுக் குறித்து நின்றது. ஆம் என்பது எஞ்சி நின்றது.

உ-ம்: முதலிற் கூறும் சினையறி கிளவி என்பது, சினைப் பொருளை முதலாற் கூறும் பெயர்ச் சொல்: கடு என்பது; கடுவினது காயைக் கடு, என வழங்குதலின், ஆகுபெய ராயிற்று.

சினையிற் கூறும் முதலறி கிளவியாவது: முதற் பொருளைச் சினையாற் கூறும் பெயர்ச்சொல்: பூ நட்டார், என்பது; நடப்படு வது பூவினது முதலாதலின், அம் முதலைப் பூ என்று வழங்கு தலின் ஆகுபெய ராயிற்று.

''நகையச் சாக நல்லமிர் து கலந்து
நடுநிலை நிரம்பிய நயமி லொருகை'' (பரி. 3: 33, 34) என் பதும் அது.

பிறந்தவழிக் கூற லென்பது, இடத்து நிகழ் பொருளை இடத்தாற் கூறுதல்: வேளா காணி, என்பது, வேளா காணியிற் பிறந்த ஆடையை அப் பெயரால் வழங்குதலின், ஆகுபெய ராயிற்று. யாழ் கேட்டான் என்பதும் அது, யாழிற் பிறந்த ஓசை யையும் யாழ், என்றமையான்.

பண்பு கொள் பெயராவது: பண்பின் பெயரால் பண்புடை யதனைக் கூறல்; நீலம், என்றவழி அந் நிறத்தை உடைய மணியை நீலம் என்ப தாதலின், ஆகுபெய ராயிற்று.

இயன்றது மொழிதலாவது இயன்றதனுன் மொழிதல் என விரியும். அது காரியப் பொருளைக் காரணத்தான் மொழிதல்: பொன் பூண்டான், என்றவழி, பொன்னினுன் ஆகிய அணி கலத்தைப் பொன் என்று வழங்குதலின், ஆகுபெய ராயிற்று. தன் மெய் காட்டி, இஃதோர் அம்பு; இஃதோர் வேல், என்ற வழி, அவை பட்ட வடுவை அவற்றிற்குக் காரண மாகிய கருவிப் பெயரான் வழங்குவனவும் அமையும்.

இன்னும் இயன்றது மொழிதல், என்பதன்கண் இரண்டாவதை விரித்து இயன்றதனை மொழிதல் என வாம்; அது காரணப் பொருளைக் காரியத்தாற் கூறுதல்: நெல் லாதல், காணமாதல் ஒருவன் கொடுப்பக் கொண்டவன் இற்றைக்குச் சோறு பெற்றேன், என்னும்; அவ்வழி, சோற்றுக்குக் காரணமாகிய நெல்லுங் காணமும் சோறு, என ஆகுபெய ராயின.

இரு பெய ரொட்டு, என்பது இரண்டு பெயர் தொக்கு ஒரு சொன் னீர்மைப்பட்டு மற்றொரு பொருள் தரு பெய ராகி வருவது: அது, துடி யிடை, என்பது. துடி போன்ற இடையினை யுடையாளைத் துடியிடை என்ப வாகலின் ஆகுபெய ராயிற்று.

இஃது உவமத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை யன்றோ எனின் ஒட்டுப்பட்ட பொருளோடு ஒற்றுமைப் பட்ட உருபு. அன்மொழித் தொகையாவது அப் பொருளின் வேறுபட வரும். அன்ன தாதல் அன்மொழி என்றதனுலும் விளங்கும். அதனுனே யன்றே,

"பண்புதொக வருஉங் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னனும்
ஈற்றுநின் றியலும் அன்மொழித் தொகையே"

(எச்சவியல் 21) என ஓதுவா ராயிற்று.

வினைமுத லுரைக்குங் கிளவி, என்பது – வினையு முதலும் உரைக்கும் கிளவி என உம்மைத் தொகையாகக் கொள்ளப் படும். கொள்ளவே, வினையால் உரைக்குங் கிளவியும், வினை முதலான் உரைக்குங் கிளவியும் ஆகுபெய ராம். என்றவாறும். வினையான் உரைக்கப்பட்டன: எழுத்து, சொல் என்பன, எழுதப்பட்டதனையும், சொல்லப்பட்டதனையும் அப் பெயரான் வழங்குதலின், ஆகுபெய ராயிற்று. என் காவலிலே கட்டான் என்பதும் அது.

வினைமுதலான் உரைக்கப்பட்டன செய்தானுற் செயப்படு பொருட்குப் பெயராகி வருவன: சாலியனல் நெய்யப்பட்ட ஆடையைச் சாலியன், என்பது.

தொல்காப்பியம் என்பதோ எனின், அஃது ஈறு திரிந்து நின்றவதனல் செய்யப்பட்டது என்னும் பொருளை விளக்குதலின் ஆகுபெய ராகாது; காரணப் பெய ராம்.

'அனைய மரபின' என்றதனான் ஈண்டு ஓதப்பட்டனவற்றுள் அடை யடுத்து வருவனவுங் கொள்க. தாழ்குழல், என்றவழி அதனை யுடையாட்குப் பெய ராகி வருதலின், ஆகுபெய ராயிற்று.

இது வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை யன்றோ வெனின், ஆண்டு எடுத்து ஓதாமையினானும், பொருள் ஒற்றுமைப்படுதலானும் ஆகாது, என்க.

சேனா: (இதன்கண் ஆகுபெயர் முடிவு: அதன் இயல்பு)

இ-ள்: முதற்சொல் வாய்பட்டாற் கூறப்படுஞ் சினை யறி கிளவியும், சினைச்சொல் வாய்பட்டாற் கூறப்படும் முத லறி கிளவியும், நிலத்துப் பிறந்த பொருண்மேல் அந் நிலப் பெயர் கூறலும், பண்புப் பெயர் அப் பண்புடையதனை யுணர்த்திப் பண்பு கொள் பெயராய் நின்றதூஉம், முதற்காரணப் பெயரான் அக் காரணத்தா னியன்ற காரியத்தைச் சொல்லுதலும், அன் மொழிப் பொருண்மே னின்ற இருபெய ரொட்டும், செயப்பட்ட பொருண்மேல் அதனைச் செய்தான் பெயரைச் சொல்லுஞ் சொல்லு மென அப் பெற்றிப்பட்ட இலக்கணத்தை யுடையன ஆகுபெயர், எ-று.

எ-டு: கடுத் தின்றான்; தெங்கு தின்றான், என முதற் பெயர் சினைமேலும், இலை நட்டு வாழும்; பூ நட்டு வாழும், எனச் சினைப் பெயர் முதன்மேலும், குழிப்பாடி நேரிது, என நிலப் பெயர் அந் நிலத்துப் பிறந்த ஆடைமேலும், இம் மணி நீலம், எனப் பண்புப் பெயர் அப் பண் புடையதன்மேலும், இக் குடம் பொன், எனக் காரணப் பெயர் அதனா னியன்ற காரியத்தின் மேலும், பொற்றொடி வந்தாள், என இருபெய ரொட்டு அன்மொழிப் பொருள்மேலும், இவ் வாடை கோலிகன், எனச் செய்தான் பெயர் செயப்பட்டதன்மேலும் வந்தவாறு கண்டு கொள்க.

அன்மொழித் தொகை எச்ச வியலுள் உணர்த்தப்படுதலின் ஈண்டுக் கூறல் வேண்டா வெனின்: 'அன்மொழித் தொகை, தொகை யாத லுடைமையான் ஆண்டுக் கூறினார்; இயற்கைப் பெயர், ஆகுபெயர் எனப் பெயர் இரண்டா யடங்கும்வழி ஒரு பெயர்ப் பட்ட தென மேலும் வந்தவாறு கண்டு கொள்க.

அன்மொழித் தொகை எச்சவியலு ளுணர்த்தப்படும்; அதனால் அவ் வாகுபெய ராத லுடைமை பற்றி ஈண்டுக் கூறினார்; எச்சவியலுட் கூறப்பட்ட வாயினும் வினையெச்ச முதலாயின வினைச்சொல் லாதலும், இடைச்சொல் லாதலு முடைமையான் அவற்றை வினையியலுள்ளும், இடையியலுள் ளுங் கூறியவாறு போல வென்பது.

தொல்காப்பியனானுங் கபிலனானுஞ் செய்யப்பட்ட நூலைத் தொல்காப்பியம், கபில மென்றல் வினைமுத லுரைக்குங் கிளவி யென்றாரால் உரையாசிரிய ரெனின், அற்றன்று; ஒருமொழி யிலக்கணம் ஈண்டுக் கூறா ராயினும், வெற்புச் சேர்ப்பு என்னும் பெய ரிறுதி, இதனை யுடையா னென்னும் பொருள் தோன்ற, அன் னென்ப தோ ரிடைச்சொல் வந்து வெற்பன், சேர்ப்பன் என நின்றாற் போல, தொல்காப்பியன், கபிலன் என்னும் பெய ரிறுதி, இவனாற் செய்யப்பட்ட தென்னும் பொருள் தோன்ற அம் மென்ப தோ ரிடைச்சொல் வந்து, அன் கெடத் தொல் காப்பியம், கபிலம், என நின்றன வென்பது ஆசிரியர் கருத்தாம். அதனான், அவை யுதாரண மாதல் உரையாசிரியர் கருத்தன் றென்க.

அனைய மரபின வென்றது, அவ்வா றியாதானு மோ ரியைபு பற்றி ஒன்றன் பெயர் ஒன்றற் காதலென, ஆகுபெய ரிலக் கணத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு.

ஒன்றன் பொருட்கண் ஒன்று சேறலென்னு மொப்புமை யான் இவற்றை யீண்டுக் கூறினார். அஃதேல், ஆகுபெயர் எழுவாய் வேற்றுமை மயக்க மாதலான் ஈண்டுக் கூறினா ரென்றா ரால் உரையாசிரிய ரெனின், ஆகுபெயர் ஏனை வேற்றுமையு மேற்று நிற்றலானும், எழுவாய் வேற்றுமையாய் நின்றவழியும் அது பிறிதோர் வேற்றுமைப் பொருட்கட் சென்று மயங்காமை யின் வேற்றுமை மயக்க மெனப்படாமையானும், அது போலி யுரை, என்க.

நச்சி :

இது, குறிப்பால் பொருள் உணர்த்தும் பெயர் இத்துணை, என்கின்றது.

இ-ள்: முதலிற்கூறும் சினை அறி கிளவியும் – முதற்சொல் வாய்பாட்டால் கூறப்படும் சினைப்பொருளை அறிவிக்கும்

சொல்லும், சினையிற் கூறும் முதல் அறி கிளவியும் - சினைச்சொல் வாய்பாட்டால் கூறப்படும் முதற் பொருளை அறிவிக்கும் சொல்லும், பிறந்தவழிக் கூறலும் – நிலத்துப் பிறந்த பொருள் மேல் அந் நிலத்துப் பெயர் கூறலும், பண்பு கொள் பெயரும் – பண்புப் பெயர் அப் பண் புடையதனை உணர்த்தி நிற்கும் சொல்லும், இயன்றது மொழிதலும் –முதற் காரணப்பெயரான் அக் காரணத்தான் இயன்ற காரியத்தினைச் சொல்லுதலும், இரு பெயர் ஒட்டும் – அன்மொழிப் பொருள்மேல் நில்லாத இருபெய ரொட்டும், வினைமுதல் உரைக்கும் கிளவியொடு தொகைஇ – செய்யப்பட்ட பொருள்மேல் அதனைச் செய்தான் பெயரைச் சொல்லும் சொல்லோடே முற்கூறிய ஆறும் தொக்கு, அனைய மரபினவே ஆகுபெயர்க் கிளவி – அப் பெற்றிப்பட்ட இலக் கணத்தை உடைய வாகும், ஆகுபெய ரான சொல், எ–று.

உ-ம்: கடுத் தின்றான்; தெங்கு தின்றான்; இலை நட்டு வாழும்; பூ நட்டு வாழும்; குழிப்பாடி நேரிது, என வரும். இவ் வாடை கோவிக்கன், என்பதும் அது.

'நீலம்' என மணியை உணர்த்திற்று; 'பொன்' எனக் குடத்தை உணர்த்திற்று. 'மக்கட் சுட்டு' என இரண்டும் அல்லீத தோர் பொருளை உணர்த்தாது, மக்களை உணர்த்திற்று, நன்கு மதிக்கும் பொருள் மக்களே ஆதலின்.

பொற்றொடி என்பது அன்மொழி; ஆகுபெயரன்மை உணர்க.

இச் சூத்திரத்தானே, இயற்கைப் பெயரே அன்றிக் குறிப் பால் பொருள் உணர்த்தும் பெயரும் பெரும்பான்மை, என்றார்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், ஆகுபெய ராமா றுணர்த்த னுதலிற்று.

இ–ள்: முதற் பொருள் எதுவாகக் கூறப்படுஞ் சினைப் பொருளை அறியுஞ் சொல்லும், சினைப் பொரு ளேதுவாகக் கூறப்படு முதற் பொருளை யறியுஞ் சொல்லும், ஒரு பொருள் பிறந்த விடத்தினைச் சொல்ல அவ் விடத்தினுட் பிறந்த பொருளை யுணரநிற்குஞ் சொல்லும், ஒரு பண்பினைச் சொல்ல அப் பண் படைந்த பொருளினை விளங்க நிற்குஞ் சொல்லும்,

ஒரு தொழிலினைச் சொல்ல அத்தொழி னிகழ்ச்சியின் அதனை யுணாவிற்குஞ் சொல்லும், ஒரு பொருண்மேல் இரண்டு பொருளினை யொட்டிச் சொல்ல, அஃதப் பொருளினை யொழிய வதனை யுடைய வேறோர் பொருளினை யுணர நிற்கும் சொல்லும், ஒரு வினையை நிகழ்த்த ..........னைச் சொல்ல அதனான் நிகழ்த் தப்பட்டதனை யுணர நிற்கும் சொல்லும், இவை யெழுந்த வழ் மாபிற் ஞெக்க தம் பெயர் கூறியவழிக் காரணமாய் நின்றவற் றையே தம் மிலக்கணமாக வுடைய [1]சொற்கள் ஆகுபெயர்ச் சொல் லாம், என்றவாறு.

உ-ம்: முதலிற் கூறுஞ் சினையறி கிளவி: கடுத் தின்றான்; தெங்கு தின்றான், என்பன.

சினையிற் கூறு முதலறி கிளவி: இலை நட்டு வாழும்; பூ நட்டு வாழும், என்பன.

பிறந்தவழிக் கூறல்: குழிப்பாடி நேரிது.
பண்புகொள் பெயர்: நீலம், என்பது.
இயன்றது மொழிதல்: ஏறு, குத்து, என்பன.
இருபெய ரொட்டு: பொற்றொடி, என்பது.

இஃது அன்மொழித் தொகையன்றோ வெனின் படுத்த லோசை பட்டவழி அன்மொழித் தொகை யாம், எடுத்த லோசை பட்டவழி ஈண்டு, ஆகுபெய ராகு மென்பது.

வினைமுத லுரைக்குங் [2]கிளவி: தொல்காப்பியம், கபிலம், என்பன.

அரசு:

என்பது, முதலிற் கூறுஞ் சினை யறி கிளவி முதலாக வினை முத லுரைக்குங் கிளவி யீறாக கூறின ஏழு மாகுபெயர்ச் சொன் மரபின.

உதா:— முதலிற் கூறுஞ் சினையறி கிளவி: கடுத் தின்றான்; புளித் தின்றான், என்பன.

சினையிற் கூறு முத லறி கிளவி: இலை நட்டு வாழும்; பூ நட்டு வாழும், என்பன. இலைக்கொடி, பூமரம் நட்டு வாழ்வானை யொன் றறிக.

1. [வான்]சொற்கள் 2. கி[ழ](ள)வி

பிறந்தவழிக் கூறல்: குழிப்பாடி: குழிப்பாடி யென்னு மூரிற் பிறத்தலாற் குழிப்பாடி, என்று ஆடைக்குப் பெயரா யிற்று.

பண்பு கொள் பெயர்: நீலம், சிவப்பு, என்பன. பண்பொடு பொருந்தலாற் பொருட் கதுவே பெய ராயிற்று.

இயன்றது மொழிதல்: எறி, குத்து, வெட்டு, என்பன. அவை பட்ட விடத்தையும் வடு முதலியவற்றுற் செய்கைப் பெயர வாகச் சொல்லுதல்.

இருபெயரொட்டு: பொற்றொடி பொன்னுந் தொடியு மாகிய விரண்டுமல்லா தத் தொடியாளை விளக்கு மாகலின்.

வினைமுத லுரைக்குங் கிளவி: தொல்காப்பியம், கபிலம்.

இவ் வாடை சேணிகன், கோலிகன் என்பன. ஆகுபெய ரென்பது ஒன்றன் பெய ரொன்றற் காய் நிற்றல்.

111. அவைதாம்,
தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணலு
மொப்பில் வழியாற் பிறிதுபொருள் சுட்டலு
மப்பண் பினவே நுவலுங் காலே. (32)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் ஆகு பெயர்க்கண்ணே யாவ தோர் இல க்க ணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அவ் வாகுபெயர்கள் முதற்கண் ஆங் காலம், அம் முதற்கே யன்றி அம் முதலொடு தொடர்ந்த பொருண்மேல் நிற்றலும், முதற்கு எவ் வியைபு மில்லாதனமேல் நிற்றலும் என இரண் டிலக்கணம் உடைய, என்றவாறு.

தத்தம் பொருண்மையிற் றம்மொடு சிவணல்: தெங்கு, கடு என்னுந் தொடக்கத்தன: தெங்கு என்றவிடத்து தெங்கின் காய் எனல் கொள்க; கடுவும் அன்னதே.

ஒப்பில் வழியாற் பிறிது பொருள் சுட்டல்: நீலம் என்றது நீல முண்ட ஆடை யெனின், அவ்விடத்து நீலத்திற்கு எவ் வியைபு மின்றி நின்ற தாடை, என்க. பிறவும் அன்ன.

இங்ஙனம் தத்தம் பொருட்கு இயைந்தனவற்றுமேலனவும், இயையாதவற்றுமேலனவும் என இருவகையவாய் நிற்கும் அவ் வாகுபெயர்கள், என்றவாறு.

தெய்வ: (111, 112 - இரண்டையும் ஒன்றாகக் கொண்டார்)

இதுவும் ஒருவாற்றான் ஆகுபெயர்க்கு உரிய தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று. விரிந்தது தொகுத்தலை நுதலிற்று, எனினும் அமையும்.

இ-ள்: மேற் சொல்லப்பட்ட ஆகுபெயர்தாம், தத்தம் பொருள்வயிற் சிவணலும், தம்மொடு சிவணலும், பொருத்த மில்லாத நெறிக்கண் சுட்டலும், பிறிதின் கிழமைப் பொருளைச் சுட்டலும் ஆகிய அவ் வியல்பினை யுடைய; அவ்வாறு சொல்லுங் காலத்து வேற்றுமைப் பொருட்கண் பாதுகாத்தல் வேண்டும்.

சிவணல் என்பதனை இரண் டிடத்துங் கூட்டுக. சுட்டல் என்பதனையும் இரண் டிடத்துங் கூட்டுக.

'தத்தம் பொருள்வயிற் சிவணல்' என்பது, முதற் பொருள் சினைப் பொருளைச் சிவணுதல். அவை கடு, பொன் என்பன.

தம்மோடு சிவணலாவது சினைப் பொருள் முதற் பொருளைச் சிவணுதல். அவை பூ, நீலம், சோறு, துடியிடை, தாழ்குழல் என்பன.

ஒப்பில்வழிக்கண் சுட்டியது: வேளாகாணி. 'பிறிது பொருள் சுட்டியது': சாலியன்.

(சூ. 112 உரை) வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும் என்பது — ஆகுபெயர் என்பது வேண்டியவாறு சொல்லப்படாது, வேற்றுமைப் பொருட்கண்ணே வரப் பெறுவது, என்றவாறு.

அவை அப் பொருட்கண் வந்தவாறு: முதலிற்கூறும் சினை யறி கிளவியும், சினையிற் கூறும் முத லறிகிளவியும், பண்பு கொள் பெயரும், இரு பெயர் ஒட்டும் ஆறாம் வேற்றுமைப் பொருண் மயக்கம். பிறந்தவழிக் கூறல் ஏழாம் வேற்றுமைப் பொருண் மயக்கம். இயன்றது மொழிதலும், வினைமுதல் உரைக்கும் கிளவியும் மூன்றும் வேற்றுமைப் பொருண் மயக்கம்.

சேனா: (111. 112 – இரண்டையும் ஒன்றாகக் கொண்டார்)

இ-ள்: மேற்கூறப்பட்ட ஆகுபெயர் தாம் தத்தம் பொருளின் நீங்காது தம் பொருளின் வேறல்லாத பொருளொடு புணர்தலும், தம் பொருட்கியை பில்லாத பிறிது பொருளைச் சுட்டி நிற்றலு மென இரண் டியல் புடைய; வேறுபாடு போற்றி யுணரப்படும்; எ-று.

கடு வென்னு முதற் பெயர் முதலோ டொற்றுமை யுடைய சினைமேல் நிற்றல், தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணலாம். குழிப்பாடி யென்னு மிடப்பெயர் இடத்தின் வேறாய ஆடைமே னிற்றல் ஒப்பில்வழியாற் பிறிது பொருள் சுட்டலாம். அஃதேல், குழிப்பாடியும் ஆடையும் இடமும் இடத்து நிகழ் பொருளு மாகிய இயை புடைய வாகலி னன்றே அதன் பெயர் அதற் காயிற்று; அதனான் அஃ தொப் பில்வழியாற் பிறிது பொருள் சுட்ட லாமா றென்னையெனின்; நன்று சொன்னாய்; அவ் வியை புடையவேனும், முதலுஞ் சினையும் பண்பும் பண் புடையது மாதன் முத லாகிய ஒற்றுமை யாகிய இயை பில வாகலின், அவை தம்முள் வே றெனவே படும்; அதனாற் குழிப்பாடி யென்பது ஒப் பில்வழியாற் பிறிது பொருள் சுட்டலே யா மென்பது.

(சூ. 112 உரை) ஒற்றுமை யாகிய இயை புள்வழி அது தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணிற் றென்றும், அவ் வியை பின்றி இடமும் இடத்து நிகழ் பொருளு மாதன் முதலாகிய இயைபே யாயவழி இஃ தொப் பில்வழியாற் பிறிது பொருள் சுட்டிற் றென்றும், வேறுபடுத் துணரப்படு மென்பார்,

'வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டு
மென்றார்' என்பது.

அஃதேல், இதனைப் பிரித்து ஒரு சூத்திர மாக உரைத்தாரால் உரையாசிரிய ரெனின், அங்ஙனம் பிரிப்பின், தம் மொடு சிவணலும் பிறிது பொருள் சுட்டலு மாகிய இவற்றது வேறுபாட்டின்க ணென்பது இனிது பெறப் படாமையானும், எழுத் தோத்தினுள்

'புள்ளி யிறுதியு முயிரிறு கிளவியும்' (எழுத். 156)
என்னுஞ் சூத்திரத்து இந் நிகர்ப் பாதுகாவலைப் பிரியாது ஒன்றாகவே யுரைத்தலானும், அவர்க் கது கருத்தன் றென்க.

நச்சி :

இஃது, அவ் வாகுபெயர் இலக்கணம் இரு வகைய, என்கின்றது.

இ-ள் : அவைதாம் தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும் – மேற்கூறப்பட்ட ஆகுபெயர்கள் தாம் தத்தம் பொருள்வயின் நீங்காது நின்று தம் பொருளின் வேறல்லாத பொருளொடு புணர்தலும், ஒப்பு இல்வழியான் பிறிது பொருள் சுட்டலும் – பொருத்தம் இல்லாத கூற்றான் நின்று பிறிது பொருளை உணர்த்தலும், அப் பண்பினவே நுவலுங் காலை – என்று சொல்லப்படுகின்ற அவ் விரண்டு இலக்கணத்தையும் உடைய, சொல்லும் காலத்து, எ-று.

உ-ம் : கடுத் தின்றான்; குழிப்பாடி நேரிது, என வரும்.

கல் :

என்பதென் னுதலிற்றோ வெனின், இதுவும் ஆகுபெயர்க் கண்ணே படுத்ததோர் இலக்கண முணர்த்த னுதலிற்று.

இ-ள் : முற்கூறிய ஆகுபெயர்கள் தத்தம் பொருட்க ணாங்கால் தாம் முன் புணர்த்தி நின்ற பொருட்கு வேறன்றி யதனோடு தொடர்ந்த பொருளோடு பொருந்தி நிற்றலும் அம் முதற் பொருளோடு பொருத்த மில்லாத கூற்றினான் நின்று பிறிது பொருளை யுணர்த்தலும் என்று சொல்லப்படுகின்ற அவ் விரு வகை இலக்கணத்தினையு முடைய, சொல்லுங் காலத்து, என்றவாறு.

உ-ம் : தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணல்: தெங்கு, கடு வென்னுந் தொடக்கத்தன.

ஒப்பில் [1]வழியாற் பிறிது பொருள் சுட்டல்: குழிப்பாடி, பொற்றொடி யென்பன.

இதனாற் சொல்லியது ஒன்றனது பெயரை யொன்றற் கிடுங் கால் அம் முதற் பொருளோடு தொடர் புள்வழியே இடவேண்டு மென்று கருதின். அது வேண்டுவதில்லை; அம் முதற் பொருளோடு தொடராது பிறவாற்றானும் [2]இயை புள்வழியும் இடலா மென்பது கூறியவா றாயிற்று. அஃதேல், இச் சூத்திரப்

1. வழியாற்[நின்றன] 2. இயை[ய]புள்வ ழியும்.

பொருண்மை மேலைச் சூத்திரத் தோதியவாற்றானே பெற்று மன்றோ வெனின், பெற்று நின்றதனையே இவ்வாறு ஒப்பில் வழியு மாம், என மாணக்கனை நன்கு தெளிவித்தற்பொருட்டுக் கூறினு ரென்பது.

அரசு :

.. என்பது மேற்கூறப்பட்ட வாகுபெயர்க டாம் தம்பொருளி னீங்காது நின்று தம் பொருளின் வே றல்லாத பொருளொடு புணர்தலும் பொருத்த மல்லாத கூற்று னின்று பிறிது பொருளை யுணர்த்தலு மாகிய அவ் விரண்டு இலக்கணத்தை யுடைய, சொல்லுமிடத்து.

கடு, புளி யென்பன தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவணல். குழிப்பாடி, நிலம், கோலிகன், என்பன ஒப்பில் வழியாற் பிறிது பொருள் சுட்டல்.

112. வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும் (33)

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் ஆகு பெயர்க்கண்ணே கிடந்த தோர் பகுதி யுணர்த்துதல் நுதலிற்று.

ஆகுபெயர்க்கு ஆவ தோர் வேறுபாடு தெரிந் துணர்க. ஆவ தோர் வேறுபாடு என் னெனின், தொல்காப்பியனாற் சொல்லப்பட்டது தொல்காப்பியம், என ஈறு திரிந்தது. அன் றியும்,

'வேற்றுமை மருங்கில் போற்றல் வேண்டும்',

என்றல் அவ் வாகுபெய ரெல்லாம் வேற்றுமையொடு தொடர்ந்த மருங்கினைப் போற்றி யறிக, என்றவாறு.

யாதோ வெனின், தெங்கினது காய் தெங்கு, என ஆறுவது தொடர்ந்தது. நீலத்தை யுடைய ஆடை நீலம், என இரண் டாவது தொடர்ந்தது. பிறவும் இவ்வாறே தொடர்ந்தவாறு போற்றி யறிக, என்றவாறு.

இனி, அல்லதூஉம் ஆகுபெயர்கள் தத்தம் பொருள்வயிற் றம்மொடு சிவனின, என்றும், ஒப் பில்வழியாற் பிறிது பொருள் சுட்டின, என்றும் போற்றி யுணர்க, என்றவாறு.

தெய்வ: (பக். 510)

சேனா: (பக். 511)

நச்சி: இஃது, ஆகுபெயரும் வேற்றுமை ஏற்கும், என்கின்றது.

இ-ள்: வேற்றுமை மருங்கில் போற்றல் வேண்டும். அவ் வாகுபெயர்கள் ஐ முதலிய அறுவகை வேற்றுமைப் பொருண்மை யிடத்தும் இயைபு உடைமைப் பாதுகாத்து அறியல் வேண்டும். ஆசிரியன், எ-று.

உ-ம்: மக்கட் சுட்டை உயர்திணை என்மனார்;
தொல்காப்பியனால் செய்யப்பட்டது;
தண்டுண் ஆதற்குக் கிடந்தது;
பாவையினும் அழகியாள்;
கடுவினது காய்;
குழிப்பாடியுள் தோன்றியது, எனக் காண்க.

கல்:

என்பது என் னுதலிற்றோ வெனின், இதுவும் ஆகுபெயர்க் கண்ணே கிடந்த தோர் இலக்கணம் உணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: அவ் வாகுபெயர்களை ஐ முதலிய ஆறு வகை வேற்றுமைப் பொருண்மை யிடத்தினும் இயை புடைமையைப் பாதுகாத்து [1]அறிதல் வேண்டும் ஆசிரியன், என்றவாறு.

உ-ம்: பொற்றொடி: ஆகுபெயர்: [2]பொற்றொடி தொட்டாள். பொற்றொடியை யென இரண்டாவதன் பொருண்மைத்து. தொல்காப்பியம் என்பது, தொல்காப்பியனாற் செய்யப்பட்ட தென மூன்றாவதன் பொருண்மைத்து. தண்டூண் கிடந்தது, என்புழி, தண்டு ணென்னும் ஆகுபெயர், தண்டூணிற்குக் கிடந்தது, என நான்காவதன் பொருண்மைத்து. பாவை யென்னும் ஆகுபெயர், பாவையினும் அழகியாள், என ஐந்தாவதன் பொருண்மைத்து. கடு வென்னும் ஆகுபெயர், கடுவினது காய், என ஆறாவதன் பொருண்மைத்து. குழிப்பாடி யென்னும் ஆகு பெயர், குழிப்பாடியுட் டோன்றிய தென ஏழாவதன் பொருண்மைத்து. பிறவு மன்ன.

---

1. (அறி) [ஒழித்]தல் 2. பொற்றொடியைத் தொட்டான்: திருத்தம்.

இதனாற் சொல்லியது முன்னைப் பல்வழியால் பிரிந்து பொருள் சுட்டலுமாம், என்றமையின், அப் பிரிந்து பொருள் சுட்டியவாறு. பாகுபாடு பெறுங்கொல்லோவெனின், இவ்வாறு வேற்றுமைப் பொருள் ... ... ... ... ...யுள்வழி பெயர்வது. பிறவழி யாகாதென்று கூறியவாறு.

அரசு:

.. என்பது அவ் வாகுபெயர்கள் ஐ முதலிய வறுவகை வேற்றுமைப் பொருண்மை யிடத்து மியை புடைமையைப் பூதுகாத்தறியல் வேண்டும், ஆசிரியன்.

113. அளவு நிறையு மவற்றொடு கொள்வழி
யுளவென மொழிபு வுணர்ந்திசி னோரே. (34)

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், அளவும் நிறையும் ஆகுபெய ராவன உள, என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அளவும் நிறையும் ஆகுபெயர் ஆயின வளவு மேற் கூறிய போல, என்றவாறு.

வரலாறு: நாழி, உழக்கு, என அளக்கப்படும் பொருளை யும். தொடி, துலாம் என நிறுக்கப்படும் பொருளையும் என்பது. பிறவும் அன்ன.

**தெய்வ:**

இதுவும் ஆகுபெய ராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அளவுப் பெயரும், நிறைப்பெயரும், மேற்சொல் லப்பட்ட ஆகுபெயரோடு கொள்ளு மிடமும் உள வென்று சொல்லுவர் உணர்ந்தோர், எ-று.

கொள்வழி உள, என்றதனால், தம் பெயர் விளங்கும் எண்ணுக் குறிப் பன்றி அளக்கப்பட்ட பொருள்மேலும், நிறுக் கப்பட்ட பொருள்மேலும், கருவிமேலும் வரின் அவையும் வேற்றுமைப் பொருள் ஆகுபெய ராம் என்று கொள்க.

எண்ணு முறையான் உழக்கு, நாழி என்னும் அளவினைக் கொள்ளும் பாண்டத்தினையும், அளக்கப்படும் பொருளினையும் உழக்கு, நாழி என்ப. கால், கழஞ்சு என்னும் நிறையையும் அதன் அளவாகிய கல்லையும், பொன்னையும் கால், கழஞ்சு என்ப. இரு நிலம், ஒரு மா, இம்மி, முக்கால் என்பனவும் அளவுப் பகுதிய.

அஃதேல், இவ் வெருது ஒன்று, என எண்ணப்பட்ட பொருள்மேல் எண்ணுப் பெயர் வருவது ஆகுபெயர் ஆகாதோ எனின், அளவும் நிறையும் போலாது எண்ணப்பட்ட பொருளை எண்ணுப் பிரிந்து நில்லாமையான், அதுவும் அப் பொருட்கு ஒரு காரணத்தாற் பெற்ற பெயர் எனி ன்லலது ஆகுபெயர் எனப்படா தென்று கொள்க.

அளவும், நிறையும் பிரிந்து நின்றவாறு என்னை யெனின், இப் பொன் கால்; இப் பொன் கழஞ்சு, என்றவழி, அவை ஓர் உரு வாகியும், பல உரு வாகியும் வரினல்லது கால், கழஞ்சு என்னும் நிறைப் பொருண்மை புலப்படாது நிற்றலின் பிரிந்து நின்றன.

சேனா:

இ-ள்: அளவுப் பெயரும், நிறைப் பெயரும், ஆகுபெய ராகக் கொள்ளு மிடமு முடைய வென்று சொல்லுவர் உணர்ந் தோர், எ-று.

பதக்குத் தூணி யென்னும் அளவுப் பெயர் இந்நெற் பதக்கு; இப் பயறு தூணி, எனவும், தொடி, துலா மென்னும் நிறைப் பெயர் இப் பொன் றொடி; இவ் வெள்ளி துலாம், எனவும், அளக்கப்பட்ட பொருண்மேலும், நிறுக்கப்பட்ட பொருண்மேலும் ஆகுபெயராய் நின்றவாறு கண்டு கொள்க.

ஒன்று இரண் டென்னுந் தொடக்கத்து எண்ணுப் பெயரும் எண்ணப்பட்ட பொருண்மே னின்றவழி ஆகுபெயரே யாகலின் அவற்றை யொழித்த தென்னை யெனின், அவை எண்ணப்படு பொருட்கு முரிய வாகலின் ஆகுபெய ரெனப்படா; அதனுன் அவற்றை யொழித்தா ரென்பது.

நச்சி:

இஃது ஆகுபெயர் வேறுபாடு கூறுகின்றது.

இ-ள்: அளவும், நிறையும் அவற்றொடு கொள்வழி உள என மொழிப — அளவுப் பெயரும் நிறைப் பெயரும் ஆகுபெய ராகக் கொள்ளும் இடம் உடைய என்று சொல்லுவர், உணர்ந் திசினோரே — உணர்ந்தோர், எ-று.

உ-ம்: பதக்கு, தூணி; தொடி, துலாம், என அளக்கவும் நிறுக்கவும் பட்ட பொருட்கண் கிடந்த வரையறைக் குணப் பெயர் அப் பொருட்குப் பெய ராயிற்று.

நெல்லை அளந்து பார்த்தும் பொன்னை நிறுத்துப் பார்த்தும் பின்னர் அவற்றிற்குப் பதக்கு, தொடி என்று அளவும் நிறையு மாகிய பெயர் கூறப்படுதலின், அவற்றை ஆகுபெயர் என்றார்.

'ஒன்று' என்னும் எண்ணுப் பெயரால் அவ் வெண்ணப்படும் பொருளைக் கூறுவதற்கு முன்னும் அப் பொருள் ஒன்றாயே நிற்றலின், எண்ணுப் பெயரை ஆகுபெயரோடு கூறார் ஆயினர்.

கல்:

என்பது என் னுதலிற்றோ வெனின், இன்னொருசார் ஆகு பெயர் உணர்த்த னுதலிற்று.

இ-ள்: அளவுப் பெயரினையும் நிறைப் பெயரினையு மேற் கூறிய வாகுபெயரோடு கொள்ளு மிடங்கள் உள வென்று சொல்லுவர் உணர்வுடையோர், என்றவாறு.

உ-ம்: நாழி, உழக்கு என விவை யளவுப் பெயர், ஈண் டதன் பொருளதற் காயிற்றோ வெனின், அளக்கப்பட்ட பொருட் கண் கிடந்த வரையறைக்கண் அப் பெயர் பொருட் காயிற் றெனக் கொள்க. தொடி, துலாம் என்பன நிறைப் பெயர்; ஈண்டு வரையறைக் குணர்த்தினன்; பெயரப் பொருட் காயிற் றென வுணர்க.

மற் றிவை 'கிளந்த வல்ல' வென்னும் புறனடையுள் அடங்காவோ வெனின், இவற்றை யுலகத்தார்க்குப் பெயர்க் குறிப் பென்று கொள்ளாது, அப் பொருட்குப் பெயர் போலக் கொண்டமையின் வேறு கூறினர் எனக் கொள்க.

114. கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே (35)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இஃது ஆகு பெயர்க்குப் புறநடை கூறுதல் நுதலிற்று.

உரை: மேற் சொல்லப்பட்டனவன்றி வரும் ஆகுபெயரும் உள; அவற்றையும் சொல்லப்பட்ட இலக்கணத்தான் உணர்ந்து கொள்க, என்றவாறு.

அவை வருமாறு: யாழ் கேட்டான்; குழல் கேட்டான், என்ப, அவற்றி னுறிய ஓசை கேட்டாரை. பசுப் போல்வானைப் பசு, என்ப; பாவை போல்வாளைப் பாவை, என்ப.

இனி, எண்ணிற் கேதுவாகிய இடங்களையும் ஒன்று, பத்து, நூறு என்ப.

இனி, எழுத்து [தொல். எழுத்து. நூன்மரபு] என்பதும் அது. பிறவும் அன்ன.

இனிக் கிளந்த வல்ல பிற, என்றது, வேறு என்றதனால், ஆகுபெயர்கள் ஈறு திரியும், என்பது காட்டுக.

(முற்றிற்று.)

**தெய்வ:**

ஆகுபெயர்க்குப் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: எடுத்து ஓதப்பட்ட வாய்பாட்டான் அன்றி வேறு வருவன வுளவும் எடுத்தோதிய நெறியினான் ஆகுபெயர் ஆமாறு அறிந்து கொள்க.

அவையாவன :- பாவை, திரு என வடிவு பற்றியும், பசு, கழுதை எனக் குணம் பற்றியும், புலி, சிங்கம் எனத் தொழில் பற்றியும், ஒன்றன் பெயர் ஒன்றற்கு ஆகி வருவனவும் ஆகு பெயர் என்றே கொள்ளப்படும்.

"எயின்முகம் சிதையத் தோட்டி ஏவலிற்
றோட்டி தந்த தொடிமருப் பியானை" (பதிற்று. 38)

என்றவழித் தோட்டியை யுடையானைத் தோட்டி என ஆகு பெயர் ஆயிற்று.

இவை ஆகுபெயர் ஆங்கால் பாவை வந்தாள், சிங்கம் வந்தான், எனத் தத்தம் பொருண்மை வாய்பாட்டான் முடியும்.

கவளக் களிப்பியன்மால் யானைசிற் றுளி
தவழத்தா னில்லா ததுபோற் — பவழக்
கடிகை யிடைமுத்தங் காண்டொறு நில்லா
தொடிகை யிடைமுத்தந் தொக்கு.

(திணைமாலை நூற்றைம்பது - 42.) என்பது தொடி யென ஆகுபெய ராயிற்று.

(வேற்றுமை மயங்கியல் முடிந்தது. இவ் வோத்தனுட் சூத்திர முட்பட உரையினது அளவு கிரந்த வகையான் முந்நூறு.)

சேனா: (அதற்குப் புறனடை)

இ-ள்: சொல்லப்பட்டனவே யன்றிப் பிறவும் ஆகுபெயரு ளவேல், அவை யெல்லாஞ் சொல்லப்பட்டவற்ற தியல்பா னுணர்ந்து கொள்க, எ-று.

சொல்லப்பட்டவற்ற தியல்பாவது: யாதானு மோரியைபு பற்றி ஒன்றன் பெயர், ஒன்றன்மேல் வழங்கப்படுதல்.

யாழ். குழல் என்னுங் கருவிப் பெயர், யாழ் கேட்டான்; குழல் கேட்டான், என அவற்றா னாகிய ஓசைமேலும் ஆகுபெயராய் நின்றன. யானை, பாவை என்னும் உவமைப் பெயர், யானை வந்தான்; பாவை வந்தாள், என உவமிக்கப்படும் பொருண்மேலும், ஏறு, குத்து என்னுந் தொழிற் பெயர், இஃதோ ரேறு, இஃதோர் குத்து, என அத்தொழிலா னாம் வடுவின் மேலும், வருவன வெல்லாங் கொள்க. பிறவு மன்ன.

இயைபு பற்றி ஒன்றன் பெயர் ஒன்றற் காங்கால் அவ்வியைபு ஓரிலக்கணத்த தன்றி வேறுபட்ட இலக்கணத்தை யுடைத்து; அவ்விலக்கண மெல்லாம் கடைப்பிடித் துணர்க, என்பார், 'வேறுபிற தோன்றினும்' என்றார்.

(வேற்றுமை மயங்கியல் முற்றிற்று)

நச்சி:

இஃது, ஆகுபெயர்க்குப் புறனடை.

இ-ள்: கிளந்த அல்ல வேறு பிற தோன்றினும் - சொல்லப் பட்டனவே அன்றி வேறு பிற சொற்கண்ணே ஆகுபெயர்த் தன்மை தோன்றினும், கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளலே — சொல்லப்பட்டவற்றது இயல்பான் உணர்ந்து கொள்க, எ-று.

உ-ம்: யாழ்; குழல் என்னும் கருவிப் பெயர், 'யாழ், கேட்டான் குழல் கேட்டான்', என்று அவற்றான் ஆய ஓசை மேலும்; யானை, பாவை என்னும் உவமப் பெயர், யானை, வந்தான்; பாவை வந்தாள், என உவமிக்கப்படும் பொருள் மேலும்; ஏறு, குத்து என்னும் தொழிற் பெயர், இஃது ஓர் ஏறு; இஃது ஓர் குத்து, என அத் தொழிலா னாய வடுவின் மேலும்; நெல் லாதல், காண மாதல் பெற்றா னொருவன், சோறு பெற்றேன், எனக் காரணப் பொருட் பெயர் காரியத்தின்மேலும் ஆகுபெயராய் வந்தன.

'ஆறு அறி அந்தணர்' (கலி 1:1) என்புழி, 'ஆறு' என்னும் வரையறைப் பண்புப் பெயர் அப் பண்பினை உடைய அங்கத்தினை உணர்த்தி நிற்றலும், அவ் வெண்ணுப் பெயரினை அறி குறி யாகிய அலகு நிலைத் தானமும் அப் பெயரவாய் நிற்றலும்; அகரம் முதலிய எழுத்துக்களை உணர்த்துதற்குக் கருவி யாகிய வரி வடிவுகளும் அப் பெயர் பெற்று நிற்றலும் கொள்க.

கடி சூத்திரம் செய்ய இருந்த பொன்னைக் 'கடி சூத்திரம்' என்றும், தண்டுண் அதற்குக் கிடந்த மரத்தைத் 'தண்டுண்' என்றும் காரியத்தின் பெயரைக் காரணத்திற்கு இட்டு வழங்குவனவும்; எழுத்து, சொல், பொருள் என்பனவற்றிற்கு இலக்கணம் கூறிய அதிகாரங்களை எழுத்து, சொல், பொருள் என்பன உணர்த்தி நிற்றலும் கொள்க.

'பிற' என்றது, 'வேறு' என்றதனுன், அவை 'தொல்காப்பியம், கபிலம், வில்லி, வாளி என ஈறு திரிதலும் கொள்க.

இவ் வாகு பெயர்கள் எழுவாய் வேற்றுமை மயக்கம் என்று உணர்க, 'கடு' என்பது, தனக்கு உரிய முதற் பொருளை உணர்த்தாது சினைப் பொருளை உணர்த்தலின்.

(முற்றும்)

கல்:

என்ப தென் னுதலிற்றோ வெனின், மேற்கூறிய வாகு பெயர்க்குப் புறநடை யுணர்த்த னுதலிற்று.

இ-ள்: ஆகுபெயர்கண் மேல் எடுத்தோதின வல்லாதன வேறு பல தோன்றினும் அவ் வெடுத்தோதப்பட்டவற்றி னியல்பினானே யுணர்ந்து கொள்க வென்றவாறு.

உ-ம்: யாழ் கேட்டான்; குழல் கேட்டான், * என்ப, அவற்றி னாகிய ஓசை கேட்டானையும். பசுப் போல்வானைப் பசு வென்ப; பாவை போல்வாளைப் பாவை யென்ப.

இனி, ஒன்று, பத்து, நூறு, ஆயிரம் என்னும் எண்ணுப் பெயர்களும் வரையறைப் பண்பின் பெயர் பெற்ற வாகுபெயரெனக் கொள்க. அவ் வெண்ணுப் பெயரினை அறி குறி யாகிய வலகுநிலைத் தானங்களும் அப் பெயர வாயின வெனக் கொள்க.

---

* என: திருத்தம்.

இனி, அகர முதலாகிய வெழுத்துக்களை யுணர்த்துதற்குக் [1]கருவியாய வரி வடிவுகளும் அப் பெயர வாம்.

தாழ் குழல், திரி தாடி, என்பனவற்றையும் இரு பெய ரொட்டடின்மையின், ஈண்டே கொள்க.

மண்ணானாய கலத்தை மண் ணென்றும், பொன்னானாய கலத்தைப் பொன் னென்றும், இவ்வாறே காரணத்தின் பெய ரினைக் காரியத்துக் [2]கிட்டும், [3]கடி சூத்திரத்திற்காக விருந்த பொன்னைக் கடிசூத்திர மென்றும், தண்டூன்றுதற்குக் கிடந்த மரத்தினைத் தண்டு ணென்றும், இவ்வாறே காரியத்தின் பெய ரினைக் காரணத்திற் [4]கிட்டும் வருவன வெல்லாங் கொள்க.

இனி, எழுத் தெனவும், சொல் லெனவும், கூறிய விலக்கணங் களைக் கூறிய நூன்மே லாகுபெயராய் வருவனவு மீண்டே கொள்க.

வே றென்றதனுன் அவ் வாகுபெயர்கள் தொல்காப்பியம், வில்லி, வாளி யென வீறு திரிந்தனவு மீண்டே கொள்க.

இவ் வாகுபெயரை இவ் வோத்தினுட் ............... துவும், எழுவாய் வேற்றுமை மயக்க மாகலின், ஈண்டே கூறினு ரென்பது.

(மூன்ருவது வேற்றுமை மயங்கியன் முற்றிற்று)

---

1. கருவியாக[அ]'(வ)ரி 2. கிட்டும் (கண்ணும்) 3. [கு] (க) டி
4. கிட்டும் (கண்ணும்)

## IV. விளி மரபு

115. விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்று மியற்கைய வென்ப. (1)

**இளம்:**

என்பது சூத்திரம்.

இவ் வோத்து என்ன பெயர்த்தோ வெனின், விளி வேற்று மையது இலக்கணம் உணர்த்தினமையின், விளி மரபு என்னும் பெயர்த்து.

இனி, இத் தலைச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், விளி வேற்றுமையது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: விளி என்பன தம்மை ஏற்கும் பொருளொடு யாப்புறத் தோன்றும் தன்மைய, என்றவாறு.

தன்மைய என்றான், விளி பெயரொடு கொள்ளும் என்பதூ உம், கொள்ளுங்கால் ஏற்கும் என்பதூஉம், பெயரொடு கொள்ளா என்பதூஉம் சொல்லப்பட்டதாம்.

'தெளியத் தோன்றும்' என்றது, விளியை வேற்றுமை அன் றென்பாரும் உளர், அது மறுத்து வேற்றுமையே எனற்கு என்பது.

'எனப் படுப' என்று பன்மை கூறினார், ஈறு திரிதல், ஈற்றய னீடல், பிறிது வந் தடைதல், இயல் பாதல் என நான்கு பகுதிய வாகலான், என்பது.

**தெய்வ:**

இவ் வோத்து என்ன பெயர்த்தோ எனின், விளி மரபு என்னும் பெயர்த்து. நிறுத்த முறையானே, எழுவகை வேற்று மையும், அவ் வாறு மயக்கமும் உணர்த்தியபின் எட்டாவ தாகிய விளி இலக்கணம் உணர்த்தினமையாற் பெற்ற பெயர்.

இதன் முதற் சூத்திரம் என் னுதலிற்றோ எனின், விளி இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: விளி என்று சொல்லப்படுவன தம்மை ஏற்கும் பெயரோடு விளங்கத் தோன்றும் இயற்கையினை யுடைய என்று சொல்லுவார், எ-று.

ஏனை வேற்றுமை போல உருபு பிரிந்து வாரா, பெரும்பான்மையும் பெயரோடு ஒற்றுமைப்பட்டு வரு மென்பதூஉம், 'கொள்ளும் பெயரொடு' என்றமையாற் கொள்ளாப் பெயரும் உள வென்பதூஉம் பெறுதும்.

விளி என்றதனான் அவ் வேற்றுமை விளித்தற் பொருண்மைக்கண் வரும், என்று கொள்க.

சேனா: ( சொற்கள் விளி யேற்கும் இயல் புணர்த்துவது)

( விளியின் இயல்பு )

நிறுத்த முறையானே விளி வேற்றுமை யுணர்த்திய வெடுத்துக் கொண்டார்; அதனான் இவ் வோத்து விளி மர பென்னும் பெயர்த் தாயிற்று.

இ-ள்: விளி யென்று சொல்லப்படுவன தம்மை யேற்கும் பெயரொடு விளங்கத் தோன்று மியல் புடைய வென்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

விளி வேற்றுமை எதிர்முக மாக்குதற் பொருட் டாதல் பெயரானே விளங்குதலிற் கூறா ராயினர்.

ஈறு திரிதலும், ஈற் றய னீடலும், பிறிது வந் தடைதலும், இயல் பாதலு மென்னும் வேறுபா டுடைமையான், 'விளி யெனப் படுப' என்றார்.

கொள்ளும் பெயரோ டெனவே, கொள்ளாப் பெயரு முள வென்ப தாம்.

இயல்பு விளிக்கண் திரியாது நின்ற பெய ரீறே விளி யெனப்படுதலின், ஆண்டுந் தெற்றென விளங்கு மென்பார், 'தெளியத் தோன்றும்' என்றார்.

நச்சி:

இது, நிறுத்த முறையானே விளி உணர்த்துதலின், இவ் வோத்து விளி மரபு என்னும் பெயர்த்து ஆயிற்று. இச் சூத்திரத்தான் விளியது பொது இலக்கணம் கூறுகின்றார்.

இ-ள்: விளி எனப்படுப – விளி என்று சொல்லப்படுவன, கொள்ளும் பெயரொடு – தம்மை ஏற்கும் பெயரோடு, தெளியத் தோன்றும் இயற்கைய என்ப – விளங்கத் தோன்றும் இயல்பினை உடைய, என்று கூறுவர் ஆசிரியர், எ-று.

ஈறு திரிதலும், ஈற்று அயல் நீடலும், பிறிது வந்து அடைதலும், இயல்பு ஆதலும் என்னும் வேறுபாட்டால், 'படுப' என்றார். 'கொள்ளும் பெயர்' எனவே, கொள்ளாப் பெயரும் உள வாயின. இயல்பாய் விளி ஏற்பனவும் தெற்றென விளங்கும் என்றற்குத் 'தெளியத் தோன்றும்,' என்றார்.

கல்:

இவ் வோத் தென்னை பெயர்த்தோ வெனின், விளி மர பென்னும் பெயர்த்து. மேலோத்தினோடு இவ் வோத்தினிடையியை பென்னோ வெனின், மேல் 'வேற்றுமை விளியோ டெட்டே' யென நிறுத்தார்; அந் நிறுத்த முறையானே விளி யொழித்து அவ் வேழு முணர்த்தி, இனி யொழிந்து நின்ற விளியை யுணர்த்துகின்றார், என்பது.

இம் முதற் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், விளி வேற்றுமையது பொது விலக்கண முணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: விளி யென்று சொல்லப்படுவன தம்மை ஏற்கும் பெயரோடு யாப்புறத் தோன்றும் தன்மைய வென்று சொல்லுவர், புலவர் எ-று.

'படுப' வெனப் பன்மை கூறியவதனான் அவ்விளி தான் ஈறு திரிதலும், ஈற் றயனீடலும், பிறிது வந்தடைதலும், இயல் பாதலு மென நான்கு வகைப்படுமென்பது பெறப் பட்டது.

'தெளிய' வென்றதனான் விளிதன்னை எழுவாயின் [1] வேறு பட்ட தன்றி வே றோர் வேற்றுமை என்பாரு முள ரென்பதூஉம், இவ்வா றோர் வேற்றுமையாக நேர்ந்தார் என்பதூஉம் பெறப்பட்டது.

116. அவ்வே,
இவ்வென வறிதற்கு மெய்பெறக் கிளப்ப. (2)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மேற் சொல்லப் பட்டனவற்றை இனிச் சொல்லுப, என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அவை இவை யென அறிதற்கு வழக்குப் பெற இனிச் சொல்லப்படும், என்றவாறு.

---

1. வேறுபாட தன்றி: திருத்தம்.

தெய்வ:

எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தலை நுதலிற்று.

இ-ள்: சொல்லப்பட்ட விளி வேற்றுமைதாம் இவை யென அறிதற்கு உருபு பெறவும் கிளப்ப ஆசிரியர், எ-று.

... உம்மை எஞ்சி நின்றது.

இவ் விரண்டு சூத்திரத்தானும் சொல்லியது விளி வேற்றுமை வருவழி, அதனை ஏற்கும் பெயர் இயல் பாகியும் திரிந்தும் குறைந்தும் மிக்கும் வரும், என்றவாறு.

சேனு:

இ-ள்: விளி கொள்ளும் பெயரும், கொள்ளாப் பெயரும் இவை யென மாணுக்க னுணர்தற் பொருட்டு அவை யிவ் வோத்தினகத்துப் பொருள்படக் கிளக்கப்படும், எ-று.

இது கூறுவா மென்னுந் தந்திர வுத்தி.

அவ்வே யெனக் 'கொள்ளும் பெயரொடு தெளியத் தோன்றும்' (சொல் – 115) எனப் பெயரா னுணர்த்தப் படுவதாய் நின்ற விளியைச் சுட்டிய பெயரைச் சுட்டுதல் இடருடைத் தெனின், விளி வேற்றுமையாவது கொள்ளும் பெயரின் வே றன்றி, அவை தாமேயாய் நிற்றலின், அப் பெயரைச் சுட்டவே விளியுஞ் சுட்டப்பட்டனவே யாம்; அதனுன் இடரின் றென்பது. இவ்வா றுரையாது அவ்வே யெனச் சுட்டப்பட்டன விளி வேற்றுமை யெனின், வருஞ் சூத்திரத்தின் அவைதா மெனப்பட்டனவும் விளி வேற்று மையே யாய் 'மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயர்' (சொல் – 117) என்பதனேடு இயையா வா மென்பது.

விளி கொள்ளும் பெயரும், கொள்ளாப் பெயரும், உயர் திணை விரவுப் பெயர் ஈண் டுயர்திணைப் பெயருள்ளு மடங்கு தலும், நுண் ணுணர்வினர்க் கல்லது அறிய லாகாமையின், ஏனேரும் அறிதற்கு அவை கிளக்கப்படு மென்பார் 'இவ் வென வறிதற்கு' என்ருர்.

நச்சி:

இஃது, அப் பெயர்களைக் கூறுவல் என்கின்றது.

இ-ள்: அவ்வே இவ் என அறிதற்கு - விளி கொள்ளும் பெயரும் கொள்ளாப் பெயரும் இவை என மாணுக்கன் உணர் தற்பொருட்டு, மெய்பெறக் கிளப்ப - பொருள் பெற எடுத்து ஓதுவர் ஆசிரியர்; (அதனுன், யானும் அம் முடிபே கூறுவல்,) எ-று.

**கல்:**

என் னுதலிற்ருே வெனின், மேற் சொல்லப்பட்டவற்றை இனிச் சொல்லுப வென்ப துணர்த்த னுதலிற்று.

இ-ள்: மேல் விளி யேற்பவும், ஏலாதனவு மெனச் சொல் லப்பட்டவற்றை இவை யென வறியும்படி [1]வழக்குத் தழுவ எடுத்தோதுப ஆசிரியர். அதனுன் யானும் அம்முடிபே [2]கூறுவல், என்பது. இது மொழிவா மென்னும் என்னுந் தந்திர வுத்தி.

மற் றஃதாமா றென்னை; கிளப்ப வென்றது 'கிளப்ப' என்றமையின் முன் னூலுள் அவ்வாறு கூறு மென்ப தன்றே பெறுவதெனின், சொற் கிடை யது வெனினும் ஆண்டுக் கூறியவாறு போல யானும் ஈண்டுக் கூறுவல், என்பது கருத் தாகக் கொள்க.

இனி, கிளப்ப என்பதனை பெயர்படுத்துக் கூறலு மொன்று.

**117.** அவைதாம்,
இ உ ஐ ஓ வென்னு மிறுதி
யப்பா ளுன்கே யுயர்திணை மருங்கின்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே. (3)

**இளம் :**

இச் சூத்திரம் என் னுதலிற்ருே வெனின், விளி என்பனதாம் இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று,

உரை : உயி ரெழுத்தினுள் உயர்திணைப் பெயர்க்கு விளி யேற்கும் எழுத்தாவன இவை, என்றவாறு.

'உயர்திணை மருங்கின் மெய்ப்பொருள் சுட்டிய' எனவே, மற்றைத் திணைக்கண் ணும் உள, சிறுவரவின, எனக் கொள்க.

அவை வருமாறு: 'குறையறப் பூத்த கொடிமுல்லாய்' என்புழி, முல்லை — முல்லாய் எனவும்,

1. வழக்குக்குத்: திருத்தம். 2. கூறுதல் : திருத்தம்.

செங்கால் நாராய், என்புழி, செங்கால் நாரை — செங்கால் நாராய், எனவும் வரும். பிறவும் அன்ன.

தெய்வ :

உயர்திணைப் பெயருள் உயிரீருகி விளியேற்கும் பெயரை வகுத்துஉணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : உயர்திணை யிடத்துள்ள பொருளைச் சுட்டிய விளியேற்கும் பெயர் இ, உ, ஐ, ஓ, என்னும் ஈற்றினை யுடைய அக் கூற்று நான்கு, எ—று.

உயர்திணை மருங்கினுள்ள பொருள் சுட்டிய என்றமையான் உயர்திணைப் பெய ரென வகுத் தோதப்படுவனவும், விரவுப் பெயருள் உயர்திணை குறித்தனவும் கொள்ளப்படும்.

சேனு : (உயர்திணைப் பெயர் விளியேற்குமாறு: அதன்கண் விளியேற்கும் உயிரீறுகள்.)

இ-ள் : கிளக்கப்படுவன வாகிய பெயர்தாம் இ, உ, ஐ, ஓ, என்னு மிறுதியை யுடைய; அக் கூற்று நான்கு பெயரும் உயர்திணைப் பெயருள் விளி கொள்ளும் பெயர், எ—று.

அஃறிணைப் பெயர் ஆகுபெயராய் உயர்திணைக்கண் வந்துழியும், விரவுப்பெயர் உயர்திணைக்கண் வருங்காலும், அவை விளி யேற்கு மிடத்து உயர்திணைப் பெயரா மென்றற்கு 'உயர்திணை மருங்கின் மெய்ப்பொருள் சுட்டிய' வென்ருர்.

எ—டு : 'சுடர்த்தொடீ கேளாய்' (கலி. 51) எனவும், சாத்தீ எனவும், அவை உயர்திணைப் பெயராய் விளி யேற்றவாறு கண்டு கொள்க.

மெய்ப் பொருள் சுட்டிய விளி கொள் பெயர் அப் பால் நான் கென்பன எழுவாயும் பயனிலையு மாய் இயைந்து, ஒருசொன்னீர்மையவாய், அவைதா மென்னும் எழுவாய்க்குப் பயனிலை யாயின.

அஃதேல், உயர்திணை விரவுப் பெயரைப் பொருள் பற்றி உயர்திணைப் பெயர்க்கண் அடக்கிருரா லெனின், முன்னர்

'விளம்பிய நெறிய விளிக்குங் காலை' (சொல். 147)

எனல் வேண்டா வாம் பிற வெனின், நன்று சொன்னாய்; 'விளம்பிய நெறிய விளிக்குங்காலே' என்புழி, விரவுப் பெய ரென்றது அஃறிணை விரவுப் பெய ரென அஃறிணைக்கண் வருவன வற்றை விதந் தோதுதலான், உயர்திணைக்கண் வருவன உயர்திணைப் பெயருள் அடங்கு மென்பதற்கு அச் சூத்திரமே கரியாயிற் றென்பது. அல்லதூஉம், புள்ளி யீற் றுயர்திணைப் பெயர்க்கண் அவ் வீற் றுயர்திணை விரவுப் பெயரு மடங்கி விளிகோட லெய்துதலா னன்றே, தாம், நீயி ரென்பன விளி கொள்ளா வென எய்தியது விலக்குவா ராயிற்று; அதனானு மடங்குதல் பெறுது மென்பது. அல்லதூஉம், உயர்திணை யதிகாரத்து முறைப் பெயர் விளி யேற்குமாறு கூறினமையானும் பெறப்படும்.

விரவுப் பெயரை உயர்திணைப் பெயரோடு மாட்டெறிப வாகலின், மாட்டேற்றான் முறைப் பெயர் ஆகாரமும் ஏகாரமும் பெற்று விளி யேற்ற லெய்தாமையின் ஈண்டுக் கூறினா ரென்றாரால் உரையாசிரிய ரெனின், அக் கருத்தின ராயின் அஃறிணை யென்னுஞ் சொல் லொழித்துக்

'இளந்த விறுதி யஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலே' (சொல் – 147)

எனவும், இதன்பின்

'முறைப்பெயர் மருங்கி னையெ னிறுதி
யாவொடு வருதற் குரியவு முளவே' (சொல். 123)

எனவும், இதன்பின் னகார ளகார வீற் றிரு வகை முறைப் பெயரு மடங்கப்

'புள்ளி யிறுதி யேயொடு வருமே' (சொல். 151)

எனவும் ஓதுவார்மன் னாசிரியர். என்னை? மயங்கக் கூற லென்னுங் குற்றமும் நீங்கிச் சூத்திரமுஞ் சுருங்கு மாதலான். அவ்வா றோதாமையானும், முறைப் பெயரே யன்றித் தாம், நீயி ரென்பனவும் ஈண்டுக் கூறப்பட்டமையானும், உரையாசிரியர்க்கு அது கருத்தன் றென்க.

நச்சி :

இஃது, உயர்திணைப் பெயருள் விளி ஏற்பன இவை என்கின்றது.

இ-ள் : அவைதாம்–கிளக்கப்படுவன வாகிய பெயர்தாம் எண்வகைய அவற்றுள், உயர்திணை மருங்கில் மெய்ப் பொருள்

சுட்டிய விளி கொள் பெயர் — உயர்திணை யிடத்து மெய்ப் பொருளைக் கருதின விளி கொள்ளும் உயிர் ஈற்றுப் பெயர், இ, உ, ஐ, ஓ என்னும் இறுதி அப் பால் நான்கே — இ, உ, ஐ, ஓ என்னும் இறுதியை உடைய அக் கூற்று நான்கு பெயரும், எ—று.

'மெய்ப் பொருள்' என்றதனன், அஃறிணைப் பெயர் அன்மொழியாய் உயர்திணைக்கண் வந்துழி உயர்திணைப் பெயராய் விளி ஏற்றலும், அவ் வீற்று அஃறிணைப் பெயர்களும் உயர்திணைப் பெயர்கள் போல விளி ஏற்றலும் கொள்க.

உ—ம்: 'சுடர்த் தொடீஇ! கேளாய்.' எனவும், (கலி. 51:1)
'தும்பீ!' (குறுந். 2:2) எனவும்,
'சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய்!'
(ஐங்—எ—68) எனவும்,

'கொன்றாய்! குருந்தே! கொடிமுல்லாய்! வாடினீர்
'நின்றீர் அறிந்தேன் நெடுங்கணான் — சென்றாளுக்கு'
(திணை. மா நூற். 81) எனவும் வரும்.

கல்:

என் னுதலிற்றோவெனின், உயிரீற்று உயர்திணைப் பெயருள் விளி யேற்பன இவை யென்ப துணர்த்த னுதலிற்று.

இ—ள்: மேல் விளியேற்கும் என்னப்பட்டவைதாம் இ, உ, ஐ, ஓ வென்று சொல்லப்பட்ட ஈறுகளை யுடைய அக் கூற்று நான்கு பெயரே உயர்திணை யிடத்து மெய்ப் பொருளினைச் சுட்டிய விளியினைக் கொள்ளும் பெயராவன, என்றவாறு.

உயிரீற்று உயர்திணைப் பெயர்களுள் விளியேற்பன இந் நான்குமே யெனவே, ஒழிந்த உயிரீறு விளி யேலா வென்பதூஉம் இதனாற் பெற்றாம்.

உயிரீறு பன்னிரண்டும் உயர்திணைப் பெயர்க்கு ஈறாமோ வெனின், அஃது ஈண்டு ஆராய்ச்சி யன்று. ஈறானவற்றுள் விளி யேற்பன இவை யென்றவாறு. மக வென்னும் அகர வீறும், ஆடூஉ, மகடூஉ என்னும் உகர வீறும், இந் நிகரன விளியேலாதன வென்க் கொள்க.

'மெய்ப் பொருள் சுட்டிய' வென்றதனுன் இவ் வீற்று அஃறிணைப் பெயர்களும் இவ் வுயர்திணை போல விளி யேற்பன வென்பது கொள்ளப்படும். அவை, தும்பி – தும்பீ, எனவும், முல்லை – முல்லாய், எனவும் வரும்.

118. அவற்றுள்,
இ ஈ யாகும் ஐ ஆ யாகும். (4)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இகர ஐகாரங்கள் விளி யேற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

நம்பி — நம்பீ என, இ — ஈயாய் விளி யேற்றது. நங்கை — நங்காய் என, ஐ — ஆயாய் விளி யேற்றது. இங்ஙன மாதல் ஈறு திரிதல்.

தெய்வ :

இகர ஐகார ஈற்றுப் பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் : இகரம் ஈகாரமாய்த் திரிந்தும், ஐகாரம் ஆய் எனத் திரிந்தும் விளி ஏற்கும்.

உ–ம் : நம்பி, சாத்தி என்பன, நம்பீ, சாத்தீ என விளி யேற்கும்; நங்கை — நங்காய், எனவும், தந்தை — தந்தாய், எனவும் வரும்.

சேனு : (அவற்றுள், இகர ஐகார ஈறுகள்)

மேற் கூறப்பட்ட நான் கீறும் விளி யேற்குமாறு கூறு கின்ருர்.

இ–ள் : அவற்றுள் என்பது அந் நான் கீற்றினுள் என்றவாறு. நம்பி – நம்பீ என இகரம் ஈகார மாயும், நங்கை – நங்காய் என ஐகாரம் ஆ யாயும் ஈறு திரிந்து விளியேற்கும், எ–று.

நச்சி :

இஃது, இகர ஈறும், ஐகார ஈறும் விளி ஏற்குமாறு கூறு கின்றது.

இ-ள் : அவற்றுள் — முற்கூறிய நான்கு ஈற்றுப் பெயருள், இ ஈ ஆகும் — இகர ஈற்றுப் பெயர் ஈகார மாயும், ஐ ஆய் ஆகும் — ஐகார ஈற்றுப் பெயர் ஆய் ஆயும், ஈறு திரிந்து விளி ஏற்கும், எ-று.

உ-ம் : நம்பி — நம்பீ ! நங்கை — நங்காய் ! என வரும்.

கல் :

என் னுதலிற்றோ வெனின், மேற் சொல்லப்பட்ட நான்க னுள்ளும் இகர வீறும், ஈகார வீறும் விளி யேற்குமா றுணர்த்தல் நுதலிற்று.

இ-ள் : மேற் சொல்லப்பட்ட நான் கீற்றுப் பெயருள்ளும் இகர வீற்றுப் பெயர் ஈகார மாய் விளி யேற்கும். ஐகார வீற்றுப் பெயர் ஆ யாயும் விளி யேற்கும், என்றவாறு.

உ-ம் : நம்பி — நம்பீ; நங்கை — நங்காய், என வரும்: இவை ஈறு திரிதல்.

119. ஓவும் உவ்வு மேயொடு சிவணும். (5)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஓகார ஈறும், உகர ஈறும் விளி யேற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

கோ — கோவே என, ஓகார ஈறு ஏகாரமொடு சிவணிற்று. வேந்து — வேந்தே என, உகரம் ஏயொடு சிவணிற்று.

இம் முடிபு, 'பிறிது வந் தடைதல்' ஆம்.

தெய்வ: (119, 120 இரண்டையும் ஒன்றாகக் கொண்டார்)

உகர ஓகாரப் பெயர் விளி யேற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஓகாரமும், உகரமும், ஏகாரம் பெற்று விளி யேற்கும்.

ஆண்டுக் குற்றிய லுகரமே ஈறாகும், எ-று.

உ-ம்: கோ — கோவே; வேந்து — வேந்தே, என வரும். பிறவு மன்ன.

சேனா: (ஓகார உகர ஈறுகள்.)

இ-ள்: கோ – கோவே எனவும், வேந்து – வேந்தே எனவும், ஓகாரமும் உகரமும் ஏகாரம் பெற்று விளி யேற்கும், எ–று.

நச்சி:

இஃது, ஒழிந்தன விளி ஏற்குமாறு கூறுகின்றது.

இ-ள்: ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும் – ஓகார ஈற்றுப் பெயரும், உகர ஈற்றுப் பெயரும் ஏகாரத்தோடு பொருந்திப் பிறிது வந்து அடைதலாய் விளி ஏற்கும், எ–று.

உ–ம்: கோ – கோவே! வேந்து – வேந்தே! என வரும்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், ஒழிந்த இரண் டீறும் விளி யேற்குமா றுணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: ஓகார வீற்றுப் பெயரும், உகர வீற்றுப் பெயரும் ஏகரத்தோடு பொருந்தி விளி யேற்கும், என்றவாறு.

உ–ம்: கோ – கோவே, எனவும், வேந்து – வேந்தே எனவும் வரும்.

இவை பிறிது வந் தடைதல்.

120. உகரந் தானே குற்றிய லுகரம். (6)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ஐய மறுத்தல் நுதலிற்று. மேலதற் கோர் புறனடை யெனினும் அமையும்.

உரை: கூறப்பட்ட நான்கினுள், உகரம் குற்றிய லுகரம் என்பது அறியாது நின்றவழி, முற்றுகரம் அன்று குற்றுகரம், என்பது கருத்து.

தெய்வ: (பக். 531 பார்க்க)

சேனா:

இ-ள்: மேற் கூறப்பட்ட உகரமாவது குற்றிய லுகரம், எ–று.

திரு – திருவே எனச் சிறுபான்மை முற்றுகர வீறு முள வேனும், ஓதிய முறையானே விளி யேற்பன குற்றுகர வீறே யாகலின் குற்றிய லுகர மென்றார்.

நச்சி:

இஃது, ஐயம் அறுக்கின்றது.

இ-ள்: உகரந்தானே குற்றிய லுகரம் – மேற் கூறப்பட்ட உகரமாவது குற்றிய லுகரம், எ-று.

'திரு – திருவே!' (சீவக. 2121) எனச் சிறுபான்மை முற்றிய லுகரமும் விளி ஏற்கும்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், ஐய மறுத்த னுதலிற்று. என்னை? மேல் இ, உ, ஐ, ஓ வென்புழி இன்ன உகர மெனத் தெரித்துக் கூறாமையானும், உடன் ஓதப்பட்ட எழுத்துக்கள் முற்று இயல்பின வாதலானும், இன்ன உகர மென்பது அறியாது ஐயுற்றானை ஐயந் தீர்த்தமையின், என்பது.

மேற் கூறப்பட்ட உகரந்தான் முற்றிய லுகரம் அன்று, குற்றிய லுகர மாம், என்றவாறு.

121. ஏனை யுயிரே யுயர்திணை மருங்கிற்
றாம்விளி கொள்ளா வென்மனார் புலவர். (7)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று. ஐய மறுத்தது எனினும் அமையும்.

உரை : சொல்லப்பட்ட நான்கு உயிரெழுத்துமல் லால் மற்றையன உயர்திணைக்கண் விளி யேலா, என்றவாறு.

மற்று, கொள்வன இவை யெனவே ஒழிந்தன கொள்ளா, என்பது.

'யானே உணரேனோ?, இது சொல்ல வேண்டியது என்னை?' எனின், ஏனை உயிர் உயர்திணைக்கண் விளி கொள்ளா என, இன்னும் மேற் சொல்லப்பட்டன மேல் ஓதியவா றன்றிப் பிறவாற்றானும் விளி யேற்கும் என்றற்குச் சொல்லப்பட்டது, என்றவாறு.

கணி — கணியே என, இகர ஈறு ஈகாரப் பே றின்றி ஏகாரமும் பெற்று விளி யேற்கும், என்பது.

தெய்வ :

ஐயர் தீர்த்தல் நுதலிற்று.

இ-ள் : மேற் சொல்லப்பட்ட உயி ரல்லாத உயிர்கள் உயர்திணை யிடத்து வரின் விளி ஏலா, எ-று.

உ-ம் : அவையாவன : ஆடூஉ, மகடூஉ, நீ என்பன.

சேனு : (முடிவு)

இ-ள் : மேற் கூறப்பட்ட நான் கீறு மல்லா உயி ரீறு உயர்திணைக்கண் விளி கொள்ளா வென்று சொல்லுவர் புலவர், எ-று.

கொள்வன இவை யென வரையறுத் துணர்த்தவே, ஏனைய கொள்ளா வென்ப துணரப்படும், வரையறைக்குப் பயன் அது வாகவான்; அதனு னிச் சூத்திரம் வேண்டா வெனின், அஃ தொக்கும்; வரையறையாற் பெறப்படுவதனையே ஒரு பயன் நோக்கிக் கூறினுர். யாதோ பய னெனின், ஏனை யுயிர் விளி கொள்ளா வென, மேற் கூறப்பட்ட உயிர் கூறியவா றன்றிப் பிறவாற்ருனும் விளி கொள்வனவு முள வென்ப துணர்த்துதற் கென்பது.

எ-டு: கணி – கணியே; கரி – கரியே என வரும். பிறவு மன்ன.

தா மென்பதனுன் ஏனை யுயிர் தம் மியல்பாற் கொள்ளா வாயினுஞ் சொல்லுவான் குறிப்பு வகையாற் கொள்வனவு முள வென்ப தாம். மக வென்பது விளி பெரு தாயினுஞ் சொல்லு வான் குறிப்பான் மகவே யென விளி யேற்றவாறு கண்டு கொள்க.

நச்சி:

இது. வேண்டா கூறி, வேண்டியது முடிக்கின்றது.

இ-ள்: ஏனை உயிரே – மேற் கூறப்பட்ட நான்கு ஈறும் அல்லா உயிர் ஈறு. உயர்திணை மருங்கில் தாம் விளி கொள்ளா என்மனுர் புலவர் – உயர்திணைக்கண் விளி கொள்ளா என்று கூறுவர் புலவர், எ-று.

இதனுற் பயன், 'கணி – கணியே, கரி – கரியே'! என முற்கூறிய உயிர்கள் பிறவா ருயும் விளி ஏற்கும் என்றல்.

'தாம்' என்றதனால் மக (மலைபடு 185) என்றது மகவே! எனப் பிறிது வந்தும்,

'சான்றோர் ஈன்ற தகரத் தகாமகா!' என ஆகார மரூஉம். ஆடூஉ என்றது 'ஆடூஉ! கூறாய்' என இயல் பாயும் ஆடூஉவே! எனப் பிறிது வந்தும் விளி ஏற்றவாறு கொள்க.

கல்:

என் னுதலிற்றோ வெனின், வேண்டா கூறி வேண்டியது முடித்தலை உணர்த்தல் நுதலிற்று. என்னை வேண்டா கூறியவா றெனின், அவைதாம் இ, உ, ஐ, ஓ வென்புழி இந் நான்கு ஈறும் விளி யேற்கும்; ஒழிந்த உயி ரீறு விளி யேலா வென்பது பெற்ற மையின், என்பது.

இனி, வேண்டியது முடித்தவா றென்னை யெனின், ஒழிந்த உயி ரீறு வேற்றுமை யேலா வென்று இன்று; மேற்சொல்லிய உயி ரீறு விளி யேற்கு மென்றமையின் மேற்கூறிய நான்கு உயிரே யன்றி ஒழிந்த உயி ரீறுகள் உயர்திணைப் பெயரிடத்துத் தாம் விளித்தலைக் கொள்ளா வென்று சொல்லுவர் புலவர். என்றவாறு.

இவ் விதி மேலே பெற்று மன்றோ வெனின், மேற் கூறியவா றன்றி விளி யேற்கும் என்பது கருத் தெனக் கொள்க.

கணி – கணியே யென இகர வீறு ஏகாரம் பெற்றது. பிறவும் வந்தவழி கண்டு கொள்க.

122. அளபெடை மிகூஉ மிகர விறுபெய
ரியற்கைய வாகுஞ் செயற்கைய வென்ப. (8)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்கல் நுதலிற்று.

உரை: அளபெடை இகரம் ஈ றாயின் இயல்பாயே விளி யேற்கும், என்றவாறு.

வரலாறு: தொழீஇ என வரும். பெயர் நிலையும் விளி நிலையும் அதுவே நிற்குமாறு.

இனி, 'செயற்கைய', என்றதனால், இரண்டு மூன்று மாத் திரை பெற எழுதுவாரும் ஐந்து மாத்திரை பெற எழுதுவாரும் என இரு திறத்தார் ஆசிரியர், என உணர்க.

தெய்வ:

இகர ஈற்றுக்கண் வருவ தோர் வேறுபா டுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அளபெடை மிக்க இகர ஈற்றுப் பெயர் இயற் கைய வாகிய செய்தி யுடைய, எ-று.

உ-ம்: தோழீஇ என்பது விளிக்கண்ணும் அவ்வாறே வரும். செயற்கை என்றதனான் விளிக்கண் வரும் ஓசை வேறுபாடு அறிந்து கொள்க.

சேனா: (அளபெடைப் பெயர்)

இ-ள்: அளபெடை தன் னியல்பு மாத்திரையின் மிக்கு நான்கும் ஐந்தும் மாத்திரை பெற்று நிற்கும் இகர வீற்றுப் பெயர் இ ஈ யாகாது, இயல்பாய் விளி யேற்குஞ் செயற்கையை யுடைய வாம், எ-று.

அளபெடை மிக் கியற்கைய வாகுஞ் செயற்கைய வென்றது மிகூஉ மிகர விறுபெய ரென அநுவதித்தாரேனும், மாத்திரை மிக் கியல்பா மென்பது அதனாற் பெறப்படும்.

எ-டு: தோழீஇஇ எனவும், தோழீஇஇஇ எனவும் வரும்.

இ ஈ யாகாமையின் இயற்கைய வாகு மென்றும், மாத்திரை மிகுத வாகிய செயற்கை யுடைமையாற் செயற்கைய வென்றுங் கூறினார்.

இகர விறு பெய ரென்பது இகரத்தா னிற்ற பெய ரென விரியும்.

நச்சி:

இஃது. எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

இ-ள்: அளபெடை மிகூஉம் இகர இரு பெயர் — அள பெடை தன் இயல்பு மாத்திரையின் மிக்கு நான்கு (நான்கும் ஐந்தும்) மாத்திரை பெற்று நிற்கும் இகர ஈற்றுப் பெயர், இயற்கைய ஆகும் செயற்கைய என்ப — இ ஈ யாகாது இயல் பாய் விளி ஏற்கும் * செய்கையை உடைய, என்று கூறுவர் ஆசிரியர், எ-று.

* செயற்கையை : வே. பா.

உ-ம்: தொழீஇஇ (கலி. 103:40, 104; 69) - என வரும் தோழீஇ - தொழீஇஇஇ என ஐந்து எழுத்தும் இட்டு எழுதுப.

'இகர ஈற்றுப் பெயர்' எனவே நெட்டெழுத்து அளபெடுத்தது அன்று, குற்றெழுத்தே நின்று மாத்திரை பெற்றது என்று உணர்க.

இது 'தொழில் செய்கின்றவளே!' என்னும் பொருள் தந்து நிற்ப தோர் சொல்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

ஈகார மாதல் விலக்கி இயல்பாய் விளி யேற்கு மென்றமையின் அளபெடுத்தலான் மிகுகின்ற இகர மாய இறுதியை யுடைய பெயர் இயல்பாய் விளி யேற்குஞ் செய்தியை யுடைய வென்றவாறு.

உ ம்: தொழீஇ என்பது - பெயர்; விளியு மஃதே எனக் கொள்க. இஃ தியல்பு.

இயற்கைய வென்று பன்மை கூறிய வதனன், இவ் வளபெடை மூன்று மாத்திரையில்நிமிர்ந்து நிற்கும் என்பது கொள்ளப்படும். செயற்கைய என்றதனன், இவ் வளபெடைப் பெயர் எழுதும்வழி ஐந் தெழுத் திட்டும் எழுதுப. என்றவாறு கொள்ளப்பட்டது.

123. முறைப்பெயர் மருங்கி னையெ னிறுதி
யாவொடு வருதற் குரியவு முளவே (9)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இஃது இறந்தது காத்தல் நுதலிற்று.

உரை: மேல் ஐ ஆய் ஆகும் என்றார்; இனி, முறைப் பெயர்க்கண் ணையின் ஐ யீறு ஆவொடு வருவனவும் உள, என்றவாறு.

வரலாறு: அன்னை - அன்னா என்றும், அத்தை - அத்தா என்றும் ஆக, என்பது.

தெய்வ:

ஐகார ஈற்று முறைப் பெயர்க்கண் வரும் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முறைப் பெயர்க்கண் வரும் ஐகார ஈறு ஆய் ஆகி வருதலன்றி, ஆவோடு வருவதற்கு உரிய பெயரும் உள, எ-று.

உ-ம்: அன்னை – அன்னாய் என வருதலே யன்றி, அன்னா எனவும் வரும். உம்மை இறந்தது தழீஇயிற்று.

சேனா: (முறைப் பெயர்)

இ-ள்: முறைப் பெயரிடத்து ஐ யென்னு முடிவு ஆ யாகாது ஆவொடு வருதற்கு முரியன வுள, எ-று.

எ-டு: அன்னை – அன்னா எனவும்; அத்தை – அத்தா, எனவும் வரும்.

உம்மையான் அன்னாய், அத்தாய் என ஆ யாதலு முடைய வென்பதாம். உம்மை பிரிந்து நின்றது.

நச்சி:

இஃது, எய்தியதன்மேல் சிறப்பு விதி.

இ-ள்: முறைப் பெயர் மருங்கின் ஐ யென் இறுதி – முறைப் பெயரிடத்து ஐகார ஈறு, ஆவொடு வருதற்கு உரியவும் உள – ஆய் ஆகாது ஆகாரத்தோடு வருதற்கு உரியனவும் உள, எ–று.

உ-ம்: அன்னை – அன்னா! அத்தை – அத்தா! என வரும்.

உம்மை மறுத்து நிற்றலின், அன்னாய்! அத்தாய்! என்று வருதலே சிறப்பிற்று.

இவை விரவுப் பெயரேனும், ஈண்டு உயர்திணைப் பெயரிடை வைத்தார், மேல் விரவுப் பெயரை இவற்றோடு மாட்டெறிதலின், அம் மாட்டேற்றிற்கு ஏற்ப விளி ஏற்பன உயர்திணைப் பெயர்களுள் வேறு இன்மையான்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், மேற் சிறப்பு விதி வகுத்தலை யுணர்த்தல் நுதலிற்று.

ஐகார வீறு [1]ஆயாய் விளி ஏற்கின்றமையின் முறைப் பெய ரிடத்து ஐ யென்னு மீறு ஆயோடு [2]வருதலே யன்றி ஆவோடு வருதற்கு உரியனவு முள, என்னுதல் நுதலிற்று.

உ-ம்: [3]அன்னை – [4]அன்னா என்றும் [5]அத்தை – அத்தா என்றும் வரும்.

உம்மை எதிர்மறையதனான் ஆ யாதலே பெரும்பான் மைத்து.

மற்றிவை விரவுப் பெயரன்றோ வெனின், பெயர் விரவுப் பெயர்களை உயர்திணைப் பெயர்களோடு மாட்டெறியும் ஆதலா னும், அம் மாட்டேற்றிற் கேற்ப உயர்திணைப் பெயர்களுள் இவ்வாறு விளி யேற்பன வின்மையானும் ஆண்டுக் கூறற்பால தனை ஈண்டுக் கூறிய தெனக் கொள்க.

124. அண்மைச் சொல்லே யியற்கை யாகும். (10)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் இறந்தது காத்தல் நுதலிற்று.

உரை: அணியாரைக் கூவு மிடத்து அவை இயல்பே யாய் விளி யேற்கும், என்றவாறு.

வரலாறு: நம்பி வாழி; நங்கை வாழி; வேந்து வாழி, என வரும்.

தெய்வ:

இத் திணைக்கண் வரும் எல்லா வீற்றுப் பெயரும் அண்மைக் கண் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இச் சூத்திரம் முன்னும் பின்னும் நோக்கி நிற்றலிற் சிங்க நோக் காகிக் கிடந்த தென்று கொள்க.

இ-ள்: மேற் சொல்லப்பட்ட உயி ரீற்றுப் பெயரும், இனி யோதுகின்ற புள்ளி யீற்றுப் பெயரும் அஃறிணைப் பெயரும் அண்மைக்கண் இயல் பாகி விளி யேற்கும், எ-று.

னகர ஈறு சிறப்பு விதி பெறுதலின், அஃ தொழிந்த ஏனைய கொள்ளப்படும்.

---

1. ஆயாய் விளிவரயும் விளி: திருத்தம். 2. வருதலே: திருத்தம்.
3. [ஆ] (அ)ன்னை. 4. [ஆ] (அ)ன்னா 5. [ஆ] (அ)த்தை.

உ-ம்: நம்பி வாழி; நங்கை வாழி; வேந்து வாழி; கோ வாழி; மாதர் கூறு; அண்ணல் கூறு; ……….. தும்பி கூறு; அன்னம் கூறு; கானல் கூறு, என வரும். பிறவும் அன்ன.

"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்" என்பதும் அண்மை விளி. பிறவும் அன்ன.

சேனா: (அண்மைவிளி)

இ-ள்: நான் கீற் றண்மைச் சொல்லும் இயற்கையாய் விளி யேற்கும், எ–று.

அண்மைக்கண் விளி கொள்வதனை 'அண்மைச் சொல்' என்றார்.

எ–டு: நம்பி வாழி; வேந்து வாழி; நங்கை வாழி; கோ வாழி, என வரும்.

நச்சி:

இது எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

இ-ள்: அண்மைச் சொல்லே இயற்கை ஆகும் – நான்கு ஈற்று அண்மைக்கண் விளி ஏற்கும் சொற்கள் இயற்கையாய் விளி ஏற்கும், எ–று.

உ–ம்: நம்பி வாழி; வேந்து வாழி; நங்கை வாழி; கோ வாழி. என வரும்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: மேற் கூறியவா றன்றி இன்னுழி இயல்பா மென் கின் றமையின் மேற் கூறிய உயி ரீறு நான்கினையு முடைய அணி யாரைக் கூவுஞ் சொற்கள், மேற் கூறியவா றன்றி இயல்பாய் விளி யேற்கும், என்றவாறு.

உ-ம்: நம்பி வாழி; நங்கை வாழி; வேந்து வாழி; கோ வாழி என வரும்.

125. னரலள வென்னு மந்நான் கென்ப
புள்ளி யிறுதி விளிகொள் பெயரே (11)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், உயர்திணைக்கட் புள்ளி யீறு விளி யேற்பன இவை யென உணர்த்துதல் நுதலிற்று.

வரலாறு: முன்னர்க் காட்டுதும்.

தெய்வ:

இ-ள்: உயர்திணையுள் புள்ளி யீ றாகி விளி கொள்ளும் பெயர் ன, ர, ல, ள என்னும் ஈற்றினை யுடைய, அந் நான் கென்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

உயர்திணை என்பது அதிகாரத்தான் வந்தது.

ன, ர, ல, ள என்பன ஆகுபெயராய் அவ் வீற்றினை யுடைய பெயர்க்குப் பெய ராயின.

உதாரணம் தத்தம் சிறப்புச் சூத்திரத்துட் காட்டுதும்.

சேனா: (விளி யேற்கும் புள்ளி ஈறுகள்)

உயி ரீற் றுயர்திணைப் பெயர் விளி யேற்குமா றுணர்த்தி, இனிப் புள்ளி யீற் றுயர்திணைப் பெயர் விளியேற்குமா றுணர்த்துகின்றார்.

இ-ள்: புள்ளி யீற் றுயர்திணைப் பெயர் ன, ர, ல, ள வென்னும் அந் நான் கீற்ற வென்று சொல்லுவர் ஆசிரியர், எ-று.

ன, ர, ல, ள, வென்னு மொற்றை ஈறாக வுடைய சொல்லை 'ன ர ல ள' வென்றார்.

நச்சி:

இது, புள்ளி ஈற்றுள் விளி ஏற்பன கூறுகின்றது.

இ-ள்: புள்ளி இறுதி விளி கொள் பெயர்-புள்ளி ஈற்றினை யுடைய விளித்தலைக் கொள்ளும் உயர்திணைப் பெயர், ன ர ல ள என்னும் அந் நான்கு என்ப – ன ர ல ள என்று கூறப்படும் அந் நான்கு ஈற்றுப் பெயரும் என்று கூறுவர் ஆசிரியர், எ-று.

கல்:

என்பதென் னுதலிற்றோ வெனின், உயர்திணைக்கண் உயி ரீறு விளி யேற்பன இவை யென்பது உணர்த்தி, இனி யவ் வுயர்திணைக்கட் புள்ளி யீறு விளி யேற்பன விவை யென்ப துணர்த்த னுதலிற்று.

இ-ள்: ன ர ல ள வென்று சொல்லப்பட்ட அந் நான் கீற்றுப் பெயரும் என்று சொல்லுப வாசிரியர், புள்ளி யீற்றினை யுடைய விளித்தலைக் கொள்ளும் உயர்திணைப் பெய ராவன வென்றவாறு.

புள்ளி யீற்றுள் இவை கொள்ளு மெனவே ஒழிந்தன விளி கொள்ளா வென்பதூஉம் பெற்றும்.

உ-ம்: 'பொருந், பாண் எனவும், எல்லாரும் எனவும் இவை முதலாயின விளி யேலாதன வெனக் கொள்க.

126. ஏனைப் புள்ளி யீறு விளிகொள்ளா. (12)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தாத தெய்து வித்தல் நுதலிற்று. ஐய மறுத்தது எனினும் அமையும்.

உரை: மேற் சொல்லப்பட்ட நான் கல்லீப் புள்ளி யீறு விளி யேலா, உயர்திணைக்கண், என்றவாறு.

மற்று, ஆவன கூற அமையாதோ வெனின் 'ஏனைப் புள்ளி யீறு விளிகொள்ளா' என, இன்னும் மேற் கூறிய புள்ளி யீறு அவ்வா றன்றிப் பிறவாறு விளி யேற்ற லுடைய என்றற்குக் கூறினர், என்பது.

வரலாறு: பெண்டிர் – பெண்டிரே எனவும், தம்முன் – தம்முனே எனவும் வரும். பிறவும் அன்ன.

ஏனைப் புள்ளியும் ஆவ துண்டு.

விளங்குமணிக் கொடும்பூணுஅய் (புறம் 130) என்பதும் பிறவும் இவ்வாறு வருவன கொள்க.

தெய்வ:

ஐய மறுத்தலை நுதலிற்று.

---

1. பொருந, பாண: திருத்தம்.

இ-ள்: உயர்திணைப் பொருட்கண் மேற் சொல்லப்பட்ட நான் கீற்றுப் பெயரும் ஒழிய, ஏனை யீற்றுப் பெயர்கள் விளி யேலா, எ-று.

உ-ம்: அவை: யான், யாம், நாம், எல்லோரும், எல்லீரும், எல்லாம், தாம் என்பன.

சேனா: (முடிவு)

இ-ள்: அந் நான்கு மல்லாத புள்ளி யீற்றுப் பெயர் விளி கொள்ளா, எ-று.

ஈண்டும் விளி கொள்ளா வென்றதனாற் பயன், கூறப்பட்ட புள்ளி யீறு பிறவாற்றான் விளி கொள்வன வுள வென்ப துணர்த்தலாம்.

எ-டு: பெண்டிர் – பெண்டிரே எனவும், தம்முன் – தம்முனா எனவும் வரும். பிறவு மன்ன.

'விளங்குமணிக் கொடும்பூணாஅய்' (புறம் – 130) என ஏனைப் புள்ளி சிறுபான்மை விளி யேற்றலுங் கொள்க.

நச்சி:

இது, வேண்டா கூறி, வேண்டியது முடிக்கின்றது.

இ-ள்: ஏனைப் புள்ளி ஈறு விளி கொள்ளா – அந் நான்கும் அல்லாத புள்ளி ஈற்றுப் பெயர் விளித்தலைக் கொள்ளா, எ-று.

இங்ஙனம் வேண்டா கூறிய அதனாற் பயன், மேற் கூறு கின்ற புள்ளி ஈறுகள் பிறவாற்றான் விளி கொள்வன உள. என்பதூஉம், எடுத்து ஓதாப் புள்ளி ஈறுகளிலும் விளி ஏற்பன உள, என்பதூஉம் உணர்த்துதலாம்.

முறைமை சுட்டா மகன், மகள் என்பன,

'படிவ உண்டிப் பார்ப்பன மகனே!' (குறுந்: 156)

'அகவல் மகளே! அகவல் மகளே!' (குறுந்: 23)

என ஏகாரம் பெற்று வருதலும் ('அகவல் மகள்' முறைமை சுட்டியது அன்று; அகவல் – ஓசை)

'கூந்தல்மா [1]கொன்று குடமாடிக் கோவலனாய்ப்
பூந்தொடியைப் புல்லிய [2]ஞான்றுண்டால் யாங்கொளித்தாய்
தென்னவனே! தேர்வேந்தே! தேறுநீர்க் கூடலார்
மன்னவனே! மார்பில் மறு?' (முத்தொள்ளாயிரம்)

1. வே-ம்: ஊர்ந்து. 2. வே-ம்: ஞான்றுண்டாங் கொல்.

என 'அன்' ஈறு ஏகாரம்பெற்று வருதலும், 'நம்பன்! சிறிதே இடைதந் திருகேட்க (சீவக. 1975) என 'அன்' ஈறு இயல்பாய் வருதலும், 'நம்பான்! எம்பெருமா! என 'அன்' ஈறு ஈற்று அயல் நீண்டு வருதலும், 'ஆன்' ஈறு, வாயிலோயே! (புறம் 206: 1) என ஏகாரம் பெற்று வருதலும், ரகர ஈறு, மாந்தர்! கூறீர், என இயல்பாயும், இறைவரே! என ஏகாரம் பெற்றும் வருதலும், லகார ஈறு, கானல்! கூறாய்; குரிசில்! கூறாய், என இயல்பாயும், திருமாலே! தாழ்குழலே! என ஏகாரம் பெற்றும் வருதலும், ளகார ஈறு, கடவுள்! வாழி, என இயல்பாயும், அடிகள் – அடிகேள்! என ஈற் றயல் அகரம் ஏகார மாயும் வருதலும், இவையிற் பிறவாறாய் வருதலும் கொள்க.

இனி, எடுத்து ஓதாதனவற்றுள் ஆகார ஈறு,

துறந்துள்ளார் அவரெனத் துனிகொள்ளல் எல்லா! நீ (கலி 35: 8) என 'ஏடீ' என்றும்,

எல்லா! நீ முன்னத்தான் ஒன்று குறித்தாய்போற் காட்டினை (கலி. 61: 7) என 'ஏடா, என்றும், இரு பாற்கும் பொதுவாய் விளி ஏற்றலும்,

[1] முன் ஈறு தம்முன் – தம்முனே! என ஏகாரம் பெற்றும், நம்முன் – நம்முனா! என ஆகாரம் பெற்றும், 'இர்' ஈறு, பெண்டிர் – பெண்டிரோ! என ஓகாரம் பெற்றும், என்னை கேளிர்! (சீவக. 1594) என 'ஈர்' பெற்றும்,

'கேளிர்! வாழியோ கேளிர் நாளும்' (குறுந். 280) என இயல்பாயும், யகர ஈறு,

'விளங்குமணிக் கொடும்பூண் ஆஅய்! (புறம் 130: 1) என இயல்பாயும், 'ஆயே!' என ஏகாரம் பெற்றும் வருதலும் கொள்க.

இனி,
'கிழவோள் பிறள்குணம் இவையெனக் கூறிக்
கிழவோன் குறிப்பினை உணர்தற்கும் உரியள்' (பொருளியல் சூ. 40) என்றும்,

'கிழவோட் குவமம் ஈரிடத் துரித்தே' (உவமவியல் 29)
'கிழவோற் காயின் இடம் வரை வின்றே'
(உவமவியல் சூ. 30)

1. வே–ம்: உன் ஈறு.

என்றும் பிறுண்டும் உடம்பொடு புணர்த்துக் கூறிய 'ஒன்' என்னும் ஈறு, தொழிலிற் கூறும் ஆன் என் இறுதி (விளிமரபு சூ. 16) போல * ஓயாய் விளி ஏற்றலும் கொள்க.

அது 'பெருங்கல் வைப்பின் நாடுகிழ வோயே
(புறம். 202: 21)
'மாஅயோய்! (பரி, 3: 1) என்றாற் போலச் செய்யுட்க ளுள்ளும் வருவனவும் கொள்க.

ஓகாரம் அடுத்த ளகார ஈறு விளி யேற்குமேனும் உணர்க.

'ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்
'பெண்டிரும் பிணியுடை யீரும் பேணி! (புறம் 9: 1, 2)
என்றாற் போலும் அண்மை விளியும் இதனாற் கொள்க.

கல்:

என் னுதலிற்றோ வெனின், வேண்டா கூறி, வேண்டியது முடித்தலை யுணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: மேற் சொல்லப்பட்ட நான்கு மல்லாத புள்ளி யீறு உயர்திணை [1]யிடத்து விளித்தலைக் கொள்ளா வென்றவாறு.

மற்றிவ் விதி மேலே பெற்றா மன்றோ வெனின், மேற் சொல்லிய நான்கு புள்ளி யீறும் இனிக் கூறுமாறு போலாது விளி யேற்றலு முடைமைய வென்றற்கு மிகைபடக் கூறப்பட்ட தெனக் கொள்க.

உ-ம்: னகர வீற்றுண் மே லோதுகின்ற அன் னீறும் ஆ னீறு மல்லாத 'னகர' வீறு, தம்முன் – [2]தம்முனே எனவும், நம்முன் – [3]நம்முனே எனவும் விளி யேற்றது. ரகர வொற்று ளோதுகின்ற அரீறும் ஆரீறு மல்லாத இர் ஈறும், பெண்டிர் – பெண்டிரே யென ஏகாரம் பெற்றும், கேளிர் – கேளிர் என வியல்பாயும் விளி யேற்றது, [4]பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க. இன்னும் இம் மிகுதியானே ஏனைய புள்ளியுள்ளுஞ் சிறுபான்மை யாவன வுள.

'விளங்குமணிக் கொடும்பூணஅய்' என யகர வீறு இயல் பாய் விளி யேற்றது. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க,

---

1. [வி] (யி)டத்து. 2. தம்முன்னே: திருத்தம்.
3. நம்முன்னே: திருத்தம். 4. பி [ர] (ற)வும்
* அகரமாய் : திருத்தம்.

127. * அன்னெ னிறுதி யாவா கும்மே (13)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், நிறுத்த முறை யானே னகர வீறு விளி யேற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அன் என்னும் பெய ரிறுதி ஆவாய் விளி யேற்கும், என்றவாறு.

வரலாறு: சோழன் – சோழா, சேர்ப்பன் – சேர்ப்பா என வரும்.

தெய்வ:

நிறுத்த முறையானே னகர ஈறு விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் சொல்லப்பட்டவற்றுள், அன் என்னும் ஈற்றினை யுடைய பெயர் ஆ என விளி யேற்கும், எ-று.

ஈ றென்றது ஈற்றினை யுடைய பெயரை.

உ-ம்: சோழன் – சோழா; வெற்பன் – வெற்பா; சாத்தன் – சாத்தா என வரும்.

சேனா: (அவற்றுள் னகர ஈறு)

இ-ள்: அவற்றுள் அன் னென்னும் னகர வீறு ஆவாய் விளி யேற்கும், எ–று.

எ–டு: சோழன் – சோழா; சேர்ப்பன் – சேர்ப்பா என வரும்.

நச்சி:

இது, முறையானே னகார ஈறு விளி ஏற்குமாறு கூறு கின்றது.

இ-ள்: அவற்றுள் அன் என் இறுதி ஆ ஆகும்மே – அந் நான்கு ஈற்றுப் பெயருள் அன் என்னும் னகர ஈற்றுப் பெயர் ஆ வாய் விளி ஏற்கும், எ–று.

உ-ம்: துறைவன் – துறைவா! ஊரன் – ஊரா! சோழன்- சோழா! சேர்ப்பன் – சேர்ப்பா! என வரும்.

* பிற வுரையாசிரிய ரெல்லாம், "அவற்றுள், அன்னெனிறுதி ......" எனப் பாடங் கொண்டுள்ளார்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், மே னிறுத்த முறையானே னகர வீறு விளி யேற்குமா றுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அந் நான்கு புள்ளியுள்ளும் னகர வீற்று அன் என்னு மிறுதிப் பெய ரிறுதி ஆவாய் விளி யேற்கும், என்றவாறு.

உ-ம்: சோழன் – சோழா; சேர்ப்பன் – சேர்ப்பா என வரும்.

துறைவன் – துறைவா என்பதும் அது.

128. அண்மைச் சொல்லிற் ககரமு மாகும். (14)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தியது ஒரு மருங்கு மறுத்தல் நுதலிற்று.

உரை: அணியாரைக் கூவு மிடத்து அன் ஈறு திரிந்து அகரமாயும் விளி யேற்கும், என்றவாறு.

வரலாறு: ஊரன் – ஊர; சேர்ப்பன் – சேர்ப்ப என வரும்.

தெய்வ:

எய்தியது விலக்கி மேலதற் கோர் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அன் என்னு மீறு அண்மைக்கண் அகர மாகி விளி யேற்கும், எ-று.

அன் என்பது அதிகாரத்தான் வந்தது.

உ-ம்: சோழ; சாத்த; வெற்ப, என வரும்.

சேனா: (அதன்கண், அண்மை விளி.)

அண்மைச் சொல்லிற்கு அகர மாகும்.

இ-ள்: அண்மை விளிக்கண் அன் னீறு அகர மாம், எ-று.

எ-டு: துறைவன் – துறைவ; ஊரன் – ஊர என வரும்.

நச்சி:

இஃது, எய்தியது விலக்கிப் பிறிது விதி வருத்தது.

இ-ள்: அண்மைச் சொல்லிற்கு அகரம் ஆகும் — அண்மை விளிக்கண் அன் ஈறு அகர மாகும். எ—று.

உ-ம்: துறைவன் — துறைவ; ஊரன் — ஊர; சோழன் — சோழ, என வரும்.

கல்:

என்னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: அவற்றுள் அன் னீறு அணியாரை விளிக்குஞ் சொல்லிடத்து அகர மாகும், எ—று.

உ-ம்: சோழன் — சோழ; சேர்ப்பன் — சேர்ப்ப என வரும்.

துறைவன் — துறைவ, என்பதும் அது.

129. ஆனென் னிறுதி யியற்கை யாகும் (15)

இளம்: இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் னகர வீறு விளி யேற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஆன் என் னகர வீறு இயல்பாய் விளி யேற்கும். என்றவாறு.

வரலாறு: சேரமான், மலையமான் என இரு நிலைமைக் கண்ணும் அதுவே நிற்குமாறு, என்பது.

தெய்வ:

இதுவும் னகர வீற்றுக்கண் வருவ தோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: உயர்திணைப் பொருள் உணர்த்தும் னகார வீற்றுப் பெயருள் ஆன் என்னும் ஈற்றுப் பெயர் இயல் பாகி விளி யேற்கும், எ—று.

உ-ம்: கோமான், மலையமான் என்பன விளிக்கண்ணும் அவ்வாறே வரும்.

சேனா: (ஆன் என்னும் ஈறு)

இ-ள்: ஆ னென்னும் னகர வீறு இயல்பாய் விளி யேற்கும், எ—று.

சேரமான், மலையமான் என்பன கூவுதற்கண்ணும் அவ்வாறு நிற்றல் கண்டு கொள்க.

நச்சி:

இஃது, ஆன் என்பது விளி ஏற்குமாறு கூறுகின்றது.

இ-ள்: ஆன் என் இறுதி இயற்கை ஆகும் - ஆன் என்னும் னகர ஈற்றுப் பெயர் இயல்பாய் விளி ஏற்கும், ஏ-று.

சேரமான்! மலையமான்! எனக் கூவுதற்கண்ணும் அவ்வாறே நிற்றல் காண்க.

கல்:

என் னுதலிற்றோ வெனின் 'னகர வீற்றுள் ஒரு சாரன விளி யேற்குமா றுணர்த்தல் நுதலிற்று.

இ-ள்: ஆன் என்னும் னகர விறுதிப் பெயர் இயல்பாய் விளி யேற்கு மென்றவாறு.

உ-ம்: சேரமான்; மலையமான், என வரும்.

130. தொழிலிற் கூறு மானெ னிறுதி
யாயா கும்மே விளிவயி னான. (16)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தியது ஒரு மருங்கு மறுத்தல் நுதலிற்று.

உரை: ஆன் என் இறுதி தொழிற் பெய ராயின் ஆ யாய் விளி யேற்கும் என்றவாறு.

வரலாறு: உண்டான் - உண்டாய், என வரும்.

இனி, 'விளிவயி னான' என்றதனான், வாயிலான் - வாயி லாய், பூயிலான் - பூயிலாய் என, இவ்வாறு பெயரி னாகிய பெயரும் ஆயாய் விளி யேற்கும் என்பாரும் உளர்.

தெய்வ:

ஆ னீற்றுக்கண் வருவ தோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

---

1. [இதுவும் அது] னகர.

இ-ள்: தொழிலாற் கூறப்படும் ஆன் ஈற்றுப் பெயர் ஆய் என வரும் விளித்தற் கண்ணும். எ-று.

உ-ம்: உண்டான், வந்தான் என்னுந் தொழிற் பெயர் உண்டாய், வந்தாய் என விளி ஏற்கும்.

தொழில் என்றதனுற் குறிப்பு வினைப் பெயருங் கொள்க. உடையான், கழலான் என்பன, உடையாய், கழலாய் என வரும்.

மீண்டும் 'விளிவயி னுன' என விதந் தோதினமையால், தொழிலால் வருஞ் சொல் முன்னிலை யாகியவழியும் உண்டாய் என வரும் அதன்று இது, என்பதூஉம், அதனோடு இதனிடை ஓசை வேறுபாடு உளது என்பதூஉம் அறிவித்தற்கு எனக் கொள்க.

சேனு : (அதன்கண் வினையாலணையும் பெயர்)

இ-ள்: தொழிலா னொரு பொருளைச் சொல்லும் ஆ னீற்றுப் பெயர் விளிக்கண் ஆ யாம், எ-று.

எ-டு: வந்தான் – வந்தாய்; சென்றுன் – சென்றுய் என வரும்.

விளி யதிகார மாகலான் விளிவயி னுன எனல் வேண்டா எனின், சொல் லில்வழி உய்த்துணர்வ தென்று மிறுக்க.

நச்சி :

இஃது, எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

இ-ள்: தொழிலிற் கூறும் ஆன் என் இறுதி விளி வயினுன- தொழிலினுன் ஒரு பொருள் அறியச் சொல்லும் 'ஆன்' ஈற்றுப் பெயர் விளி ஏற்குமிடத்து, ஆய் ஆகும்-ஆய் ஆம், எ-று.

உ-ம்: வந்தான் – வந்தாய்! சென்றுன் – சென்றுய்! என வரும்.

'தொழிலின்' என்றதனுல் 'கழலாய்! இடையாய்! எனக் குறிப்பினும் கொள்க.

கல் :

என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: ஒருவன் செய்யுந் தொழில் ஏதுவாகக் கூறப் படுகின்ற ஆனெனிறுதிப் பெயர் விளிக்குமிடத்து ஆயாகும், என்றவாறு.

உ-ம் :- உண்டான் — உண்டாய்; நின்ருன் — நின்ருய்; வந்தான் — வந்தாய்; சென்ருன் — சென்ருய். என வரும்.

131. பண்புகொள் பெயரு மதனோ ரற்றே (17)

இளம்:

இச் சூத்திரம் என்னுதலிற்றோ வெனின், இதுவும் எய்தியது ஒரு மருங்கு மறுத்தல் நுதலிற்று.

உரை: அவ் வான் இறுதி பண்புகொள் பெயராயின் ஆ யாய் விளி யேற்கும், என்றவாறு.

வரலாறு: கரியன் – கரியாய்; செய்யான் – செய்யாய். என வரும். பிறவும் அன்ன.

தெய்வ:

ஆனீற்றுப் பெயருள் பண்புப் பெயர்க்கு உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: பண்பினுல் பெற்ற ஆன் ஈற்றுப் பெயரும் ஆய் என விளி ஏற்கும், எ-று.

உ-ம்: கரியான், கொடியான் என்பன, கரியாய், கொடியாய் என வரும்.

கரியான் எனவும் விளி யேற்குமா லெனின், அவ்வாறு வருவது பண்பு குறியாது அப் பொருட்கு இடுகுறி யாகி வந்த தென்க.

சேனு: (பண்புப் பெயர்.)

இ-ள்: ஆனீற்றுப் பண்புகொள் பெயரும் அவ் வீற்றுத் தொழிற்பெயர் போல ஆ யாய் விளி யேற்கும், எ-று.

எ-டு: கரியான் – கரியாய்; செய்யான் – செய்யாய், என வரும்.

நச்சி:

இதுவும் அது.

இ-ள்: , பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே – 'ஆன்' ஈற்றுப் பண்பைக்கொண்டு நின்ற பெயரும் அவ் வீற்றுத் தொழிற்பெயர் போல 'ஆய்' ஆய் விளி ஏற்கும், எ–று.

உ-ம்: கரியான் – கரியாய்! தீயான் – தீயாய்! என வரும்.

**கல்:**

என் னுதலிற்றோ வெனின், இதுவும் எய்தியது விலக்கிப் பிறிது வகுத்த னுதலிற்று.

இ-ள்: அவற்றுட் பண்பைத் தனக்குப் பொருண்மை யாய்க் கொண்ட பெயரும் மேற்கூறிய தொழிற்பெயரோ டொருதன்மைத் தென்றவாறு.

உ-ம்: கரியன் - கரியாய்; செய்யன் – செய்யாய், என வரும்.

132. அளபெடைப் பெயரே யளபெடை யியல. (18)

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், னகர வீற்று அளபெடைக் குரிய இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை: னகர விறுதி அளபெடைப் பெயரும் மேல் இகர வீற்று அளபெடை யேற்றவாறு ஏற்க, என்றவாறு.

வரலாறு: அழாஅன், புழாஅன் என வரும்.

**தெய்வ:**

னகர ஈற்றுள் அளபெடைப் பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: னகார இறுதி அளபெடைப் பெயராயின் இயல் பாகி விளி யேற்கும், எ-று.

உ-ம்: கிழாஅன், கோஒன் என்பன விளிக்கண்ணும் அவ்வாறே வரும்.

**சேனா:** (அளபெடைப் பெயர்)

இ-ள்: ஆ னீற் றளபெடைப் பெயர் இகர வீற் றள பெடைப் பெயரே போல மூன்று மாத்திரையி னீண்டு இயல் பாய் விளி யேற்கும், எ–று.

எ–டு: ஊழாஅஅன், கிழாஅஅஅன் எனவரும்.

அளபெடை மூன்று மாத்திரையின் நீண் டிசைத்தலாகிய விகார முடைமையான்,

'ஆனெ னிறுதி யியற்கை யாகும்' (சொல் – 129) என்புழி அடங்காமை யறிக.

நச்சி:

இஃது, எய்தாதது எய்துவித்தது.

இ-ள்: அளபெடைப் பெயரே அளபெடை இயல– 'ஆன்' ஈற்று அளபெடைப் பெயர். இகர ஈற்று அளபெடைப் பெயர் போல (விளி – 8) மூன்று மாத்திரையின் நீண்டு இயல்பாய் விளி ஏற்கும், எ–று.

உ–ம்: உழாஅஅன்! கிழாஅஅன்! எனவரும்; இஃது, அளபெடுத்தலின் 'ஆன்' ஈற்றின் அடங்கா தாயிற்று.

கல் :

என் னுதலிற்றோ வெனின், எய்தா தெய்துவித்தல் நுதலிற்று.

இ-ள்: அவ் வா னீற் றளபெடைப் பெயர் மேற்கூறிய இகர வீற் றளபெடைப் பெயர் போல இயல்பாய் விளி யேற்கு மென்றவா று.

உ–ம்: அழாஅஅன்; புழாஅஅன் என வரும்.

மற் றிஃது,

'ஆனெ னிறுதி யியற்கை யாகும்' என்றவழியே அடங் காதோ வெனின், அளபெடுத்த ஆ னெ னிறுதி யாகலின் வேறு கூறிற்றுப் போலும்.

133. முறைப்பெயர்க் கிளவி யேயொடு வருமே. (19)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இறந்தது காத்தல் நுதலிற்று.

உரை: 'னகார வீற்று முறைப் பெய ராமே யெனின் ஏகாரம் பெற்று விளி யேற்க, என்றவாறு.

வரலாறு: மகன் – மகனே; மருமகன் – மருமகனே, என வரும்.

மற்று இவை இரு திணைக்கும் உரிய வாம் பிற வெனின், உரிய வாயினும், முன்னர், 'விளம்பிய நெறிய விளிக்குங் காலை' [விளிமரபு – 33] என்னும் மாட்டேறு சொல்லாமையான் னகர வீற்று ஒற்றுமை பற்றி வைத் துணர்த்தினர், என்பது.

தெய்வ:

னகார ஈற்றுள் முறைப்பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: னகார ஈற்றுள் முறைமை குறித்த பெயர் ஏகாரத்தோடு விளி யேற்கும், எ-று.

உ-ம்: மகன் என்பது மகனே, என வரும்.

ஒப்பின் முடித்தல் என்பதனான் முறைமை சுட்டாத மகன் என்னும் பெயரும் ஏயொடு சிவணும் என்று கொள்க: "பார்ப்பன மகனே; பார்ப்பன மகனே" (குறு. 156) என வரும்.

"சான்றோ ளீன்ற தகாஅத்த காஅமகாஅன்
ஈன்றாட் கொருபெண் இவள்" (பரி பா. 8)

என ஆகார மாகியும் வரும்.

வந்தது கண்டு வராதது முடித்தல் என்பதனால் பிற பெயர்க்கண்ணும் ஏயோடு வருதல் கொள்ளப்படும்.

"கூந்தன்மா வூர்ந்து குடமாடிக் கோவலனாய்ப்
பூந்தொடியைப் புல்லிய ஞான்றுண்டால் — யாங்
கொளித்தாய்
தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்
மன்னவனே மார்பின் மறு" — (முத்தொள்ளாயிரம்)

எனவும், கோவே எனவும் வரும்.

இவை செய்யுள் மருங்கினும் என்னும் அதிகாரப் புறனடையாற் கொள்ளினும் அமையும்.

சேனா: (முறைப்பெயர்)

இ-ள்: னகார வீற்று முறைப்பெயர் ஏகாரம் பெற்று விளி யேற்கும், எ-று.

எ-டு: மகன் – மகனே; மருகன் – மருமகனே, என வரும்.

நச்சி:

இதுவும் அது.

இ-ள்: முறைப்பெயர்க் கிளவி ஏயொடு வருமே – னகார ஈற்று முறைப்பெயர் ஏகாரம் பெற்று விளி ஏற்கும், எ-று.

உ-ம்: மகன் – மகனே! மருமகன் – மருமகனே! எனவரும்.

ஐகார ஈற்று முறைப் பெயர்க்குக் கூறிய உரையை (விளி மரபு சூ. 9, உரை) ஈண்டும் கூறிக் கொள்க.

கல்:

என் னுதலிற்றோ வெனின், இதுவும் எய்தாதது எய்து வித்தல் நுதலிற்று.

இ-ள்: னகர வீற்று முறைப்பெய ராகிய சொல் ஏகாரம் பெற்று விளி யேற்கும், என்றவாறு.

உ-ம்: மகன் – மகனே; மருமகன் – மருமகனே, என வரும்.

மற் றிது விரவுப் பெய ரன்றோ வெனின், மேல் ஐகார வீற்றுக்குக் கூறியவாறே ஈண்டுங் கூறுக.

134. தானென் பெயருஞ் சுட்டுமுதற் பெயரும்
யானென் பெயரும் வினாவின் பெயரு
மன்றி யனைத்தும் விளிகோ ளிலவே. (20)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், னகர வீற்றுள் விளி யேலாதன இவை என்பது உணர்த்துதல் நுதலிற்று.

உரை: அவைதாம், தான், அவன், இவன், உவன், யான், யாவன், என்பன; இவ் வாறு பெயரும் மேல் எவ் விளியும் ஏலா, என்றவாறு.

தெய்வ:

ணகார ஈற்றுப் பெயர் விளி ஏலாதன உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: தான், அவன், இவன், உவன், அத்தன்மையன், அத்தன்மையான், அன்னுன், அனையான், யான், யாவன் என வருவன விளி ஏலா, எ—று.

சேனு: (னகர ஈற்றுள் விளி ஏலாதவை.)

இ-ள்: தா னென்னும் பெயரும், அவன், இவன், உவ னென்னும் சுட்டுமுதற் பெயரும், யா னென்னும் பெயரும், யாவ னென்னும் வினப்பெயரு மாகிய அவ் வனைத்தும், னகர வீறே யாயினும், விளி கொள்ளா, எ—று.

நச்சி:

இது, னகார ஈற்றுள் விளி ஏலாதன கூறுகின்றது.

இ-ள்: தான் என் பெயரும் சுட்டு முதற் பெயரும் யான் என் பெயரும் வினவின் பெயரும் அன்றி அனைத்தும் விளி கோள் இலவே — தான் என்னும் ஆன் ஈற்று விரவுப் பெயரும் அவன், இவன், உவன் என்னும் அன் ஈற்றுச் சுட்டுமுதற் பெயரும் யான் என்னும் ஆன் ஈற்றுப் பெயரும் யாவன் என்னும் வினப் பொருளை உணர்த்தும் அன் ஈற்றுப் பெயரு மாகிய அவ் வனைத்தும் னகார ஈறே யாயினும் விளி கொள்ளா. எ—று.

கல்:

என் னுதலிற்றோ வெனின், னகர வீற்றுள் விளி யேற்பன வெல்லாம் உணர்த்தி விளி யேலாதன *உணர்த்த னுதலிற்று.

இ-ள்: தா னென்னும் ஆ னீற்றுப் பெயரும், சுட்டெழுத்தை முதலாக வுடைய அன் னீற்றுப் பெயர்களும், யான் என்னும் ஆ னீற்றுப் பெயரும், வினப் பொருண்மை யுணர்த்தும் அன் னீற்றுப் பெயரும், அவ் வனைத்துப் பெயரும் மேற் கூறியவாற்ரு னயினும், பிறவாற்ரு னயினும் விளி கோடலி யில வென்றவாறு.

* கூறுகின்றது உணர்த்தனுதலிற்று : திருத்தம்

தான், யான் என்பன ஆனீறே யெனினும் விளி யேலா வெனக் கொள்க.

அவன், இவன், உவன், என்னுஞ் சுட்டுப் பெயரும்; யாவன் என்னும் வினாப் பெயரும் அன் னீறே யெனினும் விளி யேலா வென் றவாறு.

மற்றுத் தான் என்பது விரவுப் பெயர் அன்றோ வெனின் விரவுப் பெயர்களை உயர்திணைப் பெயர்களோடு மாட்டெறியும் வழி விலக்கற்பாடு மாட்டெறிதற் கொப்பன வின்மையும் ஈண்டே கூறினா ரென்பது.

135. ஆரு மருவு மீரொடு சிவணும். (21)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே ரகர வீறு விளி யேற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : ஆர் என்னும் ஈறும் அர் என்னும் ஈறும் திரிந்து ஈர் ஆகும், என்றவாறு.

வரலாறு : பார்ப்பார் — பார்ப்பீர்; கூத்தர் — கூத்தீர், என வரும்.

தெய்வ :

நிறுத்த முறையானே உயர்திணைக்கண் ரகரம் விளி ஏற்கு மாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ஆர், அர் என்னும் ஈற்றுப் பெயர் ஈர் என்ப தனோடு சிவணும், எ-று.

உ-ம்: பார்ப்பார், கூத்தர் உடையர் என்பன, பார்ப்பீர், கூத்தீர், உடையீர் என வரும்.

வந்தது கொண்டு வாராதது முடித்தல் என்பதனால் பெண்டிர் — பெண்டீர் எனவும் வரும்.

சேனா : (ரகார ஈறு)

நிறுத்த முறையானே ரகார வீறு விளி யேற்குமா றுணர்த்துகின்றார்.

இ-ள் : ரகார வீற்றுள் ஆர், அர் என நின்ற இரண்டும் ஈராய் விளி யேற்கும், எ-று.

எ-டு : பார்ப்பார் — பார்ப்பீர்; கூத்தர் — கூத்தீர், என வரும்.

நச்சி :

இது, முறையானே ரகார ஈறு விளி ஏற்குமாறு கூறுகின்றது.

இ-ள் : ஆரும் அருவும் ஈரொடு சிவணும் — ரகார ஈற்றுப் பெயருள் ஆர், அர் என நின்ற இரண் டீற்றுப் பெயரும் 'ஈர்' ஆய் இறுதி திரிந்து விளி ஏற்கும், எ-று.

உ-ம் : பார்ப்பார் — பார்ப்பீர் ! கூத்தர் — கூத்தீர் ! என வரும்.

கல் :

என் னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே ரகர வீறு விளி யேற்குமா றுணர்த்த னுதலிற்று.

இ-ள் : ஆ ரென்னும் ஈறும் அர் என்னும் ஈறும் ஈ ரென்னும் வாய்பாட்டோடு பொருந்தி விளி யேற்கு மென்றவாறு.

உ-ம் : பார்ப்பார் — பார்ப்பீர்; கூத்தர் — கூத்தீர், என வரும்.

இஃது ஈற்றய னீண்டது.

136. தொழிற்பெய ராயி னேகாரம் வருதலும்
வழுக்கின் றென்மனர் வயங்கி யோரே. (22)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தியதன்மேற் சிறப்பு விதி யுணர்த்துதல் நுதலிற்று.

உரை : ரகர வீறு தொழிற் பெய ராமே யெனின், மேல் எய்திய ஈறே யன்றி, அதனொடு ஏகாரம் பற்றி யேற்க, என்றவாறு.

வரலாறு; உண்டார் — உண்டீரே; சான்றோர் — சான்றீரே, என வரும்.

'வழுக்கின்று' என்பதனுல், நம்பியார் — நம்பியீரே; கணியார் — கணியீரே, என்பன போல்வன கொள்க.

தெய்வ் :

மேற் சொல்லப்பட்ட ஈறுகள் தொழிற்பெயராயின் ஏகாரம் வருதலும் குற்ற மில்லை, என்பார் அறிந்தோர், எ—று.

உம்மை இறந்தது தழீஇற்று.

உ—ம்: வந்தார், வந்தவர் என்பன வந்தீர், என வருதலே யன்றி, வந்தாரே, வந்தவரே எனவும் வரும்.

ஈரோடு சிவணும் என்றேதி, ஏகாரம் வருதலுங் குற்ற மில்லை, என்றதனுன் அதனேடு அடுத்து வருதலுங் கொள்க: வந்தீரே எனவும் வரும்.

சேனு : (அதன்கண் வினையாலணையும் பெயர்.)

இ—ள்: மேற்கூறிய இரண் டீற்றுத் தொழிற்பெயர்க்கும் ஈரோடு ஏகாரம் வருதலுங் குற்றமன்று, எ—று.

எ—டு: வந்தார் — வந்தீரே; சென்ருர் — சென்றீரே, என வரும்.

அர் ஈற்றுத் தொழிற்பெயர் வந்தவழிக் கண்டு கொள்க.

ஏகாரம் வருதலும் வழுக்கின் றென்றதனுன், ஏகாரம் பெருது ஈரொடு சிவணலே பெரும்பான்மை யென்பதாம்.

நச்சி :

இஃது எய்தியதன்மேல் சிறப்பு விதி கூறுகின்றது.

இ—ள்: தொழிற்பெயர் ஆயின் — மேற்கூறிய இரண் டீறும் தொழிற்பெயர்க்கு ஈருய் வருமாயின், ஏகாரம் வருதலும் வழுக்கு இன்று என்மனர் வயங்கியோரே — முற்கூறிய ஈரோடு ஏகாரம் வருதலும் குற்றம் இன்று என்று கூறுவர் விளங்கிய அறிவினை யுடையார், எ-று.

உ—ம்: வந்தார் — வந்தீரே! சென்ருர் — சென்றீரே! என வரும்.

"'அர்' ஈறு வந்துழிக் காண்க. 'வழுக்கு இன்று', என்றதனால், தொழிற் பெயர் அல்லா 'ஆர்' ஈறுகளும் ஈரோடு ஏகாரம் பெறுதல் கொள்க.

உ-ம்: நம்பியார் — நம்பியீரே! கணியார் — கணியீரே! என வரும்.

இன்னும் இதனானே 'அர்' ஈறு, வந்தவரே! சென்றவரே! என 'ஈர்' பெறாது ஏகாரம் பெற்று வருதலும் சிறுபான்மை கொள்க.

**கல்:**

என் னுதலிற்றோ வெனின், இஃது எய்தியதன்மேற் சிறப்பு விதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: மேற் கூறிய இரண் டீறும் தொழிற்பெயர்க் கீறாய் வரின் மேற்கூறிய ஈரோடு ஏகாரம் பெற்று வருதலும் குற்றமின் றென்று கூறுவர், விளங்கிய வறிவை யுடையார், என்றவாறு.

உ-ம்: உண்டார் — உண்டீரே; தின்றார் — தின்றீரே, என வரும். அர் ஈறு வந்தவழிக் கண்டு கொள்க.

வழக்கின் றென்றதனால் தொழிற்பெய ரல்லனவும் ஈரோடு ஏகாரம் பெறுதல் கொள்க.

உ-ம்: நம்பீரே; கணியீரே, என வரும்.

137. பண்புகொள் பெயரு மதனோ ரற்றே. (23)

**இளம்:**

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுதல் நுதலிற்று.

உரை: பண்பு கொள வந்த ஆர் ஈற்றோடு ஏகாரம் பெற்று விளி யேற்கும்; என்றவாறு.

வரலாறு: செய்யார் — செய்யீரே, என வரும்.

**தெய்வ:**

ரகார ஈற்றுப் பண்புகொள் பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : ரகார ஈற்றுப் பண்பினுன் வரும் பெயரும்தொழிற் பெயர் போல விளி ஏற்கும், எ-று.

உ-ம்: கரியார், கரியவர் என்பன, கரியீர், என வருதலே யன்றிக் கரியாரே, கரியவரே, கரியீரே, எனவும் வரும்.

சேனா : (பண்புப் பெயர்.)

இ-ள் : அவ் விரண் டீற்றுப் பண்புகொள் பெயரும், அவ் வீற்றுத் தொழிற்பெயர் போல, ஈரொடு சிவணியும், சிறு பான்மை ஈரோ டேகாரம் பெற்றும் விளி யேற்கும், எ-று.

கரியார் — கரியீர்; இளையர் — இளையீர், எனவும்; கரியீரே, இளையீரே, எனவும் வரும்.

நச்சி :

இஃது, எய்தியதன்மேல் சிறப்பு விதி வகுத்தது.

இ-ள் : பண்பு கொள் பெயரும் அதனே ரற்றே — அவ் விரண் டீற்றுப் பண்பு கொள் பெயரும் அவ் வீற்றுத் தொழிற் பெயர் போல ஈரொடு சிவணியும், சிறுபான்மை ஈரோடு ஏகாரம் பெற்றும், ஈர் பெருது ஏகாரம் பெற்றும் விளி ஏற்கும், எ-று.

உ-ம்: கரியர் — கரியீர்! இளையார் — இளையீர்! எனவும், கரியீரே! இளையீரே! எ ன வு ம், கரியவரே! இளையவரே! எனவும் வரும்.

இனி, தன்னினம் முடித்தல் என்பதனுல் சீவகசாமி (சீவக. 665). என்னும் இருபெய ரொட்டுப் பண்புத்தொகை, சீவக சாமியார் என ஆர் ஈருய்ச் சீவக சாமியீரே! (சீவக. 1913) என ஈரோடு ஏகாரம் பெறுதல் கொள்க.

கல் :

என் னுதலிற்ருே வெனின், இதுவும் எய்தியதன்மேற் சிறப்பு விதி வகுத்த னுதலிற்று.

இ—ள் : அவ் விரண்டீற்றுப் பண்புகொள் பெயரும் அத் தொழிற் பெயரோடு ஒருதன்மைத் தென்றவாறு.

உ-ம் : கரியீரே; செய்யீரே, என வரும். ஈண்டும் ஆ ரீறு வந்தவழிக் கண்டு கொள்க.

138. அளபெடைப் பெயரே யளபெடை யியல. (24)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், ரகர வீற்று அளபெடைக் குரிய இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : ரகர வீற்று அளபெடைப் பெயர் இகர வீற்று அளபெடைப் பெயர் போல விளி யேற்கும் இயல்பாய், என்ற வாறு.

வரலாறு : மகாஅர், சிறாஅர், என வரும்.

தெய்வ :

ரகார ஈற்றுள் அளபெடைப் பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : ரகார ஈற்றுள் அளபெடைப் பெயர் மேற் சொல் லப்பட்ட அளபெடைப் பெயரே போல இயல் பாகி விளி யேற்கும், எ-று.

உ-ம் : மகாஅர், சிறாஅர், என்பன விளிக்கண்ணும் அவ் வாறே வரும்.

சேனா : (அளபெடைப் பெயர்.)

இ-ள் : ரகார வீற் றளபெடைப் பெயர், முற்கூறிய அளபெடைப் பெயரே போல, மூன்று மாத்திரையின் மிக் கியல்பாய் விளி யேற்கும், எ-று.

எ-டு : சிறாஅஅர்; மகாஅஅர், என வரும்.

நச்சி :

இஃது, எய்தாதது எய்துவித்தது.

இ-ள் : அளபெடைப்பெயரே அளபெடை இயல — ரகார ஈற்று அளபெடைப் பெயர் னகார ஈற்று அளபெடைப் பெயர் போல மாத்திரை மிக்கு இயல்பாய் விளி ஏற்கும், எ-று.

உ-ம் : சிறாஅர்! துடியர்! பாடுவல் மகாஅர்! (புறம். 291 : 1) என வரும். அவ் வளபெடைகள் செய்யுளுள் குறைந்து வந்தன; சந்த இன்பம் நோக்கி விகாரத்தால் குறைந்து வந்தன, என்று கொள்க.

கல் :

என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்கிப் பிறிது வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: ஈகார வீற் றளபெடைப் பெயர் னகர வீற்று அளபெடைப் பெயர் போல இயல்பாய் விளி ஏற்கும், என்றவாறு.

உ-ம்: [1] மகாஅர்; [2] சிறாஅர், என வரும்.

139. சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன. (25)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்குதல் நுதலிற்று.

உரை: மேல் னகர வீற்றுச் சுட்டுப் பெயர் விளி யேலா, என்றான். அவையே போல ரகர வீற்றுச் சுட்டுப் பெயரும் விளி யேலா, என மாட்டெறிந்தவாறு.

அவையாவன: அவர், இவர், உவர் என்பன.

தெய்வ :

ரகார ஈற்றுள் விளி ஏலாதன உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சுட்டு முதலாகிய பெயர் மேற் சொல்லப்பட்ட சுட்டு முதற் பெயர் போல விளி ஏலா, எ-று.

உ-ம்: அவர், இவர், உவர், அத்தன்மையர், அத்தன்மையார் என்பன விளி ஏலா.

சேனா: (ரகர ஈற்றுள் விளி ஏலாதவை.)

இ-ள்: அவர், இவர், உவர் என வரும் ராகார வீற்றுச் சுட்டுமுதற்பெயர், னகார வீற்றுச் சுட்டுமுதற் பெயரே போல, விளி கொள்ளா, எ-று.

நச்சி :

இது, விளி ஏலாதன கூறுகின்றது.

இ-ள்: சுட்டுமுதற்பெயரே முன் கிளந்தன்ன — அவர், இவர், உவர் என்னும் ரகார ஈற்றுச் சுட்டுமுதற்பெயர் னகார ஈற்றுச் சுட்டு முதற் பெயர் போல விளி கொள்ளா, எ-று.

1. மகா[அ]அர் 2. சிறா[அ]அர்

கல்:

என் னுதலிற்றோ வெனின், [1]ரகார வீற்றுப் பெயர் விளி யேலாதன கூறுகின்றது.

ரகார வீற்றுச் சுட்டெழுத்தினை முதலாக வுடைய பெயர்கள் னகார வீற்றுச் சுட்டு முதற்பெயர் போல் விளி யேலா தென்னுதல் நுதலிற்று.

அவர், இவர், உவர் என்பன அர் ஈறே எனினும் விளி யேலா வென்னுதல் [2]ஆயிற்று.

140. நும்மின் றிரிபெயர் வினாவின் பெயரென் றம்முறை யிரண்டு மவற்றியல் பியலும். (26)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மேல் எய்தியது விலக்கல் நுதலிற்று.

உரை: நும்மின் திரிபெயர் — நீயிர் என்பது; வினாவின் திரிபெயர் — யாவர் என்பது: இவை யிரண்டு பெயரும் விளி யேலா, என்றவாறு.

மற்று, இர் ஈறு விளி யேற்கும் என்ற தின்மையின், நும்மின் றிரிபெயர் விளி யேலாது, என்று விலக்கியது என்னை யெனின், அற்றன்று; பெண்டிர் — பெண்டீரே, என, இர் ஈறும் விளி யேற்கும் என்று மேல் இலேசினான் எய்துவித்துப் போந்தா மாகலின் (சூ. 12) விலக்க வேண்டும், என்பது.

தெய்வ:

இதுவும் அது.

நும்மின் திரி பெயராவது நீயிர். வினாவின் திரி பெயராவது வினா வாகிய பெயர்: அது யார், யாவர் என்பது. அம் முறை யாகிய இரண்டு பெயரும் விளி ஏலா, எ—று.

இவ் வீற்றினுள் முறைப் பெயர் கூறாதது என்னை யெனின், அது பொது விதியான் அடங்குதலின், என்க.

சேனா:

இ—ள்: நும்மின் திரி பாகிய நீயிரும், வினாவின் பெய ராகிய யாவரும் இரண்டும், மேற் கூறிய சுட்டுப் பெயரே போல விளி யேலா, எ—று.

---

1. ஈகார: திருத்தம். 2. [நுதலி] (ஆயி)ற்று.

நீயி ரென்பதனை நும்மெனத் திரியாது நும்மென்பதனை நீயி ரெனத் திரிப்பினும் இழுக்கா தென்னுங் கருத்தான் ஏழுத்தோத்தோத்தினுள் நும்மென நிறுத்தித் திரித்தா ராகலான், அது பற்றி நீயி ரென்பதனை நும்மின் றிரிபெய ரென்றார்.

நச்சி :

இதுவும் அது.

இ-ள் : நும்மின் திரிபெயர் — நும் என்னும் சொல்லினது திரி பாகிய நீயிர் என்னும் சொல்லும், வினவின் பெயர்—வினாப் பொருளை உணர நின்ற யாவர் என்னும் சொல்லும், என்று அம் முறை இரண்டும் அவற்று இயல்பு இயலும் — என்று சொல்லப் பட்ட அம் முறைமையினை யுடைய இரண்டு சொல்லும் முற்கூறிய சுட்டுப் பெயர் போல விளி ஏலா, எ–று.

'ஏனைப் புள்ளி' (விளி மரபு. சூ. 12) என்பதனுள் இர் ஈறு கோடலின், ஈண்டு நீயிர் என்பதனை எடுத்து ஓதி விலக்கினார்.

கல் :

என் னுதலிற்றோ வெனின், இதுவும் விளி யேலாதன கூறுதல் நுதலிற்று.

இ-ள் : ''நும்' என்னுஞ் சொல்லினது திரி பாகிய நீயி ரென்னுஞ் சொல்லும் வினாப் பொருளை யுணர நின்ற சொல்லாகிய யாவ ரென்னுஞ் சொல்லும் என்று சொல்லப்பட்ட அம் முறையினை யுடைய சொல் லிரண்டும், மேல் விளி யேலா தென்று சொல்லப்பட்ட சுட்டுப்பெயர் போலத் தாமும் விளி யேலா வென்றவாறு.

நீயிர் என்பது கூற்றாகலின், ஈண் டெய்திய தின்மையின் விலக்கல் வேண்டா வெனின், 'ஏனைப் புள்ளி' என்பதனுள் இர் ஈறுங் கொள்ளப்பட்டமையின் வேண்டு மென்பது.

141. எஞ்சிய விரண்டி னிறுதிப் பெயரே
நின்ற வீற்றய னீட்டம் வேண்டும். (27)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், மேல் நிறுத்த முறையானே ஒழிந்த இரண்டு புள்ளி யீறும் விளி யேற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை: ஒழிந்து நின்ற புள்ளிகளை யிறுக வுடைய, தம் இறுதி யெழுத்தின் அய லெழுத்து நீண்டு விளி யேற்க, என்ற வாறு.

வரலாறு: குரிசில் — குரிசீல்; தோன்றல் — தோன்றால்; மக்கள் — மக்காள், என வரும்.

தெய்வ:

லகார ளகார ஈற்றுப் பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: லகார, ளகார ஈற்றுப் பெயர் விளி ஏற்புழி ஈற் றயல் நீட்டம் கொடுத்தல் வேண்டும், எ-று.

உ-ம்: குருசில், தோன்றல், மக்கள் என்பன குருசீல், தோன்றால், மக்காள் என வரும்.

சேனா: (லகர ளகர ஈறு.)

நிறுத்த முறையானே லகார ளகார வீற்றுப் பெயர் விளி யேற்குமா றுணர்த்திய எடுத்துக் கொண்டார்.

இ-ள்: உணர்த்தாது நின்ற லகார, ளகார மென்னும் இரண்டு புள்ளியை யிறுதியாக வுடைய பெயர் ஈற் றய லெழுத்து நீண்டு விளி யேற்கும், எ-று.

எ-டு: குரிசில் — குரிசீல்; மக்கள் — மக்காள் என வரும்.

நச்சி:

இது, லகார ளகார ஈறு விளி ஏற்குமாறு கூறுகின்றது.

இ-ள்: எஞ்சிய இரண்டின் இறுதிப் பெயரே — உணர்த் தாது நின்ற லகார ளகாரம் என்னும் இரண்டு புள்ளியை இறுதியாக உடைய பெயர், ஈற்று அயல் நின்ற நீட்டம் வேண்டும் — ஈற்று எழுத்துக்கு அயல் நின்ற எழுத்து நீண்டு விளி ஏற்றல் வேண்டும், எ-று.

உ-ம்: குரிசில் — குரிசீல்! ஏந்தல் — ஏந்தால்! தோன்றல் — தோன்றால்! குழையள் — குழையாள்! அணியள் — அணியாள்! மக்கள் — மக்காள், என வரும்.

கல் :

என் னுதலிற்றோ வெனின், நிறுத்த முறையானே லகார வீறும், ளகார வீறும் விளி யேற்குமா றுணர்த்தல் நுதலிற்று.

இ-ள் : லகார, ளகார மென வெஞ்சிய விரண் டெழுத்தினையும் இறுதியாக வுடைய பெயர்கள் ஈற்றி னின்ற வெழுத்திற் கய லெழுத்து நீண்டு விளி யேற்றலை வேண்டு மென்றவாறு.

உ-ம் : [1] குரிசில் — குரிசீல்; தோன்றல் — தோன்றால்; மக்கள் — மக்காள் என வரும்.

142. அயனெடி தாயி னியற்கை யாகும். (28)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

உரை : அவ் விரண்டு ஈறும், ஈற் றெழுத்தின் அய லெழுத்து நீண்டு நிற்பின், இயற்கையாய் விளி யேற்கும், என்றவாறு.

வரலாறு : பெண்பால், ஆண்பால், எம்மாள், கோமாள், கடியாள், பெரியாள் என வரும்.

தெய்வ :

இ-ள் : லகார, ளகார ஈற்றுப் பெயர் விளி ஏற்புழி, ஈற்றயல் நெடிதாயின் இயல் பாகி விளி ஏற்கும், எ-று.

உ-ம் : பெண்பால், கோமாள் என்பன விளிக்கண்ணும் அவ்வாறே வரும்.

சேனா :

இ-ள் : ஈற் றய லெழுத்து நெட்டெழுத் தாயின் இயல்பாய் விளி யேற்கும், எ-று.

எ-டு : பெண்பால், கோமாள் என வரும்.

1. கு[ரு](ரி)சில் — கு(ரி)சீல்.

நச்சி :

இஃது, எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

இ-ள் : அயல் நெடிது ஆயின் இயற்கை ஆகும் — அவ் விரண் டீற்றுப் பெயரும் ஈற்று அயல் எழுத்து நெட்டெழுத்து ஆயின் இயல்பாய் விளி ஏற்கும், எ-று.

உ-ம் : ஆண்பால்! பெண்பால்! ஏமாள்! கோமாள்! கடியாள்! என வரும். நமர்காள்! என்பதும் அது. நமரங்காள்! அறிமின், எனப் பெயர்த் திரிசொல் லாய்த் திரிந்து நின்று விளி ஏற்றலும் கொள்க.

கல் :

என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள் : அவ் விரண் டீற்றுப் பெயரும் அய லெழுத்து நீண்ட நிலைமைய வாயின் இயல்பாய் விளி யேற்கு மென்றவாறு.

உ-ம் : ஆண்பால், பெண்பால், ஏமாள், கோமாள் என வரும்.

143. வினையினும் பண்பினு
நினையத் தோன்று மாளெ னிறுதி
யாயா கும்மே விளிவயி னான. (29)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், எய்தியது ஒரு மருங்கு மறுத்தல் நுதலிற்று.

உரை : ஆள் என் னிறுதி வினைப் பெயரும் பண்புப் பெயரும் ஆயின் ஆ யாய் விளி யேற்கும், என்றவாறு.

வரலாறு : உண்டாள் — உண்டாய் எனவும்; கரியாள் — கரியாய், எனவும் வரும்.

தெய்வ :

ளகார ஈற்றுள் ஒருசாரன விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : தொழிற்பெயர்க்கண்ணும் பண்புப் பெயர்க்கண் ணும் வரும் ஆள் என் இறுதி, ஆய் ஆகும் விளித்தற்கண், எ-று.

பெய ரென்பது அதிகாரத்தான் வந்தது. "ஈண்டு 'விளி வயினன' என்பதற்கு மேல் உரைத்தவாறே உரைக்க.

உ–ம் : உண்டாள், கரியாள் என்பன, உண்டாய், கிரியாய், என வரும்.

**சேனா :** (ளகர ஈற்று வினைப்பெயரும் பண்புப் பெயரும்)

இ–ள் : வினையின்கண்ணும் பண்பின்கண்ணும் வரும் ஆ ளீற்றுப் பெயர் இயல்பாகாது, ஆ யாய் விளி யேற்கும், எ–று.

எ–டு : நின்றாள்—நின்றாய் எனவும்; கரியாள் — கரியாய், எனவும் வரும்.

'விளிவயினன' என்பதனை முன்னும் பின்னுந் தகுவனவற் றோடு கூட்டுக.

**நச்சி :**

இஃது, அவ் விரண்டனுள் ளகார ஈற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

இ–ள் : வினையினும் பண்பினும் நினையத் தோன்றும் ஆள் என் இறுதி — வினைச்சொல்லின்கண்ணும் பண்புச்சொல் லின்கண்ணும் ஆராயத் தோன்றும் ஆள் ஈற்றுப் பெயர், விளிவயினன ஆய் ஆகும்மே—விளிக்கு மிடத்து இயல் பாகாது 'ஆய்' ஆய் விளி ஏற்கும், எ–று.

உ–ம் : உண்டாள் — உண்டாய்! கரியாள் — கரியாய்! என வரும்.

'விளிவயினன' என்பதனை யாண்டும் கூட்டுக.

**கல் :**

என் னுதலிற்றோ வெனின், அவ் விரண் டீற்றுள் ளகர ஈற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இ–ள் : வினையினும், பண்பினும் ஆராயத் தோன்றும் ஆள் என்னும் இறுதி விளிக்கு மிடத்து ஆ யாய் விளியேற்கும். என்றவாறு.

உ–ம் : உண்டாள்—உண்டாய் எனவும்; கரியாள்—கரியாய் எனவும் வரும்.

144. முறைப்பெயர்க் கிளவி முறைப்பெய ரியல. (30)

இளம்:

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், இதுவும் எய்தியது ஓர் மருங்கு மறுத்தல் நுதலிற்று.

உரை: மேல் னகர வீற்று முறைப் பெயர் ஏகாரம் பெற்று விளி யேற்றது; இதுவும் ஏகாரம் பெற்று விளி யேற்க, என்றவாறு.

மகள் — மகளே; மருமகள் — மருமகளே என வரும்.

மற்று, இவை இரு திணைக்கும் உரிய பெயர் பிற வெனின், முன்னர் [சூ. 19] விடுத்தாங்கே விடுக்க.

தெய்வ:

ளகார வீற்றுள் முறைப் பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: ளகார ஈற்றுள் முறைப் பெயர்ச் சொல் னகார ஈற்றுள் முறைப் பெயர் போல விளி ஏற்கும். எ-று.

உ-ம்: மகள் —மகளே என வரும்.

ஒப்பின்முடித்தல் என்பதனால் முறைமை சுட்டாத மகள் என்பதும் ஏகாரம் பெற்று விளி ஏற்கும்.

அகவன் மகளே, அகவன் மகளே (குறு. 23) என வரும்.

சேனா: (முறைப் பெயர்)

இ-ள்: ளகார வீற்று முறைப் பெயர், னகார வீற்று முறைப் பெயர் போல, ஏகாரம் பெற்று விளி யேற்கும், எ-று.

எ-டு: மகள் — மகளே; மருமகள் — மருமகளே என வரும்.

நச்சி:

இஃது, எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

இ-ள்: முறைப் பெயர்க் கிளவி முறைப் பெயர் இயல — ளகார ஈற்று முறைப் பெயர் னகார ஈற்று முறைப் பெயர் போல ஏகாரம் பெற்று விளி ஏற்கும், எ-று.

உ-ம்: மகள் — மகளே! மருமகள் — மருமகளே! என வரும்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், இதுவு மெய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்த னுதலிற்று.

இ-ள்: ளகார வீற்றுப் பெயர் னகார வீற்று முறைப் பெயர் போல ஏகாரம் பெற்று விளி யேற்கும், என்றவாறு.

உ-ம்: மகள் — மகளே; மருமகள் — மருமகளே, என வரும்.

மற் றிதுவும் விரவுப் பெய ரன்றோ வெனின் மேற் கூறிய வாறே கொள்க.

145. சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரு
முற்கிளந் தன்ன வென்மனார் புலவர். (31)

இளம்:

இச் சூத்திரம், என் னுதலிற்றோ வெனின், எய்தியது விலக்கல் நுதலிற்று.

உரை: மேல் னகர வீற்றுச் சுட்டுப் பெயரும் வினாவின் பெயரும் விளி யேலா, என்றார்; அவை போல இவையும் விளி யேலா, என்பது உணர்த்துதல் ஆயிற்று.

அவையாவன: அவள், இவள், உவள், யாவள் என்பன.

தெய்வ:

ளகர ஈற்றுப் பெயருள் விளி ஏலாதன உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: சுட்டெழுத்தை முதலாக உடைய பெயரும், வினா வாகிய பெயரும் மேற் சொல்லியவாறுபோல் விளி ஏலா, எ-று.

உ-ம்: அவள், இவள், உவள், அத்தன்மையள், அத்தன் மையாள், யாவள் என்பன விளி ஏலா, என்றவாறு.

சேன: (ளகர ஈற்றுள் விளி ஏலாதவை)

இ-ள்: அவள், இவள், உவ ளென்னும் ளகார ஈற்றுச் சுட்டுமுதற் பெயரும், யாவ ளென்னும் வினாப் பெயரும்,

மேற்கூறிய சுட்டுமுதற் பெயரும் வினுப் பெயரும் போல, விளி கொள்ளா, எ—று.

நச்சி :

இது, ளகார ஈற்றுள் விளி ஏலாதன கூறுகின்றது.

இ–ள் : சுட்டுமுதற் பெயரும் வினுவின் பெயரும் முற் ளெந் தன்ன என்மஞர் புலவர்—அவள், இவள், உவள் என்னும் ளகார ஈற்றுச் சுட்டுமுதற் பெயரும் யாவள் என்னும் வினுப் பெயரும் முற்கூறிய சுட்டுமுதற் பெயரும் வினுப் பெயரும் போல (விளி. சூ. 20) விளி கொள்ளா, எ—று.

கல் :

என் னுதலிற்ருே வெனின், இஃது ளகார வீற்றுள் விளி யேலாதன வுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் : ளகார வீற்றுச் சுட்டெழுத்தினை முதலாக வுடைய அவள், இவள், உவள் என்னும் பெயர்களும், வினுப் பொருண்மை யுடைய யாவள் என்னும் பெயரும், னகார வீற்றுச் சுட்டெழுத்து முதற் பெயரும், வினுவின் பெயரும் போல விளி யேலா வென்று சொல்லுவர் புலவர், என்றவாறு.

146. அளபெடைப் பெயரே யளபெடை யியல. (32)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்ருே வெனின், அளபெடைக்கு உரிய இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : மாட்டேற்று வகையான், உயர்திணை ளகர ஈற்று அளபெடை விளி யேற்றவாறே இவையும் விளி யேற்க, என்பது உணர்த்தியவாறு.

வரலாறு :—

'மாஅ னின்னிறம்போன் மழையிருளிற் பட்டதே
கோஒள் குளக்கோடு கொண்டு'.

என்பதனுள், மாஅல், கோஒள் என விளிநிலைக்கண்ணும் நின்றுங்கே நிற்கும், என்பது.

தெய்வ :

லகார, ளகார, ஈறுகள் அளபெடைக்கண் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : லகார ளகார ஈற்றுள் அளபெடைப் பெயர் மேற் சொல்லப்பட்ட அளபெடை போல இயல் பாகும், எ-று.

உ-ம் : வலம்புரித் தடக்கை மாஅல்; மேவார்த் தொலைத்த விறன்மிகு வேஎள், என வரும்.

சேன : (லகர ளகர ஈற்று அளபெடைப் பெயர்)

இ-ள் : லகார ளகார வீற் றளபெடைப் பெயர், மேற் கூறிய அளபெடைப் பெயரே போல, அளபு நீண்டு இயல்பாய் விளி யேற்கும், எ-று.

எ-டு : மாஅல், கோஒள் என வரும்.

இவை அளபெடைப் பெய ராயின், மால், கோ ளென அளபெடை யின்றி வருவன செய்யு ளோக்கி அளபு சுருங்கி வந்தன வாம்; இவை அளபெடைப் பெய ரல்ல வாயின், அளபெடைப் பெயர் வந்தவழிக் கண்டு கொள்க.

நச்சி :

இஃது, எய்தாதது எய்துவித்தது.

இ-ள் : அளபெடைப் பெயரே அளபெடை இயல — லகார ளகார ஈற்று அளபெடைப் பெயர் முற்கூறிய னகார ஈற்று அளபெடைப் பெயர் போல அளவு நீண்டு இயல்பாய் விளி ஏற்கும், எ-று.

உ-ம் : மாஅல்! நின்னிறம்போல் மழையிருட் பட்டதே.

கோஒள்! கொளக்கோடு கொண்டு என்பதனுள் 'மாஅல்! கோஒள்!' என வந்தவாறு காண்க.

கல்:

என் னுதலிற்றோ வெனின், லகார ளகார வீற்றுப் பெயர் இரண்டற்கும் எய்தியது விலக்கிப் பிறிது வகுத்தல் நுதலிற்று.

இ-ள் : லகார வீற் றளபெடைப் பெயரும், ளகார வீற் றளபெடைப் பெயரும், னகார வீற்றுப் பெயர் போல இயல் பாய் விளி யேற்கு மென்றவாறு.

உ-ம் : மாஅஅன்; கோஒஒன், என வரும். அதிகாரத்தான் இவ் விதி ளகார வீற்றின்மே லாகாதோ வெனின், ளகார வீற்று விளி யேலாதனவுங் கூறி, இது கூறுகின்றமையின் அதிகார மாறிற் றென வுணர்க.

147. கிளந்த விறுதி யஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலை. (33)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், அஃறிணை விரவுப் பெயர்க் குரிய இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : கிளந்த இறுதி யாவன: உயி ரீறு நான்கும், புள்ளி யீறு நான்கு மாயவற்றை யிறுதியாக வுடைய அஃறிணைக்கண் வரும் விரவுப் பெயர், மேற்கூறிய நெறியான் விளி யேற்கும். என்றவாறு.

வரலாறு: சாத்தி — சாத்தீ; பூண்டு — பூண்டே; தந்தை — தந்தாய், எனவும், சாத்தன் — சாத்தா; கூந்தல் — கூந்தால்; மகள் — மகளே, எனவும் வரும்.

ஓகார ஈறும், ரகார ஈறுமாய் வருவன விரவுப் பெயர் உளவேற் கண்டு கொள்க. பிறவும் அன்ன.

தெய்வ:

அஃறிணைப் பொருள் உணர வரும் விரவுப் பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: மேற் சொல்லப்பட்ட ஈற்றினை யுடைய வாகிய அஃறிணைப் பொருண்மேல் வரும் விரவுப் பெயர் சொல்லப்பட்ட நெறிய வாம், விளிக்குங் காலத்து, எ-று.

உ-ம்: சாத்தன் — சாத்தா; சாத்தி — சாத்தீ; குருடன் — குருடா; குருடி—குருடீ, என வரும். பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

சேந: (விரவுப் பெயர் விளி யேற்குமாறு.)

உயர்திணைப் பெயரும் உயர்திணை விரவுப் பெயரும் விளி கொள்ளுமா றுணர்த்தி, இனி யஃறிணை விரவுப்பெயர் விளி கொள்ளுமா றுணர்த்துகின்றார்.

இ-ள்: கிளந்த இறுதி யாவன: உயி ரீறு நான்கும், புள்ளி யீறு நான்கு மாம். அவற்றை யிறுதியாக வுடைய அஃறிணைக்கண் வரும் விரவுப் பெயர் மேற்கூறிய நெறியான் விளி யேற்கும், எ-று.

ஈ-டு: சாத்தி — சாத்தீ; பூண்டு — பூண்டே; தந்தை— தந்தாய் எனவும், சாத்தன் — சாத்தா; கூந்தல் — கூந்தால், மக்கள் — மக்காள், எனவும் வரும். சாத்தி, பூண்டு, தந்தை, சாத்த என அண்மை விளியாய் வருவனவுங் கொள்க.

ஓகார வீறும், ராகார வீறுமாய் வருவன விரவுப் பெய ருளவேற் கொள்க. பிறவு மன்ன.

நச்சி:

இது, விரவுப் பெயர் விளி ஏற்குமாறு கூறுகின்றது.

இ-ள்: கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர் — மேல் உயர்திணைக்கண் விளி யேற்கும் என்ற எட்டு ஈற்றினையும் உடைய உயர்திணையோடு அஃறிணை விரவும் விரவுப்பெயர், விளம்பிய நெறிய விளிக்குங் காலை — அவ் வீறுகளின் எடுத்து ஓதிய் முறைமையினை யுடைய, விளிக்கு மிடத்து, எ-று.

உ-ம்: சாத்தீ! பூண்டே! தந்தாய்! எனவும், சாத்தா! கூந்தால்! மக்காள்! எனவும் வரும்.

சாத்தி! பூண்டு! தந்தை! சாத்த என அண்மை விளியும் கொள்க.

இனி, 'விளிக்குங் காலை' என்றதனால், பிணா! வாராய்; அழிதூ! வாராய், என எடுத்து ஓதாத ஆகார ஊகார ஈற்று விரவுப் பெயர் இயல்பாய் விளி ஏற்றலும், சாத்தன்! வாராய்; மகள்! வாராய்; தூங்கல்! வாராய், என எடுத்து ஓதிய ஈறுகள், கூறியவாறு அன்றி, இயல்பாய் விளி ஏற்றலும், இப் பெயர்கள் ஏகாரம் பெற்று விளி ஏற்றலும் கொள்க.

உயர்திணையோடு அஃறிணை விரவுமாறு.

அஃறிணை விரவுப்பெயர் இயல்புமா ருளவே (எழுத். தொகை மரபு, சூ. 13) என்புழிக் கூறினும்.

கல் :

என் னுதலிற்றோ வெனின், உயர்திணைப் பெயர் விளி யேற்குமாறு கூறி விரவுப் பெயர் விளி யேற்குமா றுணர்த்த னுதலிற்று.

மே லுயர்திணைப் பெயர்க்கண் விளி யேற்கு மெனப்பட்ட உயி ரீறு நான்கினையும், புள்ளி யீறு நான்கினையுமே தமக்கீறாக வுடைய உயர்திணைப் பெயரோடு அஃறிணை விரவி வரும் பெயர்கள் அவ் வீறுகளி னெடுத்தோதின முறைமையை யுடைய, விளக்குங் காலத் தென்றவாறு.

உ-ம்: சாத்தி — சாத்தீ; தந்தை — தந்தாய்; பூண்டு — பூண்டே, என வரும்,

ஓகார வீற்று விரவுப் பெயர் கண்டதில்லை.

இவை உயிரீறு; இனிப் புள்ளியீறு: சாத்தன் — சாத்தா: கூந்தல் — கூந்தால், எ-ம். ரகார ளகார வீறாய் வரும் விரவுப் பெயர் கண்ட தில்லை.

**148.** புள்ளியு முயிரு மிறுதி யாகிய
வஃறிணை மருங்கி னெல்லாப் பெயரும்
விளிநிலை பெறூஉங் காலந் தோன்றிற்
றெளிநிலை யுடைய வேகாரம் வரலே. (34)

இளம் :

இச் சூத்திரம் என் னுதலிற்றோ வெனின், புள்ளி யீறும் உயிரீறு மாகிய அஃறிணைப் பெயர்க்கு உரிய இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரை : புள்ளி யீறும் உயிரீறும் ஆகிய அஃறிணைப் பெயரெல்லாம் விளி கொள்ளுங் காலந் தோன்றின் ஏகாரம் பெறுதலைத் தெற்றென வுடைய, என்றவாறு.

வரலாறு: மரம் — மரமே; அணில் — அணிலே; நரி — நரியே; புலி — புலியே, என வரும்.

'தெளிநிலை யுடைய' என்று விதந்து ஓதினமையான் ஏகாரம் ஒழியச் சிறுபான்மை இயல்பாய் விளி யேற்பனவும் உள.

வரலாறு: வருந்தினை வாழியென் நெஞ்சம் எனவும், கருங்கால் வெண்குருகு எனவும், நெடுவண்மதி எனவும், காட்டுச்சாரோடுங் குறுமுயால்! எனவும், ஒண்டுவி நாராய்! எனவும் வரும்.

தெய்வ :

அஃறிணைக்கு உரிய பெயர் விளி ஏற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : புள்ளியும் உயிரு மாகிய எழுத்தினை ஈறாக வுடைய அஃறிணைப் பெய ராகி வருவன வெல்லாம் விளி ஏற்குங் காலந் தோன்றின், ஏகாரம் வருதல் தெளிநிலை யுடைய, எ-று.

எனவே, பிறவாற்றான் வருவன இத்துணை விளக்கம் இல, என்றவா றாம். என்பது என் சொன்னவாறோ எனின், அஃறிணைப் பெயர் ஏகாரம் பெற்று விளி ஏற்றல் பெரும் பான்மை; உயர்திணைக்கு ஓதிய வாய்பாட்டால் வருதல் சிறு பான்மை, என்றவாறு.

காலந் தோன்றின் என்றது அஃறிணைப் பெயர் உயர்திணை போல விளி ஏற்பன சில என்பதூஉம், ஏலாதனவும் ஒரு காலம் பற்றி விலக்கப்படும் என்பதூஉம் அறிவித்தற் கெனக் கொள்க.

உ-ம் : புலியே, வண்டே, மரையே, மானே, மாவே, குயிலே, மரமே என வரும். தும்பி — தும்பீ எனவும்; யானை — யானாய் எனவும்; வேங்கை — வேங்காய், எனவும்; தென்றல் — தென்றால், எனவும்; அரிமான் — அரிமானே எனவும் உயர்திணை வகையான் வருவ சிறுபான்மை.

சேனா :

இ-ள் : புள்ளி யீறும் உயி ரீறு மாகிய அஃறிணைப் பெய ரெல்லாம், விளி கொள்ளும் காலந் தோன்றின், ஏகாரம் பெறுதலைத் தெற்றென வுடைய, எ-று.

எ-டு : மரம் — மரமே; அணில் — அணிலே; நரி — நரியே; புலி — புலியே, என வரும்.

அஃறிணைப் பெயருள் விளி கேட்கும் ஒருசார் விலங்கின் பெயரும், விளி கேளா தனவற்றைக் கேட்பன வாகச் சொல்லுவார் கருதிய வாற்றான் விளி யேற்பனவு மல்லது, ஒழிந்த பெய ரெல்லாம் விளி யேலாமையின், 'விளிநிலை பெறூஉங் காலந் தோன்றின்' என்றார். அதனானே சுட்டுப் பெயர் முதலாயின விளி யேலாமையுங் கொள்க.

'தெளிநிலை யுடைய ஏகாரம் வரலே. என ஏகாரம் பெற்று விளி யேற்றலை யாப்புறுப்பவே. யாப்புற வின்றிச் சிறுபான்மை பிறவாற்றான் விளி யேற்பனவு முள வென்ப தாம். அவை 'வருந்தினை வாழியென் னெஞ்சம்' (அகம் — 16) 'கருங்கால் வெண்குரு கொன்று கேண்மதி' (நற். 24) 'காட்டுச்சா ரோடுங் குறுமுயால்', 'ஒண்டுவி நாராய்' என்னுந் தொடக்கத்தன.

நச்சி :

இஃது, அஃறிணைப் பெயர் விளி ஏற்குமாறு கூறுகின்றது.

இ-ள் : புள்ளியும் உயிரும் இறுதி யாகிய—புள்ளி யீறும் உயி ரீறு மாகிய. அஃறிணை மருங்கின் எல்லாப் பெயரும் — அஃறிணை யிடத்து வரும் எல்லாப் பெயர்களும். விளி நிலை பெறூஉம் காலம் தோன்றின் — விளி கொள்ளும் காலம் தோன்றின், ஏகாரம் வரல் தெளி நிலை உடைய — ஏகாரம் பெறுதலைத் தெற்றென உடைய. எ–று.

உ–ம் : மரம் — மரமே! அணில் — அணிலே! புலி — புலியே! கிளி — கிளியே! என வரும்.

'தெளிநிலை உடைய' என்றதனான்,
'வருந்தினை வாழியென் னெஞ்சம்! (அகம். 19:2)
கருங்கால் வெண்குருகு!* ஒன்று கேண்மதி' (நற். 54)
திங்களுள் தோன்றி யிருந்த குறுமுயால் (கலி. 144 : 18)
என்றாற் போலப் பிறவாற்றான் விளி ஏற்பனவும் கொள்க.

இனி, உயர்திணைப் பொருள் ஏகாரம் பெறாமல் விளி ஏற்று நின்றனவற்றையும் வழக்குச் சொல்லால் தெரியப் பொருள் கூற வேண்டியக்கால் இவ் வேகாரமே விரித்துக் கூறல் வேண்டு தலும் இதனால் கொள்க.

தொண்டையோர் மருக!
மன்னர் மன்ன! மறவர் மறவ!
செல்வர் செல்வ! செருமேம் படுந! (பெரும்பாண். 454–56)
பைம்பூண் சேஎய்! (பெரும்பாண். 458)
என்றாற் போல்வன ஏகாரத்தால் பொருள் கூறுமாறு உணர்க.

'விளிநிலை பெறூஉம் காலம் தோன்றின் என்றார், முன்னிலை யாக்கலும் சொல்வழிப் படுத்தலும் வேண்டுழியே விளி ஏற்கும் என்றற்கு.

---

* எனவ : வே, பா.

கல் :

என் னுதலிற்றோ வெனின், உயர்திணைப் பெயரும் விரவுப் பெயரும் விளி யேற்குமா றுணர்த்தி, இனி, அஃறிணைப் பெயர் விளி யேற்குமா றுணர்த்த னுதலிற்று.

இ-ள் : புள்ளி யெழுத்தினையும், உயி ரெழுத்தினையு மீறாக வுடைய ......... ..... தெல்லாப் பெயர்களும் விளிக்கு நிலைமை பெறுங் கால முண்டாயின் அவ்விடத்து ஏகாரம் வருதலை தெளி யப்படு நிலையை யுடையன வென்றவாறு.

உ-ம் : நரி — நரியே; புலி — புலியே; அணில் — அணிலே; மரம் — மரமே என வரும்.

'வருந்தினை வாழியென் னெஞ்சம்' எனவும், 'காட்டுச்சா ரோடுங் குறுமுயால்' எனவும் பிறவாறும் விளி யேற்று வந்தன வாலெனின், அவ்வாறு வருவன வழக்கினகத் தின்மையின், நரிகாள் செய்யுள் விகாரமெனக் கொள்க. புள்ளி யீறுகலின் புள்ளி யீறு முற்கூறினு ரெனக் கொள்க.

"விளிநிலை பொறூஉங் காலந் தோன்றின்" என்றது, அவை விளி யேற்கு நிலைமை சிறுபான்மை யென்ற தென வுணர்க.

'தெளிநிலை யுடைய' என்றது அவ் வேகாரப் பெற்றி ...... .........க் கூறியவா றாகக் கொள்க.

149. உளவெனப் பட்ட வெல்லாப் பெயரு
மளபிறந் தனவே விளிக்குங் காலைச்
சேய்மையி னிசைக்கும் வழக்கத் தான. (35)

இளம் :

இச் சூத்திரம், உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் விளி யேற்பன வாகச் சொல்லப்பட்டன எல்லாப் பெயரும் விளிக்கு மிடத்துத் தத்தம் மாத்திரையி னிறந்து இசைத்தன வாம், சேய்மைக்கண் ஒலிக்கும் வழக்கத்தின்கண், என்றவாறு.

வரலாறு: நம்பீ; சாத்தா என வரும்.

'அளபெடை மிகூஉம்' [சூ. 81] என்றமையின், அள பெடைப் பெயர் ஒழித்துக் கொள்க.

தெய்வ :

இருதிணைக்கண்ணும் வரும் விளிவேற்றுமைக் கெல்லாம் உரியதோர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள் : இரு திணைக்கண்ணும் விளி ஏற்றுள எனப்பட்ட எல்லாப் பெயரும் ஓதிய அளவையினு னன்றி மாத்திரை நீண்டு ஒலிக்கும், சேய்மைக்கண் நின்ற பொருளை விளிக்கும் வழக்கின்கண், எ-று.

எனவே, மேற் சொல்லப்பட்டவற்றுள் நெட்டெழுத்துப் பெற்றன விடைநிலைப் பொருட்கண், என்று கொள்ளப்படும்.

அள விறந்தன என்றமையான் மூன்று மாத்திரையின் நீண்டு ஒலித்தலும் கொள்க.

உ-ம் : சாத்தாஅ; கொற்றூஅ எனவும்; சாத்தாஅஅ; கொற்றூஅஅ எனவும் வரும்.

சேனா : (புறனடை : மூவகைப் பெயரிலும் சேய்மைவிளி.)

இ—ள் : உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் விளியேற்பனவாகச் சொல்லப்பட்ட எல்லாப் பெயரும், விளிக்குமிடத்து, தத்த மாத்திரையி னிறந் திசைத்தன வாம், சேய்மைக்கண் ஒலிக்கும் வழக்கத்தின்கண், எ-று.

எ-டு : நம்பீஇ; சாத்தாஅ, எனவரும்.

அளபெடை மிகூஉம் என்றமையான், அளபெடைப் பெயரொழித்து நின்ற பெயர் கொள்க.

அள பிறந்தன என்றது, நெட்டெழுத்து அளபெடையாயும், அளபெடை மூன்று மாத்திரையி னிறந்தும், சேய்மைக்குத் தக்கவாறு நீண் டிசைக்கும், என்றவாறு.

சேரமான், மலையமான் என்னும் ஈற் றயல் அள பிறந்தவழி, இயல்புவிளி யென்னுது ஈற் றயல் நீண்டதாகக் கொள்க. அள பிறப்பன எழுத்தாகலின், ஒற்றுமை நயத்தாற் பெய ரள பிறந்தன, என்கிறுர்.

நச்சி :

இது, முற்கூறிய மூவகைப் பெயர்க்கும் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தது.

இ-ள்: உள எனப்பட்ட எல்லாப் பெயரும் — இரு திணைக்கண்ணும் விளி ஏற்பனவாகச் சொல்லப்பட்ட எல்லாப் பெயரும், விளிக்குங்காலை அளவு இறந்தன — விளிக்குமிடத்துத் தம் மாத்திரையின் இறந்து இசைத்தன வாம், செய்யுமையின் இசைக்கும் வழக்கத்தான — செய்மைக்கண் ஒலிக்கும் வழக்கின்கண், எ-று.

உ-ம்: நம்பீஇ! சாத்தாஅ! என வரும்.

சேரமாஅன்! மலையமாஅன்! என்பன அளபிறந்து இசைக்கும்வழி இயல்பன்றி ஈற்று அயல் நீண்டன வாம்.

கல்:

என் னுதலிற்றோ வெனின், மேற்கூறிய மூவகைப் பெயர்க்கும் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தல் நுதலிற்று.

இ-ள்: மேல் விளி யேற்றற் குரியன வென எடுத் தோதப் பட்ட எல்லாப் பெயர்களும் தத்தம் மாத்திரையின் மிக் கிசைக்கும், விளிக்குங் காலத்து; யாண்டுமோ வெனின், அற்றன்று; சேய்மைக்கண் ணிசைக்கும் வழக்கிடத் தென்றவாறு.

உ-ம்: நம்பீஇ; சாத்தாஅ என வரும்.

வரையறை யின்மையின் வேண்டியவாறு அளபெழுந் தொலிக்கு மெனக் கொள்க. ஆயின், உயிர் பன்னிரண்டு மாத்திரையும் ஒற்று பதினொரு மாத்திரையும் எனக் கொள்க.

150. அம்ம வென்னு மசைச்சொ னீட்ட
மம்முறைப் பெயரொடு சிவணா தாயினும்
விளியொடு கொள்ப தெளியு மோரே. (36)

இளம்:

இச் சூத்திரம், அம்ம என்னும் அசைச்சொல்லினது நீட்டம் விளி கொள்ளும் பெயரொடு தோன்றாது, இடைச் சொல்லொடு தோன்றிற் றாயினும் விளியாகக் கொள்வர் தெளிவோர், என்றவாறு.

வரலாறு: அம்மா சாத்தா, என்பது.

சாத்தா என்பதே எதிர்முக மாக்கு மாயினும், அம்மா என்பதும் அவ் வெதிர்முகமே குறித்து நிற்றலின் விளியாகக் கொள்ளப்படும் என்பார், 'விளியொடு கொள்ப' என்றார்.

தெய்வ :

இடைச்சொற்கண் விளிப் பொருண்மை உணர வருவன உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள் : அம்ம என்னும் அசைச்சொல் நீட்டமாகிய அம்மா என்னும் சொல் அம் முறைப்பெயரோடும் பொருந்தா தாயினும், அதனை விளிப் பொருண்மை உணர்த்துஞ் சொல்லோடு கூட்டிக் கொள்ப அறிவர், எ–று.

உ–ம் : அம்மா கொற்றா என வரும்.

வந்தது கொண்டு வாராதது முடித்தல் என்பதனால், ஏட, ஏடா; ஏடி, ஏடீ என வருவனவுங் கொள்க.

சேனா : ('அம்ம' என்னும் இடைச்சொல் விளி)

இ–ள் : அம்ம வென்னும் அசைச்சொல்லினது நீட்டம், விளி கொள்ளும் பெயரொடு தோன்றாது, இடைச்சொல்லொடு தோன்றிற் றாயினும், விளியாகக் கொள்வர் தெளிவோர், எ–று.

எ–டு : அம்மா சாத்தா என வரும்.

சாத்தா என்பதே எதிர்முக மாக்கு மாயினும், அம்மா என்பதும் அவ் வெதிர்முக மாக்குதலே குறித்து நிற்றலின், விளியாகக் கொள்ளப்படு மென்பார் 'விளியொடு கொள்ப', என்றார்.

நச்சி :

இஃது, 'அம்ம' என்னும் இடைச்சொல் விளி ஏற்குமாறு கூறுகின்றது.

இ–ள் : அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம் — அம்ம என்று கூறப்படும் உரைப்பொருட் கிளவியினது (முறைப் பொருட்கிளவி) நீட்டமாகிய 'அம்மா' என்னும் சொல், அம் முறைப் பெயரொடு சிவணாது ஆயினும் — முற்கூறிய விளி ஏற்கும் முறைமையினையுடைய பெயர்களோடு பொருந்தாது இடைச்சொல்லாய் நிற்பினும், விளியொடு கொள்ப தெளியுமோரே–விளி ஏற்கும் பெயர்களோடு இதனையும் விளி நிலைமைத் தாகக் கொள்வர் தெளிந்த அறிவினை உடையோர், எ–று.

உ–ம் : 'அம்மா கொற்றா', என வரும்.

கொற்று! என்பது எதிர்முகம் ஆக்கும் ஆயினும், கோாய் என்பதும் அதனேடு கூடி எதிர்முகம் ஆக்கி நின்றவாறு காண்க.

'அம்ம கேட்பிக்கும்' (இடையியல் சூ. 28)
எனவும்,

'அம்ம என்னும் உரைப்பொருட் கிளவியும்' எனவும் (உயிர். மயங். சூ. 8) எனவும்,

'உரைப்பொருட் கிளவி நீட்டமும் வரையார்'
(உயிர். மயங். சூ. 10)
எனவும் ஆசிரியர் இதனைப் பொருள் தந்து' நிற்கும் என்றே சூத்திரம் செய்தலின், ஈண்டு 'அசைச்சொல் நீட்டம்' என்றதற்கு

'யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு'
(மொழி மரபு. சூ. 1)
என்றாற் போல, எதிர்முக மாக்கும் சொல்லின் நீட்டம், என்று பொருள் உரைத்துக் கொள்க.

கல் :

என் னுதலிற்றோ வெனின், இதுவும் விளித் திறத்தோடு படுவதோர் இலக்கண முணர்த்த னுதலிற்று.

இ-ள் : அம்ம வென்று சொல்லப்படுகின்ற அகர வீற்றசைச்சொல் ஆகார மாகி நீண்டு நிற்றல் அவ் விளி யேற்கு முறைமையை யுடைய பெயர்களோடு பொருந்தா தாயினும் பெயர் விளிகளோடு இதனையு மோர் விளி நிலைமைத் தாகக் கொள்வர் தெளிந்த அறிவினை யுடையா ரென்றவாறு.

உ-ம் : அம்மா கொற்றா என வரும்.

151. தநநு எயென வவைமுத லாகித்
தன்மை குறித்த னளரவென் னிறுதியு
மன்ன பிறவும் பெயர்நிலை வரினே
யின்மை வேண்டும் விளியொடு கொளலே. (37)

இளம் :

இச் சூத்திரம் த, ந, நு என்னும் உயிர்மெய்யையும், எ என்னும் உயிரையும் முதலாக வுடையவாய் ஒருவனது கிளைமைப் பொருண்மையைக் குறித்து நின்ற, ன, ள, ர என்னும் மூன்று புள்ளியையும் இறுதியாக வுடைய சொல்லும்,

அவைபோல்வன பிறவு மாகிய பெயர்ச்சொல்லும் வருமாயின் விளியொடு பொருந்துதல் இல, என்றவாறு.

வரலாறு : தமன் — தமள் — தமர்; நமன் — நமள் — நமர்; நுமன் — நுமள் — நுமர்; எமன் — எமள் — எமர்; தம்மான் — தம்மாள் — தம்மார்; நம்மான் — நம்மாள் — நம்மார்; நும்மான் — நும்மாள் — நும்மார்; எம்மான் — எம்மாள் — எம்மார் என வரும்.

'அன்ன பிறவும்' என்றதனுன், மற்றையான்—மற்றையாள் — மற்றையார் எனவும் வருவன கொள்க.

(நான்காவது விளிமரபு முற்றிற்று.)

**தெய்வ :**

எஞ்சிய உணர்த்துதல் நுதலிற்று.

**இ-ள் :** த, ந, நு. எ என்பன முதலாகிப் பொருண்மை குறித்த, ன, ர, ள என்னும் ஈற்றினை யுடைய சொற்களும், அத் தன்மைய பிறவும் ........... பெயராகி ........... விளி யேற்ற லின்மை வேண்டும் ஆசிரியர், எ—று.

அவையாவன : தமன், தமள், தமர்; நமன், நமள், நமர்; நுமன், நுமள், நுமர்; எமன், எமள், எமர்.

அன்ன பிறவும் என்றதனுல் பிறன், பிறள், பிறர் என வரும் இவை விளி ஏலா.

விளங்கு மணிக்கொடும் பூணுஅய் நின்னாட்
டிளம்பிடி யொருசூல் பத்தீனும்மோ. (புறம். 130)

என்புழி, யகர விளி ஏற்றதா லெனின், அவ்வாறு வருவன வழக்குப் பயிற்சி யின்மையின் எடுத் தோதிற்றிலர். ஆயினும் செய்யுண் மருங்கின் என்னும் அதிகாரப் புறநடையால், இன் னகர வெல்லாம் அமைத்துக் கொள்க.

இவ் விளிவேற்றுமையை முடிக்குஞ் சொல் யாதோ எனின், இஃது எழுவாய் வேற்றுமையது திரி பாகலான், அதற்குப் பயனில யாகி வருவனவற்றுள் இதற்கு ஏற்புடையன முடிக்குஞ் சொல் லாம் எனக் கொள்க. இவ்வாறு ஒற்றுமை யுடைத் தாகலானே ஒருசார் ஆசிரியர் வேற்றுமை ஏழெனக் கொண்டது உணர்க.

(விளி மரபு முடிந்தது.)

(இவ் வோத்தினுட் சூத்திரம் உட்பட உரையின் அளவு கிரந்த வகையான் நூற்று முப்பது.)

சேனா: (உயர்திணைப்பெயருள் விளி ஏலாதவை)

இ-ள்: த, ந, நு என்னு முயிர்மெய்யையும், எ என்னு முயிரையும் முதலாக வுடையவாய் ஒருவனது கிழமைப் பொருண்மையைக் குறித்து நின்ற ன, ர, ள என்னும் மூன்று புள்ளியை இறுதியாக வுடைய சொல்லும் அவை போல்வன பிறவு மாகிய பெயர்ச்சொல் வருமாயின், விளியொடு பொருந்துத லில, எ-று.

எ-டு: தமன், தமர், தமள்; நமன், நமர், நமள்; நுமன், நுமர், நுமள்; எமன், எமர், எமள் எனவும்; தம்மான், தம்மார், தம்மாள்; நம்மான், நம்மார், நம்மாள்; நும்மான், நும்மார், நும்மாள்; எம்மான், எம்மார், எம்மாள், எனவும் வரும்.

அன்ன பிறவு மென்றதனான், மற்றையான், மற்றையார், மற்றையாள்; பிறன், பிறர், பிறள் என வருவன கொள்க.

அஃதேல், இவற்றைத் தத்தமீற்றகத் துணர்த்தாது ஈண்டுக் கூறிய தென்னை யெனின்:— இவற்றை யீற்றகத் துணர்த்தின் மூன்று சூத்திரத்தா னுணர்த்தல் வேண்டுதலிற் சூத்திரம் பல்கும்; அதனா னீண் டுணர்த்தாராயினார். அஃதேல். உயர்திணை யதிகாரத்துக்குப் பின் வைக்க வெனில், ஆண்டு வைப்பின்

'விளம்பிய நெறிய விளிக்குங் காலை' (சொல் 150.)

என்னும் மாட்டேற்று இனிது பொருள்கொள்ளாதாம்; அதனால் பிறிதிட மின்மையின் ஈண்டு வைத்தா ரென்பது.

நச்சி:

இஃது, உயர்திணைப் பெயருள் விளி ஏலாதன கூறுகின்றது.

இ-ள்: த ந நு எ என அவை முதலாகி— த ந நு என்னும் உயிர்மெய்யையும் எ என்னும் உயிரையும் முதலாக உடையவாய், தன்மை குறித்த ன ர ள என் இறுதியும்—ஒருவனது கிழமைப் பொருண்மையைக் குறித்து நின்ற ன ர ள என்னும் மூன்று புள்ளியை இறுதியாக உடைய சொல்லும், அன்ன பிறவும் பெயர் நிலை வரினே — அவை போல்வன பிறவு மாகிய பெய ராகிய நிலைமையை உடைய சொற்கள் வரின், விளியொடு கொளல் இன்மை வேண்டும் — மேல் விளி ஏற்கும் எனப்பட்ட பெயரோடு கோடலை இல்லாமை வேண்டும், ஆசிரியன், எ-று.

உ-ம்: தமன், தமர், தமள்; நமன், நமர், நமர்; நுமன், நுமர், நுமள்; எமன், எமர், எமள், எனவும். தம்மான், தம்மார், தம்மாள்; நம்மான், நம்மார், நம்மாள்; நும்மான், நும்மார், நும்மாள்; எம்மான், எம்மார், எம்மாள்; எனவும் வரும்.

'பிறவும்' என்றதனுன், மற்றையான், மற்றையார், மற்றையாள்; பிறன், பிறர், பிறள்; என வரும்.

'வேண்டும்' என்றதனுன் எம்பீ!
எம்மானே! தோன்றுய் என்னை ஒளித்தியோ (சீவக 1801)— என்ருற் போலச் சிறுபான்மை விளி ஏற்பனவும் தமர் முதலியன கள் என்னும் இடைச்சொல்லோடு கூடியவழி, ளகார ஈறு போல ஈற்று அயல் நீண்டு தமர்காள்! நமர்காள்! எனவும், நமரங்காள் எனப் பெயர்த் திரிசொல்லாய்த் திரிந்து நின்று விளி ஏற்பனவும் கொள்க.

எம்பி என்னும் கிளை முதற் பெயரைத் தன்னினம் முடித்தலாற் கொள்க.

( விளிமரபு முற்றும். )

கல்:

என்னுதலிற்ருே வெனின், இதுவும் உயர்திணைப் பெயருள் விளி யேலாதன கூறுதல் நுதலிற்று.

இ-ள்: த ந நு எ என்று சொல்லப்பட்ட அவ் வெழுத் துக்களை முதலாக வுடைய வாகி யோர் தொடர்ச்சித் தன்மை யைக் குறித்த ன ர ள வென்னும் ஈற் றெழுத்தினை யுடைய பெயர்களும் அத் தன்மை யான பிற பெயர்களுமா யுள்ள பெய ராகிய நிலைமையை யுடைய சொற்கள் வரின், மேல் விளி யேற்கு மெனப்பட்ட பெயரோடு விளி கோடலை இல்லாமையை வேண்டும், ஆசிரியர், என்றவாறு.

உ-ம்: தமன், தமள், தமர்; நமன், நமள், நமர்; நுமன், நுமள், நுமர்; எமன், எமள், எமர், எனவும். பிறவும் என்றதனுன் மற்றையான், மற்றையாள், மற்றையார்; பிறன், பிறள், பிறர், எனவும் வரும்.

இவற்றை உயர்திணைப் பெயர்களோடு கூருது ஈண்டுக் கூறிய தென்னை யெனின், இவை யோ ரினத்துப்பட்டு இயைந்து வருதலான் ஈண்டுப் போந் துடன் கூறினர், என்க.

(நான்காவது விளிமரபு முற்றும்.)

---

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 9 | ஓசை | ஓசை. |
| 2 | 28 | என்றான்; | என்றான், |
| 3 | 28 | அவரல்ல | அவரல |
| 5 | 31 | ளென்னும், | ளென்னும் |
| 9 | 12 | யாங்ஙனமுணர்த்தினேனே | யாங்ஙனமுணர்த்தினானே |
| 10 | 33 | மையானும். | மையானும், |
| 11 | 7, 8 | உயர்திணைச்சொல் | 'உயர்திணைச்சொல்', |
| 15 | 16 | அவ்வாறன்றி. | அவ்வாறன்றி, |
| 19 | 9 | புணர்ந்த | புணர்ந்து |
| 20 | 5 | கண்மே லாயு | கண்மே லாய் |
| ,, | 35 | சொல்லே.எ-து | சொல்லே எ-து |
| 21 | 8 | பயனில வகையான | பயனில வகையான் |
| ,, | 25, 26 | தேமால் | தெருமரல் |
| 22 | 2 | சொற்கும் | சொற்குப் |
| ,, | 34 | றொட்டு பண்புத் | றொட்டுப்பண்புத் |
| 23 | 16, 17 | தொகை பொருணி | தொகைப்பொருணி |
| ,, | 30 | ஒலித்தற் | ஒலித்தல் |
| 24 | 34 | சொலுணர்ந்தானும் | சொல்லுணர்ந்தானும். |
| 26 | 19 | வாசிரியர் | வாசிரியர். |
| 31 | 27 | உயரில் | உயிரில் |
| 35 | 32 | வினை யெச்சமென்றும். | வினையெச்சமென்றும், |
| 37 | 13 | அலி | அலி, |
| 39 | 33 | பெறுதும், | பெறுதும். |
| 40 | 23 | றேன்று | றேன்றும் |
| 47 | 22 | "பூக்குழா ......... தீது" | பூக்குழா ......... தீது |
| ,, | 32 | ளகர திரிபுடைய | ளகரந்திரிபுடைய |
| ,, | 33 | திரிபல்லன | திரிபில்லன |
| 50 | 20 | 'டற'த' | 'டதற'' |
| 54 | 17 | போலவும்; | போலவும், |
| ,, | 25 | வகரம் | வகர |
| 56 | 7 | என்பதூம் | என்பதூஉம் |
| ,, | 19 | ஈணடு | ஈண்டு |
| ,, | 27 | ஐந்து | ஐந்து |
| ,, | ,, | தினை | திணை |
| 58 | 17 | யெழுத்தும் | யெழுத்தும்; |
| 59 | 28 | பால றியப்படும் | பா லறியப்படும் |
| 60 | 12 | வந்தது | வந்தது, |
| 61 | 18 | மரபின் | மரபின |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 62 | 7 | மங்குதல் | மயங்குதல் |
| ,, | 10 | உண்டது; | உண்டது: |
| ,, | 11 | பால்வழூஉ | பால்வழூஉ; |
| 63 | 25 | முன்னிலைச் | முன்னிலை |
| 64 | 19 | காத்தலும். | காத்தலும், |
| ,, | 23 | பொருளும். | பொருளும், |
| ,, | 29 | என்றார். | என்றார், |
| 65 | 29 | வழிஇயின | வழீஇயின |
| 66 | 12 | வழூவ மைதி | வழு வமைதி |
| 68 | 3 | விகற்பிக்க | விகற்பிக்கப் |
| 69 | 2 | நிகழ்காலம். | நிகழ்காலம், |
| ,, | 9 | மேய்ப்பானை | மேய்ப்பானை |
| 72 | 18 | யாண்மை தன்மை | யாண்மைத் தன்மை |
| 76 | 10 | ஒருபுடையானுமறி யப்படாமை நோக்கி | ஒருபுடையானும் அறியப்படாத பொருள் வினவப் படாமையிற் பொது வகையான் அறியப் பட்டுச் சிறப்புவகையான் அறியப் படாமை நோக்கி |
| 79 | 7 | போல்வன. | போல்வன, |
| 80 | 31 | லேயாம் | லேயாம். |
| 82 | 29 | செல்லே | செல்வே |
| 89 | 3 | வழாலோம்பல் | வழாஅ லோம்பல் |
| 90 | 3 | விடத்து, | விடத்துக், |
| 92 | 23 | மங்கள | மங்கல |
| ,, | 26 | நான்காடு | நன்காடு |
| 93 | 26 | வழக்கு | வழக்குப் |
| 94 | 8 | இலக்கணத்திற்கு | இலக்கணத்திற்குப் |
| ,, | 17 | களமார் | களமர் |
| | | களமாரென | களமரென |
| ,, | 18 | மிருந்துள்ள | மிருந்த |
| 98 | 6 | பதனை | பதனைப் |
| ,, | 17 | கிழக்கு | கிழக்கு, |
| 99 | 32 | பான்பாவது | பண்பாவது |
| 100 | 31 | வடவேங்கடதென் | வடவேங்கடந்தென் |
| 102 | 7 | எனவும். | எனவும், |
| ,, | •14 | இடுக்கவுன் | •இடுகவுண |
| ,, | 16 | * இன்னிலப் | இனனில் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 102 | 17 | இன்னிலத் | இனனில் |
| | | இன்னிலப் | இனனில் |
| 103 | 29 | ஙிகழுமாறு, | ஙிகழுமாறு |
| 106 | 16 | யுளரும் | யுளரும்; |
| 108 | 15 | யெனச் | வெனச் |
| 109 | 32 | யுணர்விறற்கு | யுணர்வினர்க்கு |
| 112 | 15 | வாடாச்சிர் | வாடாச்சீர் |
| 114 | 29 | ஆடிய | சூடிய |
| 115 | 20 | இ. எ. | இ. ஏ. |
| 116 | 13 | வமைந்தவா | வமைத்தவா |
| 117 | 18 | அமை வென | அமைக வென |
| 118 | 10 | டாண்மைப் | டாண்மை |
| ,, | 21 | வழுக்கா | வழுக்கி |
| 120 | 27 | மொழினும் | மொழியினும் |
| ,, | 29 | பிரிக்கபடும் | பிரிக்கப்படும் |
| 123 | 2 | போல | போலப் |
| ,, | 11 | மொக்கும் | மொக்கும். |
| ,, | 13 | ஙிகழுமாறு | ஙிகழுமாறு: |
| ,, | 15 | தின்னும் | தின்னினும் |
| ,, | 18 | புக்கப் | புக்க |
| 125 | 3 | பொருள: | பொருள்: |
| 126 | 4 | எழுவாய் | எழுவாயாய் |
| ,, | 7 | எழுவாய் | எழுவாயாய் |
| | | எழுவா | எழுவாயா |
| 127 | 12 | ஆண்கமன் | ஆண் மகன் |
| ,, | 31 | குற்றி | குற்றி; |
| 129 | 12 | முதெலெண | முதலென |
| 132 | 29 | வெனின். | வெனின், |
| 133 | 8 | வரிக்குப் பின் சேர்க்க: | மயங்காது வருக வென மரபு வழுக் காத்தவாறு. |
| 134 | 5 | சொன்முன்னர் | சொன் முன்னர்; |
| ,, | 6 | அதற்பின் | அதன் பின் |
| ,, | 17 | வெனின். | வெனின், |
| 135 | 20 | குணம். | குணம்; |
| 137 | 30 | ஐய மாக்கலின்- | ஐய மாக்கலின் |
| 138 | 11 | கொடை. | கொடை |
| 139 | 5 | வீரப்பாட்டால் | வாய்பாட்டால் |
| 145 | 25 | சன்னும் | கண்ணும் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 145 | 26 | சென்றன. | சென்றன, |
| 148 | 25 | மல ராயந்த | மல ராய்ந்த |
| 152 | 25 | எனவும். | எனவுமாம். |
| 154 | 17 | பொருள்வயின், | பொருள்வயின் |
| 158 | 11 | போவாது | போலாது |
| ,, | 12 | இழு | இரு |
| ,, | 32 | பெறும்பழிப் | பெறும் வழிப் |
| 166 | 21 | கொள்க, | கொள்க. |
| 167 | 9 | ஆசிரியர், | ஆசிரியர்; |
| 171 | 8 | இவ்வாறே, | இவ்வாறே |
| 175 | 11 | மாணகலம்' | மாணகலம் |
| 176 | 2 | தென்றதனைச் | தொன்றனைச் |
| ,, | 9 | னென்ற வழி | னென்றவழி |
| ,, | 10 | சுட்டு. | சுட்டு, |
| ,, | 12 | கருத்து, | கருத்து: |
| ,, | 13 | கருத்து | கருத்து: |
| 177 | 11 | இனி. | இனி, |
| ,, | 35 | கொள்க, | கொள்க. |
| 181 | 7 | ஒருங் கியலும். | ஒருங் கியலும், |
| 182 | 4 | முற்கூறி னுமமையும் | முற்கூறினு மமையுமே |
| ,, | 26 | என்பதூம் | என்பதூஉம் |
| 183 | 4 | கூறப்பட்டது: | கூறப்பட்டது, |
| 184 | 6 | செய்யுடத் | செய்யுளிடத் |
| 186 | 1 | கி.ஆ.கு 60. நச்சி | கி.ஆ.கு. 40. நச்சி |
| ,, | 10 | னகத்து | னகத்துச் |
| ,, | 19 | வற்றை | வற்றைச் |
| 191 | 21 | நாவிதன்; | நாவிதன் |
| 192 | 2 | ஆசிரியன், | ஆசிரியன் |
| ,, | 12 | அதனல். | அதனல் |
| 192 | 20 | வருக; | வருக, |
| 193 | 4 | வழைந்து | விழைந்து |
| ,, | 33 | (இ எ) | (இ. எ.) |
| 194 | 5-6 | அற்றன்று | அற்றன்று; |
| ,, | 6 | பலவாயினும். | பலவாயினும், |
| 195 | 11 | தொழிலை | தொழிலைப் |
| ,, | 23 | வந்தப் பல | வந்த பல |
| 196 | 6 | ஞென்றுட | ஞென்றிட |
| 197 | 17 | எனவே. | எனவே, |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 203 | 23 | கொள்க, | கொள்க; |
| ,, | 29 | நுலிற்று. | நுதலிற்று. |
| 204 | 13 | சொல்க, | செல்க, |
| ,, | 18 | வழுவாம், | வழுவாம்; |
| ,, | 29 | பிருண்டும். | பிருண்டும், |
| 205 | 23 | அமைக்கினறது. | அமைக்கின்றது. |
| 214 | 10 | நில்லாத | நில்லா, |
| 217 | 14 | ஓருவங் கா டென்பது | ஒடுவங் கா டென்பது |
| 219 | 15 | பெயருமாய் | பெயருமாய்ப் |
| ,, | 19 | யென | யெனல் |
| ,, | 24 | மாறு | மரனு |
| 221 | 18 | நுதலிற்று | நுதலிற்று; |
| 225 | 5 | சொல்லும். | சொல்லும், |
| ,, | 13 | சொல்லும்; | சொல்லு மாம் |
| 226 | 5 | வழக்குவழி | வழக்குவழிப் |
| ,, | 22 | ஊர் பெற்ற | லூர்ப் பெற்ற |
| ,, | 24 | ,, | ,, |
| 228 | 7 | பிறப்பிடைக்கட | பிறப்பிடைப் |
| 229 | 31 | வந்தன: | வந்தன |
| 230 | 15 | வாயினுனும் | வயினுனும் |
| ,, | 19 | புறம். 335:7,7 | புறம். 335:7,8 |
| 231 | 4 | முடிபின. | முடிபின, |
| 232 | 14 | என்பது, | என்பது. |
| 233 | 24 | பல்பொருள் | பலபொருள் |
| 234 | 6 | வேறுபடும் | வேறுபடூஉம் |
| ,, | 7 | பெற்ற்ம். | பெற்றம் |
| ,, | 9 | சேவல் | சேவல், |
| 235 | 14 | சாதி பாகு | சாதிப்பாகு |
| ,, | 17 | அப்பொடும்படுத்த | உறுப்பொடும்படுத்து |
| 237 | 20 | பெற்றதிற்கும் | பெற்றத்திற்கும் |
| 238 | 17 | ஒருவற்றன | ஒருவாற்ருன் |
| 239 | 6 | ஓங்கின | ஓங்கின |
| 240 | 32 | சேனவயைர் | சேனவரையர் |
| 241 | 14 | *அறிவித்ததற்கு | அறிவித்தற்கு |
| ,, | 26 | உரையாசை. | உரையசை. |
| 242 | 25 | என்னை ஒன்றே யகற்பாற்று | என்னை? ஒன்றே யாகற்பாற்று |
| 243 | 12 | பல் | பல |

| பக்கம். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 243 | 26 | அமையும் | அமையும். |
| ,, | 27 | இதுமே. | இதுவே. |
| ,, | 28 | வேண்டமை | வேண்டாமை |
| 244 | 15 | நடக்கும். | நடக்கும், |
| ,, | 29 | கூறி. | கூறி, |
| ,, | 32 | விஉந்தது', | வீழ்ந்தது', |
| 248 | 6 | வேண்டுவது, | வேண்டுவது. |
| ,, | 19 | அவன் | அவள் |
| ,, | 31 | சொல்லும் சொல்லும் | சொல்லும் |
| 250 | 4 | பாராய்ச்சிக் | பாராய்ச்சி |
| 252 | 2 | உரைப்பது: | உரைப்பது. |
| 254 | 4 | (கலி காஉ) | (கலி. 62) |
| 258 | 31 | காலம் | காலம்: |
| 261 | 7 | போஓம் | போஒம் |
| 265 | 31 | மக்களும். | மக்களும் |
| 267 | 29 | மின்பத் | மின்ப |
| 270 | 25 | இவனே பூதம் | இவனைப்பூதம் |
| 272 | 13 | யுயர்திணேற் | உயர்திணைமேற் |
| ,, | 22 | என்பது, | என்பது. |
| 274 | 22 | வாய்பாடு | வாய்பாடு. |
| 276 | 24 | இசை | இனச் |
| 281 | 30 | குறள் — 39 | குறள் — 309 |
| 283 | 2 | குழம்பு | குளம்பு |
| 284 | 9 | உணர்தலும் | உணர்த்தலும் |
| 286 | 6 | பயத்ததோ | பெயர்த்தோ |
| 287 | 8 | தேற்றம், | தேற்றம். |
| 294 | 22 | ஓடு | ஒடு |
| ,, | 23 | உறுபினுள் | உருபினுள் |
| 296 | 1 | வே-மலை-ல் | வே-மை-ல் |
| ,, | 32 | நோக்கி பின் | நோக்கிப் பின் |
| 299 | 1 | ச்நசி | நச்சி |
| ,, | 24 | ஆ. | ஆ, |
| 302 | 7 | மாத்திரதைக் | மாத்திரத்தைக் |
| ,, | 20 | இரண்டு அல்ல; | இரண்டு மல்ல; |
| 304 | 25 | தும் என்று | தும்-என்று |
| 306 | 2 | கோஓல் | கோஒல் |
| 308 | 8 | எழுவாயாய் | எழுவாயாய்ப் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 308 | 10 | னீர்மை பட்டு | னீர்மைப்பட்டு |
| ,, | 29 | அருளில் | அருளல் |
| 309 | 21 | வியங்கோள் | வியங்கொள |
| 312 | 24 | (பி.ம். கழிந்தது) | இதைக் 'கழிந்தன' என்ற சொல்லின்பின் கொள்க |
| 314 | 18 | மூன்றிடத்துப் | மூன்றிடத்துப் |
| 315 | 22 | எனின்; | எனின், |
| 316 | 17 | அவ்வாய் | அவ்வாய், |
| 318 | 10 | முரு பேலாதது. [2]இந் மேலும் | முரு பேலாதது.[2] இந் மேனும் |
| ,, | 16 | யாய் பயனில | யாய்ப் பயனில |
| 319 | 12 | சூத்திரத்து, பெயர் ஐ. | சூத்திரத்துப், பெயர் ஐ. |
| 320 | 9 | சாத்தற்கு | சாத்தற்கு, |
| 321 | 2 | பெயர் நிலைக் | பெயர்நிலைக் |
| ,, | 3 | தொழி னிலை | தொழினிலை |
| ,, | 31 | தமீயிற்று. | தமீ இயிற்று. |
| 326 | 6 | யொட்டுவன. | யொட்டுவன |
| 331 | 2 | பொருளையே, | பொருளையே |
| ,, | 15 | எய்தப்படுதலாவது. | எய்தப்படுதலாவது |
| 332 | 7 | நாட் | நட் |
| 333 | 34 | ஏற்பித்து, | ஏற்பித்துச், |
| 335 | 30 | "பகைவரைப் | பகைவரைப் |
| ,, | 31 | இலன்," | இலன், |
| 340 | 26 | மெனக் | னெனக் |
| 341 | 21 | தொகுத்ததும் | தொகுத்தது |
| ,, | 31 | வரும். | வரும் |
| 348 | 25 | முதற்காரணம் | முதற்காரணமும் |
| ,, | 34 | பொருட்டு | பொருட்டு; |
| 349 | 9 | ஓழுகல் | ஒழுகல் |
| ,, | 18 | என்று | ஒன்று |
| 350 | 8 | பெருத | பொருத |
| ,, | 21 | உறழ்மணியான | உறழ்மணியான் |
| ,, | 24, 25 | மொழியின்: ஒடு ஆன் ஆயிற்று (குறள் 295) | மொழியின் (குறள் 295): ஒடு ஆன் ஆயிற்று. |
| 351 | 14 | பொருண்மை | பொருண்மை, |
| 352 | 12 | பெற்றிக் கூறல் | பெற்றி கூறல் |
| ,, | 28 | ஓருருபி | ஒடுருபி |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 353 | 17 | யீண்டு கருவி. | யீண்டுக் கருவி. |
| ,, | 19 | என்பவும், | என வரும் |
| ,, | 20 | காரண மேது, | காரணம், ஏது, |
| 354 | 5 | ஆன் | ஆன்: |
| ,, | 30 | மெதுவின்கண் | மேதுவின்கண் |
| 355 | 2 | எனவன்பதனை | எனவென்பதனை |
| ,, | 3 | வமைக்க | வமைக்க. |
| ,, | 5 | மொழியில; | மொழியின்: |
| 357 | 2 | வினை, | வினை. |
| ,, | 15 | கடிகுத்திரத்துக்கு பொன் | கடிசூத்திரத்துக்குப் பொன் |
| 360 | 7 | நட்டான் | நட்டான்; |
| 361 | 27 | என்பன | என்பன. |
| 262 | 8 | குடம்படுதல் | குடம்படுதல், |
| 363 | 7 | கடிசூத்திரத்துக்கு பொன் | கடிசூத்திரத்துக்குப் பொன் |
| ,, | 17 | அப்பொருள்ன்றது | அப்பொருளென்றது |
| 367 | 10 | பொருவு மென | பொருவு மென. |
| ,, | 11 | வகைப்படும். | வகைப்படும்: |
| 370 | 3 | அனையர் | அணையர் |
| 371 | 8 | வகைக்கு; | வகைத்து: |
| 372 | 25 | மிகுத்தல், | மிகுத்தல். |
| 373 | 2 | குளது | குளது; |
| 381 | 28 | இளமை, | இளமை |
| 382 | 3 | வினைக் | வனை |
| ,, | 11 | தெரிந்து, | தெரிந்து |
| ,, | 27 | ...... வென்மனூர்) | ...... வென்மனூர் புலவர்) |
| 385 | 31 | பண்பு | பண்புக் |
| 387 | 20 | வாய்பாடுகண்மேற் சொல்லப்பட்ட | வாய்பாடுகண் மேற் சொல்லப்பட்ட |
| 391 | 21 | ளிருந்தானை | ளிருந்தானை |
| 398 | 7 | உணர்த்துதற்கு தே | உணர்த்துதற்குத் தே |
| ,, | 8 | பெருள் | பொருள் |
| ,, | 35 | தேரின்கண | தோரின் கண் |
| 399 | 9 | வெழுவாய் | வெழுவாயாய் |
| ,, | 23 | போல | போலப் |
| 401 | 2 | காது | காது, |
| ,, | 10 | அணித | அணிந்த |
| ,, | 13 | தேர்எனவு | தேர் எனவும்; |
| ,, | 14 | வரையரு | வரையிருவி |
| ,, | 15 | விழாகின்ற அரு | விழாகின்ற அருவி, |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 404 | 2 | என்பது. | என்பது, |
| ,, | 6 | கூறியது, | கூறியது. |
| 408 | 10 | வேற்றுமையு | வேற்றுமை |
| ,, | 17 | சொல். 106 | சொல். 102 |
| 415 | 31 | சொல் – 85 | சொல். 81 |
| 419 | 7 | இவற்றுண், கொள்க. | கொள்க. இவற்றுள், |
| 421 | 19 | லென்னுஞ்<br>யென்னுஞ் | லென்றுஞ்<br>யென்றுஞ் |
| 424 | 9 | இயற்பிற் | இயல்பிற் |
| ,, | 15 | றன்றி | றன்றிப் |
| 425 | 12 | என்ருன் | என்ருன். |
| ,, | 13 | சொல்லுக. | சொல்லுக, |
| 427 | 3 | சொல். 92 | சொல். 88 |
| 429 | 27 | சொல். 74 | சொல். 73 |
| ,, | 28 | சொல் 78 | சொல். 75 |
| 430 | 9 | சொல். 100 | சொல். 96 |
| 433 | 20 | ஞேக்கி, | ஞேக்கி |
| 436 | 15 | சொல் 110 | சொல். 106. |
| 437 | 19 | போல தம் | போலத் தம் |
| 438 | 9 | வருதல், | வருதல். |
| ,, | 29 | மூன்ருவதும்; | மூன்ருவதும் |
| 442 | 3 | வென்பர, | வென்பர். |
| 444 | 5 | பொடுளும் | பொருளும் |
| 447 | 25 | ஆகும், | ஆகும்; |
| 448 | 4 | யானேக் | யானே |
| 450 | 21 | நிகழ்ந்தே | நிகழ்ந்ததே |
| 459 | 28 | அலர்ச்செல்லாச் | அலர்செல்லாச் |
| 467 | 20 | போய் | போய்க் |
| 469 | 11 | சாத்தனெடு | சாத்தனதனெடு |
| 472 | 6 | வேற்றுமைப் | வேற்றுமைப் |
| 474 | 30 | வேற்றுமை | வேற்றுமைப் |
| 480 | 28 | கு ஐ ஆன் | கு ஐ ஆன் |
| 481 | 24 | கேள்வி புலவரான | கேள்விப் புலவரான |
| 483 | 31 | யிடத்து | யிடத்துக் |
| 484 | 26 | வாய்குத் | வாய்க்குத் |
| ,, | 33 | ரெடியன். | நெடியன், |
| 486 | 15 | இளேயறி | இளேயரில் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 486 | 33 | கன்று. | கன்று, |
| 487 | 18 | கருவூர் | கருவூர்க் |
| 490 | 14 | வாச்சி | வாய்ச்சி |
| ,, | 15 | ,, | ,, |
| 492 | 8 | போல | போலப் |
| 493 | 17 | கொள்வதாம் | கொள்வதாஉம் |
| ,, | 24 | ,, | ,, |
| ,, | 31 | கொள்வதாம் | கொள்வதும் |
| 496 | 16 | வைத்தார். | வைத்தார், |
| 501 | 15 | குறைந்து, | குறைந்து |
| 505 | 10 | வாய்பட்டாற் | வாய்பாட்டாற் |
| ,, | 11 | ,, | ,, |
| 508 | 26 | யிருக | யிருகக் |
| 508 | 32 | யொன்றறிக. | யென்றறிக. |
| 513 | 32 | சிவனின | சிவணின |
| 514 | 7 | உடைமைப் | உடைமை |
| ,, | 11 | தண்டுண் | தண்டுண் |
| 515 | 16 | வளவு | வுள |
| 517 | 18 | பெயரப் | பெய ரப் |
| 526 | 13 | மென்னும் என்னுந் | மென்னும் |
| ,, | 20 | என்பதனை பெயர் | என்பதனைப் பெயர்ப் |
| 532 | 15 | எகரத்தோடு | ஏகாரத்தோடு |
| 536 | 26 | இரு | இறு |
| 538 | 30 | வேனின். | வேனின், |
| 539 | 11 | உயர்திணைப் | உயர்திணைப் |
| 546 | 4 | ஞுதலிற்றே | ஞுதலிற்றே |
| 553 | 16 | எய்தா | எய்தாத |
| 555 | 6 | மருகன் | மருமகன் |
| 565 | 4 | தோத்தோத்தினுள் | தோத்தினுள் |
| 575 | 10 | ராகார | ரகார |
| 576 | 33 | நெடுவண் | நெடுவெண் |
| 578 | 29 | படுத | படுந |
| 579 | 14 | முயால் | முயாஅல் |
| ,, | 17 | பொறாஉங் | பெறாஉங் |
| 583 | 6 | இளவியும்' எனவும் | இளவியும்' |
| 584 | 26 | இன் | இந் |
| 585 | 23 | கொள்ளதாம் | கொள்ளாதாம் |
| 586 | 2 | நமர், நமர்; | நமர், நமள்; |